"ப்ரின்ஸ் பிளேடு
சிறகைப்
போன்ற
மென்மை தரும்
பிளேடு"

கரடுமுரடான தாடியுடைய ஒருவர் சொல்வதைக் கேளுங்கள்-'ப்ரின்ஸ்' பிளேடினுல் க்ஷவரம் செய்து கொள்வது ஒரு சிறகை உபயோகிப்பது போன்றதாகும்! அவ்வளவு மழமழப்பானது... அவ்வளவு சுத்தமானது... அவ்வளவு இதமானது... உங்கள் ரேஸர் மயிர்க்கால்களினூடே சென்று, அந்தப் பரவசமான தூய்மையின் உணர்வை உங்களுக்குத் தருகிறது... ப்ரின்ஸ் பிளேடின் விசேஷ ப்ளூரோ கார்பன் ஓரம் தான் இதற்குக் காரணம்.

மேலும், ப்ரின்ஸ் பிளேடினுல் அதிகமான க்ஷவரங்கள் செய்து கொள்ளலாம். இன்று, மேலும் மேலும் அதிகமான மனிதர்கள் ப்ரின்ஸ் பிளேடை உபயோகிக்கின்றனர்... நீங்கள் இதுவரை மாற்றிக்கொள்ளவில்லையானுல், உடனே ப்ரின்ஸ் பிளேடு உபயோகிக்க ஆரம்பியுங்கள்.




# ப்ரின்ஸ் பிளேடு



ப்ளூரோ கார்பன் ஓரம் கொண்டது

ஏகபோக விற்பனை ஏஜென்டுகள்: முல்லர் & பிப்ஸ் (இந்தியா) பிரைவேட் லிமிடெட்

P.G.264 T.

காட்டி டபாய்ஞ்சுக்கிட்டு உன்னைப் புடிச்சுக் கொடுத்துப்பிட்டேன்.''

சபேசன் சட்டென்று குனிந்து நச்சியின் கால்களைப் பார்த்தான். அன்றெல்லாம் சிங்கப்பூர் சிலிப்பர் அணிந்திருந்த அவனுடைய கால்கள் இப்போது வெறுமையாயிருந்தன. பீதியுடன் அவனை வெறித்து நோக்கி, ''எதற்காக இந்த அநியாயக் காரியத்தைச் செய்தாய்?'' என்று குழறிக் கேட்டான்.

''எதுக்கா? இதோ பார், தம்பி! இதுக்குத்தான்!'' என்று கூறிக் கடகடவெனச் சிரித்த நச்சி, தன் ஜேபியிலிருந்து ஓர் ஐந்து ரூபாய் நோட்டை எடுத்து அவன் கண்ணுக்கு நேரே தூக்கிக் காட்டினான். ''நாம் பஸ்ஸிலே வருகிறப்ப அந்த மப்ளர்காரர் மருதமுத்து என்கிட்டே வந்து ரகசியம் பேசினாரே, அது இன்னான்னு நினைச்சுக்கிட்டு இருக்கிறே? அவர்தான் அந்தக் காரியத்தைச் செய்யச் சொல்லி எனக்கு ஐஞ்சு ரூபா கொடுத்தார். சும்மா இனும் கொடுத்தாரா? இல்லை; ஐஞ்சு கொடுத்து இருபத்தைஞ்சு சம்பாரிச்சுட்டார். ஆமாம், தம்பி! அரைப் பைசா பெறாத என் செருப்பை அவர் அங்கேயே ஏலம் போட்டார்; தலைவர் மேலே வீசிய செருப்பு இல்லையா? எவனோ ஏமாந்த சோணகிரி அதை இருபத்தைஞ்சு ரூபா கொடுத்து வாங்கி வைச்சுக்கிட்டான், பூசை போட! சுதந்திர இந்தியாவிலே அரசியல்வாதிகளுடைய போக்கைப் பார்த்தியா? எல்லாம் பிசினஸ்! எதைச் சொன்னாலும் எதைச் செய்தாலும் ஏமாறுகிறதுக்கு ரெடியாயிருக்கிறாங்க நம்ம செம்மறியாட்டு சனங்கள்!'' — நச்சிக்கு ஒரே சிரிப்பு. அவன் குலுங்கிக் குலுங்கிச் சிரித்தான்.

திகிலும் திகைப்புமாக அவனை விழித்துப் பார்த்துக் கொண்டிருந்த சபேசன், ''அப்படியானால் அந்த மப்ளர்காரருக்கும், மேடையில் பேசிய பேச்சாளருக்கும்ஏதாவது விரோதமா?'' என்று தணிந்த குரலில் வினவினான்.

''எதுக்கு இப்படிக் கேட்கிறே, தம்பி?''

''விரோத குரோதம் இருந்தால் தானே இம்மாதிரி பணம் கொடுத்து அடிக்கச் சொல்வார்கள்?''

''அதெல்லாம் ஒண்ணும் இல்லை; ரெண்டு பேரும் தோஸ்துகள்தான்! இன்னும் சொல்லப் போனால் அவர் குரு; இவர் அவரோட சிஷ்யர் — ஒரே 'சார்பட்டா' பரம்பரை! நான்தான் முதலிலேயே சொல்லிப்பிட்டேனே, எல்லாம் பிசினஸ்! அவங்களுக்கு பணம் வேணும்; எனக்கும் இன்னைக்குப் பணம் வேணும். ஊட்டுக்கு போறதுக்கு ரெண்டு ரூபாவாவது கையிலே இருக்கணும். நீ வேறே என் பின்னாலே சுத்திக்கிட்டு இருக்கிறே. உனக்கு ராத்திரிச் சாப்பாட்டுக்கு வழி பண்ணியாகணும். இதுக்கெல்லாம் நான் இன்னா செய்வேன்? அதான் இந்தச் சான்ஸை விடாமல் பூந்து விளையாடிப்பிட்டேன்.''

''ஓகோ! எனக்கு நீ உதவி செய்கிற லட்சணம், என்னைப் போலீஸில் பிடித்துக் கொடுப்பதுதானா?''

''எல்லாம் யோசிச்சுத்தான் செஞ்சேன், தம்பி! நான் மாட்டிக்கிட்டேன்னா லேசிலே வெளியில் வர முடியாது. என் பேரு அங்கே ரிக்கார்டிலே இருக்குது. அதுக்குத்தான் உன்னை மாட்டி விட்டேன். பர்மாவிலேயிருந்து ஓடியாந்திருக்கிற நீ அந்தக் காரியத்தைச் செய்திருக்கமாட்டேன்னு உன்னைப் போலீஸ்காரங்க விட்டுப்பிடுவாங்கன்னு எனக்குத் தெரியும். இல்லாட்டி இவ்வளவு நேரம் உனக்காக இங்கே வந்து காத்துக்கிட்டு இருப்பேனா?''

சபேசன் அவனை ஆச்சரியத்துடன் உற்று நோக்கினான்.

''தம்பி, நீ சின்னப் பையன். இந்த ரோசங்கெட்ட உலகத்தைப்பத்தி இன்னும் நீ சரியாப் புரிஞ்சுக்கிட்டு இருக்கமாட்டே. இங்கே ஒழுங்கா, சத்தியத்துக்குக் கட்டுப்பட்டு, ஞாயமா வாழறவனுக்கு இடமில்லை. அடாவடித்தனம் பண்ணி, ஆட்டைத் தூக்கி மாட்டு மேலே போட்டு மாட்டைத் தூக்கி மனுஷன் மேலே போடறவன்தான் பொழைக்க முடியும். இந்தா, இது உன் பங்கு; நான் சம்பாரிச்ச ஐஞ்சு ரூபாயிலே ரெண்டு ரூபாய் உனக்குச் சேரணும். நீயும் இதுக்காகக் கஷ்டப்பட்டு இருக்கிறே இல்லையா? என் செருப்புக்குன்னு எட்டணா சேர்த்து எனக்கு மூணு ரூபா கொடுத்துப்பிடு. கணக்கு சரிதானே?'' என்று சிரித்துக் கொண்டே சொன்ன நச்சி, தன்னிடமிருந்த ஐந்து ரூபாய் நோட்டைச் சபேசனின் ஜேபியில் திணித்தான்.

''இல்லை, அண்ணே! நீ சொல்வதை என்னால் ஒப்புக்கொள்ள முடியாது. 'எல்லாரும் நியாயம் தவறி நடக்கிறார்கள், அதனால் நாமும் அப்படித்தான் நடக்க வேண்டும்' என்று நினைப்பதே தவறு. நாம் ஒழுங்காக நடந்து கொண்டால் போதும்; மற்றவர்களைப் பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை. கண் இல்லாதவன் சும்பத்

திலே மோதிக் கொள்கிறான் என்றால் நாமும் போய் அப்படி மோதிக்கொள்ள வேண்டுமா என்ன?''

''பிரதர்! நீ ரொம்ப நல்லாப் பேசறே! இரு இரு, எங்களுச்சும் ஒரு மேடையிலே உன்னை ஏத்திப் பேச வைச்சு வேடிக்கை பார்க்கிறேனா இல்லையா, பாரு!'' என்று கூறி நகைத்தான் நச்சி.

சபேசனுக்கும் சிரிப்பு வந்து விட்டது. அவன் வெட்கத்துடன் தலை குனிந்து கொண்டான்.

''சரி, சரி; சீக்கிரமாப் போய் அந்த மிலிட்டரி ஓட்டல்லே எதனாச்சும் சாப்பிட்டுட்டு வா. அது ராத்திரிக் கெல்லாம் திறந்திருந்தாலும் பன்னண்டு மணிக்கு மேலே சோறு கிடைக்காது. ஓடு, ஓடு!'' என்று சொல்லிக்கொண்டே சாத்திக் கிடந்த ஒரு ஜவுளிக் கடையின் படிமீது உட்கார்ந்தான் நச்சி.

''நீ வரவில்லையா அண்ணா?''

''இண்ணைக்கு நான் வூட்டுக்குப் போகணும். நீ போய்ச் சாப்பிட்டு விட்டு வா.''

சபேசன் ஹோட்டலை நோக்கி விரைந்தான்.

ஓர் அரை மணி நேரம் கடந்திருக்கும். வயிறும் மனமும் குளிர வெளியே வந்தான் சபேசன். வயிறு நிறைந்ததும் தூக்கம் அவன் கண்ணைக் கரித்தது. தூங்க வேண்டுமென்ற உணர்வு தட்டியதுமே, எங்கே படுப்பது என்ற கவலையும் உடன் சேர்ந்துகொண்டது. உண்ட களைப்பும் உறக்கச் சோர்வுமாக நச்சி இருந்த இடத்துக்கு வந்தான்.

கால்களைக் கட்டிப் பிடித்து முகத்தை முட்டிகளில் புதைத்துக் கொண்டு சவம் போல் உட்கார்ந்திருந்தான் நச்சி. அங்கு சபேசன் வந்ததைக்கூட அவன் அறியவில்லை.

''அண்ணா, போகலாமா?''

நச்சி தலைநிமிராமலே குந்தியிருந்தான்.

''என்ன அண்ணா, உட்கார்ந்த படியே தூங்கி விட்டாயா? இந்தா, மூன்று ரூபாய்!''

அவன் தூங்கவில்லை. சிந்தனையில் ஆழ்ந்திருக்க வேண்டும். மௌனமாக எழுந்து நடக்க ஆரம்பித்தான்.

அவனுடைய அந்தப் போக்கு சபேசனுக்கு விந்தையாயிருந்தது. அவனும் மௌனமாக அவனைப் பின் தொடர்ந்தான். இருவரும் மௌண்ட் ரோடு வழியே சென்ட்ரலை நோக்கி நடந்து கொண்டிருந்தனர்.

ஓர் ஆங்கிலத் தினப் பத்திரிகைக் காரியாலயத்தைக் கடந்து பெரிய




தொழிற்சாலையொன்றின் ஓரமாக நடந்து கொண்டிருந்த நச்சி ஒரு விளக்குக் கம்பத்தினடியில் சட்டென்று நின்று, பின்னால் வந்த சபேசனின் முகத்தைக் கூர்ந்து பார்த்தான். சபேசனும் அவனை ஏறிட்டு நோக்கினான்.

''ஏன் தம்பி, போலீஸ் ஸ்டேஷனிலே உன்னை அடிச்சாங்களா?'' என்று கரகரத்த குரலில் வினவினான் நச்சி.

''ஆமாம், அண்ணே! கடற்கரையிலிருந்து என் கையைக் கட்டி அழைத்து வந்த போலீஸ்காரர்களில் ஒருவர் ஸ்டேஷனுக்குள் நுழைந்ததும் இன்ஸ்பெக்டருக்கு எதிரே என்னைத் தள்ளினார். இன்னொருவர் 'பளீர்' என்று கன்னத்தில் ஓர் அறை விட்டார். அப்புறம்தான் விசாரணை ஆரம்பமாகியது. இன்ஸ்பெக்டர் ரொம்பவும் நல்லவர். அதற்குப் பின் என்னை யாரும் எதுவும் செய்யவில்லை.''

நச்சி தலைகுனிந்து கொண்டான். சபேசன் தொடர்ந்து சொன்னான். ''ஒரே ஓர் அறைதான் கிடைத்தது. அதற்காக நான் வருத்தப்படவில்லை. இம்மாதிரி விஷயங்களில் அடி உதை தான் உண்மையைக் கொண்டு வரும். அது அவர்கள் கடமை. இன்னும் சொல்லப் போனால் அந்தப் போலீஸ்காரர் அறைந்த அறையினால் எனக்கு ஒரு பெரிய இன்பமும் கிடைத்தது. அதாவது, அவர் விட்ட அறையிலே என் கண்ணில் மின்னல் பொறி பறக்க, அந்த மின்னல் பொறியிலே

எனது தாயின் முகம் தெரிந்தது அண்ணே! அதனால் அந்த முகத்தை இன்னுமொரு முறை நான் பார்ப்பதற்காக வேனும் அவர் மீண்டும் ஒரு முறை என் கன்னத்தில் அறைய மாட்டாரா என்று அப்போது ஆசைப்பட்டேன்!''

நச்சி ஏனோ மூக்கை உறிஞ்சினான். பிறகு கண்ணில் ஏதோ தூசி விழுந்து விட்ட மாதிரி கண்ணைக் கசக்கி விட்டுக் கொண்டு திரும்பி மேலே நடக்க ஆரம்பித்தான். சபேசன் தலை குனிந்தவாறு அவன் பின்னால் சென்றான்.

கோட்டைக்குச் செல்லும் ஐலண்ட் மைதானத்துச் சாலையோரமிருந்த ஒரு டீக்கடைக்கு அவ்விருவரும் வந்து சேர்ந்தனர்.

“இன்னா நாயர், சௌக்கியமாயிருக்கிறயா?'' என்று கலகலப்பான குரலில் கேட்டுக்கொண்டே பெஞ்சு ஒன்றில் போய் உட்கார்ந்தான் நச்சி.

பாய்லருக்குக் கரி அள்ளிப் போட்டவாறு ஒரு ரிக்‌ஷாக்காரனைக் கடன் பாக்கிக்காக வசை பாடிக் கொண்டிருந்த நாயர் மெல்லத் திரும்பி, ''யாரு, நச்சியா? எந்தடா! எங்ஙே நின்னை வெகு நாள் காணும்?'' என்று விசாரித்தான்.

''இன்னா, நீ க்ஷேம லாபம் கேட்கிறதைப் பார்த்தா, என் கணக்கிலே உனக்கு எதனாச்சும் பாக்கி கீக்கி இருக்கிறுப்பலே தோணுதே!'' என்று சிரித்தான் நச்சி.

''அதெல்லாம் ஒண்ணுமில்லேடா! நீதான் அண்ணண்ணைக்குப் பாக்கியைத் தீர்த்துப்பிடறவனாச்சே! இதோ நிக்கிறானே இந்தக் கேப்மாறி குப்பன், இவனைப் போலவா நீ?'' என்று சலிப்புடன் சொன்ன நாயர், காதில் செருகி வைத்திருந்த பீடியை எடுத்துப் பாய்லர் அடுப்பில் பற்ற வைத்துக்கொண்டான்.

''அப்படீன்னா சரி. இப்ப நம்பளுக்கு மலாய் கிலாய் போட்டுச் சும்மா சம்முன்னு சிங்கல் சாயா கொடு!'' என்றவாறு அந்தப் பெட்டிக்கடையைச் சுற்றி ஒரு நோட்டம் விட்டான் நச்சி.

நடைபாதை வாசிகள் ஐந்தாறு பேர் அங்கு குளிர் பிடித்து உட்கார்ந்து




''டேய், மதன்! உன் சட்டையிலே இருக்கிற கரும்பை எடுத்து வில்லா வளைச்சுக் கணை தொடுத்தால்கூட, லீலா உன்னைத் திரும்பிப் பார்க்கமாட்டாள். கவலைப் படாதே!''

டீ குடித்துக் கொ[ண்]டிருந்தனர். அவர்களி[ல்] நடுத்தர வயதுப் பெ[ண்]ணொருத்தியும், எலு[ம்]புந் தோலுமான ஒ[ரு] கிழவியும் இருந்தன[ர்]. எண்ணெய் வடிய வ[ாரி]யத் தலை வாரி[க்] கொண்டை நிறை[ய] சாமந்திப் பூ வைத்து[க்] கொண்டு வாயில் வெ[ற்]றிலையைக் குதப்பி[ய]வாறு, அங்கு டீ குடி[த்]துக் கொண்டிருந்த ஆ[ட]வர்களிடம் கேலியு[ம்] கிண்டலுமாகப் பேசி[க்] கொண்டிருந்த அந்த[ப்] பெண்ணின் பார்வை நச்சியின் பக்கம் திரு[ம்]பியது. ''ஆங், நீய[ா] வந்திருக்கிறே? இன்[னா] உன்னை ரொம்ப நாளாக் காணும்?'' என்று கேட்டுத் தன் புடவையில் ஒட்டியிருந்த ஒட்டுணிப் புல் விதைகளை, தட்டித் துடைத்தவாறு எழுந்தாள்.

''நானா?.... உனக்குப் பயந்துகிட்டுத்தான் இந்தப் பக்கமே வர்றதில்லே!'' என்று ஒரு கோணல் சிரிப்புடன் சொன்ன நச்சி, முகத்தை வேறு பக்கம் திருப்பிக்கொண்டான்.

நாயர் டீ போட்டுக் கொடுத்தான். நச்சி அந்தப் பெண்ணின் கிண்டல் பேச்சை யெல்லாம் காதில் வாங்கிக் கொள்ளாமல் டீயைக் குடித்து முடித்து விட்டு, நாயரிடம் போய் ஏதோ ரகசியமாகப் பேசினான். பிறகு கடையின் ஒரு புறமாக ஒதுங்கி நின்று கொண்டிருந்த சபேசனை அணுகி, ''தம்பி, நீ ராத்திரி நேரத்திலே இங்கே படுக்கிறதுக்கு ஏற்பாடு பண்ணிப்பிட்டேன். நம்ப நாயர் சம்மதிச்சுட்டான். இந்த ஊர்லே கண்ட கண்ட இடத்திலெல்லாம் படுக்கக் கூடாது. போலீஸ்காரங்க பார்த்தா செவண் ஃபோர்லே தள்ளிக்கிட்டுப் போயிடுவாங்க. நாயர் ரொம்ப நல்லவன். புள்ளைக்குட்டிக்காரன். எல்லாத்தையும் விட்டுப்பிட்டு வயித்துப் பிழைப்புக்காக இந்த ஊருக்கு ஓடியாந்து தனிக் கட்டையாக் கிடக்கிறான். அவன் கிட்டே நல்லபடியா நடந்துக்க. படிச்சவனாவும் காட்டிக்க. இல்லேன்னா ரொம்ப ரேங்குவான். நான் போவட்டுமா? நாளைக் காலம்பற வந்து கண்டுக்கிறேன்'' என்றான் தணிந்த குரலில்.

திகிலடைந்து நின்றிருந்த சபேசன் மெல்லத் தலையசைத்தான். (தொடரும்)

குற்றவாளிதான் என்கிற முடிவுக்குச் சர்க்கார் வந்திருப்பது வருந்தத்தக்கது.

அரசியல்வாதிகளைவிட வியாபாரிகள் நம்பிக்கைக்கு உரியவர்கள். சர்க்கார் தலையிட்டதால்தான் எல்லாம் குழப்ப மாகி விட்டது என அவர்கள் கூறு கிறார்கள். நிர்ப்பந்தங்களை நீக்கினால் வியாபாரம் தன்னால் சரியாகப் போகும்.

நாற்பது கோடி மக்களின் வாழ்வு காங்கிரஸ் மேலிடத்தில் உள்ள ஒரு சிலரின் கையிலேயே சிக்கிக் கொண்டு அவர்கள் கையிலேயே பிரதமரும் சிக் கிக்கொண்டிருப்பதால், உணவு மட்டு மின்றி, துணி, சர்க்கரை, சிமெண்ட், மருந்து எல்லாத் துறைகளிலும் சர்க் காரின் ஏக போக்கியத்தை ஏற்படுத்தத் திட்டங்கள் உருவாகின்றன. சர்க்கார் சர்வாதிபத்தியம் எதுவரையில் செல் லும் என்று ராஜாஜி எச்சரித்தாரோ அந்த எல்லையை எட்டிவிட்டது.

இதைத் தொடர்ந்து, ஊக்கம் இல் லாத ஊழியர் பட்டாளம் பெருகும். கணக்கில் வந்த நஷ்டமும் கணக்கில் வராத நஷ்டமும், வெளிப்படையான நஷ்டமும் ஒளித்து வைத்த நஷ்டமும் பெருகும். இதற்கெல்லாம் ஈடு செய்வ தற்காக வரிகளும் உயரும்; விலைகளும் உயரும். இரண்டாம் உலக யுத்தத்தில் அடிநாசமாகி யிருந்த ஜெர்மனியும், ஜப் பானும் தனியார் தொழில் மூலம் இன்று பழைய நிலையைக் காட்டிலும் சிறப்பாக உயர்ந்துள்ளபோது, இந் தியா அதற்கு நேர்மாறாகச் செல்வதை என்னென்பது?

ஆட்சியாளர்கள் நினைப்பது போல் வியாபாரிகளைத் தொழில் துறையிலி ருந்து விலக்குவதல்ல இன்று நாட்டின் தேவை; காங்கிரஸை ஆட்சிபீடத்தி லிருந்து விலக்குவதுதான் முதல் தேவை என்பதை மக்கள் அறியவேண்டும்.

# ஒரு காந்திஜி தோன்ற வேண்டும்!

இலங்கையின் முன்னேற்றத்துக்குப் பரம்பரை பரம்பரையாகப் பாடுபட்ட பல லட்சம் மக்களை அந்நாட்டிலேயே சௌகரியமாக வாழச் செய்ய வழி காணாமல், அவர்களில் எவ்வளவு பேரை எப்படிப் பங்கு போட்டு இந்தியாவுக்கு வரவழைத்துக் கொள்ளலாம் என்பது பற்றி நம் சர்க்கார் இலங்கைப் பிரதம ருடன் வாதம் நடத்தி முடித்திருக்கிறது. இந்தப் பேர விவாதம் நீடித்து, அதற் கேற்ப ஸ்ரீமதி சிரிமாவோ அம்மையின் தில்லி வாசமும் நீடித்தது. இரு சர்க் கார்களின் 'உடன்படிக்கை'க் கணக்கு களைப் பார்க்கும்போது தமிழ் இத யங்களின் ரத்தம் கொதிக்கும். பல தலைமுறைகளுக்கு முன் இலங்கை சென்று அந்நாட்டில் தங்கள் நெற்றி வியர்வை நிலத்தில் விழ உழைத்து, அதனை வாழ்வித்தவர்களின் வாரிசுகளில் பெரும் பகுதியினருக்கு அங்கு இட மில்லை என்ற அநியாயத்தை எப்படி ஏற்பது? இலங்கையில் பிறந்த ஓர் இந்திய வமிசாவளியினர் அங்கேயே வாழ விரும்பி அந்நாட்டில் வேலை செய்து வரும்போது, அந்த ஒரே ஒரு வரை 'நாடற்றவ'ராக்கி இந்தியாவுக் குத் துரத்தினாலும் அது அநீதியாகும். ஆனால் இப்போதோ ஐந்து லட்சத்துக்கு மேற்பட்டவர்களை அகதிகளாக்கியுள்ள ஏற்பாட்டுக்கு இந்திய சர்க்கார் ஒப்புக் கொண் டிருக்கிறது. இது இலங்கை சர்க் காரின் வெற்றி. தமிழர்கள் அகதிகளாக நிற்கின்றனர்.

அன்று தென் ஆப்பிரிக்காவில் இந்தி யர்களுக்காக ஒரு காந்திஜி எழுச்சி கொண்டு போராடியது போல் இன்று இலங்கைத் தமிழர்களுக்காக ஒருவர் அந்நாட்டில் எழுச்சி பெற மாட்டாரா? இலங்கை அரசாங்கத்தை விடக் கொடிய எதிராளியுடன் காந்திஜி போரிட்டார். அன்று மனித உரிமை சாஸனத்தைக் காக்கும் ஐக்கிய நாடுகள் சபையும் இருக்கவில்லை. எனினும் அண்ணலின் சத்தியம் வென்றது. இலங்கையிலும் சத்தியத்துக்காகப் போராட ஒரு தீரன் தோன்ற வேண்டு மென்று ஆண்டவனைப் பிரார்த்திக் கிறோம்.

# வருந்துகிறோம்

மைசூர் ராஜ்யத்தின் நீண்ட காலத் தலைவர்களில் ஒருவரும் மத்தியத் தொழில் மந்திரியுமான ஸ்ரீ ஹெச். ஸி. தாஸப்பா அவர்களின் திடீர் மறைவு கேட்டு வருந்துகிறோம். மைசூர் ராஜ்யத் திலும் மத்திய சர்க்காரிலும் [illegible] பதவி களை வகித்த தாஸப்பா சமீபத்தில்தான் தொழில் துறையில் பொறுப்பேற்றார். அவரது மனைவியும், மைசூர் மந்திரி சபை யின் சமூக நல மந்திரியுமான ஸ்ரீமதி யசோதரா தாஸப்பாவுக்கு நமது அநுதாபங்கள்.

# கந்தன் கருணை



'கல்கி'யில் முருகவேளின் மதுர சரித கட்டுரைத் தொடராக வருவதற்கு ஜ குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரி ஸ்வாமிகள் அளித்துள்ள ஆசியுரை :

உலகத்தில் நன்மைகள் வளர்வத காகத் தீய சக்திகளை அழிக்கும் வ யில் சிவப்பிழம்பாய் உருவெடுத் கந்தப் பெருமானின் அற்புத திருவிளையாடல்களை நமது தலைமுற யில் எடுத்துரைக்கப் பெரு வாய்ப்பு படைத்த ஸ்ரீ கிருபானந்தவாரியாரி வாக்கின் மூலம் பாமரமக்கள் மு லாக எல்லா ஆத்மாக்களுக்கும் கந்த பெருமானிடத்தில் அன்பு வெள்ள பெருகுமாறு அவ்விறைவனுடை அருளையே பிரார்த்திக்கின்றோம்.

## முன்னுரை

திகட சக்கரச் செம்முகம் ஐந்துளான்
சகட சக்கரத் தாமரை நாயகன்
அகட சக்கர வின்மணி யாவுறை
விகட சக்கரன் மெய்ப்பதம் போற்றுவாம்

★

வளமையான கானகம்; அங்கு கூடியுள்ள அனைவரும் சிறந்த தபோதனர்கள். சடை முடியும், வேதம் மணக்கும் மலர் வாக்கும், கருணை பொழியும் கண் மலர்களும் படைத்த மாதவ முனிவர்கள் ஆயிரக்கணக்காக அங்கே குழுமியிருந்தார்கள்.

அந்த மகாநாட்டுக்கு வேத வியாசர் தலைமை தாங்கினுர்.

''இனி கலியுகம் பிறக்குமே. அதர்மம் தலைவிரித்துத் தாண்டவம் புரியும் அக்கலியின் கொடுமையை எப்படி நாம் சமாளிப்பது? கோடை வெயில்போல் கொதிக்குமே ?'' என்றுர்கள் முனிபுங்கவர்கள்.

வியாச முனிவர் திருவாய் திறந்தார். எங்கும் ஒரே அமைதி. எல்லோரும் அவருடைய மலர் வாக்கையே நோக்கி நின்றுர்கள்.

''ஸ்கந்தஸ்ய கீர்த்திம் அதுலாம்
கலி கல்மஷ நாசினீம்''

என்று தெளிவுறக் கூறினுர் வேத வியாசர்.

''கந்தப் பெருமானுடைய இணையற்ற கீர்த்தி ஒன்றுதான் கலியில் வரும் பாவங்களைப் போக்க வல்லது'' என்றுர். தங்களுக்காகச் சொந்தக் கவலையின்றி, உலக மாந்தருக்காகவே கவலைப்படும் முனிவர்கள் அவர் வாக்கைக் கேட்டுச் சாந்தமுற்றனர்.

கலியுகத்தின் வெப்பத்தைத் தணிக்கும் கற்பக நிழல் கந்தவேளின் கருணை. கலியுக வரதராம் அப்பரமனது சரிதையை ஸ்காந்த புராணமாக ஆதியில் வியாச முனிவர் கூறியருளினுர்.

# ருமுருக கிருபானந்தவாரியார்

ராணம் என்ருல் பழைமை
னது என்பது பொருள். வேதத்
ல உள்ள நுண்ணிய தருமங்களை
த்துச் சொல்வது புராணம். சிறு
கார த்தின் நுண்ணிய சக்கரங்
ப் பூதக் கண்ணுடி மூலம் அறி
போல், வேத நுண் பொருள்
ப் புராணமாகிய பூதக் கண்
டி மூலம் அறிதல் வேண்டும்.
தங்கள் கூறும் பல உண்மைகளை
போதனைகளையும் புராணங்கள்
க்கிக் கூறும்.

புராணங்கள் பதினெட்டு; இவற்
ல் சிவபுராணம் பத்து. விஷ்ணு
ாணம் நாலு. பிரம்ம புராணம்
ண்டு. சூரிய புராணம் ஒன்று.
க்கினி புராணம் ஒன்று.

இந்தப் புராணங்கள் பதினெட்
ம் சேர்ந்து கிரந்த எண் நாலு
ட்சம். இதில் கந்தபுராணம் ஒரு
ட்சம். மற்ற பதினேழு புராணங்
ளின் கிரந்த எண் மூன்று லட்சம்.
தனுல் கந்தபுராணத்தின் பெருமை
னிது விளங்கும். பரந்து விரிந்து
றந்த நூல் கந்தபுராணம்.



முருகப் பெருமானுக்கு எவ்வளவோ நாமங்கள் இருப்பினும் அவனது சரிதம் 'கந்தபுராணம்' எனப் பெயர் பெற்றது ஏன் எனப் பார்ப்போம்.

ஐயனின் நாமங்களில் கந்தன் என்பது தனிச் சிறப்பு உடையது. 'ஸ்கந்த' என்ற சொல்லுக்குப் பகைவர்களுடைய பராக்கிரமத்தை வற்றச் செய்கிறவன் என்பது பொருள்.

**சத்ருன் சோஷயதீதி ஸ்கந்த:**

என்பது நிகண்டு.

பகைவர்களை அழிப்பவனல்ல பரமன். அவர்களின் பகைமையை வற்றச் செய்பவனே அவன். பாகற்காய் கசக்கிறது என்பதனால் அதனை அழித்தா விடுகிறோம்? கருணைக் கிழங்கு காருகிறது என்பதனால் அதனை ஒதுக்கியா விடுகிறோம்? பிற சாதனங்களால் பாகற்காய், கருணைக்கிழங்கு இவற்றின் தன்மையை மாற்றி அதன்பின் சுவைக்கிறோமல்லவா? இவ்வாறேகந்தப்பெருமான் பகைவர்களின் கொடுமையை நீக்கி அவர்களுக்கு உயர் பதவி தந்தாரேயன்றி அடியோடு அழித்து விடவில்லை. சிங்க முக அசுரனின் கொடுமையை மட்டுமே வதைத்து அவனை எம்பிராட்டி உமையம்மைக்கு வாகனமாகத் தந்தார். சூரபதும அசுரனையோ அடக்கித் தமக்கே வாகனமாகிய மயிலாகவும், கொடியாகிய சேவலாகவும் செய்து கொண்டருளினார்.



**தீயவை புரிந்தாரேனும்**
**குமரவேள் திருமுன் உற்றால்**
**தூயவராகி மேலைத்**
**தோல் கதி அடைவர் ....**

நல்லவர்கட்கு எப்போதும் பகை உண்டு. மிக மிக நல்லவர்கட்கு ஆபத்துண்டு என்றார் பெர்னார்ட் ஷா. நல்லோருக்கு வரும் பகையை எம்பெருமான் அடக்கியருளுவான்.

மற்றொரு பொருளும் உண்டு. ஆறு திருமேனிகளும் ஒன்றுபட்டவன் கந்தன்.

ஒன்றுபட்டவன்தான் நம் அனை வரையும் அருளில் ஒன்றுபடுத்துவான். ஒரு பொருள் பலவாகப் பிரிந்தால் ஒலி உண்டாகும். பல பொருட்கள் ஒன்று கூடினாலும் ஒலி உண்டாகும். முரு கனைக் கூவி அழைத்தால் அவன் நம் உள்ளத்தில் ஒன்றுகிறான்.

'கந்து' என்றால் யானை கட்டுந் தறி. 'அன்' என்பது ஆண்பால் ஒருமை விகுதி. ஆன்மாக்களுக்குப் பற்றுக் கோடானவன் கந்தன். வறுத்த அரிசி, கேழ்வரகு, கம்பு இவைகளை யந்திரத்தில் அறைப்பார்கள். அந்தத் தானியம் யந்திரத்தின் இடையில் உள்ள நடுத் தறியின் அருகில் இருந்தால் அறைபடாது. நடுத்தறியை விட்டு விலகினால் தூள்பட்டு விடும்.

அதுபோல் இறைவனைப் பற்றி நின்றால் அகங்கார மமகாரமான இரு கற்களால் நாம் அறைபட மாட்டோம். ஆன்மாக்களுக்குப் பற்றுக்கோடாக அருள் புரியும் முதல்வனுடைய புராணம் இது என்பதைக் குறிப்பிடவே கந்தபுராணம் எனப் பெயர் பெற்றுள்ளது. தனக்குப்பற்றுக்கோடு ஏதும் இல்லாது, தான் யாவற்றுக்கும் பற்றுக்கோடாக உள்ள பரம் பொருளைக் கந்தழி எனத் தமிழ் மரபு கூறும்.

கண்ணனும் விபூதி யோகத்தில், ''நான் சேனைத் தலைவருக்குள் ஸ்கந்தனாக இருக்கிறேன்'' என்பதாகக் கந்தன் பெயரையே குறிப்பிடுகிறார்.

''எந்தப் பொருளும் கந்த புராணத்துள்ளது'' ''கந்த புராணத்தில் இல்லாத பொருள் எந்தப் புராணத்திலும் இல்லை'' என்ற பழமொழிகளாலும் கந்த புராணத்தின் பெருமையை உணரலாம்.

ஒவ்வொரு புராணமும் ஒரு முக்கியமான போதனையை அளிக்கிறது. வாய்மையின் மேன்மையை விரிவுபடுத்துவது அரிச்சந்திர புராணம். பெண்ணாசையின் தீமையை முக்கியமாய் விளக்குவது இராமாயணம். மண்ணாசையின்

# தந்தை வழி தனயன்




20 ஆண்டுகளுக்கு முன்.....




8 ஆண்டுகளுக்கு முன்.....




5 ஆண்டுகளுக்கு முன்.....









**ஆயுள் இன்சூரன்சு** போல
ஆதரவு தருவது எதுவுமே இல்லை.

மையை விளக்குவது பாரதம்; எதற்கும் நேரமில்லாத இக்காலத்தில் — த்துள்ள பண்டங்களைச் சுவைத்து ண்ணவும் நேரமின்றி வைடமின் மாத்திரைகளை விழுங்கும் இக்காலத்தில் — கந்தபுராணம் முழுவதையும் பிழிந்து எடுத்து ஒரு வைடமின் மாத்திரையைப் போதனையாகத் தரலாம்.

கந்த புராணம் கூறும் அந்த முக்கியமான படிப்பினை என்ன?

ஒருவன் கள் குடித்தாலும், கொலை புரிந்தாலும், களவு செய்தாலும் நற்றவம் செய்து உய்வு பெறலாம். நன்றி கொன்ற பாவத்துக்கு மட்டும் உய்வு கிடையாது.

எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம்
உய்வில்லை
செய்நன்றி கொன்ற மகற்கு

என்கிறார் திருவள்ளுவர். இந்தப் போதனையே கந்த புராணம் முக்கியமாக எடுத்துக் கூறும் தருமமாகும்.

வாழ்வும் வரமும் ஆக்கமும் ஊக்கமும் வாரி வாரி வழங்கிய சிவபெருமானுடைய திருக் குமாரனாகிய முருகப் பெருமானையே எதிர்த்தான் சூரபத்மன். அவன் மறந்த நன்றியே அவனை அழித்து விட்டது. கூற்றுவன் என்று ஒருவன் அவனுக்குத் தேவைப்படவில்லை.

ஒன்றொரு பயன்றனை
யுதவினோர் மனங்
கன்றிட வொருவினை
கருதிச் செய்வரேல்
புன்றொழில் அவர்க்கு முன்
புரிந்த நன்றியே
கொன்றிடும் அல்லது
கூற்றும் வேண்டுமோ ?

ஆதலால் நன்றி கோறலால் வரும் விளைவை விரித்துக் காட்டும் தரும நூல் கந்த புராணம். இதனைப் படிப்போர் நன்றி மறவாமையை மேற்கொள்வார்களாக!

கந்த புராணத்தை ஓதுவோர் நன்றி மறவா நற்குண சம்பத்தோடு எல்லா இம்மை மறுமை நலன்களையும் எளிதில் பெறுவார்கள்.

இந்திர ராகிப் பார்மேல்
இன்பமுற் றினிது மேவிச்
சிந்தையில் நினைந்த முற்றிச்
சிவகதி யதனிற் சேர்வர்
அந்தமில் அவுணர் தங்கள்
அடல்கெட முனிந்த செவ்வேற்
கந்தவேள் புராணந் தன்னைக்
காதலித்து ஓதுவோரே

கந்த புராணமாகிய அமுதக் கடலிலே முழுகினால் எத்தனை எத்தனையோ தத்துவ முத்துக்களையும், நீதி ரத்தினங்களையும், பக்தி வளங்களையும் வாரி எடுத்து நாம் இன்புறலாம்.

கனியமுதமான இனிய தனியமுது கந்தவேள் கருணை.

அக்கருணை வெள்ளத்தில் மனித குலம் அனைத்தும் முழுகி இன்புறுமாக !

கந்த புராணம் ஆறு சம்மிதைகளை உடையது. சங்கர சம்மிதை, சனற்குமார சம்மிதை, சூத சம்மிதை, பிரம சம்மிதை, விஷ்ணு சம்மிதை, சூர சம்மிதை என்பவை அவை.

இவற்றுள் சங்கர சம்மிதை பன்னிரண்டு கண்டங்களை உடையது. அவற்றில் முதல் கண்டம் சிவ ரகசிய கண்டம். சிவ ரகசிய கண்டத்தில் சம்பவ காண்டம், அசுர காண்டம், மகேந்திர காண்டம், யுத்த காண்டம், தேவ காண்டம், தட்ச காண்டம், உபதேச காண்டம் என்ற ஏழு காண்டங்கள் உள்ளன.

வேத வியாசர் செய்த கந்த புராணத்தின் இந்த ஏழு காண்டங்களில் முதல் ஆறு காண்டங்களைத் தமிழில் தந்த தவக் கவி கச்சியப்ப சிவாசாரியர்.* கந்தன் கதையை அறியுமுன் அதனைத் தந்த இவருடைய கதையைப் படித்து மகிழ்வோம்.

* ஏழாவது காண்டத்தைக் குகனேரியப்ப முதலியார் தமிழில் அருளிச் செய்தார்.

# 1. சரித நாயகன் சரிபார்த்த கதை

அண்டர் புகழும் தொல் புகழுடைய தொண்டை நன்னாட்டின் திலகமாக விளங்கும் காஞ்சிமா நகரம் முத்தித் தலங்கள் ஏழினுள் ஒன்று என்பது மட்டுமல்ல; தமிழ் செழிக்கும் தவநகரம் அது.

" செந்தமிழ்க்கு வரம்பெனச்
செப்பிய முந்து காஞ்சி "

என்பது பாடல்.

இம்மாநகரில் ஆதி சைவ வேதியர் குலத்திலே வந்தவர் காளத்தியப்ப சிவாசாரியர். இவர் கல்வி கேள்வி ஒழுக்கத்தில் உயர்ந்தவர். இவர் பலகாலம் மகப் பேறு வேண்டி, காஞ்சியிலுள்ள குமரகோட்டத்துக் கந்தவேளை எந்த வேளையும் போற்றித் தவம் புரிந்தார்.

மாதவத்தின் பயனாக அவருடைய மனைவியார் கருவுற்றார். வலம்புரிச் சங்கில் ஆணி முத்து உதித்தது போல் தமிழகம் உய்ய, சிவநெறி ஓங்க, கந்தன் புகழ் வளர ஒரு மகவு தோன்றியது.

அறிவு, அன்பு, அடக்கம் முதலிய நற்குணங்களுடன் பிறந்த அப்புதல்வர் இனிது வளர்ந்து கச்சியப்பர் என்ற திருப்பெருடன் விளங்கினர்.* தமிழ், சமஸ்கிருதம் என்ற இரு மொழிகளிலும் வல்லவர் ஆனர்.

நாம் எடுத்துக் கொண்டுள்ள கந்த புராணத்தின் ஆசிரியர் என்ற பார பட்சமின்றி, கச்சியப்பருக்கு உரித்தான ஒரு தனிப் பெருமையை சத்திய வாக்காகவே இங்கு கூறலாம். தமிழகத்தின் திவ்விய நூல்களை ஆக்கித் தந்த கம்பர், சேக்கிழார் போன்ற மகா கவிகள் வைதிக மரபில் நன்கு ஊறியவர்கள் எனினும் அவர்களின் வேத ஞானம் நேர்முகமானதன்று. வேத அப்பியாசத்தில் அதிகாரம் பெற்றிருந்த கச்சியப்பரோ அருமறைகளில் நேர்முகமான அறிவு பெற்றிருந்தார். இருபத்தெட்டு ஆகமங்களிலும் அவர் நீந்தி விளையாடியவர். இதனல் அவரது வாக்குக்கு ஒரு தனி கம்பீரமும், கட்டுப்பாடும் உண்டு. இலக்கண, இலக்கிய ஞானத்தோடு சாஸ்திர ஞானமும் இருந்தால்தான் கச்சியப்பரின் வாக்கைப் பூரணமாகப் புரிந்துகொண்டு அதன் நடையழகு, தொடையழகு, சொல்லினிமை இவற்றேடு பொருளாழத்தையும் அநுபவிக்க முடியும்.

கச்சியப்பர் சமய தீட்சை பெற்றுத் தமிழ் வேதமாகிய தேவார திருவாசகங்களை ஓதினர். விசேட தீட்சை பெற்றுச் சிவாகமங்களில் கிரியா காண்டங்களைக் கற்றறிந்தார். அதன் பின் நிர்வாண தீட்சையும், ஆசாரிய அபிஷேகமும் பெற்றுச் சிவாகமத்தின் பொருளையும், தேவார திருவாசகத்தின் பொருளையும் உய்த்துணர்ந்தார். அப்பொருள் வேதத்தின் ஞான காண்டங்களாகிய உபநிடதங்களின் பொருளோடு அபேதமாக இருக்கக் கண்டார்.

தமது வட மொழி அறிவைக் கொண்டு தமிழ் மொழிக்குத் தாம் செய்ய வேண்டிய தொண்டு ஏதோ உள்ளது என்று உணர்ந்தவராய்க் குமர கோட்டத்து முருகப் பெருமானை மெய்யன்புடன் பூசித்து வந்தார் கச்சியப்பர்.

ஒரு நாள் கனவு கண்டார். நனவுகளைவிட இனிமையான, நனவுகளை விட உண்மையான அற்புதக் கனவு கண்டார். உலகக் கனவிலிருந்து உயிர்களை மீட்கும்கந்தக் கடவுள் கனவில் தோன்றி, ''அன்ப, உலகம் உய்யத் தமிழில் கந்த புராணத்தைப் பாடுதி!'' என்று கட்டளையிட்டருளினர்.

அதோடு அல்லாமல் எம்பெருமான் 'திகடசக்கரம்' என்று தாமே அடியெடுத்துக் கொடுத்தருளினர்.

கச்சியப்பர் கண் விழித்து எழுந்தா கந்தன் கருணையை நினைந்து உருகின மெய் சிலிர்த்தது. ''என்னே எம்பிரா திருவருள்! மூவருக்கும் தேவருக்கும் டாத முருகப் பெருமான் மிகச் சிறி னாகிய தமியேனுடைய கனவில் தோன் அடியவனுக் கொண்டு ஆட்கொ டருளிய கருணைத் திறத்தின் எளி தான் என்னே!'' எனத் திருவரு வியந்து வியந்து விதிர்விதிர்த்தார்.

கந்தனின் கட்டளை கவிதையு பெறத் தொடங்கி விட்டது. தி தோறும் கந்த புராணத்தைத் தமி பாடல்களாக்கினர். 'வாக்குக்கெ டாத பொருளை வாக்கில் கொண் வந்தாயிற்ற? இதற்குமேல் சொ ஏதுமில்லையா? இதில் சொன்னதெ லாம் சரிதானு?' என்று எண்ணுவா யார் சரி பார்க்கவும், திருத்தவும், தீர் புக் கூறவும் முடியும்? 'அவனே துணை' என்று அந்தரங்க சுத்தமாக நம்பி பாடல்கள் எழுதிய ஏட்டையும் எழு தாணியையும் இரவில் அர்த்த ஜாம துக்குப் பின் திருவேலிறைவன் தி வடியில் வைத்துவிட்டுத் திருக்கதவ சாத்திவிட்டு வருவார்.

நம்பினேர் எங்கேனும் கெட் துண்டா? மறு நாள் காலை மணி கதவம் திறந்து பார்த்தால், முன்ன வைத்துச் சென்ற மடவில் சி இடங்கள் திருத்தப்பட்டிருக்கும். நிக காலத்தில் பத்திரிகை ஆசிரியருக்கு கதை அனுப்பி அவர் திருத்துவ போல், முருகனே பிழை பார்த்து திருத்தியது கந்த புராணம்.

இவ்வாறு புராணம் பாடி முடிந்தது 10,345 செய்யுள்களுடன் கூடிய அ நூலை — ஐயனே அங்கீகரித்த நூலை - அறிஞரும் அங்கீகரிக்க வேண்டி அர கேற்றக் கருதினர் கச்சியப்பர். எ லோருக்கும் அழைப்பு அனுப்பினர்.

குறிப்பிட்ட நாளில் காஞ்சிபுரம் இந்திர நகரம் போல் அலங்கரிக்கப் பெற்றது. மன்னர்கள், வேத வித் கர்கள், சிவாகம பண்டிதர்கள், செ தமிழ்ப் புலவர்கள், தேவார திருவாச விற்பன்னர்கள், அடியார்கள் எல்லோ ரும் கூடினர்கள். எங்கும் இன்ப வெள்ளம் பெருக்கெடுத்தது.

கச்சியப்பர் கந்த புராணத்தைக் குமரகோட்டத்து இறைவர் முன் பீட தில் வைத்துப் பூசித்தார்.

அடியார்கள் அவரை உயர்ந்த பீட தில் இருக்கச் செய்து, சந்தனமும் மாலையும் புனைவித்தார்கள்.

கச்சியப்பர் முதற் பாடலை எடுத்து ''திகட சக்கரச் செம்முகமைந்துளான்'' என்று கூறி, ''திகழ் தச கர செம்முகம்

* கச்சியப்பரின் காலம் ஆராய்ச்சிக்குரியது:

..ந்து உள்ளான்'' என்று பதப் பிரிவு செய்தார். ''விளங்கா நின்ற பத்துத் திருக்கரங்களும், ஐந்து முகங்களும் உடைய சிவபெருமான்'' என்று இவ் வடிக்குப் பொருள் கூறினார்.

உடனே சபையில் இருந்த ஒரு புலவர் எழுந்து, ''ஆசாரிய பெருந்தகையே! திகழ் தசக்கரம் என்ற இரு சொற்கள் ''திகடசக்கரம்'' என்று புணர்தற்கு விதி தொல்காப்பியம் முதலிய இலக்கண நூல்களில் இல்லையே?'' என்றார்.

கச்சியப்பர் ''இது என் வாக்கன்று. இது செந்தமிழ்க் குமரனும் முருகனே அடியெடுத்துத் தந்தது'' என்றார்.

அது கேட்ட அப்புலவர் புன்முறுவல் செய்து ''முருகன் கருணையை நான் மறுக்கவில்லை. ஆனாலும் தாங்கள் கூறுவதை நான் எப்படி நம்ப முடியும்? அதனை முருகனே சபையறிய வெளியிட்டால் ஒப்புக் கொள்வோம். இல்லையேல் நூலை அரங்கேற்ற விட மாட்டோம்'' என்று கூறி மறுத்தார்.

முதல் நாள் தம் பாடலை ஆண்டவனின் அடிகளில் சூட்டி மறுநாள் பாடலின் அடிகள் திருத்தப் பெற்றுத் திரும்பப் பெற்ற கச்சியப்பர், இப்போதும் ஒரு நாள் அளவில் அய்யன் அருள்வான் எனத் திடமாக நம்பினார். ''நாளை அது நிகழும்'' என்றார்.

அன்றிரவு பூஜை முடிந்த பிறகு திருக்கதவம் தாளிட்டு உள்ளே வெறும் தரையில் உண்ணாது படுத்தார்.

அடியாருக்கு அடியெடுத்துத் தந்த கந்தவேள் அவருடைய கனவில் தோன்றி, ''அன்ப, சோழ தேயத்தில் வீர சோழியம் என்ற ஓர் இலக்கணம் உண்டு. திகழ், தசம் என்ற இரு பதங்கள் 'திகடசம்' எனப் புணர்தற்கு விதி அந்நூலில் சந்திப் படலத்தில் பதினெட்டாம் செய்யுளில் இருக்கின்றது. சோழ தேயத்துப் புலவன் ஒருவன் நாளை அதனைக் கொணர்ந்து பலரறியக் காட்டுவான்'' என்று அருளிச் செய்தார்.

மறுநாள் சபை கூடியது. கச்சியப்பர் பீடத்தில் அமர்ந்தார். அப்போது ஒரு புலவர் அங்கு வந்து வீர சோழியம் என்ற நூலை நீட்டினார். அதனை வாங்கிப் பார்க்கச் சந்திப் படலத்தில் பதினெட்டாம் செய்யுளில் 'திகடசக்கரம்' என்பதற்கு விதி இருக்கக் கண்டு அதிசயித்தார்கள். வந்த புலவர் நூலைக் கச்சியப்பரிடம் தந்து சபையோரை நோக்கி, ''மறுப்புரை நீங்கியதா?'' என்று கேட்டார். உடனே ஒளி காட்டி மறைந்தருளினார்.

கச்சியப்பர் கந்தவேளின் கருணைத் திறத்தைக் கருதிக் கண்ணீர் சொரிந்தார். சபையோர் முருகனுடைய திருவருளையும், கச்சியப்பருடைய தவ வலிமையையும் எண்ணி இறும்பூது அடைந்தார்கள். கச்சியப்பரைப் பல முறையும் பணிந்தார்கள். மறுப்புரை கூறியவர் மன்னிப்புக் கேட்டுக்கொண்டார். ''அம்மறுப்புரையினால்தானே அப்பன் அருள் வெளிப்பட்டது?'' என ஆறுதல் கூறினார் கச்சியப்பர்.

இராமாயணத்தின் நாயகனான இராமபிரானே அக்கதையைக் கேட்டருளியது ஆதி காவியத்தின் சிறப்பு. இங்கோ கந்தன் தன் கதையைத் தானே சரி பார்த்து அதனை உலகு ஒப்புமாறும் செய்தான்.

புராண அரங்கேற்றம் தினந் தினம் நடைபெற்றது. தொண்டை மண்டல வேளாளப் பிரபுக்கள் நிரம்ப அன்ன தானம் புரிந்தார்கள். ஓராண்டில் அரங்கேற்றம் முடிந்தது.

புராணத்தையும் கச்சியப்பரையும் சிவிகையில் வைத்து நகர் வலம் வந்தார்கள். குடை பிடித்தார்கள் சிலர். வெண்சாமரம் வீசினார்கள் சிலர். கொடிகள் பிடித்தார்கள் சிலர். மேள தாளங்கள் முழங்கின. தோரணங்கள் நாட்டினார்கள். வாரணங்கள் முன் சென்றன. ஆரணங்கள் ஓதினார்கள். ஹர ஹர என முழங்கிக் கச்சியப்பரை வணங்கினார்கள்; வாழ்த்தினார்கள்.

கந்தபுராணத்தை ஓதி உய்ந்தார்கள். கச்சியப்பர் குமர கோட்டத்து முருகனைப் பூஜை செய்து கொண்டும் ஞான நிஷ்டையில் அமர்ந்தும், முடிவில் கந்தவேளின் கழலிணை நிழலிற் கலந்தனர்.

(தொடரும்)



அன்னையைப் போன்ற அழகொளி படைத்தவள்.



✳ ✳ ✳ **பின்னியின்** தூய பட்டு - பிரத்தியேக வகைகள் ✳ ரிவர்ஸிபிள், மற்றும் ஷாட் ஸில்க் புடவைகள் ✳ ஜார்ஜெட், ஷிப்பான், மென்பட்டு தினுசுகள் ✳ கண்ணிய மான தோற்றமளிக்கும் தூய ஸில்க் ஷர்ட்டிங்

கண்கவரும் பல மோஸ்தர்களில் கிடைக்குமிடம் :



**வேங்கடேஷ் வஸ்திராலயா**

ஷோ ரூம்கள்: மதருஸ் ஹைகோர்டுக்கு எதிரில்
பார்ட்னர்கள்: S. வெங்கடேஸ்வர அய்யர், V. சிவராமன்



JWT/VV/2775

15-11




## 2. சங்கத்தில் உதித்த சங்கரி

தேவசேனாபதியான குமரனின் கதையைத் தொடங்குமுன் கணபதியை அற்புதமான பாடலால் துதிக்கிறார் கச்சியப்பர்.

" திகட சக்கரச்
　செம்முகம் ஐந்துளான்
சகட சக்கரத்
　தாமரை நாயகன்
அகட சக்கர
　வின்மணி யாவுறை
விகட சக்கரன்
　மெய்ப்பதம் போற்றுவாம் "

விகட சக்கர விநாயகர் காஞ்சிபு
தில் ஏகாம்பரநாதர் கோயில் வெ
பிராகாரத்தில், கம்பாநதி என்ற தீ
தத்துக்கு அருகில் ஆயிரக்கால் மண்
பத்தில் எழுந்தருளியிருக்கிறார்.

விகட சக்கரன் என இவர் எ
பெயர் பெற்றார்?

தட்ச யக்ஞத்தை அழிக்கச் செ
வீரபத்திரர் மீது திருமால் சக்ர
தத்தை ஏவினார். அதனை வீரபத்தி
அணிந்திருந்த வெண்டலை (கபால

ன்று சவ்விக் கொண்டது. அதனைத் திரும்பப்பெறும்பொருட்டுத் திருமாலின் சேனைத் தலைவர் விஷ்வக்ஸேனர் வீரபத்திரர் முன் விகடக்கூத்தாடினார். அது கண்டு அனைவரும் சிரித்தார்கள். மாலையில் இருந்த வெண்டலையும் சிரித்தது. அப்போது அதன் வாயிலிருந்த சக்ராயுதம் வெளியே வந்து விழுந்தது. அதை விஷ்வக்ஸேனர் எடுப்பதற்கு முன் விநாயகப் பெருமான் எடுத்து மறைத்து வைத்துக் கொண்டார்.

விஷ்வக்ஸேனர் மீண்டும் ஒரு முறை விநாயகப் பெருமானுடைய திருமுன் விகடக் கூத்தாடி அவரை மகிழ்வித்து, அவரிடமிருந்து சக்கரத்தை வாங்கித் திருமாலிடம் தந்தார்.

விகடக் கூத்தாடக் கண்டு மகிழ்ந்து சக்கரம் அளித்த காரணத்தால் விகட சக்கர விநாயகர் என்று கணநாதர் பெயர் பெற்றார்.

திகழ் தசகரச் செம்முகம் ஐந்துளான்: விளங்கா நின்ற செம்மையான ஐந்து திருமுகங்களும் பத்துத் திருக்கரங்களும் உடைய சிவபெருமான்.

சகட சக்கரத் தாம்மரை நாயகன்: சிவபெருமான் திரிபுரம் எரித்தபோது அவருடைய தேருக்குச் சக்கரமாக இருந்த தாமரை நாயகனாகிய சூரிய பகவான்.

அகடு அசக்கு அரவின் மணியாவுறை: விநாயகப் பெருமானின் வயிற்றில் சுற்றிய பாம்பின் முடியிலுள்ள இரத்தினமாகச் சூரியன் விளங்குகிறானாம்! 'திரிபுர தகனத்தில் ஈசனின் தேர்ச் சக்கரமாக இருந்த சூரியன்' என்கிறார்.

தாரகாக்ஷன், கமலாக்ஷன், வித்யுன்மாலி என்னும் மூன்று அசுரர்கள் வாள் வலியாலும் தோள் வலியாலும் தலைசிறந்து, ஒப்பாரும் மிக்காருமின்றி இருந்தனர். அவர்கள் பிரமனை நோக்கி அநேக காலம் தவம் புரிந்தனர். பிரமர் அவர்களுக்குக் காட்சி தந்து, "என்ன வரம் வேண்டும்?" என்று கேட்டார். "நாங்கள் அழியாமல் இருக்கும் வரம் வேண்டும்" என்று மூவரும் கேட்டனர்.

"குழந்தைகளே! அழியாதவைகளும் அழியாதவர்களும் உலகில் இல்லை. கற்பகோடி காலம் சென்றதும் நானும் இறந்து விடுவேன். பிறப்பு இறப்பு இல்லாதவர் பரமேசுவரன் ஒருவர் தான். ஆகவே, அந்த வரம் தவிர, வேறு வரம் ஏதும் கேளுங்கள். தருகிறேன்" என்று பிரம்மா கூறினார்.

"சுவாமி! பூமி, அந்தரம், சுவர்க்கம் என்னும் மூவுலகங்களிலும் பொன், வெள்ளி, இரும்பினால் அமைந்த மதில்கள் பொருந்திய முப்புரம் வேண்டும். அந்த முப்புரம் ஆயிரம் வருடத்துக்கொரு முறை விரும்பிய இடத்துக்குப் பெயர வேண்டும். அப்புரங்கள் மூன்றும் ஒன்றுபட்ட பொழுது சிவபெருமானே ஒரு கணையால் அழித்தாலன்றி வேறு யாராலும் மாளாத வரம் வேண்டும்" என்று மூன்று அசுரர்களும் கேட்டனர். அவர்கள் விரும்பியபடியே பிரம்மா வரம் தந்தார்.

அசுரர்கள் மூவரும் மயனை அழைத்துத் தங்கள் விருப்பப்படி மண்ணுலகில் இரும்பு மதிலும், அந்தர உலகில் வெள்ளி மதிலும், விண்ணுலகில் பொன் மதிலுமாகப் பல வளங்களும் பொருந்திய முப்



புரங்களை உண்டாக்கி, அளவிலா அவுணர் சேனைகளுடன் வாழ்ந்து வந்தார்கள்.

அவர்களின் கொடுமைக்கு ஆளான தேவர்களுடன் திருமால் மேருமலையின் வடபால் சென்று சிவபெருமானைக் குறித்துப் பல காலம் தவம் செய்தார். இதன் பயனாக, சிவபெருமான் திரிபுர அசுரர்களை அழிப்பதற்குத் திரு உள்ளம் கொண்டார். யுத்தத்துக்குச் செல்லும் வகையில் தாம் ஆரோகணிக்கத் திருத் தேரைச் சித்தம் செய்யப் பணித்தார்.

அப்படிச் சித்தம் செய்த தேரின் பெருமைதான் என்னே! அத்தேருக்கு அச்சு மந்தர - கேசரி மலைகள்; சந்திர சூரியர் சக்கரங்கள்; இருதுக்கள் சந்திகள்; பதினான்கு லோகங்களும் தேரின் பதினான்கு தட்டுக்கள். உதய அஸ்தகிரிகள் கொடிஞ்சிகள்; நதிகளும் நதங்களும் நாட்டுங்கொடிகள்; நட்சத்திரங்கள் நல்ல விதானம்; மோட்சலோகம் மேல் விரிவாகவும், மேகங்கள் சட்டமாகவும், நாள் முதலியன எண்ணெய் ஊற்றும் இடுக்கு மரமாகவும், அட்ட பருவதங்கள் தூண்களாகவும் அமைக்கப்பட்டன. எட்டுத் திக்கு யானைகள் இடையில் தாங்கின. ஏழு சமுத்திரங்கள் திரைச் சீலையாயின. ஞானேந்திரிய கன்மேந்திரியங்கள் கலன்களாகவும், கலைகள் முளைகளாகவும், புராணம், வேதாங்கம், சாத்திரம், மனுக்கள் ஆகியன மணிகளாகவும், மருத்துக்கள் படிகளாகவும் அமைந்த தேர் ஸ்வாமி ஆரோகணிக்கத் தயாராகி விட்டது. நான்கு வேதங்களும் அத்தேரின் குதிரைகளாகப் பூட்டப்பட்டன. பிரணவ மந்திரத்தைச் சாட்டையாக்கிக் கொண்டு சதுர்முகன் சாரதியானான். கங்கை, அதிதி முதலிய தேவமாதர்கள் நாலா பக்கங்களிலும் சாமரம் இரட்டினார்கள். நாரதரின் இசைக்குத் தக்கபடி அரம்பையர் நடனமாடினர். தேவர்கள் மேரு மலையைப் பெருமான் தரிப்பதற்கு ஏற்ற தனுசாக்கித் தந்தார்கள். ஆதிசேடன் அந்த வில்லின் நாணானான். பையரவு துயில் பதுமநாபப் பெருமானே பாணமாயினன். வாணி வில்லில் கட்டிய மணியாகவும், அக்கினி தேவன் அம்பின் கூர் வாயாகவும், வாயு தேவன் அம்பிற் கட்டிய இறகாகவும் ஆயினர்.

இவ்வளவு மகத்துவம் பொருந்திய மகாரதத்தில் மகாதேவன் மலரடி வைத்ததுமே என்ன ஆயிற்று? நொந்த உள்ளங்களில் நளினமாகப் பொருந்தும் சிவபெருமானின் பாதம் அப்பெரும் தேரினுள் பட்டதும் அதன் அச்சு முறிந்து. ஈசனின் திருவிளையாடலை என்னென்பது? பெருமிதமான சாதனைகளால் தன்னைத் திருப்திப்படுத்த முடியாது எளிமையாலேயே தன் அருளைப் பெற முடியும் என்று தேவர்களுக்குப் பெருமான் உணர்த்த எண்ணியிருப்பானோ

அச்சு முறிந்ததைக் கண்ணுற்ற திருமால் உடனே இடபமானார். இடபத்தின்மீது எம்பெருமான் ஏறி ரிஷபாரூடராகத் திருக்கோலம் தந்தருளினார்.

> தடமதிலக ளவைமூன்றுந்
> தழலெரித்த அந்நாளில்
> இடபமதாய்த் தாங்கினன்
> திருமால்காண் சாழலோ
>
> (திருவாசகம்)

தேரினால் பயனில்லாதது போலவே தேவர்கள் தந்த திவ்வியாஸ்திரத்தாலும் பயனில்லை. சிவபெருமான் புரங்கள் மூன்றையும் புன்சிரிப்பாலேயே சாம்பலாக்கினார்.

இத்தகைய பெரிய தேருக்குச் சக்கரம் சூரியன். அந்தச் சூரியன் விநாயகர் இடையில் அணிந்துள்ள உதரபந்தமாகிய பாம்புக்கு மணியாக விளங்குகின்றான். "அவ்வாறு விளங்கும் விநாயகனின் அடியிணையை வணங்கி இந் நூலைத் தொடங்குகின்றேன்" என்று கச்சியப்பர் ஆரம்பம் செய்கிறார்.

நூல் பாடுகின்ற ஆசிரியர் முதன் முதலாக ஆற்றுப் படலம் பாடுவது மரபு. கதை நிகழ்கின்ற நாடு எந்த நதியினால் வளம் பெறுகின்றதோ அந்த நதியின் சிறப்பைப் பாடுவர். இராமாயணத்தில் சரயூ நதி குறித்த ஆற்றுப் படலம் உண்டு. மகா பாரதத்தில் கங்கை நதி சிறப்பிக்கப் பெறுகிறது. திருவிளையாடற் புராணத்தில் வையை நதியும், பெரிய புராணத்தில் காவிரியும் பாடப் பெற்றுள்ளன. கந்த புராண ஆசிரியரான கச்சியப்ப பாலாற்றைச் சிறப்பித்து ஆற்றுப் படலம் பாடுகிறார்.

கதாநாயகன் வாழ்ந்த ஸ்கந்தகிரியிலுள்ள தீர்த்தத்தைப் பாடாமல் கவியாசிரியர் வாழ்ந்த காஞ்சியின் தீர்த்தத்தை அவர் பாடியது ஏன்? எங்கும் வாழும் கதாநாயகன் தம்முடனே நிச்சயமாக வாழ்கிறான் என்ற அனுபவத்தினாலேயே அவ்வாறு பாடியிருப்பாரோ? பாலாறு நீர் வறண்ட ஆறு ஆயிற்றே, அதனை எப்படிச் சிறப்பித்துப் பாடுகிறார் எனப் பார்ப்போம்.

குழந்தைகளுக்குப் பசி வரும்போது அது வரடத் தாய்க்குப் பால் சுரக்கும். குழந்தை பசி ஆறியவுடன் பால் மறைந்து விடும். வேண்டிய பொழு

**புதியது**

# ப்ரோடெக்ஸ் ஒரு சர்வ-காரிய டால்க். அது குடும்பத்தினர் அனைவருக்கும் மிகச்சிறந்தது.

"ப்ரோடெக்ஸ் எனக்கு விருப்பமானது. ஏனெனில் அது எந்தக் குடும்பத்திற்கும் ஏற்றபடி சிக்கனமானது"

"நாள் முழுதும் புதுமையுடனிருக்க நான் ப்ரோடெக்ஸையே விரும்புகிறேன்"

"எனது மிருதுவான சருமத்தைப் பாதுகாப்பதால் அம்மா ப்ரோடெக்ஸையே விரும்புகிறாள்"




ப்ரோடெக்ஸ் ஒரு உயர்ந்த ரக, மனோரம்மிய நறுமணமுடைய, சர்வ-காரிய டால்க். எல்லாக் குடும்பத்தினருக்கும், குளித்தபிறகும், கோடைக்காலத்தில் குளிர்ச்சிக்கும் மிகச் சிறந்தது. ப்ரோடெக்ஸ் வாங்குங்கள்—மிக மிகப்பெரிய டப்பா-மிகமிகக் குறைந்த விலை.

## ப்ரோடெக்ஸ்

**ஆல்-பர்ப்பஸ் டால்கம் பௌடர்**

PTP-8-7-TAM.

# இப்பொழுது நடைபெறுகிறது




# நவராத்திரி

பாடல்கள்-கவிஞர் கண்ணதாசன் · சங்கீதம்-திரை இசைத் திலகம் K.V. மஹாதேவன்
ஒளிப்பதிவு-W.R. சுப்பாராவ் · எடிட்டிங்-ராஜன் · கலை-Ch.E. பிரசாத்ராவ்
பாடல்கள் ஒலிப்பதிவு-T.S. ரங்கசாமி · ரீரிகார்டிங்-M.B. வால்கே
ஸ்டில்ஸ்-நாகராஜ ராவ் · ஸ்டுடியோ-பிலிம் சென்டர், சென்னை

கதை, வசனம், டைரக்ஷன் A.P. நாகராஜன்

ரக்க வேண்டும். வேண்டாதபோது
ரக்க வேண்டும். அவ்வாறில்லாமல்
எப்போதும் பால் சுரந்தால் அது
பிணியாகும். குழந்தைக்குப் பசி வரும்
பொழுது தாய்க்குப் பால் சுரப்பதே
போல், வேண்டிய பொழுது விவ
சாயிகள் வருடினால் பாலாறு நீர்
சுரக்கின்றது. மற்ற நேரங்களில் கரந்து
விடுகிறது. இது மற்ற நதிகளுக்கு இல்
லாமல் பாலாற்றுக்கே உரிய பெருமை.

பாலாற்றுக்கு உற்பத்தி ஸ்தானம்
நந்திமலை. அங்கே மேகம் நீரை முகர்ந்து
இருண்ட உருவத்துடன் சென்றது.
அப்போது வானவில் தோன்றியது.
கரிய மேகங்கள் வானவில்லுடன் நின்று
நந்தி மலைமீது வாய் திறந்து குளிர்ந்த
நீரைப் பொழிகின்றன.

கரிய முகிலும், பெரிய மலையும்,
பான வில்லும், பொழிகின்ற மழையும்
பரம பக்தரான கச்சியப்பருக்கு
எவற்றை நினைவூட்டுகின்றன?

கரு நிறமுடைய கண்ணப்ப நாய
னர் வில்லுடன் சென்று காளத்தியப்ப
ராம் சிவலிங்கத்தின் மீது, தாம் வாயில்
தேக்கிக் கொணர்ந்த நீரைச் சொரி
வது போல் இருக்கிறது என்கிறார்.
இதோ தேனினும் இனிய பாடல் :

ஊட்டு கார்முகந்தன்னொடு தோன்றிய
புயல்வாய்
வீட்டுதன் புனல் நந்தியங்கிரிமிசை உகுத்தல்
வட்டுவக் குலத் திண்ணனார் மஞ்சனம்
விமலற்கு
ஊட்டுகின்றதோர் தனிச் செயல்
போன்றுளதன்றே

நந்தி மலையில் மழை பொழிந்தது.
பால் நதியில் வெள்ளம் ஓடுகின்றது.
வலிமையான சில மீன்கள் நீரில்
எதிர்த்து நீந்திச் செல்கின்றன.

கச்சியப்பருக்கு அந்தச் சிறு காட்சி
காட்சி தருகின்றது.

மதுரைமா நகரில் வையையாற்றில்
முத்தமிழ்வித்தகராம் திருஞான சம்பந்த
சுவாமிகள், 'வாழ்க அந்தணர்' என்று
பாடிவிட்ட செந்தமிழ் ஏடு எதிர் ஏறிச்
சென்றதல்லவா? அது போல் இருக்கிற
தாம் மீன் எதிர் ஏறுவது.

நீரில் குவளை மலர்கள் பூத்திருக்கின்
றன. அவற்றைக் கண்ட கச்சியப்பருக்
குக் குளம் முழுவதும் விளக்குகள் எரிந்து
நிறைந்து ஒளி வீசுவது போல் தெரிந்
தது. நமிநந்தி அடிகள் தண்ணீரையே
நெய்யாக வார்த்து ஏற்றிய விளக்கு
களைப்போல் குவளைகள் காட்சி தருகின்
றன என்று அவர் அழகுபடக் கூறுகிறார்.

விளக்கின் தைலம் போல் தீர்த்தமும்,
அதில் எரிகின்ற சுடர் போல் மலரும்
காட்சி தருகின்றன கச்சியப்பருக்கு.



"தீபாவளிக்கு மாமனார் என்ன பரிசு
கொடுத்தார்?"
"நீண்ட 'க்யூ'வில் கால்கடுக்க நின்று ஆறு
லிட்டர் அரிசி வாங்கிக் கொடுத்திட்டார்!"

ஆற்றுப் படலம், நாட்டுப் படலம்,
பாயிரப் படலம் எல்லாம் முடிந்தபின்
வரலாற்றைத் தொடங்குகிறார்.

ஒருவருடைய கதையைச் சொல்லு
முன் அவரது பரம்பரையைப் பாடுவது
மரபு. கந்தனின் தந்தை வழியில் பரம்
பரை பாடி முடியாது. சிவபெருமான்
தான் 'தாயுமிலி தந்தையிலி' ஆயிற்றே.
எனவே அன்னையாகிய உமாதேவியின்
வரலாற்றைக் கவி கூறுகிறார்.

இந்திர லோகத்தை ஆள்பவன்
இந்திரன். அவனுக்குச் சயந்தன் என்
றொரு புதல்வன். அவன் பிரகஸ்பதியிடம்
சென்றான். ''குருநாதா! நூற்றெட்டு
யுகங்கள் என் தந்தையும் நானும்
சூரபத்ம அசுரனால் துன்பமடையக்
காரணம் என்ன?'' என்று கேட்டான்
சயந்தன். பிருகஸ்பதி அக்காரணத்தை
விளக்கப் புகுபவராகத் தட்சனுடைய
வரலாற்றைத் தொடங்கினார். இது
தான் கந்தபுராணத்தின் மூலம்.

பிரமனின் கட்டை விரலில் தோன்றி
யவன் தட்சன். அவன் கல்வி, அறிவு,
ஆற்றல், ஒழுக்கம் எல்லாவற்றிலும் சிறந்
தவன். பிரமனை நோக்கி, ''தந்தையே!
தாங்கள் சிருஷ்டி செய்கிறீர்கள் ;
திருமால் ரட்சிக்கிறார்; உருத்திரர்
சம்ஹரிக்கிறார். இம்மூவரில் பெரியவர்
யார் ?'' என்று கேட்டான்.

''இவர்களில் யாரும் பெரியவர்
அல்லர். தங்கள் தங்கள் கடமைகளையே
இவர்கள் செய்கிறார்கள். இவர்களுக்குப்

பெரியவர் ஒருவர் இருக்கிறுர். அவரே சிவபெருமான்'' என்றுர் பிரமன்.

சிவன்தான் பரம்பொருள். சிவத்தை அடைபவர் எல்லா நலன்களையும் பெறுவார்கள். காலையில் எழுந்தவுடனேயே சிவபெருமானுடைய ஐந்தெழுத்தைச் சொல்ல வேண்டும். நாமங்களை வாக்கினுலும் மந்திரங்களை மனத்தினுலும் சொல்லவேண்டும். கைகளால் அருச்சனை செய்ய வேண்டும்.

கலங்கியிருக்கின்ற நீரில் தேத்தாங்கொட்டையைப் போட்டால் தெளிவடையும். அதேபோல் மனத்திலுள்ள கலங்கலைத் தெளிய வைப்பது பஞ்சாட்சரம். ''பஞ்சாட்சர தியானத்திஞல் அடையக் கூடிய பொருள் இறைவன்'' என்று பிரமதேவர் சொன்னுர். இதைக் கேட்ட தட்சன் ''தவம் செய்து, சிவபெருமானை அடைகிறேன்'' என்று இமாசலத்துக்குச் சென்றுன். அங்கே ஒற்றைக் காலில் நின்று தவம் செய்தான்.

பவள மலை போன்று பெருமானும் நீலக் கொடி போன்று பிராட்டியாரும் தோன்றினுர்கள். தீ சுடர் விட்டு எரியும் போது நுனியில் நீல நிறம் படரும். சிவப்பாக எரிவது சிவம். நீலம் பரவியிருப்பது அம்பாள்.

தட்சன் சுவாமியை ஸ்தோத்திரம் செய்தான். ''உனக்கு என்ன வரம் வேண்டும்?'' என்று கேட்டார் சிவபெருமான். ''சுவாமி! தேவரும் மூவரும் அகில உலகமும் என்னை வணங்க வேண்டும். தாங்கள் எனக்கு மருமகனுக வேண்டும்'' என்று வரம் கேட்டான் தட்சன். கேட்ட வரங்களையெல்லாம் கொடுத்தார் தயாநிதி.

தட்சன் மேரு மலைக்குப் போனுன்.

தட்சமாபுரம் என்ற அற்புத நகரத்தை ஏற்படுத்தி அங்கு வசித்தான்.

உரிய காலத்தில் வேதவல்லி என்ற பெண்ணைத் திருமணம் செய்து கொண்டான். பெருமித வாழ்வில் திளைத்துக் கொண்டிருந்தான்.

தட்சனுக்கு ஆயிரம் ஆண் குழந்தைகள் பிறந்தன. அவர்களை அழைத்தான் தட்சன். ''குழந்தைகளே! நீங்கள் எல்லோரும் சிவபெருமானை நோக்கித் தவம் செய்து என்னைப் போல் பல உலகங்களை ஆளும் வரம் பெறுங்கள்'' என்று அவர்களை அனுப்பி வைத்தான்.

ஆயிரம் குழந்தைகளும் போய் தவம் செய்து கொண்டிருந்தனர். அப்பொழுது மகரிஷி நாரதர் வீணையை மீட்டிக் கொண்டு அங்கே வந்தார்.

''குழந்தைகளே! உங்கள் தந்தை பிறவாத பேரின்பத்தை நாடித்தான் தவம் செய்யப் போனுர். சிவபெருமான் அவர் எதிரே காட்சி தந்தபோ[து] தவத்தின் நோக்கத்தை மறந்[து] உலகங்கள் எல்லாம் வந்து வண[ங்க] வேண்டும் என்று வரம் கேட்டா[ர்]. ஆகவே, உங்கள் க்ஷேமத்திற்கா[க] சொல்லுகிறேன். பிறவா வரம் வே[ண்]டும் என்றே ஐயனை நோக்கித் தவ[ம்] செய்யுங்கள்'' என்று நாரதர் கூறினு[ர்].

ஆயிரம் குழந்தைகளும் அவ்வா[றே] பிறவா வரம் கோரித் தவம் இருந்தன[ர்]. அந்த வரத்தைச் சிவபெருமானும் [அ]தருளினுர். ஆயிரம் குழந்தைகளும் [இறைவ]னுடன் ஒன்றி விட்டன. தேங்கா[ய்] பழம், கர்ப்பூரம் ஆகியவற்றைக் கோ[யி]லுக்குக் கொண்டு சென்றுல் அருச்ச[னை] முடிந்த பிறகு தேங்காய் திரும்பி வரு[ம்]. பழம் திரும்பி வரும். கர்ப்பூரம் மட்டு[ம்] திரும்பி வராது. அது போல, தவ[த்]துக்குச் சென்றவர்கள் தவப் பொ[ரு]ளுடன் ஒன்றிவிட்டார்கள்.

நாரதர் செய்த காரியம் தட்சனு[க்]குத் தெரிந்து விட்டது. மீண்டு[ம்] ஆயிரம் குழந்தைகளை உண்டா[க்]குன். அந்தக் குழந்தைகளை அழைத்[து] முன் போலவே தவத்துக்கு அனுப்[பி]னுர். நாரதர் மீண்டும் வந்து மு[ன்] போலவே செய்தார்.

ஆயிரம் குழந்தைகளும் சிவபெ[ரு]மானுடன் ஒன்று சேர்ந்து விட்டன[ர்]. தட்சனுக்குக் கோபம் பொங்கியது. ''நாரதனே! நீ கலியாணம் ஆகாம[ல்] அலைவாய்'' என்று சபித்தான்.

ஆண் பிள்ளைகள் தாய் தந்தை[ய]ருக்கு அடங்க மாட்டார்கள்; பெ[ண்] குழந்தைகள் தாய் தந்தையரிடம் வி[சு]வாசமாக இருப்பார்கள் என்று கருதி[ய] தட்சன், ஐம்பது பெண் குழந்தைகளை[ப்] பெற்றுன். அவர்களில் பத்துப் பெ[ண்]களைத் தருமதேவனுக்கும், பதின்மூ[ன்று] பெண்களைக் காசிப முனிவருக்கும், இருபத்தேழு பெண்களைச் சந்திரனு[க்]கும் திருமணம் செய்து கொடுத்தான்.

இருபத்தேழு மனைவிகளை மணந்[து] கொண்ட சந்திரன் கடைசி மனைவியிட[ம்] மட்டுமே பிரியமாக இருந்தான். மற்[ற] மனைவிகளைத் திரும்பியே பார்க்கவில்[லை]. அவர்கள் மனம் நொந்து தந்தையா[ன] தட்சன் காலில் போய் விழுந்தார்கள்.

தட்சனுக்கு மருமகனிடம் கோப[ம்] வந்தது. அழகே வடிவான சந்திரனை தினம் ஒரு கலையாகத் தேயும்படி சாப[ம்] கொடுத்தான்.

மாமனுர் சாபம் கொடுத்தை[தை]க் கேட்டுக் கலங்கிய சந்திரன் வைகுந்[த]துக்கும், பிரம்மலோகத்துக்கும், இந்[திர] லோகத்துக்கும் சென்று முறையிட்[டு]

சாப நிவிர்த்தி பெற முடியாமல் கைலாயத்தைச் சென்றடைந்தான்.

''தேய்ந்த கலையாகத் தங்களை அடைந்துள்ளேன். என்னை ரட்சிக்கவேணும். அபயம், அபயம்!'' என்று ஈசனின் பாதத்தில் வீழ்ந்தான்.

எவ்வளவு பாவியாக இருந்தாலும் அடைக்கலமாக வந்தவனை எம்பெருமான் விட்டு விடுவாரா?

''சந்திரா! நீ செய்தது மன்னிக்க முடியாத குற்றம். ஆனாலும் நான் மன்னிக்கிறேன். ஒரு நிபந்தனையுடன் மன்னிக்கின்றேன்.

''ஏனெனில் எல்லாக் குற்றங்களையும் நான்தான் பூரணமாக மன்னிப்பேனெனினும் மனைவிக்கு நம்பிக்கைத் துரோகம் செய்வதை மட்டும் முற்றிலும் மன்னிக்க என்னால் இயலாது. திருமணமான மறு நாளே தாய் தந்தையரைத் துறந்து, உடன் பிறந்தவர்களைத் துறந்து, சுற்றத்தைத் துறந்து உடன் வருகிறவள் மனைவி. அவ்வளவு உயர்ந்த தியாகம் செய்து வந்த இருபத்தாறு மனைவிகளுக்குத் துரோகம் செய்த உன்னைப் பூரணமாக மன்னிக்க மாட்டேன். உன்னைத் தேய விடாமல் முழு நிலாவாக வைத்து விட்டால், மனைவிக்குத் துரோகம் செய்தாலும் மன்னிப்புக் கிடைக்கும் என்ற எண்ணம் உலக மாந்தர்களுக்கு ஏற்பட்டு விடும். எனவே, நீ தேய்ந்து தேய்ந்து வளருமாறு தட்சனின் சாபத்தைத் தளர்த்துகிறேன்'' என்று அருளினார் பத்தினிக்குப் பாதி தேகம் தந்த அம்மை அப்பன்.

பின்னரும் பெருமானின் கருணை உள்ளம் சந்திரன்பால் உருகிற்று. தேய்ந்த பிறைச் சந்திரனை யெடுத்துத் தலையின் மீது தரித்துக் கொண்டார் சிவபெருமான்.

வேதம் தனது சிரத்தில் சூட்டிக் கொள்வதற்காகத் தேடியலையும் பாதம் படைத்த பரமன், தனது சிரத்தில் அகந்தையின் உருவாக வந்த கங்கையையும், பாபத்தின் உருவாக வந்த பனி மதியையும் தரித்த அருட்பான்மையை என்னென்பது?

விண்ணில் உள்ள சந்திரன் தேய்வான். வளர்வான். சிவபெருமான் தலையில் உள்ள பிறைத் திங்களோ தேய்வதும் இல்லை; வளர்வதும் இல்லை; அபயம் என்று வந்தவனுக்கு ஆண்டவன் கொடுத்த அபயம் அது!

தேய்ந்து வளரும் நிலா முழுமை அடையும் பூர்ணிமை நன்னாள்.

அன்று மாசி மகம். தட்சன் தன் மனைவி வேதவல்லியுடன் யமுனைக்குச் சென்றான்.

''மருமகனாக வருகிறேன்'' என்று தட்சனுக்கு வரம் கொடுத்திருந்த சிவபெருமான் அதனை அன்று நினைவுகூர்ந்தார். பூர்ணிமையைத் தமது பிரிய திதியாகக் கொண்ட அம்பிகையை நிலவுப் பார்வையுடன் நோக்கினார். நிலவினும் இனிய குரலில், ''தேவி, நீ தட்சன் மகளாகப் பிறப்பாயாக!'' என்று ஆணையிட்டருளினார்.

தட்சன் யமுனையில் நீராடும்போது நதியில் ஆயிரத்தெட்டு இதழ்கொண்ட ஓர் அற்புதத் தாமரையைக் கண்டான். அதனில் வலம்புரிச் சங்கு ஒன்று மிதப்பதைக் கண்டான்.

ஓங்கார நாதத்தைத் தன்னுள் கொண்ட வலம்புரிச் சங்கம் வீட்டில் இருப்பதே க்ஷேமம். அதனால் நீர் முகர்ந்து சுவாமிக்கு அபிஷேகம் செய்தால் கும்பாபிஷேகம் செய்த புண்ணியம் கிடைக்கும்.

தாமரையைப் பற்றி அதிலிருந்து வலம்புரியை எடுத்தான். வலம்புரிச் சங்கு குழந்தையாக மாறி விட்டது. எம்பிராட்டியார் குழந்தையாக வந்தார். உலக மாதா பச்சைப் பசும் பாலகியாக வந்தார்.

குழந்தையைத் தட்சன் தன் மனைவியிடம் கொடுத்தான். அன்னையின் அன்பான அரவணைப்பை உலக அன்னையும் அநுபவித்தாள்!

(தொடரும்)



அந்தச் சிறிய பொம்மைக்கு விலை சற்று அதிகம் தான். ஆனாலும் கூட வந்த நண்பர் அதை எப்படியாவது வாங்கிவிடத் துடித்தார். ''முகத்தில் அப்படியே களை சொட்டுகிறது! இனிய புன்சிரிப்பை எப்படித் தான் இந்தச் சின்ன உதடுகளில் கொண்டு வந்து பூசியிருக்கிறான். அதைப் பார்த்தாலே நமக்கு அமைதி ஏற்படும் போலிருக்கிறது'' என்றார் அவர்.

''ஆமாம், ஐயா! அது ஜப்பானில் தயாரான பொம்மை. ஜப்பானியர்கள், ஆண்களும், பெண்களும் பொன்னகைக்குக் கொடுக்கும் மதிப்பைவிட, புன்னகைக்கு மதிப்புக் கொடுத்து அதையே ஆபரணமாகப் பூணும் பண்புடையவர்கள். அந்தப் பண்பை அவர்களுடைய சிருஷ்டிகளிலும் இயற்கையாகவே கொண்டு வந்து விடுகிறார்களோ என்னவோ?'' என்று பதிலளித்தேன் நான்.

பேரம் இல்லாமல் பொம்மையை வாங்கிக் கொண்டு நடந்தார் நண்பர். ஜப்பானைப் பற்றிய சிந்தனை என் நினைவில் எழுந்து ஓடத் தொடங்கியது.

உறவினர்களுடன் சம்பாஷிக்கும்போதும் ஜப்பானியர்களின் முகத்தில் புன்சிரிப்புத் தவழ்கிறது. பாஷை தெரியாத அன்னியர்கள் முன்பும் அதே புன்சிரிப்பைப் பூணுகிறார்கள். சுருக்கமாகச் சொன்னால், அந்தப் புன்சிரிப்பு ஜப்பானியர்களிடையே பரம்பரை பரம்பரையாக வந்து கொண்டிருக்கிறது. நம்முடைய கேள்விகளுக்கு, ஆம், இல்லை, என்று வெட்டொன்று துண்டு இரண்டாகப் பதில் சொல்ல வேண்டிய சந்தர்ப்பங்கள் ஏற்பட்டால் அவர்கள் பதிலுக்கு ஒலியின் உதவியை நாடுவதில்லை; புன்சிரிப்பைத்தான் நாடுகிறார்கள். பதில் வேண்டாததாக இருந்து கேட்பவர்கள் ஏமாற்றத்துக்கு ஆளாகக் கூடாதே என்ற நல்லெண்ணத்தினால் எழும் அந்தப் புன்சிரிப்பைக் கேள்வி கேட்டவர்கள் எப்படி வேண்டுமானாலும் எடுத்துக் கொள்ளலாமல்லவா? ஜனத்தொகையிலும், சந்தடியிலும், தொழிலிலும் அதி வேகமாக வளர்ந்து வரும் ஜப்பான் நாட்டு மக்களுக்கு யந்திரங்களுக்கு சிக்கல் இல்லாத ஓட்டம் கொடு உதவும் எண்ணெய் போல் அந் புன்சிரிப்பு போராட்டங்களை வியவகாரங்களையும் தவிர்க்க உத கிறதாம்!

சமீப காலத்தில் இரண்டு மூன் ஆண்டுகளுக்கு முன் ஜப்பான் நா டில் சுற்றுப் பிரயாணம் செய் திரும்பிய நண்பர் திரு எஸ். ரஹீமைக் கண்டு பேசிக் கொ டிருந்த போது ஜப்பானியர்களி மற்ற பண்புகளைப் பற்றியும் பழ வழக்கங்களைப் பற்றியும் ஓரள விவரமாகவே தெரிந்து கொள் முடிந்தது.

ஏறத்தாழ இரண்டாயிரம் தீவு சேர்ந்துதான் ஜப்பான் நாட் உருவாக்குகின்றன. ஆனால், ஹொ கெய்டா, ஹன்ஷு, ஷிக் க்யூஷு என்ற தொடர் நிற்கும் நான்கே பெ தீவுகளில் ஜப்பானிய நா ரிகமும், தொழில் வளமு வியாபித்திருக்கின்றன வடக்கிலிருந்து தெற்கா அமைந்திருக்கும் இந் தீவுகளில் வெவ்வே பாகங்கள் வெவ்வே சீதோஷ்ண நிலைகளை அனு விக்கின்றன.

லோக சஞ்சாரம்




திருமுருக கிருபானந்தவாரியார்

## 3. சிவத்துக்காகத் தவம்

தட்சனும் அவன் மனைவியும் நதியில் கிடைத்த குழந்தையைச் சீராட்டிப் பாராட்டி வளர்த்தார்கள். தாட்சாயணி என்று குழந்தைக்குப் பெயரிட்டார்கள். தாட்சாயணிக்கு ஐந்து வயதாகியது. அந்த வயதிலேயே, ''சிவபெருமானை நோக்கித் தவம் செய்ய வேண்டும்'' என்று தாட்சாயணி தந்தையிடம் கூறினாள். தவம் செய்வதற்குத் தக்க ஏற்பாடுகளைச் செய்து கொடுத்தான் தட்சன். தாட்சாயணி சிவபெருமானை நோக்கித் தவம் செய்து கொண்டிருந்தாள். அந்த நேரத்தில்தான் தட்சன் தனது மருமகன் சந்திரனுக்குச் சிவபெருமான் அனுக்கிரகம் புரிந்தார் என்பதை அறிந்தான். ''என் மருமகனுக்கு நான் கொடுத்த சாபத்தைப் பரமேசுவரன் எப்படி நீக்கலாம்? அவன் பித்தன்; பேயன்'' என்று கோபித்துச் சிவபெருமானைப் பகைத்துக்கொள்ளவும் தலைப்பட்டான். ''தட்சமாபுரத்தில் யாரும் சிவநாமம் சொல்லக் கூடாது. சிவன் கோயிலுக்கு எவரும் செல்லக் கூடாது'' என்றெல்லாம் கண்டிப்பான உத்தரவிட்டான்.

தந்தை இங்கே இப்படி சிவ அபராதம் செய்து கொண்டிருக்கையில் அங்கே மகள் சிவனிடம் அன்பால் உருகிக் கொண்டிருந்தாள். தவத் தீயில் வெந்து கொண்டிருந்தாள். தவம் செய்து கொண்டிருந்த தாட்சாயணிக்குப் பரமேசுவரர் காட்சியளித்தார். எம்பிராட்டி சிவபெருமானை வணங்கினார். ''தாட்சாயணி! இனி தவம் செய்ய வேண்டாம். உன்னை மணந்து கொள்வேன்'' என்று ஐயன் பரிவொழுகக் கூறினார்.

தட்சனுக்கு இவ்விஷயம் தெரிந்தது. அவன் பெரிதும் ஆத்திரம் கொண்டான். சிவபெருமானை மேலும் நிந்திக்கத் தொடங்கினான்.

சிவநிந்தையில் ஈடுபட்டிருந்த தட்சனிடம் முனிவர்கள் சிலர் சென்று, ''கருணைக் கடலான சிவபெருமானை நிந்திக்கக் கூடாது. சந்திரன் போய் அபயம் என்று காலில் விழுந்தான். பரமேசுவரன் அவனுக்கு அனுக்கிரகம் செய்திருக்கிறார்; இது சந்திரன்பால் எழுந்த கருணையால் செய்ததேயன்றி, உன்னை அவமரியாதை செய்வதற்காக அல்ல'' என்று சொன்னார்கள். வேறு சில முனிவர்கள் ''என்ன இருந்தாலும் நீ கொடுத்த சாபத்துக்கும் மதிப்புத் தந்து, எம்பெருமான் சந்திரனைத் தேய்வதும், வளர்வதுமாக வைத்திருக்கிறார் அல்லவா? ஆகவே, அவரைப் பகைத்துக் கொள்ளாதே'' என்று கூறினார்கள். முனிவர்களின் நல்லுரைகளைக் கேட்ட தட்சனுக்கு அன்றிலிருந்து சிவபெருமான் மீது விருப்பும் இல்லை; வெறுப்பும் இல்லை; வணங்குவதும் இல்லை; இணங்குவதும் இல்லை.

ஒருநாள் சிவபெருமான் ரிஷப வாகனத்தில் வந்து தாட்சாயணியை அழைத்துச் சென்றுவிட்டார். உடை


Cinthol




வியர்வை
நாற்றத்தைப்
போக்கி எழிலுடன்
விளங்கச்
செய்யும் சோப்
CINTHOL
CINTHOL

மையை உடையவரே வந்து எடுத்துச் சென்ருல் அதை யார் எப்படி ஆட்சே பிக்கமுடியும்? சிவம் சக்தியைக் கொண் டால் அதில் தலையிட யாருக்கு என்ன உரிமை? இதை உணராத தட்சன், 'என்னைக்கண்டு உலகமெல்லாம் வணங் குகிறது. இந்தப் பித்தன் என்னிடம் சொல்லாமல் தாட்சாயணியை எப்படி அழைத்துச் செல்லலாம்?'' என்று வெகுண்டான். அப்போது பிரம தேவர் யாகம் செய்து கொண்டிருந் தார். தட்சனின் சீற்றத்தைக் கண்ட அவர் யாகத்தை நிறுத்தி விட்டார். செருக்கடைந்த தட்சன் யாகத்தி லுள்ள தியாகத்தைப் புரிந்து கொள்ளா மல் தன் பெருமையைப் புலப்படுத்து வதற்காகத் தானே யாகம் செய்ய ற்பட்டான்.

யாகத்தில் கலந்து கொள்ள எல்லோ க்கும் அழைப்பு அனுப்பினன் தட்சன். வபெருமானுக்கு மட்டும் அழைப்பு னுப்பவில்லை. தட்சனுக்குப் பயந்த ல்லா தேவர்களும் யாகத்துக்கு வந் தார்கள். தட்சன் தானே தலைவனுக இருந்து யாகத்தை நடத்தினன்.

"சுவாமி! என் தந்தை யாகம் செய்கிறர். நான் போய் வரட்டுமா?'' என்று தாட்சாயணி சிவபெருமானிடம் கேட்டாள்.

பெண்களின் பிறந்த வீட்டுப் பாசம் எல்லையற்றது.

''அழைப்பு அனுப்பவில்லையே; எப் படிப் போவது?'' என்று வினவினர் சிவபெருமான்.

''பிறந்த வீட்டுக்குப் போக அழைப்பு வேண்டுமா?'' என்று தாட்சாயணி கேட்டாள்.

அதன் நியாயத்தை மதித்தார் மதி சேகரன். எனினும் தாம் செல்வதற்கு மனம் கொள்ள வில்லை. ''உன் விருப் பப்படியே நீமட்டும் போய் வா'' என்று அனுப்பி வைத்தார் எம்பெருமான்.

தாட்சாயணி தட்சனுடைய யாகத் துக்கு வந்தார். தட்சன் மனம் சற் றும் மாறியிருக்கவில்லை. தவமிருந்தும் பெறவொண்ணுத் தேவி, தன்னைத் தேடி வந்திருப்பதை உணராது அவர் மீது நாகம் போல் சீறினன். எம்பிராட் டிக்கு இதனை விட அதிகத் துன்பமும் சினமும் அளித்தது அங்கு கண்ட இன்



ஞெரு காட்சி. தம் பதியாகிய பசுபதி தவிர மற்ற அவ்வளவு தேவர்களும் யக்ஞத்தில் பங்கு கொண்டிருப்பதை அம்பிகை கண்டார். தமக்குத் தந்தை இழைத்த அவமானத்தை விடத் தமது நாயகனுக்கு இழைத்த அவமானத்தைப் பெரிதாக எண்ணி அன்னை வெகுண் டெழுந்தார். ''உன் யாகம் அழிந்து, இந்த இடத்தில் பேய்கள் நடமாடக் கூடவது'' என்று சாபம் கொடுத்து எம் பெருமானிடம் சென்றார்.

''சுவாமி! தட்சனுக்குத் தண்டனை கொடுக்க வேண்டும்'' என்று இறைவ னைக் கேட்டுக் கொண்டார். சிவபெரு மானின் இதயத்திலிருந்து வீரபத்திர ரும், அம்பிகையின் சீற்றத்திலிருந்து பத்ரகாளியும் தோன்றித் தட்சனுடன் போருக்குப் புறப்பட்டனர். வீரபத்திர ருக்கும் தட்சனுக்கும் போர் நிகழ்ந்தது. தட்சன் தலையை ஞான வாளால் வெட் டினார் வீரபத்திரர்.

தட்சன் தலையை அக்கினி உண்டு விட்டது. தட்சனின் மனைவி வீரபத்திர சுவாமியிடம் மாங்கல்ய பிட்சை கேட் டாள். யக்ஞத்தில் அறுபட்டுக் கிடந்த ஆட்டுத் தலையைத் தட்சனின் உடலில் அமைத்து ஸ்வாமி அருள் செய்தார்.

தட்சன் மனம் திருந்தியது. கைலாய மலைச்சாரல் சென்று தவம் செய்யத் தொடங்கினான்.

சிவபெருமான் தம்மை யடுத்த அடி யார்களின் பாசத்தை நீக்கித் திருவருள் புரிவது போல் கைலாய மலை நல் லொளி வீசிக் கொண்டிருந்தது. முக் கண்ணும், நாற் புயமும், பொன் மேனி யும் உடைய நந்தியெம்பெருமான் பொற் பிரம்பைக் கையிலேந்திக் காவல் புரிந்து கொண்டிருந்தார். ஊழிக் காலத்தும் அழியாத வெள்ளியங்கிரி யின் மத்தியில் நவமணிகளின் நல் லொளி வீசிக் கொண்டு பொன்னெடுங் கோயில் ஒன்று பொலிவுற்றிருந்தது. அத்திருக் கோயிலின் நடுவில் வனப்புக் களுக்கு உறைவிடமாக விளங்கும் மணி மண்டபத்தில் நவமணிகளாலான அரியணை அமைந்திருந்தது. அதன் மேல் தெய்வமணியாகிய சிவபெருமான் அம்பிகையுடன் வீற்றிருந்தார். தேவர்கள், முனிவர்கள், சித்தர்கள் முதலியோர் எம்பிரானை ஸ்தோத்திரம் செய்து கொண்டிருந்தனர். தும்புரு, நாரதர், கந்தருவர் முதலியோர் இனிய கானம் இசைத்துக் கொண்டிருந்தனர்.

சிவபெருமானுடன் வீற்றிருந்த அம் பிகை மனத்தில் ஒன்றை நினைத்துத் தானுக்குற்றுப் பரமேசுவரனை வணங் எழுந்தார்.

''தாட்சாயணி! நீ காலையிலு மாலையிலும் தான் என்னை வணங் வாய். என்றைக்கும் இல்லாதப இன்று இந்த நேரத்தில் வணங்குவ ஏன்?'' என்று எம்பெருமான் கேட்டா

''பெருமானே! தேவரீரை நிந்தித் வன் தட்சன். சிவநிந்தை புரிந்த அவ அதற்குரிய தண்டனையை அடைந்துவி டான். ஆயினும் இந்த உடம்பு அவ வளர்த்த உடம்பு. தாட்சாயணி என் பெயர் அவன் பெயரை வைத்து பிறந்த பெயர். தேவரீரை நிந்தித் மாபாதகன் வளர்த்த இந்த உட யும், அவனுடைய மகள் என்னு பொருள் படும் இந்தப் பெயரை தரிக்க எனக்கு விருப்பமில்லை. இ வுடலை விட்டு விட எண்ணுகிறே தங்கள் உத்தரவின்றி இதைச் செய் கூடாது. தாங்கள் எனக்குத் திருவரு புரிய வேண்டும்'' என்று அம்பி வேண்டினார்.

தேவியின் பதிபக்தியை எண் வியந்த எம்பெருமான் மோன யிருந்தார்.

தாட்சாயணி மீண்டும் தம் கருத் வலியுறுத்தினார்.

சிவபெருமான் புன்சிரிப்புச் சி தார். ''தேவி! இதை நீ உனக்காக சொல்லுகிறாய்? உன் குலம் தழைப்ப காகவல்லவா சொல்கிறாய்? நீ நி தது நல்லதே. அவ்வண்ணமே செய் என்று அருள் புரிந்தார்.

''தேவி, இமயமலையரசனாகிய வான் உன்னைக் குழந்தையாகப் பெ நெடுங்காலமாகத் தவம் செய்கி நீ அவனுக்கு அருள் செய். அவனு மகளாகப் பிறந்து, ஐந்தாவது ஆண் நம்மை நோக்கித் தவம் செய். உன் திருமணம் செய்து, திருவருள் கிறோம்'' என்றார் சிவபெருமான்.

எம்பெருமான் அருள் புரிந்தவ தாட்சாயணியின் உடல் காற்றில் கரைவது போல் கரைந்து விட் நம்மைப் போல் ஸ்தூல சரீரம் பிராட்டிக்கு இல்லை. அவள் ஞ பாள். எலும்பு இல்லை, தோல் இ ரத்தம் இல்லை; மேனி அவ்வ ஞானம், ஞானம், ஞானமேதான்.

எழில் மிக்க இமயமலை ணளாவி நின்றது. அம்மலையின் தேவாமிருதம் போன்று நீரு தடாகம் ஒன்று உண்டு. அத பத்மை என்று பெயர். அத்தடாக கில்தான், அம்பிகை தனக்கு மகள

தோன்ற வேண்டும் என்று பர்வதராஜன் தவம் செய்து கொண்டிருந்தான்.

அன்று, சந்தியாவந்தனம் செய்யத் தடாகத்தில் இறங்கிய இமவான் வானத்தில் பூத்த சூரியனைப் போல் அத்தடாகத்தில் ஆயிரத்தெட்டு இதழ் தாமரை பூத்திருப்பதைக் கண்டான். சந்தி உபாசனையின் போது சூரியனில் உள்ள எந்த பிரம்ம சக்தியை வழிபடுகிறார்களோ அந்தப் பராசக்தி கண்ணைக் கவரும் கட்டழகுடைய குழந்தையாக மரகத மேனியுடன் கமலத்தில் திரு அவதாரம் செய்திருப்பதையும் கண்டான்.



''கடைசி சீனில் உங்களை 'லாரி மோதி மரணம்! மாடு முட்டி மரணம்! இடி விழுந்து மரணம்! கத்திக் குத்து பட்டு மரணம்!'– இவற்றில் எப்படி முடிக்கலாம் என்று யோசித்துக் கொண்டிருக்கிறேன்!''

''உங்கள் முடிவைக் கேட்டு மரணம் என்று முடியுங்கள்!''

முதலான பொன்னாபரணங்களைக் குழந்தைக்கு அணிவித்துப் பொன்னால் செய்யப்பட்ட தொட்டிலில் இட்டுத் தாலாட்டினாள். (தாலு என்றால் நா என்று பொருள். நாவை அசைத்துப் பாடுவதால் தாலாட்டு என்று வந்தது.)

பருவத ராஜனுக்கு மகளாக வந்ததால் குழந்தைக்குப் பார்வதி என்று பெயரிட்டார்கள்.

குழந்தையை இமவானும், மேனையும் அருமைக்கிட்டுவளர்த்தார்கள் என்று சொல்ல வந்த கவி, 'சகல புவனங்களையும் வளர்த்து வாழ்விக்கும்தேவியைவேறொருவர் வளர்ப்பதாவது? அப்படி வளர்ப்பது போன்ற பாவனையைத் தன் அருளால் இமவானுக்கு அவள் அளித்தாள் என்றே கூற வேண்டும்' என்கிறார்:

'பைத்ததோர் குழவியின் படிவத் துற்றனள் எத்திறத்துயிரையும் ஈன்ற தொன்மையாள்' என இதை நெகிழ்ந்து பாடுகிறார் கச்சியப்பர்.

எம்பிராட்டி மரகத மேனியுடன் திரு அவதாரம் செய்தாரே யன்றிப் பெண் வயிற்றில் பிறக்கவில்லை. உலக மக்களைக் கருவில் சுமக்கும் அன்னையை யார் கருவில் சுமக்க முடியும்?

தெய்வக் குழந்தையைக் கண்ட இமவான், 'அடியேனை ஆட்கொள்ளும் பொருட்டு அகிலாண்ட கோடி ஈன்ற அன்னை குழந்தையாக வந்தனள்' என்று ஆனந்தக் கண்ணீர் சொரிந்தான். ''அடியேன் செய்த தவம் பலித்தது'' என்று ஆனந்தக் கூத்தாடி அம்பிகையைக் கையில் எடுத்து உச்சி மோந்தான். சென்னி மேல் வைத்துக் களியாட்டம் ஆடினான்.

குழந்தையை எடுத்துக் கொண்டு தன் பொன் மாளிகை சென்றடைந்த இமவான், ''இது எம்பெருமான் கொடுத்த பிரசாதம்'' என்று தனது பத்தினியாகிய மேனையின் கரத்திலே குழந்தையைக் கொடுத்தான். மேனை அத் தெய்வக் குழந்தையைத் தொழுது வாங்கினாள். மார்போடு அணைத்தாள். அன்பு சுரந்தாற்போல் பாலும் சுரந்தது.

பெண் குழந்தை யென்றால் தாய்மார்களுக்கு சந்தோஷம். மேனை மிகவும் மகிழ்ச்சி கொண்டாள். பரிபுரம், தண்டை, சங்கு வளை, ரத்தினச் சுட்டி, மதாணி, பொற்றோடு, அங்கதம்

மன்னுயிர் புவனமேனை
மற்றுள பொருளுக்கெல்லாம்
அன்னையா யுதவி நாளும்
அவற்றினை வளர்த்து நிற்பாள்
தன்னையும் வளர்ப்பா ருண்டோ
வளர்த்தது சழக்கே அந்தக்
கன்னிதன் அருளின் நீர்மை
காட்டினள் போலுமன்றே

குழந்தை வளர்கிறது; விளையாடுகிறது. உலகையெல்லாம் விளையாட்டாகப் பெற்றெடுக்கும் ஜகன்மாதா எப்படி விளையாடுகிறாராம்? மூன்று ரத்தினங்களை அடுப்பாக ஆக்கி முத்துச் சிப்பியைப் பாத்திரமாகச் செய்து, முத்துக்களை அரிசியாகப் பெய்து, நவ ரத்தினங்களையும் வைடூரியங்களையும் காய்கறிகளாக்கி, பொற்பொம்மைகளை உண்ண வைத்து அற்புதம் அற்புதமாக விளையாடுகிறாராம்.

பார்வதி தேவிக்கு ஐந்து வயதாகி விட்டது. ஆலமுண்ட அண்ணலின் ஆணையை நினைந்த குழந்தை, இமவானை நோக்கி, ''அப்பா! மணம் புரிந்து கொள்ளுமாறு வேண்டி மணிகண்டப் பெருமானை நோக்கித் தவம் செய்ய வேண்டும். எனக்குத் தவச் சாலை அமைத்துக் கொடுங்கள்'' எனக் கேட்டது.

''மகளே! ஐந்து வயதிலா தவம் செய்யப் போகிறாய்? தவம் என்றால் சாமானியமானதல்ல. பட்டினி கிடந்து உடலை வருத்தித் திட ஞானத்துடன் தவம் செய்ய வேண்டும். ஐந்து வயதில் இதனைச் செய்ய யாராலும் முடியாது. ஆகவே தவம் செய்ய வேண்டும் என்ற எண்ணத்தை மறந்து விடு'' என்று இமவான் கூறினான். மேனையும் பார்வதியிடம் ''தவம் செய்வதற்கு ஏற்ற வயது இதுவல்ல'' என்று கூறினாள். 'தனியாகச் சென்று தவமிருக்கும் பருவம் இது அல்ல. பெற்றோரின் காப்பில் வளர வேண்டிய குழந்தையே அவள்' என இருவரும் கருதினர்.

அவதார ரகசியம் பெற்றோருக்கும் மற்றோருக்கும் மறந்து, தெய்வ மதலையைச் சாமானிய மானுடப்பிறவியாகவே பாவிப்பதை எல்லாப் புராணங்களிலும் காண்கிறோம். அவ்வப்போது மட்டிலுமே தன் தெய்வத் தன்மையை வெளிப்படுத்தி, மற்றப் பொழுதில் சாமானியப் பிறவியாகவே வாழ வேண்டும் எனக் கருதிப் பரம்பொருள் இப்படி மாயை செய்யும் போலும்!

''அப்பா! இந்த உடலையும் உயிரையும் கொடுத்தவர் சிவபெருமான். அந்த ஐயனின் அருள் இன்றிப் பிறர் நம்மைக் காக்க முடியாது. உடலையும் உயிரையும் கொடுத்த எம்பிரானே என்னைக் காப்பாற்றுவார். தடை சொல்லாமல் தவம் செய்வதற்கு விடை தாருங்கள்'' என பார்வதியம்மை வேண்டினார்.

இமாசலத்துக்கு அருகே தவச்சாலை அமைத்துக் கொடுத்தான் பர்வதராஜன். பார்வதிக்குக் காவலாக கன்னியர் பலர் நியமிக்கப்பட்டனர்.

'சிவ சிவ' என்று மனம் மொழி மெய்களால் குழந்தை வழிபாடு செய்து கொண்டிருந்தது. அம்பாள் செய்த சிவபூஜையை விடப் புனிதமாக எது உண்டு? மணியோடு இணைய ஒளி செய்த தவம் அது; மலரோடு இணை மணம் செய்த தவம் அது.

ஞானிகள் தமக்காக என்று எதுவும் செய்ய இயலாது. தமக்கே போல அவர்கள் செய்யும் காரியங்களும் கூட உலக க்ஷேமத்துக்காகத்தான் அமையும். தேவி செய்த தவம் ஐயனை அடைந்து மணம் புரிந்துகொள்ள வேண்டும் என்ற சுயநல நோக்கத்தோடு முடிவதல்ல. அவர் ஐயனை அடைந்தே தீர வேண்டும்! அதனால் நம் காவல் நாயகராம் ஆறுமுகஸ்வாமி அவதரித்தாக வேண்டும்! அசுரரை மாய்த்து அமரர் குறைதீர்த்து அறத்தை நிலைநாட்டக் குமரன் தோன்றியே ஆக வேண்டும் என்ற சூழ்நிலை தேவி தவம் புரியும் அத் தருணத்தில் ஏற்பட்டது. (தொடரும்)

## ....ரிடர்ன் டிக்கட்!...












# அறிந்தீர்களா? இதுதான் உங்கள் பனாமா




1 தேர்ந்தெடுத்த வர்ஜீனியாப் புகையிலைகளின் கலவைப் பலனாக தண்மையான புகைநயம்—அதுவே உங்கள் பனாமா!

2 நாடெங்கும் நல்லின்பம் பரப்பும் மக்கள் ரகமாகிய பனாமா ஒத்த இனத்திலே உன்னத விற்பனையுள்ள ரகமாகும்.

3 நாட்டின் பல பகுதிகளிலே தலைசிறந்த ரகமாகத் திகழுவதும் உங்கள் பனாமா.

4 இன்று மக்கள் மனங்கவர்ந்துள்ள இருபதடங்கிய உறையினைப் பல்லாண்டுகளுக்கு முன் தோற்றுவித்த ரகமே பனாமாதான்.

உயரிய
பண்போடு
உபயோகிப்பதற்கும்
உதவுவதற்கும்
உகந்தது
பனாமா

கோல்டன் டுபாக்கோ கம்பெனி பிரைவேட் லிட். 

பம்பாய்.56

பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப்பெரிது

CT. (P) 635 A TH Greens' Advtg.

# கந்தன் கருணை

## 4. விளக்கை நாடிய விட்டில்

திருமுருக கிருபானந்த வாரியார்

**பா**ர்வதி தேவி தவம் செய்து கொண்டிருந்தபோது அசுரர் தலைவன் சூரபதுமன் ஆயிரத்தெட்டு அண்டங்களிலும் நூற்றெட்டு யுகங்களாக அரசு செலுத்தி ஒப்பாரும் மிக்காருமின்றிச் செருக்குற்றிருந்தான். அசுரன் ஆட்சியில் தவ சிரேஷ்டர்களின் உள்ளம் அமைதியின்றித் தவித்தது.

எம்பெருமான் ஞானமே வடிவானவர். இன்பமும் துன்பமும் ஞானிக்கு இல்லை. என்றைக்கும் ஒன்று போல் இருப்பவர் பரமேசுவரர். அவர் கைலாய மலையில் கல்லால விருட்சத்தின் கீழ்த் தென்முகம் நோக்கிப் பரம சாந்தமாக அமர்ந்திருந்தார்.

சிவாலயங்களில் சிவலிங்கம் பல திசைகளை நோக்கியிருக்கும். ஆனல் திசை காட்டும் கருவிபோல் தட்சிணாமூர்த்தி எல்லாக் கோயில்களி[...] தெற்கு நோக்கித்தானிருப்பார்.

வடக்கு நோக்கிச் செல்வது சர[...] யாத்திரை. தெற்கு நோக்கிப் போ[...] மரண யாத்திரை. ''வடக்கு நோக்[...] போகாதவர்களே! நீங்கள் என்னி[...] வந்தால், நான் உங்களை நோக்கி [...] வேன்'' என்று தெற்கு நோக்கியி[...] கும் தட்சிணாமூர்த்தி சொல்லா[...] சொல்லுகிறார்.

பிரமனுக்கு சனகர், சனந்த[...] சநாதனர், சனத்குமாரர் எ[...] நான்கு புத்திரர்கள். சனகாதி மு[...] வர்கள் என்று இவர்களைச் சிறப்பித்[...] சொல்வதுண்டு. பிரமபுத்திரர் நா[...] ரும் வேதங்களைக் கற்றுக் கரை கண்[...] வர்கள். எனினும் இவர்கள் விரும்[...] சாந்தியைக் கல்வியினல் அடைய மு[...] வில்லை. பல இடங்களுக்கும் செ[...] ஞர்கள்; எங்கும் மன அமைதி கிடைக்க[...] வில்லை. கடைசியாகக் கயிலை மலை[...]



டைந்தார்கள். முதல்
ாயிலே யடைந்ததும், நந்தி
யம் பெருமானை வணங்கி,
வர் அநுமதியுடன் சிவ
ந்நிதியுட் சென்றனர். பிரமன்
தலியோர் காணுத ஞான
ாயகனை சனகாதியர் நால்
ரும் கண்டனர்.

ாழியது தவறல் செல்ல
முற்றுடல் பொடிப்புக் கொள்ள
ரிபுனல் பெருகத் தீசேர்
மெழுகென உள்ளம் விள்ள
ழகிய மறைக்கும் எட்டா
ஆதிநா யகனை நோக்கித்
ாழுதனர் உவகை பூத்துத்
துள்ளினர் துளக்கம் உற்றூர்.



மிகவும் பெரிய ஒருவரிடம் தையாவது சொல்லுவதற் சுன்று போவோம். ஆனுல் ந்தப் பெரியவரைக் கண்ட ம், எதைச் சொல்லப் பானேமோ அதைச் சொல்ல டியாமல் மொழி தடுமாறும். துபோலப் பரமேசுவரரைக் ண்டதும் சனகாதி முனிவர் ளுக்கு மொழி குழறியதாம். பிர்க்கூச்சம் ஏற்பட்டதாம். ாரை தாரையாகக் கண்ணீர் ட்டார்களாம். அனலிடைப் ட்ட மெழுகு போல் அவர்கள் உள்ளம் ழைந்து விட்டதாம்; சரீரம் துள்ளு றதாம். ''ஹர ஹர'' என்று எம் பருமானைத் தொழுது, ''வானோர்க் ரிய மருந்தே போற்றி, ஏனோர்க்கெளிய றைவா போற்றி'' என்று துதித்தனர்.

சுவாமிக்குக் கருணை பிறந்தது. குழந்தைகளே! வாருங்கள்! உங் ளுக்கு என்ன வேண்டும்?'' என்று மானத்தை விட்டு மோகனக் குரலில் கட்டார்.

''பெருமானே! கார்த்திகை மாதம். ரயாணிகள் கப்பலில் செல்கிறுர்கள். மாவாசையும் நிகழ்கிறது. நடு நிசி. யல் வீசத் தொடங்குகிறது. அப் பாது கப்பலில் உள்ளவர்கள் எப்படித் விப்பரோ, அப்படி அமைதியின்றித் விக்கிறது எங்கள் மனம்.

''அருட்பெருங்கடலே! வேதங்கள், கமங்கள், இதிகாசங்கள் எல்லாவற் றயும் நாங்கள் படிக்கப் படிக்க ங்களுக்கு அதிகமாகச் சந்தேகம் எழு ன்றதேயன்றிச் சாந்தி கிடைக்கவில்லை. ங்கள் மயக்கத்தைப் போக்கி மனம் மைதியடையும் வழி காட்ட வேண் ம்'' என்று பிரமபுத்திரர் நால்வரும் தாழுது வேண்டினர்.

பரமேசுவரர் புன்சிரிப்புச் சிரித் தார். நந்தியெம்பெருமானை அழைத்து, ''யார் வந்தாலும் உள்ளேவிட வேண் டாம்'' என்று கட்டளையிட்டார்.

சனகாதி முனிவர்கட்குச் சிவாகமங் களின் நுட்பங்களாகிய சரியை, கிரியை, யோகம் என்ற முப்பதங்களையும் கூறி ஞர் சுவாமி. ''ஐயனே! எங்கள் மனம் ஒடுங்க ஞான பதம் போதிக்க வேண் டும்'' என்று சனகாதி முனிவர்கள் வேண்டினர். ''குழந்தைகளே! அதை வாக்கினுல் போதிக்க முடியாது; இப் படிச் சும்மாயிருப்பதே அதுவாகும்'' என்று தம் திருமார்பில் திருவிரலால் அமைத்த சின்முத்திரையைத் தாங்கி யோகத்தில் அமர்ந்து மௌன நிலை யைக் காட்டியருளினுர் தட்சிணுமூர்த்தி.

நான்கு விரல்கள் ஒரு பக்கமும் கட்டை விரல் மட்டும் தனித்து ஒருபுறமும் நிற் கின்றது. சில்லறைகளுடன் சேராமல் ஒதுங்கிக் கொள்ளும் அந்த விரல்தான் பதி. ஒன்ருகி, உடனுகி, வேருகி நிற் பவர் இறைவர். ஆள் காட்டு விரல் — ஆன்மா. நடு விரல், மோதிர விரல், சுண்டு விரல் மூன்றும் முறையே ஆண வம், கர்மம், மாயம் என்ற மும்மலங் களைக் குறிக்கும். இம்மலங்களினின்றும்

உயிர் நீங்கி, பசுவாகிய ஆன்மா பதியுடன் ஒன்றுபட வேண்டும். இதைச் சுட்டிக் காட்டுவது சின்முத்திரை. அது சீவனும் சிவனும் ஒன்றுபட்ட இடம்.

சின்முத்திரை தாங்கி நீலகண்டன் ஆலமரத்தடியில் அமர்ந்தார். அங்கு ஆச்சரியங்கள் நிகழ்ந்தன. எப்போதும் குருநாதர் வயதானவராக இருப்பார். இங்கோ குருநாதர் இளமை உள்ளவர்; சீடர்களான சனகாதி முனிவர்கள் வயதானவர்கள். குருவின் வியாக்கியானமெல்லாம் மொழியொழிந்த மோனத்திலேயே நடந்தது இன்னோர் ஆச்சரியம்.

''சிவஞானமானது நூல் அறிவினால் கிடைப்பதன்று; அநுபவ அறிவால் மட்டுமே கிடைப்பது'' என்று சின்முத்திரை உணர்த்தியது. அதனை உள்ளத்தில் பதித்துக் கொண்ட சனகாதி முனிவர்கள் ஒடுங்கிச் சித்திரப் பதுமை போல் செயலற்றுச் சிவஞானத்தில் இருந்தனர். ஞான நிலையைக் காட்ட, சிவபெருமான் மோன நிலையில் இருந்த ஒரு கணப் பொழுதில் பிரமன் முதலான தேவர்களுக்கெல்லாம் அநேக யுகங்கள் ஓடின.

சிவமூர்த்தியின் தவ நிலையால் விண்ணில் அமரர்களும், மண்ணில் மனிதர்களும் காம இச்சை அறவே நீங்கி முற்றத் துறந்த முனிவர் போல் இருந்தனர். சிருஷ்டி நடைபெறவில்லை.

இச்சமயத்தில்தான் சூரபதுமன் தேவர்களுக்குக் கொடுமை செய்து கொண்டிருந்தான்.

சூரபதுமன் ஆட்சி நடத்தும் கொடுமையைப் பார்ப்போம். அவனது மந்திரி தர்ம கோபன் தேவர்களை ஒவ்வொருவராகச் சூரபதுமனிடம் அனுப்புகிறான். சூரபதுமன் ஒவ்வொரு தேவரையும் அழைத்து விசாரிக்கிறான்.

''யார் நீ?''

''நான் அலரி!''

''அப்படியென்றால்......?''

''பொழுதை மலரச் செய்கிற சூரியன்.''

''ஓஹோ! நீதான் சூரியனா? இனிமேல் இங்கு பகலில் வெய்யில் சுடக் கூடாது. சுட்டால் தலையைக் கிள்ளி விடுவேன். எங்கள் மண்டலத்தில் உன் வெப்பமே படக் கூடாது. உன் மண்டலத்துக்குச் செல்லும்போது வெப்பத்துடன் செல்ல வேண்டும்; தெரிகிறதா?''

''உத்தரவு! வருகிறேன்'' என்று கூறிச் சூரியன் புறப்படுகிறார்.

அடுத்தவர் வருகிறார்.

''நீ யார்?'' என வினவுகிறான் சூரன்.

''நான் சந்திரன்! அத்திரி முனிவருக்கும் அநசூயா தேவிக்கும் புதல்வன்.''

''உன் உடல் ஏன்தேய்ந்திருக்கிறது?''

''அது என் மாமனார் கொடுத்த சாபம்.''

''சந்திரனே! என் மண்டலத்தில் நீ தேயவும் கூடாது; வளரவும் கூடாது. எப்பொழுதும் ஒரே மாதிரியாக இருக்க வேண்டும்.''

''உத்தரவு; வருகிறேன்!'' என்று சொல்லிச் சந்திரன் புறப்பட்டார்.

அடுத்ததாக எமன் நடுங்கிக் கொண்டே வந்து நிற்கிறான்.

''நான்தான் எமன். அந்தகன், கூற்றுவன், நடுவன் என்ற பெயர்களும் எனக்கு உண்டு. உயிர்களைப் பிரிப்பது என் வேலை'' என்கிறான்.

''அந்த வேலையை இந்த ஊரில் வைத்துக்கொள்ளக் கூடாது. இங்கே காலம் காட்டுகின்ற வேலையை ஒழுங்காகச் செய்ய வேண்டும்.''

அடுத்து இந்திரன்.

''யார் நீ?''

''முப்பத்து முக்கோடி தேவர்களுக்கும் தலைவனாயிருந்த தேவேந்திரன்.''

''உனக்கு ஒரு வேலை தருகிறேன். அதை ஒழுங்காகச் செய்ய வேண்டும். கடலில் உள்ள மீன்களை யெல்லாம் பிடித்து, இந்த ஊரில் உள்ள ஒவ்வொரு வீட்டிற்கும் சென்று, எந்த வகையான மீன் எவ்வளவு தேவை என்று கேட்டறிந்து என் மக்களுக்குக் கொடுக்க வேண்டும்.''

''உத்தரவு.''

வான் சுமந்த தேவர்களை மீன் சுமக்க வைத்தான் சூரபதுமன்!

அக்கினி பகவான் வந்தான்.

''யார் நீ?''

''நான்தான் முளரி.''

''அப்படி யென்றால்?''

''அக்கினி.''

''இந்த மண்டலத்தில் சுடுகிற வேலையை வைத்திருக்கக்கூடாது; ஓடு.''

அக்கினி தேவர் ஒரே ஓட்டமாக ஓடுகிறார்.

அடுத்ததாக பிரம்மன்.

''யார் நீ?''

''நான் உன் கொள்ளுப் பாட்டன். உன் அப்பா காசிபர். அவருக்கு அப்பா மரீசி. மரீசிக்கு அப்பா நான்.''

''என்ன இருந்தாலும் நீ எனக்குப் பந்து என்று சொல்லி விட்டதால் உன்னைத் துன்புறுத்தவில்லை. பஞ்சாங்கத்தில் நாள் நட்சத்திரம் பார்த்து வீடு வீடாகச் சென்று சொல்ல வேண்டியது உன் வேலை.''

பகவானாகிய நாராயணர் வந்தார்.

''யார் நீ?''

பொம்மையெல்லாம் ஒழுங்காக அடுக்கி வச்சுட்டேம்மா....

அப்படியா! மிக இனிப்பான பரிசு
அவளுக்குத் தரவேண்டியதுதான்-
காட்பரீஸ் சாக்கலேட்தான் அது-
பாலின் குணங்கள் அடங்கியதாயிற்றே!

*Cadbury's* காட்பரீஸ் சாக்கலேட்

மிட்டாய் மட்டுமல்ல... ஒரு உணவும்கூட!



## எல்லாம் அவன் அருள்...

மாது மகிழ்ச்சியுள்ள விவசாயி. ஆண்டவன் அருளால் அவனுக்கு ஒரு குறைவுமில்லை. சொந்த வீடு, மனநிறைவுள்ள குடும்பம். இவற்றோடு ஆநிறைச் செல்வம்! தனது நிலத்தை நல்ல முறையில் உழுது, பயிரிட்டு அமோக விளைச்சலைக் காணுகிறான் அவன். உயர்ந்த விதைகளையே விதைத்து, ராலீஸ் தயாரிக்கும் சமநிலை உரக் கலவைகளால் நிலத்தைச் செழுமையாக்குகிறான்.

ராலீஸ் 'மரம் மார்க்' உரங்கள் அமோக விளைச்சலைத் தருகின்றன. வளம் மேலும் பெருக, டாடா - ஃபைஸன் பூச்சி மருந்துகளைக்கொண்டு பயிரைப் பாதுகாருங்கள். இரண்டுமே சுலபமாகக் கிடைக்கின்றன.

**TATA-FISON**
**PESTICIDES**

RALLIS
TREE BRAND
FERTILIZERS

**ராலீஸ் இந்தியா லிமிடெட்**
இந்தியா முழுதும்

''உன் பாட்டனுக்குப் பாட்டன்; நாராயணர்.''

''உனக்கும் கடினமான வேலை தரக் கூடாது. இந்த மண்டலத்தில் உள்ள அவ்வளவு வீடுகளுக்கும் சென்று அவர்கள் கேட்கின்ற வரங்களைக் கொடுத்துக் கொண்டிரு.''

இவ்வாறெல்லாம் தேவர்களைத் துன்புறுத்திய சூரபதுமன் வானவர்களை எப்படி வேலை வாங்கினன் எனப் பார்ப்போம். காலையில் தென் கடலில் உள்ள தனது தலைநகரான வீர மகேந்திர புரியில் வேலை செய்யும்படியும், உச்சி வேளையில் தன் தம்பி தாரகனின் நகராகிய மாயமாபுரத்தில் வேலை செய்யும்படியும், மாலையில் மற்றொரு சோதரனகிய சிங்கமுகனின் ஊராகிய ஆசுர நகரில் வேலை செய்யும்படியும் பணித்தான். அலைந்து அலைந்து நிலை குலைந்து போனர்கள் தேவர்கள்.

இதை அருணகிரிநாதர் பாடுகிறார்:

**நெறிதவறி அலரிமதி நடுவன்மக பதிமுளரி**
**திருதிதிதி பதிகரிய வனமாலி**
**நிலவுமறை யவனிவர்க ளலையஅர சுரிமைபுரி**
**திருதனுர மறஅயிலை விடுவோனே**

தேவேந்திரன் பொன்னுலகை விட்டுத் தேவர்களோடும் இந்திராணியோடும் மேரு மலை சென்றான். சூரபதுமனுடைய மகன் பானுகோபன் வானுலகமாகிய பொன்னுட்டை எரித்துத் தன் மகன் சயந்தனையும் ஏனைய தேவர்களையும் சிறைப் பிடித்த செய்தி கேட்டு மிகவும் வருந்தினன். மேரு மலையின் ஒரு புறத்தி லிருந்து எம்பெருமானை நோக்கித் தவம் புரிந்தான். அவனது தவத்துக்கு இரங்கிய பரமேசுவரர் காட்சி தந்தார்.

''கருணாமூர்த்தி! சூரபதுமன் என்னையும் தேவர்களையும் துயரக் கடலில் ஆழ்த்துகிறான். என் மகன் சயந்தனையும் தேவர்களையும் சிறையில் அடைத்து வைத்து, எனது நகரமாகிய அமராவதியைக் கொளுத்தி இடர்கள் பல செய்கிறான். அந்தச் சூராதிகளை அழித்து எங்களைக் காத்தருள வேண்டும்'' என்று இந்திரன் வேண்டினன்.

''இந்திரா! என்னை நிந்தித்து தட்சன் யாகம் செய்தபோது அதில் நீயும் மற்ற வானவர்களும் கலந்து கொண்டதால் இத்துன்பம் வந்தது. வருந்தாதே. விரைவில் குமரக் கடவுள் தோன்றி சூராதியசுரர்களை அழித்து உங்கள் துயர் தீர்ப்பான்'' என்று கூறி மறைந்தார் எம்பெருமான்.

'சிவபெருமானே கல்லால மரத்தின் கீழ் அமர்ந்து யோகம் செய்துகொண் டிருக்கிறார்—உமாதேவியாரோ இமவான் மகளாய்த் தோன்றித் தவம் செய்து கொண்டிருக்கிறார். இவர்கள் இப்படித் தவசியாக இருந்தால் குமரக் கடவுள் எப்படித் தோன்றுவார்? குமரக் கடவுள் அவதரித்தால்தானே நம் குறை நீங்கும்?' என்று எண்ணிய இந்திரன் மனேவதி என்ற மாநகரை அடைந்தான். அங்கே வியாழ பகவானின் மனைவியிடம் இந்திராணியை விட்டு விட்டுத் தேவர்களுடன் பிரம்மலோகம் சென்றான். குமரக் கடவுள் தோன்றுவார் என்று பரமேசுவரர் அருளியதைப் பிரமனுக்கு உரைத்தான்.

''இந்திரா! நானும் திருமாலும் தேடிக் காண முடியாத கண்ணுதற் பெருமான் வெள்ளியங்கிரியில் சனகாதி முனிவர் நால்வருக்கும் யோக முத்திரையைக் காட்டி வீற்றிருப்பது நம் துன்பத்தைப் போக்கவே யாகும். மகனுக்கு ஒரு பெரிய கோடைக் கட்டி வந்த காலத்துத் தாய் தந்தையர் அதனை நசுக்க மனம் கொள்ளாமல் பிறரைக் கொண்டு மகனைத் துன்புறுத்திப் பிணியைப் போக்குவர். மகன் மீதுள்ள கருணையினல்தான் அப்படிச் செய்கிறார்களே யன்றிக் [கோபத்தால் அல்ல. நமக்குத் தாயும் தந்தையுமாகிய எம்பெருமான், அகந்தை மிகுந்து போன நம் தீவினைகளை நீக்கவே சூரபத்மாசுரன் முதலியோ

## குட்டிக் கதை

மகா பண்டித ராகுல் சாங்கிருத்யாயன் என்பவர் இந்தி இலக்கியத்திலே புகழ் பெற்றவர். எத்தனையோ நூல்கள் இயற்றிப் பாரதத்தின் பெருமைக்குப் புகழ் சேர்த்தவர். ஒரு சமயம் அவரது மனைவியின் கடிகாரம் ஒன்று காணமற் போய்விட்டது. எத்தனை தேடியும் கிடைக்கவில்லை; திருட்டுப் போய் விட்டது. புதுக் கடிகாரம் இப்படிக் காணமற்போய்விட்டதே என்று எண்ணிய அவரது மனைவி இடிந்து உட்கார்ந்து விட்டாள். ஒரே துக்கமாகி விட்டாள். ஒரு பொருள் காணமற் போய் விட்டால் பெண்கள் படும் துயரத்தைப் போல் ஆண்கள் படுவதில்லை. இதைக் கான ராகுல்ஜிக்குப் பொறுக்க முடியவில்லை. ''ஆமாம், உன் கடிகாரம் என்ன விலை?'' என்று கேட்டார்.

''ஏன்? எண்பது ரூபாய்.''

''ஒரு பொருளை வாங்கி அதைத் திரும்பவும் விற்கப் போனல் அது என்ன விலை போகும், தெரியுமா?''

''பாதி விலை போனல் பெரிது.''

''உன் கடிகாரமும் பாதி விலைதானே போகும்? அப்படி இருக்கும்போது நீமட்டும் முழுசாக இப்படி உருகலாமா? உன் துக்கத்தைப் பாதியாக்கிக் கொண்டு துக்கப்படு. நான் ஆட்சேபிக்கவில்லை. இப்படி முழுத் துக்கப்பட்டால் அப்புறம் எனக்குப் பொல்லாத கோபம் வரும்!'' என்றார் ராகுல்ஜி.

## நிரபராதியும் குற்றவாளியும்

ஜெர்மன் பேரரசர் பிரடரிக் வில்லியம் ஒருநாள் போஸ்டாம் நகரிலிருந்த சிறைச்சாலைகளைச் சுற்றிப் பார்த்துக் கொண்டிருந்தார். கைதிகளெல்லாம் அவரிடம் தங்களை விடுதலை செய்ய வேண்டும் என்றும் தாங்களெல்லாரும் நிரபராதிகளென்றும் கெஞ்சினர். ஆனல் ஒரே ஒருவன் மட்டும் பேசாமலிருந்தான். அரசர் ''ஏனப்பா, நீ நிரபராதி இல்லையா?'' என்று அவனைக் கேட்டார். ''இல்லை. நான் புரிந்த குற்றத்திற்குத்தான் தண்டனையை அனுபவித்துக் கொண்டிருக்கிறேன்'' என்ருன் அவன். உடனே அரசர் ''இந்த அயோக்கியனை வெளியே விரட்டி அடியுங்கள். இவன் இருந்தால் இங்கிருக்கும் நல்லவர்களைக் கெடுத்து விடுவான்!'' என்று ஆணையிட்டார் சிறை அதிகாரிக்கு.

ரால் இக்கொடுமைகளை இழைக்கிருர். அது தெரியாதது போல் மோன நிலையில் இருக்கிருர்'' என்று பிரமன் கூறினுர்.

பெற்றிடுங் குரவரானேர்
பிள்ளைகள் தம்பால் நோயோன்
றுற்றிடில் பிறரைக் கொண்டும்
உறுதுயர் செய்துதீர்ப்பார்
மற்றவர் தம்பால் அன்போ
வன்கணே அதுபோல் நம்பால்
பற்றிய பவங்கள் தீர்ப்பான்
பரமனும் இவைகள் செய்தான்

குமரக் கடவுளின் பிறப்புக்கு வழி காணுமல், தேவர்கள் வைகுந்தம் சென்று திருமாலைக் கண்டனர். ''சிவபெருமானின் யோக நிலை கலைந்து பார்வதி தேவியை அவர் மணந்து கொண்டால்தான் தேவர்கள் துயர் நீங்கத் தனிப் பெருந் தெய்வமாம் சுப்பிரமணியப் பெருமான் அவதாரம் செய்வார். பிரம்மனே! நீ உடனே மன்மதனை அழைத்துச் சிவபெருமானிடம் அனுப்பி அவர் மனத்தில் மலைமகள் பால் மயல் உண்டாக்கச் செய்'' என்று பிரம்மனைப் பணித்தார் திருமால்.

மனேவதி நகருக்கு வந்து பதும பீடத்து மலர்த் தவிசின் மீது வீற்றிருந்த பிரமன் தனது தம்பி மன்மதனை வரவழைத்தான்.

மன்மதன் என்ருல் மனத்தினின்று தோன்றியவன் என்பது பொருள். திருமால் மனத்தினின்று தோன்றியவன் மன்மதன். ஆசை தோன்றுமிடம் மனம் தானே?

''தம்பி! தேவர்கள் துயர் தீர நீ போய்ச் சிவபெருமான் மீது பாணம் போட்டுப் பார்வதி அம்மையாரை அவர் மணந்து கொள்ளும்படி விரகதாபம் உண்டாக்குவாய்'' என்று பிரமன் உத்தரவிட்டார்.

மன்மதன் பதறிப் போனுன். சிவபெருமானின் மோன நிலையை அகற்ற வேண்டும் என்ற சொல்லே மன்மதனின் உள்ளத்தைச் சுட்டு விட்டது.

''அண்ணலே! எவ்வளவு கொடியோரானுலும் தம்மிடம் வந்துவிட்டால் உய்யும் வழியைச் சொல்லுவது பெரியோர்க்கு அழகு. ஆனல் அறிவிற் சிறந்த தங்களை நாடி வந்த என்னிடம் தங்களுக்குச் சிறிதும் கருணை இல்லையா? பங்காளியாகிய என்னைத் திரும்பி வராதபடி அனுப்பிவிட்டு நீங்களே தேவலோகத்தைச் சுகமாக ஆள்லாம் என்று நினைத்துக் கொண்டிருக்கிறீர்களா? அண்ணு! நான் உலகத்தை யெல்லாம் மயக்குவேன். என்னைப் பெற்ற தந்தை நாராயணரையும் பிருந்தையிடம் நான் மயக்கி யிருக்கிறேன். ஏன்? திலோத்தமையைக் கண்டு விரும்பும்படி உங்களையே மயக்கி யிருக்கிறேன். இந்திரனை மயக்கி அகலிகைமீது ஆசை கொள்ளச் செய்தேன். அருணன் பெண் வடிவம் எடுத்தபோது சூரியனை அந்தப் பெண்மீது ஆசை கொள்ளச் செய்தேன். சந்திரனைத் தாரையின்பால் காமம் கொள்ளச் செய்து புதன் என்ற புதல்வன் தோன்றச் செய்தேன். பல முனிவர்களின் தவ வலிமையை இமைப் பொழுதில் மயக்கி என் வசப்படுத்தினேன். என் கணைக்குத் தப்பியவர்கள் மூவுலகிலும் யாரும் இல்லைதான். ஆனுலும்... ஆனுலும் சிவபெருமானை — துறவிகளின் தெய்வமான சிவபெருமானை — எனது கணையால் மயக்க முடியாது. ஏன் முடியாது தெரியுமா?

கையும் நகையும்
கதிரார் விழியும்
மெய்யும் தழலாம்
விமலன் தனையான்
எய்யும்படி சென்றிடின்
இவ்வுயிர் கொண்டு
உய்யும் திறமும்
உளதோ உரையாய்

''சிவபெருமான் கையில் நெருப்பு; சிரித்துப் புரமெரித்த அவரது வாயில் நெருப்பு; கண்ணிலும் அக்கினி; அவரது திருமேனி அக்கினி வடிவம். தழலே உருவான சங்கரனை எதிர்த்து உயிருடன் திரும்ப முடியாது. அண்ணு, இந்தக் கரும்பு வில் சிவன் தந்தது; புஷ்ப பாணம் அவன் தந்தது. தீட்டிய மரத்திலா கூர் பார்ப்பது? ஆகவே இந்தக் காரியத்தில் மட்டும் ஏவாதீர்கள்'' என்று பலவாருகக் கூறினுன் மன்மதன்.

மன்மதனின் நிலை கண்ட பிரமன் சிறிது வருந்தினன். ''தம்பி! நீ சொன்னவையெல்லாம் உண்மைதான். சிவபெருமானை வெல்ல யாராலும் முடியாது. எனினும் அவரது நல்லருளால் உன் காரியம் இனிது முடியும். நீ இப்போது எம்பெருமானை மயக்கச் செல்வதும் அவன் செயலே. மன்மதா! தேவர்களின் நன்மைக்காகத்தான் உன்னைப் போகச் சொல்கிறேன். நீ போய்ச் சிவபெருமானால் உயிரிழந்தால் அது தேவருக்காகச் செய்த பெரிய தியாகம் அல்லவா? துன்பத்திலாழ்ந்து கிடப்பவர்கள் ''உதவி செய்'' என்று வந்தால் அவர்களின் துயரைப் போக்காமல் தன்னுயிர் பெரிது என்று எண்ணியிருப்பது தருமமாகுமா? விருத்திராசுரனை வதைக்கும் பொருட்டு, ததீசி முனிவர் தம் முதுகெலும்பைத் தந்து உயிரிழந்த செய்தியை நீ கேட்டதில்லையா? பாற்கடலில் வடவாமுகாக்கினி போன்று விஷம் வந்தபோது நம்மையெல்லாம் காப்பாற்றுவதற்காக நாராயணர் அந்த விஷத்தின் எதிரில் கணப்பொழுது நின்று தமது வெண்மையான திருமேனியைக் கருமையாக்கிக் கொண்டதை நீ அறிந்ததில்லையா? சூரபதுமனால் தேவர்கள் அனைவரும் வருந்திக் கொண்டிருக்கிறோம். இத்துயரைப் போக்கக் குமரக் கடவுள் தோன்றுவார் என்று சிவபெருமான் கூறியிருக்கிறார். குமரக் கடவுள் அவதாரத்துக்காக நீ பஞ்சபாணங்களுடன் சிவபெருமானிடம் போகத்தான் வேண்டும்'' என்று பிரமன் மீண்டும் மீண்டும் தூண்டிக் கூறினார்.

மன்மதன் மீண்டும் மீண்டும் மறுத்தான். பிரமனுக்கு ஆத்திரம் வந்தது. ''மன்மதா! நான் சொன்னபடி செய்தால் உயிர் பிழைப்பாய். செய்கிறாயா, சாபம் தரட்டுமா? உனக்கு எது வேண்டும் சொல்'' என்றார்.

மன்மதன் சிந்தித்தான். பிரமனால் அழிவதைவிடச் சிவபெருமானால் அழிந்தாலே உய்வதற்கு மார்க்கம் உண்டு என்ற முடிவுக்கு வந்தான்.

''நல்லது அண்ணா! போய் வருகிறேன்...இல்லை...போகிறேன். ஆனால் திரும்பி வரமாட்டேன்'' என்று கூறிப் புறப்பட்டான்.

மன்மதன் தன் அரண்மனைக்குச் சென்றான். நன்றாக அலங்காரம் செய்து கொண்டான். சுரும்பும், அரும்பும், கரும்புமே அவனது ஆயுதங்கள். தாழம்பூ அவனுக்கு உடைவாள். (புஷ்பங்களில் தேன் உண்டு. புஷ்பம் கட்டுகிறவர்களின் கைகளில் அந்தத் தேன் பட்டுப் பட்டு நைப்பு ஏற்படும். அந்த நைப்புத் தன்மையை மாற்றச் சாம்பலைத் தொட்டுக் கொள்வார்கள். தாழம்பூவில் ஒரு விதமான மகரந்தச் சாம்பல் இருக்கிறது. அதனால்தான் புஷ்ப பாணங்களை விடுகிற மன்மதன் அதனை உடைவாளாக வைத்திருக்கிறான்.) இந்த ஆயுதங்கள் அகிலாண்டம் முழுவதையும் அடிமைப்படுத்தக் கூடியவை. அவனுக்குக் குடை சந்திரன்; சமுத்திரம் நல்ல முழவு; தேர் தென்றல். அந்தப் பரிவாரங்களுடன் புறப்பட்டான் மன்மதன்.

அவன் தேவர்களை மயக்கும்போது புஷ்ப வில்லில் புஷ்பபாணம் விடுப்பான். மனிதர்களை மயக்கும்போது கரும்பு வில்லில் புஷ்ப பாணம் விடுப்பான். அசுரர்களிடம் போகும்போது இரும்பு வில்லில் புஷ்ப பாணம் விடுப்பான்.

மன்மதன் புறப்படுவதை ரதி பார்த்தாள். ''சுவாமி! எங்கே போகிறீர்கள்?'' என்று கேட்டாள்.

''சிவ, சிவ! நீயும் அபசகுனத்தை உண்டாக்கினாயா? என் அண்ணாவின் பிடிவாதமான உத்தரவுப்படி சிவபெருமான்மீது போருக்குப் புறப்படுகிறேன்'' என்று மன்மதன் கூறினான்.

ரதி துணுக்குற்றாள். ''சுவாமி! சிவபெருமான்மீது போருக்குப் போய்த் திரும்பி வந்தவர் உண்டா? தாங்கள் தனித்துப் போக வேண்டாம். நானும் உங்களுடன் வருகிறேன்'' என்று புறப்பட்டாள் ரதி.

அனலில் விழுவதற்காக விட்டில் சென்றது; அதைக் காண்பதற்காக அன்றிக் காப்பதற்காக விட்டிலின் துணைவியும் உடன் சென்றது — அனலில் விழுந்த விட்டிலைத் தன் அன்பினால் மீட்டுத் தருவதற்காக. **(தொடரும்)**

## ட்ருமனின் சலிப்பு

ட்ருமன் அமெரிக்க ஜனாதிபதியாக இருந்தபோது வெண் மாளிகையில் விருந்தொன்று நடந்தது. அதில் கலந்துகொண்டவர்கள் எல்லோருக்கும் மகிழ்ச்சி. ஆனால் ட்ருமன் தம் நண்பர்களிடம் ''இந்த உத்தியோகமே எனக்குப் பிடிக்கவில்லை'' என்றார். திடீரென்று எல்லோருக்கும் வியப்பு. ''அமெரிக்க ஜனாதிபதி பதவி உலகில் சிறந்த பதவியாயிற்றே. ஏன் பிடிக்கவில்லை?'' என்று கேட்டார் நண்பரொருவர். ''பின் என்ன, நீங்களே சொல்லுங்கள். இந்த உத்தியோகத்தில் இருந்து என்ன பிரயோசனம்? பதவி உயர்வு பெற்று முன்னேறக்கூட வழியில்லையே!'' என்றார் அந்த அமெரிக்க ஜனாதிபதி.

# கத்தோலிக்கப் பெருவிழா

பம்பாய் மாநகரத்தில் நவம்பர் 28ந் தேதி முதல் டிசம்பர் 6ந் தேதி வரை 38வது அகில உலக மஹா பிரஸாத (Thirtyeighth International Eucharistic Congress) மகாநாடு நடைபெறுகிறது. இம்மாதிரி மகாநாடு முதன் முதலாக பிரான்ஸ் தேசத்தில் உள்ள லில் நகரத்தில் 1881ம் ஆண்டில் நடைபெற்றது. அதன் பிறகு உலகில் பல பாகங்களில் கிறிஸ்துவக் கத்தோலிக்க மக்கள் பெருவாரியாக உள்ள நாட்டின் தலை நகரங்களிலோ, அல்லது இதர முக்கிய நகரங்களிலோ தான் இம்மகாநாடுகள் நடைபெற்றன. இவ்வாறு பாரிஸ், லூர்தெஸ், ரோமாபுரி, க்விபெக், சிக்காகோ, டப்ளின், சிட்னி, மணிலா முதலிய நகரங்களில் முன் ஆண்டுகளில் நடைபெற்றிருக்கின்றன. கடைசி மகாநாடு ஜெர்மனியில் உள்ள மியூனிச் நகரத்தில் நடந்தது. கத்தோலிக்க மக்கள் சிறுபான்மையினராக உள்ள நாட்டில் ஒரே ஒரு முறைதான் இம் மகாநாடு நடைபெற்றது. இது நிகழ்ந்தது லண்டன் மாநகரத்தில் 1908-ம் ஆண்டில்.

இந்தியா முழுவதிலுமுள்ள 450 மிலியன் மக்கள் ஜனத்தொகையில் ஆறுமிலியன் கிறிஸ்தவ கத்தோலிக்கர்களே உள்ள நமது நாட்டில் இம்மகாநாடு நடைபெறுவது இதுவே முதல் தடவை. இதற்குக் காரணம் காலஞ்சென்ற போப்பாண்டவர் இருபத்து மூன்றுவது ஜான் அவர்களின் ஆரம்ப முயற்சியும் அவர் கூறிய ஆலோசனையுமே. போப்பாண்டவரின் ஆலோசனை என்பது அவர் விடுக்கும் கட்டளைக்குச் சமானம். கிறிஸ்தவர்களல்லாத பிற மக்களின் நலனில் அவர் கொண்டிருந்த அனுதாபமும் அக்கறையும் உலகம் அறிந்ததே. அவரது விருப்பத்துக் கிணங்கப் பாரதத்தில் நடைபெறும் இம் மகாநாட்டில் உலகத்தில் உள்ள எல்லாக் கிறிஸ்துவ நாடுகளின் பிரதிநிதிகளும் கலந்து கொள்ளுகின்றனர். இதர மகாநாடுகளைக் காட்டிலும் பம்பாய் மகாநாட்டுக்குத் தனிச் சிறப்பளிப்பது உலக கத்தோலிக்க மக்களின் ஆன்மிகத் தலைவரான போப்பாண்டவர் நேரடியாக இங்கே பிரசன்னமாக விருப்பதுதான். இவ்வாறு அவர் நேரடியாகப் பங்கு கொள்வது மஹாப் பிரஸாத மகாநாட்டு வரலாற்றில் இதுதான் முதல் தடவையாகும்.

அகில உலக மகாப்பிரஸாத மகாநாடு, அல்லது அதைவிட அடிக்கடி நடைபெறும் தேசிய மகாப்ரஸாத மகாநாடுகள், இவற்றின் நோக்கம் — சமயச் சடங்குகள் மூலமும், கலாசாரக் கூட்டங்கள் மூலமும் கத்தோலிக்க மக்களிடையே கர்த்தரிடம் நன்றி உணர்ச்சியையும் பக்தியையும் பரப்பி வளரச் செய்வதாகும். ''யூகேரிஸ்டு'' என்ற கிரேக்கப் பதத்துக்கு ''நன்றி செலுத்துதல்'' என்றுதான் அர்த்தம். மனித குலத்தை உய்விப்பதற்காகத் தமது புனிதப் புதல்வர் இயேசு நாதரை மக்களிடையே அருளிய அன்புக்காக ஆண்டவனுக்கு நன்றி செலுத்துதல் ஒன்று. புனிதமாக்கப்பட்ட ரொட்டித் துண்டையும் மதுவையும் மஹாப் பிரஸாதமாக உட்கொள்ளுவதன் மூலம் இயேசு நாதரிடத்தில் முழு நம்பிக்கை வைத்து, இப்பூமியில் அவர் அவதரித்து ஆற்றிய பணியிலும் தியாகத்திலும் நம்பிக்கை கொண்டுள்ள மக்கள் அனைவரும் அவருடன் கலக்க வழி வகுத்த இயேசுநாதருக்கு நன்றி செலுத்துதல் மற்றொன்று.



புனிதமாக்கப்பட்ட மஹாப்ரஸாதம் வைக்கப்பட்டிருக்கும் ''மான்ஸ்ட்ரான்ஸ்'' என வழங்கும் பொற் பாத்திரம்.

விவிலிய வேதத்தின் புதிய ஏற்பாட்டுப் பகுதியில் (New Testament) இம்மாதிரி பக்தி செலுத்தும் முறையை இயேசுநாதரே ஏற்படுத்திய விதம் விவரிக்கப்பட்டிருக்கிறது. ரொட்டித் துண்டையும், மதுக் கிண்ணத்தில் உள்ள மதுவையும் அடுத்தடுத்துத் தமது புனித கரங்களில் ஏந்தி அவற்றை அநுக்கிரகித்

பேராசிரியர் எம். ரத்தினசாமி

இதற்கு நல்ல பதவி வரவேண்டுமே என்று எனக்கு அசாத்திய மோகம்தான்; மோகம் மட்டும்தானா? அதற்குப் புத்திசாலித்தனமாக முயலாமலிருக்கிறேமே என்று கோபம்கூட வருகிறது!''

ஃ ஃ ஃ

1952ம் ஆண்டு ராஜாஜி சென்னையில் முதன் மந்திரி பதவி ஏற்ற பின் திருநெல்வேலிக்குச் சென்றிருந்தார். ரேஷனை ஒழித்து மக்களின் வயிற்றில் பாலை வார்த்திருந்த மகானுக்கு மக்கள் மாலை மேல் மாலையாகப் போட்டபடி இருந்தார்கள். இந்த மாலை சூட்டும் வைபவத்துக்கு முடிவே கிடையாதோ என்று தோன்றி விட்டது. பூமாலைகள் மேலும் மேலும் சேர்ந்து மேடையில் பூமலையாகக் குவிந்துவிட்டன' என்று இதனைப் பேராசிரியர் 'கல்கி' வர்ணித்திருக்கிறார். இவ்வளவு அன்புத் தொல்லைகளையும் 'பொறுத்து'க் கொண்டிருந்த ராஜாஜி முடிவில் கூறியதாவது:

''உலகத்தில் தெய்வ பக்தி அதிகமாவதனால் கடவுளுக்கு எவ்வளவு கஷ்டம் அதிகரிக்கக் கூடும் என்பதை இன்று தெரிந்து கொண்டேன். கடவுளிடம் பக்தி செய்யாதவர்கள் கடவுளுக்குக் கஷ்டம் கொடுக்காமலிருக்கிறார்கள். உங்களுடைய அன்பினால் எனக்கு இப்போது ஏற்பட்ட கஷ்டத்திலிருந்து கடவுளுடைய கஷ்டங்களைப் பற்றி நினைக்கும்படி நேர்ந்தது. இந்தக் கூட்டத்திலுள்ளவர்களில் எனக்கு மாலை போடாதவர்களுக்கெல்லாம் நன்றி செலுத்துகிறேன்!''

ஃ ஃ ஃ

1950ம் ஆண்டு காரைக்குடியில் நடந்த கம்பர் விழாவில் தற்பெருமை பிடித்த சில தமிழ் எழுத்தாளர்களுக்கு ராஜாஜி இப்படி ஒரு 'குட்டு' வைத்தார்:

''ராமாயண காவியத்தைப் பக்திக் கண்ணோடு பார்க்காத சிலர் ராமாயணக் கதையில் குறைகள் இருப்பதைக் கண்டு பிடிக்கலாம். இன்று எத்தனையோ எழுத்தாளர்கள் குறையே இல்லாத கதைகள் எழுத முடியும். ஆனால் எழுதி என்ன பயன்? காலப் போக்கில் அவை எல்லாம் நிற்குமா? நிற்காது என்றும் விஷயம் எழுதிய எழுத்தாளர்களுக்குத் தெரிந்தாலும் தெரியாவிட்டாலும், அந்தக் கதைகளுக்கே தெரியும், அவை நிலைத்து நிற்க முடியாது என்று.''

ஃ ஃ ஃ

சென்னையில் ஒரு முறை தமிழ் விழாவைத் தொடங்கி வைத்த ராஜாஜி தமிழின் வரி வடிவத்தை மாற்றுவதைக் கண்டித்து இவ்வாறு ஹாஸ்யமாகக் கூறினார்:

''என்னைத் திராவிடக் கழகத்தார் திட்டி எழுதும்போது நான் வருத்தப்படுகிறேன். திட்டி எழுதுகிறார்களே என்றில்லை. இப்படிப் புதிய 'லை'யும், 'னை'யும் போட்டுத்தானா திட்டவேண்டும் என்று வருத்தப்படுகிறேன்.''

ஃ ஃ ஃ

எத்தனையோ இன்னல்களுக்கிடையே ராஜாஜி இன்றும் சிரித்துப் பேசுகிறார். சமீபத்தில் அவர் செய்த மூன்று ஹாஸ்யங்களைப் பார்ப்போம்:

கம்யூனிஸ்ட் கட்சியின் இரு பிரிவுகளும் எந்தச் சின்னத்தை வைத்துக்கொள்வது என்று சர்ச்சை செய்கின்றன அல்லவா? 'கம்யூனிஸ்ட் கட்சிக்குத்தான் அதிர்ஷ்டவசமாகச் சுத்தி அறுவாள் இரண்டும் சேர்ந்த சின்னம் இருக்கிறதே; ஒரு பிரிவு சுத்தியையும் இன்னொரு பிரிவு அறுவாளையும் வைத்துக் கொள்ளட்டும்; இது பல விதங்களில் அர்த்த புஷ்டியுள்ளதாயிருக்கும்' என்கிறார் ராஜாஜி.

இந்திய இசைப் பண்பின் உருவமாகிய வீணையின் பெருமையையும், இந்திய அரசாங்கத்தின் சிறுமையையும் நன்கு உணர்ந்துள்ள ராஜாஜி, வீணையைத் தேசிய வாத்தியமாகச் சர்க்கார் அங்கீகரித்த போது இவ்வாறு கூறினார்: ''யாரும் கேள்விப்படாத சிறிய சர்வகலாசாலைகள் புகழ்பெற்ற பெரியவர்களுக்கு டாக்டர் பட்டம் அளிப்பதுண்டு. இந்திய சர்க்கார் வீணைக்குத் தேசிய அங்கீகாரம் அளித்திருப்பதும் இதுபோலத்தான்.''

நேரு அவர்களின் தலையை ரூபாய் நாணயத்தில் பொரிப்பதில் எவ்வளவோ உசிதக் குறைவு இருப்பினும் அதிலும் ஒரு 'பொருத்தத்தை'க் கண்டு சமயோசிதமாகக் கூறினார் ராஜாஜி: 'பதினேழாண்டு ஆட்சி நடத்தி ரூபாயின் மதிப்பைப் பதினேழு பைசாவாகக் குறைத்தவரின் உருவத்தில் ரூபாய் நாணயம் வெளியிடுவது அவருக்கு நல்ல ஞாபகார்த்தம் தானே?' என்று அவர் கேட்டார்.

ஃ ஃ ஃ

ஒரு முறை ராஜாஜியே தமக்கு ஏன் பிறந்த நாள் கொண்டாடவில்லை என்று கேட்டார் எனில் அது விந்தையாக இருக்கிறதல்லவா? விஷயம் இதுதான்:

1950ல் இந்தியா குடியரசாகப் பிரகடனமானவுடன், அதுவரை கவர்னர்-ஜெனரலாக இருந்த ராஜாஜி பாரதத்தின் முதல் ராஷ்டிரபதியாகப் பதவி ஏற்க வேண்டும் என்று நாட்டில் பலர் விரும்பினார்கள். தமிழகத்தில் இந்த விருப்பம் வெகு தீவிரமாக இருந்தது. அச்சமயத்தில் சென்னைக்கு விஜயம் செய்த ராஜாஜி பின்வருமாறு கூறினார்:

''சென்ற வருஷம் நான் வேண்டாதபோது எனக்குப் பிறந்த நாள் கொண்டாடினீர்களே! இந்த வருஷம் ஏன் கொண்டாடவில்லை? எனக்கு வயது எழுபதுக்கு மேல் ஆகிறது என்பதை நீங்கள் ஞாபகப்படுத்திக் கொண்டு மற்றவர்களுக்கும் ஞாபகப்படுத்துங்கள். என்னிடம் மேலும் வேலை வாங்க யத்தனிக்க வேண்டாம். இதற்காகவே பிறந்த நாளைக் கொண்டாடி என் பிராயத்தை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள்.''

இப்படிச் சொன்னவர்தான் அதற்குப் பதினைந்து ஆண்டுகளுக்குப் பின் இன்று தேசத்தின் தேவையை உணர்ந்து, ஓயாமல் ஒழியாமல் உழைக்கிறார். அன்று போலவே சிரித்துக் கொண்டும், மற்றவர்களைச் சிரிக்கச் செய்துகொண்டும், சேவை செய்கிறார்!



# கந்தன் கருணை

திருமுருக கிருபானந்தவாரியார்

## 5. ஆசை அழிந்தது!

ரதியும் மன்மதனும், தங்கள் பரிவாரங்களுடன் கயிலை மலைக்குச் சென்றனர். கயிலையைக் கண்டதும் மன்மதன் தேரை விட்டிறங்கினுன்; தன்னுடன் வந்த பரிவாரங்களை அங்கேயே விட்டு விட்டு ரதி தேவியை அழைத்துக் கொண்டு வில்லும் அம்புமாய் கயிலை மலை மீது ஏறினுன்; கரும்பு வில்லை வளைத்து மலர்க் கணை பூட்டி அங்கிருந்த பறவைகள் மீதும் விலங்குகள் மீதும் விடுத்துக் காம இச்சை உண்டாக்க நினைத்தான். கீழக் கோபுர வாயிலில் இருந்த நந்தியெம்பெருமான் மன்மதனின் எண்ணத்தை அறிந்து ஆத்திரங் கொண்டார் 'உ...ம்' என்று சினந்து ஹூங்காரம் செய்தார். அந்த ஒலியைக் கேட்ட மன்மதனுடைய பாணங்கள், பறவைகள் மீதும் விலங்குகள் மீதும் செல்லாமல் ஆகாயத்திலேயே நின்று விட்டன. நந்தி தேவர் முன் சென்று அவரது காலி மதனன் விழுந்தான்.

காவல்காரரிடமே கா தெய்வத்தின் காரியம் இய வில்லை என்றுல் யஜமானனை பற்றிக் கேட்க வேண்டுமா மதனன் நடுங்கியவாறு, ''நந் யம்பெருமானே! தேவர்களி துயர் துடைக்கும் பொருட் பிரமதேவர் உத்தரவுப்படி சி பெருமானிடம் வந்திருக்கி றேன்'' என்றுன்.

''அப்படியானுல் மேல கோபுர வாயில் வழியாக போ'' என்றுர் நந்தி.

மன்மதன் நந்தி தேவ வணங்கி விடை பெற் கொண்டு மேலக்கோபுர வா வின் உள்ளே, தூங்குகி புலியை எழுப்பும் மானை போல் சிவபெருமானிடம் செ ருன். நீறு பூத்த நெருப்பு போல் இருக்கும் இறைவ தென்திசை நோக்கி மோன திருக்கோலத்தில் அமர்ந்திரு ததைக் கண்ட மன்மதன் நடு கினுன். அவன் உடல் எல்லா வியர்த்தது. கையில் வை திருந்த வில் அம்புகளுட களைத்துக் கீழே விழுந்தான் ரதிதேவி மன்மதனைத் த கரத்தால் தாங்கி, ஆறுத கூறித் தேற்றினுள். ம மதன் களைப்பு நீங்கி எழுந்தான் ''ஈசனைக் கண்டவுடனேயே உயிை இழந்தவன் போலாகி விட்டேனே இனி எம்பெருமானை எதிர்த்துப் பாண விடுத்தால் உய்ய முடியுமா? இன்னு சிறிது நேரத்தில் சிவபெருமானி நெற்றிக் கண் பார்வையால் வெந் அழியப் போகிறேன். உரலில் த யைக் கொடுத்து விட்டு உலக்கைக்கு பயந்தால் முடியுமா? விதியை யார லும் வெல்ல முடியாது. இறைவன் தி வுள்ளம் எப்படியோ, அப்படியே நட கட்டும்'' என்று மன்மதன் தன வில்லை வளைத்து நாணேற்றிக் கண்ணு தற் கடவுளை அணுகினுன்.

அங்கே, இந்திரன் மனேவதி நகர துக்குச் சென்றுன். அங்கிருந்த பிரம தேவரை வணங்கி, ''எம்பெருமா மீது மன்மதனைத் தனித்து ஏவிவி டீர்களே, அவன் போர்த் திறத்தை பார்க்க நாமும் செல்லுவோம்'' என் வேண்டிக் கொண்டான். பிரமன், இ

விக்ஸிலிருந்து புதிய சக்திவாய்ந்த இருமல் மருந்து

# அடமுள்ள இருமலை நிறுத்துகிற

இருமல் ஆரம்பமாகும் இடத்தில் செயல்புரிகிறது...இருமல் கட்டுப்பாட்டுக் கேந்திர







எரிச்சலைக் கொடுக்கும், தூக்கத்தைக் கெடுக்கும் இருமலினால் நீங்கள் அவதிப்படவேண்டாம். இருமல் உங்கள் தொண்டையில் மட்டும் இருப்பதல்ல என்பது மருத்துவ விஞ்ஞானம் இப்போது அறிந்த விஷயம். உண்மையில், இருமல் கட்டுப்பாட்டுக் கேந்திரத்தில்தான் உங்கள் இருமல் அடங்கியிருக்கிறது. தொண்டை அழற்சி, சுவாசக் குழாய் அடைப்பு ஆகியவைகள் இருமல் கட்டுப்பாட்டுக் கேந்திரத்தைத் தூண்ட, நீங்கள் இரும ஆரம்பிக்கிறீர்கள்

இருமல்களை நிறுத்துவதற்கு இருமல் கட்டுப்பாட்டுக் கேந்திரம் அமைதியடைய வேண்டியது அவசியம். விக்ஸ் பார்முலா 44-ல் உள்ள பிரத்தியேகமான "இருமல் சமனிகள்" உங்கள் இருமல் கட்டுப்பாட்டுக் கேந்திரத்தை விரைவில் அடைந்து, அதை சீக்கிரமே சமனப்படுத்த இருமல் நிற்கிறது.

அதேநேரத்தில், விக்ஸ் பார்முலா 44-ல் வாய்ந்த மருந்துகள் தீவிரமாக வேலை செய்டுள்ள சுவாசக் குழாயைத் திறந்து, வலி இறுக்கத்தை நீக்கி, தொண்டை எரிச்சலைப்

விக்ஸ் பார்முலா 44 உங்களுக்கு இருமலிலிருந்து துரிதமான நிவாரணத்தை அளிக்கிறது ... அடங்காத இருமலிலிருந்து விடுதலை பெற்று, நீங்கள் இரவு முழுவதும் சுகமாகத் தூங்குகிறீர்கள்.

| உங்கள் மார்பில் செயல்புரிகிறது | உங்கள் தொண்டையில் செயல்புரிகிறது | உட்கொள்ளும் அளவு |
|---|---|---|
| விக்ஸ் பார்முலா 44-ல் உள்ள விசேஷ கூட்டுப் பொருள்கள் உங்கள் சுவாசக் குழாய்களில் ஆழ்ந்து வேலை செய்து வலிமிக்க மார்பு இறுக்கத்தை நீக்குகிறது. | விக்ஸ் பார்முலா 44 இருமலினால் தொண்டையினுள் ஏற்படும் வெடிப்புகளைத் துரிதமாகக் குணப்படுத்துகிறது. தொண்டை அழற்சியை உடனடியாகச் சமனப்படுத்துகிறது. | உட்கொள்ளும் சரியான அளவை அறியபெட்டியின் மேல் உள்ள விபரங்களைத் தயவு செய்து படியுங்கள். |




# விக்ஸ் பார்முலா 44

காஃப் மிக்ஸ்சர் இருமல் ஆரம்பமாகுமிடத்தில் செயல்புரிகிறது

VF-264.

வேண்டும்'' என்றேன். இந்தச் சம்பவத்தின் காரணமாக எங்கள் உஸ்தாது மகம்மது கவுஸைக் கச்சேரியில் விசாரணை செய்து ஐந்து ரூபாய் அபராதம் போட்டதாக எங்கள் பள்ளிக்கூடத்தில் குசு குசு'ப் பேச்சு. நாங்கள் யாரும் அவரைக் கேட்க வில்லை. போலீசார் சுப்பனுடைய கட்சியில் சேர்ந்து கொண்டு விட்டார்கள். பெரிய அநியாயம் செய்து விட்டார்கள் என்று நாங்கள் எல்லோரும் எண்ணினோம். 'அபராதம் போட்டால் என்ன?' என்று எங்கள் உஸ்தாது மேல் இரு மடங்கு கௌரவமும் அன்பும் செலுத்தினோம்.

> அனுமான் 'சிரஞ்சீவி' என்கிறார்கள் பெரியோர்கள். அதாவது இப்போதும் எங்கேயும் நமக்கு உதவக் காத்திருக்கிறான். துக்கம் ஏற்பட்டால், ''ராம ராம'' என்று சொல்லிக் கொண்டு, பொறுப்போம். அனுமான் வந்து நிவாரணம் செய்வான் என்பதில் சந்தேகமில்லை. —ராஜாஜி

இது நடந்து ஐம்பது ஆண்டுகள் ஆயின. இன்னும் அதிகமாகவே இருக்கும். காலம் ஓட்டமாக ஓடுகிறது. நேற்று நடந்ததுபோல் இருக்கிறது. சென்ற வாரம் எங்கள் தாலீம் கானா இருந்த இடத்திற்கு முன் நின்றேன். அந்த இடத்தில் ஒன்றும் இல்லை. எல்லாம் பாழாகக் கிடந்தது. முள் செடிகள் வளர்ந்து அங்கே ஒரு வெள்ளாடு மேய்ந்து கொண்டிருந்தது. இப்போது மகம்மது கவுஸ் மலுலகத்தில் இருக்கிறார். அவர் வீட்டில் வேறு யாரோ குடியிருக்கிறார்கள். அவரைச் சேர்ந்தவர்கள் கூட இல்லை.

கெறடி இருந்த இடத்தில் மேய்ந்துகொண்டிருந்த ஆட்டைப் பார்த்த வண்ணமாகவே வெகு நேரம் நின்றேன். அந்த ஆட்டின் பேரில் என்னை அறியாத ஓர் அன்பு எனக்கு உண்டாயிற்று. என் மனக் கற்பனையில் அதன் முகம் வர வர மாறிக் கவுஸ் உஸ்தாதே அங்கே நின்றார். அவர் சுவரைப் பிடித்துக் கொண்டு ''ஊட் பைட்'' தேகாப்பியாசம் செய்வது போல் மனக் காட்சி கண்டேன்.

''போகலாமே!'' என்றார் என் கூட இருந்த கூட்டுறவு இன்ஸ்பெக்டர் சீதாபதி ராவ். என் பகற் கனவிலிருந்து இறங்கினேன்.

''உமக்கு ஜிம்னாஸ்டிக்ஸ் இன்ஸ்பெக்டர் மகம்மது கவுஸ் தெரியுமா?'' என்று கேட்டேன்.

பாவம், சீதாபதி ராவ் அவரை எவ்வாறு அறிவார்? உத்தியோகத்திற்காக இந்த ஊருக்கு எங்கிருந்தோ நாலு ஆண்டுகளுக்கு முன்தான் வந்தவர்.

''அது யார்? எனக்குத் தெரியவில்லையே?'' என்றார்.

இவரிடம் எங்கள் உஸ்தாதைப் பற்றிப் பேசி என்ன பயன்? நானும் எத்தனையோ வாத்தியார்களிடம் எத்தனையோ பாடங்கள் படித்தேன். அவர்களில் யாரும் எங்கள் மகமது கவுஸ் உஸ்தாதுக்குச் சமானமாக மாட்டார்கள்.

அங்கிருந்து கிழக்கே சென்று, அவ்விடமுள்ள ஒரு குன்றண்டை போனோம். குன்றின் அடிவாரத்தண்டை ஒரு பாறையில் ஒரு பெரிய அனுமார் செதுக்கப்பட்டிருந்தது. அங்கே ஊரார் வேண்டுதல்கள் வேண்டிக் கொண்டு தேங்காய் உடைத்துப் பூஜைசெய்வதுண்டு. அந்தஅனுமாரும் செங்காவி பூசி எங்கள் தாலீமில் வரைந்திருந்தது போலவே இருந்தபடியால் அவர் மீது எங்களுக்கெல்லாம் அதிக பக்தி. அந்த அனுமாரையாவது பார்த்துக் கொஞ்சம் ஆறுதல் அடையலாம் என்று அவ்விடம் சென்றேன். சுற்றிச் சுற்றிப் பார்த்தும் அவர் காணப் படவில்லை.

''இங்கே ஒரு பெரிய அனுமார் பாறையில் இருக்குமே, அது என்னவாயிற்று?'' என்று சீதாபதி ராயரைக் கேட்டேன்.

''அதோ பாருங்கள், அதுதான் அனுமார் கோவில்'' என்றார். ஒரு மண்டபம் தென்பட்டது. யாரோ பக்தர்கள் அசட்டுத்தனமாக எங்கள் அனுமாரைச் சுவர் கட்டி அடைத்துப் போட்டு ஒரு கோயிலாகச் செய்துவிட்டிருப்பதைப் பார்த்தேன். ஊரெல்லாம் பாழாய்ப் போன மாதிரி இந்த மலையடி அனுமாரும் கோயிலுக்குள் மறைந்து போனாரே என்று வருத்தப்பட்டேன். கோயிலுக்குள் போனேன். அனுமார் என்னமோ இருந்தார். ஆனால் முன் மாதிரி ஜொலிக்கவில்லை. அடங்கி ஒடுங்கி அரக்கர் கையில் சிக்கின மாதிரி இருந்தார்.

ரஹிமான் வீட்டைக் கண்ணால் பார்க்கலாம் என்று ஆசை தோன்றிற்று. அந்தத் தெருவுக்குப் போனேன். வீடு மட்டும் முன் போலவே செம்மண் பூசிய வண்ணமாக இருந்தது. ஆனால் யாரோ குடியிருந்தார்கள்.

ரஹிமான் தன் வீட்டு வாசலில் சமையலுக்காக விறகு வெட்டுவது வழக்கம். அதைப் பார்த்து அனுபவித்துக் கொண்டு சில சமயம் நான் நிற்பதுண்டு. எத்தனையோ சிநேகிதர்களைப் பார்த்திருக்கிறேன். என் ரஹிமானுக்குச் சமானம் யாரும் இருக்க மாட்டார்கள்! அவன் இப்பொழுது எங்கே என்ன தொழிலில் இருக்கிறான் என்பது கூட எனக்குத் தெரியாது; சொல்லுவாரும் இல்லை. உயிரை வேண்டுமானாலும் தருவான். ஒரு பரீக்ஷையும் அவன் சரியாகத் தேறவில்லை. என் படிப்பில் முடியுமானால் அவனுக்குப் பாதி தந்திருப்பேன்; இருவரும் பாஸ் செய்திருக்கலாம். பாவம்! அவனை வாத்தியார்கள் எல்லாரும் சேர்ந்து கோளாறு செய்துவிட்டார்கள். பள்ளிக்கூடம் விட்ட பின், அவன் என்னவானானோ தெரியவில்லை. என்ன விலை கொடுத்தால் அத்தகைய நண்பன் எனக்குக் கிடைப்பான்?

குழந்தைகாள், உங்கள் நண்பர்களைப் பற்றிக் கவனமா யிருங்கள். என்னைப் போல் ஏமாற்றமடையாதீர்கள். நட்பைப் போல் ஒரு செல்வமுமில்லை. மற்றதெல்லாம் பொய்; காற்றைப் போல் பறந்து போகும். அன்பும் நட்புமே வாழ்க்கையில் பெருத்த செல்வம். **(நீண்ட காலம் முன்பு எழுதியது)**

'தம்மைக் குறித்துப் பிறர் செய்யும் கேலிகளைக்கூட ரஸித்துச் சிரிக்குமளவுக்கு நகைச்சுவை உணர்வு படைத்தவர் ராஜாஜி' என்று காந்தி மகான் ஒரு முறை குறிப்பிட்டார். இடுக்கண் வருங்கால் தாமும் நகைத்துப் பிறரையும் நகைக்க வைப்பதில் ராஜாஜிக்கு ஈடு ராஜாஜியேதான். ஒப்பற்ற அவரது நகைச்சுவைக்கு உதாரணமாக இங்கு ஒருசில துளிகளை அளிக்கிறோம்:

# சிரிக்க வைக்கும் சிந்தனைச் சிற்பி

சுமார் இருபத்தைந்தாண்டுகளுக்கு முன் திருச்சி சிறையில் ராஜாஜி ராமாயணம் படித்து விளக்கி வந்த காலம். "சத்ருக்னனுக்கு ஏன் சத்ருக்னன் என்று பெயர் வந்தது; அவன் ஒரு சத்ருவையும் ஜயிக்கவில்லையே?" என்ற கேள்வி பிறந்தது. ஸ்ரீ அனந்தசயனம் அய்யங்கார் 'பொருத்தமில்லாமல் பெயர்கள் வைப்பது' பற்றி விஸ்தாரமாகப் பேச ஆரம்பித்தார். அவர் நிறுத்துவதாகவே தோன்றவில்லை. அப்போது ராஜாஜி, "பொருத்தமில்லாமல் பெயர் வைப்பதற்கு ஓர் உதாரணம், பாம்பைக் கண்டு காதவழி பயந்து ஓடுபவர்களுக்கு அனந்தசயனம் என்று பெயர் வைப்பது!" என்றார். அதற்கு முதல் நாள் ராத்திரிதான் சிறையில் பாம்பு வந்திருந்தது!

ஃ ஃ ஃ

சித்திரகூடத்தில் பரதன் ராமரைச் சந்தித்து எவ்வளவோ வருந்தி வருந்தி அழைக்கும் கட்டத்தை ராஜாஜி தமது சிறைவாசத்தின்போது உடனிருந்த காங்கிரஸ் தொண்டர்களுக்கு விளக்கினார். இராமர் பரதனுடன் அயோத்தி திரும்புவதற்கு மறுத்து விடுகிறார் அல்லவா? "ராமருக்குத்தான் ஏன் இவ்வளவு பிடிவாதம்? சிவனே என்று பரதனுடன் திரும்பிப் போயிருந்தால் எவ்வளவு கஷ்டங்கள் இல்லாமற் போயிருக்கும்!" என்று ராமாயண சிரவணம் செய்தவர்களில் ஒருவர் பரிதாபப்பட்டார்.

"அதற்கென்ன செய்வது? சீதையின் தலைவிதி!" என்றார் வேறொருவர்.

இன்னொருவர் "இல்லை, இல்லை! ராவணனுடைய தலை விதி!" என்றார்.

அப்போது ராஜாஜி குறுக்கிட்டு, "ராவணனுடைய தலைகளின் விதி என்று சொல்லுங்கள்" என்று திருத்தினார்.

ஃ ஃ ஃ

பல ஆண்டுகளுக்கு முன் சென்னையில் ஒரு பொதுக் கூட்டத்தில் ராஜாஜி பேசிக்கொண்டிருந்த பொழுது சில காலிகள் ராஜாஜியின் மீது கற்களை வீசி எறிந்தனர். பக்கத்திலிருந்த பலருக்குப் பயமாகப் போய்விட்டது: கற்களை வீசி எறிந்தவர்களை அடக்கப் போனார்கள். அப்போது ராஜாஜி, "அவர்களை விட்டுவிடுங்கள். அவர்களுக்கு அவ்வளவு தூரம் குறி பார்த்து அடிக்கத் தெரிந்தால் நமக்கு எப்பொழுதோ சுயராஜ்யம் கிடைத்திருக்குமே!" என்றார்.



ஃ ஃ ஃ

தவிர்க்க முடியாமல் போனால் பொதுஜன வாக்கெடுப்புக்குப் பிறகு பாகிஸ்தானைப் பிரிவினை செய்ய வேண்டும் என்று ராஜாஜி திட்டம் சமர்ப்பித்திருந்த சமயம். இது பற்றி அவர் தாம்பரம் கிறிஸ்தவக் கல்லூரியில் பேசினார். அவர் பேசி முடித்த பின், அக்கிராசனம் வகித்த மாணவர் ஒரு சந்தேகத்தைக் கிளப்பினார்: 'ஐரோப்பாவில் பல நாடுகள் இருப்பதை ராஜாஜி குறிப்பிட்டார். ஆனால் ஐரோப்பாவின் நிலைமை என்ன? அங்கு விபரீ யுத்தம்தானே நடக்கிறது?' என்றார்.

உடனே ராஜாஜி, 'ஆம், அக்கிராசனர் சொல்லுவது ரொம்பவும் சரி. அதற்காகவே தான் பிரிந்து போவதா வேண்டாமா என்று சர்வஜன வோட்டு எடுக்கு முன் இரண்டு தரப்பினரும் பிரசாரம் செய்ய உரிமை பெற வேண்டும் எனக் கேட்டிருக்கிறேன். அப்போது நமது அக்கிராசனர் போன்றவர்கள் ஒவ்வொரு பொதுக் கூட்டத்துக்கும் ஐரோப்பா படத்தைக் கையில் எடுத்துக் கொண்டு போய், பிரிந்து போவதிலுள்ள தீமைகளை ஜனங்களுக்கு எடுத்துக் கூறலாம். அப்படியும் அந்த ஜனங்கள் கேட்காவிட்டால் நா என்ன செய்யலாம்?' என்றார்.

ஃ ஃ ஃ

இரண்டாவது உலக யுத்த காலத்தில் காங்கிரஸ் அரசாங்கங்கள் பதவியிலிருந்து விலக தேவையில்லை என்று ராஜாஜி கூறியதா அவருக்குப் 'பத மோகம்' என்று ப பெயர் சூட்டினார்க ஐந்தாண்டுகளுக்குப் பி — 1945ல் — அவர வாதமே சரி என்று நி பட்ட பின் சென் கோகலே மண்டபத் பேசிய ராஜாஜி தமக் 'பதவி மோகம்' என் குற்றம் சாட்டிய பிர பதிகளுக்கு இப்ப பதில் சொன்னார்:

"பதவி மோகம் என் சொன்னால் மட் போதாது. பதவி லையே என்று எனக் பெரும் கோபம் என் சேர்த்துக்கொள்ள வேண்டும். ஆமாம். எ குப் பதவி மோகம்தான். இந்தத் தேசம் படிப்பட்ட கேவலமான நிலையில் இருக்கிற

இலக்கியத்தில் மட்டுமின்றிப் பல்வேறு துறைகளில் ராஜாஜி தேர்ந்த ஞானம் படைத்தவர். பி. ஸி. ஜி., கதிரியக்கம், இதய வியாதி, டிக்கென்ஸ் நவீனம், அத்வைத சாஸ்திரம் இவை யாவற்றைக் குறித்தும் ஒரே போல் விவாதிக்க வல்லவர் அவர். அவரது எழுத்து நடை தெளிவும், எளிமையும், எழிலும் கொண்டது. அவரது ஹாஸ்யமும் உவமைகளும் மனோரஞ்சகமாகவும், அதே சமயம் அறிவூட்டுவனவாகவும் உள்ளன.

அரசியல் என்பதைத் தனியாக வைத்திராமல், சமூகச் சீர்திருத்தத்தோடு இணைத்து அவ்வழியில் சாதனை புரிந்தவர் ராஜாஜி.

மந்திரி பதவி வகிக்கும் போது அவர் நிர்வாகத்தில் நிலைநாட்டிய நேர்மை ஓர் அரிய உதாரணமாகும். இது காரணமாகவே ஆங்கிலேய உயர் அதிகாரிகள் உள்பட யாவரும் அவரிடம் பெருமதிப்பு வைத்து அவர் வார்த்தையைக் கேட்டனர். தெய்வ மனிதராகிய அவர் எல்லாத் துறைகளிலும் தர்மத்தை விரும்புபவர். எனவே, அரசாங்க நிர்வாகத்தில் அவர் மிகச் சிறந்த நன்னடத்தையை எதிர்பார்த்ததில் வியப்பில்லை. ஊழல் விவகாரங்களுக்கு அவரால் உடன்பட முடியாததனால்தான் அநேக அரசியல் வாதிகள் அவருக்கு எதிர்ப்பாகக் கிளம்பினர். அவர் அதையும் பொருட்படுத்தவில்லை. ஒரு முறை அவர் சட்டசபையாளரிடம் பேசுகையில், ''நீதி மன்றங்களை அரசாங்க நிர்வாகத்திலிருந்து பிரித்தாகி விட்டது; நான் சட்டசபையையும் நிர்வாகத்திலிருந்து பிரிக்க விரும்புகிறேன்'' என்றார். சட்டசபையாளர் அதிகாரிகளின் நிர்வாகத்தில் குறுக்கிடக் கூடாது என்பதே இதன் கருத்து. எந்தச் சிறிய விஷயத்திலும் அரசாங்கத்தில் ஏமாற்றுதல்களுக்கு இடமே இருக்கலாகாது என அவர் கருதினர். ஆஸ்தான கவிகள் நியமிப்பதை அவர் நிறுத்திய போது இதனால் என்ன லாபம் என்று சிலர் கேட்டார்கள். ''முகஸ்துதி செய்யக் கூடியவர்களுக்கு ஊக்கம் தருவதை நிறுத்துவதே லாபம்தானே?'' என்றார் ராஜாஜி.

நிகழ்கால அரசாங்கம் பற்பல விதங்களிலும் தேசத்தை சர்வநாசத்துக்கு அழைத்துச் செல்வதாக அவர் கருதுகிறார். ஏகபோகியத் தொழில் சலுகை, பெர்மிட் லைசென்ஸ் வலை, தாங்க முடியாத வரிப் பளு, சாஸனம் தந்த சுதந்திரங்களின் அழிவு, லஞ்ச ஊழல், டம்பச் செலவுகள், நிர்வாகத் திறமையின்மை இவை யாவற்றுக்கும் ஆட்சியாளரின் இனம் தெரியாத சோஷலிஸ சித்தாந்தமே காரணம் எனக் கண்டு அதனை வலுவாகவும், தர்ம நியாயமாகவும் எதிர்க்கிறார்.

எந்தக் கட்சி ஆட்சியில் இருப்பினும், ஜனநாயகத்தின் ஓர் இன்றியமையாத அம்சமாக வலு வாய்ந்த எதிர்க் கட்சி இருத்தல் வேண்டும். எனவே, ஆளும் கட்சிக் கொள்கைகளுக்கு நேரெதிரான கொள்கைகளோடு, சோஷலிஸச் சார்பில்லாத எதிர்க் கட்சி தேவைப்பட்டபோது, அதனைப் பூர்த்தி செய்யவே ராஜாஜி சுதந்திரக் கட்சியை ஸ்தாபித்தார்.

தமது அசாதாரணமான மேதாவிலாசம் காரணமாக அவர் புதுக் கட்சிக்கு உலகம் தழுவும் பொதுப் பெயராக 'சுதந்திரக் கட்சி' என்று பெயரிட்டார். சர்வ தேசங்களிலும் நடைமுறைக்கு ஒவ்விய அரசியல் சித்தாந்தங்களாகக் கட்சிக் கொள்கைகளை வகுத்தார். மூல சாஸனம் அளித்த சுதந்திரங்களை நாடு பெற்று உண்மை ஜனநாயகமாக வாழவே சுதந்திரக் கட்சி அமைத்துள்ளார்.

இந்தியாவில் உண்மையான ஜனநாயகம் நிலைபெறாவிடில், உலகிலேயே ஜனநாயக வாழ்முறைக்கு ஆபத்து நேரிடும். எனவே, ராஜாஜி சுதந்திரக் கட்சி தொடங்கி, நடத்தி வருவதன் மூலம் உலக முழுவதிலும் ஜனநாயகம் வாழ்வதற்கு வழி கண்டு வருகிறார். மக்களை சர்வாதிபத்தியத்தி லிருந்து விடுவித்து, விடுதலை வாழ்வுக்கு இட்டுச் செல்வதற்காக அவர் கட்சித் தலைமை தாங்கி வருவது அவரது தொண்டுகளுக்கு எல்லாம் சிகரமாகும்.

ராஜாஜி வெறும் அரசியல்வாதியோ, ராஜநீதி நிபுணரோ மட்டுமல்ல. அவர் உலகின் நிகழ்கால விவகாரங்களில் மட்டும் சிரத்தை கொண்டவரல்ல. மனித குலத்தின் அடிப்படைப் பிரச்னைகளான சாசுவத சத்தியங்களை ஆய்ந்து அறிவுரை கூறுபவர்.

கீதை கூறும் ஸ்திதப் பிரக்ஞனின் பூரண லக்ஷணமும் பொருந்தியவர் ராஜாஜி. இந்தியப் பண்பாட்டின் எல்லா அம்சங்களுக்கும் அவர் பிரதிநிதி. ரிஷிகளுக்கும், சமயாசாரியர்களுக்கும் ஒப்பானவர். கண்ணபெருமான் போல் உலக ஆசானாகவும், உலக ராஜநீதி நிபுணராகவும் ஒருங்கே விளங்குபவர். அவர் நீண்ட காலம் வாழ்ந்திருந்து தாம் விரும்பும் சுதந்திர சுபிட்ச வாழ்வு நாட்டில் ஸ்தாபிதமாகி, மக்கள் அனைவரும் எவ்வித மன மாறுபாடுகளுமின்றிச் சுத்தமான உள்ளத்தோடு தரும வழியில் செல்லும் நன்னாளைக் காண வேண்டும் என இறைவனிடம் பிரார்த்திப்போம்!

# கந்தன் கருணை

## 6. தவம் பலித்தது!

மன்மதன் இருந்த இடம் தெரியாமல் மறைந்து விட்டான்! சிவபெருமான் முன் போலவே மோனத் திருக்கோலத்தில் எழுந்தருளி விட்டார். தேவர்களின் உத்தேசமெல்லாம் வியர்த்தமாகி விட்டது! உள்ளம் கலங்கினுர்கள். கலக்கத்துக்குப் பின் தெளிவு பிறந்தது; விவேகமுண்டாயிற்று. 'பெருமானின் மோன நிலையை எதிர்ப்பு உபாயத்தினுல் மாற்ற முடியாது; பிரார்த்தனை ஒன்றுலேயே மாற்றமுடியும்' என்று அவர்கள் தெரிந்து கொண்டார்கள்.

கயிலை மலை கோபுரத்தின் அருகே வானவர்கள் நின்று கரங்களைக் கூப்பிப் பிரார்த்தித்தனர்.

''தேவர்களே! வருந்தாதீர்கள்! உங்கள் பொருட்டு, இமய மால்வரையில் தவம் புரியும் மரகதவல்லியை மணந்து துயரைக் களைகின்றேம்'' என்று சிவபெருமான் அருள்மொழி கூறினர்.

தேவர்கள் முறையிட்டுக் கொண்டவுடன், சிவபெருமான் அவர்களுக்கு அருள் புரிந்ததைக் கண்ணுற்ற ரதி தேவி, கண்ணுதற் கடவுள் முன் வந்து வணங்கி, ''தேவர்கள் தூண்டுதலால் தான் என் பதி மன்மதன் தங்கள் மீது மலர்க் கணைகளை ஏவி அழிந்தார். அவர் செய்த குற்றத்தை மன்னித்து எனக்கும் அருள் புரிய வேண்டும்'' என்று முறையிட்டுக் கொண்டாள்.

''குழந்தாய்! பார்வதியை மணம் புரியும் காலத்து மன்மதனை உயிர்ப்பித்துத் தருவோம்'' என்று சிவபெருமான் கருணைபாலித்தார். ரதி தேவி எம்பெருமானைப் போற்றிக் கயிலை மலைச்சாரல் சென்று உண்ணுமலும் உறங்காமலும் மாதவம் செய்யலானுள். மேகத்தின் வரவுக்காக எதிர்நோக்கி ஏங்கும் மயிலைப் போல் உமாதேவியாரின் திருமணத்தை எதிர்நோக்கினுள் ரதி.

உமாதேவியும் மேகத்தை நோக்கி ஏங்கும் மயில் போல ஐயனுக்காக [...]கித் தவமியற்றிக் கொண்டிருந்தா[...] ஏக்கங்களை நீக்கும் காலம் வந்த[...] சனகாதி முனிவர்க்கு மோன அ[...]வத்தை உணர்த்தி ஞானபோதனை[...] நிறைவுசெய்து, தக்ஷிணுமூர்த்தித் தி[...] கோலத்தினின்றெழுந்தார் ஐயன்.

கிழ அந்தணர் ஒருவர் அம்பாளி[...] தவச்சாலைக்குச் சென்றுர். தவச் சா[...]லையைக் காத்து நின்ற பெண்களிட[...] ''தவம் செய்யும் பார்வதியைப் பார்[...]தற்காக வந்தேன்'' என்று கூறினர்.

சேடிகள் உமாதேவியாரிடம் அவ[...] அழைத்துச் சென்றனர். கிழ வேதியர[...] திருநீறு பூசிய மேனியைக் கண்[...] பார்வதி, 'இவர் எம்பிரானுடை[...] அடியவர்' என்று பக்தியுடன் வ[...]பாடு செய்தார். அம்பிகையின் தோ[...] விசயை ஆசனம் ஒன்றைப் போட்[...] அதில் அந்தணரை அமர்த்தினுள்.

வேதியர் அம்பிகையை அன்புட[...] பார்த்து, ''சின்னஞ்சிறு வயதில் உ[...]



**திருமுருக கிருபானந்த வாரியார்**

அழகைக் கெடுத்துக் கொண்டும் உடலை வாட்டிக் கொண்டும் யாரைக் குறித்து மாதவம் செய்கிறாய் பெண்ணே ?'' என்று கேட்டார்.

பார்வதி விசயையைப் பார்த்து, "இவருக்கு நீ விடை சொல்'' என்று குறிப்பால் கண் காட்டினார். பத்தினிப் பெண்ணுக்கு நாயகன் பெயரைச் சொல்ல மட்டும் நாணமில்லை; அவனைப் பற்றிப் பேசுவதே நாணம். தேவி நமது பெண்மக்களுக்கே காட்டிக் கொடுத்த பண்பு இது.

''சுவாமி! பரமேசுவரரைக் குறித்து இவர்கள் தவம் செய்கிறார்கள்'' என்று விசயை கூறினாள்.

விசயை கூறியதைக் கேட்டவுடன் ஏதோ பெரிய விசித்திரத்தைக் கேட்டாற்போல் தொண்டு கிழவர் குலுங்கக் குலுங்கச் சிரிக்கலானார்.

''சுவாமி! ஏன் சிரிக்கிறீர்கள் ?'' என்று பார்வதி கேட்டார்

''பார்வதி! மாலும் அயனும் காண முடியாத அந்தக் கடவுள் உன் தவத்துக்கு இரங்கி வருவாரா? சந்திர மண்டலத்திற்கு ஏணி வைத்தால் எட்டிவிட முடியுமா? நீ வீணாக உடல்நலத்தையும், கட்டழகையும் பாழாக்கிக் கொண்டு தவம் செய்ய வேண்டாம். உன்னால் சிவபெருமானைக் காண முடியாது'' என்றார் அந்தணர்.

அந்தணரின் பேச்சு எம்பிராட்டிக்குக் கோபத்தை உண்டாக்கியது. 'அயனும், மாலும் போல் அகந்தையாலா ஆண்டவனை அடைய விரும்புகிறேன்? அன்பாலல்லவா அவனைப் பெற முயல்கிறேன்? அடியாரின் உள் அன்பினை ஆண்டவன் எப்படி மதிக்கிறான் என்பதை அறியாதவராக அல்லவா இருக்கிறார் இக்கிழவர் ?' என்று தேவி எண்ணிச் சினம் கொண்டார்.

''பெரியவரே! தங்களுக்கு வயதுதான் ஆகியதே தவிர அறிவு முதிர்ச்சி பெறவில்லை! என்னுடைய இத்தவத்தால் சிவபெருமானை அடைய முடியாது என்றால், அதனால் சிவபெருமானையும் விடுவதற்கில்லை ; தவத்தையும் விடுவதற்கில்லை. இப்போது நான் செய்யும் தவத்தின் தீவிரம் போதாது என்று கருதி அதனை மேலும் கடுமையாக்குவதே வழி. அதில் என் உயிரே போனாலும் சரி'' என்றார்.

முடிவிலாதுறை பகவன்என்
வேட்கையை முடியாது
விடுவன் என்னினும் தவத்தினை
விடுவனோ மிகவின்னம்
கடிய நோன்பினை அளப் பில
செய்துயிர் கழிப்பேன்நான்
நெடிது மூத்தலின் மயங்கினை
பித்தனோ நீஎன்றாள்



''இனித் தண்ணீரும் அருந்தாமல் தவம் செய்வேன்; ஒற்றைக் காலில் நின்று தவம் செய்வேன்; பஞ்சாக்கினி நடுவே தவம் செய்வேன்; ஆயிர மாயிரம் பிறப்புக்கள் எடுத்துத் தவம் செய்வேன்'' என்று அம்பிகை கூறினர்.

அம்பாளுக்கு எவ்வளவு உறுதி பாருங்கள்! பிள்ளை வரம் வேண்டி விரதம் இருக்கும் ஒருவன் ஐந்து கிருத்திகைகளில் முருகன் கோயிலுக்குச் சென்று வேண்டுதல் நிறைவேரு விடில் கோயிலுக்குச் செல்லுவதை நிறுத்தி விடுவான். அதற்கும் மேல் சுவாமியையே பழிக்கத் தொடங்கு வான்! ஆனல் அம்பாளோ, தவத்தின் பலன் கிடைக்காவிடின், அது முறைப் படி நோன்பு காக்காத தம் தவறே எனக் கருதினர் !

வைத்தியக் கல்லூரியில் இடம் பிடிப்பதற்குத் தகுந்தவரைப் பார்க் கவே இந்தக் காலத்தில் எளிதில் முடிய வில்லையே ! சுவாமியைப் பார்ப்பது அவ்வளவு சுலபமா?

''பெண்ணே! அது சரி, பரமேசு வரனை நோக்கித் தவம் செய்கிருயே, என்ன வரம் கேட்கப் போகிருய் ?'' என்று அடுத்தபடியாகக் கேட்டார் அந்தணர்.

''திருமணம்....'' என்று வெட்கத் துடன் கூறினர் அம்பிகை.

''பைத்தியக்காரப் பெண்!'' என்று ஏளனமாகச் சிரித்தார் அந்தணர். ''பெண்ணே! திருமணம் புரிந்து கொள்வதற்கு நல்ல மணப் பிள்ளையைத் தேர்ந்தெடுத்தாய். இடுகாட்டில் வேலை; பூதகணங்கள் பரிவாரம்; புலித் தோல் ஆடை உடுப்பவர்; பாம்பும், எலும்பும், பன்றிக் கொம்பும் ஆபரணமாய் அணி பவர்; உண்ணும் கலம் மண்டையோடு. உண்ணும் உணவோ ஆலகால விஷம். கிழக்காளையை வாகனமாகக் கொண்ட வர்'' என்று பலபடியாக அடுக்கிக் கொண்டே போனர்.

சிவ அபசாரத்தைத் தாங்காமல் தான் தாட்சாயணி உடல் துறந்து பார்வதியாகப் பிறந்தார். இந்த மறு பிறவியிலும் சிவ நிந்தையையே கேட்க நேர்ந்த தேவி துடிதுடித்தார். ''சுவாமி, ஏதோ விபூதி பூசியிருக்கிறீர்கள், உருத் திராட்சம் அணிந்திருக்கிறீர்கள், வய தில் பெரியவராயிருக்கிறீர்கள் என மரி யாதை செய்தேன். இனி உம்மிடம் பேசுவதும் பிழை. பொய் வேடம் பூண்டவரே! விரைவில் இங்கிருந்து போய் விடும்'' என்று பார்வதி ஆத் திரத்துடன் கூறினள்.

அந்தக் கிழ அந்தணரா போவா[r] முன்னிலும் கொடிய வார்த்தைகளை கூறினர் அவர். ''பெண் பாவாய் நான் உன் மீது மையல் கொண் மறை விதிப்படி மணக்கவே வந்தேன் என்னை 'இங்கிருந்து போ' என் சொல்லுவது முறையாகுமா?'' என்று

பார்வதி இரு செவிகளையும் பொ திக் கொண்டு விம்மி விம்மி அழுதாள் அவரைப் போகச் செய்ய முடியா என்று கண்டபின், ''நீர் இங்கிருந் போகாவிட்டால் நான் போகிறேன்'' என்று சொல்லிக் கொண்டே அ விடத்தை விட்டு எழுந்தாள்.

பார்வதியை அவர் விடவில்லை எப்படி விடுவார்? விடுபவரா யிருந்தா தமது மோன நிலையை விடுத்துக் கைல யத்திலிருந்து இவ்வளவு தொலைவு வ திருப்பாரா? ஆம், முன்னைப் பழ பொருட்கு முந்தைய சிவபெருமானே தான் அந்த முதியவர். 'வேதியா, வே கீதா' என்று போற்றப்படும் சோதிய தான் அந்த அந்தணர். வேதிய வ வத்தை நீக்கினர். சிவகணங்கள் சூழ்ந் துதிக்க ரிஷப வாகனத்தில் காட் கொடுத்தார்.

சிவபெருமானைக் கண்ட தேவியி ஆனந்த அநுபவத்தை நாம் எப்ப வருணிக்க இயலும்? அன்புப் புயலி அகப்பட்ட கொடியாக அவரது தி மேனி நடுங்கியது. நாணத்துடன் ப முறை ஆண்டவனை வணங்கினா ''எம்பெருமானே! தாங்கள்தாம் வந் சோதித்தீர்களா? தேவரீரது மாயை உணர முடியவில்லையே!'' என்று அ சயித்துக் கூறினர் உலகையெல்லா மாயை வாய்ப்படுத்தும் மகாதேவி ''சிவ அபவாதம் செய்யலாகாது என் சொல்லிய நானே தங்களை நிந்தித்து பேசிவிட்டேனே?'' என்று உள்ள உருகிக் கூறினர்.

**அலகிலா உணர்வால் எட்டாவாதி**
**நின்மாயை தேறேன்**
**புலனிலாச் சிறியேன் நின்னை யிகழ்ந்தவா**
**பொறுத்தி யென்ருள்**

''பார்வதி! நீ என்னிடம் சினந் பேசியவற்றை யெல்லாம் துதி என் கொண்டேன். உன்னைத் திருமண செய்து கொள்ள நாளை வருவேன். இனியும் தவம் செய்ய வேண்டாம் என்று கூறிச் சிவபெருமான் மறைந் விட்டார்.

பார்வதிக்குச் சிவபெருமான் காட் யளித்ததைத் தோழிகள் சிலர் இமவ னிடம் தெரிவித்தனர். இமவான் மிக மகிழ்ச்சி கொண்டு தன் மனைவி மே

# நிச்சயமாகத் தெரியுமா?

ஆம், கவர்ச்சி மிக்கவள்தான். அழகான ஆடை அணிந்திருக்கிருய்; படிப்பிலும் சுறுசுறுப்பானவளதான். ஆனுல் எளிதில் ஏற்றுக் கொள்ளப்படக் கூடியவள்தாளு என்பது நிச்சயமாகத் தெரியுமா?

உடலில் துர்நாற்றம் வீசும் கிருமிகளை உன்ஞல் தவிர்க்க முடியாது. ஆனுல் வழக்கமாக சிந்தால் உபயோகித்து அவைகளை அழித்து விடலாம். இந்தியாவில் அற்புதக் கிருமிநாசினி ஜி-11* கொண்ட ஒரே சோப் இதுதான். லட்சக்கணக்கான மக்கள் உபயோகித்து, பரிசீலனை செய்யப்பட்டது. உன்னுடைய பிராபல்யம் பெரிதும் அதைப் பொறுத்துத்தான் இருக்கிறது.

மகிழ்ச்சியூட்டும், நறுமணம் பொருந்திய சிந்தால் சருமத்தைக் கறைப்படுத்தும் கிருமிகளைக் கூட அழித்து விடும். அதஞல் மேனி மாசற்று விளங்கும்.



நிச்சயமான பாதுகாப்பிற்கு
குழந்தையை சிந்தால் சோப் கொண்டு நீராட்டி, துர்நாற்றம் போக்கும் இனிய மணம் கமழும், இதமான ஜி-11 அடங்கிய சிந்தால் டாய்லட் பவுடரைத் தூவித் தடவுங்கள்

* எல். ஜிவாடன் அண்டு கம்பெனியின் ட்ரேட் மார்க்

* விவரமான "ஜி-11 என்பது என்ன?" என்ற இலவச புத்தகத்திற்கு கோத்ரெஜ், பம்பாய்-12", என்ற விலாசத்துக்கு எழுதுங்கள்.




வியாவை நாற்றத்தைப் போக்கி எழிலுடன் விளங்கச் செய்யும் சோப்

Godrej கோத்ரெஜ் சோப்புகளில் முதன்மையான பெயர்

CT. 10A. TAM.

எங்கள் சிந்தால் சோப்பு வாங்குவோர்களுக்கு ஒரு விசேஷ சலுகை! சோப்பின் உறையில் அடங்கியுள்ள சலுகை கூப்பன் உங்களுக்கு ஒவ்வொரு சிந்தால் டாய்லட் பவுடர் டின்னின் விலையில் 30 பைசா சலுகை அளிக்கும்.

யுடன் தவமகளின் தவச்சாலேக்குச் சென்று பார்வதியைப் அரண்மனைக்கு அழைத்து வந்தான்.

சாமானிய மானுடர்கள் இயற்கை வேகங்களை விலங்கு போல் வெறித்துத் திரிய விடாமல் தரும சாஸ்திர வழிப் படி கட்டுப்பாட்டில் அடக்கி வாழத் திருமண வாழ்வே உபாயம். அவ்வாறு மனிதர் செம்மையான வாழ்வு வாழ வேண்டும் என்று காட்டவே எம்பெரு மான் அன்னையைத் திருமணம் செய்து கொள்ளத் திருஉள்ளம் கொண்டார். மாணவனுக்குக் கற்றுத் தருவதற்காக ஆசிரியர் எழுத்துக்களைக் கூட்டிப் படிப் பதால் அவருக்கே படிக்கத் தெரிய வில்லை எனலாமா? அதேபோல், நம் பொருட்டுத்தான் சிவபெருமான் பார் வதி தேவியை மணந்து காட்டினரே யன்றி மையலும் பௌதிக உறவும் வேண்டியல்ல. தேவியார் விநாயக னையோ, ஷண்முகனையோ கருத்தரித் துப் பெற்றூர் என்று இதுவரை வர லாறு இல்லை. சிவபெருமான் என்றைக் கும் பிரம்மசாரி; எம்பிராட்டி என் றைக்கும் கன்னி. ஐயன் ஞானகரன்; தேவி ஞானும்பாள்.

இப்படிப்பட்ட இருவரில் இன்று சிவ பெருமான் மணமகன்; பார்வதி மண மகள். மணமகனின் உறவினர் போய்த் தானே பெண் பேச வேண்டும்? சிவ பெருமான் சப்தரிஷிகளை அந்த ஸ்தா னத்தில் எண்ணினர். இதிலிருந்து அவர்களின் பெருமை தெரிகிறது. சப்த ரிஷிகள் இமயவெற்படைந்தனர்.

''அகிலாண்ட கோடியீன்றும் கன்னி யென மறை பேசும் மரகதவல்லியை மூவர்க்கும் முதல்வராகிய முக்கட் பரமர்க்கு மணம் செய்து கொடுத்து என்னையும் அடிமையாகத் தருவேன்'' என்று இமவான் அவர்களிடம் கூறினன்.

ஆனல்..... அவன் அருகில் நின்ற மேனையின் தாயுள்ளம் பார்வதியைச் சிவபெருமானுக்குத் திருமணம் செய்து கொடுக்க வேண்டும் என்று கிட்டிமுட்டி வந்தபோது தயங்கியது. ''கல்யாணத் துக்குத் திடீரென்று ஒப்புக் கொள்ளக் கூடாது. அவசரமில்லாமல் நிதான மாகத்தான் இந்த விஷயத்தில் முடிவு செய்ய வேண்டும்'' என்று இமவா னிடம் கூறினள்.

இமவான் காரணம் கேட்ட பின் அவளால் கூறாது இருக்க முடியவில்லை.

''அவர் முன்பு தட்சன் மகளை மணந்த பின்பு, அவளை விட்டு மாமனர் தலையை அறுத்துவிட்டார் என்று பேசிக் கொள்கிறூர்களே!'' என்று இழுத்தாள். அவளது கற்பு அப்படிப் பேசிற்று.

ஏழு முனிவர்களும் மேனையை நோக்கி, ''பரமேசன் கருணைமூர்த்தி. தட்சன் சிவநிந்தை செய்ததால் அவன் தலையை அறுத்தார். வழிபடுவோர்க்கு அறக் கருணையும் அல்லாதார்க்கு மறக் கருணையும் செய்பவர் அவர். பரமபக்த ஞன இமவானைப் பற்றி ஏன் கவலை?'' என்று ஆறுதல் கூறினர்கள்.

''தவசிரேஷ்டர்களே! உமாதேவி யைத் திருமணம் செய்துகொள்ள விரை வில் வரும் வண்ணம் சிவமூர்த்தியிடம் தெரிவியுங்கள்'' என்று இமவான் கூறினன்.

ஏழு முனிவர்களும் திருமணத்துக்கு இமவான் இசைவு தந்ததைப் பெரு மானிடம் தெரிவித்தபின் தத்தம் இருப் பிடம் சென்றனர்.

இமவான் தேவதச்சனை வரவழைத்து ''நம் ராஜகுமாரி பார்வதியின் திரு மணத்துக்காக நமது தலைநகரம் ஔஷதி ப்ரஸ்தத்தை இந்திரலோகம்போல் அலங் கரிப்பாயாக'' என்று கட்டளையிட்டான்.

தேவதச்சன் இமயமலையின் மேல் பல கோபுரங்களையும் மன்றங்களையும் நிலைத் தேர்களையும், வீதிகள்தோறும் பூம்பந்தர்களையும், உண்டாக்கினன். வாழைகளும் கமுகுகளும் தோரணங்க ளும் நாட்டினன்.

பூந்தடாகம், பொற்சிகரம் முதலிய வற்றை உண்டாக்கினன். ஒருபுறத்தே பதினயிரம் யோசனைப் பரப்பில் ஒரு புரிசையை உண்டாக்கி அதன் நான்கு வாயில்களிலும் நான்கு கோபுரங்களை அமைத்தான். மையத்தில் செம்பொன் னலாகிய திருமண மண்டபம் அமைத் தான். பார்வதியும் பரமேசுவரனும் எழுந்தருளுவதற்காக இந்திர நீலக் கற் களினல் ஒரு சிம்மாசனமும், மற்றோர் வீற்றிருக்க ஆசனங்களும் அமைத்தான்.

நகர் முழுதும் கவினுற அலங்கரிக் கப்பட்டு நறுமணம் கமழும் மலர்கள் தூவப்பட்டன.

தேவர் கூட்டங்களும் முனிவர் கணங்களும் இமய மலையில் எள் விழ இடமின்றிக் கூடின. மேரு முதலிய மலைகளும், கடல்களும், நாகங்களும், திக்கு யானைகளும் பிறவும் வந்தன. இலக்குமி, சரஸ்வதி, இந்திராணி முனி பத்தினிகள், துர்க்கை, காளி, சப்த நதிகள், அரம்பையர் முதலானேர் தேவிக்கு மணக் கோலம் செய்தனர்.

இமவான் தன் சுற்றத்தாருடன் திருக் கயிலாய மலை சென்று, நந்தி

தேவர் அனுமதியுடன் உள்ளே சென்றான். சிவபெருமானை வணங்கி, ''எம்பெருமானே! அகிலாண்ட நாயகியைத் திருமணங் கொள்ளத் திருவுளம் கொண்டருளினீர்கள். சோதிட வல்லுநர்கள் மங்கல தினம் எனக் கூறிய பங்குனி உத்திர நாள் இன்றேயாகும். உமையைத் திருமணம் புரிய இன்றே என் நகருக்கு எழுந்தருள வேண்டும்'' என்று வேண்டிக் கொண்டான். ''வரம்பில்லாத கணங்கள் சூழ நாம் இப்பொழுதே உன்னிடத்துக்கு எழுந்தருளுவோம். நீ முன்னே செல்வாயாக'' என்று கூறிச் சிவபெருமான் இமவானை அனுப்பினர்.

''நம்முடைய திருமணக் கோலத்தைத் தரிசிக்கும் பொருட்டு உருத்திர கணங்களையும், திருமால், பிரமன், இந்திரன் முதலிய தேவர்களையும், ஏனையோரையும் இங்கே வரும்படி செய்வாய்'' என்று சிவபெருமான் நந்தி தேவரை நோக்கிப் பணித்தருளினர். நந்திதேவர் நினைத்த மாத்திரத்தில் காலாக்கினி ருத்திரர், கூச்மாண்டேசர், ஆடகேசர், வீரபத்திரக் கடவுள், மகா சாத்தனர், ஏகாத்ச ருத்திரர்கள், உருத்திர கணங்கள், பவர் முதலிய அஷ்ட மூர்த்திகள் ஆகியோரும், குண்டோதரன், கண்டாகன்னன், பிஞகி, பானுகம்பன், சங்குகன்னன் முதலிய சிவபூத கணத் தலைவர்களும், அவர்களுடைய பலகோடி பூதங்களும், திருமால், பிரமன், திக்குப்பாலகர் முதலிய தேவர்களும், சூரியன், சந்திரன் முதலிய கிரகங்களும், நட்சத்திரங்களும், சப்த மாதர்களும், அஷ்டவசுக்களும், வித்தியாதரரும், முனிவர்களும் பிறரும் ஏழு கடல் திரண்டதென வந்து நின்றனர்.

பிரம தேவர், மணக் கோலத்துக்கேற்ற மணி மகுடம் முதலிய திவ்விய ஆபரணங்களை எம்பெருமான் முன் படைத்து வணங்கி நின்று, ''எந்தையே! தங்களுக்கு விருப்பும் வெறுப்பும் இல்லை. அடியேங்கள் உய்யும் பொருட்டே திருக் கல்யாணம் செய்து கொள்ள இசைந்தீர்கள். அதே போல் அடியேங்களின் விருப்பத்தைப் பூர்த்தி செய்யவே தங்கள் திருமேனியில் உள்ள பாம்பு, பன்றிக் கொம்பு, சிரமாலை, ஆமையோடு முதலியவைகளை நீக்கி, இந்த இரத்தினபரணங்களை அணிந்தருள வேண்டும்'' என்று விண்ணப்பித்தார். பொன்னூர் மேனிப் புரிசடைக் கடவுள் புன்முறுவல் கொண்டு திருமேனியில் உள்ள பாம்பு, எலும்பு முதலியன இரத்தினபரணங்களாகும்வண்ணம் திருவுளம் கொண்டார். இறைவன் எண்ணியவுடன் அவைகள் அவ்வாறாயின. அதுகண்ட பிரமன் முதலிய யாவரும் அற்புதமடைந்து அஞ்சலி செலுத்தினர்கள். திரிபுர தகனத்தில் தேவர்கள் சித்தம் செய்த உபகரணங்களை உதறிவிட்டுத் தமது சக்தியாலேயே வென்ற பெருமான் இப்போதும் தேவரின் காணிக்கைக்கும் மேலான அணிகளைத் தாமே படைத்துக் கொண்டார்.

சிவபெருமான் தமது இருக்கைவிட்டு எழுந்து புறப்பட்டார். நந்தித் தேவர் துதித்து முன் செல்ல, அருந்தவரும் அமரரும் புகழ, விஞ்சையர் இசைபாட, வேதாகமங்கள் வியந்து துதிக்கச் சிவபெருமான் தமது திருவடிகளைக் கும்போதரன் புயமீது வைத்து, இடபத்தின் மீது ஏறியருளினர். இக்காட்சியைக் கண்ட அனைவரும் களித்துக் கடல் போல் 'ஹர ஹர' என்று ஆர்த்து அஞ்சலி செய்தனர். ஐந்நூற்றேழு கோடி பூதங்கள் சூழ விநாயகர் வந்து வணங்கி முன்னே சென்றருளினர்.

சந்திரசூரியர் தண்ணிழற்குடையையும், வாயு சமாரத்தையும், வருணன் சாந்தாற்றியையும், அமரர்கோன் ஆலவட்டத்தையும் தாங்கி உடன் சென்றனர். பூதங்கள் பற்பல இன்னிசைக் கருவிகளைக் கடல் ஒலிபோல் முழக்கின; இறைவன் ஏவலினாலே அரிஅயனாதி அனைவர்களும் தத்தம் ஊர்திகளின் மேல் புடைசூழச் சென்றனர். சிவபெருமான் திருக்கயிலாய மலையை அகன்று இமவான் நகரை அடைந்தார். **(தொடரும்)**

### மூட்டையும் முடிச்சும்!

இந்தியா விடுதலை பெறுமுன்பு நடந்த காங்கிரஸ் மகாநாடொன்றுக்கு மௌலானா முகம்மது அலி சென்றிருந்தார். மகாநாட்டில் பேசியவர்களெல்லாம் ஆங்கில ஆதிக்கத்தை வன்மையாகக் கண்டித்தனர். அப்போது பேசிய பிபின் சந்திரபால் ''வெள்ளையர்கள் இந்த நாட்டை விட்டு மூட்டை முடிச்சுகளுடன் வெளியேற வேண்டும்'' என்று முழங்கினார். கூட்டத்திலிருந்த மௌலானா ''என்ன, மூட்டை முடிச்சுக்களுடனா அவர்களைப் போகச் சொல்கிறீர்கள்?'' என்று கத்தினார். எல்லோரும் அவரையே பார்த்தனர். அவர் உடனே, ''மூட்டை முடிச்சுக்கள் நம்முடையவையல்லவா?'' என்றாரே, பார்க்கலாம்.



உண்மை!
ஒரு கிராங்க்ஷாப்ட்
புதுப்பித்து
1,200 ரூபாய்
மிச்சம்!



# ...ர்மிய மொழியில் வள்ளுவர்

சா. கணேசன்

நவம்பர் பதினைன்காம் தேதி. ...ங்கூன் ராமகிருஷ்ண மிஷன் மண்டபம் ...ரே ஜனத்திரளாகக் காட்சி தந்தது. ...ர்மிய—இந்திய அரசாங்க அதிகாரிகள், ...ர்மிய பிட்சுக்கள், இந்திய சந்நியா...கள், எழுத்தாளர்கள், பத்திராதி...ர்கள், பல துறை ஆசிரியர்கள் இப்படி ...ாகக் குறிப்பிடத்தக்கவர்கள் கூடியிருந்...ார்கள். பர்மா தனவைசியர் கல்விக் ...ழகம் திருக்குறளைப் பர்மிய மொழியில் ...வளியிடுகிறது. அதில்தான் இந்தக் ...ண்கொள்ளாக் காட்சி.

கழகத் தலைவர் திரு கே. சுப்பிர...ணியன் செட்டியார் தலைமையில் இந்...யத் தூதுவர் நூலை வெளியிட்டு முதற் ...ரதியைப் பௌத்த பிட்சுவிடம் ...ளித்து, ''இங்கு நான் பங்கு பெறும் ...வபவங்களிலே இதற்கு நிகர் வேறென் ...ல்லை'' என்று நீண்டதோர் உரை ...கழ்த்தினர்.

திருக்குறளைப் பர்மிய மொழியில் ...பயர்த்த ஊமியோ தாண்ட் அவர்கள் ...பான்னாடை போர்த்திக் கௌரவிக்...ப்பட்டார்.

பர்மா பத்திரிகையாளர் சங்கத் தலைவர் ஊ பா பே, பிரபல எழுத்தாளர் டாக்டர் மவுங் பியூ, தமிழர் சங்க முன்னாள் தலைவர் திரு எஸ். லட்சுமணன் ஆகியோர் மொழிபெயர்ப்பாளரையும் மொழிபெயர்த்து இலவசமாக வழங்கும் தனவைசியர் கல்விக் கழகத்தையும் பாராட்டிப் பேசினர்கள்.

பர்மாவிலிருந்து தமிழர்கள் வெளியேற்றப்பட்டாலும், ''இன்னா செய் தார்க்கும் இனியவே செய்யாக்கால் என்ன பயத்ததோ சால்பு'' என்ற வள்ளுவர் கட்டளைப்படியே தமிழர்களின் அறப்பெரும் நூலான திருக்குறளைப் பர்மியர்கள் அனைவருக்கும் உரிமையாக்கிக் கொடுத்த இந்த அருமைப் பணியை எவ்வளவு பாராட்டினாலும் தகும்.

இன்னும் பல அருமையான தமிழ் நூல்களையும் பர்மியர்கள் கற்று நல் வாழ்வு பெறத் தனவைசியர் கல்விக் கழகம் உதவ வேண்டும் என்று கூறி வாழ்த்துகிறோம்.

...ங்கூன் ராமகிருஷ்ண மிஷன் மண்டபத்தில் திருவள்ளுவர் பெருமானின் திருவுருவம் ...றந்துவைக்கப்பட்டது. விழாவில் பர்மா பத்திரிகையாளர் சங்கத் தலைவர் ஊ பா பே ...லந்துகொண்டார். திருக்குறளைப் பர்மிய மொழியில் ஆக்கித் தந்த ஊமியோ தாண்ட் பொன்னாடை போர்த்திக் கௌரவிக்கப்பட்டதும் நன்றி உரை நிகழ்த்துகிறார்.






## 7. திருக்கல்யாணம்

இமவான் தன் சுற்றத்தாருடன் சுவாமியையும், பரிவாரங்களையும் எதிர்கொண்டு வரவேற்று வணங்கினன். தனது தலைநகரமான ஔஷதிப்பிரஸ்தத்திற்கு அவர்களை அழைத்தேகினன். இருடிகள் பலர் பூரண கும்பங்களை ஏந்திக் கொண்டு வந்தார்கள்; மகளிர் வட்டமங்கலங்களைக் கொண்டு வந்து காட்டினர்கள்: நீராஜனம் சுற்றினர்கள்.

ஐயன் மாப்பிள்ளைக் கோலம் கொண்டு மனம் கவரும் சௌந்தரியத்தோடு வீதி வழியே வந்த விமரிசையைக் கச்சியப்பர் கற்கண்டான கவிதைகளால் வருணிக்கிறார். திவ்விய வஸ்திரமும், திரு ஆபரணங்களும், மணக்கும் சந்தனமும், மாமலர் மாலைகளும் அணிந்து வரும் ஐயனைக் கண்டு இந்த ஆடைகளும், அணிகளும் சாந்துப் பூச்சும், சுகந்தப் பூக்களும் அவரது திருமேனியின் அழகை மறைத்துத் தொலைக்கின்றனவே என்று கண்டோர் வருந்துகிறார்களாம்:

நிறைத்த பூண்களும்
  நேர்ந்த பொன்னுடையும்
நறைத்த சாந்தமும்
  நாண்மலர்க் கண்ணியும்
பிறைத்தி ருச்சடைப்
  பிஞ்ஞகன் பேரெழில்
மறைத்த தென்று
  மனம் தளர்வார் சிலர்

மணக் கோலத்தில் மாப்பிள்
பார்க்க வேண்டும் என்று மா
விரும்புவது இயற்கையல்லவா?
பிள்ளை அழைப்பின்போது மரு
காணத் துடித்தவாறு உப்பரி
நின்று கொண்டிருந்தாள் மேனை.
நாரதர் சென்றார்.

''ஊர்வலத்தில் அதோ பூத
களுக் கிடையே சிவப்பாய் வரு
அவர்தானே மாப்பிள்ளை?''
கேட்டாள் மேனை.

''நன்றாக இருக்கிறது.
செடியைப் பார்த்துக் க
என்று கேட்டாளாம் ஒருத்தி. அ
மாப்பிள்ளை'' என்றார் நாரதர்.

பூத கணங்களை அடுத்து ஊர்வலத்தில் மற்றொரு திருக் கூட்டம் வந்தது. அந்தக் கூட்டத்தைக் கண்ட மேனை ''நாரதரே! அங்கே கூட்டத்தின் மத்தியில் வருகிறாரே, அவர்தானே மாப்பிள்ளை?'' என்று கேட்டாள்.

''நன்றாயிருக்கிறது! காடித் தண்ணீரைப் பார்த்து, அதுதான் காமதேனுவின் பாலா என்று கேட்டாளாம் ஒருத்தி. அவரல்ல அம்மா மாப்பிள்ளை. அவர் உருத்திரர்.''

அதையடுத்து மற்றொரு திருக் கூட்டம் வந்தது. அந்தக் கூட்டத்தைக் கண்ட மேனை, ''நாரதரே! அந்தக் கூட்டத்தில் அதோ வருகிறாரே, அவர்தானே மாப்பிள்ளை?'' என்று கேட்டாள்.

''மாட்டுக் குளம்பு நீரைப் பார்த்து மகா சமுத்திரம் என்றாளாம் ஒருத்தி. அதுபோல் அல்லவா இருக்கிறது உங்கள் கேள்வி. அவர் மாப்பிள்ளை அல்ல; ஸ்ரீகண்டருத்திரர்.''

கடைசியில் சிவபிரானே மாப்பிள்ளைக் கோலத்தில் வந்தார். அவரைப் பார்த்த மேனை, 'இவர்தானே மாப்பிள்ளை?' என்று கேட்கவில்லையாம்; தானாகவே புரிந்து கொண்டாளாம்.

உண்மையைக் காணுமளவும் எது மெய், எது பொய் என்று சந்தேகம் தோன்றிக் கொண்டே இருக்கும்; சத்தியத்தைத் தரிசித்தவுடனே சந்தேகம் மறைந்து விடுகிறது. உண்மைக்கு அத்தாட்சி வேறெங்கோ இல்லை; அதிலேயே இருக்கிறது.

திருமணச்சாலை வந்தவுடனே சிவபெருமான் இடபம் விட்டு இறங்கியருளினார். மேனை அரம்பையர்களோடு வந்து எம்பெருமானுடைய இணையடிகளைக் காமதேனுவின் பாலினால் அபிடேகம் செய்து வணங்கிச்



சென்றாள். சிவபெருமான் திருநந்தி தேவர் கொண்டு வந்து வைத்த பாதுகையின் மேல் தமது தங்கத் திருவடிகளை வைத்தார். இரு புறத்தும் திருமாலும் பிரமாவும் மாப்பிள்ளைத் தோழர்களாகக் கைகொடுக்க, அரனார் தம் திருக் கரங்களால் அவற்றைப் பற்றிக் கொண்டார். மங்கல வாத்தியங்கள் ஒலிக்க, கணங்கள் ஆரவாரிக்க எம்பெருமான் திருமணக் கோயிலினுட் சென்றார். ஆங்குள்ள அழகுகள் அனைத்தையும் திருநந்தி தேவர் விளக்கிக் காட்டச் சிவபெருமான் பார்த்து மகிழ்ந்தருளினார்.

பின்னர் எம்பெருமான் திருமண மண்டபத்தினுட் சென்று தமக்கென அமைக்கப் பட்டிருந்த இந்திர நீல மணித்தவிசின் மீது வீற்றிருந்தருளினார். யாவரும் நன்கு காணப் பொது இடத்தில் பெருமான் பொருந்திய அருளை எண்ணிய கச்சியப்பர், மறைகளுக்கும் மறைந்து நிற்பவர் எல்லார்க்கும் பொதுவில் எழுந்தருளினார் என்கிறார். அவருடன் அரி, அயன், ஆகண்டலனாதி அமரர்களும், முனிவர்களும் தத்தம் ஆசனத்தில் சூழ்ந்து அமர்ந்திருந்தார்கள்.

பார்வதி — பரமேசுவரன் திருமண வைபவம் காண, எல்லாப் புவனங்களில் உள்ளவர்களும் வந்து கூடினதால் இமய மலை வருந்தி நடுங்கியது. பூமியின் வடகோடு தாழ்ந்து, தென்கோடு உயர்ந்தது. தேவர் முனிவர் யாவரும் அதனைக் கண்டு அஞ்சி, சுவாமியிடம் பிரார்த்தித்தனர். எம்பெருமான் புன்னகை புரிந்தார். அகத்திய முனிவரை அழைத்து வருமாறு நந்தித் தேவருக்குக் கட்டளையிட்டார். அகத்தியர் உடனே வந்து வணங்கி நின்றார்.

''அகத்தியனே! எல்லோரும் இங்கு வந்து கூடினதால் வட கோடு தாழ்ந்து தென் கோடு உயர்ந்து விட்டது. இதனால் சுவர்க்கம் மிகவும் தாழும். மேரு மலையும் நிலை தவறும். இதனைச் சமன் செய்ய நீ உடனே தென்னாட்டில் உள்ள பொதிய மலைக்குச் செல்'' எனச் சிவபெருமான் பணித்தார்.

அகத்தியர் உருவில் சிறியவராயினும் உள்ளூற அவ்வளவு பலம் படைத்திருந்தார். ஆயிரம் பொதி பஞ்சின் நிறையை ஒரு சிறு தங்கக் கட்டி ஈடு செய்வது போல், ஆன்மாக்கள் அடங்கலாகப் பிரபஞ்சம் முழுவதற்குமுள்ள நிறையை அகஸ்தியர் ஒருவரே பெற்றிருந்தார். உலகமெங்கும் நிறைந்த உறு பொருளை உள்ளத்தில் வைத்திருந்ததால் தான், இவ்வளவு நிறை பெற்றிருந்தாரோ? அவரது தவத்தின் நிறை அது? அல்லது அவர் தந்த தமிழ் நிறையோ?

பெருமான் ஆணையைக் கே அகஸ்தியர் பெருமை கொள்ளவில் மனம் வருந்தி, ''பரம கருணாநிதி அடியேன் என்ன குற்றம் செய்தே தங்கள் திருமணக் காட்சியைக் கா வேண்டாமா?'' என்று வேண்டினார்.

''நீ சற்றும் தயங்காது பொதி மலை செல். நாம் அங்கு வந்து நம் திருமணக் கோலத்தைக் காட்டுவோம் நீ மகிழ்ந்து தரிசிக்கலாம்'' என் சிவபெருமான் கூற, அகத்தியர் இ வன் திருவடிகளை வணங்கி, துதித் தென் திசையை நோக்கிச் சென் பொதிய மலையை அடைந்தா பூமி சமன் ஆகியது. ஆன்மாக்கள் அல்லல் நீங்கியது.

இமவான் உமையை அழைத்து மாறு ஏவினான். தேவ மாதர் ப செய்யப் பார்வதி தேவியார் ம மண்டபம் எய்தினர்.

அங்கது பொழுது தன்னில்
அரசன்திசைவா லெங்கள்
சங்கரி ஐயை காப்பச்
சசியென்பா ளடைப்பை யேந்த
கங்கைகள் கவரி வீசக்
காளிகள் கவிகை பற்றப்
பங்கய மான்கைப் பற்றிப்
பாரதி பரவ வந்தாள்

ஐயையாகிய துர்க்கை காக்க, யாகிய இந்திராணி தாம்பூலம் தா வானுலகிலும் மண்ணுலகிலும் பா ளத்திலும் பாயும் மூன்று கங்கை சாமரம் வீச, காளிகள் குடை பிடி இலட்சுமி கைகொடுக்க, சரஸ் துதிக்கப் பார்வதி தேவி எழுந்த வந்தார். சிவபெருமானின் திருவடி வணங்கினார்.

''தேவி! நம் பக்கத்தே இரு கடவாய்!'' என்று தேவ தே தேனாகப் பணித்தருள, பார்வதி தே எம்பெருமான் பக்கத்தில் எழுந்த னார். மேனை கரகத்தினின்று வார்க்க, இமவான் சிவபெருமான் வடிகளை விளக்கி, சந்தனத்தாலும் மலராலும் பூசித்து, உமா தே ரின் கர மலரை இறைவன் தி கரத்தில் வைத்து, ''அடியே புதல்வியைத் தங்கட்குத் தந்தே என்று தாரா தத்தம் செய்தான்.

அரம்பையர் ஆடினர்; சித்தர் கந்தர்வர்களும் தும்புரு நார இசை பாடினர்; தேவர்களும் வர்களும் வேதம் ஓதினர். இவ




புதுமுறையில் உருவாகிய

# ஸன்லைட்

## சலவையிலே அதிக ஒளி தருகிறது

புதுமை பூண்டு வருகிறது புதுமுறையில் உருவாகிய ஸன்லைட்: அதி நூதனமா
புது மேலுறை, புத்தெழில் வடிவம். எல்லாவற்றிற்கும் மேலாக, அதிக ஒளித
ஆற்றல் ... சலவைக்கு சலவை அதிக ஒளி ;.. வெளுக்க வெளுக்க அதிக வெ
மை, அதிக ஒளி!

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு

யும், சரஸ்வதியும் மங்கலப் பாடல் ஓதினர்; பூதர்கள் நான்குவித வாத்தியங்களை முழக்கினர்; விண்ணவர் தண்மலர் சொரிந்தனர். இமவான் பசும்பால், நெய், தேன், மா, கதலி, பலா முதலியவற்றை ஒரு பாத்திரத்திலிட்டுத் திரு அமுது செய்யும்படி இறைவனை வேண்டினன். கண்ணுதற் கடவுள், மகிழ்ந்து, ''நாம் இவற்றை அமுது செய்தாற்போல் உவந்தோம்; நீ எடுத்துக் கொள்வாய்'' என்று தம் திருக் கரத்தினால் தொட்டுத் திருவருள் புரிந்தார். இமவான் அந்த திருமாலியத்தைக் கொண்டு போய், மலர் சந்தம், நீர் இவற்றோடு ஒரு புறத்தில் சேமித்து வைத்தான்.

பிரம தேவர் சிவபெருமானை வணங்கினார். ''தேவ தேவ! விண்ணவரும் மண்ணவரும் மண விதியை உணர்தற் பொருட்டு, சர்வ லோக நாயகராகிய தேவரீர் அடியேன் சாஸ்திரோக்தமாகத் திருக்கல்யாணம் நடத்தி வைக்க அனுமதி தரவேண்டும்'' என்று வேண்டிக் கொண்டார். முக்கண்ணர் முறுவல் செய்து அதற்கு அனுமதி யளித்தார்.

வியாழ பகவான், சுக்கிராச்சாரியார் முதலியோர் அருகே சூழ, மணச் சடங்குகளை நடத்தப் பிரமதேவர் புரோகிதராக அமர்ந்தார். மண வினைக்கு மஞ்சள் பிள்ளையார் பிடித்து வைக்கவில்லை. சாட்சாத் விநாயகரே வந்து அமர்ந்தார். ஒரு புரட்சிக் கல்யாணம். தாய் தந்தை திருமணத்தில் பிள்ளையே வந்து உட்கார்ந்திருந்தான். என்றுமுள்ளவன் அல்லவா கணநாதன்? அவனைச் சிவகுமாரன் என்றும் உமை மைந்தன் என்றும் சொல்வது அவனது ஞானம், கருணை இவற்றின் பெருமைக்காகவே அன்றோ?

மணவினைச் சடங்குகள் இனிது முடிந்தன. உலகையெல்லாம் கைவிடாது காக்கும் அகிலாண்ட நாயகியை எம் பெருமான் கைப்பற்றினார்.

தேவர்கள் பூமாரி பொழிந்தனர். இமவான் பொன் மழை பொழிந்தான். பிறகு தேவியை அம்மி மிதிக்கச் செய்து அருந்ததி காட்டி அனுக்கிரகம் புரிந்தார் பகவான். இமவான், அவ்விருமாலியமாகிய தீர்த்தம், சந்தனம், மலர் முதலியவற்றை அனைவர்க்கும் வழங்கினான். அனைவரும் அவற்றை உள்ளன்போடு பெற்று உட்கொண்டுஅணிந்துபெருமகிழ்வுற்றார்கள்.

சிவபெருமான் திருமணம் புரிந்த திருக்கோலத்தில் பார்வதி தேவியுடன் வீற்றிருந்தார். கணவனை இழந்த ரதிதேவி, சிவபெருமானிடம் வந்து வணங்கினாள். ''சுவாமி! தேவரீர் அம்பிகையோடு கூடி வீற்றிருப்பதால் நான் என் கணவனை அடையுமாறு அருள் புரிய வேண்டும்'' என்று வேண்டினாள். அருளைப் பெறுவதற்கு எப்பேர்ப்பட்ட அருமையான சந்தர்ப்பத்தைத் தேடி எடுத்தாள், பாருங்கள்!

சிவபெருமான், மன்மதன் வந்து தோன்றுமாறு தம் திருவுளத்தில் சிந்தித்து அருள் புரிந்தார். ரதிதேவி எல்லையில்லா மன மகிழ்ச்சி பெற, எரிந்து போன மன்மதன் மீண்டும் அங்கு வந்து தோன்றினான்.

நன்மை மட்டுமுள்ள வானுலகைச் சேர்ந்த தேவர்கள் நன்மையிலேயே கவனமாயிருப்பதால் முக்திக்கு முயல்வதில்லை; இறைவனையும் நினைப்பதில்லை. இதற்காகவே அசுரர்களைக் கொண்டு அவர்களைத் துன்புறுத்தி ஆண்டவன் அவர்களைத் தம்பாற் படுத்திக் கொள்வார். மண் உலகிலோ இத்தகைய வெளிப் பகையோடு, உட்பகையாகிய ஆசை முதலிய தீமைகளும் உள்ளன. தீமையை விலக்குவதற்காகத் தெய்வ அருள் நாடப்படுகிறது. அதில் பிறக்கும் ஞானத்தினால், அதன்பின் தீமை நன்மை இரண்டுக்கும் அப்பாற்பட்ட திருநிலைக்கு முயற்சி செய்யப்படுகிறது. ஆகவே உலகம் உள்ளளவும் அதில் தீமையும் இருந்து, உலக வாழ்வின் மாயத் தன்மையை நினைவூட்டிக் கொண்டேதான் இருக்கும். இதனால்தான் போலும், எரிந்து போன ஆசைத் தீமையை மீண்டும் எம்பெருமான் உயிர்ப்பித்தார்.

இறைவனை வணங்கினான் மதனன். ''கிருபாநிதியே! அடியேனது குற்றத்தைப் பொறுத்தருள்க'' என்று துதித்தான். எம்பிரான் மன்மதனை நோக்கி, ''நீ ரதியின் கண்ணுக்கு மட்டும் தெரியும் மன்மதனாகவும் மற்றவர் கண்ணுக்குத் தெரியாத அனங்கனாகவும் (அங்கமில்லாதவன்) விளங்குவாய். உண்மையான சிவனடியார்பால் உன் ஆட்சி செல்லாது. மற்றவர்பால் செல்லும்'' என்று அவனுக்குரிய அரசையும் ஆற்றலையும் தந்து கருணை பாலித்தார். மன்மதன் சிவபெருமானின் அருளைப்பெற்று வணங்கி, ரதி தேவியுடன் தனது நகரத்துக்குச் சென்றான்.

சிவபெருமான் உமாதேவியோடு மணத்தவிசினின்று எழுந்து, மறை ஒலியும் மங்கல முழவும் முழங்க விடை பெற்று விடையின் மீது எழுந்தருளித் திருக்கயிலாய மலையடைந்தார். உடன் வந்தோருக்கெல்லாம் விடைகொடுத்து அனுப்பி விட்டு, திருக்கோயிலினுட் சென்று உமாதேவியுடன் அரியணையில் வீற்றிருந்தார்.

இப்படிச் சொல்வதால் சக்தி வேறு; சிவம் வேறு என்று கொள்ளக் கூடாது. சக்தியும் சிவமும் ஒன்றேதான். சக்தி புலப்படும்; சிவம் புலப்படாது. மனிதனுடைய உடல் சக்தியும் சிவமும் சேர்ந்ததுதான். உடம்பில் உள்ள சூடு சிவம்; தட்பம் சக்தி. சக்தியும், சிவமும் சேர்ந்தால்தான் எச்செயலும் எவ்வடிவும் தோன்றும். அதனுல்தான் அவற்றின் சேர்க்கையைத் திருக்கலியாணம் எனச் செய்து காட்டுகிருர்கள்.

ஆன்ம சம்பந்தமான திருமணம் புரிந்து கொண்ட ஈசனும் தேவியுமான மணமகனும் மணமகளும், இருவருமே முன்போலத் தவநிலையில் ஒடுங்கி விட்டார்கள்.

பார்வதி தேவியாரது திருமணம் நிகழ்ந்து பற்பல நாட்கள் சென்றும் இறைவன் ஒரு குமரனைத் தந்தருளாது இருத்தலைக் கண்ட திருமால், திசைமுகன், இந்திரன், திக்குப் பாலகர்கள் முதலிய வானோர்கள் மேரு மலையில் ஒன்றுகூடி ஏங்கியிருந்தனர். நம்மை ஏன் இறைவன் இன்னமும் சோதிக்கிருர் எனக் கலங்கினர்.

ஒரு தாய் ஆரோக்கியமான பிள்ளைக்கு நிரம்ப உணவு தருவாள்; நோய்வாய்ப்பட்ட மகனுக்கு உப்பில்லாக் கஞ்சி தருவாள்; மந்தம் உள்ள பிள்ளைக்குப் புனர்ப்பாகம் செய்து தருவாள்; நேர்வாளம் உண்ட பிள்ளையைப் பட்டினி போடுவாள். இதற்குக் காரணம் குழந்தைகளின் நோயேயன்றித் தாயின் பட்சபாதம் அன்று.

கல்லூரியில் பரீட்சை நடக்கிறது. எல்லா மாணவர்களும் கேள்விக்கு விடை எழுதுகிருர்கள். நன்ருக எழுதிய மாணவர்களுக்கு ஆசிரியர் அதிக அம்சங்கள் தருகிருர். நன்ருக எழுதாதவர்களுக்குக் குறைந்த அம்சம் தருகின்ருர். கேள்வித்தாள் திருத்துகின்ற ஆசிரியர் பாரபட்சம் காட்டுகிருர் என்று சொல்லி விட முடியுமா?

**இவறலும் இகலும் இன்றி**
**யார்க்கும்ஓர் பெற்றித்தாகி**
**அவரவர் வினைகள் நாடி**
**அதற்படு பொருளை நல்கும்**
**சிவனை யாம் வெறுத்தல் குற்றம்**
**சிறந்த நோன்பு இயற்றிடாதே**
**தவறு செய்தனம் என்றெம்மை**
**நோவதே தக்கதென்ருர்**

இறைவன் ஆன்மாக்கள் செய்த நல்வினை, தீவினைகளுக்குத் தக்கபடி இன்ப துன்பங்களை வழங்குகிறுன். இதனைப் பிரம்மதேவர் மற்ற வானோர்களுக்கு உணர்த்தினுர்.

அனைவரும் திருக்கயிலாயம் செ
தமது துன்பங்களைச் சிவபிரா
விண்ணப்பம் செய்வதென உத்தே
னர். பிரமதேவர், சிவபெருமான் எ
யில் உள்ளார் என்பதை ஒரு ஞா
மூலம் அறிந்து, பின்னர் செல்
என்று கூறி, வாயு தேவனை அனு
வைத்தார். 'மன்மதனை எரித்த
பெருமான் முன் செல்வதா?'
நடுங்கியவாறே வாயுவும் சென்ருன்

கங்கையில் நீராடிவிட்டு, தா
பூவின் மகரந்தங்களை அணிந்து
பக்தியுடன் தென்றலாய் மெல்லக்
லாயம் சென்ருன் வாயு; இறைவன் தி
கோபிலின் முன்வாயிலை யடைந்தா
நந்தி தேவர், ஒரு ஹுங்காரம் செ
இடியொலி கேட்ட நாகம் போல் வ
தேவன் மயங்கிக் கீழே விழுந்தா
ஒருவாறு மயக்கம் தெளிந்து
யெம்பெருமானிடம் சென்று,
வந்த காரியத்தைத் தெரிவித்தான்.

ஈசுவரனின் நிலையை நோட்
பார்ப்பது தகாத காரியம். அவ
நிரந்தர நிலை அனுக்கிரகம்த
வேண்டி நிற்கும்போதெல்லாம் அ
புரிவான் என்ற நம்பிக்கை யொ
வேண்டும். எனவே பரமனின்
காண வந்த வாயுவை வெ
விட்டார் நந்தி தேவர்.

வாயு தேவன் மேரு மலைக்
திரும்பி வந்து, பிரம்ம தேவரிடம்
லாயத்தில் நடந்ததைச் சொன்
தேவர்கள் யாவரும் ஆண்டவ
துதித்து அருள் கோரிக் கயிலாய
சென்றனர். திருநந்தி தேவரை வ
அவர் அனுமதி பெற்று உள்ளே
றனர். திருமாலும் மற்ருேரும்
மேசனைப் பலகாலும் பணிந்து
குறைகளைக் கூறி முறையிட்டனர்.

''எம்பெருமானே, சூரபன்மனு
களால் பெருந்துயருறுகிறேம்.
களை இத் துயரத்திலிருந்து விடு
உம்மக்கு ஒப்பாக ஒரு திருக்குமர
தந்தருளுக'' என்று தேவர்கள்
டிக் கொண்டனர்.

**ஆதியும் நடுவும் ஈறும்**
**அருவமும் உருவும் ஒப்பும்**
**ஏதுவும் வரவும் போக்கும்**
**இன்பமுந் துன்பமும் இன்றி**
**வேதமுங் கடந்து நின்ற**
**விமலஓர் குமரன் றன்னை**
**நீதரல் வேண்டும் நின்பால்**
**நின்னையே நிகர்க்க என்ருர்**

(தொட

27-12

# கந்தன் கருணை

திருமுருக கிருபானந்த வாரியார்

## 8. ஐயன் அவதரித்தான்!

பிரமன் முதலிய தேவர்களை நோக்கிச் சிவபிரான், ''நீங்கள் வருந்த வேண்டாம்; ஒரு புதல்வனைத் தருவோம்'' என்று திருவாய் மலர்ந்தார்.

வேண்டத் தக்கது அறிவோனும், வேண்ட முழுதும் தருவோனுமான ஆண்டவன்தான் எதனை எந்தச் சமயத்தில் தர வேண்டும் என்பதையும் அறிவார். அதற்கேற்ப இப்போது முருகனைத் தர வேண்டிய தருணம் வந்து விட்டது என்பதாகப் பெருமான் கருதினர்.

முன்பு திரிபுர தகனத்தின் போது திருத்தேரும், படைக்கலமும், பரிவாரமும் சித்தம் செய்யுமாறு தேவர்களைப் பணித்துப் பின்னர் அவற்றைப் பயன்படுத்தாது தமது பராக்கிரமத்தாலேயே பகைவரை வென்ற பரமேசுவரர் அல்லவா அவர்? இப்போதும் அவ்வாறே முருகன் பிறப்புக்கென ஓர் ஏதுவாகத் தேவியைப் பர்வதபுத்திரியாக்கி, திருமணம் புரிந்து திருக்கைலாயம் சேர்ந்த ஐயன் இறுதியில் அவளிடமிருந்து புதல்வனைத் தராமல் தாமாகவே குமரனைத் தந்தருள எண்ணினர். அவரது லீலையை நாம் எப்படி அளப்பது?

ஐயன் வேறு, அன்னை வேறு என்று பிரித்துப் பார்க்கக் கூடாது, என்றுமே அவர் அம்மையப்பன் என்பதை உணர்த்தத்தான் இவ்வாறு அருள் கூர்ந்திருப்பாரோ ?

'பரமேசுவரனுக்கு ஐந்து முகங்கள், தேவிக்கு ஒரு முகம்—ஆக ஆறுமுகத்திலுள்ள ஆறு நெற்றிகளிலிருந்து அவர் ஆறு பொறிகளைத் தோற்றுவித்து ஆறு முகனை உண்டாக்கினர், எனச் சி... கூறுவர். இது தவறு. பரமேசு... னுக்கே ஸத்யோ ஜாதம், வா... தேவம், தத்புருஷம், ஈசான... அகோரம் என்று வெளிப்படத் தெ... யும் ஐந்து முகங்களோடு பரம ஞான... ரின் உள்நோக்குக்கு மட்டும் புலப்ப... உள் முகமாக ஆருவது திருவதன... அதோமுகமாக — உள்ளது. இவ்வா... திருமுகமுள்ள திருக்கோலம் தாங்... பெருமான் அவை ஒவ்வொன்... நெற்றிக் கண்ணினின்றும் அ... பெருஞ் சோதிப் பொறி ஒவ்வொ... றினை வழங்கியருளினர். அப்பொறி... அளவுகடந்த வெப்பத்துடன் உலகெ... கும் பரவிப் பறந்தன. அச்சோதி... வெப்பத்தைத் தாங்க மாட்டாது வா... வர்கள் மூலைக்கு ஒருவராக ஓடினர்... வாயுக்கள் உலைந்து ஓய்ந்தன; கடல்... வற்றின; வடவாமுகாக்கினியும்... செருக்கு நீங்கிற்று; பூமி பிளந்த... மலைகள் யாவும் நெக்கு விட்ட... அட்ட நாகங்களும் நெளிந்து நீங்... அட்ட திக்கயங்களும் அழுது இயங்... உயிர்கள் எல்லாம் நடுங்கின. ... னும், அப்பொறிகள் இறைவன் அ... ளல் பெருங்கருணை செய்யும் வண்... பிறந்தன வாதலால் எவ்வுயிரை... நாசம் செய்யவில்லை. வெறும்... சத்தை மட்டுமே ஏற்படுத்தின. ... மையே உருவான முருகன் அச்சமூ... வகையில் தோன்றியதையும் நம... புரியவொண்ணுத ஈசுவர லீலை எ... தான் சொல்ல வேண்டும். அன்... நண்பனும் பரமபக்தனுமான அர்... னுக்குக் கண்ண பெருமான் விசு...

தரிசனம் காட்டும் போது அவனே நடு நடுங்கவே செய்தா னன்றோ?

இறைவனின் நெற் றிக் கண்களினின்று நெருப்புப் பொறி புறப்பட்ட போது, எம்பிரானின் அருகே வீற்றிருந்த உமா தேவியாரும் அப் பொறிகளின் வெம் மையைத் தாங்காது திருவுளம் கலங்கித் தம் திருவடியிலுள்ள சிலம்புகள் புலம்பித் தாக்கத் திருக்கோயி லினுள்ளே ஓடினர்.

கடலில் கப்பல் செல்கிறது. கப்பல் நடுக் கடலுக்குப் போய் விட்டது. அக் கப்பலின் கொடி மரத்தில் காகங்கள் கூட்டமாக உட்கார்ந்திருக்கின்றன. மாலுமி அக்காகங்களை அடித்து விரட்டு கிறான். காகங்கள் அங்கிருந்து பறக்கின்றன. நடுக் கடல். காகங்கள் எங்கே சென்று புகலி டம் தேடும்? நாலா பக்கங்களி லும் பறக்கும். எங்கும் புகலிடம் கிடைக் காமல் திரும்பவும் கப்பலின் கொடி மரத்துக்கேதான் வந்து சேரும். அதே போல் அஞ்சிய தேவர்கள் யாவரும் திரண்டு மீண்டும் கயிலாயத்துக்கே வந் தார்கள். சிவபெருமானைக் கண்டு, ''அசுரர்களை மாய்ப்பதற்கு ஒரு மைந் தனை அருள வேண்டும் என்று வேண்டி னோம். முடிவில்லாத வெப்பத்தை யுடைய அக்கினியை வழங்கி விட்டீர் களே; நாங்கள் உய்வது எவ்வாறு? அக் கினிப் பொறிகளின் வெம்மை தணியா விட்டால் இன்னும் ஒரு கணத்தில் உலக மெல்லாம் அழியும். காப்பாற்றுங்கள்'' என்று முறையிட்டார்கள். இறைவன் தேவர்களிடம், ''அஞ்சாதீர்கள்'' என்று கூறிப் புதிதாகக் கொண்ட ஆறு திரு முகக் கோலத்தை மறைத்து முன்

போல ஒருமுகத்தோடு எழுந்தருளி, உலக மெங்கும் பரந்த அக் கினிப் பொறிகள் தமது திருமுன் வரும் வண்ணம் திருவுளம் கொண்டார்.

ஆறு அக்கினிப் பொறிகளும் எம் பிரான் திருமுன் வந் தன. இறைவன் வாயு தேவனையும் அக்கினி தேவனையும் நோக்கி, ''நீங்கள் இருவரும் இந்த அக்கினிப்பொறி களைத் தாங்கிக் கொண்டு போய்க் கங் கையில் விட்டு விடுங் கள்; கங்கை அவற்றை சரவணப் பொய்கை



யில் கொண்டு போய்ச் சேர்க்கும்'' என்று திருவாய் மலர்ந்தருளினர்.

வாயு தேவனும், அக்கினி தேவ னும் அஞ்சி நடுங்கினர். எம்பெருமானை வணங்கி, ''தேவ தேவ! இந்த அக் கினிப் பொறிகளின் வெம்மையைத் தாங்க எங்களால் முடியுமா? ஆலகாலம் போல் படர்ந்த இந்த அக்கினிப் பொறிகளைக் கண்டு ஓடியவர்களல் லவா நாங்கள்? இந்த அக்கினிப் பொறி களை நெருங்கவே அஞ்சுகின்ற நாங்கள் எப்படிச் சுமந்து கொண்டு செல்ல இயலும்?'' என்று விண்ணப்பித்துக் கொண்டனர். ''இந்தத் தீப்பொறிகளைத் தாங்கும் ஆற்றலை உங்களுக்கு அளித் தோம்'' என்று சிவபெருமான் அருள் புரிந்தார். வாயுவும், அக்கினியும் வாயு வாயும் அக்கினியாயுமிருப்பது அவர் தந்த ஆற்றலால்தானே?

''இத் தழற் பிழம்பு சரவணப் பொய்கையை அடைந்து ஒரு திருக் குமரனாய் வளர்ந்து, சூராதி அவுணர் களை அழித்து உங்களுக்கு அருள் புரியும். நீங்கள் அனைவரும் உங்கள் இருப்பிடத் துக்குச் செல்லலாம்'' என்று எம்பெரு மான் தேவர்களுக்குக் கூறியருளினர்.

தேவர் யாவரும், ''உய்ந்தோம்; உய்ந்தோம்'' என்று சிவபெருமானை வணங்கி அங்கிருந்து விடைபெற்றனர்.

வாயுதேவன் எம்பெருமானை வணங் கித் தீப்பொறிகள் ஆறையும் முதலில் சென்னி மேல் தாங்கிச் சென்றான். திருமால், பிரமன் முதலிய தேவர்கள் பெருமகிழ்ச்சியுடன் வாயுதேவனைப் பின் தொடர்ந்தனர், சுவாமியின் திரு அவ தாரம் காண்பதற்காக. ஒரு நாழிகை சென்றது. வாயுதேவன் தீப்பொறி களின் வெம்மை தா[ங்]காது அக்கினி தே[வ]னிடம் சேர்த்தா[ன்]. அக்கினி தேவ[ன்] சென்னி மேல் தாங்[கி]னான். இவ்வாறு மா[றி] மாறித் தாங்[கி]க் கொண்டு போய்க் க[ங்]கையில் சேர்த்தன[ர்]. அப்பொறிகளி[ன்] வெம்மை தாங்கா[து] கங்கையும் வற்ற[த்] தொடங்கியது. இ[றை]வன் அருளை உணர்[ந்த] கங்கை, அவற்[றை] ஏந்திச் சென்று [ஒரு] நாழிகைக்குள் இ[மய] மலைச்சாரலில் உ[ள்ள] சரவணப் பொய்[கை]யில் சேர்த்தா[ள்]. விளைவை நாடும் வறியவர் போல் [திரு]மால், பிரமன், இந்திரன் முதல[ிய] தேவர்கள் சரவணப் பொய்கையை சூழ்ந்து காவல் புரிந்தனர்.

சிவபெருமான் அருளால் சரவண[ப்] பொய்கை, கங்கையைப் போல் வ[ற்ற]வில்லை. அப்பொழுது, அருவமாயு[ம்] உருவமாயும் அநாதியாயும் ஒன்று[ம்] பலவாயும் பரப்பிரம்மமாயும் நி[ன்ற] பரமசிவ சோதிப் பிழம்பே ஒரு [திரு] மேனியாக வடிவு கொண்டது. ப[ரம்] பொருள் கருணை வெள்ளம் பொழி[ய] ஆறு திருமுகங்களும், பன்னிரண்[டு] திருக் கரங்களும் கொண்டு உலகமெ[ல்]லாம் உய்யும் வண்ணம் முருகக் கட[வு]ளாகத் திரு அவதாரம் செய்தருளியு[து].

அருவமும் உருவும் ஆகி
அநாதியாய்ப் பலவாய் ஒன்றுய்[ப்]
பிரமமாய் நின்ற சோதிப்
பிழம்பதோர் மேனி ஆகக்
கருணைகூர் முகங்கள் ஆறும்
கரங்கள்பன் னிரண்டுங் கொண்டே
ஒருதிரு முருகன் வந்தாங்(கு)
உதித்தனன் உலகம் உய்ய

முருகப் பெருமான் திரு அவதா[ரம்] செய்தவுடன் ஆகாயத்திலே [தே]துந்துபிகள் முழங்கின; வேதங்களெ[ல்]லாம் ஆர்த்தன; திருமாலும், பி[ரம]னும், இந்திரனும், முனிவர்களும் பூ[மழை] பெய்து, ''அடியேங்களுக்கு அ[ருள்] செய்க'' என்று துதித்துச் சூழ்ந்தார்க[ள்]. உலகத்து உயிர்கள் மகிழ்ச்சி கொ[ண்]டன; அவுணர்களுக்குத் தீய அறிகுறி[கள்] தோன்றின.

வேதங்களின் முடிவாலும், ம[ன]தாலும், வாக்காலும் அறிய ஒ[ண்]

**ஆம், அவள் சகுந்தலா! ஆடையணிகளுக்கும் சட்டைகளுக்குமான ப்ரிண்ட்கள்**




ராஜேஷ் டெக்ஸ்டைல்ஸ்—பருத்தித் துணிகளில் வாங்க லாபகரமானவை நீடித்துழைக்கும் பருத்தி ஃப்ராக்குகள், ப்ரிண்டட் புடவைகள், நாள் பூராவும் புதுமைப் பொலிவுடன் குளுகுளுப்பூட்டும் பாப்ளின் சட்டைகள்—இவற்றில் எது தேவையானாலும் ராஜேஷ் டெக்ஸ்டைல்ஸ் என்று வற்புறுத்திக் கேட்டு வாங்குங்கள்.

**ராஜேஷ் டெக்ஸ்டைல்ஸ் மில்ஸ் லிட்.**
**பம்பாய்-13**



இது ஒரு ரோஹித் க்ரூப் ஸ்தாபனம்

RI-RH-I TAM

எங்கும் நிறைந்து நின்ற சிவபெருமானே கருணையுடன் ஆறு திருமுகங்களை உடையவராய்த் தோன்றியருளி சரவணப் பொய்கையில் ஆயிரத்தெட்டு இதழ்களோடு கூடிய செந்தாமரை மலரின் மீது இனிது வீற்றிருந்தருளினார்.

மறைகளின் முடிவால் வாக்கால்
மனத்தினுல் அளக்கொ ணமல்
நிறைவுடன் யாண்டு மாகி
நின்றிடும் நிமல மூர்த்தி
அறுமுக வுருவாய்த் தோன்றி
அருளொடு சரவ ணத்தின்
வெறிகமழ் கமலப் போதில்
வீற்றிருந் தருளி னனே

முருகப் பெருமானுடைய அவதாரத் தத்துவத்தை இனிச் சற்று அறிவோம். உலகத்தின் க்ஷேமத்துக்காகக் கடவுள் பஞ்சபூதங்களில் படிப்படியாக வெளி, காற்று, கனல், புனல், மண் இவற்றின் வழியே தோற்றம் பெறுகிறார் என்பது முருகன் திரு அவதாரத்தின் தத்துவம். இறைவனின் நெற்றிக் கண்ணிலிருந்து புறப்பட்ட பேரொளிச் சுடர் வானத்தில் நின்று, பின் காற்றின் கையில் புகுந்து, தீயைச் சென்றடைந்து அங்கிருந்து கங்கையாகியநீரில் தவழ்ந்து, நிலத்தில் எய்தியது. ஞானக்கினியில் அருவமாகத் தோன்றிக் கருணைப் பொய்கையில் உருவமாகப் பொலிந்தது. அருவமான ஞானமயப் பரம்பொருள் பக்தர்களிடம் கருணைகொண்டே அன்றோ வடிவு கொள்கிறது?



தமிழ் மொழி என்றும் இளமை மாறாத மொழி. எம்பெருமான் முருகன், என்றும் அகலாத இளமையுடையவன். தமிழ் மொழியில் உயிர் எழுத்துக்கள் பன்னிரண்டு; முருகப் பெருமானின் தோள்கள் பன்னிரண்டே. முருகனுக்குத் திருமுகம் ஒவ்வொன்றிலும் மூன்று கண்களாக மொத்தம் பதினெட்டு நயனங்கள்; தமிழில் மெய்யெழுத்துக்கள் பதினெட்டு. (சிவமூர்த்தி, உமா தேவி, விநாயகர், முருகன் யாவருமே முக்கண் பெற்றவர்கள்.) ''ஷட்வக்த்ரம் த்வாதசபுஜம் அஷ்டாதச விலோசனம் ரூபம் அங்கீக்ருதம் சுபம் லோகாநாம்'' என்கிறது வடமொழி ஸ்காந்தம்.

''உருவம் இல்லாத அருட்பெருஞ் ஜோதி ஆண்டவன். ஆறு முகங்கள், பன்னிரண்டு தோள்கள், பதினெட்டுக் கண்கள் கொண்ட இந்த அருள் உருவத்தை உலகம் உய்யும் பொருட்டு எடுத்துக் கொண்டான்'' என்பது இதனுடைய பொருள்.

சூரியன் ஆறு கண்களாகவும், சந்திரன் ஆறு கண்களாகவும், அக்கினி ஆறு கண்களாகவும் முருகப் பெருமானுக்குப் பதினெட்டுக் கண்களமைந்தாற்போல் தமிழில் மெய்யெழுத்துகள் பதினெட்டாக நின்றன. முருகவேளின் முகங்கள் ஆறு. தமிழில் இன எழுத்து ஆறு. வல்லினம் ஆறு, மெல்லினம் ஆறு இடையினம் ஆறு, மு — ரு — க என்ற எழுத்துக்களில் ஒவ்வொன்றும் மெய்யெழுத்தில் ஒவ்வோர் இனத்தைச் சார்ந்திருப்பதும் குறிப்பிடத் தக்கது. கந்தவேள் கரத்தில் உள்ள வேல் வேறு எந்தத் தெய்வத்துக்கும் இல்லாத சிறப்புடைய ஆயுதம். வேல் என்றே மக்கட்குப் பெயரிடுவது மரபு. இவ்வாறு வேறு ஆயுதத்தின் திருநாமங்களை மக்கட்கு இடுவதில்லை. வேறு எந்த மொழியிலும் இல்லாத தனி நிலை ஆயுத எழுத்து தமிழில்தான் உண்டு. ஆய்தம் ஃ; இச்சை, கிரியை, ஞானம் என்ற மூன்றும் மூன்று புள்ளிகளாகச் சேர்ந்தது. இது வேலின் உருவை யொத்தது.

கண்ணிகர் மெய்யும் சென்னிக்
கணநிக ரினத்தின் கூறும்
திண்ணமை தோள்க ளேபோல்
திகழ்தரு முயிரும் வேறேன்
றெண்ணுதற் கரிய தான
எஃகமும் இயலிற் காட்டும்
புண்ணிய முனிக்கோன் செவ்வேள்
பொற்பதத் தடிமை யாகும்

எனவே, முருகன் வேறு தமிழ் வேறு அல்ல. முருகனே தமிழ். தமிழே முருகன் என்பதை உணரலாம்.

பிறக்கும்போதே பெயருடன் யாரும் பிறப்பதில்லை. குழந்தை பிறந்த பின்னர்தான் பெயர் சூட்டுவர். ஆனால் இங்கோ, ''ஒரு திருமுருகன் வந்தாங்கு உதித்தனன்'' என்று கூறுகிறார். ஒருவரைப் பார்த்து, ''இவருக்கு ஞானம் உதித்தது'' என்று சொன்னால் அப்போதுதான் ஞானம் வந்தது என்று பொருளாகாது. ஞானம் முன்பே இருந்தது; அது மறைந்திருந்தது; இப்போது உதித்தது என்றுதான் பொருள்படும். ஆகவே, என்றும் இருக்கும் இறைவனே உலகம் உய்வதற்காகக் கிழக்கில் ஒரு முகமும், மேற்கில் ஒரு முகமும், வடக்கே ஒரு முகமும், தெற்கில் ஒரு முகமும், மேலே ஒரு முகமும், கீழே ஒரு முகமுமாக ஆறுமுகப் பெருமானாக வந்து உதித்தான்.



ஆண்பிள்ளை என்றும் ஆண்மகன் என்றும் கூற வல்ல ஒரே ஒருவன் முருகப் பெருமான். கோடீசுவரனின் பிள்ளையைக் கோடீசுவரன் மகன் என்றும், ஏழையின் பிள்ளையைத் தரித்திரன் மகன் என்றும், வைசியரின் மகனைச் செட்டி மகன் என்றும் சொல்லும் வழக்குப்படி பெண்ணுக்குப் பிறந்த நாம் யாவரும் பெண் — பிள்ளைகள்தான். ஆணுக்கே பிறந்த பிள்ளைதான் ஆண் பிள்ளை. அப்படிப் பெண் தொடர்பின்றி ஆணுக்கே பிறந்தவன் ஆறுமுக சுவாமி. பரமான்மாவை ஆணாகவும், அதைத் தேடிச் சென்றடைய வேண்டிய ஜீவான்மாவைப் பெண்ணாகவும் கொள்கிற மரபுப்படி இது கந்தப் பெருமானின் பிரம்ம நிலையைக் குறிக்கும்.

முருகன் அவதாரம் செய்தான் என்பதும் சரியாகாது. அவதாரம் என்றால் இறங்கி வருவது என்று பொருள். நாம் யாவரும் இறங்கு முகமாகக் கீழ் நோக்கி இவ்வுலகுக்கு வருகிறோம். முருகனோ இறைவனின் ஊர்த்துவ முகமாக நெற்றிக் கண்ணினின்று வெளிப்போந்தவன்.

சரவணப் பொய்கையில் திரு அவதாரம் செய்தருளிய முருகப் பெருமான் செந்தாமரையில் கொலுவீற்றிருந்தார். திருமால், பிரமதேவர், காலக் கடவுள், வருண பகவான் முதலிய தேவர்கள் அங்கே சென்றார்கள். கைக்குழந்தை போலத் திருவிளையாடல் புரியும் எம்பெருமானை அவர்கள் கண்டார்கள். வாக்கினாலும், வேத முடிவான உபநிடதங்களாலும் அளக்க முடியாத நிமல மூர்த்தியாக இருந்தாராம் எம்பெருமான்.

அழகிய திருமேனியுடன் வீற்றிருந்த முருகவேளின் ஆறுமுகங்களிலும் கருணை பொழிகிறது; நாராயண மூர்த்தி எம்பெருமானைப் பார்த்தார். எத்தனை முறை பார்த்தாலும் அவருக்குத் திருப்தி ஏற்படவில்லையாம்! ''எம்பெருமான் சரவணப் பொய்கையில் குழந்தை போல எழுந்தருளியிருக்கிறார். நீங்கள் பாலூட்டுங்கள்'' என்று கார்த்திகைப் பெண்கள் அனைவருக்கும் தேவர்கள் உத்தரவு போட்டார்கள். ''அவ்வாறே செய்கிறோம்'' என்று கார்த்திகைப் பெண்கள் அறுவரும் சரவணப்பொய்கை சென்று அங்கு எழுந்தருளியிருக்கும் இளம்பூரணனைத் துதித்து வணங்கினர். கார்த்திகைப் பெண்களுக்குள் போட்டி ஏற்படாதபடி, குமரக் கடவுள் ஒருவரே ஆறு குழந்தைகளாகப் பிரிந்தருளினார்.

**உவகையொடு கீர்த்திகையர்**
**அறுவரும் எடுக்க அவர்**
**ஒருவர் ஒருவர்க்(கு) அவன்ஓர்**
**ஓர்புத்ர னனவனும்**

கார்த்திகை மகளிர் அறுவரும் ஆளுக்கொரு குழந்தையை எடுத்துப் பால் ஊட்டினார்கள். முருகப் பெருமான் முறுவல் செய்து, நீங்காப் பேரருளால் அருந்துவது போல் அருந்தினார். பால் அருந்திய பரஞ்சுடர் முதல்வனை வண்டருந்தாத கஞ்சமா மலர்ச் சயனத்தில் சேர்த்த கார்த்திகை மாதர்கள் தாலாட்டிக் கண் வளரச் செய்தனர்.

**பாம்பா லுததி தனைக்கடைந்து**
**படருங் கொடுங்கார் சொரிமழைக்கு**
**பரிய வரையைக் குடைகவித்துப்**
**பசுக்கள் வெருவிப் பதருமற்**
**காம்பா விசையின் ரெவியழைத்துக்**
**கதறுந் தமரக் காவிந்திக்**
**கரையினிரைப் பின்னே நடந்த**
**கண்ணன் மருகா, முகையுடைக்கும்**
**பூம்பா சடைப்பங் கயத்தடத்திற்**
**புனிற்றுக் கவரி முலைநெரித்துப்**

பொழியு மமுதந் தனைக்கண்டு
புனலைப் பிரித்துப் பேட்டெகினந்
தீம்பால் பருகுந் திருச்செந்தூர்ச்
செல்வா தாலோ தாலேலோ
தெய்வக் கவிற்றை மணம்புணர்ந்த
சிறுவா தாலோ தாலேலோ

பழுத்த வைணவராகிய பகழிக்கூத்தர் இவ்வாறு திருச்செந்தூர்ப் பிள்ளைத் தமிழில் முருகனைத் தாலாட்டுகிறார்.

'அமிருத மதனத்தின்போது பாற் கடலைக் கடைந்தவரும், பெருமழையின் போது கோவர்த்தனகிரியைக் குடையாகத் தூக்கி மாடுகளைக் காத்தவரும், வேணுகானமிசைத்து யமுனா தீரத்தில் ஆநிரையைப் பின்தொடர்ந்தவருமான பெருமானின் மருமகனே' என்று முதலில் துதிக்கிறார். பிறகு இவ்வாறு தொடர்கிறார்:

பொய்கையில் தாமரை மலர்கள் மலர்ந்திருக்கின்றன; அவற்றிலே அன்னங்கள் வாழ்கின்றன. உணவு தேடுவதற்காக ஆண் அன்னங்கள் வெளியே சென்றிருக்கின்றன. கன்று ஈன்று பத்துப் படி பால் கறக்கக் கூடிய எருமை ஒன்று அந்தப் பொய்கையில் இறங்கி ஒரு கலக்குக் கலக்கியது. பொய்கையில் இருந்த வரால் மீன் எருமையின் மடியை இடித்து மோதியது. கன்று தான் பாலைக் குடிப்பதாக நினைத்துக் கொண்டது எருமை! அதன் மடியிலிருந்து பால் சுரந்தது. எருமையின் மடியிலிருந்த பத்துப் படி பாலும் நீரில் கலந்து விட்டது. நீர் வேறு, பால் வேறாகப் பிரிக்கும் ஆற்றல் அன்னத்துக்கு உண்டு. 'நம் கணவன்மார்களாகிய ஆண் அன்னங்கள் உணவு தேடி எங்கோ போயிருக்கின்றன. எம்பெருமானே உணவை இங்கேயே கொண்டு வந்து கொடுக்கிறார்' என்று பெண் அன்னங்கள் நீரிலிருந்து பாலைப் பிரித்து எடுத்துப் பாதியைக் குடித்து மறு பாதியைக் கணவருக்கு என்று வைத்து விட்டனவாம். (அவை பழங் காலத்து அன்னங்கள்!) இவ்வாறு அன்னங்கள் வாழும் தீர்த்தமுள்ள திருச்செந்தூரில் வாழும் செல்வனைத் தாலாட்டுகிறார் பகழிக்கூத்தர்.

கார்த்திகைப் பெண்கள் திருக்குழந்தைகளைத் துயிலச் செய்தனர். ஒரு முருகக் குழந்தை தூங்கும். ஒரு முருகக் குழந்தை எழுந்து ''சிவா'', ''சங்கரா'' என்று மழலைச் சொல் பேசும். ஓர் உருவம் மாதாவின் பாலைச் செம்பவள வாய் வைத்து உண்ணும்; ஓர் உருவம் சிரிக்கும்; ஓர் உருவம் விளையாடும்; ஓர் உருவம் காரணமின்றி அழுது கொண்டிருக்கும்; ஓர் உருவம் தவழ்ந்து விளையாடிக் கொண்டிருக்கும்; ஓர் உருவம் தளர்நடை இட்டுச் செல்லும்; ஓர் உருவம் நிற்க முடியாமல் எழுந்து விழும்; ஓர் உருவம் பாட்டுப் பாடும்; ஓர் உருவம் கைகளைக் கொட்டும்; ஓர் உருவம் கூத்தாடும். ஓர் உருவம் செங்கை கொட்டும்; ஓட ஓர் உருவமும், ஓரிடத்தில் ஒளிக்க ஓர் உருவமும், அப்படி ஒளித்த மகவைத் தேட ஓர் உருவமும் கொண்டு ஆறு குழந்தை உருவங்களும் திருவிளையாடல் புரிந்து வளர்ந்தன.

துயில ஓர் உருவம்; துஞ்சித்
துண்ணென எழுந்து மென்சொல்
பயிலஓர் உருவம்; யாய்தன்
பயோதரம் பவளவாய் வைத்து
அயிலஓர் உருவம்; நக்காங்கு
அமரஓர் உருவம்; ஆடல்
இயலஓர் உருவம்; வாளா
இரங்கஓர் உருவம் செய்தான்

ஆடஓர் உருவம் செங்கை
அறையஓர் உருவம் நின்று
பாடஓர் உருவம் நாடிப்
பார்க்கஓர் உருவம் ஆங்கண்
ஓடஓர் உருவம் ஓர்பால்
ஒளிக்கஓர் உருவம் யாண்டுந்
தேடஓர் உருவ மாகச்
சிவன்மகன் புரித லுற்றான்

இப்படியாக, என் அப்பன் ஒருவனே பல உருவாகி விளையாடிக் கொண்டிருந்தான். சிற்பரனாகி வந்த செவ்வேளது திருவிளையாடலின் திறத்தை நோக்கிய அரி அயனாதி அமரர்கள் ஆனந்தமடைந்து, ''இவ்வொரு பாலகரே பல சிறுவர் வடிவம் கொண்டு புரியும் திருவிளையாடல் எங்களாலும் அறிய முடியாதது. கைக்குழந்தை போல் தோன்றிய இக் குமரக் கடவுள் செய்யும் மாயை போல் செய்ய வல்லார் எவரும் இல்லை. ஆகவே, இவர் ஒப்புயர்வில்லாச் சிவபெருமானேயாம்''! என்று கூறி வணங்கி நின்றார்கள். **(தொடரும்)**



### காட்சி — 1

சுரேஷ்: அப்பா, அப்பா! உங்களுக்குச் சேதி தெரியுமா?

சங்கரன்: என்னடா விஷயம்?

சுரே: நம்ப உள்நாட்டு இலாகாவிலிருந்து இன்றைக்குக் காலையில் ஓர் அவசர உத்தரவு பிரகடனம் ஆகியிருக்கிறது. அது இருபத்தி நாலு மணி நேரத்துக்குள்ளே அமுலுக்கு வருகிறதாம்!

சங்: அப்படி என்னடா அவசர உத்தரவு? 'பிரஸ்'ஸில் ஒரு நியூசும் வந்த மாதிரி தெரியல்லையே!

சுரே: 'பிரஸ்'ஸுக்கு எல்லாம் வராது, அது! நம்ப வீட்டை மட்டும்தான் 'பிரஸ்' பண்ணும்.

நம்ப 'ஹோம்மினிஸ்டர்' அம்மாதானே அதைப் பிறப்பிச்சிருக்கா!

சங்: உங்கம்மாவாடா?

சுரே: அம்மா பெயரைச் சொன்னபிறகு தான் அப்பாவுக்குத் திடீரென்று உதறல் வருகிறது.

சங்: 'திடீர் உதறல்' ஒன்றும் இல்லையடா, பதினஞ்சு வருஷ அனுபவ உதறல்! ஆமாம், என்ன உத்தரவு போட்டிருக்கா?

சாட்சியாக வாக்குறுதி வாங்கிக் கொண்டு தானே, கல்யாணம் பண்ணிக் கொண்டேன்!

சுரே: இது ஜனநாயக நாடப்பா! வாக்குறுதிகள் வழங்குவதெல்லாம் ஒரு காரியம் நடைபெறும் வரையில்தான். அம்மா வாக்குறுதியும் அப்படித்தான்!

சங்: இப்ப என்னடா பண்ணறது? உங்க அம்மா அடுக்களைக்குள்ளே புகுந்து கரண்டியைப் பிடிச்சுட்டான்னு, காஷாயம் கட்டிண்டு வெளியே கிளம்பிட வேண்டியதுதான்!

சுரே: ஓஹோ, பழைய காலம்னு காஷாயத்தை நினைக்கிறீங்களோ? இப்ப காஷாயத்தில் உணவுப் பிரச்னை தீராது. இன்றைக்குச் சாட்சாத் பரமசிவனே புலித்தோலைப் போர்த்திக் கொண்டு பிச்சைக்கு வந்து நின்றாலும், 'போமய்யா, போய்க் குடும்பக் கார்டு அதிகாரி கிட்டே அட்டை வாங்கிக் கடையிலே வாங்கிக் கொள்ளும்' என்று சொல்ல வேண்டிய நேரம். வீட்டுக்குள்ளே இருந்துதான் சமாளிக்க ஆகணும்.

சங்: எப்படிச் சமாளிக்கிறது என்று எனக்குத் தெரியல்லையே!

சுரே: நம்ப ஆலோசனைக் கமிட்டியை ரகசியமாகக்கூட்டி முடிவெடுக்கவேண்டியதுதான்.




சுரே: நம்ப உணவு மந்திரி இருக்கிறாள் இல்லே....

சங்: ஆமா, சமையல்காரி சாந்தம்மா....

சுரே: அவளுக்குத் திடீர்னு கல்தா கொடுத்தாச்சு.

சங்: ஏன்?

சுரே: அதெல்லாம் அம்மாகிட்டே ரஷ்ய பாணிதான். கல்தான்னு கல்தாதான்! காரணம் கேட்கப்படாது.

சங்: அப்போ சமையல்.....?

சுரே: உணவு இலாகா, உள் நாட்டு இலாகாவுடன் இணைக்கப்படுகிறது. அம்மாவே உணவையும் கவனிக்கிறாள்!

சங்: ஆ, அம்மா சமைக்கப் போகிறாளா! சமையலுக்கும் அவளுக்கும் என்ன்டா சம்பந்தம்? அவளைப் பெண் பார்க்கும்பொழுது, அவள் செய்ததாகச் சர்டிபிகேட்டோடு வந்த சொஜ்ஜியைத் தின்று விட்டு நான்கு நாட்களாக வயிற்றுவலியிலேயே கிடந்து, அதற்கப்புறம் அவள் சமையல் பானையைத் தொடக் கூடாதென்று தேவர், மூவர் அறிய, அக்னி

சங்: அதுதான் சரி. உன் அம்மா அடுத்த வீட்டுக்கு அரட்டை அடிக்கப் போகிற சமயம் நம்ப கமிட்டி அங்கத்தினர்களான தாத்தா, பாட்டி எல்லாரையும் கொல்லைப் பக்கமாக ரகசியக் கூட்டத்துக்கு அழைத்து வா.

சுரே: கொல்லைப் பக்கமா எதுக்கு? ஓஹோ, நம்ப மீட்டிங் நடக்கும் போது திடீர்னு அம்மா வந்துட்டா, கொல்லை வாசல் வழியா ஆளுக்கு ஒரு பக்கம் சுலபமாக ஓடி மறைந்துகொள்வதற்கு வசதியாகவா, சரி!

### காட்சி — 2

[ரகசியக் கூட்டம் நடக்கிறது. சங்கரன், சுரேஷ், தாத்தா, பாட்டி, வேலைக்கார முனியன் ஆகியோர் கலந்து கொண்டிருக்கிறார்கள்.]

சங்: இப்போ, நாம எல்லோரும் யோசிக்க வேண்டியது என்ன வென்றால்....

பாட்டி (குறுக்கிட்டு): இந்தாப்பா, நான் விஷயத்தை ஒரே வார்த்தையிலே சொல்லுறேன். நீங்க எதை யோ சிச்சாலும்

2.3-1

# கந்தன் கருணை



திருமுருக கிருபானந்த வாரியார்

## 9. ஸ்கந்தன் ஆனான்!

முருகனுடைய பெயரின் சிறப்புகளை முன்பு கண்டோம். ஐயனது திருநாமங்கள் மற்றும் சிலவற்றின் பெருமையை இங்கு காண்போம்.

முருகப் பெருமானுக்குக் குமாரன் என்று ஒரு பெயருண்டு. குமாரன் என்ற சொல்லுக்கு மூன்று பொருள் உண்டு. 'மாரன்' என்றால் மன்மதன். 'கு' என்பது இகழ்ச்சியைக் காட்டும். தன் அழகால் மன்மதனை இகழ்ந்தவன் என்பது ஒரு பொருள்.

'கு' என்றால் உலகம். 'மா' என்றால் திருமகள். 'ர' என்றால் தருபவன். உலகில் செல்வம் பலவும் தருபவன் குமாரன். இது இரண்டாவது பொருள்.

குமாரன் என்பது குமரன் என்ற சொற் பொருளைத் தரும். அதாவது அழிவில்லாத இளமை உடையவன்; என்றும் இளையோனாய் விளங்குபவன் என்பது பொருள்.

முருகப் பெருமான் கங்கையில் பிறந்ததால் காங்கேயன் என வழங்கப் படுகிறார். கார்த்திகைப் பெண்கள் எடுத்துப் பாலூட்டி வளர்த்ததா[...] கார்த்திகேயன் எனப்படுவார்.

முருகப் பெருமானுக்கு ஏன் இ[...] வளவு அருமை பெருமை யென்று[...] சிவனும் அவனும் ஒன்று என்ப[...] தான். சுவாமி என்றால் முருகன் ஒரு[...] னைத்தான் குறிக்கும். அதனால்தா[...] அவன் இருக்கும் மலையை சுவாமிம[...] என்கிறோம். சுவாமி யென்றாலு[...] நாதன் என்றாலும் பொருள் ஒன்[...] தானே! சிவன் முருகன் இரண்டு[...] ஒன்றே என்பதால் சுவாமி, நாத[...] இரண்டையும் சேர்த்து ஒரு [...] ராகச் சொல்கிறோம்.

வெண்ணெய்தான் நெய் என்றா[...] நெய்யால்தானே வெண்ணெய்க்[...] பெருமை? நூல்தான் ஆடையென்[...] லும், ஆடையால்தானே நூலுக்[...] பெருமை? அதே போல் முருக[...] சிவபெருமானுக்குப் பெருமை.

சோமநாதனாகிய சிவபிரானுக்[...] கந்தன் பிரணவப் பொருள் [...] தேசித்துச் சுவாமிநாதன் ஆனான். கு[...] கோணத்தை அடுத்துள்ள சுவ[...]

மலையே தந்தைக்குத் தனயன் உபதேசித்த தலம். இத்தலத்தில் தந்தையைக் கோயிலின் கீழ்த்தளத்திலும், நம்பியை மேல் தளத்திலும் காணலாம். தந்தைக்கு உபதேசம் செய்ததால் முருகனுக்குத் 'தகப்பன் சுவாமி' என்றொரு பெயரும் உண்டு. தந்தையினும் பெருமை வாய்ந்தவன் என்பதையே இது குறிக்கும். பிரம்மண்யம் என்பது சிவபெருமானைக் குறிக்கும் என்றும், 'மேலான' பிரம்மண்யம் என்ற அடைமொழி சேர்ந்த ஸு-ப்பிரம்மணியம் என்பது கந்தனைக் குறிக்கும் என்றும் சொல்வர். ஐயன் பிரம்மத்தின் வடிவமாக விளங்குவதாலும் சுப்பிரமணியன் எனப்படுவார். வேதங்களுக்கும் வேதியருக்கும் நாயகனுக மறையின் மரபை ரட்சிப்பதாலும் சுப்பிரமணியன் என்ற பெயர் ஏற்பட்டுள்ளது.

சுப்பிரமணிய மந்திரத்தின் பொருளை எவ்வளவு கூறினாலும் முடிவு பெருது. அவ்வளவு பொருளையும் நாம் அறிந்திருக்க வேண்டும் என்ற அவசியமில்லை. மந்திரம் தெரிந்திருந்தாலே போதுமானது! மருந்தின் தராதரம் நமக்கெல்லாம் புரிவதில்லை யென்ருலும், உண்ட மருந்து உள்ளே போய்த் தன்னுடைய வேலையைச் செய்யத் தவறுவதில்லையே !

சிவபெருமானின் நெற்றிக் கண்ணிலிருந்து தோன்றிய அக்கினிப் பொறிகளின் வெப்பத்தைத் தாங்க முடியாமல் உமாதேவியார் ஓடினர் அல்லவா? அவ்வாறு அஞ்சி ஓடிய அம்பிகை, மாலயனுதி தேவர்கள் ஒரு திருக் குமாரர் வேண்டும் என்று சிவபெருமானிடம் விண்ணப்பித்துக் கொண்டதையும், அவ்வேண்டு கோளுக்கிணங்கிய எம்பெருமான் தமது நுதல் விழியிலிருந்து தீப்பொறிகளைத் தோற்றுவித்து, சரவணப் பொய்கையில் சேர்ப்பித் தருளியதையும் அறிந்தார்.

முருகன் தோற்றத்துக்குக் காரணமான தேவர்களின் பத்தினிகளும் தம்மைப் போலவே பிள்ளைப் பேறு வாய்க்கப் பெருதிருக்க வேண்டுமென அம்பிகை அப்போது சபித்தாராம். ஊன்றிப் பார்த்தால் இதில் சாபமில்லை; தம்மைப் போலவே தேவ மாதர் யாவரும் உயிரினம் முழுவதையும் குழந்தைகளாகக் கருதி தேவ சக்திகளைப் பரப்ப வேண்டுமென தேவி அருள் புரிந்ததாகவே தோன்றும்.

அக்கினிப் பொறிகளின் வெம்மை நீங்கியபின், கண்ணுதற் கடவுள் கருணை செய்து, உமாதேவியாரைத் தம் பக்கத்தே இருத்திக் கொண்டார்.

உமாதேவியார் அஞ்சியோடிய போது அவரது திருவடிகளின் சிலம்பிலிருந்து நவரத்தினங்கள் சிதறின. அந்த இரத்தினங்களெல்லாம் சிவபெருமானின் திருமுன் விளங்கின. அரனரின் திருவருளால், அந்நவமணிகளிலிருந்தும் அம்பிகையின் திருஉருவம் தோன்றியது. அவ்வுருவங்களை நோக்கிய சிவபெருமான், 'வாருங்கள்' என்று திருவாய் மலர்ந்தருளினர். ஒவ்வோர் இரத்தினத்திலிருந்தும் ஒவ்வொரு சக்தியாக நவசக்திகள் தோன்றினர்கள். உமாதேவியாரையொத்த அவர்கள், முக்கண் மூர்த்தியின் முளரியந்தாளை வணங்கினர். ஐயன் அருளால் கருத்தரித்தார்கள். இதனைக் கண்ட உமாதேவியார், அந்நவசக்திகள் மீது சினந்து, ''நீங்கள் எனக்கு மாருயினமையால், பல காலம் இக்கர்ப்பத்துடன் இருக்கக் கடவீர்'' என்று சபித்தார். சாபத்தைக் கேட்ட நவசக்திகளும் அஞ்சி நடுங்கினர்; உடல் வியர்த்தனர். சிவபெருமானது திருவருளால் நவசக்திகளின் வியர்வையினின்றும் இலட்சம் வீரர்கள் உதித்தார்கள். பொன்னுடை உடுத்தி, வாளையும் பரிசையையும் கரத்திலே ஏந்தி, இடியேறனைய சொல்லை உடையவர்களாயிருந்த அந்த வீரர்கள் கண்ணுதற்கடவுள் முன்சென்று, திருவடிகளை இறைஞ்சித் துதித்து நின்ருர்கள். ''மைந்தர்களே! அமரர்களுக்குப் பகைவர்களாகிய அசுரர்களை அழிக்க வந்த நமது புதல்வனுகிய முருக வேளுக்கு நீங்கள் யாவரும் படை வீரர்களாகுக'' என்று சிவபெருமான் அவர்களை நோக்கித்திருவாய்மலர்ந்



தருளினர். அந்த இலட்சம் வீரர்களும் நாடாளும் இறைவனிடம் பேரன்பு உடையவர்களாய்ச் சிவசந்நிதியை அகலாது திருத்தொண்டின் வழி நின்றார்கள்.

உமாதேவியாரால் சபிக்கப்பட்ட நவசக்திகள் நடு நடுங்கி, மலைவளர் காதலியை மன மொழி மெய்கரணங்களால் வழிபாடு செய்து கொண்டு, கருப்பத்தோடு பல காலம் இருந்தார்கள். அந்நவ சக்திகளின் கருவிலே உதித்தவர்கள் காளையர்களாகி, சிவபெருமானைச் சிந்தித்துத் தொழுது கொண்டிருந்தார்கள். அவர்கள் கருப்பத்தில் சிவயோகம் செய்து கொண்டிருந்ததால் அன்னையருக்கு மிகவும் பாரமாகியது. நவசக்திகள் அதனைத் தாங்க முடியாமல் வருந்தி, பார்வதி பரமேசுவரரைப் பணிந்து வேண்டினர். எம்பெருமான் தண்ணருள் புரிந்து, உமாதேவியாரை நோக்கி, ''உமையே, உன் காற்சிலம்பினின்றும் தோன்றிய இந்நவ சக்திகள் உன் சாபம் காரணமாக நெடுங்காலம் கருப்பத்தைச் சுமந்து துன்புற்றார்கள். இனி புதல்வர்களைப் பெறத் திருவருள் செய்க'' என்று பணித்தருளினர். அம்பிகை சினம் நீங்கிப் புன்முறுவல் பூத்தாள். ஈசுவரனும், தேவியும் எவ்வளவு அந்நியோந்நியமாக வாழ்கிறார்கள் என்பதைப் பாருங்கள். கருணை கொண்ட அம்பிகை நவசக்திகளை நோக்கி, ''இனி நீங்கள் ஆற்றலிற் சிறந்த அரும் புதல்வர்களைப் பெறக் கடவீர்களாக'' என்று திருவாய் மலர்ந்தருளினர். நவசக்திகளின் வயிற்றினுள் இருந்த வீரர்கள் இதனை அறிந்து யோகத்தை விடுத்தனர். உமாதேவியாரின் கருணை நிறைந்த திருமொழிகளைக் கேட்ட நவசக்திகள் அம்மையப்பரை வணங்கித் துதித்து அங்கிருந்து நீங்கிப் புதல்வரைப் பெற்றார்கள்.

நவசக்திகளில் மாணிக்கவல்லியிடத்துத் திரமிக்க வீரவாகுத் தேவரும், மௌத்திகவல்லியிடத்து வீரகேசரியும், புட்பராக வல்லியிடத்து வீர மகேந்திரரும், கோமேதகவல்லியிடத்து வீர மகேச்சுரரும், வைடூரிய வல்லியிடத்து வீர புரந்தரரும், வைரவல்லியிடத்து வீராக்கதரும், மரகதவல்லியிடத்து வீர மார்த்தாண்டரும், பவளவல்லியிடத்து வீராந்தகரும், இந்திர நீலவல்லியிடத்து வீரதீரரும் அவதரித்தார்கள். நவமணிகளின் பெயர் பூண்ட நாரீமணிகள் அளித்த இந்த வீரர்கள் ஒன்பது பேரும் சிவபெருமானுடைய திருவருளினலே தங்கள் அன்னையர்களது நிறத்தை உடையவர்களாய், பொன்னுடை ஆப ரணம் உடுத்தியவர்களாய், பல காலம் வளர்ந்த உறுப்புக்களோடு நவசக்தி களுடைய உந்தியின் வழியே நான் முகக் கடவுள் திருமாலின் திரு வுந்தியில் தோன்றியதுபோல் உதித் தார்கள். இவ்வண்ணம் உதித்த வீரர்க சிவபெருமானையும் உமாதேவியாரையு வணங்கி நின்றனர். எம்பெருமா உமாதேவியை நோக்கி, ''புவனே வரி! இவர்கள் நம் மைந்தர்கள் மிகுந்த அறிவுடையவர்கள்; ஆற் லுடையவர்கள்; இவர்கள் புதி வர்கள் அல்லர்; நந்திகணத்தல களே'' என்று திருவாய் மலர்ந்தரு ளுர். உமாதேவியார் அம்மைந்தர்களு குத் திருவருள் புரிந்தார். சிவபெருமா அவர்கள் எல்லோருக்கும் தனித் த வாள் கொடுத்து, ''ஓர் இலட் மைந்தர்களோடு நீங்களும் சேர்ந் உங்கள் தலைவனுகிய அறுமுகனுக் ஏவல் புரிந்து வருவீர்களாக'' என் அருளிச் செய்தார்.

இந்த ஒன்பது வீரர்களும், மு நவசக்தியரின் வியர்வையில் தோன் இலட்சம் வீரர்களும் முருகப் பெரு னுடைய திருக்கோயிலை அகலாது அ பணித்த பணியில் ஒழுகி வந்தனர்.

சிவபெருமான் நெற்றிக் கண் லிருந்து தீப்பொறி தோன்றியபோ பார்வதி தேவி உண்மையிலே அஞ்சி ஓடினரா? அல்ல. பார்வதி அ ஓடுவது போல் ஓடியது ஒரு நாட அவ்வாறு ஓடியதால்தானே பா சிலம்பிலிருந்து நவமணிகள் சிதறி, ந சக்திகள் தோன்றினர்? அதற்கா அம்பிகை ஓடினர். இச்சக்திகள் அ பிகையின் வேறு வடிவங்களேயா இதேபோல் உமாதேவியார் நவச யரின் கருப்பம் நீடிக்கச் சாபமிட்ட நன்மைக்காகவே. கருப்பத்திலே நன் ஊறிய குழந்தைதான் வல்லமையே இருக்கும். கருவில் வலிமையில் விட்டால் உருவிலேயும் வலிமை இ காது. இதற்குச் சான்று சகுந் சகுந்தலை மூன்று ஆண்டுகள் கருவ தாள். மூன்று ஆண்டுகள் கரு ஊறிய காரணத்தால், பிறந்த ஆ மாதத்திலேயே சிங்கக் குட்டிக பிடரிகளைப் பற்றி இழுத்து வ விளையாடினன் பரதன். இளமை ஞானம் பெற்ற பெரியார் சிலர் வில் நீண்ட நாள் ஊறியவர் சிவவாக்கியர் அப்படிப்பட்ட



# உங்கள் கேசம் உதிருகிறதா?

## இந்த மாதிரி அபாயக் குறிகள் அதை அறிவிக்கின்றன.



**கேசம் உதிருதல்**

உங்கள் ரோமம் உதிருகிறது, ஏனெனில், ரோமக்கால்களுக்குப் போதிய ஊட்டமில்லாததுதான்.



**இளமையில் வழுக்கை**

இந்நிலையை நீங்கள் அநேகமாகத் தவிர்த்திருக்கக்கூடும்

பொடுகு, ரோமம் உதிருதல் மற்றும் கேசம் குறைதல் முதலிய உபாதைகளால் நீங்கள் சிரமப்பட்டால் இன்றே ப்யூர் சில்விக்ரீன் உபயோகிக்கத் தொடங்குங்கள். ப்யூர் சில்விக்ரீனில் உங்கள் ரோமத்தின் வளர்ச்சிக்குத் தேவையான எல்லா பதினெட்டு 'அமினோ ஆஸிட்'களும் தீவிரமான வகையிலிருக்கின்றன. தலையில் நன்ருக அழுத்தித் தேய்ப்பதன் மூலம் ப்யூர் சில்விக்ரீன் ரோமக்கால்களில் புகுந்து அவைகளுக்குத் தேவையான இயற்கையான ஊட்டத்தையளித்து, கேசத்தை மறுபடியும் ஆரோக்கியமாக இருக்கச் செய்கிறது.

'ஆல் எபௌட் ஹெயர்' (All About Hair) என்ற, படங்கள் கொண்ட, இலவசப் புத்தகத்தை நீங்கள் பெற விரும்பினுல் தயவுசெய்து கீழ்க்கண்ட விலாசத்திற்கு எழுதவும்: டிபார்ட்மென்ட் K-2, சில்விக்ரீன் அட்வைஸரி சர்வீஸ் தபால் பை 10022, பம்பாய்-1




**ப்யூர் சில்விக்ரீன்**

கேசம் சம்பந்தமான உபாதைகளுக்குக் குணமளிக்கும் ஓர் மிகத் தீவிரமான தயாரிப்பு. ஒரு மாத கால வைத்தியத்துக்குப் போதுமானது.

---

**சில்விக்ரீன் ஹேர் டிரெஸிங்**

உங்கள் கேசத்தை நாள் பூராவுக்கும் நன்கு சீவியபடி வைக்கிறது. பொடுகு ஏற்படாமல் தடுப்பதற்குப் போதுமான ப்யூர் சில்விக்ரீன் கலந்துள்ளது.




# Silvikrin

சில்விக்ரீன்—கேச ஆரோக்கியத்துக்கான வழி

SP/1/P/7/65

விக்ஸிலிருந்து புதிய சக்திவாய்ந்த இருமல் மருந்து

# அடமுள்ள இருமலை நிறுத்துகிறது

இருமல் ஆரம்பமாகும் இடத்தில் செயல்புரிகிறது... இருமல் கட்டுப்பாட்டுக் கேந்திரத்தில்







எரிச்சலைக் கொடுக்கும், தூக்கத்தைக் கெடுக்கும் இருமலினால் நீங்கள் அவதிப்படவேண்டாம். இருமல், உங்கள் தொண்டையில் மட்டும் இருப்பதல்ல என்பது மருத்துவ விஞ்ஞானம் இப்போது அறிந்த விஷயம். உண்மையில், இருமல் கட்டுப்பாட்டுக் கேந்திரத்தில்தான் உங்கள் இருமல் அடங்கியிருக்கிறது. தொண்டை அழற்சி, சுவாசக் குழாய் அடைப்பு ஆகியவைகள் இருமல் கட்டுப்பாட்டுக் கேந்திரத்தைத் தூண்ட, நீங்கள் இரும ஆரம்பிக்கிறீர்கள்

இருமல்களை நிறுத்துவதற்கு இருமல் கட்டுப்பாட்டுக் கேந்திரம் அமைதியுடைய வேண்டியது அவசியம். விக்ஸ் பார்முலா 44-ல் உள்ள பிரத்தியேகமான "இருமல் சமனிகள்" உங்கள் இருமல் கட்டுப்பாட்டுக் கேந்திரத்தை விரைவில் அடைந்து, அதை சீக்கிரமே சமனப்படுத்த இருமல் நிற்கிறது.

அதேநேரத்தில், விக்ஸ் பார்முலா 44-ல் உள்ள சக்தி வாய்ந்த மருந்துகள் தீவிரமாக வேலை செய்து, அடைபட்டுள்ள சுவாசக் குழாயைத் திறந்து, வலிமிக்க மார்பு இறுக்கத்தை நீக்கி, தொண்டை எரிச்சலைப் போக்குகிறது.

விக்ஸ் பார்முலா 44 உங்களுக்கு இருமலிலிருந்து துரிதமான, நிவாரணத்தை அளிக்கிறது ... அடங்காத இருமலிலிருந்து விடுதலை பெற்று, நீங்கள் இரவு முழுவதும் சுகமாகத் தூங்குகிறீர்கள்.

**உங்கள் மார்பில் செயல்புரிகிறது**

விக்ஸ் பார்முலா 44-ல் உள்ள விசேஷ கூட்டுப் பொருள்கள் உங்கள் சுவாசக் குழாய்களில் ஆழ்ந்து வேலை செய்து வலிமிக்க மார்பு இறுக்கத்தை நீக்குகிறது.

**உங்கள் தொண்டையில் செயல்புரிகிறது**

விக்ஸ் பார்முலா 44 இருமலினால் தொண்டையினுள் ஏற்படும் வெடிப்புகளைத் துரிதமாகக் குணப்படுத்துகிறது. தொண்டை அழற்சியை உடனடியாகச் சமனப்படுத்துகிறது.

**உட்கொள்ளும் அளவு**

உட்கொள்ளும் சரியான அளவை அட்டைப்பெட்டியின் மேல் உள்ள விபரங்களைத் தயவு செய்து படியுங்கள்.




# விக்ஸ் பார்முலா 44

காஃப் மிக்ஸ்சர் இருமல் ஆரம்பமாகுமிடத்தில் செயல்புரிகிறது

VF-264.

எனவே, அம்பிகை வரத்தையே சாப மாக மறைத்துத் தந்தார் என்றறிதல் வேண்டும்.

முருகப் பெருமான் சரவணப் பொய்கையில் திருவிளையாடல் புரிந்து கொண்டிருந்த போது, சிவபெருமான் உமாதேவியாரை நோக்கி, ''உமையே! முன்பு நம் நெற்றிக் கண்ணிலிருந்து தோன்றி சரவணப் பொய்கையில் வளரும் உன் குமரனை நாம் இங்கே கொண்டு வருவோம்; வா'' என்று திருவாய் மலர்ந்தருளினர். அது கேட்ட அகிலாண்டநாயகி உவகையும், அன்பும் கொண்டாள். ''எம்பெரு மானே! நமது அருமைப் புதல்வனை நாம் இங்கு கொண்டு வருவோம்; எழுந்தருளுக'' என்று கூறினள். சிவ பிரான் எம்பிராட்டியுடன் இடபமீது ஏறியருளினர். அது கண்ட தேவர்கள் ''நம்முடைய தீவினைகளெல்லாம் கழிந் தன'' என்று உளம் உவந்து போற்றித் துதித்தார்கள். ஆலாலசுந்தரர் முதலிய கணத்தவர்களும், உருத்திரர்களும் வந்து இரு பக்கத்தும் நெருங்கித் துதித் தார்கள். திருமால், பிரமன், இந்திரன் முதலிய தேவர்கள் பூமாரி பெய்து திருவடிகளை வணங்கிக் கொண்டு புடைசூழ்ந்தனர். பூதர்கள் நானுவித வாத்தியங்களை முழக்கினர்கள். நான்கு வேதங்களும், பிரணவமும் பல கலை களும் ஒலித்தன; விஞ்சையர்கள் கீதம் பாடினர்கள். சந்திர சூரியர்கள் வெண் குடை பிடித்தார்கள்; பூதர்கள் சாமரம் வீசினர்கள்; நூறு கோடி கணங்கள் சூழ்ந்தார்கள்; இடபக் கொடிகள் நெருங்கிச் சென்றன; உமையம்மையுடன் இடப மீது ஏறிக் கொண்ட சிவபெருமான், கயிலையங் கிரியை விட்டுப் புறப்பட்டு இமய மலைச் சாரலில் உள்ள சரவணப் பொய் கையை அடைந்தார்.

அம்மையும் அப்பரும் ஆறுமுகங் கொண்ட முருகக் கடவுளுடைய ஆட லின் தன்மையைப் பார்த்துப் பார்த்துத் திருமுகம் மலர்ந்து திருவுளம் களித் தார்கள். பொய்கைக் கரையில் நின் றிருந்த அம்மையப்பரைக் கண்ட முருகக் கடவுளும் திருமுகம் மலர்ந்து திருவுளம் களித்தார். சிவபெருமான் உமாதேவி யாரை நோக்கி, ''நீ உன் புதல்வனைக் கொண்டு வருவாய்'' என்று பணித் தருளினர். பிராட்டியார் இடபவாக னத்தினின்று இறங்கி, அகில சராசரங்க ளிடத்தும் தாய்மையன்பு பிரவகிக்கும் இனிய உளத்திலே பொங்கி எழும் பேரன்புடன் சரவணப் பொய்கையை அடைந்தார். ஒவ்வொரு குழந்தை யாகத் தூக்கிக் கொஞ்சும் அளவுக்கு ஆசையைத் தேக்கி வைக்க முடியாத உமாதேவியார் அந்தக் குழந்தைகள் ஆறினையும் அப்படியே அள்ளியெடுத்து அணைத்துக் கொண்டார். அப்படி வாரி யெடுத்ததும் ஆறு குழந்தைகளின் உட லும் ஒன்றுக மாறியது; தலைகள் மட்டும் ஆறுகவே நின்றன. உலகை யெல்லாம் பேதமுறச் செய்து காட்டும் தேவிதான் அவற்றை ஒன்றுபடுத்திச் சேர்த்தும் வைப்பாள் என்பதன் தத்துவ விளக் கமே இது. தேவர்கள் பூமாரி பொழிந்து போற்றி வணங்கினர். ஆறுருவும் ஒன்ருனமையால் ஸ்கந்தன் என்னும் திருநாமத்தை முருகன் பெற்ருர். ஈசனின் கண்ணினின்று ஐயன் தோன்றி னுலும் அம்பாளின் அணைப்பினுல் அவன் பெயர்பெற்ற பெயரையே அவனது தலை சிறந்த நாமமாகக் கொண்டு இந்நூலை 'கந்த புராணம்' என்றே சொல்கிருேம். ஈசன் முருகனைத் தீப்பொறிகளாக வெளியே அனுப்பினர். தேவி தானே அவற்றை ஒன்று சேர்த்து அருகே கொணர்ந்தார்?

குழந்தையைக் கையில் எடுத்த பார்வதி தேவியார், குமரவேளுடைய முடிகள்தோறும் மோந்து அழகிய முதுகினைத் தடவித் திருமேனியினின் றும் சுரந்த பாலை நவரத்தினங்கள் பதித்த தங்கக் கிண்ணத்தில் ஏந்திப் பாலனுக்குப் பாலூட்டினள். கார்த் திகைப் பெண்களிடம் பாலுண்ட ஞான பண்டிதன், இப்போது உமா தேவியாரிடம் ஞானப் பால் உண்கிருன்! அன்னையின் திருப்பால் இறைவ னுடைய கருணையின் வடிவம்; குற்ற மற்ற தூய ஞானமே அது. அதனை உண்ட முருக வேள், ஞான பண்டித சுவாமியாகவும், சிவபெருமானுக்கே குருவாகவும் விளங்கினர்.

**ஆதிநாயகன் கருணையாய்**
**அமலமாய்ப் பரம**
**போத நீரதாய் இருந்த**
**தன் கொங்கையில் பொழிபால்**
**ஏது இலாததோர் குருமணி**
**வள்ள மீதேற்றுக்**
**காதல் மாமகற்கு அன்பினுல்**
**அருத்தினள் கவுரி**

குமரவேளுக்குப் பார்வதி தேவியார் பாலூட்டியபின், கந்தக் கடவுளை எம்பெருமான் திருமுன்னே கொண்டு

போய் வணக்கம் செலுத்துமாறு கூற, முருகப் பெருமான் சிவபெருமானை வணங்கி நின்றார். இறைவன் தம் திருக் கரங்களினால் குமரக் கடவுளை எடுத்து மார்பில் அணைத்துப் பெருங் கருணையோடு தம் பக்கத்தில் இருத்தி அருளினார். பின்பு பிராட்டியாரையும் திருக்கரத்தால் எடுத்துத் தமது இடப் பக்கத்தில் இருத்தியருளினார். அம்மை யாருக்கும் அப்பருக்கும் இடையில் குமாரமூர்த்தி எழுந்தருள சிவபெரு மான் சோமாஸ்கந்தமூர்த்தியாக (உமை ஸ்கந்தர் இவர்களுடன் கூடிய ஈசனாக) இனிது வீற்றிருந்தார். சத்து, சித்து, ஆனந்தம்—அதாவது உண்மை, அறிவு, இன்பம் இவற்றின் வடிவமே சோமாஸ் கந்த மூர்த்தம். உண்மை என்பது சிவ பெருமான், அறிவு என்பது சக்தி, இன் பம் என்பது முருகன். மூன்றும் சேர்ந்து மோட்சமாகிய சச்சிதானந்தம்.

பகலும் இரவும் அந்திப் பொழு தும் போல இறைவனும், அன்னையும் குமரப் பெருமானும் கலந்து சோமாஸ் கந்தமாக அமைந்தனர் என்று கந்த புராணம் வர்ணிக்கிறது.

**ஏலவார்குழல் இறைவிக்கும்**
**எம்பிரான் தனக்கும்**
**பாலனாகிய குமரவேள்**
**நடுவுறும் பான்மை**
**ஞாலமேல் உறும் இரவோடு**
**பகலுக்கும் நடுவாய்**
**மாலையான தோன்று அழிவின்றி**
**நிற்குமாறு ஒக்கும்**

'முருகன்' என்ற பெயரில் வல்லினம், இடையினம், மெல்லினம் ஆகிய ஒவ் வொன்றிலும் ஒவ்வோர் அட்சரம் உண்டு என முன்பு கூறினோம். வல்லமை பொருந் திய ஈசன் வல்லினம்; மென்மை மிகுந்த தேவி மெல்லினம்; இருவர்க்குமிடையே இரண்டு குணமும் கூடிப் பொலிந்தவன் முருகன். 'முருக' என்ற பெயரின் முதலெழுத்தான 'மு' இடையினத் தையே சேர்ந்ததல்லவா?

இடப்பத்தின் மீது அரனாருக்கும் அம்பிகைக்கும் இடையே ஆறுமுகப் பெருமான் எழுந்தருளி இருத்தலைக் கண்டு, திருமால், பிரமன், இந்திரன் முதலிய தேவர்கள் கடல் போல் ஆரவாரித்து, பக்கத்தும் முன்னும் பின் னுமாக நெருங்கி, "குமார சுவாமியே! அடியேங்கள் சூரபன்மனால் மிகவும் வருந்திக் கொண்டிருக்கிறோம். தாங்கள் ஆட்கொண்டருள வேண்டும்" என்று அவதார காரியத்தை நினைவூட்டுவது போல் விண்ணப்பம் செய்து பூமழை பொழிந்து வணங்கித் துதித்தார்கள்.

அப்பொழுது கார்த்திகைப் பெண்கள் சிவபெருமானைப் பேரன்போடு வணங்கி நின்றனர். இறைவன் அவர்கள் மீது திருவருள் நோக்கஞ் செய்து, "நமது குமாரனாகிய இவன், உங்களால் வளர்க்கப்பட்டமையால் கார்த்திகேயன் எனப் பெயர் பெறுவான். யாராயினும் உங்கள் கார்த்திகை நட்சத்திரத்தில் இவனை வழிபட்டால் வேண்டிய வரங் களைக் கொடுத்து, முத்தியை அருளச் செய்வோம்" என்று திருவாய் மலர்ந் தருளினார்.

உமாதேவியார் தம்முடைய திருக் குமாரரைச் சென்று தழுவிய பொழுது பேரன்போடு சுரந்த பால் சரவணப் பொய்கையில் சிந்திப் பெருகிப் புகுந்தது. அந்தப் பாலையுண்ட ஆறு மீன்கள் ஆறு முனிவர்களாக வடிவம் கொண்டு சிவ பெருமானைத் துதித்தன. இதனைக் கண்ட உமையம்பிகை வியந்து நின்றார்; மீன்கள் முனிவர்களாக மாறியதன் காரணத்தைப் பரமேசுவரனிடம் கேட் டாள். இது தேவிக்குத் தெரியாத விஷயமல்ல என்றாலும், சிவபெருமா னின் அமுதவாக்கால் கேட்க வேண் டும் என்று விரும்பினார்.

"வசிஷ்டரின் குமாரர் சக்தி முனிவர். இளமையிலேயே இறந்து விட்டார். அப்போது கருவுற்றிருந்த அவரது மனைவி பெற்றெடுத்த பிள்ளை பராசரர். இவருக்கு, தப்தர், அனந்தர், நந்தி, சதுர்முகர், சக்ரபாணி, மாலி என்று புதல்வர்கள் அறுவர். இந்தக் குழந்தைகள் அறுவரும் தண்ணீரில் விளை யாடிய பொழுது மீன்கள் இறந்து போயின. இதனை அறிந்த பராசர முனிவர், "மீனாகக் கடவது" என்று தம் குழந்தைகளுக்கே சாபம் கொடுத் தார். சொந்த மக்களென்றும் ஏனை யோர் என்றும் முனிவர்களுக்கு வித்தி யாசம் கிடையாது. அதனால் சபித் தார். குழந்தைகள் செய்த பிழை சிறிது தான்; அதற்கு அவர்களடைந்த தண்ட னையோ பெரிது. தங்கமேயானாலும் அடித்து நீட்டினாலன்றி ஆபரணமாகச் செய்ய முடியாதல்லவா? தண்டனையா லேயே மக்கள் மேன்மை பெறுவ



ரென்றே பராசரர் இப்படி அவர்களைத் தண்டித்தார்.

மீன்களாய் மாறிய பராசர குமாரர்கள், "எத்தனைகாலம் நாங்கள் மீனாக இருக்க வேண்டும்?'' என்று கேட்க, ''சரவணப் பொய்கையிலே முருகன் அவதரித்ததும் அவனுக்குஊட்டப்படும் ஞானப்பால் சிந்தும். அதனை நீங்கள் சுவைத்தால் சாபம் நீங்கும்'' என்று பராசரர் கூறினர்.

ஈசன் இவ் வரலாற்றைப்பார்வதி தேவிக்குக் கூறினர்.

சிந்தை மகிழச் சிவபிரானை நோக்கிப் பராசர புதல்வர் அறுவரும் துதித்தனர். இறைவன் அவர்களை நோக்கி, "நீங்கள் திருப்பரங்குன்றம் என்னும் மலையிலே தவம் செய்து கொண்டிருங்கள். விரைவில் நம்முடைய குமாரனுகிய கந்தன் அங்கு வந்து உங்களுக்கு அருள் செய்வான்'' என்று திருவாய் மலர்ந்தருளினர். பராசர குமாரர்கள் அவ்வாறே அகன்றனர்.

கார்த்திகைப் பெண்களுக்கும் திருமால், பிரமன் முதலிய தேவர்களுக்கும் அவரவர் இடங்களுக்குச் செல்லுமாறு சிவபெருமான் விடைதந்து, கயிலாயத்தையடைந்து, முருகக் கடவுளோடும், உமா தேவியாரோடும் இடப வாகனத்தினின்றும் இறங்கிச் செம்பொன் திருக் கோயிலினுட் சென்று சிங்காசனத்தின்மீது வீற்றிருந்தருளினர். நவ வீரர்களும், இலக்க வீரர்களும் தங்கள் தமையனுராகிய கந்தப் பெருமானைப் பூசித்துவணங்கி, அவர் தொண்டின்வழி நின்றனர்.

(தொடரும்)

# மதுர கவியின் நூல்கள்

'தமிழெனும் அளப்பருங் கடல்' என்றும்—'என்றுமுள தென்றமிழ்' என்றும் புலவர் பெருமக்கள் பெருமையும் எல்லையும் கூறிப் புகழ்ந்த தமிழ் மொழியில் தலைமுறை தலைமுறையாகக் காவியங்களையும், சிறு பிரபந்தங்களையும் இயற்றியளிக்கும் கற்பகக் கவிஞர்கள் பலர் தோன்றியிருக்கின்றனர். அவர்களில் நரகவி பாடாமல் வரகவி பாடிய பெருந்தன்மையாளர் சிலர். சிற்றரசர்களையும், பேரரசர்களையும் வள்ளல்களையும் புகழ்ந்து கவிதை புனைந்தவர் பலர். முன் வகையைச் சேர்ந்த—தெய்வக் கவிகளைப் பாடிய பிற்காலத் தெய்வப் புலவர்களில் முற்காலத்து ஆழ்வார்களோடு ஒப்பிடத்தக்க அருள் நயமும், வாக்கு வனப்பும், பாட்டு நினைப்பும் பொருந்தப் பாடிய சில அருந்தமிழ்க் கவிஞர்களும் உண்டு. ஆழ்வார்களையும், நாயன்மார்களையும் போலத் தமிழைப் பிற்காலத்தே பேணிய அத்தகைய கவிஞர்களில் தென்பாண்டிச் சீமையிலே மதுரை மாவட்டத்திலே அனுமந்தன்பட்டியிலே தோன்றிய மதுரகவி சீநிவாசனுரும் ஒருவர். குடிச் சிறப்பும், குணச் சிறப்பும் மிக்க இப்பெரியார் பழம்பெரும் தேசபக்தர் அனுமந்தன்பட்டி கிருஷ்ணசாமியாருக்குச் சகோதரரும் ராஜயோகி விலட்சணனந்தருக்கு மாமனும் ஆவார். மருத்துவம், சோதிடம், காவியம் ஆகிய மூன்று துறைகளிலும் வல்லவராயிருந்த புலவர் மதுரகவியார் இராமாயண வெண்பா, பாகவத வெண்பா, ருக்மாங்கத சரிதம், நாரதீய புராணம், கீதை வெண்பா, பாதுகா சஹஸ்ரம், அநுமக் கலம்பகம், நூற்றெட்டுத் திருப்பதித் திருப்புகழ், கோதாஸ்துதி போன்று ஏறத்தாழ இருபத்தையாயிரத்துக்கும் மேலான பல தமிழ்க் கவிதைகளை இயற்றித் தமிழன்னைக்கு அணி செய்துள்ளார். கையெழுத்துப் பிரதிகளாகவும், அச்சேருச் சுவடிகளாகவும் உள்ள இப்பிரபந்தங்களை யெல்லாம் அச்சு வாகன மேற்றித் தமிழ்ப் பெருமக்களுக்கு வழங்குவதற்காகக் கைராசி மிக்கவரும், மதுரகவி சீநிவாசனர் தோன்றிய அதே உத்தமபாளையம் வட்டாரத்தில் தோன்றியவரும் பல பேராலயங்களுக்குத் திருப்பணி புரிந்து வெற்றிகண்ட அருட்பணியாளருமான தமிழவேள் **திரு பி. டி. ராஜன்** அவர்கள் தலைமையின் கீழ் 'மதுரகவி நூல்கள் வெளியீட்டுக் குழு' ஒன்று அமைத்திருக்கிறர்கள். தாராள மனம் படைத்த தமிழன்பர்கள் இந்தக் காவியத் திருப்பணிக்குப் பொருட்பணி நல்குமாறு வேண்டப் படுகிறுர்கள். பொருட்பணி நல்குவோர், **டி. நாராயணன், மதுரகவி சீநிவாசனர் நூல் வெளியீட்டுக் குழுவின் பொருளாளர், 35, நரசிங்கபுரம், சென்னை-4** என்ற முகவரிக்கு அனுப்புமாறு குழுவினரால் வேண்டப்படுகிறர்கள்.



மதுரகவி சீநிவாசனர்

# கால்கேட்டின் மூலம் நாள் முழுவதும் வாய் துர்நாற்றத்தை அகற்றி பற்கள் சொத்தையாவதையும் தடுங்கள்!




ஏனெனில் ஒரே தேய்ப்பில் கால்கேட் டெண்டல் க்ரீம், துர்நாற்றத்தையும், சொத்தையையும் உண்டாக்கும் கிருமிகளில் 85 சதவிகிதத்தை ஒழித்துவிடுகிறது.

கால்கேட், 10ல் 7 சந்தர்ப்பங்களில் உடனடியாக வாய் துர்நாற்றத்தை அகற்றுகிறது என்பதையும், உணவு உட்கொண்டவுடன் கால்கேட்டினால் பற்களைத் துலக்கும் முறையால், இது வரை பற்பசை வரலாற்றிலேயே கண்டிராத பெருமளவில் ஏராளமானவர்களுக்குச் சொத்தை தடுக்கப்படுகிறது என்பதையும் விஞ்ஞான ஆராய்ச்சிகள் நிரூபித்துள்ளன. இந்த சாதனை கால்கேட் ஒன்றுக்குத் தான் உண்டு.

கால்கேட்டின் நீடித்திருக்கும், நூதன நறுமணத்திற்காக, குழந்தைகள் அதனாலேயேப் பல் துலக்க விரும்புகிறார்கள்.

பரிசுத்தத்திற்கும், வாயில் நறுமணம் கமழவும், வெண்மையான பற்களைப் பெறவும் வழக்கமாக கால்கேட்டினால் பல் துலக்குங்கள்.

நீங்கள் பற்பொடியை விரும்பினால், இந்தப் பலன்கள் அனைத்தையும் கால்கேட் டூத் பவுடர் மூலம் அடையலாம். ஒரு டப்பி பல மாதங்களுக்கு வரும்.




... உலகிலேயே பெரும்பாலானவர்கள் மற்றெல்லாப் பற்பசைகளையும் விட, கால்கேட் டெண்டல் க்ரீமையே வாங்குகிறார்கள்.

DCG-36-TAM.

SWARAJYA



The 1965 Swarajya Annual will be published on January 23, the birth anniversary of the late Khasa Subba Rau, founder Editor of the Swarajya weekly. A number of eminent publicists and authorities in their subjects will be contributing articles to the Annual, touching current political, economic, social and cultural subjects, and provide readers with a varied fare.

*The following are the contributors to the Annual :*

Rajaji, His Highness Maharaja of Mysore, Dr. C. P. Ramaswamy Aiyar, Mr. K. M. Munshi, Mr. M. R. Masani, Mr. M. A. Sreenivasan, Acharya J. B. Kripalani, Mr. N. Dandekar Prof. M. Ruthnaswamy, Acharya N. G. Ranga, Mr. Frank Moraes, Prof. P. Mahadevan, Prof. Amal Desai, Prof. R. Bhaskaran, Dr. B. N. Ganguly, Mr. Philip Spratt, Sri K. Santhanam, Sri P. Kodanda Rao, Sri M. K. Nambyar Sri S. Narayanaswamy, Mr. A. D. Shroff, Prof. B. R. Shenoy Mr. Reed J. Irvine, Dr. A. Hunold, Prof. Allan G. B. Fisher Mr. S. Y. Krishnaswamy, Mr. K. P. Goenka, Dr. D. V. Gundappa, Prof. P. T. Bauer, Prof. Jochimsen, Dr. Amiya Chakravarty, Sri Sri Prakasa, Mr. Phiroze J. Shroff Prof. K. R. Srinivasa Iyengar, Mr. R. K. Narayan, Prof. M. A. Venkat Rao, Mr. V. K. Narasimhan, Mr. Krishna Kripalani, Dr. K. Sankaran.

*Choice illustrations will add to the interest of the Annual*
*Printed on Imitation Art Paper-240 pages Demi Quarto size*

Price Per Copy Rs. **5/-**

*75 Ps. extra per copy if sent by registered post*

*Please register your copy in advance with your nearest local agent foa Kalki & Swarajya or with*

**Manager, Swarajya, Kalki Buildings, Madras-10**

1965
Annual Number

# கந்தன் கருணை

## 10. விசுவரூபமும் வீராபிஷேகமும்

சிவபெருமானுக்கும் பார்வதி தேவியாருக்குமிடையே எழுந்தருளியிருந்த முருகக் கடவுள் தம் தம்பியரோடு பற்பல திருவிளையாடல்கள் செய்யத் திருவுளம் கொண்டருளினர்.

கந்தப் பெருமான் கழலிணைகளிலே தண்டையும் கழலும் சதங்கையும் ஒலித்தன. திருவரையிலே கிங்கிணி இசைத்தது. திருச்செவிகளிலே குண்டலமும், திருமார்பிலே மதாணியும், திருநெற்றியிலே வீரபட்டிகையும் விளங்கின. இத்தகைய அலங்காரங்களுடன் கந்தன் தம் கருணையினால் திருவிளையாடல் புரிந்தார்.

இளம்பூரணனும் எம்பெருமான் சிறிது அசைந்து ஆடல் புரிகின்றபோது அப்பெருமானுடைய திருஅரையில் கட்டிய தங்கமணிகளாகிய கிண்கிணிகள் ''கல்'', ''கல்'' என்று அசைய, அந்த இன்னேசை பதினாலு உலகங்களிலும் பரவியது.

'உலகமுண்ட நாராயணரது நலம் புரியும் வலம்புரிச் சங்கத்தின் ஓசை அருகில் இருந்த கற்பகச் சோலையும் தடாகமும் மட்டுமே கேட்டன. மலைகள் பிளக்குமாறு திருவிளையாடல் புரியும் இச்சிறிய பெருந்தகையின் கிண்கிணியின் இனிய நாதம் ஈரேழு பதினாலு லோகங்களிலும் கேட்டது' என்று அருணகிரிப் பெருந்தகை அருளிச் செய்கின்றார்.

**மண்கமழ் உந்தித் திருமால் வலம்புரி ஓசையந்த**
**விண்கமழ் சோலையும் வாவியுங் கேட்டது.**
**வேலெடுத்துத்**
**திண்கிரி சிந்த விளையாடும் பிள்ளைத் திருவரையிற்**
**கிண்கிணி ஓசை பதினாலுலகமுங் கேட்டதுவே**

கந்தக் கடவுள் மன்றங்களிலும் குன்றங்களிலும் உலவுவார்; சோலைகள், ஆறுகள், கடல்கள், தடாகங்கள் தோறும் சென்று உலவுவார்; சிவத் தலந்தோறும் உலவுவார்; வட மொழி தெ



மொழி கற்கும் கழகந்தோறும் கடிகை தோறும் உலவுவார்; மண்ணில் உலவு வார்; திக்குகளில் உலவுவார்; சந்திர சூரியர் முதலிய கிரகங்களும் நட்சத் திரங்களும் உள்ள இடங்களில் உலவு வார்; இந்திர லோகத்தில் உலவுவார்; பிரமலோகத்தில் உலவுவார்; நாராயண ரது உலகத்தில் உலவுவார்; சிவலோகத் தில் உலவுவார்; பிருதிவி அண்டங்கள் எங்கும் உலவுவார்; அப்பு அண்டங்க ளெங்கும் உலவுவார்; தேயு, வாயு அண் டங்களிலும் மற்றைப் புவனங்களிலும் உலவுவார்; ஆறுமுகங்கொண்டு பல ராய்த் திரிவார்; ஒரு முகங்கொண்டு ஒருவராய்த் திரிவார்; வேதியராகத் திரிவார்; வீரராயும், முனிவராயும் திரி வார்; திருவடிகளால் நடந்து செல்வார்; குதிரை, யானை, யாளி, தேர், விமானம் ஆகியவற்றின் மீதும் செல்லு வார்; மேகத்தின் மீது செல்லுவார்; மணியசைப்பார்; வீணை வாசிப்பார்; குழல் ஊதுவார்; கல்லையும் கனிய வைக்கும் இசை பாடிக் கூத்தாடுவார்.

மன்றுதோ றுலாவுமலர்
வாவிதோ றுலாவுந்
துன்றுசிறு தென்றல்தவழ்
சோலைதோ றுலாவும்
என்றுமுல வாதுலவும்
யாறுதோ றுலாவும்
குன்றுதோ றுலாவுமுறை
யுங்குமர வேளே

இவ்வாறாக, கந்தக் கடவுளின் திருவிளையாடல்கள் நாள்தோறும் பெரு கின. கந்தக் கடவுளின் திருவிளையாடல் களைக் கண்டு வியந்த உமாதேவியார், சிவபெருமானை வணங்கி, "எம்பெரு மானே! நம் குமரன் இச்சிறு குழவிப் பருவத்தே செய்யும் திருவிளையாடல்கள் அதியற்புதமாக இருக்கின்றன. இதனை எண்ணிப் பார்க்கின்றபொழுது, மாயை யில் அவன் தங்களுக்கு ஒப்பானவன் எனக் கருதுகிறேன்; அவனுடைய பெரு மையைத் திருவாய் மலர்ந்தருள வேண் டும்" என்று ஒன்றும் அறியாதவர் போல் வேண்டிக் கொண்டார்.

"உமையே! எல்லா உயிர்களும் இவ்வுண்மையை அறிந்து உய்யும் பொருட்டு உன் குமரனது இயல்பை நீ வினவினாய். நாம் அதனை மகிழ்ச்சியுடன் கூறுவோம்.

"தாரகப் பிரம்மமாயுள்ள நமது ஆறெழுத்தும் ஒன்றாகி உன் குமரனு டைய மந்திரமாகிய சடக்ஷரமாயிற்று. கந்தக் கடவுள் நமது சத்தியே; அவ னுக்கும் நமக்கும் வேற்றுமை யில்லை. அவன் நம்மைப் போல் யாண்டும் நீக்க மற நிறைந்திருக்கிறான். அவன் பாலன் போலத் தோன்றினாலும் எல்லாவற்றை யும் உணர்ந்த முற்றறிவினன். தன்னை அன்போடு வழிபடுவோர்க்குச் செல்வத் தையும், ஞானத்தையும் முக்தியையும் கொடுக்க வல்லவன்.

"ஆதலின் நமது சத்தி
அறுமுகன்; அவனும் யாமும்
பேதகம் அன்றால்; நம்போற்
பிரிவிலன்; யாண்டும் நின்றான்;
ஏதமில் குழவி போல்வான்;
யாவையும் உணர்ந்தான்; சீரும்
போதமும் அழிவில் வீடும்
போற்றினர்க்கு அருளவல்லான்."

இவ்வுலக இன்பமனைத்தும் தருப வள் உமையாகிய அன்னை. மறுவுலக இன்பம் தருபவன் சிவமாகிய அப்பன். குமாரனே இம்மை, மறுமை இரண்டை யும் தருவான் என்கிறார் அருணகிரி நாதர். இரு பயனும் தருவது அவனது சடக்ஷர மந்திரம் என்பதையும் உணர்த்துகிறார்.



''வசன மிக வேற்றி — மறவாதே
மனது துயர் ஆற்றில் — உழலாதே
இசை பயில் சடாட்சர — மதாலே
இகபர சௌபாக்கியம் — அருள்வாயே''

சிவபெருமான் உமையம்மையிடம் மேலும் கூறுவார்: ''பார்வதி தேவி! யான் ரூபமற்ற நிட்களன்; நீ அழிவிலா சத்தி. படைத்தல், காத்தல், அழித்தல், இம்மூன்றும் அடங்கும் மாயா லீலை யான திரோபவம், இந்நான்கினின்றும் பக்தரை விடுவிக்கும் அநுக்கிரகம் ஆகிய ஐந்தொழிற்கு அதிபனாக, ஐந்து முக முடைய சதாசிவனாக யாம் இருக்கி றோம். நீ பலவாறாக இருப்பினும் ஒரு முகமுடைய பரமேசுவரி. குமரன் உனது ஸ்வரூபத்தையும் எனது ஸ்வரூபத்தை யும் ஒருங்கே கொண்டுள்ளான். ஆத லால், அவன் ஆறுமுகன் எனப்படுகின்ற னன்; அவன் ஐந்தொழில்களையும் விளை யாட்டாகவே புரிகின்றனன்.

''பிரியமுள்ள கல்யாணி! இச்சகத் திடை வாழும் தேவர், மனிதர், மிருகம் முதலிய உயிர்களிடத்து வீரியம், செல்வம், அழகு, கல்வி, அறிவு என்ப வற்றுள் எத்துணை யெத்துணை உள்ள னவோ, அவையனைத்தும் குமரனுடைய மகிமையே. முருகன் பெருமையை உனக்குச் சுருங்கச் சொன்னேன்; விரித் துச் சொல்வதாயிருந்தால் நூறு கோடி வருஷத்துக்கும் முடிவு பெறாது.''

''யத்ர யத்ர ஜகத்யஸ்மிந் தேவதிர்யங்
நராதிஷு!
வீர்யம் ஸ்ரீரதி காந்திர் வித்யா
ஞாநாதிகம் ப்ரியே!
தத் ஸர்வ மஸ்ய கல்யாணி விபூதிரதி
நிச்சிதம்!

என்று கூறியருளினார். உமாதேவியார் தம் அருமைத் திருக்குமாரருடைய பெருமையைக் கேட்டுத் திருவுளம் மகிழ்ந்து பூரித்தார்.

முருகப் பெருமான் உலகெங்கும் சென்று அரிய திருவிளையாடல் புரிந் தார். மலைகள் அனைத்தையும் ஒரே இடத்தில் கொண்டு வந்து சேர்ப்பார்; பின்னர் அம்மலைகளைத் தலைகீழாகப் பூமியில் நிறுத்துவார். ஏழு கடல்களை யும் ஒன்றாக்குவார். சக்ரவாளகிரியைப் பாதாளத்தில் புகுத்துவார். கங்கை நதியை ஓட விடாமல் அடைப்பார். பாதாள லோகத்தில் உள்ள அஷ்ட நாகங்களையும் பிடித்து மேருமலை முதலிய பெரிய மலைகளில் பூட்டித் தேராக உருட் டிச் செல்வார். திசைகளில் உள்ள ஐரா வதம் முதலிய எட்டு யானைகளையும் கொண்டு வந்து ஒன்றோடொன்று போர் புரியுமாறு செய்வார். கருடனை யும் வாசுகியையும் பிடித்து ஒன்றோ டொன்று போர் புரியுமாறு செய்வார். சூரியனைச் சந்திர மண்டலத்திலும், சந் திரனைச் சூரிய மண்டலத்திலும் சேர்ப் பார். மேகங்களுக்குள் இருந்த மின்னல் களையும் இடிகளையும் பறித்து மாலை யாக்கித் தரித்துக் கொள்வார். ஆகா யத்தில் செல்லும் விற்கள் இரண்டை யும் பிடித்து, கிரகங்கள் நட்சத்திரங்கள் இவற்றை உருண்டைகளாக்கி தேவர் களது தலை, மார்பு, கழுத்து, முகம் இவைகளைக் குறியாகக் கொண்டு எய்து வில் வன்மையைக் காட்டுவார். சுராசுரர்கட்கும், நரர்கட்கும் யாதொரு தீங்கும் நேராத வண்ணம் குமரக் கடவுள் திருவிளையாடல்களைப் புரிந்தார்.

ஆறுமுகப் பெருமானின் திருவுரு வத்தைக் காணாமல் திருவிளையாடல்க ளாகிய பெரும் செயலை மட்டும் உணர்ந்த தேவர், வியப்புற்று, மேரு மலையிலிருந்த தேவேந்திரனிடத்து இவ் வதிசயங்களைத் தெரிவித்தனர். ''நாம் எல்லோரும் சென்று பிரம்மதேவரிடம் கேட்போம்'' என்றான் இந்திரன். தேவர்கள் உண்மையான தவம் புரிந்த வர்களாதலால் அவர்கள் கண்களுக்குத் தெரியும்வண்ணம் ஆறுமுகக் கடவுள் ஒரு திருமுகமுடைய பாலராக வந்து அங்கு தோன்றினார்.

தாம் முருகன் என்பதை உணர்த்தா மலே மேரு மலையை அசைத்து அதன் கொடுமுடிகளைத் தாமரை இதழ்களைக் கொய்வது போல் கொய்து வீசினார் எம்பிரான். இந்திரன் முதலிய இமை வர்கள், 'மண்ணுலகத்தையும் விண்ணுலகத்தையும் மாறுபடச் செய்த வன் இவனே. இவனது ஆற்றல் அசுரர்களின் ஆற்றலைக் காட்டிலும் கொடியது. இவனைப் பாலன் என்று கருதாமல் போர் செய்து வெல் வோம்' என்று தீர்மானித்தார்கள். யாருக்காகத் தவமிருந்து பிரார்த் தித்தனரோ அவனையே எதிர்க்க முற் பட்டனர். இப்படித்தான் நாமும் ஆண்டவன் செயல் எது என்று அறியா மல் யார் யாரிடமோ பகை கொள் கிறோம். நமக்கு அவன் போதனையாக அளிக்கும் இன்னல்களைத் தீங்காக எண்ணி வருந்துகிறோம்.

அக்கினி மலையைச் சூழும் கொசுக் களைப் போல் தேவர்கள் முருகப் பெரு மானைச் சூழ்ந்து கொண்டனர். இந் திரன் போர்க் கோலம் பூண்டு தன் வெள்ளை யானை மீது ஏறி, குலிசம், வாள், வில், வேல் என்னும் ஆயுதங் களைத் தாங்கிச் சென்று முருகக் கட



ளோடு போர் செய்யத் தொடங்கினான். தேவர்களுக்காக அசுரருடன் போராடவே தோன்றிய ஐயனும் தேவருடனேயே போராட எண்ணம் கொண்டார். இந்திரன் ஏவிய ஆயுதங்கள் பூக்களைப் போல் முருகக் கடவுள் மீது விழுந்தன. அதனைக் கண்ட இந்திரன் வஜ்ராயுதத்தை எய்து ஆரவாரித்தான். அது முருகப்பெருமான் மீது பட்டு மணல் போலப் பொடியாயிற்று. அவனது ஐராவதம் கர்ஜித்துக் கொண்டு முருகன் திருமுன் சென்றது. அதனைக் கண்ட கந்தப் பெருமான், சங்கல்ப மாத்திரத்தில் ஒரு வில்லையும் பல கணைகளையும் படைத்து, கர்ஜித்து வந்த யானை மீது ஒரு கணையை விடுத்தார். அது யானையின் நெற்றியில் புகுந்தது. யானை புலம்பி வீழ்ந்து மடிந்தது. ஐராவதம் விழ்ந்து மடிந்ததைக் கண்ட இந்திரன் பெரிதும் வருந்திச் சினமே மிகுந்தான். அவன் கோபத்துடன் தனது வில்லை வளைக்க இந்திரனின் தோள் மீது முருகப் பெருமான் ஒரு கணையை விடுத்தார். அக்கணை பட்டதும் இந்திரன் தனது ஆற்றலை இழந்தான். ஒருவாறு வேலை எம்பெருமான் மீது விடுத்தான். அது சிறு புல்லைப் போல் சென்று அழிந்தது. இந்திரன் வீழ்ந்தான். வருணன்மீது முருகப் பெருமான் நான்கு அம்புகளை விடுத்தார்; வருணன் இறந்தான். இயமன் மீது ஐந்து அம்புகளை விடுத்தார்; இயமன் இறந்தான். சந்திரன் இறந்தான். வாயு, அக்கினி யாவரையும் வதம் செய்தார். எஞ்சிய தேவர்கள், ''இவன் ஒருவனே எல்லோரையும் கொன்று விடுவான்'' என்று மனம் கலங்கி ஓடி ஒளிந்தார்கள். ஆறுமுகப் பெருமான் போர்க்களத்தில் சர்வசங்கார காலத்துக் காலாக்கினி ருத்திரரைப் போலத் தனித்து நின்று உலவினார்.

இவற்றை யெல்லாம் கண்ட நாரத முனிவர், கருணையின் மிகுதியினால் தேவகுருவாகிய வியாழ பகவானிடம் ஓடினார்; நிகழ்ந்தவற்றை யெல்லாம் கூறினார். அது கேட்ட தேவகுரு, போர்க்களத்துக்கு ஓடினார். அங்கே மாண்டு கிடந்த தேவர்களைக் கண்டு மனங் கலங்கினார். அற்புதத் திருவிளையாடல்கள் புரிந்து கொண்டிருந்த கந்தவேளையடைந்து, திருவடித் தாமரை மீது வீழ்ந்து வணங்கினார்.

''எம்பெருமானே! தாரகன், சிங்கமுகன், சூரன் ஆகிய அசுரர்களின் தொல்லையால் இந்திரன் பெரும் துன்பமுற்று, தனது பொன்னுலகத்தையும் விட்டு இம்மேரு மலையில் மறைந்து வசித்திருந்தான். தேவரீரது கருணையினால் அசுரர்களை யெல்லாம் அழிக்க அவன் எண்ணி யிருந்தான். அதற்காகப் பலகாலம் அருந்தவம் செய்து வாடினான். துயரெல்லாம் நீங்கியதென்று சரவணப் பொய்கையில் தேவரீரது திருஅவதாரத்தைக் கண்டு உளம் பூரித்தான். தேவரீருக்குத் தொண்டு செய்யவே விரும்பிய இந்திரன் தாங்கள் திருவிளையாடல் புரிவதை அறிந்திலன். திருமால் முதலியோர் தேடிக் காணாத சிவபெருமானும், உமாதேவியாரும், அவர் திருவருள் பெற்றோர் சிலருமன்றித் தேவரீரை யாரே அறிய முடியும்? சிற்றறிவு காரணமாக, தங்களை யறியாது போர் செய்தான். மற்ற தேவர்களும் தங்களை எதிர்த்து மாண்டனர். தவறு செய்த குழந்தைகளைத் தாய் தந்தையரே தண்டிப்பது நீதியாகுமோ? அருட்பெருங் கடலே! ஆற்றல் மிக்க அசுரர்களை அடியோடு ஒழித்தருளி, தங்கள் திருவடியை மறவாத தேவர்களுடைய பிழையைப் பொறுத்து அவர்கள் அறிவு பெற்று எழுமாறு திருவருள் செய்ய வேண்டும்'' என்று தேவகுரு இறைஞ்சினார்.

முருகப் பெருமான் திருமுறுவல் செய்து, இந்திரன் முதலிய தேவர்கள் வாகனங்களோடும், ஆயுதங்களோடும் எழும் வண்ணம் திருவுளம் கொண்டருளினார். உடனே தேவர்கள் யாவரும் உயிர் பெற்றெழுந்து மெய்யறிவு பெற்றனர். முருகனை முருகன் என அறிந்து மனமுருகினர். செய்த பிழைக்கு மனம் கலங்கி எம்பிரானுடைய சரணக் கமலங்களில் வீழ்ந்து பணிந்து, மொழி குழறி மெய் விதிர்த்துத் துதித்தனர்,

**''கந்தநம; ஐந்துமுகர் தந்தமுரு**
**கேசநம; கங்கை உமைதன்**
**மைந்தநம; பன்னிரு புயத்தநம;**
**நீபமலர் மாலை புனையும்**
**தந்தைநம; ஆறுமுக ஆதிநம;**
**சோதிநம; தற்ப ரமதாம**
**எந்தைநம: என்றும் இளையோய்நம:**
**குமாரநம என்று தொழுதார்''**

தொழுது நின்ற தேவர்களுக்குக் கந்தவேள் திருவருள் செய்து அச்சமும் துன்பமும் நீக்கினார். தேவர்களும்,

''முன்பு தக்கன் வேள்வி செய்த போது சிவபெருமானை இகழ்ந்தான். அந்த வேள்வியில் தரப்பட்ட பாகத்தை அடியேங்கள் உண்டோம். அதனுல் ஏற்பட்ட பாதகம் இன்னும் தொடருகிறது. அத்துடன் தேவரீருடன் போர் செய்ய முற்பட்ட பாதகமும் சேர்ந்தது. பரம பிதாவே! பரம கருணையால் அடியேங்களைத் தண்டித்து அப் பாவங்களைப் போக்கியருளினீர். தங்களுக்கு நாங்கள் என்றும் அடிமைகள். இவ்வாறு கூறுவதும் தவறு! ஏனெனில் சிறுவர்கள் தங்களைத் தங்கள் தாய் தந்தையருக்குத் தருவது என்பதும் தகுதியான செயலல்லவே'' என்றனர்.

''நம்மைச் சிறுவன் என்று நினைந்து நீங்கள் போர் புரிந்தீர்கள். நமது வன்மையையும் பெருமையையும் இன்னும் நீங்கள் உணரும் வண்ணம் காட்டுவோம்'' என்று கூறினுர் சுவாமி. எதற்காக இவ்வாறு மீண்டும் மீண்டும் செய்தார்? பல கோடி அசுரர்களையும் தம்மால் மாய்க்க முடியும் என்ற நம்பிக்கையையும், ஆறுதலையும் தேவர்க்கு ஊட்டவே இவ்விதம் செய்தருளினுர்.

இந்நேரம் புரிந்ததற்கும் மேலாகப் பேரற்புதம் புரிய எண்ணி அற்புதக் கோலம்கொண்டார் ஐயன். விசுவமுழுவதும் தம் வடிவான வடிவேலன், எட்டுத் திக்குகளும், பதினறு உலகங்களும், எட்டு மலைகளும், ஏழு கடல்களும், புறக் கடலும், சக்ரவாள கிரியும், வெவ்வேறண்ட நிரைகளும், பிரம - விஷ்ணு - உருத்திரர்களும் அடங்கிய விசுவரூபமெடுத்தார்.

**எண்டிசையும் ஈரேழு திறத்துலகும்**
**எண்கிரியும் எழு கடலுந்**
**தெண்டிரையும் நேமிவரை யும்பிறவும்**
**வேறுதீவி பாகியுள சீர்**
**அண்டநிரை யானவும் அனைத்துயிரும்**
**எப்பொருளு மாகி அயனும்**
**விண்டுமர னுஞ்செறிய வோர்உருவு**
**கொண்டனன் விறற் குமரனே**

முருகப் பெருமான் விசுவரூபம் எடுத்துத் திவ்வியத் திரு தரிசனம் தந்தருளியபோது ஏழு பாதாள லோகங்களும் சுவாமியின் திருவடியில் இருந்தன. ஏழு தீவுகளின் புடவி கணைக்காலில் காணப்பட்டன. ஏழு கடல்களும் உடுத்த உடையில் காணப்பட்டன. திசைகள் புயங்களில் தெரிந்தன. ஆகாயம் நாபியில் அமைந்தது. தியுவென்னும் சுவர்க்கம் சென்னியிலும், சந்திரன் சூரியன் அக்கினி என்பன அழகிய மூன்று கண்களிலும் பொருந்தின. மேகங்கள் கேசங்களிலும், நட்சத்திரங்கள் அக்கேசங்களிலிருந்த அலங்கார மலர்களிலும் விளங்கின. சிவ பரம்பொருள் ஆன்மாவிலும், சிவசக்தியாகிய கௌரி மதியிலும், விஷ்ணு இடப் பாரிசத்திலும், பிரம தேவர் வலப் பாரிசத்திலும் காணப்பட்டனர். சரஸ்வதி வேத மணம் கமழும் வாக்கிலும் இலட்சுமி திருநிலையிலும் காணப்பட்டனர். பிராணன் முதலிய பத்து வாயுக்கள் வாயு நிலைகளிலும், காலாக்கினி ருத்திரன் சீற்ற நிலையிலும், அக்கினி தேவன் சாடராக்கினியிலும், அளவற்ற மாநாகங்கள் நூபுரம் முதலிய காலணிகளிலும், ஓஷதியனைத்தும் உரோமங்களிலும் பொலிந்தன. அந்த உரோமங்களில் நுண்ணிய கிருமிகளைப் போல் அண்ட கோடிகளெல்லாம் காணப்பட்டனவாம்.

பேரொளி வாய்ந்த பேருருவத்தைத் தரிசித்த தேவர்களது விழிகள் பார்வையற்றுப் போய்விட்டன. சுரர்களாகிய பிரம, விஷ்ணுக்கள் முதலிய தேவ சிரேஷ்டர்கள் கந்தக் கடவுளது அளவிலாத தேஜோ மண்டலத்தில் ஆயிரத்தில் ஓர் அமிச அளவையே அவர் அருளால் அறிய முடிந்தது.

**ததஸ்தே விபுதேந்த்ராத்யா ப்ரஹ்ம**
**விஷ்ண்வாதயஸ்ஸுரா |**
**தத்தேஜோ மண்டலஸ்யைதே**
**ஸஹஸ்ராம் சமலோகயந் ||**

தேவர்கள் வேத வாக்கியங்களால் எண்ணிலாத ஸ்தோத்திரங்களைச் செய்து ''எம்பெருமானே! அடியேங்கள் தேவரீரது விசுவரூபத்தை முற்றும் தரிசிக்கும் வண்ணம் எங்களுக்கு ஆற்றல் தந்தருள வேண்டும்'' என்று வேண்டிக் கொண்டார்கள். கருணைக் கடலாகிய குமாரக் கடவுள் திருவுளம் இரங்கி அவர்களுக்குத் திவ்விய நேத்திரங்களைக் கொடுத்தார். (கண்ணபெருமான் கலித் தொடக்கத்தில் அர்ஜுனனுக்கு விசுவரூப தரிசனம் தந்தபோதும் அதனைக் காண திவ்விய நேத்திரம் நல்கினுர்) அநந்தகோடி சூரியர்கள் திரண்டது போலப் பேரொளி வீசி நின்ற விசுவரூபத்தை அடி முதல் முடி வரையில் தேவர்கள் தரிசித்து, ஆனந்த பரவசம் கொண்டு வணங்கி நின்றுர்கள்.

''எம்பெருமானே! பிருதிவியண்டம் முதலிய அண்டங்களும், ஆங்குள்ள தேவர்களும், உயிர்ப் பொருள்களும், பிரமன், விஷ்ணு, ருத்திரன் ஆகிய மூர்த்திகளும், தேவ்ரீரது திருமேனியில் இலங்கக் கண்டோம். அகிலம் எங்கும் இருப்பது தேவரீரது திருமேனிதான் என்பதைப் பெருங்கருணையுடன் தாங்கள் அறிவித்ததால் பிரத்தியட்சமாக அறிந்து கொண்டோம். அருவமும் உருவும்

மாகிய தேவரீரது திருவளைப் பெற்றுப் பேருருவத்தின் அடியையும் முடியையும் எங்களைப் போலக் கண்டவர் வேறு யார் உளர்? தங்களின் முழுப் பெரும் திருவுருவத்தைத் தரிசித்ததன் மூலம் இனி நாங்கள் பிறவித் துன்பமடையாது முத்தியின்பம் அடைவோம்'' என்று தேவர்கள் மகிழ்ந்து கூறினர்.

முருகப் பெருமான் தமது விசுவ ரூபத்தை மறைத்து, ஆறு முகங்களுடன் முன்னைய வடிவத்தில் காட்சி தந்தார். இந்திரன் முருகக் கடவுளை வணங்கித் துதித்து, ''கருணாமூர்த்தியே! அடியேனும் தேவர்களும் தொண்டு செய்ய விண்ணுலகத்தைத் தேவரீரே அரசு செய்து சூராதியரை அழிக்க வேண்டும்'' என்று வேண்டிக் கொண்டான்.

'தம்மை வழிபடும் அடியவர்க்கு இகம், பரம், வீடு என்னும் முத்திற நலன்களையும் கொடுத்தருளும் கருணைக் கடலாகிய ஆறுமுகக் கடவுளுக்கு இந்திரன் தனது அரசைக் கொடுப்பதாகக் கூறியது, அக்கினிதேவனுக்கு ஒருவன் தீபம் கொடுக்கிறேன் என்று கூறியதைப் போன்றிருந்தது!' என்கிறார் கச்சியப்பர்.

இகமொடு பரமும் வீடும்
  ஏத்தினர்க் குலப்புறுமல்
அகனமர் அருளால் நல்கும்
  அறுமுகத் தவற்குத் தன்சீர்
மகபதி யளிப்பான் சொற்ற
  வாசகம் சுடரோன் றங்கிப்
பகவனுக் கொருவன் நல்கப்
  பராவிய போலு மாதோ

கந்தப் பெருமான் இந்திரனை நோக்கி அருளுடன், ''நீ நமக்குத் தந்த அரசை நாம் உனக்கே திருப்பித் தந்தோம். நீங்கள் சேனைகள். நாமே சேனைகளுக்குச் சேனாதிபதியாகி அசுரர் யாவரையும் வெல்லுவோம். வருந்தாதீர்கள்'', என்று கூறி அருள் செய்தார். தேவர்கள் பெருமகிழ்ச்சி கொண்டனர்.

''எம்பெருமானே! இந்த அண்டத்து மலைகள், கடல்கள், உலகங்கள், உயிர்கள் முதலியன வெல்லாம் இந் நாளில் தேவரீர் திருவிளையாடலால் முறை பிறழ்ந்தன. அவைகளை யெல்லாம் முன்பு போல நிறுவியருள வேண்டும்'' என்று இந்திரன் வேண்டிக் கொண்டான். எம்பெருமான் இள நகை புரிந்து, ''நம்மாலே முறை பிறழ்ந்தன எல்லாம் பண்டைய நிலையை அடையக் கடைவன்'' என்று திருவாய் மலர்ந்தருளினர். உடனே அவையெல்லாம் முன்னை நிலையை அடைந்தன.

இந்திரன் கந்தக் கடவுளிடம், ''மூவர் தேவாதிகள் தம்பிரானே! வேதமுடிவிலே விளங்குகின்ற தங்கள் திருவடிகளைப் பூசித்து வழிபட விரும்புகின்றோம். அதற்குத் திருவருள் புரிய வேண்டும்'' என்று வேண்டிக் கொண்டான். ஐயன் இசைந்தார். தேவர்கள் பின்தொடர மேரு மலையிலிருந்து புறப்பட்டுத் திருக் கயிலை மலைக்கு அணித்தாயுள்ள ஒரு மலையை அடைந்தார். அங்கு இந்திரன் தேவதச்சனைக் கொண்டு நவமணிகள் பதித்த ஒரு செம்பொன் ஆலயமும், அதனுள் ஒப்பற்ற அரியணையும் அமைத்தான். தேவர்கள்திருமஞ்சனம் சந்தனம், நறுமலர், தூபம், தீபம், நிவேதனப் பொருள்கள் முதலியவற்றைக் கொண்டு வந்தனர். கோயிலினுள் அமைந்திருந்த அரியணையில் முருகக் கடவுள் எழுந்தருளினர். இந்திரனும் மாலயனுதி தேவர்களும் ''ஞானநாயகரே! நாங்கள் எல்லாரும் உமது சேனைகள். தாங்கள் எமக்குச்



சேனாதிபதியாகுக'' என்று கூறி ஆகாய கங்கையால் திருமஞ்சனம் செய்து அர்ச்சித்துப் போற்றி வழிபட்டார்கள். தேவ சேனாதிபதியாக முடிசூட்டினார்கள்.

ஆன காலை அமரர்கள் வாசவன்
ஞான நாயக! நாங்கள் உனக்கொரு
தானை யாகும்! தலைவனை நீயென
வான நீத்தத்து மஞ்சனம் ஆட்டினர்

தேவசேனாதிபதியாகப் பட்டம் சூடிய பெருமானை ''தேவ தேவ தேவாதி தேவப் பெருமாளே'' என்று வாய் நிறைய வாழ்த்துவார் அருணகிரிநாதர்.

கந்தக் கடவுளைத் தேவர்கள் பூசித்தற்கு அவர் எழுந்தருளிய அம்மலை 'கந்த வெற்பு' எனப் பெயர் பெற்றது. முருகப் பெருமான் கந்த வெற்பை நீங்கித் திருக் கயிலை அடைந்தார். இந்திரனும் தேவர்களும் தங்கள் தங்கள் இடங்களுக்குச் சென்றார்கள். திருக் கயிலையில் இலக்கத்தொன்பது வீரர்களும், பூதர்களும் சேவிக்க முருகப் பெருமான் எழுந்தருளியிருந்தார். (தொடரும்)

# டி வி எஸ் ஒவ்வொரு நாளும்

தினந்தோறும்
மூன்று பாடிகள்



தையும் என்மரையும் சமைத்துத் தன் கலைத்திறனுக்குச் சாசுவதமான சின்னம் தேடிக் கொண்டு விட்டான் யாரும் அறியாத சிற்பி !

கருநாடகத்தில் அனந்தபூர் மாவட்டத்திலுள்ள ஹேமவதியில் கண்டெடுக்கப்பட்டதொரு சூரிய வடிவத்தில் சோழர், நொளம்பர் ஆகிய இரு பரம்பரையின் கலை நுணுக்கங்களை இணைந்து காண்கிறோம்.

சூரியச் சிற்பங்களும் அவனது சிற்றாலயங்களும் முற்காலச் சோழர் கோயில்கள் சிலவற்றில் காணப்படினும் அவனுக்கென்று தனிக் கோயிலெடுக்கும் மரபு குலோத்துங்கசோழன் காலத்திலேயே தொடங்கியதாகத் தோன்றுகிறது. தஞ்சை மாவட்டத்தில் மாயூரத்துக்கருகில் சூரியனார் கோயில் என வழங்கும் சிற்றூரில் குலோத்துங்கன் ஒளிதேவனுக்கென கலைமிக்க கற்றளியொன்று எழுப்பியுள்ளான். கோயிலின் மூலஸ்தானத்தில் இரு கரங்களிலும் தாமரை மலரேந்தியுள்ள கதிரவனையும், பிராகாரத்திலுள்ள பரிவாரா ஆலயங்களில் இதர எண் கிரகங்களையும், விமானத்தில் துவாதச ஆதித்யர்களையும் காண்கிறோம். சூரியதேவனின் பல வடிவங்களை விளக்கும் படிமங்கள் பல இக்கோயிலில்உள்ளன. இவையனைத்திலும் மிகச் சிறப்பு வாய்ந்ததும் அபூர்வமானதும் 'அஸ்திர தேவர்' என வழங்கும் செப்புப் படிமமே. நீண்ட திரிசூலமொன்றில் எழில் மிகு சூரியனைப் பொருத்தியுள்ள நூதனமானதோர் அஸ்திரதேவரை இங்கு காண்கிறோம். இத்தகைய சூரிய அஸ்திர தேவரை இந்தியாவிலேயே வேறெங்கும் காண்பது அரிது. உற்சவ மூர்த்திகள் விழாக் காலங்களில் வீதி வலம் வருகையில் அவர்களுக்குமுன் அஸ்திர தேவரை எடுத்துச் செல்வது மரபு. இவரை 'முள் பொறுக்கி சாமி' என்று விளையாட்டாக் குறிப்பிடுவதுமுண்டு. இப்படிமம் பிற்காலச் சோழர் காலத்தில் சூரிய வழிபாடு பெருமை பெற்றிருந்ததையும், சூரியனது படிமமொன்று உற்சவ மூர்த்தியாக வீதிவலம் வந்ததையும் சொல்லாமல் சொல்லுகிறது.

குலோத்துங்க சோழனால் எடுப்பிக்கப்பட்டதால் இக் கற்றளியில் உள்ள மூலவரைக் 'குலோத்துங்க சோழ மார்த்தாண்டாலயத்து சூரிய தேவர்' என்றும் 'குலோத்துங்க சோழ மார்த்தாண்ட தேவர்' என்றும் கல்வெட்டுக்கள் வர்ணிக்கின்றன. மார்த்தாண்டன் என்பது சூரியனின் மறு பெயர். இக்கோயிலின் நிர்வாகத்தை நடத்தவும், வரவு செலவுக் கணக்குகளைக் கண்காணிப்பது போன்ற பணிகளைப் புரியவும் உரிமை வழங்குவதற்காகப் பொது ஏலம் நடத்தப்பட்ட சுவை மிக்க செய்தியைக் கல்வெட்டொன்றின் மூலம் அறியலாம்.

தமிழகத்தில் முதன் முதலாகக் கதிரவனுக்கெனத் தனிப் பெருங் கோயில் எழுந்ததற்குச் சில காரணங்களை அநுமானிக்கலாம். குலோத்துங்கன் காலத்தில் வடபுலத்து அரசியலில் உன்னதமாக விளங்கியவர் கஹடவாலர் என்னும் ராஜபுத்திர வமிசத்தவர். இவர்களின் முழு முதற்கடவுள் சூரியனே என்பது வரலாற்று உண்மை. இக்கஹடவாலரின் சாஸனமொன்றிலிருந்து அது குலோத்துங்கசோழனின் நாற்பத்தொன்பதாவது ஆட்சி ஆண்டில் செதுக்கப் பட்டதாக அறிகிறோம். பிற்காலச் சோழ மன்னர்களுக்கும் — குறிப்பாகக் குலோத்துங்கனுக்கும் — கஹடவால வழித்தோன்றல்களுக்கும் தொடர்பு இருந்து வந்தமைக்கு இது ஓர் எடுத்துக்காட்டாகும். சூரிய உபாஸனையில் பேரார்வம் கொண்டோரின் தொடர்பே குலோத்துங்கனைத் தமிழ் நாட்டில் சூரியாலயமொன்று எடுப்பிக்கத் தூண்டியிருக்க வேண்டும். இச்செயல் தமிழகத்தைப் பொறுத்தவரை ஒளிதேவனின் வழிபாட்டு வரலாற்றில் ஒரு புதிய சகாப்தத்தையே தோற்றுவித்தது.

இன்று அம்மரபு ஆலமரமாய் வளர்ந்துள்ளது. தற்போது ஒரு சின்னஞ் சிறு பிள்ளையார் கோயில் கட்டினாலும் அதற்கு அங்கமாகக் கதிரவனை மையமாய்க் கொண்ட நவக்கிரகங்களை அமைத்தால் தானே நம் மனம் நிறைகிறது ?

---

**சூரியனுக்குச் சாயாதேவியிடம் சனியும், யமுனையும், ஸாவர்ணியும் பிறந்ததாகவும், ஸம்க்ஞா தேவியிடம் யமன், யமி, அசுவனி தேவர்கள், சிராத்ததேவன் ஆகியோர் பிறந்ததாகவும் நம்மில் சிலர் அறிந்திருப்போம். இவர்களோடு ரேவந்தன் என்ற சூரிய புத்திரனைப் பற்றியும் புராண வாயிலாக அறியலாம். இவனுக்கு ஒரு சிற்ப வடிவத்தைப் பஞ்சாபில் 'குலு' என்னுமிடத்தில் காண்கிறோம். மைந்தனின் படிமம் தந்தையின் தோரணையிலேயே வடிக்கப்பட்டுள்ளதைக் கவனியுங்கள். நன்றி : வி. கோபாலன்**



# 11. சிறைப்பட்டான் அயன்!

சிவபெருமானின் பிரீதிக்காக நாரத முனிவர் ஒரு வேள்வி செய்ய விரும்பினர். அரி, அயன், இந்திரன், அந்தணர், அருந்தவர் முதலியவர்களுடன் பூவுலகில் யாகத்திற்கெனத் தகுந்த க்ஷேத்திரம் அமைத்து வேதாகம விதிப்படி வேள்வி செய்யத் தொடங்கினர். வேள்வி செய்யும்போது மந்திரம் மாறுபட்டதால் யாக அக்கினியிலிருந்து செவ்வானம் போன்ற நிறத்துடன் ஓர் ஆட்டுக் கடா தோன்றியது. ரஸாயனப் பரிசோதனைகளில் ஒரு பொருளுக்கு மாருக வேறு உபயோகித்தால் விபரீதம் ஏற்பட்டுவிடு மல்லவா? ஒலிகளின் ரஸத்துக்குட்புகுந்து முனிவர்கள் கண்ட மந்திர நாதங்கள் மாறுபட்டாலும் இவ்வாறே ஆகும். ஒலிகளும் நம் கண்ணுக்குத் தெரியும் பொருட்களைப் போல் உள்ளே அணு சக்தி கொண்டுள்ளன.

கோர உருவத்துடன் வேள்வித் தீயினின்று எழுந்த ஆட்டுக் கடா பெரும் சினத்துடன் ஆரவாரம் செய்தது. அதனைக் கண்டு அங்கிருந்தோர் அனைவரும் அஞ்சி நடுங்கினர்கள். உயிர்களைக் கொல்ல நினைத்த அந்த ஆட்டுக்கடா அஷ்ட குலாசலங்கள் அசைந்தாட ஆர்த்தது. வயிரத்துக்கு நிகரான கொம்புகளை நிலத்தில் குத்தித் தூளி கிளப்பியது. அதனைக் கண்ட நாரத முனிவர் முதலியோர் நடு நடுங்கி யாகத்தை விட்டு வெளியேறினர். ஆட்டுக் கடா அவர்களைத் துரத்திச் சென்று போரிட்டது. போரில் சிலரது கால்கள் ஒடிந்தன; சிலரது குடல்கள் சரிந்தன. சிலர் கைகளை இழந்தனர். ஆட்டுக் கடா உயிர்களைத் துன்புறுத்தி உலகம் யாவும் அஞ்ச உலவியது. ஆகாயத்தில் பாய்ந்து சூரிய சந்திரர்களது தேர்களை அழித்தது. தேர்களில் பூட்டப்பட்டிருந்த குதிரைகளுடன் போர் புரிந்தது.

இதனைக் கண்டு அஞ்சி ஓடிய நாரதரும் மற்ற முனிவர்களும், தேவர்களும் கயிலை மலையை அடைந்தனர். மலையில் ஏறிச் செல்லும் போது எல்லா ஆற்றலும், எல்லா முதன்மையும், எல்லா அனுக்கிரகமும் உடைய எந்தை கந்தவேள் இலக்கத்தொன்பது வீரர்களுடன் கூடி வி யாடிக் கொண்டிருப்பதைக் கண்டனர். அவரைக் கண்டதும் சந்திரனைக் கண்ட கடல்போல் உவகை பொங்க உளம் மகிழ்ந்தனர். "நாம் இதற்காக சிவபெருமானிடம் செல்ல வேண்டாம். நம்




ரத்தை நீக்கும்பொருட்டுக் குமரக்கடவுளே எழுந்தருளி யிருக்கின்ருர்" என்று தங்கள் தெளிவு கொண்டனர். நம்பினேர்க்கு எம்பிரான் முன் சென்று அவரது திரு தாமரையில் வீழ்ந்து, ஓலமிட்டுத் துதித்

"மூவர்கள் முதல்வா ஓலம்;
முக்கண்ணன் புதல்வா ஓலம்;
சேவலங் கொடியாய் ஓலம்;
சிறந்த சிற்பானே ஓலம்;
தேவர்கள் தேவே ஓலம்;
தெய்வநா யகனே ஓலம்;
ஆவலூற் றருள்வாய் ஓலம்;
அறுமுக ஓலம்; ஓலம்!"

என அரற்றிப் போற்றினர்.

கந்தப் பெருமான் தேவர்களுடைய துன்பத்தைக் கண்டு மனமிரங்கி, தீர்கள்" என்று அபயம் தந்தார்.

தம் அருகே நின்ற வீரவாகு தேவரைப் பார்த்து, ''வேள்வியில் தோன்றி உயிர்களைக் கொன்று எங்கும் திரிகின்ற ஆட்டுக் கடாவை நீ விரைந்து சென்று இப்பொழுதே பிடித்துக் கொண்டு வா'' என்று பணித்தருளினர். வீரவாகு தேவர் அவ்வாக்கினையைச் சிரமேல் தாங்கி, ஆட்டுக் கடாவைத் தேடிச் சென்றார். ஆட்டுக் கடா பூமியில் உள்ளவர்களைச் சிதைத்து, கீழ் ஏழுலகிலும் சென்று அங்குள்ளோரை வதைத்து, சுவர்க்க லோகம் முதலிய மேல் உலகங்களையும் தன் கொம்பால் தகர்த்து நாசஞ் செய்து, நான்முகனின் உலகமாகிய சத்திய லோகத்தில் இருமாந்து ஆரவாரித்து நின்றது.

வீரவாகு தேவர் அதன் கொம்பை அநாயாசமாகப்பற்றிக் கரகர வென்று சப்தம் உண்டாகுமாறு இழுத்துக் கொண்டுபோய்த் திருக் கயிலாய மலை வந்தடைந்து முருகன் திருமுன் விடுத்துப்பணிந்து நின்றார். தேவர் யாவரும் கண்டு நடுங்கிய ஆட்டினை வீரவாகு தேவர் அவ்வளவு எளிதில் அடக்கியது எவ்வாறு? ஆறுமுகனின் அருளாலும் ஆறுமுகனிடம் அவருக்கிருந்த அளப்பரும் பக்தியாலுமேயாகும்.

முருகக் கடவுள் முறுவல் பூத்து, தேவர்களையும் முனிவர்களையும்பார்த்து, ''ஆட்டுக் கடா நம்மிடம் வந்துவிட்டது. இனி நீங்கள் அஞ்சாது யாகத்தை இனிது முடியுங்கள்'' என்று அருளிச் செய்தார்.

தேவர்கள் எல்லையில்லாத திருப்தியும் ஆனந்தமும் அடைந்தனர். ''எம் பெருமானே! அடியேங்கட்கு இன்னும் ஒரு வரம் தரவேண்டும். இவ்வாட்டுக் கடாவை வேறெங்கும் விடாமல் தாங்கள் வாகனமாக ஏற்றுக்கொண்டு அருளுதல் வேண்டும்'' என்று வேண்டிக்கொண்டனர்.



கொடியவர்களே அடியவர்களை விடப் பாக்கிய சாலிகள்! எம்பிரானுடனேயே எப்போதும் இருப்பார்கள். நடராஜன் பாதத்தின் கீழே அநவரதமும் முயலகன். வாழ்வது போலும், துர்க்கையம்பிகையின் திருவடியின் கீழே மகிஷன் நிரந்தரமாய் வாழ்வது போலும், முருகனுடன் ஆட்டுக் கடா வாழலாயிற்று. முயலகனும் மகிஷமும்

போல் ஆடு அஞ்ஞானத்தைக் குறிக்கும். ஞானமூர்த்தி அஞ்ஞானத்தின் மீது ஆரோகணித்தார்.

ஆண்டவனுக்கு வேண்டுவது வேண்டாதது எதுவுமே இல்லை. நமக்குத் தீயனவாகத் தோன்றுபவையும் இறைவனுக்கு வேண்டாதன அல்ல. நம்மிடமிருந்து அவற்றைப் பிரித்துத் தன்னிடமே வைத்துக் கொள்வான்.

அக்கினிக்கு வாகனம் ஆடு. முருகப் பெருமான் அக்கினியேதான். அக்னி பூ என வேதத்தால் பிரதிபாதிக்கப்படுபவன், எனவே ஐயனும் ஆட்டை வாகனமாகக் கொண்டு அருளினார். அக்கினி தேவனுக்குள்ளேயிருந்து அதற்கு வெப்பம் தரும் மூலாக்கினி தேவன் தானே என்பதைக் காட்டுதற் பொருட்டு ஆட்டு வாகனத்துடன், அண்டங்களிலெல்லாம் பவனி வந்தார். ஜனனமற்ற முழுமுதற் பொருள் என்பதால் அஜன் என்று பெயர் கொண்ட ஆறுமுகச் சிவனாரை அஜவாகனன் என்பதாலும் வேதங்கள் ''அஜன்'' என்று அழைக்கின்றன.



முருகப்பெருமான் மும்மலத்தை அடக்கியவர் என்பதாலேயே அவருக்கு மயில், ஆடு, யானை என மூன்று வாகனங்கள். ஆணவம், கன்மம், மாயா என்று மலங்கள் மூன்று: நமது இயல்பிலேயே, நமது அமைப்பின் அணுவிலேயே, உள்ளது 'நான் — எனது' என்ற இரு கூறு கொண்ட ஆணவ மலம். நமது செயல்களில் வந்து சேருவது கன்ம மலம். நாம் பரம்பொருளிடமிருந்து பிரிந்து பேதமாய் அஞ்ஞான வாய்ப்பட்டு நிற்பது மாயா மலம்.

ஆன்மா என்று உளதோ அன்றே ஆணவ மலமும் உண்டு. அதன் வேகத்தை அடக்கவே கன்ம, மாயா மலங்கள் உள்ளன. தன் இயல்பால் செருக்கு மிகுந்த மயில் ஆணவ மலம். தனது செயலால் மதம் பிடித்த யானை கன்ம மலம். அறிவற்ற ஆடு மாயா மலம்.

காலா காலத்தில் மலம் நீங்காதாயின் எப்படி நோயற்ற வாழ்வு வாழ முடியாதோ அவ்வாறே இம் மும்மலம் நீங்காது போனால் ஆன்மாவுக்கு உய்வு இல்லை. 'பேதித்து நம்மை வளர்த்தெடுத்த பெய்வளை' என்று மணி வாசகர் பாடியது போல் இறைவனிடமிருந்து ஜீவர்களை வேறு படுத்தினாற்போல் மாயா மலத்துக்காட்படுத்தும் அம்பாள்தான் மும்மலத்தைப் போக்கவும் ஜீவர்களைத் தூண்டி, அவர்களை நல்வழியில் 'வளர்த்தெடுத்து' அருள்கிறாள். மும்மலத்திலின்றும் நீங்கிப் பசுபதியுடன் சேரவேண்டும்.

**இருவினைமு மலமுமற இரவியொடு பிறவியற**
**ஏகபோகமாய் நீயு நானுமாய்**
**இறுகும் வகை பரமசுக மதனையருள்**

சிவபெருமான் அருள் முன்னால் முருகப் பெருமானிடம் மயில்போல் அடங்கியிருக்கிறது ஆணவ மலம்; ஆடுபோல் ஒடுங்கியிருக்கிறது மாயா மலம்; கட்டுண்ட யானைபோல் முடங்கியிருக்கிறது கன்ம மலம்.

குமரக் கடவுள் ஆட்டுக் கடாவை வாகனமாகக் கொண்டு எல்லா உலகங்களிலும் உலவிப் பற்பல திருவிளையாடல்களைப் புரிந்து இலக்கத்தொன்பது வீரர்களும் சூழ வெள்ளி மலையின்கண் எழுந்தருளியிருந்தார். ஒருநாள் பிரமதேவர், இந்திராதி தேவர்களுடனும், கின்னரர், கிம்புருடர், சித்தர், வித்யாதரர் முதலிய கணங்களோடும் சிவபெருமானைச் சேவிக்கும் பொருட்டுத் திருக்கயிலாய மலையை அடைந்தார். சிவ சந்நிதிக்குச் செல்லும் வழியில் முதல் கோபுர வாயிலின் வடபால் செவ்வேள் லீலை புரிந்து கொண்டிருந்தார். பிரமனைத் தவிர மற்ற எல்லோரும் யான் - எனது என்னும் செருக்கின்றி முருகப்பிரானை வணங்கி வழிபட்டனர். பின்னர் திருக்கோயிலினுட் சென்று சிவபெருமானையும், உமாதேவியாரையும் வலம் வந்து துதித்துத் திருவருளைப் பெற்றுத் திரும்பினார்கள்.

திரும்பி வரும் வழியில் இலக்கத்தொன்பது வீரர்கள் புடைசூழ நவரத்தின சிங்காதனத்தில் எழுந்தருளி முருகவேள் திருவிளையாடல் செய்து கொண்டிருந்தார். எல்லாத் தேவர்களும் ஆறுமுக வள்ளலை வலம் வந்து அடிமலர் தொழுது தோத்திரம் புரிந்து சென்றனர். மூவர்களுக்கும் தேவர்களுக்கும் எட்டாத முழுமுதலாகிய முருகப் பெருமானைக் கண்ட பிரமதேவர், 'இவன் ஒரு பாலன்தானே, இவனை நானும் வணங்க வேண்டுமா?' என நினைத்து இறுமாந்து சென்றார்.

'சிவன் வேறு; தான் வேறு அன்று; மணியும் ஒளியும் போல் சிவனும்

தானும் ஒன்று' என்பதையும், முருகனுகிய தன்னையொழித்துச் சிவபெருமானை வழிபடுவோர்க்குத் திருவருள் உண்டாகாது என்பதையும் பிரமன் வாயிலாக உலகுக்கு உணர்த்த எண்ணிய முருகப் பெருமான் அயனின் செருக்கை அகற்றி நல்லருள் பாலிக்கவும் திருவுளங் கொண்டார்.

தருக்குடன் செல்லும் பிரமனை அழைத்தார் கந்தன். பிரமதேவர் ஆறுமுகனை அணுகி அகங்காரத்துடன் சிறிது கைகுவித்து வணங்கிடாத பாவனையாக வணங்கினுர்.

முருகப் பெருமான் பிரமனை நோக்கி ''நீ என்ன தொழில் செய்கின்ருய்?'' என்று வினவினுர். முருகனின் கம்பீரக் குரலே எத்தொழிலுக்கும் அதிபராக, மற்றைய தேவரை அவரவரது தொழிலில் செலுத்துபவர் அவர்தான் என்பதைப் புலப்படுத்தியது. பிரமனுக்கும் சிறிது அச்சமுண்டாயிற்று.

''சிவபெருமான் ஆணையினுலே படைக்கும் தொழில் செய்கின்றேன்'' என்று நடுங்கிக் கொண்டே கூறினுர்.



''படைப்புத் தொழிலை மேற்கொண்டிருக்கும் உனக்கு வேதம் வருமோ?'' என்று முருகவேள் வினவினுர்.

''சிவபெருமான் அளவற்ற வேத சிவாகமங்களை அருளிச் செய்து அவற்றுள் சிலவற்றை யான் உய்யும் பொருட்டு எனக்கு உபதேசித்துள்ளார்; அவற்றை நான் உணர்வேன்'' என்று நான்முகன் கூறினுர்.

கந்தவேள் அதைக் கேட்டு நகைத்தார். பிரமன் வேதத்தை அறிந்திருந்திருந்தானேயன்றி உணர்ந்திருக்கவில்லை என்பதை ஐயன் தெரிந்து கொண்டே நகைத்தார். ''நன்று நன்று! வேத உணர்ச்சி நினக்கிருக்குமாயின் முதல் வேதமாகிய இருக்கு வேதத்தினைச் சொல்லக் கடவாய்'' என்று திருவாய் மலர்ந்தருளினுர்.

வேதங்களுக்கெல்லாம் முன் சொல்லப்படும் 'ஓம்' என்ற குடிலை மந்திரத்தைக் கூறி, இருக்கு வேதத்தைச் சொல்ல ஆரம்பித்தார் பிரமதேவர். அப்பிரணவ மந்திரத்தையே தமது திரு முகங்களில் ஒன்றுகவுடைய வேத மந்திரஸ்வரூபராகிய ஐயன் திருநகை செய்து, ''பிரமனே நில்! நீ முதலில் சொன்ன ஓம் என்ற பிரணவ மந்திரத்தின் பொருள் யாது?'' என்று கேட்டார்.

பிரமன் பிரணவத்தின் பொருள் தெரியாது விழித்தனன். அவனது கண்கள் சுழன்றன; நாணமுற்று விக்கித் திகைத்தான்.

முகத்தில் ஒன்றதா அவ்வெழுத்
துடையதோர் முருகன்
நகைத்து முன்னெழுத்தினுக்
குரைபொருளென நவில
பிகைத்த கண்களை விழித்தனன்
வெள்கினன் விக்கித்
திகைத் திருந்தனன் கண்டிலன்
அப்பொருள் திறமே

சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் பீடமாயும், எல்லா மந்திரங்களுக்கும் வேதங்களுக்கும் மூலமாயும், மற்றைத் தேவர்களுக்கெல்லாம் பிறப்பிடமாயும், காசியில் இறப்பவருக்கு எம்பெருமான் உபதேசித்தருளும் தாரகப் பிரமமாயும் விளங்கும் பிரணவத்தின் பொருளை ஆராயலானுன் பிரமன்.

தாரகம் என்ற சொல்லுக்குத் தாண்டச் செய்வது என்று பொருள். எதனைத் தாண்டச் செய்வது? பிறவிப் பெருங்கடலைத் தாண்டச் செய்வது. பிறவிக் கடலைக் கடக்க உதவுவதால் ஓம் என்பது தாரக மந்திரம் எனப் பெற்றது.

கர்ப்ப ஜன்ம ஜராமரண ஸம்ஸார
மஹத்பயாத் ஸந்தாரயதி தஸ்மாத்
த்ரரகம் என்கிறது தாரகோபநிஷதம்.

தாரகப் பிரமத்தின் பொருள் பிரமதேவருக்கு விளங்கவில்லை. அவ்வாறெனில் நாம் எம்மாத்திரம்? யாருமே தங்களது அறிவால் விளங்கிக் கொள்ளக் கூடிய தத்துவமன்று. அது இறைவனிடம் அடைக்கலம் புகுந்தால் அவனது அருளால் மட்டுமே பிரணவப் பொருளை உணரலாம்.

மாமலர்ப்பெருங் கடவுளும்
மயங்கினன் என்ருல்
நாமினிச்சில அறிந்தனம்
என்பது நகையே.

என்கிருர் கச்சியப்பர்.

பிரணவப் பொருள் அறியாத பிரமதேவர் 'சிவபெருமானிடம் வேதங்களைப் பாடம் கேட்டபோது இதனைக் கேட்டுத் தெரிந்து கொள்ளாமல் போனேமே' என்று எண்ணி எண்ணி ஏங்கினுர். பிரமதேவர் மயங்குவதைக் கண்ட முருகப் பெருமான் ''பிரணவத்தின் பொருளை அறியாத நீ படைத்தல் தொழிலை எவ்வாறு புரிவாய்?''

என்று சினந்து கூறிப் பிரமதேவரின் நான்கு தலைகளும் குலுங்கும் வண்ணம் குட்டினார்.

எட்டோ ரைந்தவக் குடிலையிற் பயன்
இனைத் தென்றே
கட்டுரைத் திலன் மயங்கலும்
இதன்பொருள் கருதாய்
சிட்டி செய்வதித் தன்மைய
தோவெனச் செவ்வேள்
குட்டினன் அயன் நான்குமா
முடிகளும் குலுங்க

ஒன்றினைச் செய்யு முன் அதன் பொருளை உணர்ந்திருக்க வேண்டும். இல்லாவிடில் விபரீதமாகும். உலகைப் படைப்பதாகச் சொன்ன பிரமனே அதன் உட்பொருளாக உறையும் பிரணவ வார்த்தையையே அறிந்திருக்க வில்லை. இதனால்தான் முருகன் அவ்வளவு சினம் கொண்டார்.

பிரமதேவனின் நான்கு தலைகளிலும் முருகப் பெருமான் தமது பன்னிரண்டு கரங்களையும் தலைக்கு மூன்று வீதம் வைத்துக் குட்டினார். பிரமதேவரின் எட்டு நாசிக்குத் துவாரங்களிலும் உதிரம் வந்தது. அவரது சிகை விபூதி போல் துகள் பட்டு உதிர்ந்ததாம். இதை அருணகிரியார் கூறுகிறார்:

நாலுமுக னாதியரி யோமென
அதாரமுறை
யாதபிர மாவைவிழ போநிபொரு
ளோது கென
நாலுசிர மோடு சிகை தூளிபட
தாளமீது பினேயோனே.

பிரமதேவனின் அகங்காரம் முழுதும் தொலைந்து புனிதனாகும்படி குமார மூர்த்தி தமது திருவடியால் அவனை எற்றித் தள்ளிப் பாத தீட்சை தந்தருளினார். கற்பகோடி காலம் கடுந்தவம் புரிந்தாலும் கிடைத்தற்கரிய எம்பெருமான் திருவடி பிரமதேவர் மேல் படுவதற்கு அவர் எத்தகைய புண்ணியம் செய்தாரோ?

கந்தக் கடவுள் வீரவாகு தேவரை நோக்கி, ''தம்பி! இருண்ட மனத்தனாகிய இவனைச் சிறையிடுக'' என்று கட்டளையிட்டார். வீரவாகு தேவரும் மற்ற வீரர்களும் பிரமதேவரின் கைகளிலும் கால்களிலும் விலங்கு பூட்டி, அவரைக் கந்தவெற்பில் ஒரு குகைக்குக் கொண்டு போய் ''முருக வேளை நம்பி எண்ணமையால் கம்பி எண்ணக் கடவாய்'' என்று சிறை வைத்தனர்.

அயனைச் சிறைபுரிந்த பின் கந்தக் கடவுள் படைப்புத் தொழிலைத் தாமே ஏற்கத் திருவுளங் கொண்டார். முத்தொழிலுக்கும் தலைவராம் முருகப் பெருமான் கந்தவெற்புக்குச் சென்று ஒரு திருமுகமும் நான்கு திருக் கரங்களும் கொண்டு, ஒரு திருக் கரம் ஜபமாலையும், ஒரு திருக்கரம் கமண்டலமும் தாங்க, மற்றைய இரு திருக் கரங்களும் வரதமும் அபயமும் வழங்க, படைப்புத் தொழிலை மேற்கொண்டருளினார். நவ வீரர்கள், இலக்க வீரர்கள், இந்திரன், திருமால், தேவர்கள், இருடியர் முதலிய கணத்தவர்கள் எம்பெருமானைச் சூழ்ந்து துதித்து நின்றார்கள்.

ஒருகரந் தனில் கண்டிகை
வடம்பரித்(து) ஒருதன்
கரதலந் தனில் குண்டிகை
தரித்திரு கரங்கள்
வரதமோ டபயந்தரப்
பரம்பொருள் மகனோர்
திருமுகங் கொடு சதுர்முகன்
போல்விதி செய்தான்.

மூவர்களை முத்தொழில் புரிய நியமித்த எம்பெருமான், தாமே இப்போது



சிருட்டித் தொழில் புரிந்ததால் அதற்கேற்பத் திருமகள் நாயகனாற் காத்தல் தொழிலும், உருத்திரமூர்த்தியால் அழித்தல் தொழிலும் புரிய முடியவில்லை. முருகப் பெருமான் அவற்றையும் தாமே செய்தருளி முத்தொழிற்கும் தாமே முதல்வர் என்பதைக் குன்றின்மேலிட்ட விளக்கென உணர்த்தி யருளினார்.

சொற் பிரபஞ்சம், பொருட் பிரபஞ்சம் என்னும் இரு வகைப் பிரபஞ்சங்களையும் கந்தவேள், தாம் நிமித்தக் காரணாக நின்று, முதற் காரணமாகிய மாயையிலிருந்தும், துணைக் காரணமாகிய சத்தியைக்கொண்டும் படைத்து, காத்து, அழித்து திருவருள் புரிந்தார். செவ்வேட் பரமன் புரியும் படைப்பில் தோன்றிய ஆன்மாக்கள் பெற்ற பேற்றை அளவிட்டுக் கூற வல்லார் யார்? அப்படைப்பில் வந்த யாவரும் புண்ணிய வடிவாகவே விளங்கினர். பாவம் என்பது அறவே நீங்கிற்று. எங்கும் மெய்ஞ்ஞானம் மிளிர்ந்தது; சிவ மணம் கமழ்ந்தது. (தொடரும்)







'KEPLER'

# கந்தன் கருணை

திருமுருக கிருபானந்த வாரியார்

## 12. தகப்பன் சுவாமி

ஆறுமுகக் கடவுள் அளவற்ற காலம் அயனைச் சிறை வைத்துச் சிருட்டித் தொழிலைப் புரிந்து கொண்டிருந்தார்.

பிரமனைச் சிறையிலிருந்து விடுவிக்க எண்ணிய திருமால் ஆதித்தர்களும், மருத்துக்களும், வசுக்களும், சப்த மாதர்களும், விஞ்சையர்களும், கருடர்களும், இயக்கர்களும், திக்குப் பாலர்களும், சந்திரனும், ஏனைய கிரகங்களும், நட்சத்திரங்களும், அகத்தியர் முதலிய முனிவர்களும், ஆதிசேடனும், நாகர்களும் தொடர வெள்ளியங்கிரியடைந்தார். சிவபெருமானின் திருவடிகளை வணங்கி, மறைமுறை துதித்து நின்றார். ''எம்பெருமானே! தேவரீருடைய திருக் குமாரராகிய சுப்பிரமணியக் கடவுள், பிரமதேவரிடம் பிரணவத்துக்குப் பொருள் கேட்டார். பிரமதேவர் அதனையறியாது மயங்கியதால் அவரது சிரங்களில் குட்டி, சிறையில் அடைத்துவிட்டுத் தாமே படைப்புத் தொழிலையும் பாலனத் தொழிலையும் செய்கின்றார். அடியேனுக்கு வேலையில்லை....''

'வேலையில்லாத் திண்டாட்டம்' வைகுந்தம் வரை பரவி விட்டது!

திருமால் தொடருவார்:

''எமது துன்பம் நீக்கி இன்பம் வழங்கும் பொருட்டு அவதரித்த முழுமுதற் கடவுளாகிய முருகப் பெருமானைப் பிரமன் தமது பேதைமையால் சிறு பிள்ளை என்று எண்ணி வணங்காது சென்றார். அதன் பயனாக எண்ணற்ற காலமாகச் சிறைப்பட்டு மனம் நொந்திருக்கிறார். எவ்வுயிர்க்கும் தேவரீரே பரம பிதா. முருகக் கடவுளைப் போல் பிரம தேவரும் தேவரீர்க்கு மைந்தரே யாவர். ஆகவே அவரைச் சிறையினின்றும் விடுவித்துத் திருவருள் புரிய வேண்டும்'' என்று திருமால் விண்ணப்பித்துக் கொண்டார்.

சிவபெருமான் புன்முறுவல் செய்தார். ''தேவர்களே! சிவம் வேறு குமரன் வேறு என்று பின்னம் பேசுவோர் மடவோரே. என்னையும் குமார மூர்த்தியையும் பிரித்து உணர்கின்றவர்கள் ஒரு போதும் இன்பமடைய மாட்டார்கள். இந்த உண்மையை உணராத பிரமன் நல்லுணர்ச்சி பெற்று உய்யும் பொருட்டே நம் குமாரன் அவனைத் தண்டித்துச் சிறையில் அடைத் தானேயன்றித் தன்னை வணங்கவில்லை என்பதற்காக அல்ல.

'ஈசாநஸ்ஸர்வ வித்யாநாம் ஈச்வரஸ் ஸர்வபூதா நாம்
ப்ரஹ்மாதிபதிர் ப்ரஹ்மணோதிபதிர்
ப்ரஹ்மா சிவோமே அஸ்து ஸதாசிவோம்'

என்று வேதம் எம்மை ஒரு முறையே பிரணவ சப்தத்தால் அழைக்கின்றது. நம் குமாரக் கடவுளையோ, 'சுப்ரஹ்மண் யோம்! சுப்ரஹ்மண்யோம்! சுப்ரஹ் மண்யோம்!' என்று மூன்று முறை 'ஓம் ஓம் ஓம்' எனப் பிரணவத்தில் இணைத்துக் கூவி யழைக்கும். இதனை யறியாது தருக்குற்ற பிரமனைச் சிறையினின்று விடுவிப்பது எவ்வாறு?

''எக்கலைக்கும் பூதங்கள் எவற்றினுக்கும்
பிரமனுக்கும் ஈசன் என்னத்
தக்கமுதற் பரப்பிரமஞ் சதாசிவன்ஓம்
எனவேதம் சாற்று மல்லால்
முக்கனல்சூழ் வேள்வியிற் சுப்பிரமணியன்
ஓமெனவும் முக்காற் கூறும்
இக்கருத்தை யறியானை யெவ்வாறு
விடுவிப்பாய் இயம்பு மின்னே ?''

என்று வினவியருளினார்.

எனினும், கருணைக் கடலானபடியா[ல்] கண்ணுதற்கடவுள் தேவர்பால் தி[ரு]வுளம் இரங்கினார். ''நந்தி! நீ குமா[ரக்] கடவுளிடம் சென்று, நம் வாசகத்தை[க்] கூறி நான்முகனைச் சிறை விடுத்து இ[ங்கு] மீண்டு வருக'' என்று பணித்தருளி[னார்]. நந்திதேவர் அக்கட்டளையைச் சிரமே[ற்] கொண்டு அளவற்ற கணங்கள் சூ[ழ] கந்த வெற்பையடைந்து, ஆறுமுகவ[ள்ள]லது அருணசரணாரவிந்தங்களை முறை[ப்]படி வணங்கித் துதித்து வந்த காரி[ய]த்தைக் கூறினார்.

முருகக் கடவுள் புன்னகை புரி[ந்து] ''நான்முகனைச் சிறை நீக்கேன். இங்கு நீ நின்றால் உன்னையும் சிறை[யில்]... விடுவேன்; விரைந்து ஓடிப் போ'' என்று திருவாய் மலர்ந்தருளி[னார்]. திருநந்தி தேவர் வேறொன்றும் வி[ளம்]பாது அஞ்சி நடு நடுங்கி, முருகப் பெ[ருமான்]...

மானை வணங்கிக் கொண்டு, திருக்கயிலை சென்றார். அங்கே சிவபெருமானின் திருமுன் சென்று வணங்கி, முருகப் பெருமான் திருவாய் மலர்ந்தருளிய வாசகத்தை விண்ணப்பம் செய்தார்.

நந்திதேவர் கூறியதைக் கேட்ட மணிகண்டப் பெருமான் திருநகை செய்து, சிங்காசனத்தினின்றும் எழுந்தார். இடப வாகனத்தில் அமர்ந்து திருமாலும் ஏனைய தேவர்களும், அருந்தவ முனிவரும் துதித்துப் பின் தொடரத் திருக்கயிலை நீங்கித் தாமே கந்த வெற்பை அடைந்தார். முருகக் கடவுளின் திருக்கோயிலின் முன் சென்றவுடனே இடபத்தினின்றும் இறங்கி, உள்ளே புகுந்தருளினார்.

தந்தையைக் கண்ட குமாரக் கடவுள் ''எந்தையர் வந்தருளினர்'' என்று இருக்கை விட்டிறங்கி எம்பெருமானை எதிர்கொண்டு வணங்கி, அழைத்துக் கொண்டு போய்த் தமது திவ்விய சிங்காசனத்தின் மீது எழுந்தருளச் செய்தார். ''உயிருக்குயிராகிய எம்பெருமானே! தாங்கள் இங்கு எழுந்தருளி வந்த செயல் யாது?'' என்று வினவினார். சிவபெருமான் தமது திருக்குமாரருடைய இனிய மொழிகளைக் கேட்டுப் பெருவகை கொண்டார். ''குழந்தாய்! நீ பிரமனைச் சிறை புரிந்தாய். அதனை நீக்கக் கருதியே நாம் வந்தோம். அவனைச் சிறையினின்று நீக்கக் கடவாய்!'' என்று திருவாய் மலர்ந்தருளினார்.

இளம்பூரணர் தமது திருமுடியை அசைத்தார். ''எந்தையே! பிரணவத்தின் பொருள் தெரியாதவன் உலகத்தைப் படைப்பது என்பது பேதைமையே! அவன் வேதங்களில் வல்லவன் என்பதும் பேதைமையே! ஐயனே! தங்கள் திருவருளின் அழகே அழகு! வேதத்தின் முன் நின்ற குடிலை மந்திரத்தின் பொருளறியாதவன் தங்களுக்குப் பூசை செய்வதா? தேவரீர் படைத்தல் தொழிலாகிய பொறுப்பை அவனுக்குத் தருவதா? அகந்தை நீங்காத அயனைச் சிறையினின்றும் வெளியே விடுவது முறையன்று'' என்று கூறினார்.

சிவபெருமான் சற்றே சினம்கொண்டவர் போல் குமரக் கடவுளைப் பார்த்தார். ''மகனே! உன் செய்கை நன்று. நமது ஆணையின்படி நந்தி வந்து கூறியும் நீ கேட்கவில்லை; நான்முகனைச் சிறையினின்றும் விடுவிக்குமாறு நாமே வந்து கூறியும் மறுக்கலாமோ?'' என்று மொழிந்தருளினார்.

பிதாவின் கருணையைக் கண்ட முருகக் கடவுள், ''ஐயனே! தேவரீர் திருவுளம் இதுவாயின் பிரமனைச் சிறை நீக்கித் தருவேன்'' என்று கூறினார். அருகில் நின்ற பூதர்களில் சிலரை நோக்கிய கந்தக் கடவுள், ''நீங்கள் விரைந்து சென்று பிரமனைச் சிறை நீக்கி, நம் முன் கொண்டு வாருங்கள்'' என்று பணித்தருளினார். அந்த ஆணையின்வண்ணம் பூதர்கள் சென்று குகைக்குள்ளே விலங்கிடப்பட்டு ஒடுங்கியிருந்த பிரமனைச் சிறை விடுத்து முருகவேள் திருமுன் அழைத்து வந்தனர். முருகவேள் பிரமனின் கையைப் பிடித்துச் சிவபெருமான் திருமுன் விடுத்தார்.

சிறையினின்றும் விடுபட்ட பிரமன் சிவபெருமானை மெய்யன்புடன் வணங்கித் துதித்து வெட்கி நின்றான். சிவபெருமான் நான்முகனுக்குத் திருவருள்



நோக்கம் செய்தார். ''நான்முகனே! நீ நெடுங்காலம் சிறைப்பட்டு இளைத்தனை போலும்!'' என்று திருவாய் மலர்ந்தருளினார்.

''கருணைக் கடலே! தேவரீருடைய திருக்குமாரர் அடியேனுக்கு அளித்த இத்தண்டனை சிறைவாசம் அல்ல; தவச்சாலை வாசம்! அவர் திருவடி தீண்டியது ஸ்பரிச தீட்சை! அதனால் யான் — எனது என்னும் அகந்தைஅழிந்து தீவினைகள் நீங்கின; சித்தசுத்தி விளைந்தது; அடியேன் புனிதனானேன்'' என்று விண்ணப்பம் செய்தார் பிரமதேவர். சிவபெருமான் பிரமனை நோக்கி, ''நீ இன்று முதல் உன் படைப்புத் தொழிலை முன் போலவே செய்து கொண்டிரு'' என்று அருளிச் செய்தார்.



கந்தக் கடவுளை நோக்கித் திருமுறுவல் செய்தார் தந்தைக் கடவுள். ''குழந்தாய்! வருக'' என்று அழைத்தார். அருகே வந்த குமாரக் கடவுளைத் தமது திருக் கரத்தினால் எடுத்துத் தமது மடியின் மீது அமர்த்திக் கொண்டு உச்சி மோந்து தாமரையனைய தமது திருக் கரங்களால் தழுவிக் கொண்டார். ''குழந்தாய்! பிரமனும் அறியாத பிரணவத்தின் பொருள் உனக்குத் தெரியுமா? தெரிந்தால் சொல்வாயாக'' என்று திருவாய் மலர்ந்தருளினார்.

**காமரு குமரன் சென்னி**
**கதுமென வுயிர்த்துச் செக்கர்த்**
**தாமரை புரையுங் கையாற்**
**றழுவியே அயனுந் தேற்கு**
**ஓமென வுரைக்கும் சொல்லின்**
**உறுபொருள் உனக்குப் போமோ**
**போமெனில் அதனை யின்னே**
**புகலென இறைவன் சொற்றான்**

''அண்ணலே! உலகமெல்லாம் பெற்றருளிய அன்னையாகிய எம்பிராட்டிக்குத் தாங்கள் பிறர் அறியாவண்ணம் உபதேசித்தருளிய பிரணவத்தின் பொருளை இரகசியமாகக் கூறுவதே அன்றி யாவரும் கேட்கும் வண்ணம் சொல்வது முறையாமோ? காலம் இடம் அறிந்து முறைப்படி கேட்டால் சொல்வோம்'' என்றார் ஆசார நாயகரான ஆறுமுகசுவாமி.

உபதேசிக்கும் குருவாயிருந்த சிவபெருமானுக்கு உபதேசம் கேட்கும் சிஷ்யனாகவும் இருக்க வேண்டும் என்ற ஆசை பிறந்தது. எளிமைக்காகவே ஏங்குபவரல்லவா எம்பெருமான்?

''குழந்தாய்! நீ கூறியது முற்றிலும் உண்மை'' என்று கூறிய சிவபெருமான் தமது இருக்கை விட்டெழுந்து, கைகளைக் குவித்து, சிரம் தாழ்த்தி, வாய் பொத்திச் செவி சாய்த்து, ''உலகங்களுக்கெல்லாம் நாதனே! குமாரக் கடவுளே!'' என்று பக்தியுடன்துதித்துநின்றார்.

**நாதபோற்றி யென முது**
**தாதைகேட்க அனுபவ**
**ஞான வார்த்தை யருளிய**
**பெருமாளே** —திருப்புகழ்

குருநாதரிடம் சிஷ்யன் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்ற தர்மத்தை உலகுக்கு உணர்த்தும் பொருட்டுச் சிவபெருமான், தனக்குத் தானே முருகனாகிய அப்பெருமானிடம் உபதேசம் கேட்டார்.

**நிருபகுரு பரமகுரு என்றென்று பக்தி கொடு**
**பரவஅரு ளியமவுன மந்த்ரந்தனைப் பழைய**
**நினதுவழி யடிமையும்வி ளங்கும்படிக்**
**கினிது ணர்த்தியருள்வாயே**

புரமெரித்த புரிசடைக் கடவுள் பக்தியுடன் வழிபட்டு நிற்க, முருகக் கடவுள் தவிசின்கண் வீற்றிருந்து கல்லாலின் கீழ் தென்முகப் பரமாசாரியராக எழுந்தருளி சனகாதி முனிவர்களுக்கு மோன நிலையை உபதேசித்த குருநாதருக்கும் குருவாக விளங்கி அகரமுதலெனவுரைசெய் ஐம்பத்தொரு அக்ஷரத்தில் தொடங்கிக் குடிலை மந்திரத்தின் பொருளை அமுதமான மழலைமொழியால் அற்புத அற்புதமாக உபதேசித்தருளினார்.

**அரவு புனைதரும் புனி தரும் வழிபட**
**மழலை மொழிகொடு தெளிதர—வொளிதிகழ்**
**அறிவை யறிவது பொருளென அருளிய**
**பெருமாளே**

பிரணவ மந்திரத்துக்குப் பொருள் தெரியாமலே உலகைப் படைத்துத் தருக்குற்றிருந்த பிரமனால் நேர்ந்த அற்புதமான நிகழ்ச்சியல்லவா இது?

பிரணவப் பொருள்தான் என்ன? என்றால் விசேஷமானது; நவம் என்பது புதுமை. அநுபவிக்க அநுபவிக்கப் புதுப்புது விசேஷ உண்மைகளை உணர்த்துவது பிரணவம் (பிர+நவம்). என்று

வாடாமல், காலத்தால் தேயாமல் எப்போதும் புதுமையாகவே; இருக்கும் ஆன்ம தத்துவம்தான் பிரணவம். உலகை மாயா என்று சொல்கிறோம். இதற்கு வேறு வேறு மதஸ்தர்கள் வேறு வேறு பொருள் கொள்கிறார்கள். ஒரு பொருள் 'மா' — ஒடுக்கம். 'யா' — தோற்றம். தோற்றமும் ஒடுக்கமும் உடையது உலகம் என்பது பொருள். இந்த உலகம் எதில் தோன்றியதோ அதில் ஒடுங்குகிறது. உலகமும் உயிர்களும் மாயையில் தோன்றி மாயையிலேயே முடிகின்றன. உலகத்தின் தோற்றத்திற்கும் ஒடுக்கத்திற்கும் 'பரப்பிரம்மம்' தான் காரணம் என்று வேதம் சொல்கிறது. கடல் நீரை மாயை என்று சொல்வோமானால் அதன் அகண்ட வெளிதான் பிரம்மம். கடலில் தோன்றிக் கரை மோதி மோதி அழியும் அலைகள்தான் உயிர்கள். ஆக, உயிர்களும் உலகும் பிரம்மத்திலிருந்து தோன்றிப் பிறகு, அங்கேயே மடிகின்றன.



மூலப்பிரகிருதி என்பது ஆன்மாக்கள் எல்லாம் வெளிப்படுவதற்கும், எண்ணற்ற அண்டங்கள் தோன்றிப் பெருகுவதற்கும் அடிப்படையாக இருப்பது. மூலம் என்றால் வேர். பிரகிருதி என்றால் இயற்கை. ஆன்மாக்கள் அத்தனையும் அந்த மூலப் பிரகிருதியிலேயே அணு வடிவில் அடங்கியிருக்கின்றன. மூலப் பிரகிருதியில் அடங்கியுள்ள ஆன்மாக்களுக்குத் தன் தனிப் பெருங் கருணையால் விடுதலை தந்து, வடிவு எடுத்துக் கொள்ள உடலும் தந்து, சிந்திக்க உள்ளமும், வாழ உலகமும் தந்து, ஆட்டுவிக்கிறது அருட்பெருஞ்சோதி. தனு, கரணம், புவனம், போகம் என்ற பெயர்களில் முறையே உடல், உள்ளுறுப்பு, உலகம், இன்பம் இவற்றை அளிக்கிறது. இறைவனுடைய இந்தத் தனிப் பெருங் கருணையைத்தான் பராசக்தி என்கிறோம். பராசக்தியாகிய அந்தக் கருணை வெள்ளத்தை எது தாங்க முடியும்? மகா நதியைப் பயிர்கள் தாங்க முடியாததால் பற்பல கால்வாய்களின் மூலம் பிரித்து வயலுக்குள் விடுகிறோமல்லவா? இதே போல் பராசக்தியாகிய கருணை வெள்ளமும் பிரிந்து பிரிந்து வந்து உயிர்களுக்கு உய்வு அளிக்கிறது. பராசக்தி வெள்ளத்தின் ஆயிரத்தில் ஒரு பங்காக ஆதிசக்தி பிரிந்தது. அதன் ஆயிரத்தில் ஒரு பங்காக ஞான சக்தி பிரிந்தது. இதிலிருந்து ஆயிரத்துள் ஒரு பங்காகப் பிரிந்தது கிரியா சக்தி. இதுதான் உலகை இயக்குவது. கிரியா சக்தியின் ஆயிரத்துள் ஒரு பங்காகப் பிரிந்தது இச்சா சக்தி. இச்சா சக்தியான அருள் வீழ்ச்சி விந்து என்கிற சுத்த மாயையில் விழ அது சுழன்றது. — நீர் வீழ்ச்சியானது சக்கரத்தில் விழுந்தவுடன் அது சுழன்று மின்சாரம் பிறப்பது போல் குடிலா சக்தி பிறந்தது. (வட்டமான விந்திலிருந்து நேரான ஒரு சக்தி பிறந்ததைக் குறிக்கு முகமாகவே சுழியுடன் கோடு சேர்த்து 'உ' என்று பிரணவப் பொருளாகிய பிள்ளையார் சுழி இடுகிறோம்.) குடிலையின் வடிவமே ஓம். குடிலை விந்துவின் சுழற்சியிலிருந்து நேராகப் பிறந்தபோது அதிலிருந்தே நாதம் உண்டாயிற்று. அதாவது இறைவனது அருள் வீழ்ச்சியானது சுத்த மாயையின் மேல் விழும்போது அது சுழலத் தொடங்குகிறது; அப்போது பிறந்த குடிலையிலிருந்து முத்தொழில் புரியும் மும்மூர்த்திகள் தோன்றுகிறார்கள். விந்து சுழன்றது. நாதம் நேராகத் தோன்றியது. இதுவே சுழியும் கோடும் சேர்த்து "உ" என்று முதலில் எழுதுகின்ற பிள்ளையார் சுழி.

"நாத விந்துக லாதீ நமோநம
வேத மந்த்ரசொ ரூபா நமோநம"

பராசக்தியி லிருந்து கடைசியில் குடிலா சக்தி வரை ஆறு சக்திகள் உள்ளன. இந்தச் சக்திகள் ஆறும் முருகப் பெருமானது ஆறு முகங்கள்.

"ஆதியொடு மந்த மாகிய நலன்கள்
ஆறுமுகமென்று தெரியேனே"

என்று அருணகிரியார் பாடுவது இதனைத்தான்.

மயில் தோகையை விரித்து ஓம் என்ற பிரணவ வடிவத்தைக் காட்டி ஆடுகின்றது. மயிலின் கழுத்திலிருந்து தொடங்கி விரித்த தோகையைச் சுற்றிக் கீழே அதன் காலடிகள் வரை கொணர்ந்து முடித்து எழுதினால் அது 'ஓ' என்ற ரூபமாகவே அமையும்.

"ஆனதனி மந்த்ர ரூபநிலை கொண்ட
தாடு மயிலென்ப தறியேனே"

என்று அருணகிரிநாதர் பாடுகிறார்.

முருகப் பெருமான் ஓங்காரத்துட் பொருளாகவும் அதே போதில் அதற்கு அப்பாலும் நிலவுகிறான். அவனது வேலே

ஞான சக்தி. மயில் விந்தின் வடிவம். சேவல் கொடியே நாதம். (வேல் முருகன் மேல் சாய்ந்தே யிருத்தல் வேண்டும். முருகன் தலைக்கு மேல் வேல் உயர்ந்து நிற்றல் கூடாது.) இவ்வரலாற்று முடிவில் வல்லீதேவசேனு சமேதராக நாம் சுப்பிரமணிய ஸ்வாமியைக் காணும் போது வள்ளியும், தெய்வயானையும் முறையே இச்சா சக்தியும் கிரியா சக்தியும் ஆவர். முருகப் பெருமானின் வலக்கரம் மேல் நோக்கியிருந்து அபயமும் இடக்கரம் கீழ்நோக்கியிருந்து வரதமும் காட்டும். வள்ளி முருகனுக்கு வலப்பக்கமும், தெய்வானை இடப்பக்கத்திலும் நின்றிருப்பர். வள்ளியின் கையில் தாமரையும் தெய்வயானையின் கையில் குமுதமும் மலர்ந்து நிற்கும். முருகப் பெருமானுக்கு வலக் கண் சூரியனுகவும் இடக் கண் சந்திரனுகவும் அமைந்திருப்பதால் சூரிய ஒளி படும் தாமரை மலரும் குவிவதில்லை; சந்திர ஒளி படும் குமுதமும் குவிவதில்லை. முருகப் பெருமானின் ஆறுமுகங்களிலும் ஆறு மகத்துவங்கள் அடங்கியிருக்கின்றன. ஓம் என்ற எழுத்தில் அகரம், உகரம், மகரம், விந்து, நாதம், கலை இந்த ஆறும் அடங்கியுள்ளன என்பதை ஆறு முகம் தரித்த ஐயன் உணர்த்துகிருர். இந்தத் தத்துவங்களைப் பரமனுக்குக் குமரன் ஓதியதையே 'ஓரெழுத்தில் ஆறெழுத்தை ஓதுவித்த பெருமாளே' என்று அருணகிரிநாதர் பாடுகிருர்.

ஒப்பற்ற வேலையுடைய பரம்பொருளைக் குருவாகக் கொண்டு அருள் பெற்றாலன்றி மெய்ப்பொருளை அறிய முடியாது. பல பிறப்புக்களில் முயன்ருவது முருகப் பெருமானையே குருநாதராக அடைய வேண்டும். ஞானுசிரியராகிய சிவபெருமானுக்கே உபதேசித்த முருகக் கடவுள் ஞான பண்டிதன் அல்லவா?

கந்தக் கடவுளிடம் உபதேசம் கேட்டருளிய சிவபெருமான், திருவுளம் மகிழ்ந்து எத்தகைய பெருமிதம் உள்ளவர்க்கும் குருநாதன் அவசியம் இருத்தல் வேண்டும் என்பதை உலகுக்கு உணர்த்தினுர். இந்தக் 'கந்தன்கருணை'த் தொடரில் எழுத்துக்களைப் படித்துச் சிந்திப்பதுடன் கண்களை மூடித் திருக்காட்சி பாவித்துத் தியானம் செய்ய வேண்டிய பல கட்டங்களும் உண்டு. குழந்தை குகன் தன் தந்தை மகேசனுக்குப் பரம ஞான கம்பீரத்துடன் உபதேசிக்க, சிவபெருமான் விநயசீல சௌந்தரியத்துடன் உபதேசம் பெற்ற கட்டம் ஒவ்வொருவரும் கண்களை மூடித் தியானிக்க வேண்டிய இனிய நிகழ்ச்சியாகும். குமாரக் கடவுளை அங்கேயே இருக்கும் வண்ணம் பணித்துப் பிரமன், திருமால், இந்திரன் முதலிய தேவர்களுக்கு விடை தந்து திருக்கயிலாய மலையடைந்து திருக்கோயிலினுட் சென்று வீற்றிருந்தருளினுர். இவ்வாருக, சுவாமியாகிய சிவபிரானுக்கு நாதனுகி உபதேசித்துச் சுவாமி நாதனுகிப் பெருமை கொண்டார் முருகப் பெருமான். (தொடரும்)

---



ஆறுதனைக் காதலித்தேன்; ஆறுதனைக் காதலித்தேன்
ஆறு பெருகிவரும் அழகுதனைக் காதலித்தேன்.
ஆறு பெருகிவரும் அழகுக்கோ காதலித்தேன்?
ஏறும் படிவரிசை இருந்ததனுல் காதலித்தேன்.
ஏறும் படிவரிசை இருந்ததற்கோ காதலித்தேன்?
ஏறும் படியிலெழும் இன்னிசைக்காய்க் காதலித்தேன்.
ஏறும் படியிலெழும் இன்னிசைக்கோ காதலித்தேன்?
இன்னிசையும் பெண்ணிசையாய் இருந்ததனுல் காதலித்தேன்.
இன்னிசையும் பெண்ணிசையாய் இருந்ததற்கோ காதலித்தேன்?
பெண்ணவளும் கன்னியெனப் பெற்றதனுல் காதலித்தேன்.
பெண்ணவளும் கன்னியெனப் பெற்றதற்கோ காதலித்தேன்?
கன்னியவள் பாடியதோர் கவிதைக்காய்க் காதலித்தேன்.
கன்னியவள் பாடுமந்தக் கவிதைக்கோ காதலித்தேன்?
கவிதையிலே தோய்ந்திருந்த கவலைக்காய்க் காதலித்தேன்.
கவிதையிலே தோய்ந்திருந்த கவலைக்கோ காதலித்தேன்?
கவலையிலும் நற்காதல் கனிந்திருக்கக் காதலித்தேன்.
கவலையிலும் நற்காதல் கனிந்ததற்கோ காதலித்தேன்?
காதலிலும் காதலன்பேர் கலந்தொலிக்கக் காதலித்தேன்.
காதலிலும் காதலன்பேர் கலந்ததற்கோ காதலித்தேன்?
பேரதுவும் எனைக்கவர்ந்த பெற்றிக்காய்க் காதலித்தேன்.
பேரதுவும் எனைக்கவரும் பெற்றிக்கோ காதலித்தேன்?
பேரதுவும் என்பேராய்ப் பெற்றதனுல் காதலித்தேன்....

— திருச்சிற்றம்பலக் கவிராயர்

# நிச்சயமாகத் தெரியுமா?

ஆம், கவர்ச்சி மிக்கவள்தான். அழகான ஆடை அணிந்திருக்கிறாய்; படிப்பிலும் சுறுசுறுப்பானவள்தான். ஆனால் எளிதில் ஏற்றுக் கொள்ளப்படக் கூடியவள்தானா என்பது நிச்சயமாகத் தெரியுமா?

உடலில் துர்நாற்றம் வீசும் கிருமிகளை உன்னால் தவிர்க்க முடியாது. ஆனால் வழக்கமாக சிந்தால் உபயோகித்து அவைகளை அழித்து விடலாம். இந்தியாவில் அற்புதக் கிருமிநாசினி ஜி-11* கொண்ட ஒரே சோப் இதுதான். லட்சக்கணக்கான மக்கள் உபயோகித்து, பரிசீலனை செய்யப்பட்டது. உன்னுடைய பிரபல்யம் பெரிதும் அதைப் பொறுத்துத்தான் இருக்கிறது.

மகிழ்ச்சியூட்டும், நறுமணம் பொருந்திய சிந்தால் சருமத்தைக் கறைப்படுத்தும் கிருமிகளைக் கூட அழித்து விடும். அதனால் மேனி மாசற்று விளங்கும்.



நிச்சயமான பாதுகாப்பிற்கு
குழந்தையை சிந்தால் சோப் கொண்டு நீராட்டி, துர்நாற்றம் போக்கும் இனிய மணம் கமழும், இதமான ஜி-11 அடங்கிய சிந்தால் டால்கம் பவுடரைத் தூவித் தடவுங்கள்

* எல். ஜிவாடன் அண்டு கம்பெனியின் ட்ரேட் மார்க்

* விவரமான "ஜி-11 என்பது என்ன?" என்ற இலவச புத்தகத்திற்கு கோத்ரெஜ், பம்பாய்-12, என்ற விலாசத்துக்கு எழுதுங்கள்.

வியர்வை நாற்றத்தைப் போக்கி எழிலுடன் விளங்கச் செய்யும் சோப்




Godrej கோத்ரெஜ் சோப்புகளில் முதன்மையான பெயர்

CT. 10A. TAM.

எங்கள் சிந்தால் சோப்பு வாங்குவோர்களுக்கு ஒரு விசேஷ சலுகை! சோப்பின் உறையில் அடங்கியுள்ள சலுகை கூப்பன் உங்களுக்கு ஒவ்வொரு சிந்தால் டால்கம் பவுடர் டின்னின் விலையில் 30 பைசா சலுகை அளிக்கும்.

2-31-1

# கந்தன் கருணை

## 13. வெற்றிவேல்! வீரவேல்! ஞானவேல்!

முருகப் பெருமானிடம் சிவபெருமானே உபதேசம் கேட்டார் என்பதை அறிந்த அகத்திய முனிவர், தாமும் குடிலை மந்திரத்தின் பொருளை உணர வேண்டும் என்று முருகப் பெருமானை நாடிக் கந்த வெற்புக்கு வந்தார். வீரவாகு தேவரிடம் அனுமதி பெற்று, செம்பொன்னலயத்தினுள் சென்று, கந்தவேளை வலம் வந்து வணங்கினர். ''எம்பெருமானே! காமனை எரித்தவர் தேவரீருடைய தந்தை; காமன் கணையால் வாடுபவன் நான். காலனை உதைத்தவர் தேவரீர் தந்தை; காலனுக்கு அஞ்சுபவன் நான். எல்லாம் வல்ல இறைவனுக்கே பிரணவ மந்திரத்தின் பொருளை உபதேசித்த தேவரீர், அதனை அடியேனுக்கும் உபதேசித்தருள வேண்டும்'' என்று வேண்டிக் கைகட்டி வாய் பொத்தி நின்றார்.

அகத்திய முனிவரின் வேண்டுகோளை ஏற்றுக் கொண்ட கந்தவேள், பிரணவ மந்திரப் பொருளையும், வேதாகமங்களின் மெய்ப்பொருளையும் உலகமெல்லாம் உய்யும் பொருட்டு அவருக்கு உபதேசித்தருளினர்.

முருகப் பெருமான் கந்தவெற்பில் எழுந்தருளியிருந்த போது, திருமாலின் கண்ணின் மணியிலிருந்து சொரிந்த ஆனந்த பாஷ்பத்திலிருந்து சுந்தரம் மிகுந்த இரு நங்கையர் தோன்றினர். சிவபெருமானின் நெற்றிக் கண்ணிலிருந்து எழுந்த ஞானக்கினியில் ஞான பண்டிதனை ஒரு குமாரன் உதித்தானெனில், திருமாலின் கண்ணினின்று கசிந்த கருணை நீரில் கருணைமயமான இரு குமரிகள் உதித்ததும் பொருத்தம் தானே! கண்மணியினின்று உதித்த அப்பெண்மணிகள் நெற்றிக் கண்ணில் பிறந்த வெற்றிவேலனிடம் அன்பு பூண்டதும் பொருத்தம்தானே! அத்தை மகன் என்ற உறவுமுறையும் உள்ளதே!

திருமாலின் நயனத்தில் உதித்த அவரது புதல்வியராகிய அமிர்தவல்லியும், அவள் தங்கை சுந்தரவல்லியும் கந்தக் கடவுளைத் திருமணம் புரிந்து கொள்ள விரும்பினார்கள். அவர்கள் இருவரும், தங்கள் விருப்பம் நிறைவேறும் பொருட்டு, இமயமலையில் உள்ள சரவணப் பொய்கைக்கு வந்து, சடக்கர மந்திரம் ஜபித்துப் பன்னெடுங் காலம் அருந்தவமிருந்தார்கள். தவத்துக்கு இரங்கிய முருகப் பெருமான் அவர்கள் முன் எழுந்தருளிக் காட்சி தந்தார்.

இறைவனைக் கண்ட கன்னியர் இருவரும், அவரது திருத்தாளைப் பணிந்து துதித்து நாணி நின்றார்கள்.

கந்தவேள் அவர்களை நோக்கி, ''நீங்கள் எதனை விரும்பித் தவம் செய்தீர்கள்?'' என்று வினவினார்.

திருமால் புதல்வியர்கள் கைகுவித்து நின்று, ''எம்பெருமானே! தேவரீர் அடியவர்களாகிய எங்களைத் திருமணம் புரிந்து கொள்ளும் பொருட்டுத்



தவம் செய்தோம்; எங்களுக்குத் திருவருள் செய்யவேண்டும்'' என்று வேண்டிக் கொண்டார்கள்.

அவர்களை அப்பொழுதே முருகப் பெருமான் மனைவியராக ஏற்றுக் கொள்ளவில்லை. இறைவன் சக்தியோடு இருக்கும்பொழுது அழித்தல் வேலை நிகழாது. சக்தி அருளின் வடிவம் அல்லவா? ஆகவே, சூர சம்ஹாரம் நிகழ்ந்த பின்பே முருகப் பெருமான் அவர்களை மணக்க எண்ணம் கொண்டார். சிவபெருமானும் உமாதேவியாரை மணப்பதற்கு முன்புதான் காமனை எரித்தார்; இராமபிரானும் சீதையைப் பிரிந்த பின்பே இராவணனை அழித்தார்.

ஆறுமுகக் கடவுள் அமிர்தவல்லியை நோக்கி, ''நீ இந்திரனுக்கு மகளாய் வளரக் கடவாய்'' என்று அருள்பாலித்தார். சுந்தரவல்லியை நோக்கி, ''நீ பூமியிலே சிவமுனிக்குப் புதல்வியாகத் தோன்றி, வேட்டுவரிடத்தில் வளரக் கடவாய்'' என்றார்.

ஒருத்தி துரைமகள்; ஒருத்தி குறமகள். ஒருத்தி பொன்னுலகம்; ஒருத்தி மண்ணுலகம். ஒருத்தி கற்பகச்சோலைக்கு அரசி. ஒருத்தி தினைப்புனத்திற்குக் காவற்காரி.

கன்னியர் இருவரையும் நோக்கிக் கந்தக் கடவுள், ''நீங்கள் இருவரும் இவ்வாறு வளரும் பொழுது நாம் வந்து, உங்களை முறைப்படி திருமணம் செய்து கொள்ளுவோம்; செல்லுங்கள்'' என்று திருவாய் மலர்ந்தருளினர். கன்னியர் இருவரும் கைதொழுது விடை பெற்றுச் சென்றனர்.

அமிர்தவல்லி ஓர் அழகிய குழந்தை வடிவம் கொண்டு மேரு மலையில் வாழ்ந்த இந்திரன் முன் சென்று, ''தேவர்கோமானே! நான் உன்னுடன்



உபேந்திரனுகப் பிறந்த நாராயணரின் மகள்; ஆதலால் நீ எனக்குத் தந்தை முறையாவாய்! நீ என்னை மகளாக வளர்க்கக் கடவாய்'' என்றுள். இந்திரன் அவளை நோக்கி, ''தாயே! இங்கு வா'' என்று சொல்லி எடுத்தணைத்து உள்ளம் பூரித்தான். தனது ஊர்தியாகிய ஐராவதத்தை அழைத்து ''இவள் நம்முடைய மகள்; இவளை நீ அன்போடு வளர்த்து வரக் கடவாய்; இவளால் இனி நமக்கு எல்லையில்லாத சீரும் சிறப்பும் உண்டாகும்'' என்றுன். ஐராவதம் அந்தக் குழந்தையைத் தன் பிடரி மேல் வைத்துக் கொண்டு, சத்திய உலகத்தின் தலைநகராகிய மனேவதியை அடைந்தது. அங்கேயே அக் குழந்தையை வளர்த்து வந்தது. தேவ ராஜனின் யானை வளர்த்ததால் அக் குழந்தைக்குத் தெய்வயானை என்னும் பெயர் ஏற்பட்டது. சேனையும் அரசும் இழந்து தவித்த தேவராஜனுக்கு ஒரு சேனையே கிடைத்தாற் போன்ற உற்சாகமளித்தமையால் தேவசேனை என்றும் அவளைச் சொல்வதுண்டு.

திருமகளும் நாணும் வனப்புடன் திகழ்ந்தாள் தெய்வயானை. அரை நொடியும் விடாது அறுமுகதேவனைத் தியானித்த வண்ணமாகவே இருந்தாள்.

இளையவளாகிய சுந்தரவல்லி தொண்டை நாட்டிலுள்ள வள்ளி மலைக்கு வந்து முருகப் பெருமானைக் குறித்துத் தவம் செய்து கொண்டிருந்தாள்.

காமமே இல்லாத கடவுளை அடையத் தவம் கிடந்தனர் அமிர்தவல்லியும், சுந்தரவல்லியும். அவர்களுக்கு முருகப் பெருமான் திருவருள் புரிந்தார். பற்று விட்டவர்களைத்தான் செல்வங்கள் பலவும் வந்தடைகின்றன. இச்சா சக்தியும், கிரியா சக்தியும் காமத்தை வென்றவன் கட்டளையை விரும்பி நிறைவேற்றுகின்றன. ஆகவே, பற்றின்றி ஒன்றை எண்ணும்போதும், பேசும்போதும், குகனைச் சிந்தை செய்ய வேண்டும்.

அழகு அழகுடன்தானே சேர வேண்டும்? அழகே உருவான திருமாலின் புதல்விகள் முருகனைத்தானே சேர வேண்டும்? முருகன் அழகுத் தெய்வம். அந்திச் செவ்வானத்தின் அழகுதான் முருகன். முருகன் என்பதே அழகன் என்பதைக் குறிக்கும். முருகு என்ற சொல்லுக்கு அழகு என்பது பொருள்.

**''எழுதரிய அறுமுகமு மணிநுதலும் வயிரமிடை**
**யிட்டுச் சமைந்தசெஞ் சுட்டிக் கலன்களுந்**
**துங்கநீள்பன்**
**னிருகருணை விழிமலரு மிலகுபதி னிருகுழையும்**
**ரத்நக்கு தம்பையும் பத்மக்கரங்களுஞ்**
**செம்பொனூலும்**
**மொழிபுகழு முடைபணியு மரைவடமு**
**மடியிணையு**
**முத்தச் சதங்கையுஞ் சித்ரச் சிகண்டியுஞ்**
**செங்கைவேலும்**
**முழுதுமழ கியகுமர கிரிகுமரியுட னுருகு**
**முக்கட் சிவன்பெறுஞ் சற்புத்ர**
**வும்பர்தந் தம்பிரானே''**

என்று அருணகிரிநாதர் முருகனை அழகாக வர்ணிக்கிறுர். இத்தகைய அழகுத் தெய்வத்தை மணுளனுகத் தேர்ந்தெடுத்த அந்தக் கன்னியர்கள் எப்படிப்பட்டவர்கள்?

அமிர்தவல்லி என்றுல் அமுதமே உருவெடுத்த கொடி போன்றவள்; சுந்தரவல்லியோ அழகே வடிவெடுத்த கொடி போன்றவள். கலைமகளுக்குச் சொல்லில் அழகு. திருமகளுக்கு முகத்தில் அழகு. திருமாலுக்குக் கண்கள் அழகு. இப்படி ஒவ்வொருவருக்கும் முக்கியமான அழகு தருவது ஓர் அவயவம். ஆனுல் அமிர்தவல்லியும், சுந்தரவல்லியும் எல்லா அழகும் பெற்று இலங்கினர்.

திருமாலின் புதல்வியர்கள் இருவருக்கும் வரமளித்தபின் முருகப் பெருமான் கந்தவெற்பை யடைந்தார். பெருங் கருணையோடு அங்கு சில காலம் வீற்றிருந்தபின், இலக்கத்தொன்பது வீரர்களும் பூதகணங்களும் சூழத் திருக்கயிலாய மலையடைந்தார். தாய் தந்தையரான சிவபெருமானையும், உமாதேவியாரையும் அன்புடன் வணங்கி, அவர்களுக்கு நடுவே கவினுற எழுந்தருளியிருந்தார். இவ்வாறு எழுந்தருளியிருக்கும்போது, இந்திரன், பிரமன், திருமால் முதலிய எல்லா தேவர்களும் சூரபன்மன் கொடுமையால் உள்ளம் தளர்ந்து திருக்கயிலாய மலையையடைந்தார்கள்.

இந்திரன் சிவபெருமானை நோக்கி, ''அருட் சக்தியாகிய அம்பிகையுடன் எழுந்தருளியுள்ள முழுமுதற் கடவுளே! அடியவர்களாகிய நாங்கள் எண்ணில்லாத யுகங்களாகச் சூரன் முதலிய அசுரர்களால் துன்பப்பட்டு ஒடுங்கினேம். அடியேனுடைய புதல்வனுகிய சயந்தனும் தேவர்களும் அரம்பையர்களும் சூரனுல் சிறைப்பட்டு வருந்தி வாடுகிறுர்கள். அரக்கர்கள் விண்ணுலகத்தை அழித்தார்கள். இவை யெல்லாம் தேவரீர் அறியாததோ? கருணைக் கடலே! அடியேன் முன்னர்த் தவம்

செய்த பொழுது தேவரீர் எழுந்தருளி, 'நம்மிடத்தே ஒரு குமாரன் பிறந்து சூரன் முதலிய அரக்கர்களைக் கொன்று உங்களைக் காத்தருளுவான்' என்று திருவாய் மலர்ந்தருளினீர்கள். அவ்வாறே தேவரீர்க்குத் திருக்குமாரன் தோன்றியும் எங்கள் துன்பம் இன்னும் நீங்கவில்லையே! அடியேங்கள் துன்பம் இன்னும் தொலையவில்லை போலும்!'' என மனமுருகிக் கூறினன்.

சிவபெருமான் தேவர்களின் குறைகளைக் கேட்டுப் பெருங் கருணை புரிந்தார். தேவர்களின் துயர் தீர்ப்பதற்குரிய தருணம் வந்துவிட்டது எனத் திருவுளம் கொண்டார். தமது பக்கத்தில் எழுந்தருளி யிருந்த கந்தவேளை நோக்கி, ''குமர! உலகத்திலுள்ள உயிர்களுக்குத் துன்பம் செய்து தேவர் உலகத்தை அழித்து, மிகுந்த வலிமை படைத்த சூரபன்மனை அசுரர்களோடு கொன்று, அதர்மத்தை அழித்து, அறமார்க்கத்தை நிலைநிறுத்தி, அமரர்களுடைய துன்பத்தை நீக்கி, இந்திர



னுக்கு அவன் அரசை மீட்டுக் கொடுத்துத் திரும்பி வருவாயாக'' என்று திருவாய் மலர்ந்தருளினர்.

''எந்தையே! கட்டளைப்படியே அடியேன் இப்பணியைச் செய்வேன்'' என்று முருகன் விண்ணப்பம் செய்தார். அவதாரப் பணி தொடங்கிவிட்டது.

சிவபெருமான் பதினொரு உருத்திரர்களையும் தம் திருவுளத்தில் நினைத்தார். அவர்கள் அங்கு வந்து தோன்றினர்கள். ''நீங்கள் முருகன் கையில் படைக்கலங்களாக இருக்கக் கடவீர்'' என்று முக்கண் மூர்த்தி திருவாய் மலர்ந்தார். உடனே அவர்களைத் தோமரம் (எறியீட்டி) கொடி, வாள், குலிசம் (வஜ்ராயுதம்) அம்பு, அங்குசம், கண்டாமணி, தாமரை (மோகிக்கச் செய்யும் ஆயுதம்) தண்டம், வில், மழு என்னும் பதினொரு படைக்கலங்களாக்கிக் கந்தக் கடவுளின் திருக் கரங்களிலே கொடுத்தருளினர்.

**பொன்றிகழ் சடிலத் தண்ணல்தன் பெயரும்**
**பொருவிலா உருவமும் தோன்றுள்**

**நன்று பெற்றுடைய உருத்திர கணத்தோர்**
**நவிலருந் தோமரம் கொடிவாள்**

**வன்றிறற் குலிசம் பகழியங் குலிசம்**
**மணிமலர்ப் பங்கயம் தண்டம்**

**வென்றிவில் மழுவு மாகிவிற்றிருந்தார்**
**விறல்மிகும் அறுமுகன் கரத்தில்**

பின்னர் சிவபெருமான் அப்பதினொரு ஆயுதங்களுக்கும் நாயகமாகப் பன்னிரண்டாம் ஆயுதமாக வேலாயுதம் ஒன்றைப் படைத்தருளினர். அஃது ஏவியவுடன் ஐம்பெரும் பூதங்களையும் அழிக்கக் கூடியது; சகல உயிர்களையும் ஒருங்கே முடிக்கவல்லது; யாவர் மேல் விடுத்தாலும் அவருடைய வன்மைகளையும் வரங்களையும் கெடுத்து உயிரைப் போக்கக் கூடியது; எல்லாப் படைக்கலங்களுக்கும் நாயகமானது. அதனை முருகப் பெருமானின் பன்னிரண்டாவது திருக்கரத்தில் முக்கட் பரமன் கொடுத்தருளினர்.

**ஆயதற் பின்னர் ஏவில்மூ தண்டத்(து)**
**ஐம்பெரும் பூதமும் அடுவது:**

**ஏயபல் லுயிரும் ஒருதலை முடிப்பது;**
**ஏவர்மேல் விடுக்கினும் அவர்தம்**

**மாயிருந் திறலும் வரங்களுஞ் சிந்தி**
**மன்னுயிர் உண்பதெப் படைக்கும்**

**நாயகமாவது; ஒருதனிச் சுடர்வேல்**
**நல்கியே மதலைகைக் கொடுத்தான்**

ஞானசக்தியாகிய இவ் வேற்படையால் ஆகாததே இல்லை. வெல்வது வேல். 'வெல்' என்ற பகுதி 'வேல்' என்று நீண்டது. (இதனை முதல் நீண்ட தொழிற் பெயர் என்பர் இலக்கண நூலார்.) விடு என்பது வீடானது போல, கெடு என்பது கேடானது போல, வெல் என்பது வேல் ஆயிற்று. வேல் என்பது ஆயுதமல்ல. எல்லாவற்றையும் வெல்வது என்று பொருள். அறிவுதான் எல்லாவற்றையும் வெல்லும்; ஆயுதம் வெல்லாது. ஞானம்தான் வெல்லும். அதனால் ஞான சக்தியே முருகனுக்கு வேல் ஆயிற்று.

அறிவுக்கு மூன்று லட்சணங்கள் உண்டு. அவை ஆழம், அகலம், கூர்மை என்பன. தீட்சண்யமாகவும், பரந்தும் ஆழ்ந்தும் உள்ள அறிவே அறிவல்லவா!

**''வேதங்கள் ஐயா என ஓங்கி**
**ஆழ்ந் தகன்ற நுண்ணியனே''**

என்று மாணிக்கவாசகர் சிவஞானத்தைப் பாடுகிறார்.

அடிப் பகுதி ஆழ்ந்தும், இடைப் பகுதி அகன்றும், நுனிப் பகுதி நுண்மையாகக் கூர்ந்தும் இருப்பது வேல். எனவே, வேல் என்பது ஞானமே; கொலைக் கருவி அல்ல. முருகப் பெ

மான் தம்மிடம் விரோதம் கொண்டவர் மீது வேலை ஏவி ஞானத்தைத் தருகிறார். முருகப் பெருமானே ஞான தாதா அல்லவா ?

தீவினையாகிய மலையைத் துகளாக்கும் ஆற்றல் அந்த வேலுக்கே உண்டு.

**வினை ஓடவிடுங் கதிர்வேல் மறவேன்**
**வேலுண்டு வினையில்லை**

ஆணவத்தையும், தீவினையையும் ஞானம் தவிர வேறு எதனாலும் அழிக்க முடியாது. அவ்வாறு அழிக்கும் ஞானத்தின் உருவமே முருகவேள் கையிலுள்ள வேல்.

முருகப் பெருமான் சிவபெருமானையும், உமாதேவியாரையும் தொழுது நின்றார். கண்ணுதற் கடவுள் தமது அருமைத் திருக் கரத்தினால் கந்தவேளை எடுத்துத் திருத் தொடையில் இருத்திப் பெருங் கருணையோடு தழுவினார்; உச்சி மோந்து திருவருள் புரிந்து, எம்பெருமாட்டியாருடைய திருக் கரங்களிலே கொடுத்தருளினார். தமது அன்புக்கு உறைவிடமான இன்பக் குமாரரை எம்பெருமாட்டியார் தமது மடியில் இருத்திப் பேரருட் பொலிவோடு அணைந்து உச்சி மோந்தார். ''குழந்தாய் ! இலக்கத்தொன்பது வீரர்கள் புடைசூழச் சென்று, அசுரர்களைக் கொன்று, தேவர்களின் குறையை நீக்கி மீள்வாயாக'' என்று எம்பெருமாட்டியார் ஆசி கூறினார்.

ஞானம்பாள் அல்லவா பார்வதி ? முருகனையும், அவன் பெற்ற ஞான வேலையும் சேர்த்து வாழ்த்தினார்.

மூவிரு முகங்கள் போற்றி
முகம்பொழி கருணை போற்றி
ஏவருந் துதிக்க நின்ற
இராறுதோள் போற்றி காஞ்சி
மாவடி வைகுஞ் செவ்வேள்
மலரடி போற்றி அன்னான்
சேவலும் மயிலும் போற்றி
திருக்கைவேல் போற்றி போற்றி

ஆறுமுகங்களுக்கும் ஒரு முறைதான் போற்றி கூறினார் கவி; பன்னிரு தோள்களுக்கும் ஒரு முறைதான் போற்றி கூறினார்; இரு திருவடிகளுக்கும் ஒரு போற்றிதான் கூறினார்; சேவல் மயில் இரண்டுக்குமாகச் சேர்த்தும் ஒரே போற்றிதான் கூறினார். இப்படிப் போற்றிப் பாடிய பாவேந்தர், கடைசி அடியில், ''திருக்கைவேல் போற்றி; போற்றி !'' என்று ஒன்றேயான வேலை மட்டும் இரண்டு முறை போற்றுவதைப் பாருங்கள்!

ஆறுமுகக் கடவுள் அம்மையப்பரை வணங்கி விடைபெற்றார். ஐம்பெரும் பூதங்களின் வன்மை கொண்டதும், இலக்கம் குதிரை பூண்டதும், மனத்தை விட விரைந்து செல்வதுமாகிய ஒரு தேரைத் திருவுளத்தினாலே சிருட்டித்து, முருகப் பெருமானிடம் கொடுத்தார் பரமேசுவரர். ''குமர! இனி நீ செல்லக் கடவாய்; வெற்றி பெற்று யாவருக்கும் இன்பம் தரக் கடவாய்'' என்று வாழ்த்தினார். இலக்கத்தொன்பது வீரர்களை நோக்கிய எம்பெருமான், ''நீங்கள் முருகனுக்குத் துணையாக அசுரர்களை அழிக்கச் செல்லுங்கள்'' என்று பணித்தார். அவர்களுக்கும் படைக்கலங்கள் பலவற்றை அளித்தார்.



அண்டாபரணர், நந்தி, உக்கிரர், சண்டர், அக்கினி நேத்திரர், சிங்கர் முதலாகிய பெரிய கணநாதர்களை நோக்கி, ''நீங்கள் இரண்டாயிரம் வெள்ளம் பூதங்களோடு செவ்வேளுக்குச் சேனாதிபதியாய்ச் செல்லக் கடவீர்'' என்று திருவாய் மலர்ந்து, முருகக் கடவுளுக்கு அவர்களைப் படைத் தலைவர்களாகக் கொடுத்தருளினார்.

திருமால், பிரமன், இந்திரன் முதலிய தேவர்கள் எம்பெருமானை வணங்கினர். ''இனி அடியேங்கள் துன்பம் நீங்கியது'' என்று மகிழ்வுடன் நன்றி கூறினர். சிவபெருமான் அவர்களை நோக்கி, ''உங்களுக்கு அருள் செய்யும் நாயகனாகிய நம் குமாரனோடு நீங்களும் செல்லுங்கள்'' என்று விடை கொடுத்தருளினார்.

(தொடரும்)

அன்னையைப் போன்ற அழகொளி படைத்தவள்.







## சாலை பேசுகிறது!

சென்னை பூந்தமல்லி நெடுஞ்சாலையின்
வில் துயரம் முட்டி மோதி நின்றது:
"முன் காலத்தில் சாலை ஓரம் மரம் நடுவது
ர்ப்பது பெரும் புண்ணியமாகக் கருதி
தார்கள்...ஆனால் இன்று என்ன நடக்
து? காலம் எல்லாவற்றிலும் மாறிப்
னைப் போல இதிலேயும் மாறிப்போச்சு.
தக் காலத்திலே சாலை ஓரம் இருக்கிற
ம் வெட்டுவது தர்ம கைங்கரியமாகப்
ச்சு! போன வாரம் கூடச் சாலைப் போக்கு
த்து வாரம் கொண்டாடினீர்களே.
ர்கள் வசதியாகப் போக என் நண்பர்க
பலி வாங்கி விடவேண்டியதுதான் என்று
னே தீர்மானித்துக் கொண்டீர்கள்.....!"

"வாஸ்தவம்.... ஆனாலும் சாலையை
வுபடுத்த வேண்டியதுதானே! இல்லையா
 எத்தனை ஆக்ஸிடெண்ட் நடக்கிறது?"
றான் பாதசாரி.

"ஆனால் என் சகோதரர்களாகிய மரங்கள்
தனை பேரை வாழ வைத்தார்கள். அதை
த்துப் பார்த்தாயா?"

"என்ன! வாழ வைத்து வந்தார்களா?
க்குப் புரியவில்லையே!"

"என் நண்பர்களின் நிழலில் எத்தனை
ஜோசியக்காரர்கள், கைரேகை
ாசியக்காரர்கள் உட்கார்ந்து வாழ்க்கை
த்திக் கொண்டிருப்பார்கள். செருப்பு
க்கும் தொழிலாளிகள் தம் பட்டறைகளைப்
பி வேலை செய்வார்கள். வீடு வாசலற்ற
நா வண்டி இழுப்பவர்கள், வெயிலில்
ந்து வந்தால் என்னிடம் வந்து, மர நிழ
அருமையை அனுபவிப்பார்கள்! ஆமாம்,
னையில் எந்தச் சாலையிலாகிலும் கோடை
களில் பாதசாரி வெயில் தாங்காமல்
'ஸ்ட்ரோக்' வந்து சுருண்டு விழுந்தான்
று செய்தி வந்தாலும் வரும், பூந்தமல்லி
சாலையில் விழுந்தான் என்ற செய்தி படித்ததுண்டா? இப்படிப் பரோபகாரம் செய்தவர்கள் யார்?—என் சகோதரர்கள்!

"இதெல்லாம்போகட்டும், சென்னைவாசிகள் அவ்வப்போது மழை பெய்த சுகத்தையும் தண்ணீர்த் தட்டுப்பாடற்ற நிலையும் அனுபவித்து வந்தார்கள் என்றால் அதில் முக்கிய பங்கு என் தோழர்களுக்கு உண்டு. வான வீதியில் செல்லும் வருண பகவானைக் கரம் நீட்டி வரவேற்று, சென்னை வாசிகளுக்கு அருள் புரியச்



செய்தோம். உதவியவர்களுக்கு நல்ல கைம்மாறு சென்னை அரசாங்கம் செய்து விட்டது" என்று ஆற்றாமையோடு நெடுஞ்சாலை பேசியது.

"அதனால் என்ன? அரசாங்கம் லட்சக் கணக்கில் ரூபாய் செலவழித்து வனமகோற்சவம் கொண்டாடிவிடும்!" என்றான் பாதசாரி.








திருமுருக **கிருபானந்தவாரியார்**

## 14. மாயம் தீர்க்கவந்த மயிலோன்

**வி**டையவன்பால் தேவர்கள் விடை பெற்றபின் திருமால், வாயுதேவனைப் பார்த்து ''நீ ஆறுமுகக் கடவுளுக்குத் தேர்ப்பாகனாக இருந்து தேரைச் செலுத்தக் கடவாய்'' என்று கட்டளையிட்டார். அதன்படி, வாயுதேவன் ஆகாயத்தில் சென்று கொண்டிருந்த தேர் மேல் பாய்ந்து தன் இனமாகிய நாற்பத்தொன்பது வாயுக்கள் பக்கத்தே சூழ்ந்து வர மகிழ்ச்சியோடு தேரைச் செலுத்திக் கொண்டு குமரக் கடவுள் திருமுன்னே வந்தான். கந்தக் கடவுளைக் கைதொழுத வாயுதேவன், ''எம் பெருமானே! இத்தேர் மீது ஏறியருளுக'' என்று வேண்டிக் கொண்டான். முருகக் கடவுள் அத்தேர் மீது ஏறியருளினார்.

சிவபெருமானுடைய சாரதி பிரமன்; விஷ்ணுவுடைய சாரதி தாருகன்; இந்திரனுடைய சாரதி மாதலி; தனஞ்சயனுடைய சாரதி தாமோதரன்; முருகவேளுடைய சாரதி வாயுதேவன்.

முருகவேள் போருக்கு ஆரோகணித்ததைக் கண்ட இந்திரன் முதலிய இமையவர்கள் ''இனிச் சூரன் இறந்தான்'' என்று அப்போதே நிச்... பெற்றுத் துள்ளி ஆர்த்தனர். இவ... தொன்பது வீரர்களும் முருகக்... ளைச் சூழ்ந்தார்கள். இமையவர்... இருடிகளும் அவ்வீரர்களைச்... தார்கள். திருக்கயிலாயத்தில்... அனந்தவெள்ளம் பூதங்களுள்... டாயிரம் வெள்ளம் கணங்கள்... றெட்டு சேனாதிபதிகளோடு... கடவுளிடம் வந்து வணங்கித்... ஆரவாரித்தன. பூதர்களில் சிலர்... வாத்தியங்களை முழக்கினார்கள்... கலங்கள் பல தாங்கிய படைகள்... முருகக் கடவுள் திருக்கயிலாய ம... நீங்கிப் பூமியின் மேல் சென்றருள... அப்போது எழுந்த புழுதியால்... னுலகும் மண்ணுலகும் மறைந்தன...

செவ்வேட் பரமன் சேனை... செல்லும் பொழுது கிரௌஞ்ச... வழியில் வந்தது. அதனைக்... தேவர்கள் நடுநடுங்கினார்கள்;... னும் கலங்கினான்.

நாரதர் வந்து கந்தக் கட... வணங்கி, ''எம்பெருமானே! இது... கிரௌஞ்ச மலை. அந்தணர் அ...

தலியோர் இவ்வழியில் செல்லும் பாது, இது வழிகாட்டிபோல் பாவனை செய்து தவருன வழி காட்டி மாயை செய்து அவர்களைக் கொல்லுவது வழக்ம். அகத்திய முனிவர் கொடுத்த ாபத்தால் இது இவ்வடிவில் நிற்கிறது. ''இந்தக் கிரெளஞ்ச மலையைச் ார்ந்துள்ள மாயாபுரியிலே சூர டைய இரு தம்பிகளில் ஒருவனுன ாரகாசுரன் வாழ்கிருன். அவன் ானை முகத்தை உடையவன். போரிலே ஷ்ணுவை வென்று அவருடைய க்கராயுதத்தை மார்பில் பதக்கமாக ணிந்தவன். இவனைக் கொன்ருல் வனுடைய தமையனுகிய சூரனைக் கால்வது எளிது'' என்று விண்ணப் ம் செய்தார்.

முருகவேள், ''அவ்வாறே செய் வாம்'' என்று திருவாய்மலர்ந்தருளி ர். இந்திரன் முதலிய தேவர்கள், தாரகன் இன்றே இறந்தான்'' என்று க் கவலை நீங்கி மகிழ்ந்தார்கள்.

வீரவாகுதேவர் வேலவனை வணங்கி, அண்ணலே! தாரகன் சூரனுக்குத் ம்பி. ஆதலால் பகைவன் தம்பி மேல் ங்கள் தம்பியாகிய என்னை ஏவுங்கள் ம்பி! அவனை அழித்து வருவேன்'' ன்ருர்.

முருகவேள், அவ்வாறே வீரவாகு வப் பணித்தருளினுர்.

''நீங்கள் வீரவாகுவுடன் செல் ங்கள்'' என்று வீரர்களையும் பூதர் யும் பணித்தார் ஐயன். தேவ ச்சனைக் கொண்டு ஒரு கணப்பொழு ல் குதிரைகள், பூதங்கள், சிங்கங்கள் ட்டிய பல தேர்களைச் செய்து வீர ாகு தேவருக்கும் மற்ற வீரர்களுக்கும் காடுத்தருளினுர். வீரர் யாவரும் ருகப் பெருமானை மும்முறை வலம் ந்து வணங்கித் துதித்து விடைபெற் த் தேரில் புறப்பட்டார்கள். நாலு த வாத்தியங்கள் முழங்க ஆயிரம் ள்ளம் பூதங்களோடும், பூத சேனுதி களோடும், இலக்கத்தெட்டு வீரர் க்கும் தலைவராக வீரவாகு தேவர் ன்ருர். பிறிதோர் ஆயிரம் வெள்ளம் த சேனைகள் சூழவும், இந்திரன் தலியோர் வணங்கவும் பின்னணி கச் செல்லும் படை வகுப்பில் ருகக் கடவுள் சென்ருர்.

வீரவாகு தேவர் மாயமாபுரியை டைந்தார். பூதர்கள் நகரினுள் ந்து எதிர்ப்பட்ட அசுரர்களோடு ார் புரிந்து நின்ருர்கள். அசுர தர்கள் ஓடிச் சென்று தாரகாசுரனை டைந்து ''அரசே! 'சூரபன்மன் சிறை ட்ட தேவர்களை மீட்கும் பொருட்டு, சிவபெருமான் ஒரு குமாரரைப் பெற் ருர்; அக்குமாரசுவாமி அசுரர்களைக் கொன்று விடுவார்' என்று ஆகாயத் திலே செல்லும் தேவர்கள் கூறக் கேட் டோம். அதனை நாங்கள் பொருட் படுத்தாதிருந்தோம்; இப்பொழுது அவர்கள் கூறியவாறே இரண்டாயிரம் வெள்ளம் பூதர்கள் சூழக் கந்தசுவாமி வந்திருக்கிருர்; அப்படையின் தூசியே நமது நகரத்தை அழிக்கிறது'' என்று கூறினுர்கள்.

தூதர்கள் கூறியதைக் கேட்ட தாரகாசுரன் வடவைத் தீயைப் போல் கொதித்து அண்டங்கள் நடுங்க எழுந் தான். ''உலர்ந்த புற்காட்டில் இட்ட தீயைப் போல, இந்த நகரத்தைவளைத் துள்ள சேனையை விரைந்து சென்று அழிப்பேன். தூதர்களே! நமது படை களைத் திரட்டுங்கள்'' என்று கட்டளை யிட்டான்.

அசுரர் படை விரைந்து வந்தது. ''நமது தேரைக் கொண்டு வாருங்கள்'' என்று தாரகாசுரன் பரிசனரிடம் ஆணை



யிட்டான். தேர் வந்தது. அத்தேரில் தாரகாசுரன் ஏறிக் கொண்டான். சகல இராஜ விருதுகளுடனும் யானை, குதிரை முதலியன சூழத் தாரகாசுரன் பவனி சென்றான். பல சிங்கங்களால் இழுக்கப் பட்ட தேரில் மகாமேரு மலையைப் போன்ற வயிர தண்டமும், பல படைக் கலங்களும் சென்றன. ஏழு கப்பல்களைப் போல் அசுரர் சேனைகள் சூழ்ந்தன.

அசுரர் அணிவகுப்பைக் கண்ட பூதர்கள் ஆரவாரித்துக் குமரக் கடவுளின் திருவடித் தாமரையைச் சிந்தித்துக் குன்றுகளையும், மரங்களையும், சூலங்களையும், தண்டங்களையும் பகைவர்கள் மீது வீசினார்கள். அசுரர்கள் பூதர்கள் மீது அம்புகளையும், வேல்களையும், சக்கரங்களையும் வீசினார்கள். இரு திறப்படைகளுக்கும் போர் மூண்டது. போரிலே உதிர நதி பெருக்கெடுத்து ஓடியது. சிரங்களும், கரங்களும், தோள்களும் துண்டுபட்டுத் துள்ளின. அசுரர்களில் பலரும் பூதர்களில் சிலரும் இறந்துபட்டனர்.

பூதர்களால் தன் சேனை அழிவதைக் கண்ட தாரகன் பெரும் கோபம் கொண்டான். தேரினின்றும் பூமியில் குதித்துத் தன் கையிலிருந்த பெரும் தண்டத்தால் அடித்துப் பூதர்கள் பலரைக் கொன்றான்; அண்டங்கள் அதிரும்படி ஆர்த்தான்.



தாரகனால் பூதர்கள் அழிந்ததைக் கண்ட பூத சேனாதிபதிகள் தாரகனை எதிர்க்கும் வன்மையின்றி மனம் தளர்ந்து ஓடினார்கள். அது கண்ட இலக்கம் வீரர்கள் மிகுந்த கோபத்துடன் வில் வளைத்துக் கணைகளைத் தொடுத்துத் தாரகனை வளைத்துக் கொண்டார்கள். இலக்கம் வீரர்கள் விடுத்த கணைகள் தாரகனுக்கு எவ்விதத் தீமையும் புரியவில்லை. இதனைக் கண்ட இலக்கம் வீரர்கள் வெகுண்டு தெய்வப் படைக்கலங்களைத் தாரகன் மீது வீசினார்கள். அவையும் தாரகனுக்குத் தீங்கு விளைவிக்காமல் துகளாயின. தேவர்கள் செய்வதறியாது கலங்கி நின்றனர்.

தாரகன் தன் வயிர தண்டத்தைச் சுழற்றினான்; யானை முகம் படைத்த அவன் தன்னைச் சூழ்ந்த இலக்கம் வீரர்களின் தேர்ப் படைகளையெல்லாம் அடித்துத் தனது துதிக்கையினை நீட்டி வீரர்களைப் பற்றி எடுத்துக் கடலில் வீசினான். கடலில் வீழ்ந்த வீரர்கள் வில்லுடன் எழுந்து ஓடிச் சென்றார்கள்.

இக்காட்சிகளையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்த வீரகேசரிக்குக் கோபம் பொங்கியது. குமாரக் கடவுளின் வடிகளை மனத்தில் நினைத்து நூறு கணைகளைத் தாரகன் மீது விடுத்தார். கணைகள் தாரகனுடைய மகுடத்தைத் தள்ளின. தேவர்கள் பூமாரி பொழிந்தனர். தன்னுடைய மகுடம் வீழ்ந்ததைக் கண்ட தாரகன் நாணமும் கோபமும் கொண்டான். கைதண்டத்தை வீரகேசரி மீது எறிந்தான். தேர் ஏறி வேறு ஒரு மகுடத்தை அணிந்து கொண்டான். தாரகன் எறிந்த தண்டம் மார்பிலே பட்டதும் வீரகேசரி மயங்கி விழுந்தார். அதனைக் கண்ட வீரவாகு தேவர் தாரகன் மீது பல வகைக் கணைகளைப் பொழிந்து, அவனைப் புண்படுத்தினார். தாரகனுக்கும், வீரவாகு தேவருக்கும் போர் மூண்டது; கணை மழை பொழிந்தது. வீரவாகு



தேவர் பதினான்கு பாணங்களை விடுத்துத் தாரகனுடைய வில்லை ஒடித்தார். தாரகன் சினத்துடன், ''இனி நீ இறந்தாய்'' என்று கூறி ஒரு சூலத்தை எறிந்தான். அந்தச் சூலம் மார்பில் பட்டதும் வீரவாகு தேவர் மயங்கினார். தாரகன் இடிபோல் ஆர்த்தான். எஞ்சிய வீரவாகுதேவரின் தம்பியர் எழுவரும் தாரகனை எதிர்த்துப் போர் செய்து தோற்றார்கள். இதற்குள் வீரவாகு தேவர் மயக்கம் தீர்ந்து எழுந்து தாரகனுடன் மீண்டும் போர் செய்தார். போர் கடுமையாயிற்று. வீரவாகுதேவர் வில்லை வளைத்து நாண் ஒலி செய்தார். மலைகள் சுழன்றன; அசுரர்கள் காதுகளைப் பொத்திக் கொண்டு ஓடி ஒளிந்து கொண்டார்கள். தாரகனை நோக்கிய வீரவாகு தேவர், ''தேவர்களையும் பூதர்களையும் வென்றுவிட்டோம் என்று எண்ணாதே; உன்னை நான் விரைந்து கொல்வேன்'' என்றார்.

அதற்கு விடையாகத் தாரகன் ''திருமால் விடுத்த சக்ராயுதத்தை என் மார்பில் பதக்கமாக அணிந்திருக்கிறேன். அப்படிப்பட்ட என்னைக் கொல்லுவேன் என்று நீ சொல்வது சிங்கத்தை நரி வெல்லுவதாகப் பேசுவதே போன்றது! உன் வீரர்கள் அழிந்தார்கள்; வீரம் பேசும் நீயும் சிறிது நேரத்தில் அழியப் போகிறாய்'' என்று கூறினான்.

# கால்கேட்டின் மூலம் நாள் முழுவதும் வாய் துர்நாற்றத்தை அகற்றி பற்கள் சொத்தையாவதையும் தடுங்கள்!




ஏனெனில் ஒரே தேய்ப்பில் கால்கேட் டென்டல் கிரீம், துர்நாற்றத்தையும், சொத்தையையும் உண்டாக்கும் கிருமிகளில் 85 சதவிகிதத்தை ஒழித்துவிடுகிறது.

கால்கேட், 10ல் 7 சந்தர்ப்பங்களில் உடனடியாக வாய் துர்நாற்றத்தை அகற்றுகிறது என்பதையும், உணவு உட்கொண்டவுடன் கால்கேட்டினால் பற்களைத் துலக்கும் முறையால், இது வரை பற்பசை வரலாற்றிலேயே கண்டிராத பெருமளவில் ஏராளமானவர்களுக்குச் சொத்தை தடுக்கப்படுகிறது என்பதையும் விஞ்ஞான ஆராய்ச்சிகள் நிரூபித்துள்ளன. இந்த சாதனை கால்கேட் ஒன்றுக்குத்தான் உண்டு.

கால்கேட்டின் நீடித்திருக்கும், நூதன நறுமணத்திற்காக, குழந்தைகள் அதனாலேயே பல் துலக்க விரும்புகிறார்கள்.

பரிசுத்தத்திற்கும், வாயில் நறுமணம் கமழவும், வெண்மையான பற்களைப் பெறவும் வழக்கமாக கால்கேட்டினால் பல்துலக்குங்கள்.

நீங்கள் பற்பொடியை விரும்பினால், இந்தப் பலன்கள் அனைத்தையும் கால்கேட் டூத் பவுடர் மூலம் அடையலாம். ஒரு டப்பி பலமாதங்களுக்கு வரும்.







... உலகிலேயே பெரும்பாலானவர்கள் மற்றெல்லாப் பற்பசைகளையும் விட, கால்கேட் டென்டல் கிரீமையே வாங்குகிறார்கள்.

DCG-35.TAM.

வீரவாகு தேவர் ஆயிரம் பாணங்களைத் தொடுத்தார். தாரகன் தன் வில்லை வளைத்து ஆயிரம் பாணங்களை எதிர்த்து விடுத்தான்; வீரவாகு தேவரின் பாணங்கள் பொடியாகின. தாரகன் மேலும் நூறு பாணங்களை விடுத்தான். அதனை எதிர்த்து வீரவாகுதேவர் நூறு பாணங்களை விடுத்தார். 'வில் வன்மையில் இணையற்ற இவ்வீரனைத் தெய்வப் படைக்கலங்களால் தான் வெல்ல வேண்டும்' என்று எண்ணிய அவன் அக்கினிக் கணையை ஏவினன். வீரவாகு தேவரும் அதற்கேற்ற எதிரிடைத் தெய்வக் கணையை ஏவித் தாரகன் விடுத்த கணையை அழித்தார். தாரகன் விடுத்த வருணாஸ்திரம், சூரியாஸ்திரம், வாயு அஸ்திரம், பிரம்மாஸ்திரம் தெய்வப் படைக் கலங்களுக்கும் இந்தக் கதி நேரிட்டது.

வீரவாகு தேவரைப் படைக்கலங்களால் வெல்வது இயலாது என்று கருதிய தாரகன், 'இவனை மாயையால் தான் வெல்ல முடியும்' என்று கருதி மாயா மந்திரத்தை உச்சாரணம் செய்யலானான். எண்ணில்லாத மாய வடிவங்களை எடுத்துக் கணக்கில்லாத கணைகளைச் செலுத்தினான். இருட்படலம் எங்கும் பரந்ததுபோல் தாரகன் ஒருவனே எங்குமாய் நின்று கடும் போர் செய்வதைக் கண்ட தேவர்கள் திக்கு திசை தெரியாது ஏங்கினார்கள். முன்னரே ஒதுங்கி நின்ற பூதர்கள் பின்னும் அஞ்சியோடினார்கள்; போர் செய்து இளைத்த வீரர்களும் வெகுண்டு நின்றார்கள்; அசுரர்கள் அகமகிழ்ந்து வீராவேசத்தால் கொக்கரித்துக் குதித்துக் கூத்தாடினார்கள்.

தாரகனின் மாயப் போரையும், அது கண்டு தமது படையினர் கலங்கி நிற்பதையும் பார்த்த வீரவாகுதேவர் கனற்பொறி சிந்த நோக்கினார். ஊழிக் காலத்தில் எழும் பெருந்தீயைப் போல் வெகுண்டு வீரபத்திரப் படைக்கலத்தை எடுத்தார். அவ்வாயுதத்தை எடுத்தவுடனேயே சூரியன் முன் இருள் மறைந்தோடுவதுபோல் தாரகனுடைய மாயா உருவுகளெல்லாம் அழிந்தன. தாரகன் தனித்து நின்றான். ஞான ஒளியின் முன் மாயத் தோற்றம் யாவும் மறைய வேண்டியதுதானே?

வீரவாகுதேவருடன் பின்பு ஏமாற்றுப் போர் புரியலாம் என்று வஞ்சனையாக எண்ணித் தன் தேரை விட்டு இறங்கி ஓடினான் தாரகன். தோற்று ஓடுபவன் மேல் ஆயுதம் விடுத்தல் வீரமும் அல்ல; போர் நெறிக்கு உகந்ததும் அல்ல என்று எண்ணிய வீரவாகுதேவர், வீரபத்திரப் படைக்கலத்தைத் தூணியுள் இட்டார். 'வலியிழந்து ஓடிய தாரகனை எவ்வாறேனும் பிடித்துக் கட்டி எம் பெருமான் திருமுன் கொண்டு போய்ச் சேர்ப்பேன்' என்று கருதி ஆறுமுகப் பரஞ்சுடரது அடிமலரைச் சிந்தித்துத் தாரகனைத் தொடர்ந்து ஓடினார். தாரகனோ தன் சூதுத் திட்டத்தின்படி மாயைக்கு உறைவிடமாகிய கிரௌஞ்ச மலையின் குகை யொன்றில் புகுந்து ஒளிந்தான்.

இருள் அடர்ந்த அம்மலையின் குகையினுள் வீரவாகு தேவர் மெல்லப் புகுந்து சென்று தாரகனைத் தேடினார். தாரகனைக் காண இயலவில்லை; மலையினின்று மீளும் வழியையும் காண இயலவில்லை. 'ஓ, இதுவும் இம்மலையின் மாயையோ?' என்று சிந்தித்து நின்றார் வீரவாகுதேவர். அப்பொழுது அக்கிரவுஞ்ச மலையாகிய அசுரன், ''இதுதான் நல்ல சமயம்'' என்று எண்ணி வீரவாகு தேவரின் அறிவை மயக்கினான். அவரும் தமது முந்தை அறிவினை இழந்து தூங்குவதுபோலக் கிடந்தார்.

மாயையின் வீச்சில் ஞானியரும் மயங்குவர் என்பதை உணர்த்தும் வரலாறே இது. அந்த மயக்கத்தைப் பரம்பொருளின் அநுக்கிரகமே தெளிவிக்கும் என்பதைப் பிற்பாடு காண்போம்.

வீரவாகுதேவர் திரும்பி வராததைக் கண்ட அவருடைய அன்புடைத் தம்பியர்கள் இலக்கத்தெண்மரும், பூதப் படைத் தலைவர்களும் சிறகொடிந்த பறவைகள்போல மனமுடைந்து வருந்தினர். 'நமது தலைவர் தோற்று ஓடிய தாரகனைத் தொடர்ந்து சென்று போர் புரிகின்றார் போலும்! நாமும் அங்கே செல்வோம்' என்று கருதி விரைந்து சென்று, கிரௌஞ்ச மலைக் குகையினுள்ளே புகுந்தனர். கிரௌஞ்ச மலை வீரவாகுதேவரை மயக்கியது போலவே, எண்ணில்லாத மாயத்தைச் செய்து இலக்கத் தெண்மரையும் அறிவிழக்கச் செய்தது; அவர்களும் அறிவிழந்து துயின்றார்கள். மாயை என்பது அத்தகைய இருள் சூழ்ந்த பெரு மலையாகும்! அண்ட சராசரத்திலுள்ள உயிர்கள் அனைத்தையுமே அஞ்ஞான இருட் குகையில் ஆட்படுத்தி யிருப்பதல்லவா அது?

தாரகன் மகிழ்ந்தான். ''நம் மாயையினால் இவர்கள் இறந்தார்கள்'' என்று எண்ணிப் பூரித்தான். வானவர்கள்



கண்ணீர் விட்டுக் கலங்கினார்கள்; பூதப் படைகள் தலைவரின்றி அச்சமுற்றன. மலை மீது எழுந்த தாரகன் தேரில் ஏறிக் கொண்டான்; அசுரர்கள் பலரும் வந்து அவனைச் சூழ்ந்து ஆரவாரித்தார்கள். பூதப்படைகள் மீது தாரகன் மீண்டும் கோடி கோடிக் கணைகளைப் பொழிந்தான். முக்கியமான வீரர்களை இழந்து நின்ற பூதர்கள் பல திசைகளிலும், ஆகாயத்திலும் சிதறியோடினர்.

இவற்றை யெல்லாம் கண்ட நாரதர் இமையவருடன் சேர்ந்து முருகப் பெருமானை அடைந்து அவரது திருவடிகளை வணங்கினர். தாரகனுடைய மாயப் போரை எடுத்துக் கூறினர்.

நாரதர் கூறியதைக் கேட்ட அபய நாயகனாகிய அறுமுக அருள்மூர்த்தி, ''தேவர்களே! வருந்த வேண்டாம். நாமே போர்க்களம் சென்று, தாரகனை வேற்படையினால் கொல்லுவோம். கிரௌஞ்ச மலையைப் பிளந்து அதனுள் குகையில் சிறைப்பட்டு மயங்கியுள்ள நம் வீரர்களைக் கணப் பொழுதில் மீட்டருள்வோம்'' என்று திருவாய் மலர்ந்தருளினர்.

தாரகனின் மாயத்தை மாய்ப்பதற்காக மாமயிலோனே எழுந்தருளுவார் என அறிந்த இமையவர்கள் ஆனந்த பரவசமுற்று ஐயனின் அடியிணைத் தொழுதனர்.

ஃ ஃ ஃ

முருகப் பெருமான் தமது சாரதியாகிய வாயுதேவனைப் பார்த்து, ''மனத்தினும் விரைந்து செல்லும் வண்ணம் தேரைச்செலுத்து'' என்று பணித்தருளினர். வாயு தேவன் குதிரைகளைத் தூண்டி ஆர்த்தான். விண்ணும், மண்ணும், மலைகளும், கடல்களும் திக்கு யானைகளும் நடுங்கின. குமரக் கடவுளுடைய தேர் ஆகாய மார்க்கமாகப் பறந்து சென்றது. பூத சேனைகள் முருகப் பிரானைச் சூழ்ந்து சென்றன. போரில் தோற்று ஓடிய பூதர்கள் எல்லோரும் முருகக் கடவுளைத் தரிசித்தவுடன், புது உற்சாகம் பெற்று அவரை வணங்கிச் சூழ்ந்தனர். வானவர்கள் மகிழ்ந்து வாத்தியம் முழக்கினர்.

முருகப் பெருமான் தாரகனு
போர்க்களத்தை யடைந்தார்.
படைகளுக்கும் அசுரப் படைகளு
பெரும் போர் நிகழ்ந்தது.
பிரஸன்னமானதால் ஊக்கமும்
சாகமும் பெற்ற பூதர்களால் அ
பலர் மாண்டனர். மாண்டு போ
வர்கள் தோற்று ஓடினர்.

தாரகன் கடுங் கோபம் கொ
டான். தன்னை எதிர்த்த கண
களின்மீது பல பாணங்களைச் சொ
துரத்திக் கொண்டு முருகக் கட
திருமுன்னரே வந்து விட்டான்.
முகக் கடவுளை நேருக்கு நேரா
கண்டான்.



பூரண சந்திரனை யொ
ஆறு திருமுகங்களையும்,
ளொழுகும் பன்னிரண்டு
னங்களையும், ஞான
யாகிய வேலையும், ப
திவ்வியாஸ்திரங்களை
அவற்றைத் தாங்கும்
விய திருக் கரங்களையும்,
கிய நவரத்தினத் தண்
ஒலிக்கும் திருவடித் தாமரைக
தாரகன் கண்டான்.

முழுமதி அன்ன ஆறு
முகங்களும் முந்நான் காகும்
விழிகளின் அருளும் வேலும்
வேறுள படையின் சீரும்
அழகிய கரமீ ராறும்
அணிமணித் தண்டை ஆர்க்கும்
செழுமலர் அடியுங் கண்டான்;
அவன்தவம் செப்பற் பாற்றே!

அந்த மகாசுரனை எதிர்க்க வ
மூர்த்தி பச்சிளம் குழந்தை என்ப
காட்டவே கச்சியப்பர், 'அடிமல
தண்டையார்க்கும் செழுமலர்
என்கிறார். அசுரன் கோபாக்னி ம
வருகிறான். அப்போதும் ஐயன் குளி
பொழியும் பூரண சந்திரனை யொ
திருமுகமும், விழிகள்பொழியும் கரு
மாகத் தரிசனம் சாதிக்கிறார்.
ங்கைய தரிசனம் பெற்ற தார
செய்த தவம் என்னவோ எனக்
வியக்கிறார். முழுமதி முகமும்,
பொழி அருளும் தாரகனைத் தி
நல்வழிப்படுத்தாது என்பதா வே
ஐயன் 'வேலும் வேறுள படை
தாங்கி வந்ததையும் குறிப்பிடுகிறார்.

(தொட

தங்கள் தங்கள் பகுதிகளில் தேர்தலுக்காக நிற்கும் எல்லா அபேட்சகர்களேயும் ஒரே மேடைக்கு வரவழைத்துத் தங்கள் கோரிக்கைகளை அவர்கள் முன் சமர்ப்பிக்கிறார்கள். எந்த அபேட்சகர் அந்தக் கோரிக்கைகளை நிறைவேற்ற அதிக உறுதி கொடுக்கிறாரோ, அவருக்குத்தான் அதிக ஓட்டுக்கள் !

மருத்துவ விடுதிகளுக்கு அவ்வப்போது 'வாலண்டியர்'களாகப் பணியாற்றும் குடும்பப் பெண்மணிகள் இங்கு அனேகர் இருக்கிறார்கள். அந்தச் சேவையில் அவர்கள் மன நிறைவைக் காண்கிறார்கள். பாஸ்டன் நகர மருத்துவசாலையில் டாக்டர்களுடைய மனைவிகள் அத்தனை பேரும் 'வாலண்டிய'ராக இருக்கிறார்கள். சமூகத்தில் இத்தகைய வாலண்டியர்களுக்கு மதிப்பு அதிகம்.

இதுபோன்ற பல சமூக சேவை மன்றங்களிலுள்ள அங்கத்தினர்கள் 'எல்லாம் தலைவர் பார்த்துக்கொள்வார், காரியதரிசி பார்த்துக்கொள்வார்' என்று கைகளைக் கட்டிக்கொண்டு உட்கார்ந்திருப்பதில்லை. ஒவ்வொருவரும் தங்களுக்குத்தான் முழுப் பொறுப்பு என்ற எண்ணத்துடன் அந்த மன்றங்களின் வளர்ச்சிக்காகப் பாடுபடுகிறார்கள். வெற்றிக்குக் கேட்கவேண்டுமா ?

அமெரிக்க நாட்டின் ஒரு பகுதியான 'ஹாவாய்' தீவில் உள்ள 'ஹானலுலு'-நகரில் ஒரு யூத டாக்டர் குடும்பத்தினருடன் ஓரிரு நாட்கள் அவர் தங்கும் வாய்ப்புக் கிட்டியது. அந்தக் குடும்பத்தினர் முன்பே ஒரு தடவை பாரதம் வந்து திரும்பியவர்களாகையால், அவர்களுக்கு இங்கிருந்து வருபவர்கள் மீது அபார ஆர்வம். அந்த அம்மையார் இங்கு வந்து விட்டுத் திரும்பிய போது புடவைகள் வாங்கிக்கொண்டு போயிருக்கிறார். ஆனால் அவைகளை உடுத்தப் பழகவில்லை. பாரதத்திலிருந்து வந்திருப்பவர்களைப் பார்த்ததும் அந்த அம்மையார் தாமும் அவர்களைப்போல் புடவை உடுத்திக் கொள்ள ஆசைப்பட்டார். விருந்தாளிகளே உதவி செய்தார்கள். அத்துடன் நிற்காமல் உதட்டுச் சாயத்தின் உதவி கொண்டு நெற்றியில் திலகமும் இட்டார்கள். அந்த அம்மையாரின் மகிழ்ச்சிக்கு அளவேயில்லை.

ஊரை விட்டுக் கிளம்பிப் பல வாரங்களுக்குப் பிறகு இங்குதான் ஸ்ரீமதி வரதப்பனுக்கும் அவருடன் கூடச் சென்ற சிநேகிதிகளுக்கும், (அவர்களில் சென்னை சட்ட மன்றத்தின் உறுப்பினர் ஸ்ரீமதி அனந்தநாயகியும் ஒருவர்) தாங்களாகவே வாய்க்குப் பிடித்ததைத் தயாரித்துச் சாப்பிடும் வாய்ப்புக் கிட்டியது.

சாதாரணமாக 'டிரக் ஸ்டோர்' (Drug Store) என்று அழைக்கப்படும் தெரு முனைக் கடைகளிலும் 'கேப்'களிலும் காலை ஆகாரம் சாப்பிட நபருக்கு ஒரு டாலர் (ஐந்து ரூபாய்கள்) ஆகும். ஹானலுலுவில் இவர்கள் ஒன்றுகூடி ஒரு பெரிய கடைக்குள் நுழைந்து ஐந்து டாலர்களுக்குத் தேவையான சாமான்களை வாங்கி வந்தார்கள்; சமைத்தார்கள். மூன்று நபர்களுக்கு மூன்று வேளை அந்தத் தயாரிப்பு ஈடு கொடுத்தது! 'இங்கிருக்கும் வரையில் தயவுசெய்து நீங்கள்



''நாளைக்கு நீங்களெல்லாரும் எங்க விட்டில் சாப்பிட வந்துவிடுங்கள். எனக்கு எங்கவிட்டில் விருந்துடா!''

''பரீட்சையில் எல்லாத்திலேயும் குறைச்சலா மார்க் வாங்கியிருக்கே, எதுக்கடா உனக்கு விருந்து?''

''ஹிந்தியில் நான் சைபர் வாங்கியதற்காக!''

டாலர் கொடுத்து வாங்கும் பண்டங்களின் மதிப்பை மானசீகமாக ஐந்தால் பெருக்கி ரூபாய்க் கணக்குப் போட்டு மூர்ச்சையடையாதீர்கள்! ஒன்றாலேயே பெருக்கி மன நிம்மதியடையுங்கள்' என்பார்களாம் அமெரிக்க நண்பர்கள்.

''அமெரிக்காவுக்கு நான் சென்றது இதுதான் முதல் தடவை. ஓரளவு நான் கற்பனை செய்திருந்த அளவுக்கு அங்கு கண்ட நகரங்களும் காட்சிகளும் உயர்ந்தன. இதற்கு விதிவிலக்கு லாஸ்ஏஞ்சல்ஸும் ஹாலிவுட் பகுதிகளும்தான். பத்திரிகைகள் புத்தகங்கள் படித்து நான் ஹாலிவுட்டைப் பற்றி ஏதோ பிரமாதமாக நினைத்திருந்தேன். அந்தக் கற்பனையை நிஜத் தோற்றம் தொடவில்லை. மற்ற விஷயங்களில் இந்தப் பிரயாணம் மிகுந்த பயனுள்ளதாக இருந்தது. அமெரிக்க மாதர்களின் சமூக வாழ்க்கை, பணி, குடும்ப இயல்பு, கல்வி முதலியவற்றைப் பற்றி நேரடியாகக் கவனித்துத் தெரிந்து கொள்ள முடிந்தது. புத்தகங்களினால் மாத்திரம் தெரிந்து கொள்ளக் கூடிய விஷயமில்லை இது! அங்கு கற்றுக் கொண்ட நல்ல முறைகளை இங்கும் நடைமுறையில் கொண்டு வர முயற்சி செய்யலாமல்லவா ?'' என்றார் ஸ்ரீமதி சரோஜினி வரதப்பன்.

**உலக வாழ்க்கையின் நுட்பங்கள் தேரவும்**
**ஓது பற்பல நூல்வகை கற்கவும்**
**இலகு சீருடை நாற்றிசை நாடுகள்**
**யாவும் சென்று புதுமை கொணர்ந்திங்கே**
**திலக வாணுதலார் நங்கள் பாரத**
**தேசமோங்க உழைத்திடல் வேண்டுமாம்;**

என்ற மகாகவி பாரதியாரின் வாக்கு நனவாகும் பொற்காலத்தில் நாம் வாழ்கிறோம் என்று நினைக்க நமக்குப் பெருமையாக இருக்காதா, என்ன?

— **திருமூலர்**

# கந்தன் கருணை

திருமுருக கிருபானந்தவாரியார்

## 15. தாரக வதம்

சிற்பர மூர்த்தியாகிய செவ்வேட் பரமனுடைய திருவுருவை நோக்கிய தாரகன் வியப்புற்ருன். 'இவன் கற்பனை கடந்த ஆதிக் கடவுளே போலும்' என்று தனக்குள்ளே சொல்லிக் கொண்டான். எனினும், சிவமூர்த்தி தமக்குத் தந்த வரத்தையும், வன்மையையும், அளவற்ற செல்வத்தையும் நினைந்து பெருமிதம் அடைந்த தாரகாசுரன் தனது நல்ல நினைவுகளை அகந்தையால் அழித்துக் கொண்டு மீண்டும் கோப வசப்பட்டான்.

முருகப் பெருமானை நோக்கிய தாரகன், ''திருமாலுக்கும் நான்முகனுக்கும் இந்திரனுக்கும் நம்மிடம் விரோத முண்டு. ஆனுல் எம் தவத்துக்கு இரங்கி வரம் தந்த சிவபெருமானுக்கும் எமக்கும் போர் நிகழ்வதற்குக் காரணம் ஒன்றுமில்லை. ஆதலால், குமாரனுகிய நீ நம்முடன் போர் செ வந்த காரணம் யாது? சொல்'' என கேட்டான்.



''நாரணன் தனக்கு மற்றை
நான்முகன் தனக்கும் வெள்ளை
வாரணன் தனக்கும் அல்லால்
மதிமுடி அமலனுக்கும்
தாரணி தனில் எமக்குஞ்
சமரினை இழைப்ப இங்கோர்
காரண மில்லை மைந்தா
வந்ததென் கழறு'' கென்ருன்

முருகப் பெருமான் விடை கூறு ''தாரகாசுர! உயிர்கள் செய்யும் வினை, தீவினைகளுக்கேற்ப அநுக் மும் தண்டனையும் அளிக்கும் சிவ மான் நீயும் உன் சோதரரும் தவமா நல்வினை புரிந்தமையால் தவப்ப

'உங்களுக்குப் பெரும் பலமளித்தார். அந்தப் பலத்தைக் கொண்டு தேவரைச் சிறை வைத்துத் தீவினை புரிந்துள்ள உங்களுக்கு இப்போது தீவினைப் பயனையும் அளிக்கத் திருவுளம் கொண்டுள்ளார். உங்கள் வீரத்தையும் வலியையும் அழிக்கும் பொருட்டே நம்மை விடுத்தருளினர்.''

தாரகன் இறுமாந்து ''கருடன் மீது வந்து என்னை எதிர்த்த, திருமாலின் சக்கரம் என் கழுத்தில் ஆபரணமாக இருப்பதை நீ பார்க்கவில்லையா? என்னைப் பகைத்து எதிர்த்தவர்களில் வென்றவர் எவரும் இன்றுவரை இல்லை. எல்லோரும் தோற்றோ அல்லது அழிந்தோ போனர்கள். பாலகனே! நீ முன்பு என் மீது போருக்கு அனுப்பிய தலைவர்களை வென்று கிரௌஞ்ச மலையினுள் இறக்கும்படி செய்தேன்; பல கணங்களையும் அழித்தேன்; நீயும் இப்போது என்னோடு பொருது அழியாமல் உனது தந்தையாகிய சிவபெருமானிடம் செல்லுவாய்'' என்றுன்.

ஆறுமுகக் கடவுள் அதற்கு மறுமொழியாக, ''படைக்கலங்களுக்கெல்லாம் தலைமைப் படைக்கலமாகிய நம் வேற்படை ஒரு போதும் பழிப்புக்கிடமாகாது; அது உன் உயிரைக் குடிக்கவே வந்திருக்கிறது. மாயையின் உறைவிடமாகிய கிரௌஞ்ச மலையையும், உன்னையும் வேற்படையால் வென்று நம் சேனைகளை விரைவில் மீட்கின்றோம்'' என்று திருவாய் மலர்ந்தார்.

சிவகுமாரன் கூறியதைக் கேட்ட தாரகனுக்குச் சினம் மூண்டது. வில்லை வளைத்து நாண் ஒலி செய்தான். முருகப் பெருமானும் வில்லை எடுத்து வளைத்தார்; நாண் மீட்டினர். அதன் ஒலியைக் கேட்டே அசுரப் படைகள் அஞ்சின.

ஐயனுக்கும் அசுரனுக்குமிடையே அற்புதமான யுத்தம் நிகழ்ந்தது.

குமாரக் கடவுள் கோடி பாணங்களை ஏவினர். தாரகனின் உடல் முழுவதையும் அந்தப் பாணங்கள் துளைத்தன. தாரகனின் கோபம் மேலும் பெருகியது. இரண்டு கோடி பாணங்களைப் பெருமான் மீது விடுத்தான். செவ்வேட் பரமன் இரண்டு திவ்விய அஸ்திரங்களைச் செலுத்தி, தாரகனுடைய தும்பிக்கையையும் முகத்திலுள்ள கொம்பையும் துண்டாக்கினர். தனது சிறப்பு அங்கங்களை இழந்த தாரகன் மனம் தளர்ந்தான். நாணமும் ஆத்திரமும் பெருக ஆயிரம் பாணங்களை ஏவி ஆறுமுகப் பெருமானுடைய தேரில் உள்ள கொடியை அறுத்து வீழ்த்தினன். அது கண்டு வெகுண்டாற் போல் பாவித்த முருகக் கடவுள் எட்டுக் கணைகளைச் செலுத்தி அவனுடைய தேரையும் பாகனையும் தேர்க் குதிரைகளையும் பாழ்படுத்தினர். தாரகன் வேறொரு தேரில் ஏறி ஐந்நூறு அக்கினிக் கணைகளை விடுத்து முருகப் பெருமானுடைய தேர்ப்பாகனுகிய வாயுதேவனின் தோள்களைப் புண்படுத்தினன்.

முருகப் பெருமான் ஆயிரம் கணைகளைச் செலுத்தித் தாரகனின் நெற்றியைத் துளைத்தார். தாரகாசுரன் 'ஓ'வென்று கதறி உதிர வெள்ளஞ் சொரியத் தேர் மீது மயங்கி விழுந்தான்.

தாரகன் மயங்கி விழுந்ததைக் கண்ட அசுர சேனைகள் சினங்கொண்டு முருகப் பெருமானைச் சூழ்ந்து கொண்டார்கள்; சூலம், சக்கரம், தோமரம், பிண்டிபாலம், வேல், வாள், தண்டு முதலிய படைக்கலங்களைச் செலுத்தி ஆரவாரித்தார்கள். முருகப் பெருமான் தம் வில்லை வளைத்துச் சரமழை பொழிந்தார். அவுணர்களின் தலைகளும், மார்புகளும், கரங்களும், தோள்களும் துண்டிக்கப்பட்டன. சிலர் இரத்தக் கடலில் நீந்திச் சென்று கரையேறி ஒளிந்து கொண்டார்கள். சூரியன் முன் மறையும் பனித்துளிகள் போல் தேவ தேவனின் வீர பராக்கிரமத்தின் முன் அசுரர் அனைவரும் அழிந்தனர்.

தாரகாசுரனுக்கு மயக்கம் நீங்கியது. எழுந்து பார்த்தான். தனது மாபெரும் சேனைகளைக் காணாது, துன்பத்துடன் நகைத்தான். ''சிவ குமாரன் ஒருவன் என்னுடன் வந்து போர் செய்ததில் நான் எனது துதிக்கையையும், கோடுகளையும் இழந்தேன். மயங்கி விழுந்தேன்; என் சேனைகளையும் இழந்தேன்; இப்போது தனித்து நிற்கிறேன். அழகுதான் என் ஆண்மை! இச்சிறுவனைக் கொல்வதோ, வெல்வதோ அரிய செயல். ஆகவே, இனி தேவாஸ்திரங்களைச் செலுத்திப் போர் செய்ய வேண்டும்'' என்று எண்ணினான். நாராயணாஸ்திரம், பிரம்மாஸ்திரம் முதலிய தெய்வாஸ்திரங்களை விடுத்தான். அந்த அஸ்திரங்கள் எல்லாம் அஞ்சி நடுங்கி வந்து முருகப் பெருமான் பக்கத்தே ஒதுங்கி நின்றன.

சிவபெருமானைத் தேவதையாகக் கொண்ட பாசுபதாஸ்திரத்தை எடுத்து மானத பூஜை செய்த தாரகன் சிவ குமாரன் மீதே அதைக் கோபத்துடன் செலுத்தினான். அச்சிவப் படைக்கலம் நஞ்சையும், தேவப் படைக்கலங்களையும், பூதங்களையும், பாம்புகளையும், சூலங்களையும், அக்கினியையும் உண்டாக்கிக் கொண்டு சர்வ அண்டங்களும் வருந்தும்படியும், சகல உயிர்களும் உலைந்து சுழலும் வண்ணமும் சினத்துடன் சென்றது. முருகப் பெருமான் அதைக் கண்டு தந்தையாகிய சிவ பிரானைச் சிந்தையில் தியானித்துக் கொண்டு, ஒரு திருக்கரம் நீட்டிப் பற்றிக் கொண்டார். தந்தவனே திரும்பப் பற்றிக் கொள்வது போலிருந்தது அந்தக் காட்சி.

கந்தவேள் அனையது
கண்டு தந்தையைச்
சிந்தையில் உன்னியோர்
செங்கை நீட்டியே
அந்தவெம் படையினை
அருளில் பற்றினான்
தந்தவன் வாங்கிய
தன்மை யென்னவே.

தாரகன் நிலைகுலைந்து விட்டான். ''இன்றே எம் செல்வமும் வாழ்வும் அழிந்தன'' என்று ஏங்கலானான்.

'இவன் அறப்போர் அன்றி மாயப் போர் புரிய மாட்டான். நான் மாயைகள் செய்து, மறைந்து நின்று போர் செய்வேன்' என்று எண்ணி, விரைந்து கிரௌஞ்ச மலைமுன் சென்றான். ''கிரௌஞ்சமே! நீ விரைந்து மாயைகளைச் செய்வாயாக'' என்று கூறினான். உடனே கிரௌஞ்சமலை பல மாயைகளைச் செய்யத் தொடங்கியது. முப்புரங்களிலும் அந்த மலை வரத் தொடங்கியது; முப்புரங்களில் உள்ள அசுரர்களாய் வந்தான் தாரகன். கிரௌஞ்ச மலை பலப் பல மேகங்களாக வந்தது; தாரகன் அவற்றினுள்ளே இடியாக வந்தான். கிரௌஞ்சம் பல கடல்களாய் வந்தது; தாரகன் அவற்றினுள்ளே வடவாமுகாக்கினியாய் வந்தான். கிரௌஞ்சம் சக்ரவாளகிரியைச் சூழும் இருளாய் வந்தது; தாரகன் அதனுள்ளே பூதமாய் வந்தான். கிரௌஞ்சம் எட்டுத் திக்கயங்களாய் வந்தது; தாரகன் சடசடவென்ற ஒலியோடு குலமலைகளாய் வந்தான்; கிரௌஞ்சம் வாயுவாய் வந்தது. தாரகன் அக்கினியாய் வந்தான்; கிரௌஞ்சம் நெருப்புக் கொள்ளியாய் வந்தது; தாரகன் ஆயிரம் கோடி சூரியர்களாய் வந்தான்.

தாரகன் இவ்வாறாக, கிரௌஞ்ச மலையோடு சேர்ந்து எண்ணற்ற மாயைகளைச் செய்து கொண்டு திரிவதைக் கண்ட முருகப் பெருமான், தம் கையிலுள்ள வேலாயுதத்தை நோக்கி, ''நீ தாரகாசுரனையும், கிரௌஞ்ச மலையையும் ஒரு கணப் பொழுதில் பிளந்து உயிரை உண்டு, இலக்கத்தொன்பது வீரர்களையும், பூதப் படைகளையும் மீட்டு இங்கே வருவாயாக'' என்று பணித்தருளி, அதனைச் செலுத்தினார். அதனை அருணகிரிநாதர் விளக்கும் அழகு படித்துப் படித்து இன்புறத் தக்கது.

சமரமொடும் அசுரர்படை களமீதெதிர்த்த
பொழுது
ஒருநொடியில் அவர்கள் படை கெடவே
லெடுத்து அவர்
தனில் நிருதர் சிரம் உருள ரணதாள்
படுத்திவிடு செருமீதே
கவனமொடும் அலகைநடம் இடவீர
பத்திரர்கள்
அதிரநிண மொடு குருதி குடிகாளி
கொக்கரி செ
தசையுணவு தனில் மகிழ விடுபேய்
நிரைத்திரல்கள் பலகோ
திமிதமிட நரிகொடிகள் கழுகாட
ரத்தவெ
வயிரவர்கள் சுழலஒரு தனிஆயுதத்தை
வி
திமிரதின கரஅமரர் பதிவாழ்வு
பெற்றுலவு முருகோ

சர்வ சங்கார காலத்தில் மாயை யாலாகிய உலகங்களையும் உயிர்க யும் சிவபெருமானின் நெற்றிக் கண்

புடவை
புதிதா?

இல்லையே-
லக்ஸ்
சலவை




மட்டிலாத களை, மாறாத மென்மை ... உங்கள்
பட்டாடைகளின் பண்புகளை நருவிசாகப் பராமரிப்பது
லக்ஸ் சலவை. கம்பளி, நைலான், ரேயான், டெரிலீன்...
பாங்கான துணிகள் எல்லாமே பார்க்கப் புதிதாய்ப்
பன்னெடு நாள் நீடித்திருக்கத் துணை:
தூய மெல்லிள்ம் லக்ஸ் தூள்களால் சலவை!

**அத்தனை நருவிசாக ஆடைகளைக் காப்பது லக்ஸ் ஒன்**

இந்துஸ்தான் லீவர்

.X. 22-140 TM

னின்று தோன்றும் அக்கினி சுடுவது போல, முருகப் பெருமானுடைய வேலாயுதம் தாரகனும் கிரௌஞ்ச மலையும் செய்த மாயைகள் அனைத்தையும் அழித்தது. எம்பெருமானின் ஆறு முகங்களிலிருந்தும் எழுந்த சினம் ஒரு வடிவெடுத்துச் செல்வது போல் அந்த வேற்படை சென்றது. தாரகன், வேற்படையைப் பிடித்து முறித்துப் போடுவதற்காக எதிர்த்து வந்தான். அது அக்கினியை எதிர்க்கக் கொசு வந்ததுபோலிருந்தது. வேற்படை தாரகனின் மார்பைக் கிழித்துக் கிரௌஞ்ச மலையையும் தகர்த்து இரு கொடிய உயிர்களை உண்டது; மலையினுள் துயின்ற வீரர்களுக்கு உணர்வைத் தந்து எழுப்பி விட்டது. பின்னர் ஆசார சீலமாக ஆகாய கங்கையில் நீராடி முருகப் பெருமானின் திருக் கையில் வந்து சேர்ந்தது.

கிரௌஞ்ச மலை பிளந்தவுடனே, அதனுள் மயங்கிக் கிடந்த வீரவாகு தேவர் முதலியோர் மயக்கம் தெளிந்து எழுந்தனர். விரைந்து முருகப் பெருமானை யடைந்து வணங்கித் துதித்தனர்.

கருணைக் கடலாகிய கந்தவேள் அவர்களை நோக்கி, ''நீங்கள் அனைவரும் தாரகனல் கிரௌஞ்ச மலையில் அடைபட்டு அல்லலுற்றீர்களா?'' என வினவினர். ''எந்தையே! தங்கள் திருவருள் இருக்கும்போது அடியோர்கள் அல்லற்படுவதுமுண்டோ? மையலுடன் உறங்குவது போல எத்துயரும் அறியாது மயங்கியிருந்தோமே யன்றி, கிரௌஞ்ச மலையின் மாயத்தால் சிறிதும் துன்பம் அடைய வில்லை'' என்று வீரவாகு தேவர் முதலிய வீரர்கள் மகிழ்ந்து கூறினர்கள்.

முருகக் கடவுள் வீரவாகு தேவரை அழைத்துத் தாரகன் அடுத்த சிவப் படைக்கலத்தை அவருக்கு அளித்தார். எதிரி ஆத்திரத்துடன் எய்த ஆயுதத்தையும் அமுதன் அன்புப் பரிசாக்கி விட்டார். தாரகனுடன் நடந்த போரில் இறந்த பூதர்களை எழுப்பி, அவர்கள் புடைசூழ, வானவர் துதிக்க வீரர்களுடன் போர்க்களத்தினின்று புறப்பட்டார் வெற்றி வேலர். இமய வெற்பைக் கடந்து, தென் திசையில் நடந்து, கதிரவன் மேற்கடலில் மூழ்கும்பொழுது தேவகிரியை அடைந்தார்.

மாலைக் காலம் செவ்வானத்துடன் வந்தது; அதனை யடுத்து இருளும் சூழ்ந்தது; அதனிடையில் இளம் பிறை விளங்கியது. விண் மீன்கள் ஒளிசிந்தின. இரவின் ஆட்சி தொடங்கியது. அப்பொழுது திருமால், நான்முகன். இந்திரன் முதலியோர் முருகப் பெருமானின் செம்மலர் பாத கமலங்களைச் சென்னி பொருந்தப் பணிந்தனர்.

'எம்பெருமானே! தாரகர்களைக் கிரௌஞ்ச மலையோடு அழித்தருள் புரிந்த தேவரீரைப் பூசிக்க விரும்புகிறோம்; இம்மலையில் எழுந்தருள்க'' என்று வேண்டினர். ஆறுமுகக் கடவுள் அவ் வேண்டுகோளுக்கு இணங்கினர். இமையவர்கள் உடல் உரோமஞ் சிலிர்த்துப் பேருவகை எய்தினர்.

குமரக் கடவுள் சேனைகளோடும் தேவர்களோடும் தேவகிரியின் மேற் சென்றார். தம்மைத் தொழுத தேவ தச்சனை நோக்கி, ''நாமும், நம் முடைய தம்பியரும், தேவர்களும் கணங்களும் தங்குவதற்கு இம்மலையில் இப்பொழுதே ஒரு நகரத்தை உண்டாக்குவாய்'' என்று பணித்தருளினர். அவ்வாறே தேவதச்சன் அழகியதொரு நகரத்தையும் அதனுள்ளே எம்பெருமான் எழுந்தருளும் பொருட்டுச் செம் பொன்னாலயத்தையும், அதனுள்ளே இரத்தின சிங்காசனத்தையும் செய்து முடித்து விட்டு முருகப் பெருமானிடம் வந்து தெரிவித்தான்.

முருகப் பெருமான் தன்னைச் சூழ்ந்த அனைவருடனும், அத் திருநகரத்தினுட் சென்று, பூத சேனைகளைத் திருக்கோயில் திருவீதியிலே நிறுவினர். தேரினின்றும் இறங்கி மறைக்கும் எட்டாத மலரடியைச் செம்பொற் பாதுகைகளிலே வைத்து வீரர்களும் தேவர்களும் சூழத் திருக்கோயிலினுள்ளே புகுந்து, பேரொளி வீசும் மணித் தவிசின் மேல் எழுந்தருளினர்.

முருகப் பெருமானைப் பூசிக்க எண்ணிய திருமால் முதலிய தேவர்கள் உமா தேவியாருடைய திருக் கரத்தில் தோன்றிய கங்கையை நினைக்க அது அங்கு வந்து பாய்ந்தது. அதனல் ஆறுமுகனுக்கு அபிஷேகம் செய்தார்கள். அமிர்தம் வைத்த குடங்களைக் கொண்டு வந்து வேதங்களை ஓதிக் கங்கையிலே திருமஞ்சனம் எடுத்தார்கள். பிரமதேவர் முதலிய தேவர்களும் முனிவர்களும் மந்திரம் சொல்லித் திருமஞ்சன மிட்டார்கள். அதன்பின் வேறு பீதாம்பரம் சாத்தி வேறொரு சிங்காசனத்தில் எழுந்தருளி யிருக்கச் செய்து, முருகனுடைய திருநாமம் சொல்லி, நறுமணமாலை சூட்டி, சந்தனக் குழம்பு அணிவித்துப் பச்சைக் கற்பூரம் அப்பினர்கள். கஸ்தூரி திலகம் வைத்து, திருமேனி யெங்கும் திவ்வியாபரணங்

களைச் சாத்தி, மணி ஒலியோடு மலர்களைத் தூவி அருச்சித்து, தூப தீபம் காட்டி, மெய்யன்போடு துதித்தனர். முருகப் பெருமான் அந்த அற்புதமான தேவ பூஜையை ஏற்று அருள் புரிந்தார்.

தாரகன் இறந்த செய்தியைத் தூதர் சொல்லக் கேட்ட தாரகனின் மனைவி சௌரி இடியோசை கேட்ட நாகம் போல் நடுங்கினுள். விழுந்தும், எழுந்தும், தொழுதும் கதறியழுது சென்று தன் கணவனின் உடலின்மீது புரண்டு புலம்பினுள். தாரகனின் மற்ற மனைவியர்களும் வந்து நெருங்கிச் சடலத்தைச் சுற்றிப் புலம்பி அழுதார்கள். ''தன்னுடைய ஆழிப் படையை உனக்கு ஆபரணமாக அளித்த திருமாலும், இந்திராதி தேவர்களும், இயமனும் இன்று அல்லவா மனக் கவலை தீர்ந்தார்கள்?'' என்று கதறினுள் சௌரி.

**''உந்துதனி ஆழி உனக்கணியாத்**
**தந்தோனும்**
**இந்திரனும் ஏனை இமையவர்கள்**
**எல்லோரும்**
**அந்தகனுர் தாமும் அனைவர்களும்**
**இன்றன்றே**
**சிந்தைதனில் உள்ள கவலையெலாம்**
**தீர்ந்தனரே!''**

தாரகாசுரனின் புதல்வனுகிய அசுரேந்திரன், சூரனின் மற்றொரு சோதரனுகிய சிங்கமுகனுடைய நகரமாகிய ஆசுரபுரிக்குச் சென்றிருந்தான். தந்தையின் மரணச் செய்தியைக் கேட்ட அவன் விரைந்து வந்து தாரகனின் உடலை ஒரு தேரின் மீது கிடத்தி, ஈமக் கடன்களைச் செய்து தகனக் கிரியைகள் செய்தான். தாரகன் மனைவியாகிய சௌரியும் மற்ற மனைவியர்களும் உடன்கட்டை ஏற விரும்பினுர்கள். அசுரேந்திரன் எவ்வளவோ தடுத்துக் கூறியும் அவர்கள் கேட்கவில்லை. எல்லோரும் உடன் கட்டை ஏறினுர்கள். எங்கெங்கு பெண்மை உண்டோ அங்கெல்லாம் கற்பு நிலை உண்டு. அசுரப் பெண்களிடமும் பதிவிரதா தருமம் தலை தூக்கி நின்றது.

அசுரேந்திரன் தன் சுற்றத்தார் சூழத் தென் கடலிலுள்ள வீர மகேந்திரபுரியை அடைந்தான். அங்கு ஆட்சி அதிகாரம் செலுத்தும் தனது பெரியப்பனுன சூரபதுமனை யடைந்து வணங்கி, அவன் கால்களைப் பிடித்துக் கொண்டு அழுதான்.

''மைந்தனே! ஏன் வருந்திப் புலம்புகிருய்?'' என்று வினவினுன் சூரபன்மன்.

''பெரியப்பா! இந்திரன் செய்த சூழ்ச்சியினுல் சிவகுமாரன் பூதப் படைகளோடு வந்து உங்கள் தம்பி தாரகாசுரரைக் கிரௌஞ்ச மலையோடு சேர்த்து வேற்படையினுலே கொன்ருன்.''

சூரபன்மன் அடங்காத சினமும் வியப்பும் அடைந்தான். ''மகனே! இது பொய். என்ன நடந்தது? பயப்படாமல் உண்மையைச் சொல்'' என்ருன்.

''நான் கூறியது யாவும் உண்மையே'' என்று அசுரேந்திரன் கூறினுன்.

தன்னுடைய தம்பி உண்மையிலேயே முருகப் பெருமானுல் மாண்டான் என்பதைக் கேள்விப்பட்ட சூரபன்மன் எல்லையில்லாத துயரமும் ஆத்திரமும் கொண்டான். ''என் தம்பியைக் கொன்ற முருகன் மீது இப்போதே போர் தொடுத்தாக வேண்டும். தேரும் ஆயுதங்களும் விரைவில் கொண்டு வாருங்கள்'' என்று ஏவலர்களுக்கு உத்தரவிட்டான் சூரபன்மன்.

அப்போது அமோகன் என்ற மந்திரி சூரபன்மனை வணங்கி நின்ருன். ''அசுரேச! சாம — தான — பேதம் என்ற மூன்று முதல் உபாயங்களைப் பின்பற்றுமல் எடுத்த எடுப்பிலேயே நான்காவது உபாயமாகிய போருக்குப் புறப்படுவது முறையல்ல; ஆராயாமல் எந்த ஒரு செயலையும் செய்யக் கூடாது; எதிரிகளின் பலத்தை ஒற்றர்கள் மூலம் அறிந்துகொண்ட பின்பே செய்வது என்ன என்பது பற்றி முடிவு எடுக்க வேண்டும். எதிரிகள் நம்மை விடப் பலம் வாய்ந்தவர் என்று நான் சொல்வதாக எண்ணக் கூடாது. எங்கள் தலைவராகிய தாங்கள் அழிவில்லாதவர்: எல்லா உலகங்களையும் ஆள்பவர். தேவர்கள் யாவரையும் ஏவலராகப் பெற்றிருப்பவர்; திருமாலாலும், பிரமனுலும் புகழப்படுபவர்; இப்படிப்பட்ட தாங்கள் நமது படை பலத்துக்கு மிகவும் குறைந்த பலமுடைய எதிரிகளுடன் போராடினுல் அதில் பெருமை என்ன உண்டு? இந்திரன் பேச்சைக் கேட்டு பூதப் படை சூழ வந்த நேற்றுப் பிறந்த குழந்தை மீது மகாசுரராகிய தாங்கள் போருக்குப் போவது ஒருவேளை பழிப்புக்கு இடமாகலாம். எனவே பகைவரின் பலத்தை முதலில் அறிவோம்'' என்ருன்.

''நன்று நன்று'' என்று கூறி அந்த யோசனையை ஏற்ற சூரபதுமன் பகன், மயூரன், சேனன், சக்கரவாகன், சுகன் முதலிய தூதர்களைக் கூப்பிட்டு, ''தந்தை வேலுடைய இயல்பையும், அவனது சேனையின் தொகையையும் ஆராய்ந்து வாருங்கள்'' என்று பணித்தான். அவர்கள் சூரபன்மனை வணங்கிச் சென்று விரைந்து பூமியை நோக்கிச் சென்ருர்கள்.

(தொடரும்)



லண்டன் லார்ட் மேயர் துக்க வாள் கையிலேந்தி முன் செல்ல, செயிண்ட் பால் கதீட்ரலிலிருந்து வின்ஸ்டன் சர்ச்சிலுக்கு இறுதி மரியாதை செலுத்திவிட்டுத் திரும்பும் அரச குடும்பத்தினர். ராணி இரண்டாவது எலிஸபெத், பிலிப் கோமகன், ராணியின் அன்னை எலிஸபெத் அம்மையார், வேல்ஸ் இளவரசர் சார்ல்ஸ், இளவரசி மார்கரெட், அவரது கணவர் லார்ட் ஸ்னேடன் ஆகியோரைப் படத்தில் காணலாம்.



நாற்பது மணி நேரத்தில் நினைத்த இடத்தில் அமைக்கக் கூடிய புது வகை எஃகுப் பாலத்தின் தோற்றம் இது. மேற்கு ஜெர்மனியில் பாலத்தின் கீழே உள்ள சாலை பழுது பார்க்கப் படுவதால், போக்குவரத்தைச் சமாளிக்க இந்த ஏற்பாட்டைச் செய்திருக்கிறார்கள்.



பாரதிய சங்கீத கலைச் சங்கத்தின் சங்கீதப் பள்ளிக் கட்டிடத்துக்குச் சமீபத்தில் சங்கீத கலாநிதி அரியக்குடி ஸ்ரீ ராமானுஜ அய்யங்கார் அஸ்திவாரக் கல் நாட்டினார்.

# 16. செந்தில் மேவிய கந்தவேள்

தேவகிரியில் எழுந்தருளி யிருந்த குமாரக் கடவுள், கதிரவன் உதயமான தும், தேவர்களும், சேனைகளும் புடை சூழத் தென் திசை நோக்கிச் சென்றார்.

பிருங்கி முனிவர் உமையன்னையை நீக்கிச் சிவபெருமானை மட்டும் வலஞ் செய்ததன் காரணமாக தேவியார் சிவ பெருமானிடமிருந்து தம்மைப் பிரிக்க முடியாமல் அவரது இடப் பாகத்தைப் பெற விரும்பித் தவம் செய்த திருக் கேதாரம் என்னும் திவ்வியத் தலத் தைக் கண்டு தரிசித்தார் முருகவேள். திவ்விய ஸ்தலங்களின் அரசாக மதிக் கப் பெறும் காசியம்பதியைத் தரி சித்தார். சிவபாத முனிவரின் புதல் வராகிய திருநந்தித் தேவர், சிவபெரு மானைத் தாங்கும் பொருட்டுத் தவம் செய்து மலையாகிப் பரமேசுவரனைத் தாங்கிய திருப் பருப்பதத்தைத் தரி சித்தார். மாங்கனிக்காக உமாதேவி யாரிடம் தாம் கோபித்துக் கொண்டு மாய் அமைந்ததும், சிவபெருமான் மாமர மர நிழலில் எழுந்தருள்வதாயு முள்ள திருக்காஞ்சி நகரத்தைத் தரி சித்தார்; அங்கே காமாட்சி அம்மை யார் பூசித்த திருவேகம்பத்தையும், நான்முகன், திருமால் முதலிய அம ரர்கள் பூசித்த மற்றைய ஆலயங்களை யும் தரிசித்தார். பிரம்மாவும், விஷ்ணு வும் அடிமுடி அறியவொண்ணாமல் எம் பெருமான் எழுந்தருளிய திருவண்ணா மலையைத் தரிசித்தார். இறந்த குற்ற மற்ற உயிர்களையெல்லாம் உமாதேவி யார் தமது ஆடையால் விசிறிக் களைப்பாற்றச் சிவபெருமான் தமது திருத் தொடையின் மேல் அவர்களைக் கிடத்தி, திருவைந்தெழுத்தின் உண் மையை உபதேசித்துத் தமது சாரூப் யத்தைக் கொடுத்தருளும் காசிக்குச் சமமான விருத்தாசலத்தைத் தரிசித் தார். ஒப்பற்ற கடுந் தவம் புரிந்த பதஞ்சலி வியாக்கிரபாத முனிவருக்

## கந்தன் கருணை

பாதாளத்துக்குச் சென்று குகை வழியே வெளியே தாம் வந்ததும், அவ்வாறு வெளியே வந்த இடத்திருந்த புஷ்கரணி தீரத்திலே திருமால் முதலிய தேவர்கள் தம்மைப் பூசித்ததுமாகிய திருவேங் கடமலையை அடைந்தார்.

திருவேங்கடமும் முருகனுக்குரிய திவ்விய ஸ்தலங்களுள் ஒன்று. 'பண்டு தான் வரும் வேங்கடகிரியையும் பார்த் தான்' என்று கச்சியப்பர் கூறுகிறார்.

சிலந்தியும், பாம்பும், யானையும், சிவகேசரியாரும், கண்ணப்ப நாயனா ரும், நக்கீர தேவரும், கன்னியரும் முத்தி யடைந்த தட்சிண கைலாயமாகிய திருக்காளத்தி மலையைத் தரிசித்தார். காளி தேவி ஆடல் புரிந்தபோது அவ ளது செருக்கு அழியவும் உலகம் இன்புறவும் சிவபெருமான் ஆடல் புரிந்த திருவாலங்காட்டைத் தரி சித்தார். ஊழிக் காலத்தும் அழி வில்லாததாய், திருமால், நான்முகன் முதலிய தேவர்களுக்கு இருப்பிட காகச் சிவபெருமான் எல்லையில்லா பெருங் கருணையோடு ஆனந்த தாண்டவம் புரிந்தருளும் திருத்தில்லை யம்பதியைத் தரிசித்தார். அகத்திய முனிவரின் கமண்டலத்தினின்று பெருகி வேறு வேறாகப் பிரிந்து பல பெயர்களைத் தாங்கிச் செல்லும் காவிரியாற்றின் வட கரையில் உள்ள மண்ணியாற்றங் கரையை அடைந்தார்.

முருகப் பெருமான் மண்ணியாற் றங்கரையை அடைந்தபோது கதிர வன் தன் கிரணங்களை ஒடுக்கிக் கொண்டு மேலைக் கடலில் மறைந் தான். அப்போது சிவப்பு வானம் பிட்சாடன வடிவங் கொண்டு வந்த சிவபெருமானைப் போல் விளங்கியது. தாருக வனத்தின் தோற்றம் போல இருந்தது இருள்; தாருக வனத்து மாதர்களைப் போல் விண்மீன்கள் மயங்கி நின்றன. சிவபெருமான் திருக் கரத்திலேந்திய பிரம கபாலத்தைப் போல் தோன்றியது இளம்பிறை

மிக்க தாருக வனத்தினை
ஒத்தது விசும்பல்
தோக்க பேரிருள் ; மாதரோத்
தன உடுத் தோற்றம் ;
செக்கர் ஈசனை ஒத்தது ;
ஒண் போனகஞ் செறிந்த
கைக்க பாலம(து) ஒத்தது
கதிரிளம் பிறையே

இச்சமயத்தில் பிரம்மா, விஷ்ணு முதலிய தேவர்கள் குமாரக் கடவுளை வணங்கி, ''எம்பெருமானே! இந்த ஆற்றங் கரையெல்லாம் மணற்குன்றுகள் மலிந்துள்ளன; மலர் வனங்கள் நிறைந்தன; எண்ணிலாத சிவஸ்தலங்கள் இருக்கின்றன. ஆகவே, இந்த நதிக் கரை



யில் எழுந்தருளுக'' என்று வேண்டிக் கொண்டார்கள். முருகப் பெருமான் அதற்கிணங்கித் தேவதச்சனைக் கொண்டு மண்ணியாற்றங் கரையில் கவின் மிக்க நகரம் ஒன்றை அமைத்துக் கொண்டு எழுந்தருளினார். தேவர்கள் அந்நகருக்குத் திருச்சேய்ஞலூர் எனப் பெயரிட்டார்கள். இதனைக் குமார புரி என்று வட மொழியில் கூறுவர்.

தாரகன் கிரௌஞ்ச மலையுடன் அழிந்ததை எண்ணிய இந்திரன் துயர் நீங்கி மகிழ்ந்திருந்தான். அப்போது சீர்காழியில் உள்ள வனதேவதை இந்திரனை வந்து வணங்கியது. ''தேவர் கோமானே! நீ இந்திராணியுடன் சீர்காழியில் தங்கித் தவம் செய்தபோது என்னிடம் இந்திராணியின் ஆபரணங்களை எடுத்துக் கட்டி அடைக்கலமாகக் கொடுத்து வைத்தீர்கள். அதை இப்போது ஏற்றுக் கொள்ளுங்கள்'' என்று ஆபரணக் கிழியை அமரேசனுக்கு அளித்தது. இந்திராணியின் ஆபரணங்களைக் கண்ட அளவிலேயே இந்திரனுக்கு விரகம் மேலிட்டது. இரவு முழுவதையும் ஒரு பூஞ்சோலையின் புறத்தேயுள்ள மணற் குன்றில் தாபத்துடன் கழித்தான் தேவராஜன்.

சூரியோதயம் ஆயிற்று. இந்திரன் பதைபதைத்தான். 'முருகக் கடவுளுடன் இருக்கும்போது எனக்குக் காம உணர்வு வந்ததே' என்று வருந்தினான். காமம் செய்யும் தீமைகள் அனைத்தையும் உணர்ந்த இந்திரன் அங்கிருந்து நீங்கித் தேவர்கள் சூழச் சென்று குகப் பெருமான் சந்நிதியையடைந்து வணங்கித் துதித்தான்.

இந்திரனை நோக்கிய கந்தவேள், ''நாம் சிவபெருமானைப் பூசிக்க விரும்புகிறோம். பூசைக்கு வேண்டிய உபகரணங்களை வருவிக்கக் கடவாய்'' என்று பணித்தருளினார். இந்திரனின் பாவம் தொலையவே, சிவப் பணியில் ஈடுபடுத்தினார் போலும்!

பூசைக்கு வேண்டிய திவ்விய தீர்த்தம், நறுமலர், பீதாம்பரம், சந்தனம், திருவமுது, தூபம், தீபம் முதலியவைகளை இந்திரன் உடனே தருவித்தான். முருகப்பெருமான் தேவதச்சனைக் கொண்டு சிவபெருமானுக்கு ஒரு திருக்கோயில் அமைத்துச் சிவாகம விதிப்படி சிவலிங்கத்தை ஸ்தாபித்து வழிபட்டு வலம்வந்து வணங்கித் துதித்தார். பக்தர்களின் பூசனை யாவையும் பெற்றருளும் பரமேசுவரன் தமது மறு உருவான ஆறுமுகன் புரிந்த ஆராதனையில் உவகையுற்றார். சிவபெருமானுக்குக் கந்தவேள் புரிந்த பூஜையை விடப் புண்ணியமும், அழகும், அநுபூதியும் நிறைந்த வழிபாடும் உண்டா?

உமாதேவியாரோடு இடபத்தின் மீது ஈசுவரர் தோன்றியருளினார். குமாரக் கடவுளும் இலட்சத்தொன்பது வீரர்களும், தேவர்களும் சிவபெருமானைத் தரிசித்து மனங் கசிந்துருகித் துதித்தார்கள். சிவபெருமான் தமது திருமைந்தரை நோக்கி, ''உன் வழிபாட்டுக்கு மகிழ்ந்தோம். நீ இதனைப் பெற்றுக் கொள்'' என்று கூறி உலகம் முழுவதையும் ஒரு நொடியில் அழிக்க வல்ல சர்வ சங்காரப் படையென்னும் உருத்திர பாசுபதப் படைக்கலத்தைக் கொடுத்தருளினார்.

''மைந்தனே! இது நம்மிடத்தே தோன்றிய படைக்கலம்; பிரம விஷ்ணுக்களும் இதனைப் பெற்றிலர்; இதனைத் தாங்கவல்லவன் நீயன்றி வேறு ஒருவரும் இலர்; இது சூரபன்மனுடைய அளப்பற்ற சேனையை அழிக்க வல்லது'' என்று திருவாய் மலர்ந்தார்.

சிவபெருமான் மறைந்த பின்னர் கந்தவேள், அங்கிருந்து தேரில் புறப்பட்டார். தேவரும், பூதரும், வீரரும் புடைசூழக் காவிரியைக் கடந்து திருவிடைமருதூர், மாயூரம், திருப்பறியலூர் முதலிய சிவஸ்தலங்களைத் தரிசித்துக் கொண்டு உலையில் காய்ந்த இரும்பு போன்ற மிகுந்த வெப்பம் கொண்ட பாலைவனத்திலே சென்றார். உடனே அது நறுமலர்ச் சோலைபோல் குளிர்ச்சியுடையதாயிற்று. புறச் சமய நெறியில் புகுந்து அலைகின்றவர்களுக்குச் சிவபெருமான் திருவருள்பாலித்த பொழுது பொறிபுலன்கள் மாறுபட்டன போல, அப் பாலைவனம் பால முருகனின் பரிசம் பட்டதும் குளிர்ந்த மலர்ச் சோலையாக மாறி மகிழ்ச்சி தந்தது.

**புறநெறிக்கணே வீழ்ந்துளோர்**
**சிவனருள் புகுங்கால்**
**அறிவும் ஆற்றலும் குறிகளும்**
**வேறுபட் டனபோல்**
**வறிய செந்தழல் வெவ்வனம்**
**வேலவன் வரலால்**
**நறிய தண்மலர்ச் சோலையாய்**
**உவகை நல்கியதே**

வெம்மை நீங்கிய அப்பாலைவனத்தில் கந்தவேள் சென்று கொண்டிருப்பதைத் திருப்பரங்குன்றிலே தவம் செய்து கொண்டிருந்த பராசர முனிவரின் புத்திரர்களாகிய தத்தர், அநந்தர், நந்தி, சதுர்முகர், சக்ரபாணி, மாலி என்னும் அறுவரும் ஞானநோக்கினால் அறிந்து, வடதிசை நோக்கி வந்து கந்தக் கடவுளை எதிர்கொண்டு சென்

னர். கந்தப் பெருமானைக் கண்டதும் கழலிணைகளில் வீழ்ந்து வணங்கினர்.

ஆறுமுகக் கடவுளைச் சரவணப் பொய்கையிலிருந்து எடுத்தபோது அகிலாண்ட நாயகியின் திருப்பால் வெள்ளமாய்ப் பெருக அதனை மீனுருவில் இருந்து உண்டு சுயரூபம் பெற்ற தவச் செல்வர்களே இவ்வறுவரும்.

இவர்கள்சிவாக்ஞையை மேற்கொண்டு திருப்பரங்குன்றத்துக்குச் சென்று தவம் செய்து கொண்டிருந்தார்கள். கந்தவேள் பராசர முனிவருடைய புதல்வர்களுக்குப் பூரண அநுக்கிரகம் புரிந்தார். அதன் பின் கந்தக் கடவுள், சிவபெருமான் எழுந்தருளி யிருக்கும் திருச்செங்குன்றூர் (திருச்செங்கோடு) அடைந்து, சிவபெருமானைத் தரிசித்துக் கொண்டு, கடற்கரையில் உள்ள ஒரு திவ்விய ஸ்தலத்துக்கு எழுந்தருளினர்.

அதுவே அலைவாயாகிய திருச்செந்தூர். 'என்னிடம் வருபவர்கள் சம்ஸாரக் கடலைத் தாண்டி விடுவார்கள்' என்று உலகுக்கு அறிவிக்குமுகமாகவே இங்கு பெருமான் கடற்கரையில் கோயில் கொண்டுள்ளார் என்றும், அலைகள் யாவும் எப்படிக் கரையில் அடங்கி விழுகின்றனவோ அவ்வாறே அலைவாய் ஸ்வாமியின் அடிபணிந்தவரின் ஆபத்துக்கள் அடங்கிப் போகும் என்றும் ஸ்ரீ ஆதிசங்கரர் 'சுப்பிரமணிய புஜங்க'த்தில் போற்றுகிறுர். அரும் பெரும் அறுமுக ஸ்தலம் திருச்செந்தூர். அங்கு தேவதச்சனைக் கொண்டு ஒரு திருக்கோயில் அமைக்கச் செய்து அக்கோயிலினுட் புகுந்து, வீரர்களும் பூத சேனுதிபதிகளும் துதிக்க மணியாசனத்தில் வீற்றிருந்தருளினர் கந்தவேள். கடற்கரையில் கருணைக் கடலாக எழுந்தருளினர். அப்போது கந்தருவர்கள் யாழ் வாசித்தனர். தேவர்கள் பூமழை பொழிந்தனர். வாயுக்கள் வெண்சாமரம் வீசி நின்றனர். அக்கினியும், வருணனும், வெண் குடை பிடித்து நின்றனர். வீரவாகு தேவர் உடைவாள் பற்றி நின்றுர். மற்றைய இலட்சத்து எண்மரும் தலைவாயிலில் துதித்துக்கொண்டு நின்றுர்கள்.

செந்திலம்பதியில் வீற்றிருந்த குமரக் கடவுள் ஒன்றும் அறியாதவர் போல் இந்திரனை நோக்கி, "சூராதி யவுணர்கள் பிறந்ததும், தவம் செய்ததும், அவர்களது வீரமும், உங்களுக்கு அவர்கள் இழைத்த தீமையுமாகிய எல்லாவற்றையும் நமக்கு விரிவாகச் சொல்லக் கடவாய்" என்றுர்.

தேவகுருவாகிய வியாழ பகவானை நோக்கிய இந்திரன், "தாங்களே இவற்றைச் சொல்லி யருள வேண்டும்" என்று வேண்டிக் கொண்டான். வியாழ பகவான் அதற்கு இணங்கி, முருகப் பெருமான் திருவடிகளை வணங்கி அந்தக் கதையைக் கூறலானர். **(தொடரும்)**

## சுவர் ஒட்டி தினசரிகள்

அநேக உயர்நிலைப் பள்ளிகளிலே இது ஒரு நல்ல பழக்கமாக இருந்து வருகிறது. பள்ளியில் நுழைந்ததும் அல்லது தலைமை ஆசிரியரின் அறைக்கு வெளியே ஒரு கரும் பலகையில் அன்றைய தினசரியின் முக்கிய சாராம்சத்தை எழுதி வைப்பார்கள். கிராமத்தின் முக்கியத்துவம் மாத்திரமல்லாமல் நகரம், ஜில்லா, மாகாணம், தேசம், உலகம் இவைகளின் பிரத்தியேக சம்பவங்களையும் பிரித்து எழுதப்பட்டிருக்கும். ஒருசில நிமிடங்களில் கிரகித்துக் கொள்ள முடியும் அன்றைய 'நியூஸ்'.

எழுதப் படிக்கத் தெரியாத மக்கள் நமது நாட்டில் இன்றும் அநேகர் உளர். தினசரிகள் மலிந்து கிடக்கும் இந்தக் காலத்தில் கூடக் கேட்டுத் தெரிந்து கொள்ளக் கூடியவர் பலர். கொஞ்சம் நஞ்சம் எழுத்துக்கூட்டிப் படிப்பவர்களும் உண்டு. 'சுவரொட்டித் தினசரி' கிராமத்தின் ஒரு மையமான இடத்திலோ அல்லது கிராம மக்கள் எல்லோரும் தவருமல் பார்த்துப் போகக் கூடிய ஓர் இடத்திலோ நிறுவி வைப்பது மிகவும் நலமாயிருக்கும். இன்றைக்கும்கூட சீனவிலே இது ஒரு பழக்கமாக இருந்து வருகிறது என்று கூறப்படுகிறது. வர்த்தமானம் பிரசுரம் செய்வது பொதுப் படையான கருத்துடையதாகவும், ஒருவர் கைப்படவும் படங்கள் அடங்கியதாகவும் இருப்பது நலம். நிறுவவேண்டிய இடம் நாலு பேர்கள் கண்களில் படக் கூடியதாகவே இருத்தல் மிக அவசியம். அசோகர் தம் புத்திமதிகளைப் பிரசுரம் செய்த காலத்தில் ஊருக்குள்ளே நுழையும்போது நிற்கும் பாறைகளின் மேல் அடித்து வைத்தாராம்.

**— எல். சி. ரிச்சர்ட்**

# ஜீவகீதம்

ஜெகசிற்பியன்

அத்தியாயம் எட்டு

## படுக்க ஓர் இடம்

இரவு மணி பதினொன்று. திருவல்லிக்கேணி போலீஸ் நிலையத்திலிருந்து வெளியே வந்தான் சபேசன். அவன் முகம் அழுது அழுது வீங்கிப் போயிருந்தது. ஆனால் அப்படி அழும்படியாக அவனுக்கு அங்கு எவ்விதத் துன்பமும் நேரவில்லை. போலீசார் அவனை உருட்டி மிரட்டிப் பலவிதமான கேள்விகள் கேட்டு விசாரணை நடத்திய பின், 'பர்மா அகதியான அந்த இளைஞன் பொதுக் கூட்ட மேடையில் பாதரட்சையை வீசியெறிந்து அமைதிக்குப் பங்கம் விளைவித்திருக்க மாட்டான்; வேறு எவனோ ஒரு கருங்காலி அக்காரியத்தைச் செய்து தப்பித்துக் கொள்ள, இவன் தவறுதலாகப் பிடிக்கப்பட்டான்' என்ற முடிவோடு





வெளியில் அனுப்பி விட்டார்கள். அநாதரவான நிலையில் தாய்நாட்டுக்கு ஓடி வந்த பின்னும் விதி தன்னை விடாமல் இப்படியெல்லாம் வீணான சங்கடங்களுக்கு உட்படுத்தி வேடிக்கை பார்க்கிறதே என்பதை நினைத்துத்தான் அவன் விம்மிப் பொருமி அழலானான். அத்துடன், தன்விச்சையாகத் தன் காலை ஊன்றி ஒரு நாள் பொழுதைக் கழிப்பதற்குள்ளாகவே இவ்வளவு ஏமாற்றங்களும் இடுக்கண்களும் எதிர்ப்பட்டு விட்டன என்றால்

இன்னுமுள்ள வாழ்நாட்களில் எத்தனை யெத்தனை பேரிடிகளேயும் பெரும் புயல்களேயும் சந்திக்க நேரிடுமோ என்ற அச்சமும் தோன்றி அவனை ஒரேயடியாகக் குழப்பிப் புலம்ப வைத்து விட்டது.

கண்களைத் துடைத்துக் கொண்டு, எதிரே விசாலித்துக் கிடந்த சாலையை ஏறிட்டுப் பார்த்தான். கடை கண்ணிகளெல்லாம் சாத்தப்பட்டு ஜன நடமாட்டமும் அடங்கி விட்டிருந்தது. இதனால், இவ்வளவுநேரம் அவன் மனத்தில் குடிகொண்டிருந்த கலக்கம் நீங்கியிருந்தாலும் இப்போது வேறொரு கவலை சூழ்ந்துகொண்டது. 'இந்த நேரத்தில் எங்கே போவது, எவ்விடத்தில் படுப்பது, இரவுச் சாப்பாட்டுக்கு என்ன செய்வது?'

பசி வயிற்றைக் கிள்ள, பயம் நெஞ்சைப் பிடித்து உலுக்க, போலீஸ் நிலையத்தின் மதில் சுவர் ஓரமாக நின்றிருந்த அவன் சுற்றுமுற்றும் பார்த்தவாறு மெல்லச் சாலையில் இறங்கினான்.

''இன்னா தம்பி, இப்போதான் வர்றியா ?''

சபேசன் சட்டென்று நின்றான். சாலையோரம் இருந்த தூங்குமூஞ்சி மரமொன்றின் பின்னாலிருந்து வெளிப்பட்ட நச்சி அவனை நோக்கித் தயங்கித் தயங்கி வந்தான்.

நச்சியைக் கண்டதுமே சபேசனுக்கு அசாத்திய கோபம் வந்து விட்டது. அந்த இடத்திலேயே அவனை அடித்து நொறுக்கிக் கிடத்திவிட வேண்டும் என்ற ஆத்திரமும் குமுறிப் பொங்கியது. முரட்டுக் காளைபோல் திமிறித் திரும்பி அவனை முறைத்து வெறித்துப் பார்த்தான் அவன்.

''தம்பிக்கு என் மேலே ரொம்பக் கோவமாயிருக்கும்; அடிக்கிறதுன்னா ஓர் அடி அடிச்சுக்கோப்பா !'' என்று குறும்புச் சிரிப்புடன் கூறிக்கொண்டே வந்த நச்சி, தலை குனிந்து முதுகை அவன் பக்கமாகத் திருப்பிக் காட்டினான். பிறகு சட்டென்று நிமிர்ந்து, ''வேண்டாம் ! இப்போ என்னை அடிக்கிறதுக்கு உன் உடம்பிலே பெலம் இருக்காது; ரொம்பவும் களைத்துப் போயிருப்பே. வா, ஓட்டல்லே எதனைச்சும் சாப்பிட்டுட்டு அப்புறமா என்னை என்ன வேணுமானாலும் பண்ணிக்க!'' என்று கூறினான்.

சபேசனின் சீற்றம் பன்மடங்காகியது. ஆயினும் தன்னை வெகுவாக அடக்கிக் கொண்டு, ''அண்ணே, உனக்கு ஒரு கும்பிடு ! தயவுசெய்து என்னை விட்டுவிடு!'' என்று அழுகையும் ஆத்திரமும் தொண்டையை அடைக்கக் கூறி முகத்தை வெடுக்கென வேறு பக்கம் திருப்பிக்கொண்டான்.

''என்னைக் கண்டதுமே நீ இப்படித்தான் சொல்லுவேன்னு நினைச்சேன். பரவாயில்லை, சொல்லு. கோவிச்சுக்க மாட்டேன்'' என்றவாறு அவன் தோளில் கை போட்டான் நச்சி.

சபேசனுக்கு நெஞ்சு எரிந்தது. வெறுப்புடன் தோளைக் குலுக்கி அவன் கையைத் தட்டி விட்டான்.

அப்போதும் சிரித்துக் கொண்ட நச்சி, சுற்றிலும் திரும்பிப் பார்த்து விட்டு, ''சரி; நாம் இங்கேயிருந்து பேச வேண்டாம். எவனாவது போலீஸ்காரன் வந்து தள்ளிக்கிட்டுப் போயிடுவான். அந்தண்டைப் பிளாட்பாரத்துக்கு வா. சொல்றேன்'' என்றபடி சபேசனைப் பலவந்தமாகப் பிடித்து அழைத்துக் கொண்டு மறுபக்க நடைபாதைக்குச் சென்றான். அங்கு சென்றதும் எதையோ மறந்திருந்தவன் போல் சட்டென்று சிகரெட்டொன்றை எடுத்துப் பற்ற வைத்துக் கொண்டு, 'ஸ்டைலா'க இடுப்பின் மேல் கைகளை ஊன்றி ஒருக்களித்துச் சாய்ந்து புருவங்களை உயர்த்தி ''ஆமாம்; இப்போ நீ இன்ன சொல்றே, பிரதர் ?'' என்று அமைதியாகக் கேட்டான்.

சபேசனால் தன் ஆத்திரத்தை அடக்க முடியவில்லை. ''நீதான் சொல்ல வேண்டும்! அந்தப் பொதுக் கூட்டத்தில் பேசியவரின்மீது நானா பா... ரட்சையை வீசியெறிந்தேன்? நீ கண்ணால் பார்த்தாயா? ஒரு பாவமும் அறியாத என்னை ஏன் போலீஸாரிடம் பிடித்துக் கொடுத்தாய்? உன்னை நம்பி உன் பின்னால் சுற்றிக் கொண்டிருக்கும் அநாதையான எனக்கு இப்படித்தானா நீ உதவி செய்வதா?'' — அவனுடைய கோபம் அழுகையாக மாறியது.

''என்ன செய்யறது தம்பி? உன்னைப் பிடிச்சுக் கொடுக்காமலிருந்தா இந்நேரம் என்னையில்லே தள்ளிக்கிட்டுப் போயி உள்ளே போட்டிருப்பாங்க'' என்று அலட்சியமாகக் கூறி முகத்தைச் சுளித்தான் நச்சி.

''உன்னை ஏன் பிடிப்பார்கள்? நீ அந்தக் காரியத்தைச் செய்தாய்?''

''பின்னே, யாருன்னு நினைச்சயாம்...'' அவனை திடுக்குற்ற சபேசன் விழித்தான் திருதிருவெனப் பார்த்து...

''ஆமாம், தம்பி! நான்தான் அந்தக் கயிலாத்து வேலையைச் செஞ்சேன். போலீஸ்காரங்களும் ஜனங்களும் என்னைப் புடிக்க ஓடியாந்தாங்க... போக்கபால்னு அவங்களுக்குப்

நிதானமாகச் சொல்ல ஆரம்பித்தான். சற்று முன்வரை அவன் பேசிய மொழி ஓரளவு நல்ல விதமாகவே இருந்தது மாறி, இப்போது அவனுடைய சீடர்களின் பாஷைக்குத் திரும்பியது :

''ஆமாங்கடா ! இருபத்து நாலு, இருபத்தைஞ்சு வருஷங்களுக்கு முன்னாலே நடந்த கதை இது. அப்போ வார் டைம். ஜெர்மன்காரனும் பிரிட்டிஷ்காரனும் முட்டிக்கிட்டான்களே, அந்த ரெண்டாவது உலக மகாயுத்தம் நடந்த சமயம். ஜெர்மன்காரன், இத்தாலிக்காரன், ஜப்பான்காரன் — இவன்கள் மூணு பேரும் ஒரு கை ; பிரிட்டிஷ்காரன், ரஷ்யாக்காரன், அமெரிக்காக்காரன், பிரெஞ்சுக்காரன்— இவன்கள் நாலு பேரும் ஒரு கை. ரெண்டு சைடிலேயும் சரியான ஜோடியாத்தான் நின்னுன்கள். பார்க்கணுமே சண்டையை ! முதலில் இட்லர் தான் பூந்து விளாசினுன். எல்லாம் 'ஃபௌல்' அடிதான்! நம்ம கிங்காங் மாதிரி 'காச்சா, மூச்சா'ன்னு அடிச்சான். இத்தாலிக்காரன் முஸோலினி, அவனுக்குத் தம்பி அங்கதன் ! அவனும் மாஞவாரியா விளாசினுன். பிரிட்டிஷ்காரன் இன்ன கொக்கா? மத்த மூணு தோஸ்துகளோடும் சேர்ந்து, நம்ம தாராசிங் மாதிரி அங்கங்கே நண்டுப் பிடி போட்டு நரம்புக்கு நரம்பு அடிச்சான். ஆங் பட்டா, இட்லர் வசமா மாட்டிக்கிட்டான்! இது இப்படியாயிருக்க, இந்தண்டைப் பக்கம் ஜப்பான்காரன் இன்ன பண்ணினுன் தெரியுமா ? பர்மா, சிங்கப்பூரு, மலாயா எல்லாத்தையும் கபகபன்னு தட்ட ஆரம்பிச்சான்; ஒண்ணு பின்னுலே ஒண்ணு சுருண்டு சுருண்டு வீய்ந்து போச்சு. அடுத்தபடியா கபால்னு இந்தியா மேலே பாயப் பார்த்தான். இம்பால், டாமு என்கிற ஊர்களையெல்லாம் சுருட்டிக்கிட்டு இன்னும் மேலே ஏறப் பார்த்தான். அப்போ இங்கே பிரிட்டிஷ்காரன் கொடி போட்டுக்கிட்டுக் குந்தியிருந்தானில்லையா? அவன் பெரிய ஆளு. எங்கெங்கோ இருந்த துருப்புக்களையெல்லாம் ஜமா சேர்த்துக் கொண்டாந்து இந்தியாவிலே கொட்டிப்பிட்டு, ஜப்பான்காரனைக் காலை வாரி அடிக்கச் சமயம் பார்த்துக்கிட்டு இருந்தான். அவன்தான் நுழை நரியாச்சே !.... அப்போ பார்க்கணுமே இந்த ஐலாண்டு மைதானத்தை; ஒரே மில்ட்ரி கொட்டாய்ங்கதான்! வெள்ளைக்காரன், பிரஞ்சுக்காரன், அமெரிக்காக்காரன், ஆப்பிரிக்காக்காரன் — இப்படிப் பல தேசத்து சோல்ஜர்களும் இங்கே இறங்கியிருந்தான்கள். இவன்களிலே அமெரிக்காக்காரனும் ஆப்பிரிக்காக்காரனும்தான் ரொம்ப நல்லவன்கள்; குழந்தைங்க மாதிரி! அது கெடக்கட்டும். இப்ப இன்ன சொன்னேன்?.... ஆமாம்; ஒரு நாள் திடீர்னு நம்ம பீச்சு ஸ்டேஷன் இல்லே, அதுக்கு ஓரமா ஒரு குண்டைக் கொண்டாந்து டமால்னு போட்டுப்பிட்டு ஓடிப் போயிட்டான் ஜப்பான்காரன். ஊரே கெதி கலங்கிப் போச்சு. அண்ணைக்கு வெள்ளம் வேறே; பட்டணத்து ஜனங்கள் 'துண்டைக் காணும், துணியைக் காணும்'னு பட்டிக்காடுங்களுக்கு ஓட்டம் எடுத்தாங்க....''

கதை சுவாரசியத்தில் தன்னை மறந்திருந்த ஒரு விடலை, ''அப்படீன்ன, நீகூட ஓடிப்பிட்டியா வாத்தியாரே ?'' என்று சிரித்துக்கொண்டே கேட்டான்.

''ஏண்டா, டேய்! என்னை இன்னன்னுடா நெனைச்சுக்கிட்டே? இந்தச் சிங்கமா ஓடும்? டோஜோ இல்லே, முஸோலினி இல்லே, இட்லரே வந்தாக்கூட ஒரு கை பார்த்துப்பிடலாம்னு இங்கேதாண்டா இருந்தேன்!'' என்று அடித் தொண்டையில் கூறியவாறு தோளைத் தட்டிக்கொண்டு எழுந்தான் தம்பையா.

''கோபிச்சுக்காதே, தம்பையா ! அவன் கிடக்கிறுன் பிஞ்சுப் பயல்; நீ சொல்லு!'' என்று அவனைச் சமாதானப்படுத்தி உட்காரவைத்தான் நாயர்.

கடையிலிருந்து இன்னெருரு சோடா எடுத்துக் குடித்துவிட்டு உற்சாகமாக நிமிர்ந்து பேச ஆரம்பித்தான் தம்பையா : ''இப்படி ஓடிப் போன ஜனங்களெல்லாம் கொஞ்சங் கொஞ்சமாப் பட்டணத்துக்குத் திரும்பி வந்தாங்க. அவங்களோடு சிலர் புதுசாகவும் வந்து சேர்ந்தாங்க. அப்படி வந்தவங்களிலே நம்ம கன்னியம்மாவும் ஒருத்தி. அவளோட அப்பன் வேலாண்டி நாய்க்கன் என் அப்பாருகிட்டே படிச்சவன். அதனுலே எனக்கு அவன் குடும்பத்தைப் பத்தித் தெரியும். எங்க வீட்டுக்கு மூணுவது வீட்டிலேதான் அவனும் குடித்தனம் இருந்தான். கன்னீம்மாவை நீங்க பார்த்திருக்கிறீங்களா? இப்போ கெழவியாகிப்பிட்டாள்; அப்போ பதினறு வயசுப் பொண்ணு. கறுப்பா யிருந்தாலும் பார்க்க ரொம்ப ஷோக்காயிருப்பாள். ஆனல் கஷ்டகாலம் யாரை விடும்?'' என்று அங்கலாய்த்தபடி கூறி நிறுத்தினுன் தம்பையா. (தொடரும்)




திருமுருக
கிருபானந்தவாரியார்

## 17. "பழம் நீ!"

அசுரரின் கதையைக் கேட்குமுன் அமுதக் கதை யொன்றினையும் நாம் கேட்டுவிடுவோம். இந்தக் கதை ஏன் இதுகாறும் வரவில்லை என்று பல அன்பர்கள் ஆவலாக எதிர் பார்த்துக் கொண்டிருப்பார்கள். கந்தசுவாமி குழந்தையாக இருந்தபோதே பழநியாண்டியாகக் கிளம்பியதை அறிந்துள்ள வாசகர்கள் இந்த நிகழ்ச்சி ஏன் விட்டுப் போயிற்று என்று வியந்திருக்கக் கூடும்.

பழநியாண்டவர் வரலாறு கந்த புராண நூலில் இல்லை. எனினும் பரம தத்துவங்கள் பல பொதிந்த சரிதம் அது. எனவே தெய்வத் தமிழ் முழுவதும் ஐயன் பாதம் பதித்துத் தென் கடற்கரையில் சாந்தனை எழுந்தருளிய பின்னர் அந்த திக் விஜயத்தின் சிரோமணியான சரிதையை நாம் ஆர அமர அமைதியாய் அநுபவிக்கலாம் என்றே தள்ளி வைத்தோம். எல்லா உணவு வகைகளுக்கும் முன்னால் தயாரிக்கப்படும் இனிப்புப் பணியாரத்தைப் பருப்பன்னமும் சாற்றமுதன்னமும் படைத்த பின்னரே விருந்திடுவது நம் பண்பல்லவா? அதே போல் ஆதியிலேயே நடைபெற்ற இந்தப் பாலப் பருவ லீலையை இடைநிலையில் வாசகர்களுக்குப் படைத்து மகிழ்கிறோம்.

ஆயிரம் நரம்புகளை உடைய மகதியாழை மீட்டியபடி திருக் கைலாயம் வந்த நாரத முனிவர், முன்னொரு காலத்தில் தமக்கு அரிதிற் கிடைத்த தேவ மாதுளங் கனியைச் சிவபெருமான் திருவடியில் வைத்து வணங்கினர். அன்போடு அளிக்கப்படும் தும்பை, கொன்றை மலர்களையும் அருநிதியாகக் கருதி ஏற்று அருள்புரியும் சிவபெருமான் அந்தக் கனியை ஏற்று நாரதருக்குக் கிருபை புரிந்தார்.

விநாயகக் கடவுளும் குமாரக் கடவுளும் தந்தையை வணங்கிக் கனியைத் தருமாறு கோரினர். கனியை மைந்தருக்கு அளிக்க எண்ணிய சிவபெருமான், அதே சமயத்தில் இதன் மூலம் பேருண்மைகள் சிலவற்றை உலகுக்கு விளக்கவும் திருஉளம் கொண்டார்.

'பிருதிவி முதல் நாதம் ஈறுன அளவிலா உலகங்களை யெல்லாம் ஒரு நொடியில் சுற்றி வருகிறவன் எவனே, அவனே தேவர் யாவரினும் பெரியோன்' என்று ஒரு காலத்தில் தேவர் முதல் பதினெண் கணத்தவர்களும் கூடிய சபையில் செய்யப்பட்ட ஒரு முடிவை இப்போது மாதேவன் நினைவு கொண்டார். சர்வ லோகங்களையும் ஒரு நொடிப் பொழுதில் வலம் வரவும், எல்லாவற்றையும் அறியவும், படைக்கவும், காக்கவும், அழிக்கவும், மறைக்கவும், அருளவும் வல்லவர் முழுமுதற் கடவுளாம் முருகக் கடவுள் ஒருவரே என்று தேவர் தெளிந்துய்ய இதுவே தருணம் எனக் கருதிப் பரமேசுவரன் ஓர் உபாயம் செய்தார்.

விநாயகரையும் குமாரக் கடவுளையும் நோக்கி, ''ஒரே கனியை உங்கள் இருவருக்கும் எவ்வாறு கொடுக்க இயலும்? உங்களில் அகில உலகத்தையும் ஒரு கணத்தில் யார் வலம் வருகிறீர்களோ அவர்களுக்கே இக் கனி'' என்று சிவபெருமான் கூறினர்.

சிவபெருமான் சொல்லி முடிப்பதற்கு முன்பே சர்வ லோக நாயகராகிய சரவணேற்பவர் மரகத மயில்மீதூர்ந்து விண்வில் உலகை வலம் வரப் புறப்பட்டு விட்டார். வாயு வேகம், மனோ வேகம் என்று சொல்லப் பெற்ற வேகங்கள் அவர் சென்ற வேகத்துக்கு ஓர் அணுத் துணையேனும் ஆகா. அதலம், விதலம், சுதலம், மகாதலம், தராதலம், இரசாதலம், பாதாலம் என்னும் ஏழுலகங்களையும் அவற்றுக்கு மேலுள்ள எட்டிலக்கம் யோசனை தூரமுள்ள கனிட்டம் என்னும் எட்டாவது பாதலத்தையும் வலம் வந்தார். பூமிக்கணுள்ள சப்த த்வீபம், கடல்கள், மலைகள் முதலியவைகளையும், மேகம், வாயு, சூரிய, சந்திர நட்சத்திர மண்டலங்களையும் துருவ நட்சத்திரமுள்ள புவர் லோகம், இந்திரன் வாழும் சுவர் லோகம், பிதிரர் வாழும் தவலோகம், மார்க்கண்டேயர் முதலான முனிவர் வாழும் சனலோகம், சனகாதியர் தவம் புரியும் மஹர் லோகம், சதுர்முகன் வாழும் சத்திய லோகம், நாராயணர் வாழும் வைகுண்ட லோகம் முதலிய உலகங்களையும் வலம் வந்தார். இவ்வாறாக பிரமாண்டங்களையும் பிருதிவி அண்டத்தில் உள்ள ஆயிரம் கோ

அண்டங்களையும், அப்பு அண்டம், தேயு அண்டம், வாயு அண்டம், ஆகாய அண்டம், தன்மாத்திராண்டம் முதலிய அண்டங்களையும் வலம் வந்தார். பின் புவனம் முதலாக நாதம் ஈருக உள்ள உலகங்களான பஞ்ச கலைகளுக்கும் உட்பட்ட மந்திரம், பதம், வன்னம், தத்துவம், புவனம் என்னும் சொற் பிரபஞ்சங்களை யெல்லாம் ஒரு நொடிக்குள் வலம் வந்தார். இவ்வாறு செயற்கரிய செய்த செல்வக்குமரர் சிவபெருமான் விதித்த காலவரைக்குள் வெற்றி மகிழ்ச்சியுடன் திருக்கயிலைக்குத் திரும்பினர்.

யாவராயினு மிக்கனி
விழைந்துளோர் கணத்திற்
பூவலங்கொடு வருதிரே
லவர்க்கெனப் புகலத்
தூவியம்பசுந் தோகைமா
மஞ்ஞைமேற் ருேன்றித்
தேவர்சேனைகா வலன்கிரி
யிழிந்துபார் சேர்ந்தான்

—பழநித் தல புராணம்

சேகமுழுது முன்புதும்பி
முகவனெடு தந்தைமுன்பு
திகிரிவலம் வந்த செம்பொன் மயில்வீரா

— திருப்புகழ்





உலகங்கள் முழுவதையும் எவ்வாறு ஒரு நொடிப் பொழுதில் சுற்றி வர இயலும் என்ற கேள்வி எழலாம். எங்கும் வியாபியாய், சர்வ ஜீவ சாட்சியாய், சர்வ லோகங்களேயும் தமக்கு அங்கமாகக் கொண்ட அத்துவாமூர்த்தியாகிய நம் அறுமுகப் பெருமானுர்க்கு இது ஓர் அருஞ் செயலல்ல.

பதி ஒருவர்; அவர் அசைபவரல்லர். அவ்வாறு ஸ்திரமாக இருந்தும் விரைவாகச் செல்லும் மனம் முதலிய கருவிகளேயும் கடந்து செல்கிருர். காற்று அவருடனிருந்தே உயிர்களுக்கு உடலின் அசைவைக் கொடுக்கிறது. இதை ஈசோபநிஷத மந்திரம் கூறுகிறது:

**அநேஜதேகம் மநஸோ ஜவீயோ**
**நைநத்தேவா ஆப்நுவன் பூர்வமர்ஷத்.**

**தத்தாவதோ (அ)ந்யாநத்யேதி திஷ்டத்**
**தஸ்மிந்நபோ மாதரிச்வா ததாதி**

எவ்விடமும் முக்குகளும், எவ்விடமும் கண்களும், எவ்விடமும் செவிகளும், எவ்விடமும் கைகளும், எவ்விடமும் திருவடிகளும், எவ்விடமும் வடிவமாகப் பெற்றவர் சுவாமி.

**எங்கணும் பணிவதனங்கள் எங்கணும் விழிகள்**
**எங்கணும் திருக்கேள்விகள் எங்கணும் கரங்கள்**
**எங்கணும் திருக்கழலடி எங்கணும் வடிவம்**
**எங்கணும் செறிந்தருள் செயும் அறுமுகத் திறைக்கே**

இத்தகைய அகண்ட வியாபக சச்சிதானந்தப் பரம்பொருள் தாம் என்பதை விளக்கு முகமாகவே குமாரகுரு உலகை ஒரு நொடியில் வலம் வந்தார்.

சூரியன் வானிலே நிற்கி றான். அதேபோதில் அவனது கிரணங்கள் உலகம் முழுவதை யும் அளாவுகின்றன. ஞான சூரியன் கந்தன். அவரிலிருந்து எழும் கருணை ஒளி உலகம் முழுவதையும் தழுவ இமைப் பொழுது கூடத் தேவையில் லேயே! அவர் கயிலேயிலேயே இருப்பினும் அவரது கருணை கடாட்சம் சகல புவனங்களை யும் நொடிப் பொழுதில் சுற்றி வந்து விடுமே!

சண்முகப் பிரபு இவ்வாறு அகில உலகையும் வலம் வந் கயிலே சேருமுன், கணபதி ம ஞேர் அருட் செயல் புரிந் விட்டார்! சிவத்தை விட் உலகம் அன்னியமா யில்ல சர்வ லோகங்களும் அவ லேயே அடக்கம் என்ற உண வில் விநாயகப் பெருமா தந்தையை வலம் வந்தா எல்லாப் பிள்ளைகளுக்கு தங்கள் தந்தை உலகத்து ஒப்பானவர். பரமேசுவரன் விநாயகர் விஷயத்தில் இ மும்மடங்கு உண்மையல்லவ தம்மை வலம் வந்து வணங் விநாயகச் செல்வனிடம் பெருமான் மனம் களித் கனியை அளித்தார்.

இதன் பின்னரே உல சுற்றி வந்த இளைய புதல் பழத்தைத் தமையன் பெ தைக் கண்டார். தி மூர்த்தியாகிய திவ்விய யாசத் திருக்கோலத்தில் பஞ்சத்துக்குத் தரிசனம் வேண்டும் என்று திரு கொண்டிருந்த கந்தவேள் தருணத்தைப் பயன்படு கொண்டார்.

தமக்குக் கனி கிடை காததால் சினம் கொண் போலப் பாவித்து உ துறவியாகப் புறப்பட்ட ஒரு கனியின் மீது வி முள்ளவர் தமது திவ்விய ணங்களேயும், திருக் கை வாசத்தையும், அன்பின் உறைவிடமான பெருமானேயும் அம்பா கணபதியையும் அவ எளிதில் நீத்துவிட முடி அவ்வளவும் ஆண்ட திருவிளையாடல். வள்ளி

சேனபதியாகக் கலியாண வடிவில் துலங்கப் போகும் தாமே துறவி நாயகனுகவும் இலங்க வேண்டும் என்பதன் பொருட்டே ஆண்டவன் ஆண்டியாகப் புறப்பட்டார்.

தமிழகத்தில் தமிழ் வளர்ந்த மதுரையம்பதிக்கு அருகே ஒரு குன்றின்மீது எழுந்தருளினுர் கந்தப் பெருமான். உமையன்னை சகிதமாகப் பரமேசுவரன் அங்குப் போந்தார். ''பழமா, உனக்கா வேண்டும்? ஆனந்தச் சாறு நிறைந்த அமுதப் பழம் நீயே அல்லவா? தத்துவச் சாறு நிறைந்த தவப் பழம் நீயே அல்லவா? அநுபவச் சாறு நிறைந்த ஞானப் பழம் நீயே அல்லவா? அநுபூதி வேண்டி அருந்தவம் இயற்றுவோருடைய சாதனைகளின் பலனுக ஞானப் பழமாக விளங்கும் உன்னை யன்றிப் பழமும் உண்டோ? பழம் நீ'' என்ருர்.

தட்சிணுமூர்த்தியாக இருந்து சிவபெருமானும், பார்வத ராஜபுத்திரியாக இருந்து பரமேசுவரியும் புரிந்த அற்புதத் தவங்களின் பயனுகப் பிறந்த பழம் அல்லவா கந்தவேள்? அவரைச் சிவனுரே 'பழம் நீ' என்று வாய் குளிர அழைத்தார்.

குமாரசுவாமி தங்கிய குன்றமும் பழம்நீ என்றே திருப் பெயர் பெற்றது. அதுவே தரும, அர்த்த, காம, மோட்ச பலன்களை அடியார்க்கு அளிக்கும் பழநி மலை.

இக்கனி வரலாற்றில் நுண் பொருட்கள் உள்ளன. 'ஒரு கனியைப் புதல்வர் இருவரும் விரும்பினுல் பகிர்ந்து தரலாகாதோ? அகில உலகத்தையும் ஒரு கணத்தில் ஆக்கவும், அளிக்கவும், நீக்கவும் ஆற்றல் படைத்த இறைவர் மற்ருெரு கனியை உண்டாக்கித் தரலாகாதோ? காரைக்கால் அம்மையாருக்கு ஒன்றுக்கு இரண்டாகக் கனிகளை வழங்கப்போகும் வள்ளலன்ருே அவர்? ''தம்பியே கனி பெறுக!'' என்று தமையனுரும், ''தமையனே கனி பெறுக!'' என்று தம்பியாரும் கூறி ஒன்றுபட்டிருக்கலாகாதோ? அன்றியும் ஒரு கனி காரணமாக அகில உலகங்களையும் ஒரு நொடியில் வலம் வருவது முயற்சிக்குத் தக்க ஊதியமாகுமா? சகல வல்லபமும் உடைய வல்லப கணபதிக்கு உலகை வலம் வரும் ஆற்றல் இல்லையா? அல்லது சிவத்தை வலம் வருவதே உலகை வலம் வருவதாகும் என்பதை அறிவின் வடிவாகிய அறுமுகவேள் அறிய மாட்டாரா?' இப்படிப் பல ஐயங்கள் எழலாம். இவ்வரலாற்றின் நுண் பொருளைக் காண்போம்.



''ஐயய்யோ! மரங்கொத்தி! இரு! இரு! நான் தூர ஓடிப்போயிடறேன்!''

சிவம் என்ற ஒன்றினுள் எல்லாவற்றையும் காணும் தன்மை ஒன்று.

எல்லாவற்றிலும் சிவத்தைக் காணும் தன்மை மற்ருென்று.

'அங்கிங்கெனுதபடி எங்கும் பிரகாசமாக' அணுவுக்குள் அணுவாக ஆண்டவன் வியாபித்திருக்கிருன். எல்லாப் பொருள்களிலும் தங்கி யிருக்கிருன்.

அவனே, 'அகிலாண்ட கோடியெல்லாம் தங்கும்படிக்கு' அதாவது எல்லாப் பொருள்களும் தன்னுள் தங்குமாறும் விளங்குகிருன்.

உலகப் பொருட்கள் யாவற்றிலும் தான் **தங்கி** யிருக்கிருன்; உலகப் பொருட்கள் யாவும் தன்னிடம் **தங்க**வும் இருக்கிருன்.

**ஸர்வ பூதஸ்தம் ஆத்மானம்**
**ஸர்வபூதானி சாத்மனி।**
**ஈக்ஷதே யோகயுக்தாத்மா**
**ஸர்வத்ர ஸமதர்சன:॥**
**யோ மாம் பச்யதி ஸர்வத்ர**
**ஸர்வம் ச மயி பச்யதி।**
**தஸ்யாஹம் ந ப்ரணச்யாமி**
**ஸ ச மே ந ப்ரணச்யதி॥**

'யோகியானவன் எல்லாப் பொருளிலும் ஆன்மா உறைவதாகவும் எல்லாப் பொருட்களும் ஆன்மாவிடத்தில்

உறைவதாகவும் காண்கிறான். எவன் என்னை எல்லாவற்றிலும் பார்க்கிறானோ எல்லாவற்றையும் என்னில் பார்க்கிறானோ, அவனுக்கு நான் காணாமற் போவதில்லை; அவனும் எனக்குக் காணாமற்போவதில்லை.' என்பதாக எல்லாவற்றையும் அந்தர்யாமியாகக் காணும் கண்ணனும் கீதையில் மொழிகிறார்.

இவ்விரு நிலைகளில், எல்லாப் பொருட்களும் பரமேசுவரனில் உறையும் நிலையை உணர்த்தும் பொருட்டு விநாயகப் பெருமான் தந்தையை வலம் வந்தார். ஈசனை வலம் வந்தது அகில புவனங்களையும் வலம் வந்ததற்குச் சமானமாயிற்று. எல்லாப் பொருட்களிலும் பரமேசுவரன் உறையும் நிலையை உணர்த்தும் பொருட்டு ஆறுமுக ஸ்வாமி அகிலாண்டங்களை வலம் வந்தார்.

வலம் வருதல் எதைக் குறிக்கும்? பக்தியை. உலக மாந்தர்கள் ஆண்டவனை வலம் வருவோம். அப்படியிருக்க ஆறுமுக ஸ்வாமி உயிரினங்கள் அடங்கிய உலகை ஏன் வலம் வந்தார்? உயிரினங்களிலெல்லாம் பரம்பொருள் உறைகிறது என்பதை உணர்த்தவே இவ்வாறு எளிமையும், விநயமும், அடக்கமும் கொண்டு உலகை வலம் வந்தார் அரும்பொருளாகிய அறுமுக சுவாமி.

ஒரே பரம்பொருள், சிவபெருமான் ஆனை முகன் ஆறுமுகன் என்ற வடிவங்களாக நின்று பரம தத்துவத்தை நமக்கு உணர்த்தவே கனியை ஒரு வியாஜ்யமாக வைத்துக் கொண்டது. கனி வரலாறு குறித்த எல்லாச் சங்கைகளுக்கும் இதுவே விடை.

அரும்பு — சரியை; மலர் — கிரியை; காய் — யோகம்; கனி — ஞானம். சிவத்தின்கண் இருந்த கனியே ஞானம். உலகுக்கு ஞானத்தில் விருப்பம் ஏற்படுத்த வேண்டுமென்ற விநாயகர் வேலவர் இருவரும் ஒரே கனியை விரும்பி யருளினார்கள். ஞானத்தைச் சிதைக்க முடியாதென்பதைத் தெளிவாக்கவே அக் கனியை அரனார் சிதைத்துத் தரா திருந்தார். ஞானத்துக்கு ஈடாக இன்னொன்று இல்லாததால்தான் வேறு கனியை அவர் படைத்துத் தரவில்லை. சிவத்துக்கு அந்நியமாக வேறு இன்மையைத் தெரிவிக்க விநாயகர் வி லனை வலம் வந்து ஞானமாகிய கனி யைப் பெற்றார். ''எல்லாம் அவனே'' என்பதைத் தெரிவிக்க வடிவேற் பரமன் உலகை வலம் வந்து தாமே ஞானக் கனியாக நின்றனர்; ஞானமே அவர்; ஞான பண்டிதன்; ஞானந்தான் உ வாகிய நாயகன்.

ஞானமாகிய கந்தக் கனியை இன்று தம் கையில் மாதுளம் பழ உருவி தாங்குகிறார் ஞானகரனாகிய விநாயகர். விநாயகர் கையில் மோதகம் அளிப்பது பிற்கால வழக்கு. பூரணப் பொருளாகி அவர், மக்கள் செயற்கையாக வெல்ல பூரணத்தை வைத்து மோதகம் செ தளிக்கு முன், ஆண்டவன் படைப்பி இயற்கையாகவே முத்துக்களை உள்ளே படைத்த மோதகமாகிய மாதுளங் கனி யைத்தான் ஏந்தியிருக்கிறார். விநாய தியான சுலோகத்திலும், பண்டை சிற்பங்களிலும் இந்த உண்மையை காணலாம். விநாயகர் கரத்தில் உள் அந்த மாதுளங் கனிதான் மாமது செல்வமாகிய முருக நாயகன். உல யெல்லாம் சுற்றி வரும் பராக்கிரம காரத் தம்பியா யிருப்பினும் அ ணன் 'கைக்கு அடங்கிய பிள்ளை'யா இருக்க வேண்டும் என்ற உண்மை விளக்கு முகமாக வாஸ்தவமாக அண்ணன் கையில் கனியாக அட யிருக்கிறார் கந்தவேள்.

(தொடரு



தஞ்சாவூர் டாக்டர் என். ஆர். சுப்பிரமணியன் அவர்களின் குமாரத்தி சௌ. காஞ்சனுவுக்கும், ராவ்சாகிப் வி. துரைசாமி ஐயர் அவர்களின் புதல்வன் சிரஞ்சீவி டி. சங்கர் நாராயணனுக்கும் 7-2-65 அன்று தஞ்சாவூரில் திருமணம் மிகச் சிறப்பாக நடைபெற்றது. மணமக்களுக்கு ஏராளமான வாழ்த்துச் செய்திகளும், பரிசுப் பொருள்களும் வந்து குவிந்தன. மாலையில் நடந்த வரவேற்பில் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களின் இன்னிசைக் கச்சேரிக்குத் திரளான ரஸிகப் பெருமக்கள் விஜயம் செய்து ரஸித்தனர்.




## 18. சூராதியவுணர் தோற்றம்

கந்தபெருமானுக்கு வியாழபகவான் சூரன் முதலியோர் வரலாற்றைக் கூறத் தொடங்கிய கட்டத்துக்குத் திரும்புவோம்:

இது கந்தபுராணத்தின் மகேந்திர காண்டத்தைச் சேரும்.

பிறவிப் பெருங்கடலைத் தாண்டுமாறு அடியாருக்கு அருள்புரிவதற்காக முருகப் பெருமான் ''கயிலை மலையனைய செந்தில்'' என்று போற்றப்பட்ட திருச்செந்தூரில் கடற்கரையில் வீற்றிருந்தார்.

நவக்கிரகங்களிலே மேலாக மதிக்கப் படுபவர் வியாழ பகவான். அவரது பார்வை இரண்டாமிடத்தில் இருந்தால் வாக்கு செல்வாக்குடையதாயிருக்கும்; ஐந்தாமிடத்தில் இருந்தால் நல்ல மனம் அமையும்; ஏழாமிடத்தில் இருந்தால் மனைவி புனிதவதியாய் இருப்பாள். இவ்வளவு அருமை பெருமை மிக்க வியாழ பகவான் அசுரர்களின் கதையைச் சொல்வதற்கு முன்பு ஸ்தோத்திரம் செய்து கொள்கிறார்:

ஊரி லான்குணங் குறியிலான்
செயலிலான் உரைக்கும்
பேரி லான்ஒரு முன்னிலான்
பின்னிலான் பிறிதோர்
சாரி லான்வரல் போக்கிலான்
மேலி லான் தனக்கு
நேரி லான்உயிர்க் கடவுளாய்
என்னுளே நின்றான்

அறுபத்தாறு கோடி அசுரர்களுக்கு அரசனாகிய அசுரேந்திரன் மங்கலகேசி என்னும் அரக்கியை மணந்து சுரசை என்னும் மகளைப் பெற்றான். அவள் வளர்ந்தபின் அரச குருவாகிய சுக்கிர

சாரியர் மாயையின் கல்விகள் அனைத்தையும் அவளுக்குக் கற்பித்தார். அந்தக் கல்வியில் அவள் கொண்ட திறமை காரணமாக அவளை மாயை என்றே அழைத்தனர்.

அசுரர்களின் சிறுமையையும், இந்திராதி தேவர்களின் பெருமையையும், தேவர்கள் இன்பம் இழந்து அசுரர்களால் துன்புறும்படி திருநந்தி தேவர் சபித்ததையும் எண்ணிய சுக்கிரன் மாயையை நோக்கி, ''மாயையே! திருமாலாலும் இந்திரனாலும் முனிவர்களாலும் கணக்கற்ற அசுரர்கள் அழிந்தார்கள். உன் தந்தையும் தன் வலி இழந்து ஒடுங்கினான். அசுர குலம் இனி உன்னால் வளர வேண்டும். நீ திருமகளும் நாணும் வனப்புடன்



சென்று காசிப முனிவரை மயக்கிப் புத்திரர்களைப் பெற்று, குல விருத்தி செய்து அசுரர் பலம் ஓங்கச் செய்வாயாக'' என்று பணித்தார்.

மாயை அதற்கு இசைந்து சுக்கிராசாரியரிடம் விடைபெற்று மேருகிரிக்கு வடக்கே தவம் செய்யும் வனத்தை வந்தடைந்தாள். அங்கு மாயை பூஞ்சோலைகளையும், மணல் மேடைகளையும், தாமரை ஓடைகளையும், கொடிப் பந்தர்களையும், மலர்ப் படுக்கைகளையும் உண்டாக்கினாள். காசிப முனிவர் அவற்றைக் கண்டு, 'தேவலோகம் இங்கு இறங்கி வந்ததோ?. அல்லது அளகாபுரி இங்கு இறங்கி வந்ததோ?' என்று வியந்து, இவற்றை உண்டாக்கியவர் யாரோ என்று ஐயுற்றார். அப்போது மாயை ஓர் இரத்தினக் குன்றின் மேல் வான வில் போல் தோன்றினாள். அவளது பேரெழிலைக் கண்ட காசிப முனிவர் மையல் கொண்டார். அவள் அருகே சென்று, அவள் யாரென வினவினர்.

''முனிவரே! நீர் என்னிடம் தனித்து வந்து என் வரலாற்றை வினவி நிற்பது தகுதியன்று; தவம் செய்யப் போம்'' என்றாள் மாயை மாயாஜால நடிப்புடன்.

''மங்கையே! உன்னை அடைந்த பின் வேறெதற்குத் தவம் புரிய வேண்டும்?'' என்றார் காசிபர்.

காமவேகத்துக்கு ஆட்பட்டவர்கள் ஒரேயடியாக மனமிடிந்து விடாமல் ஆறுதல் செய்து கொண்டு தம்மைத் திருத்திக் கொள்ளவே இது போன்ற வரலாறுகள் உள்ளன. மகா முனிவர்களும் மதி மயங்கினர் என்பது நாம் ஒரேயடியாக மனம் ஒடிந்து விடாமல்

காக்கிறது. ஆனல் முனிவர்களின் வாழ்வில் இது போன்ற வேகம், தோன்றியது போலவே மறைந்தும் விடும். காசிபரின் காம வேகத்தை நாம் பரிகசிப்பதற்குத் தகுதியற்றவர். அவர் தவமும் விரதமும் இருந்தது போல் கோடியில் ஒரு பங்கு நம்மால் இருக்க இயலுமா? முனிவர்களின் ஞானத்தையும் இந்திரிய நிக்கிரகத்தையும் போற்றி அவர்கள் தந்துள்ள மந்திரங்களைக் காப்பதே நமக்கு அழகே யன்றி, எப்போதேனும் அவர்களிடம் காணக்கூடிய நமக்குப் புரியாத செயல்களைக் கொண்டு இழுக்கு கற்பிக்கலாகாது.

''தவமுனிவரே! நான் உத்தர பூமியில் உள்ளவள். மேரு மலைக்குத் தெற்கே உள்ள கங்கையில் நீராடச் செல்லுகிறேன்; நீர் இங்கேயே நில்லும்'' என்ருள் மாயை.

''பெண்ணே! கங்கை முதலிய நதிகள் ஏழையும், சிவ் விஷ்ணு ஸ்தலங்கள் யாவற்றையும், பொன்னுலகம் முதலிய தேவர் உலகங்களையும், ஆங்காங்குள்ள தேவர்களையும், இமைப்பொழுதில் இங்கே வரவழைப்பேன். நீ காண விரும்பினல் மும்மூர்த்திகளையும், மூவுலகிலுள்ளோரையும் இங்கு வரவழைப்பேன்; தேவாமிர்தம் கேட்டாலும் வரவழைப்பேன்; அரம்பையர் முதலிய மகளிர் வந்து உனக்கு ஏவல் செய்யச் செய்வேன்; என் மையலைத் தணிப்பாய்'' என்ருர் காசிபர்.

''பெரியவரே! நான் தனித்திருப்பதால்தானே இவ்வாறெல்லாம் பேசினீர்கள்? இனி இவ்வாறு பேசுவதை விட்டு, இங்கேயே நில்லும்'' என்று நடிப்பாகக் கூறி கங்கையை நோக்கிச் செல்வதுபோல் சென்று மறைந்தாள் மாயை. காசிபர் அவளை எவ்விடத்துத் தேடியும் காணமல் மிகவும் துன்புற்றுப் புலம்பினர்.

கதிரவன் மேற்கடலில் மூழ்கினன். காசிபர் காம நோயால் மிகவும் கலங்கினர். அவர் நோக்கிய இடமெல்லாம் மாயையின் தோற்றத்தையே கண்டார். ஆம், உள் பார்வைக்கு அன்றிக் கண் பார்வைக்கு அகப்படுவன எல்லாமே மாயைதானே?

கீழ்த் திசையில் சந்திரன் தோன்றியதும் தாமரை குவிந்தது; அல்லி மலர்ந்தது. காசிப முனிவர் மாயையை நினைந்து துன்புற்ருர்.

மீண்டும் அவருக்கு முன்னே தோன்றினள் மாயை. கருத்தழிந்து நின்ற காசிபர், மாயையைக் கண்டு மகிழ்ந்தார். அவள் முன்னே சென்று, ''என்னை ஆட்கொள்'' என்று வேண்டி நின்ருர்.

''மாதவரே! என்னுடைய பேரழகுக்கேற்ற வடிவத்தை இப்போது எடுத்துக் கொள்ளுங்கள். பின்னர் நான் எடுக்கும் ஒவ்வொரு வடிவத்துக்கும் ஏற்ற வடிவத்தை நீர் எடுத்துக் கொண்டால் நான் உம்மைக் கூடுவேன்'' என்ருள் மாயை.

காசிப முனிவர் அழகு மிகுந்த ஒரு தேவ வடிவம் கொண்டார். அந்த வடிவத்தைக் கண்டு மயங்கிய மாயை, புன்னகை பூத்து அவருடைய கரம் பற்றினள். அங்குள்ள மணி மண்டபத்தினுள் புகுந்து, தன் ஆணையால் உண்டாக்கிய அழகிய சயனத்தின் மீது அமர்ந்து கொண்டாள். காசிபர் அவளை அடைந்தார். சூரியன் அஸ்தமித்த முதல் யாமத்தில் சூரபன்மன் தோன்றினன். மாயை-காசிபர் ஆகியோரின் வேர்வையில் முப்பதினுயிரம் வெள்ளம் அசுரர்கள் தோன்றினர்கள். அவர்களை அவ்விடத்திலேயே விட்டுவிட்டு மாயை காசிப முனிவரோடு வேறிடம் சென்ருள். இரண்டாம் யாமத்தில் இருவரும் சிங்க வடிவம் கொண்டனர். அப்பொழுது ஆயிரம் சிங்க முகங்களும், இரண்டாயிரம் கரங்களுமுடைய சிங்கமுகாசுரன் பிறந்தான். சிம்ம தம்பதியின் வேர்வையினின்றும் சிங்கமுகத்துடன் நாற்பதினுயிரம் வெள்ளம் அசுரர்கள் தோன்றினர்கள். பின்னர், யானை, ஆடு, யாளி, புலி, குதிரை, மான், பசு, கரடி, பன்றி, கூளி முதலிய வடிவங்களை விடியற்காலை வரை எடுத்தார்கள்; பல்லாயிரக் கணக்கான அசுரர்களைப் பெற்ருர்கள். அப்போது தீக்குறிகள் தோன்றின.

இரவு நீங்கியது; கதிரவன் உதித்தான். மாயையும், காசிப முனிவரும் முன்னை வடிவம் கொண்டு சூரன் முதலிய மக்களையும், இரண்டு இலட்சம் அசுரர்களையும் கண்டு மகிழ்ந்தனர்.

நாம் எதை எதையோ அறம் என்று கருதி, கருதியதை அருளுமாறு இறைவனிடம் வேண்டுகிருேம். அறத்திலெல்லாம் தலையாய அறம் சற்புத்திரனைப் பெறுவதாகும். குந்தி பிள்ளை பெற்றதைக் கண்டு காந்தாரி பொருமைப் பட்டதால் அவளுடைய பிள்ளைகள் பொருமை மிக்கவர்களாக இருந்தார்கள்.

> அற்றனள் துயரம் என்றே
> அருந்தவப் பயனுல் குந்தி
> பெற்றனள் மைந்தன்! அந்தப்
> பேருரை கேட்ட அன்றே
> உற்றனள் பொருமை....

என்று கூறுகிருர் வில்லிப்புத்தூரார். ''கொச்சை மக்களைப் பெறுதலின்

அக்குடி எச்சம் அற்று ஏமாந்து இருக்கை நன்றே'' என்று கூறினர் பெரியோர்.

இவ்வாறிருக்க வேதங்களின் உருவான காசிப முனிவருக்கு அசுரர்கள் பிறந்தனர் என்பது விந்தையாகத் தானே உள்ளது! காமம் என்ற பொல்லாத வியாதி அவரைப் பற்றியதன் பலனுகவே இவ்வாறு நேர்ந்தது. மாயையிடம் தம்மால் எவ்வளவோ அற்புதங்களைச் சாதிக்க முடியும் என அவர் கூறினர். ஆனாலும் காமத்தின் தீய பலனை அவராலும் மாற்ற முடியவில்லை!

சூரபன்மனும், சிங்கமுகனும், தாரகனும் தாய் தந்தையர்களைத் தொழுது, ''நாங்கள் செய்வது யாது? சொல்லுங்கள்'' என்று கேட்டார்கள்.

காசிப முனிவர், சூரபன்மன் முதலான தமது பிள்ளைகளுக்கு ஞானோபதேசம் செய்தார்.

மனம் ஓடுகிறபடி ஓடட்டும் என்று முதலில் விட்டுப் பிடித்ததால் அசுரரைப் பெற்றார். பிறகு தமது இயல்பான ஞானத்தில் நின்று புத்திரர்களுக்கும் ஞானம் புகட்ட முயன்றார்.

''பெரியோர்கள் ஆராய வேண்டிய பொருள்கள் மூன்று. அவை பதி, பசு, பாசம் எனப்படும். ஐந்தொழிற்கும் அதிபராகிய சிவபெருமானே பதியெனப்படுவர். பிறப்பு, இறப்பு என்னும் வலையுட்பட்டு உழலும் உயிர்களாகிய நாம் பசுக்கள். ஆணவம், மாயை, கன்மம் என்னும் மும்மலங்களே பாசம். இவ்வாறு வேதம் கூறுகிறது. பாசமாகிய இத்தளையிலிருந்து உயிர்கள் விடுபட்டுப் பதியைச் சென்றடைவதே கடமையாகும்.

**''சான்றவர் ஆய்ந்திடத்**
**தக்கவாம் பொருள்**
**மூன்றுள மறையெலாம்**
**மொழிய நின்றன**
**ஆன்றதோர் தொல்பதி**
**ஆருயிர்த் தொகை**
**வான்றிகழ் தளையென**
**வகுப்பர் அன்னவே''**

''பாசத்தாற் கட்டுண்ட பசுக்களுக்கு உறுதியைத் தருவது அறமேயாகும். கல்வி, செல்வம், வீரம் முதலியவை நிலையற்றவை. அறம் செய்தால் அன்பும் அருளும் உண்டாகும்; அவை உண்டாகத் தவம் உண்டாகும். தவம் உண்டாயின் உயிர், சிவத்தைச் சார்ந்து பிறவித் துன்பம் நீங்கி இன்புறும். தவத்திற் சிறந்த பொருள் மூவுலகங்களிலும் இல்லை. தவம்செய்தே பிரம்ம விஷ்ணுக்கள் மேற்பதவியடைந்தனர். தவம் செய்த மார்க்கண்டேயர் மறலியை வென்றார்.''



என்று கூறி மார்க்கண்டேயர் சரித்தத்தை மொழிந்தார் காசிபர்.

மிருகண்டு முனிவர் தவம் செய்து பெற்ற புதல்வனே மார்க்கண்டேயன். நீண்ட ஆயுள் கொண்ட கொடிய நூறு புதல்வரை வேண்டாம் என்று மறுத்து விட்டு, பதினாறு வயதையே கொண்ட சற்புத்திரன் ஒருவன் போதும் என்று வரம் பெற்றார் மிருகண்டு. (இந்தக் கதையை இரண்டு லட்சம் அசுரரைப் பிறப்பித்த காசிபரே கூறினர் என்பதிலிருந்து முனிவரின் நடுநிலைமை தெரிகிறதல்லவா?) அந்த சற்புத்திரரே மார்க்கண்டேயன். இளமை முதலே சிவபெருமானிடம் குன்றாத அன்பு கொண்டு பூசித்துப் பரம பக்தனானன் மார்க்கண்டேயன். அவன் ஆயுள் முடிந்ததும் யமதூதர் அவனைப் பற்ற வந்தார்கள். தவத்தின் ஒளியாகிச் சுடர் விசிய மார்க்கண்டேயனை நெருங்க முடியாமல் யம தூதர்கள் திரும்பினர். யமனுடைய அமைச்சனாகிய காலனே நேரில் வந்து, மார்க்கண்டேயனைப் பற்றப் பயந்து, தன்னுடன் வந்து விடும்படி பணிவாக வேண்டுகோள் விடுத்தான். மார்க்கண்டேயன் அதற்கு இணங்க வில்லை. பின்னர் யமனே வர, மார்க்கண்டேயன் தான் பூஜிக்கும் சிவமூர்த்தத்தைப் பற்றிக் கொண்டான். புண்ணியம் மிகுந்தவர்க்கு ஆயுள் முடிந்தாலும், அவரைப் பற்றும் உரிமை

யமனுக்கு இல்லை. ஆனால் அதிகார போதையில் ஆணை எல்லை மறந்து விடுமல்லவா? யமன் பாசத்தை வீசினான். பாசமறுக்கும் பசுபதி லிங்கத்தினின்று உற்பவித்துக் காலனைக்காலால் உதைத்து மாய்த்துப் பாலனைக் காத்தருளினார்.

''சிவனடியார்கள் யமனையோ பிற தேவரையோ எண்ணி அஞ்சத் தேவையில்லை. மார்க்கண்டேயனை யமனிடமிருந்து காப்பாற்றியது போல், தன்னையும் யமன் வருங்கால் ''நம்மன்பன்'' என்று கூறிட வருமாறு இறைவனை வேண்டுவோம். மார்க்கண்டேயனை வழிகாட்டியாகக் கொண்டு இறைவன் திருவடிகளை உறுதியாகப் பற்றிக் கொள்ள வேண்டும்'' என்றார் காசிபர்.

''தவத்தைச் செய்து சிவத்தை அடையுங்கள்'' என்று காசிபர் கூறியதைக் கேட்ட மாயை நகைத்தாள். ''முனிவரே! முத்தியடைய விரும்பும் முனிவர்களுக்கல்லாமல் நாம் பெற்ற சிறுவர்களுக்குத் தவத்தைப் பற்றிச் சொல்லலாமா? இவர்கள் பெருஞ் செல்வத்தையும், வெற்றியையும், அழிவில்லாத ஆயுளையும், புகழையும் அடைய வேண்டும். அவற்றை யெல்லாம் இவர்கள் விரைவில் பெறுவதற்கு வழி காட்டுங்கள்'' என்று கூறினாள்.

''மாயை! உன் கருத்து இது என்றால், நீயே அதனை அவர்களுக்குச் சொல்லுவாய்'' என்றார் காசிபர்.

மாயை தன் புதல்வர்களை நோக்கிக் கூறலுற்றாள்.

''பிறவியால் உயிர்கள் அடையும் பயன் கல்வியும் செல்வமும் ஆகும். இவற்றுள் ஏதேனும் ஒன்றை அடையாத பிறப்பு பேய்ப் பிறப்பாகும். கல்வி, செல்வம் என்னும் இரண்டில் செல்வமே சிறப்புடையது. கல்வியுடையவர்களும் செல்வத்தை விரும்பிச் செல்வரைப் பணிந்து நிற்பர். கலைகள் எல்லாம் கற்றவர் வறுமை அடைந்தால், செல்வம் வேண்டித் தம் பகைவரையும் பணிந்து நிற்பர்.

''செல்வம் இல்லாதவன் உயிரற்ற உடம்புக்கு நிகராவான். செல்வம் முயற்சியால் வரும். நீங்கள் பெரு முயற்சி செய்து ஒருவராலும் பெறுதற்கரிய பெருஞ் செல்வத்தையும் தலைமையையும் பெறவேண்டும். அதற்காக வேள்வி செய்ய வேண்டும். இத்திசை ஆலந்தீவு எனப்படும். இதற்கு நேரே வடக்கிலுள்ள பூமி அசுரர்கள் தவம் செய்வதற்கு ஏற்றது. நீங்கள் பரிசனங்களுடன் அங்கு சென்று வேள்வி செய்வதற்குக் குண்டங்களைச் செய்து நச்சுச் சமித்துக்களையிட்டு, மாமிசம், உதிரம் முதலியவற்றை இட்டு, சிவ பெருமானை நோக்கி வீர வேள்வி செய்யுங்கள். அவர் தோன்றித் திருவருள் புரிந்து வேண்டியவற்றையெல்லாம் தருவார்.

''வேள்விக்குப் புறப்படுங்கள். நீங்கள் அங்கு போனதும் வேள்விக்கு வேண்டியவற்றை யெல்லாம் நான் தருகிறேன்'' என்று கூறி சூரன் முதலிய மூவர்க்கும் வேள்வி செய்யும் விதியையும் அதற்குரிய மந்திரங்களையும் உபதேசித்தாள். சூரபன்மன் தம் தம்பியருடன் தாய் தந்தையரை வணங்கி விடைபெற்றுக் கொண்டு உத்தர பூமிக்குப் புறப்பட்டுச் சென்றான்.

அவர்கள் சென்றதும் மாயை, தன் அருகிலிருந்த காசிபரை நோக்கி, ''புதல்வர்களைக் காப்பாற்றும் பொருட்டு நான் போகிறேன். நீங்கள் கவலைப்படாமல் இருங்கள்'' என்று கூறிப் புறப்பட்டாள்.

காசிபர் அவளைப் பின்தொடர்ந்து சென்றார். ''முனிவரே! மக்களைப் பெறுவதற்காகவே நான் இங்கு வந்தேன். மேலும் நான் மாயை. என் பிரிவால் நீங்கள் வருந்த வேண்டாம்'' என்று சொல்லி மறைந்தாள். ஞானம் மாயையிடம் பேச வேண்டிய பேச்சை மாயை ஞானத்திடம் பேசிற்று!

மாயையின் பிரிவால் காசிபர் மதி மயங்கி, ஏங்கினார். அப்போது பிரமன் தமது புதல்வராகிய காசிபர் முன் தோன்றி, ''மகனே! வேதம்ஓதியுணர்ந்த நீ ஒரு பெண் மீது மையல் கொண்டு வருந்தலாமா?'' என்று வினவினார்.

**''உள்ளினும் சுட்டிடும்**
**உணருங் கேள்வியில்**
**கொள்ளினும் சுட்டிடும்**
**குறுகி மற்றதைத்**
**தள்ளினுஞ் சுட்டிடும்**
**தன்மை ஈதினால்**
**கள்ளினும் கொடியது**
**காமத் தீயதே**

''மகனே! காமத்தை ஒழித்தவன் தான் முத்தி இன்பம் பெற முடியும். காமம் நரகத்துக்கு வழிகாட்டி; மனிதனின் பெரும் பகை. மேலும் நீ எந்த பெண் மீது மையல் கொண்டிருக்கிறாயோ, அந்தப் பெண் வஞ்சனையே வடிவானவள்; மாயை. அவளுடன் கூடிய நீ பெரும் தீமை புரிந்துவிட்டாய். நீ செய்த அந்தத் தீமை நீங்குவதற்காகத் தவம் செய்'' என்று பிரம தேவர் கூறினார்.

அறிவு தெளிந்த காசிபர் காமம் நீங்கி, காமனைக் கடிந்த சிவபெருமானை நோக்கித்தவம்செய்யலானார். (தொடரும்)

வருகிறது. மலாய் மொழியை ரோமன் லிபியிலே கையாளுவதால் எல்லோருக்கும் எளிதாகப்படுகிறது; சுலபமாகக் கற்றுக் கொண்டு பேசி விடுகிறார்கள்!

இதற்காக மலாய் மொழியில் எழுதத் தடையில்லை. உருது மொழி லிபி போல்தான் மலாய் மொழி லிபியும் இருக்கிறது.

நாகரிகத்தில் மலேயர்களும் சீனர்களும் ஐரோப்பிய பாணியைத் தீவிரமாகவே பின் பற்றுகிறார்கள் என்று சொல்லலாம். குறிப் பாக ஆகார விஷயத்திலும் இந்த நியதிதான். தமிழர்கள் இதற்கு விதிவிலக்கு.

விதிவிலக்கு இல்லாத பண்டிகைகளும் கொண்டாட்டங்களும் இங்கு நிறைய உண்டு. ஓர் இனத்தின் பக்தி கலாசாரங்களுக்கு மற்ற இனத்தினர் அனைவரும் மதிப்புக் கொடுக்கிறார்கள். மலாய்க்காரர்களின் ரம்சான் பண்டிகையில் சீனர்கள், தமிழர்கள் எல்லோரும் ஆர்வத்துடன் பங் கெடுத்துக் கொள்கிறார்கள். சீனர்களின் புத்தாண்டு விழாவிலும் இப்படியே! இதற் கெல்லாம் தலைவர்கள் வழிகாட்டிகளாய் விளங்குகிறார்கள். தமிழர்களின் தைப்பூச விழா அரசாங்கத்தின் பொது விடுமுறை அந்தஸ்தைப் பெற்றிருக்கிறது.

இந்த நாட்டில் ரஸ்தாப் போக்குவரத் துக்கள் கவர்ச்சிகரமாக இருக்கின்றன. தொடர்ந்து நான்கைந்து மைல்களுக்கு, வளைவு நெளிவு இல்லாத சாலைகள். ரஸ்தாக் களில் தாரை மாத்திரம் அவர்கள் உபயோ கிப்பதில்லை. கணிசமான அளவில் ரப்பரை யும் கலக்கிறார்கள். மேடு பள்ளம் விழாத இந்தப் பாதைகளில் காரோட்டிகள் சர்வ சகஜமாக நூறு மைல் வேகத்தில் போகி றார்கள். மாட்டு வண்டிகளோடு, ஆடு மாடு மந்தைகளும் குறுக்கிட்டு வேகத்தைக் குறைக்குமோவென்று அவர்கள் அஞ்ச வேண்டியதில்லை. அவை அங்கு வெகு வெகு குறைவு. மலேயா விவசாய நாடு இல்லை. சிறிய அளவில் நடக்கும் விவசாய மும் நாட்டின் உட்பகுதிகளில் ஒதுங்கி யிருக் கிறது. இயற்கைச் செல்வங்களான தகரம், ரப்பர், எண்ணெய் மூன்றும் ஏராளமான அன்னியச் செலாவணி வசதியை அளிக்கின் றன. ஆகையால் வாழ்க்கைத் தரமும் அதிகம் தான். மலேயர்கள் இந்த வாழ்க்கைத் தர உயர்வை விரும்புகிறார்கள்.

இயற்கைப் பொருள்களின் துணைகொண்டு எழக் கூடிய தொழில் வளர்ச்சி இங்கு இல்லை. இப்போதுதான் மலேய சர்க்கார் தொழில் துறையில் கவனம் காட்டுகிறார்கள்.

உயர் கல்விக்கான வசதிகளும் இனிமேல் தான் இங்கு தோன்ற வேண்டும். பாரிஸ்டர், இஞ்சினீயர், படிப்புகளை விரும்பும் இளை ஞர்கள் இங்கிலாந்துக்கும் மேற்கு ஐரோப்பிய நாடுகளுக்கும்தான் போகிறார்கள்!

மலேயாவாழ் தமிழர்களைப் பற்றிக் குறிப்பிடுகையில் திரு சிவஞானம், 'அவர்கள் காட்டும் அன்பு நாம் பழந்தமிழ் இலக்கியங் களில் காணும் அன்புக்கு ஒப்பிடக் கூடிய தாக இருக்கிறது. பாரதத்திலிருந்து வருப வர்களுக்குப் பரம உபசாரம் செய்கிறார்கள். அவர்களுக்கு மலேயா அரசாங்கத்திடம் கொஞ்சம்கூடக் குறை இல்லை'' என்றார்.



துங்கு அப்துர் ரஹ்மானுடன் ம. பொ. சி.

மாரியம்மனுக்கும் தண்டபாணிக்கும் மலே யாத் தமிழர்கள் விசேஷ பக்தி காட்டிக் கோயில்கள் எழுப்பியிருக்கிறார்கள். மாரி யம்மனை அவர்கள் தங்கள் தேசியக் கடவுளாகவே கருதுகிறார்கள். செட்டிநாட்டு வணிகர்கள் அங்கு போய் முருகனுக்கு எழுப்பி யிருக்கும் கோயில்களும் பிரசித்தமானவை.

கோலாலம்பூர்தான் மலேஷிய சமஷ்டி யின் தலைநகர். கோலாலம்பூரை அமெரிக்கா வின் வாஷிங்டனுக்கு ஒப்பிட்டால் சிங்கப் பூரை, நியூயார்க் நகருக்கு ஒப்பிடலாம்.

ஆசியாவின் இரு முனைகளும் சந்திக்கும் இடம் சிங்கப்பூர். சிங்கங்கள் நிறைந்ததினால் 'சிங்கபுரம்' என்று ஒரு காலத்தில் அழைக்கப் பட்டுக் கடைசியில் சிங்கப்பூராகத் திரிந்தது. அதை இப்போது ஜிங்ஜிங்பூர் என்று அழைத் தாலும் தகும். காரணம் மலேய நாணய மான டாலர்கள் குலுங்கும் ஜிங் ஜிங் ஒலி அங்கு எப்போதும் எதிரொலிக்கிறது. சிங்கப்பூர் இப்போது ஒரு செல்வப்பூர்!

பாரதத்திலோ பாகிஸ்தானிலோ திடீ ரென்று ஒலிக்கும் ஹிந்து முஸ்லீம் கலவரம் என்பது மலேயாவில் உள்ள ஹிந்து முஸ்லீம் களுக்குப் புரியாத ஒரு விஷயம்! அங்கு அவர்கள் அத்தனை அன்னியோன்னியமாக வாழ்கிறார்கள்.

திரு சிவஞானம் துங்கு அப்துர் ரஹ்மானை யும் சந்தித்தார். துங்கு இந்திய பாணியில் கரம் கூப்பித்தான் வரவேற்றாராம். காரணம் அங்குள்ள பழக்க வழக்கங்களில் இந்திய நாகரிகம் கணிசமாக இருக்கிறது. அரசியல் முறைகளிலும் இந்தப் பண்புகள் ஊடுருவி நிற்கின்றன.

துங்குவைச் சந்தித்து விட்டு விடை பெறும்போது அவர் சிவஞானத்திடம் ''இங் குள்ள உங்கள் நாட்டவரை இந்த நாட்டுக் குடியுரிமை பெறச் செய்யுங்கள். அது பரஸ் பரம் வளர்ச்சிக்கு உதவும்'' என்று சொன்ன வார்த்தைகள் அவர் செவிகளில் இன்னும் ஒலித்துக் கொண்டிருக்கின்றன.

'பொது மொழி ஆனபிறகுதான் ஒரு மொழி ஆட்சி மொழியாக முடியும். ஆட்சி மொழியான பிறகு அதைப் பொது மொழி யாக்குவது கடினம்' என்ற தத்துவத்தையும் திரு சிவஞானம் தம் மலேயா சுற்றுப் பிர யாணத்தின்போது நன்கு உணர்ந்தார்.

— திருமுலர்

# 19. வரம் பெற்ருன்!

சூரபன்மன் தாயின் கட்டளைப்படி, வேள்வி செய்வதற்காகத் தம் தம்பியரும் சேனைகளும் சூழ, விண்ணும் மண்ணும் கடலும் குல மலைகளும் நடுங்கும் வண்ணம் வடதிசை நோக்கிச் சென்ருன்.

அப்பொழுது அசுர குருவாகிய சுக்கிராச்சாரியார் ஆகாய வழியாக விமானத்தில் வந்தார். அசுர சேனைகளின் வேகத்தைக் கண்டு நடுங்கினுர். 'இவர்களுக்கு நிகரானவர் ஒருவரும் இல்லை. மாலயனுதி வானவர்களை இவர்கள் கணப்பொழுதில் வென்று

கந்தன் கருணை



விடுவார்கள்' என்று பலவாறு எண்ணி வியந்தார். உயிர்களை வசீகரிக்கும் ஒரு மந்திரத்தைச் சொல்லிக் கொண்டு சுந்தர வடிவுடன் சேனைக் கடலின் நடுவே புகுந்து சூரபன்மன் முன் சென்ருர். "சூரனே! நீ இந்திரன் முதலிய அனைவரையும் வென்று யாவருக்கும் தலைவனுகக் கடவாய்" என்று ஆசி கூறினுர். சூரபன்மன் சுக்கிராச்சாரியாரை நோக்கி, "ஐயனே! தாங்கள் யார்? இங்கு வந்த காரணம் யாது? தங்களைக் கண்டவுடனே என்னை அறியாது என் உள்ளமும் எலும்பும் உருகுகின்றன" என்ருன்.

"சூரா! நான் உன் குல குரு சுக்கிராச்சாரியார். உனக்கு ஆறுதல் கூற வந்திருக்கிறேன். நீ தவம் செய்யும்போது பகைவர்கள் உனக்குத் தொல்லை கொடுப்பார்கள். அத் துன்பங்களைப் போக்க ஒரு மந்திரம் உபதேசிக்கிறேன். இந்த மந்திரத்தை நாள்தோறும் ஜபித்துப் புலன்களை யடக்கிப் பெருந் தவம் செய்" என்று கூறிச் சிவபெருமானுடைய மந்திரம் ஒன்றை அவனுக்கு உபதேசித்தார். சூரபன்ம சுக்கிராச்சாரியாரின் கால்க விழுந்து வணங்கி மந்திரத்தை கிரகித்தான். அவர் விதித்த வ ணமே தவம் செய்வதாகக் கூறினு

அசுரர்கள் சூழச் சென்ற சூரப மன் ஓர் ஆலவனத்தை அமை தான். அங்கே வீர வேள்வி செ வதற்குச் சாலையமைத்தான். ப ளுயிர யோசனைப் பரப்பை உ வைத்து அதனைச் சுற்றிலும் ம



## திருமுருக
# கிருபானந்த வாரியார்



களிஞலே மதில் அமைத்தான். மதில்களைச் சுற்றிலும் எண்ணற்ற அசுரர்களைக் காவல் வைத்தான். நான்கு திசைகளிலும் வாயில்கள் அமைத்து அவற்றைக் காவல் செய்ய வீர மடந்தையை மந்திரத்தால் அழைத்தான். மதிலைச் சுற்றிலும் காவல் செய்வதற்காகப் பூதங்களையும் பிசாசுகளையும் காளிகளையும் மந்திரத்தால் அழைத்து நிறுத்திஞன். மந்திர பலத்தாலேயே வைரவர்களை அழைத்து யாகத்தைக் சாவல் காக்க நிறுத்திஞன். மதிலுக்குள்ளே நடுவில் ஆயிரம் யோசனை அகலமும் ஆழமும் உள்ள ஓர் ஓமகுண்டமும், அதனைச் சுற்றி நூற்றெட்டு ஓம

குண்டங்களும், அவற்றைச் சுற்றி ஆயி ரத்தெட்டு ஓமகுண்டங்களும் செய்வித் தான். யாகத்துக்கு வேண்டிய மற்றைய பொருள்களுக்காகத் தன் தாய் மாயையை நினைந்தான் சூரபன்மன்.

தவம் செய்து சிவபெருமானுடைய அருள் பெற்ற மாயை சூரபன்மன் முன் தோன்றி யாகத் திரவியங்களா கச் சிங்கம், புலி, யானை, கரடி, குதிரை, ஆடு முதலிய மிருகங்களின் மாமிசம், இரத்தம், மற்றும் எண் ணெய், நெய், பால், தயிர், மது, வெண் கடுகு, மிளகு முதலிய திரவி யங்கள், நெய்யன்னம், யாகப் பசுக்கள், செந்நெல், அரிசி, மலர், கஸ்தூரி முத லிய சுகந்த வஸ்துக்கள், சுருக்குச் சுரவம், தர்ப்பை, நெற் பொரி, நவதா னியங்கள், நச்சு சமித்து முதலிய வற்றை வரவழைத்து மலைபோல் குவித்து விட்டாள்.

சூரபன்மன் நடுவேதியின் மத்தியில் வச்சிர கம்பத்தை நாட்டி, நான்கு வாயில்களுக்கும் சென்று வீர மடந்தை யைப் பூசித்து மாமிச பலி கொடுத் தான். மதில் நடுவிலுள்ள பூதங் களுக்கும் பிசாசுகளுக்கும் பலி கொடுத் தான். ஆயிரத்தெட்டு குண்டங்கள் தோறும் நச்சு விறகிட்டு, அக்கினி மூட்டினான். தன் தம்பியரோடு சிவபெருமானின் நாமத்தை உச்சரித்து மாமிச பலி கொடுத்தான். தாரகனை நோக்கி, ''நீ இக் குண்டங்கள்தோறும் அக்கினி தணியாது வளர்ப்பாயாக'' என்று கட்டளை யிட்டான். பின்னர் நூற்றெட்டு குண்டங்களுக்குச் சென்று வேள்வி செய்தான். சிங்கமுகாசுரனை நோக்கி, ''நீ இங்கிருந்து இக் குண்டங் கள்தோறும் தீ குறையாமல் வளர்ப்பா யாக'' என்று பணித்தான். அங்கிருந்து நடு வேள்விக் குண்டம் சென்ற சூர பன்மன் சிவபெருமானைத் தியானித்து விதிப்படி பூசை செய்தான். நெய், பொரி, உதிரம், மாமிசம் முதலிய வற்றைச் சொரிந்து, சிவமந்திரத்துடன் வேள்வி செய்யலானான்.

குண்டத்திலிருந்து தோன்றிய யாகாக்கினி வானளாவியது; எட் டுத் திசைகளையும் மேலுலகங்களை யும் சுட்டது. திருமால், பிரமன் முதலி யோர் அதனைக் கண்டு நடுங் கினார்கள். சூரபன்மன் தம் தம்பிய ருடன் பதினாயிரம் ஆண்டுகள் வேள்வி செய்தான். ஆயினும் சிவபெருமான் தரிசனம் கிடைக்கவில்லை. அதனால் மிகவும் வருந்திய சூரபன்மன், தம் தம்பியரை யாகத் தொழிலில் அமர்த்தி விட்டு ஆகாயத்தை அடைந்தான்.

ஆகாயத்தில் நின்றுகொண்டு தன் தலை களை வாளினால் அறுத்து ஓமகுண்ட தில் போட்டு உதிரத்தை நெய்போ சொரிந்தான். தசைகளை அரிய அ அவை முன்போல் மீண்டும் மீண் வளர்ந்தன. அதனைக் கண்ட சூர மன் ''இது சிவபெருமானின் வருள்'' என்று எண்ணி, விண் நின்ற வண்ணமே தன் உடலின் த களை அறுத்துப் போட்டும் உதி சொரிந்தும் ஆயிரம் ஆண்டுகள் யா செய்தான். அப்போதும் சிவபெரும காட்சி தரவில்லை. அதனால் ம சோர்வு கொண்ட சூரபன்மன் ''இ மாள்வேன்'' என்று கூறித் தீய் சூழப்பட்ட ஆதி குண்டத்தில் நிறத்துடன் நிற்கின்ற வச்சிர கம்பத் பாய்ந்து சாம்பலானான்.

சூரபன்மன் யாகாக்கினியில் வீழ் இறந்ததைக் கண்ட சிங்கமுகனும் த கனும் தாயை இழந்த கன்று போ கதறினார்கள். தன் தமையன் இற பின் தான் உயிரோடு இருக்கலாக என்று சிங்கமுகன் கருதித் தன் ஆயி தலைகளையும் அறுத்துச் சூரபன்மன் வி திறந்த ஆதி குண்டத்தில் போட்டா தலைகளை அறுக்க அறுக்க அவை வள தன. அதனைக் கண்ட தாரகன் த தலையை அறுத்து அக்கினியில் போ டான். அவனுக்கும் தலைகள் வளர் கொண்டேயிருந்தன. இருவரது களும் அறுக்க அறுக்க வளர்வ கண்ட அசுரர்களில் சிலர் த தலைகளையும் அறுத்து யாகாக்கினி இட்டனர்.

சூரபன்மனைப் போலவே யாகாக் யில் வீழ்ந்து இறக்க எண்ணிய முகன் ஆகாயத்தில் எழுந்த அவுணராயினும் அவர்களுக்குள்ள சங்கல்பத்தையும் சகோதர வா யையும் ஆண்டவன் மெச்சத் வேண்டும்? எனவே, சிவபெரு வயோதிக அந்தணர் வேடத்தில் வேதியின் அருகே பிரசன்னமா சிங்கமுகாசுரனை நோக்கி, ''நீ எல்லோரும் ஏன் இங்கே புலம்பி க் கொண்டிருக்கிறீர்கள்? உங்கள் வர றைக் கூறுங்கள்'' என்று கேட்டா

'இவர் நமது தந்தையைப் போ றிருக்கிறார்' என்று எண்ணிய முகன் அவரை வணங்கித் தங்கள் வரலாற்றைக் கூறினான். வயோ அந்தணர் சிங்கமுகனை நோ ''வருந்த வேண்டாம்; இப்பொ சூரபன்மனை யாகாக்கினியில் எழுப்பித் தருகிறேன்'' என்று

செய்து தேவ கங்கையை அங்கு வரும்படி திருவுளம் செய்தார். கங்கை வந்து சிவபெருமானைப் பணிந்தாள். கங்கா நதியை அவர் நடுக் குண்டத்தில் புகச் செய்தார். நடுக் குண்டத்தில் கங்கை புகுந்ததும் சூரபன்மன் ஆர்த்தெழுந்தான். சிங்க முகனும் தாரகனும் பெரு மகிழ்ச்சி யடைந்தார்கள். அசுரர்கள் ஆ ர வா ர ம் செய்தார்கள். இவற்றையெல்லாம் கண்ட தேவர்கள் அழிந்த அவுணன் உயிர் பெற்றுனே எனக் கலங்கி அஞ்சி நடுங்கி ஓடி ஒளிந்து கொண்டார்கள்.

வயோதிக அந்தணர் வடிவத்தில் வந்த சிவபெருமான் தம் வயோதிக வடிவத்தை நீக்கி, விடையின் மீது மூன்று கண்களும் நான்கு தோள்களுமாய் உமாதேவியாருடன் காட்சி தந்தருளினுர். சூரபன்மன் தம் தம்பியரோடும் துணைவரோடும் கீழே வீழ்ந்து வணங்கிப் பலவாறு துதித்து நின்றுன்.

''சூரபன்ம! நீ நம்மை நினைத்து, நெடுங்காலம் பெருந்தவம் செய்து இளைத்தாய். உனக்கு என்ன வரம் வேண்டும்? சொல்'' என்று கேட்டார் சுவாமி.

இத்தனை தவம் செய்தும் அதனுல் மன அமைதியும் முக்தி நாட்டமும் பெருத அசுரத் தன்மை அப்போது சூரன் வாய்மொழியில் வெளியாயிற்று. தாய் புகட்டியிருந்த ஆட்சி அதிகார ஆசையை வெளியிட்டான்.

''எம்பெருமானே! இப்பிருதிவியில் உள்ள எல்லா அண்டங்களுக்கும் நான் அரசனுக வேண்டும். அந்த அண்டங்களை ஆள்வதற்குரிய ஆக்ஞா சக்கரமும், நினைத்தவுடனேயே அவ்விடங்களுக்குச் சென்று திரும்பும் ஊர்தியும் வேண்டும். எப்பொழுதும் அழியா திருக்கின்ற யாக்கையும், திருமால் முதலிய தேவர்களை வெல்லும் படைக் கலங்களையும் தந்தருள் வேண்டும்'' என்று சூரபன்மன் வேண்டிக் கொண்டான்.

''சூரபன்ம! நீ இப்பிருதிவியிலுள்ள ஆயிரம் கோடி அண்டங்களுள் ஆயிரத்தெட்டு அண்டங்களை நூற்றெட்டு யுகம் ஆளக் கடவாய்'' என்று சிவபெருமான் அருள் செய்தார். (என்றும் வாழும் வரத்தை அளிக்கவில்லை.) ஆயிரத்தெட்டு அண்டங்கள் எங்கும் செல்லத் தக்க வலிமை மிக்க இந்திர ஞாலம் என்னும் தேரையும், ஆக்ஞா சக்கரத்தையும், சிங்க வாகனத்தையும், தேவர்கள் யாவர்க்கும் முதல்வனுகும் தலைமையையும், யாவரையும் வெல்லும்

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

### வலியும் மருந்தும்!









வீரத்தையும் ஆற்றலையும், பாசுபதம் முதலிய தெய்வாஸ்திரங்களையும், வச்சிர உடலையும் சிவபெருமான் தந்தருளினர். இதன்பின், யாகசாலையில் புகுந்து சூர னுயிரை மீட்ட தேவ கங்கையை விண் ணுலகுக்கு அனுப்பினர்.

தேவ கங்கை கலந்த யாகாக்கினியி லிருந்து பதினுயிரம் கோடி வெள்ளம் அசுர சேனைகளைத் தோற்றுவித்துச் சூர னுக்குக் கொடுத்தார் பிரமன். சூரபன் மனுக்கு சிவபெருமான் அருள் புரிந்த போது, சூரனுடைய தம்பியராகிய சிங்க முகனும் தாரகனும் சிவபெருமானின் திருவடிகளை வணங்கினர்கள். சிவ பெருமான் அவர்களை நோக்கி, ''நீங்க ளிருவரும் சூரபன்மனுக்கு இரு தோள் களைப் போல் நூற்றெட்டு யுகங்கள் சிறப்போடு வாழுங்கள். நீங்கள் தேவர் அனைவரையும் வென்று புகழ் பெறு வீர்கள். உங்கள் மூவரையும் நம் சக்தி ஒன்றுலன்றி வேறு எவராலும் வெல்ல முடியாது'' என்று அருளிச் செய்து அழியாத தேர், பாசுபதாஸ்திரம் முத லியவற்றை அவர்களுக்குத் தனித் தனி யாகக் கொடுத்து மறைந்தருளினர்.

சிவபெருமானிடம் அளவற்ற வரங் களைப் பெற்ற சூரபன்மனை அசுர சேனைகள் வந்து சூழ்ந்து கொண்டு துதி செய்தனர்; மகிழ்ச்சியுடன் கடல் போல் ஆரவாரித்தனர்.

மேருகிரியை ஏழு கடல்களும் சூழ் வது போல் சூரபன்மனை அசுரர்கள் சூழ்ந்துகொள்ள, மண்ணும் விண்ணும் நிறைந்து சூரபன்மன் தம்பியருடன் யாகசாலையை விட்டுப் புறப்பட்டு காசிப முனிவரிடம் வந்து வணங்கினன்; சிவ பெருமானிடம் தான் பெற்ற வரங்களை யெல்லாம் கூறி, ''இனி நாம் செய்வது யாது?'' என்று வினவினன். தேவர்கள் வாழ்வு தீர்ந்தது என்று எண்ணிய காசிப முனிவர், ''உங்கள் குலகுருவாகிய சுக்கிராச்சாரியாரிடம் செல்லுங்கள்'' என்று விடை கொடுத்து அனுப்பினர்.

அதேபோல் சூரபன்மன் தன் சேனை களுடன் சுக்கிராச்சாரியாரை வந் தடைந்தான்.

''பதி, பசு, பாசம் என்று முப் பொருள் உள என்று சிலர் கூறுவர். பதியும் பசுவும் ஒன்றே. முத்தியென்ப தொன்றில்லை; பாப புண்ணியமில்லை. எதைச் செய்ய வேண்டுமென்றாலும் செய்யலாம். மறுபிறப்பு என்று ஒன்று கிடையாது. நீயே பிரம்மம். எனவே பிரமன், திருமால் முதலிய தேவர்களை மேலோர் என்று கருதி வணங்காதே'' என்று தொடங்கினர் சுக்கிரர். பாப புண்ணியத்தை மீறி, பிரம்ம பாவத்தி லிருப்பவனுக்கு உலக காரியங்கள் கிடை யாது. ஜீவன் பிரம்மம் என்கிற கொள்கை அவனை எந்தக் காரியத்திலும் ஏவாத தத்துவம். கர்மம் கடந்த நி அது. ஆனல் சுக்கிரனே சூரனைக் கெட்ட காரியத்தில் ஏவுவதற்குச் சாதகமாக 'நீயே பிரம்மம்; உனக்குப் பாவ புண் ணியமில்லை; எது வேண்டுமாயினும் செய்யலாம்' என்று திரித்துக் கூறினர்.

''தொடர்ந்து, தேவர்கள் உனக்குப் பகைவர்கள். அவர்கள் செல்வங்களைக் கவர்ந்து, அவர்களைத் தண்டிப்பாயாக! இந்திரன் முன்னர் அளவற்ற அசுரர் களை அழித்தான். அவனைப் பிடித்துச் சிறையில் வை. மனம் விரும்பியபடி யெல்லாம் செய். முனிவர்களையும் திக்குப் பாலகர்களையும் ஏவலாக்கிக் கொள். கொலை, களவு, காமம், வஞ் சம் முதலியவற்றை உறுதி யென் செய். அதனல் உனக்குத் தீமை ஏதும் இல்லை. சிவபெருமான் உனக்குத் தந் ஆயிரத்தெட்டு அண்டங்களுக்கும் சென்று ஏவல் கொண்டு வருவாய்'' என்று சுக்கிராச்சாரியார் அவனுக்கு உபதேசித்தார்.

சுக்கிராச்சாரியார் கூறியதைக் கேட்ட சூரபன்மன், ''குருநாதா! உங்க கட்டளைப்படியே நடக்கிறேன்'' என் கூறி, சிவபெருமான் அளித்த ஆயிர தெட்டு அண்டங்களின் பரப்புக்களை யும் கூறும்படி வேண்டிக் கொண்டான். அதன்படி சுக்கிராச்சாரியார் அண்ட களின் பரப்புக்களைக் கூறினர். சுக் ராச்சாரியாரின் திருவடிகளை வண கிச் சூரபன்மனும் சிங்கமுகாசுரனும் விடைபெற்றுச் சென்றனர். தாரகனிடம் சென்றதும், தனக்குச் சுக்கிராச்சாரியா உபதேசித்தவற்றை யெல்லாம் கூ னன் சூரபன்மன்.

அது சமயம் மாயை ஆகாயத்தி வந்து தோன்றினள். சூரபன்மன் த தம்பியரோடும், அசமுகியோடு சென்று அவளை வணங்கினன். மா தன் மக்களை வாழ்த்தி ''மைந்தர்களே நீங்கள் பெற்ற வரத்தினல் இந்திர தேவர்களை வென்று எல்லா உலகங் யும் அரசு புரிந்து, நீண்ட கா வாழ்வீராக! நீங்கள் மாயை செ வேண்டும் என்று எண்ணினல் என் நினையுங்கள். நினைத்தபோது நான் வ உங்கள் விருப்பத்தை நிறைவே வைப்பேன்'' என்று கூறிச் சென் மாயை சென்றதும் சூரபன்மன் தி விஜயம் செய்யப் புறப்பட்டான். அ படைகள் வடதிசை நோக்கி ஆரவா தோடு புறப்பட்டன.

(தொடர்




# பெப்ஸ்

**வில்லைகளை உட்கொள்ளுங்கள்.**

பெப்ஸ் வில்லைகளைச் சுவைத்து, குணம ளிக்கும் ஆவிபோன்ற அதன் சத்து வலியைக் குறைக்கவும், தொண்டைப் புண், இருமல் மற்றும் ஜலதோஷத்திற்கும் காரணமான கிருமிகளைக் கொல்ல உதவுவதுமான வேலையைச் செய்வதை உணருங்கள். உடனடி இதமளிக்கிறது பெப்ஸ்.




கெடுதி விளைவிக்கும் மருந்துகள் எதுவும் இதில் கிடையாது.

குழந்தைகளுக்கும் பயமின்றி அளிக்கலாம்.

ப்ராங்கைடிஸ் தொண்டைப் புண், மண்டைநீர், அடைப்பு ஜலதோஷம் மற்றும் இருமலுக்கு உடனடி இதமளிக்கிறது.

எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்.

ஸி. இ. ஃபுல்ஃபோர்ட் (இந்தியா) பிரை. லிட்.

சென்னை ராஜ்ய டிஸ்ட்ரிபியூட்டர்கள்:
மெஸர்ஸ் மோதி அண்டு கம்பெனி, சென்னை-1
தபால் பெட்டி 1902

பவுன் சூரியன்
மார்க் புகையிலை
காரைக்குடி





திருமுருக
கிருபானந்த வாரியார்


## 20. அண்டங்களை ஆண்ட அவுணர்கோன்

திக்விஜயம் புறப்பட்ட சூரபன்மன் அசுர சேனைகளுடன் புறப்பட்டு அளகாபுரியை அடைந்தான். இந்திர ஞாலம் என்னும் தன் தேரில் ஏறிக் கொண்டான்.

சிவபெருமானால் அளிக்கப்பட்ட இந்திர ஞாலத்தேர் சூரியனுடைய தேரை விட ஒளி பொருந்தியது; விசால மானது; அதில் ஏறினால் இமைக்கின்ற நேரத்தில் எங்கு வேண்டுமானாலும் சென்று திரும்பி விடலாம்; இத்தேர் பகைவர்களின் தேர் மீது பாய்ந்து அழித்து விடும். ஒரு கோடிக் குதிரைகள் பூட்டப் பெற்ற இந்தத் தேரின் மணிகள் ஒலித்தால் இடியொலி போன்றிருக்கும்.

பல்லாயிரம் யாளிகளும், குதிரைகளும், பூதங்களும் பூட்டப்பட்ட தேரில் சிங்கமுகனும், பதினாயிரம் குதிரைகள் பூட்டப்பட்ட தேரில் தாரகனும் ஏறிச் சென்றனர். அவர்களைச் சூழ்ந்து எண்ணற்ற அசுரப் படைகள் சென்றன. சூரபன்மன் குபேரனுடைய நகரத்தைச் வளைத்துக் கொண்டான்.

சூரபன்மனும் அவனது சேனைக
அளகாபுரியை வளைத்துக் கொ
டதை யறிந்த குபேரன் முதலில் அ
நடுங்கினான். சிவபெருமானிடம் வ
பெற்ற அசுரர்களை வெற்றி கொ
முடியாது என்பதை உணர்
புஷ்பக விமானத்தில் ஏறிச் செ
சூரபன்மனை யடைந்தான். அவ
கண்டதும் வணங்கி, "நான் உ
அடியவன்" என்று காலில் வி
தான். "இந்த வாக்கிலிருந்து நீ தவ
கூடாது" என்று சொல்லி அனு
விட்டான் சூரபன்மன். அசுரப் படை
அளகாபுரி நகரத்தினுள் புகுந்து
வங்களை யெல்லாம் சூறை யிட்ட
செல்வமெல்லாம் இழந்த அளகா
களையிழந்து கிடந்தது.

குபேரனை அடிமை கொண்ட
பன்மன் அளகாபுரியிலிருந்து
கிழக்கே சென்றான். அது ஈசானத்

# கருணை



ருடைய தலம் என்று அறிந்து அங்கிருந்து இந்திர உலகம் சென்றான்.

சூரபன்மன் இந்திர உலகம் வருவதை அறிந்த இந்திரன் அஞ்சி நடுங்கி, சுவர்க்கத்தில் போய் ஒளிந்து கொண்டான். இந்திரன் சுவர்க்கத்தில் ஒளிந்து கொண்ட செய்தி சூரபன்மனுக்குத் தெரிந்தது. உடனே அவன் சுவர்க்கத்தைக் கொளுத்தினான். பின்னர் அங்கிருந்து தன் சேனைகளுடன் அக்கினி பகவானின் நகரத்துக்குச் சென்றான். சூரபன்மன் வருவதையறிந்த அக்கினி பகவான் மிகுந்த சீற்றம் கொண்டு, பல கோடி வீரர்களுடன் வந்து சூரபன்மனை எதிர்த்தார். இருதரப்பினருக்கும் கடுமையான யுத்தம் நடந்தது. அக்கினி பகவான் பெரிய உருவம் எடுத்து அசுரர்களை வளைத்து அழித்துக் கொண்டிருந்தார். அப்போது தாரகன் மிகுந்த கோபத்துடன் சிவாஸ்திரம் விடுப்பதற்காக வழிபாடு செய்தான். சிவாஸ்திரத்தினால் உலகமே அழிந்து விடும் என்று கருதிய அக்கினி பகவான் தமது பேருருவத்தைக் குறுக்கிக் கொண்டு, தாரகாசுரன் எதிரில் வந்து வணங்கி, "நான் செய்த குற்றத்தை மன்னித்து விடுங்கள்; சிவாஸ்திரத்தை ஏவ வேண்டாம்" என்று கேட்டுக் கொண்டார். அக்கினி அடிபணிந்ததால் தாரகனின் கோபம் நீங்கியது.

அப்போது அசுரர்கள் அக்கினி தேவரைக் கொல்ல முற்பட்டார்கள். அவர்களையெல்லாம் தடுத்த தாரகன் அக்கினியிடம், "நீ நம் அடிமையானதால் உயிர்ப் பிச்சை கொடுத்தோம்" என்று கூறி அனுப்பினான். அசுரப் படைகள் அக்கினி தேவரின் நகரத்துள் புகுந்து செல்வங்களையெல்லாம் கொள்ளையடித்தன.

பின்னர் சூரபன்மன் இயமபுரிக்குச் சென்றான். ஒரு தூதன், சூரபன்மன் வரும் செய்தியை இயமனிடம் தெரிவித்தான்.

இயமனும் நடுங்கினான்.

சேனைகள் சூழச் சூரபன்மனிடம் வந்து வணங்கி நின்றான் இயமன். அவன் தன்னிடம் அடிமையாக வந்து நிற்ப

தைக் கண்ட சூரபன்மன் மிக்க மகிழ்ச்சி யடைந்தான். ''நீ என் ஏவலைச் செய்து கொண்டு இங்கேயே இரு'' என்று பணித்தான். சூரனுடைய சேனைகள் இயமபுரியில் புகுந்து செல்வங்களை யெல்லாம் அள்ளிக் கொண்டன.

சூரபன்மன் திக்விஜயத்தைத் தொடர்ந்தான். படைகளுடன் தென் மேற்குத் திசை நோக்கிச் சென்று நிருதியின் மீது போருக்கு ஆயத்த மானான். சிவபெருமானிடம் பெரு வரம் பெற்ற சூரனுடன் யார்தான் போரிட முடியும்? நிருதி தன் சேனைகளுடன் சென்று சூரபன்மனை வணங்கி, ''நான் உன் சுற்றம்'' என்று அடிபணிந்தான். சூரபன்மன் மகிழ்ச்சியுற்று நாகர் உலகுக் குச் சென்றான். ஆதிசேடன் சூரபன் மனை எதிர்த்தான். சூரபன்மனே வெற்றி பெற்றான்; நாகருலகச் செல்வம் முழுவதையும் தன் வசமாக்கிக் கொண் டான். தேவர்களிடம் முன்பு ஆதி சேடன் வாங்கி வைத்திருந்த அமிர்தத் தைச் சூரன் பெற்றுத் தன் தம்பிய ரோடு உண்டான்.

எல்லாத் திசைகளிலும் புகழை நிலைநாட்டிய சூரன் சாகத் தீவைக் கடந்து பாற்கடலுக்குச் சென்றான். அவுணப் படைகள் பாற்கடலைக் கலக் கின. ஆதிசேடன் மீது அரிதுயில் கொண் டிருந்த திருமால் துயிலை விட்டு நீங்கினார். நிலமகளும் திருமகளும் அச்சத்தால் திருமாலைத் தழுவிக் கொண்டார்கள். ''பயப்படாதீர்கள்'' என்று அவர்க ளுக்கு ஆறுதல் கூறிய திருமால் சினங் கொண்டு கருடன் மீது ஏறிப் பெருமழை பொழிவது போல் அசுரர்மீது பாணங் களைப் பொழிந்தார். அசுர சேனைகள் சூறாவளியில் சிதறுண்ட மேகங்கள் போலப் பாண மழையில் பதைத்து ஓடின. தேவர்கள் ஆரவாரம்செய்தனர்.

அவுணப் படைகள் தோற்று ஓடுவ தைக் கண்ட தாரகன், அவர்களுக்கு ஊக்கமளித்துக் கோபத்துடன் திருமாலோடு நெடுநேரம் போர் புரிந் தான்; கணைகளைப் பொழிந்து ஆர வாரம் செய்தான். திருமால் அள வற்ற கணைகளை அவன் மீது செலுத் தித் தேரையும் தேர்ப் பாகனையும் வீழ்த் தினார். பின்னர், திருமாலும் தாரக னும் மாய வடிவங்களைத் தாங்கி நான்கு நாட்கள் போர் புரிந்தனர். திருமால் கோடி பாணங்களை விடுத் துத் தாரகனின் வில், தேர், குதிரை முதலியவற்றை அழித்தார். தாரகன் வெகுண்டு தண்டாயுதத்தை ஏந்தி அண்டங்கள் நடுங்க யுத்தத்தில் தீவிர மாக ஈடுபட்டான். திருமாலை உக்கிர மாக எதிர்த்தான். திருமால் விடுத்த கணைகளை யெல்லாம் தண்டிரு தடுத்தான் சூரன். திருமால் சக்கரா தத்தை விட்டார். அது தாரக கழுத்தை அறுத்துத் தள்ளாமல் செ பொன்னாரமாக விழுந்தது.

தாரகனின் தவப் பெருமையை கண்ட திருமால் வியப்புற்று, அவனு டன் சமாதானம் செய்து கொண்டார் ''உனக்கு நிகரானவர் ஒருவரு இல்லை. நீடூழி காலம் வாழ்க'' என் வாழ்த்தினார்.

சூரபன்மன் முன் சென்று நட வற்றை யெல்லாம் தாரகன் தெரிவி தான். அவற்றைக் கேட்டு மகிழ் சூரபன்மன் தன் படைகளோடு பு பட்டுச் சுவர்க்கலோகத்தை யடை தான். சூரபன்மன் சுவர்க்கம் வந்தி கும் விஷயமறிந்த இந்திரன் அஞ்சி நடு கினான். சூரனைத் தன்னால் நிச்சயமா வெல்ல முடியாது என்பதால் தே ராஜன் இந்திராணியுடன் குயில் உருவ கொண்டு பறந்து ஓடி ஒளிந்தான்.

அரசனை இழந்த அமரர் அனைவரு சூரபன்மனைப் பணிந்து ஏவல் செய் ராயினர். அசுரர்கள் இந்திரனைத் தே யலைந்தும் அவன் கிடைக்கவில்லை. அ னுடைய செல்வங்களை அசுரர்க கவர்ந்து புறப்பட்டனர்.

சூரன் பிரமலோகஞ் சென்றான். நா முகக் கடவுள் சூரபன்மன் முன் வந் ''நான் உனது பாட்டன். திருமா எதிர்த்து வெற்றி பெற்ற உன் வெல்ல எவராலும் இயலாது. நீ நெடு காலம் வாழ்ந்திரு'' என்று ஆசி கூ தனது படைக்கலங்களைச் சூரபன்மனு கும் அவன் தம்பியருக்கும் தந்தார்.

சூரபன்மன் திருக்கயிலாயம் சென் றடைந்தான்—போர் புரிவதற்கல் போரில் தனக்குப் பேராற்றல் தந் பிரானைப் பணிவதற்கே சென்றான். த னுடன் வந்த படை வீரர்களை வெ யில் நிறுத்தி வைத்துத் தம்பியருட எம்பெருமான் திருக்கோயிலின் பு கடை வாயிலை அடைந்தான். திருநந் தேவரிடம் விடை பெற்று உள் சென்று, உமாதேவியையும் சிவ பெ மானையும் பணிந்து துதித்தான். கரு நிறைந்த சிவபெருமான் சூரபன்ம நோக்கி, ''அண்டங்களையெல்லாம் உ ஏவலால் அரசு புரிந்து கொண்டு வா வாயாக'' என்று அருள் புரிந்தா சூரன், எம்பெருமானுடைய பொன் திருவடிகளை வணங்கி விடைபெற்றா

சூரபன்மன் தன் சேனைகளுட ஆயிரத்தெட்டு அண்டங்களையும் சென் பார்வையிட்டான்; இதுகாறும் யுத் புரிந்து தோல்வியுறச் செய்யாதவர்க

யெல்லாம் சமர் புரிந்து வென்றான். அவுணர்களை ஆங்காங்கே ஆட்சியில் நியமித்துத் தன் ஆட்சியை நிலைநாட்டிக் கொண்டான்.

அசுரர்களின் அரசனாகிய அசுரேந்திரன் சூரபன்மன் சிவபெருமானிடம் பெற்ற வரங்களையும் அருளையும் எண்ணிச் சுக்கிராச்சாரியாருடன் வந்து சூரனைத் தொழுது உறவு கொண்டாடி மகிழ்ந்தான். சூரபன்மன் அசுரேந்திரனிடம் குசலம் விசாரித்தான். அசுரேந்திரன் சூரபன்மனை நோக்கி, ''தாங்கள் இருக்கும்போது க்ஷேமத்துக்கு என்ன குறை?'' என்று கேட்டான். நியாயமான கேள்விதானே? சூரன் அதிகாரத்தில் இருந்தவரை அதருமக்காரர்களின் க்ஷேமத்துக்கு என்ன குறை?

சூரபன்மன் மண்ணுலகம் வந்தடைந்தான். இச்செய்திதான் தேவர்களை மிகவும் நடுக்குறச் செய்தது. தேவருலகைச் சூரன் வென்ற பின்னும் மண்ணுலக மறையவரின் வேள்வியால் அவர்களுக்கு ஆஹுதி கிடைத்து வந்தது. மண்ணுலகில் வேத கருமம் மறைந்ததால்தான் தேவர்களுக்குத் துர்ப்பிட்சம். தேவர்கள் மானுடரை வாழ்விக்கின்றனரெனில், மானிடர் தான் தேவரை வாழ்விக்கின்றனர். வேள்வியின் மூலம் இவ்வாறு பரஸ்பரம் வாழ்வித்துக் கொள்ளுமாறு கீதையில் கண்ணன் உபதேசித்திருக்கிறார். எனவே, சூரன் பூவுலகில் புகுந்ததும் தேவர்களும் முனிவர்களும் பாற்கடலை அடைந்து அறிதுயில் புரியும் அரவணைச் செல்வரை வணங்கி, சூரபன்மனால் தங்களுக்கு நேர்ந்த துன்பங்களைக் கூறி முறையிட்டுக் கொண்டார்கள்.

''சிவபெருமானை நீக்கித் தக்கன் செய்த வேள்வியில் கலந்து கொண்டதால் வந்த துன்பம் இது. இதனை விலக்க எவராலும் இயலாது. சூரபன்மன் சிவபெருமானிடம் அளவற்ற வரங்களைப் பெற்றிருக்கிறான்; அண்டங்கள் எல்லாவற்றையும் வென்றிருக்கிறான். அவனை வெல்ல நம்மால் முடியாது. அவனுடன் சமாதானம் செய்ய முயல்வதே நம்மால் இயலும்'' என்றார் நாராயணர்.

அவ்வாறே திருமால், பிரமன், இந்திரன் முதலியோர் புறப்பட்டுச் சென்றனர். சூரபன்மனிடம் வந்து ஆசி கூறி நின்றார்கள்.

தேவர்களுடன் பதினொரு கோடி உருத்திரர் கூட்டங்கள் ஒருங்கு நிற்பதைக் கண்ட சூரபன்மன், ''சிவபெருமானைப் போல் வடிவம் கொண்டுள்ள இவர்கள் யார்?'' என்று கேட்டான்.

உடனே திருமால் அவர்களின் வரலாற்றைக் கூறலானார்:



''எவளாவது 'கார்மோகினி' காதலிக்க வருவாள்னு கார் வாங்கினேன். கார் மோகினியாவது கத்திரிக்காயாவது....ஒரு ஈ காக்கை கிட்டே நெருங்கமாட்டேங்குதே!''

''அசுரகுலத்தரசே! முன்னொரு கற்ப காலத்தில் பிரமன் மூவுலகங்களையும் உயிர்களையும் படைத்து, அதனால் செருக்குற்றான். தானே முழு முதற் கடவுள் என்று கருதிச் சிவபெருமானை மறந்து விட்டான். அவன் அவ்வாறு எண்ணிய உடனே சராசரங்களின் வளர்ச்சி நின்று விட்டது. அதனைக் கண்ட பிரமன், 'இதற்குக் காரணம் என்ன?' என்று சிந்தித்தான். சிந்தனையின் விளைவாக ஐந்தொழில்களைச் செய்பவராகிய சிவபெருமானை மறந்து, அவரது அருளின்றிப் படைத்தல் தொழில் செய்ததே காரணம் என்று உணர்ந்தான். எம்பெருமானை நோக்கி அளவற்ற காலம் தவம் புரிந்தான். சிவபெருமான் பிரமனுக்குக் காட்சி தரவில்லை. எனவே, பிரமன் வருந்திக் கதறினான்; அவனது கண்களினின்றும் நீர்த் துளிகள் சிந்தின; அக்கண்ணீர்த் துளிகள் பேய்களாய் எழுந்து நின்றன. அப்பேய்களைக் கண்டு பிரமன் நடுங்கி மயங்கி வீழ்ந்தான்.

கருணாமூர்த்தியான கைலாசநாதன் பிரமனுக்கு உணர்வு அளித்து, அவனது கனவில் தோன்றினார். ''மகனே! வருந்த வேண்டாம். நீயே முழுமுதற் பொருள் என்று கருதி எம்மை மறந்ததால் உன் படைப்புத் தொழில் நிறைவேறவில்லை. அது மீண்டும் விரைவில் நிறைவேறும் வண்ணம் நம் பக்கத்தில் உள்ள உருத்திரர்களை உன்னிடத்து அனுப்புவோம்'' என்று சிவபெருமான் அருளிச் செய்தார். அதன்பின்

பிரமன் நல்லுணர்வு பெற்ருன். சிவ பெருமான் திருவருளினுல் பதினெரு உருத்திரர்கள் பிரமன் நெற்றியிலிருந்து வெளிப்பட்டு நின்ருர்கள்.

''நீங்கள் எனது நெற்றியில் தோன் றியது ஏன்?'' என்று அவர்களைக் கேட் டான் பிரமன். ''உன் படைப்புத் தொழில் நிறைவேற வேண்டும் என்ப தற்காகச் சிவபெருமான் எங்களை இவ் வாறு தோன்றச் செய்துள்ளார்'' என்று உருத்திரர்கள் பதில் கூறினுர்கள்.

''அன்போடு என்னிடம் வந்த நீங்கள் விரைவில் உயிர்களைச் சிருஷ்டி யுங்கள்'' என்று பிரமன் கூறினுன். அந்தப் பதினெரு உருத்திரர்களும் தங் களைப் போலவே பதினெரு கோடி உருத்திரர் கூட்டத்தைப் படைத் தார்கள். பிரமனின் படைப்புப் போல் அல்ப ஜீவர்களை அவர்களால் படைக்க இயலவில்லை.

''உருத்திரர்களைச் சிருஷ்டி செய்தால் உலகம் தாங்காது'' என்று முறை யிட்டான் பிரமன்.

''அப்படியானுல் நீ முன்போல் உயிர்களைச் சிருஷ்டி செய்து கொண் டிரு. நாங்கள் இப்போதே பதத்துக்குச் செல்கிறேம்'' என்று கூறிப் பதினெரு உருத்திரர்களும் புவனம் அடைந் தார்கள். தாங்கள் சிருஷ்டித்த பதி னெருகோடி உருத்திரர்களைத் தேவர்கள் கூட்டத்தில் இருக்கும்படி சொல்லிவிட்டு அவர்கள் சென்று விட்டனர். அவர் களே இந்த உருத்திரர்கள். இவர்கள் சிவசாரூப்பியம் எய்தித் தேவர்களு டன் சேர்ந்து விட்டவர்கள்.''

இவ்வாறு திருமால் சூரபன்மனுக்கு உருத்திரர் சரிதத்தைக் கூறினுர்.

**சூ**ரபன்மன் முன்னிலையில் தேவ தச்சன் வந்து நின்ருன். ''இப்பூவுல கில் வசிப்பதற்கு ஏற்ற அழகானதொரு நகரத்தை விரைவில் அமைத்துக் கொடு'' என்று சூரபன்மன் ஆணையிட் டான். அதன்படி தேவதச்சன் தென் கடலையடைந்தான். அதன் நடுவில் எண்பதினுயிரம் யோசனை விரிவுடைய தாக ஒரு நகரத்தை அமைத்தான். செம்பொற் கோபுரங்கள் அந்நகரில் வானளாவி நின்றன; மதில் அரண் மனைகள், மாட மாளிகைகள், பொன் னெடுந் தெருக்கள் ஆகியன பாங்குற அமைந்திருந்தன; எல்லா வகையிலும் சிறந்த பெரிய நவரத்தின மாளிகையை யும் அங்கே உண்டாக்கி அந்நகருக்கு 'வீரமகேந்திரபுரம்' என்று பெயரிட் டான். வீரமகேந்திரபுரத்தின் எட்டுத் திசைகளிலும் ஏமபுரம், இமையபுரம், இலங்கைபுரம், நீலபுரம், சுவேதபுரம், அவுணர்புரம், வாமபுரம், பதுமபுரம் என்னும் எட்டு நகரங்களையும் அழகு பெற அமைத்தான்.

சூரபன்மன் கட்டளைப்படி தேவதச் சன் சிங்கமுகாசுரனுக்காக வடகடலி எண்பதினுயிரம் யோசனை விஸ்தா முள்ள 'ஆசுரம்' என்னும் நகரத்தை உண்டாக்கினுன். நாவலந்தீவில் ஏமகூட மலைக்கு ஒருபுறத்தில் தாரகனுக்கா மாயமாபுரம் என்ற நகரை உண்டா கினுன். அவுண சேனைகள் தங்குவதற் கென மற்றைய கடல்கள் தோறும், தீவுகள் தோறும் பல நகரங்க அமைத்தான்.

ஆணையின் வண்ணம் அழகு நகர அமைக்கப்பெற்ற செய்தியைத் தே தச்சன் சூரபன்மனிடம் கூறினுன். சூ பன்மன் நல்ல நாளில் தன் பல களுடன் சென்று வீரமகேந்திரபுரத்தி குடிபுகுந்தான்.

பிரமன் முதலிய தேவர்கள், சக புவனங்களையும் வென்று ராஜதானியி புகுந்த சூரபன்மனுக்கு முடிசூட்ட ஆய தம் செய்தனர். சூரபன்மன் நீராடி பீதாம்பரம் உடுத்தி, மலர்களைச் சூ ஆபரணங்கள் அணிந்து பட்டாபிஷேக துக்குத் தயாரானுன். தம்பியர் இ மருங்கும் வர அவுணர்களும் அமர களும் துதிக்க சிங்காதனத்தில் அமர் தான். பிரமதேவர் மணிமகுடத்தை எடுத்துச் சூட்டினுர். அவுணர்கள் சூ வாரம் செய்து வணங்கினுர்கள். தே களும் முனிவர்களும் பொன் மலர்க தூவினுர்கள். யுத்தம் செய்து வெ பெற்றவனுக்கு உரிய மரியாதை செலுத்தத்தானே வேண்டும்?

சூரபன்மனுடைய இளவல்கள் ஏவலினுல் தேவராஜனுகிய இந்திரன் பன்மனுக்குக் காளாஞ்சியை ஏ னுன்; குபேரன் அடைப்பையை திஞன்; வாயு சாமரை வீசினுன்; ரேந்திரன் உடைவாள் பிடித்தான்; திரசூரியர்கள் குடை பிடித்தார்க வருணனும் புத்திரர்களும் ஆல டம் வீசினுர்கள்; கருடனும் கந்த ரும் சித்தரும் இசை பாடினுர்க இயமனும் அக்கினியும் பணி களாகப் பிரம்பு ஏந்திச் சபையின வரிசைப்படுத்தி நிறுத்திச் சூரபன்ம புகழ்ந்து துதித்தார்கள். தேவகுரு அசுரகுருவும் முனிவர்களும் தெளி கலசத்திலிருந்த கங்கை நீரைத் மேல ஆசி பல கூறினுர்கள். அரம்பை முதலிய தெய்வமாத ஆடிப் பாடினுர்கள்.

தேவரும் பிறரும் ஏவல் செ சூரபன்மன் ஒப்பாரும் மிக்காரும் அரசு செய்யலானுன். (தொ



5. வண்ண முடியமைவுகள் படத்தைத் தாசப் பிரகாஷ் ஹோட்டலில் மார்ச் 5-ந் தேதி டாக்டர் அ. சிதம்பரநாதன் அவர்கள்வெளியிட்டார்.

6. நூலகத் துறையில் நிபுணர்களுக்கு அமெரிக்க சர்க்கார் விருந்தளித்துக் கௌரவித்தது. இந்த வைபவத்தில் சென்னை திரு ஏ. திருமலை முத்துசுவாமி, கல்வி, சலைத் தொடர்பு உதவிக் காரியதரிசி ஹாரி ஸி. மெக் பியர்ஸனுடன் உரையாடுகிறுர்.



7. இந்திய ராணுவத்தின் பதினுருவது 'கேவல்ரி'ப் படையின் 188வது ஆண்டு விழாவில் ஜெனரல் சௌத்ரி இளம் ராணுவ அதிகாரிகளோடு அளவளாவுகிறுர். இந்தப் படையினரே இருபது வருஷங்களுக்கு முன் பர்மாவில் மெக்டிலா விமான தளத்தை அவரது தலைமையில் கைப் பற்றினர் என்பது குறிப்பிடத் தக்கது.



# 21. வில்வலன்-வாதாவி

ஆட்சி பீடத்தில் ஏறியதும் சூரபன்மனின் அதிகார வெறி தலைக்கேறியது. நன்மக்கள் சிம்மாதனம் ஏறினாலே அவர்களிடமுள்ள அதிகார பலத்தால் குணம் குன்றிப் போவார்கள். சூரபன்மாசுரனுக்குக் கேட்பானேன்?

உலகையெல்லாம் பரிபாலிக்கும் ஸ்ரீமந் நாராயணமூர்த்தியிடமும் தன் அதிகார சக்தியைக் காட்டினான் சூரன்.

திருமாலிடம் சூரன் கூறுவான்: ''நீ என் தந்தையாராகிய காசிப முனிவருக்குப் பாட்டன். ஆதலால் உன்னை அழைக்கும்பொழுது விரைந்து வர வேண்டும்'' என்று கட்டளையிட்டான்.

பிரமதேவரை நோக்கி, ''உன் புத்திரர்களுடன் எப்போதும் இங்கு வந்து பஞ்சாங்கம் சொல்லிப் போக வேண்டும்'' என்றான்.

கதிரவனை நோக்கி, ''நீ நம்முடைய நகர் மதிலின் மேல் உக்கிரமான வெப்பத்துடன் செல்லுதல் கூடாது. எந்நாளும் இங்கு இளங்கதிராய்த் திகழ வேண்டும்'' என்று பணித்தான்.

சந்திரனை அழைத்து ''நீ இனி தேய்தல் வளர்தலின்றி, பூரண கலையோடு நம் நகரில் சஞ்சரிக்க வேண்டும்'' என்று கட்டளையிட்டான்.

அக்கினியை நோக்கி, ''நம் ஊரில் உள்ளவர்கள் யார் நினைத்தாலும் அவரிடத்து வந்து அவர்கள் இடுகின்ற பணியைச் செய்ய வேண்டும். உன்னை என் மக்களில் யார் தீண்டினாலும் செந்தாமரை மலர் போலக் குளிர வேண்டும்'' என்றான்.



# கந்தன் கருணை

திருமுருக கிருபானந்தவாரியார்

இயமனை அழைத்து, ''அசுரர்கள், நம்முடைய யானை, குதிரை முதலிய விலங்குகள் ஆகியவற்றின் உயிரைப் பறிக்க வேண்டும் என்று நீ கனவிலும் கருதக் கூடாது'' என்று கூறினான்.

வாயுவை அழைத்து, ''என் நகரத்தில் உள்ள புழுதியை நீக்கிச் சுத்தம் செய்வது உன் தொழில்'' என்றான்.

வருணனை நோக்கி, ''வாயு சுத்தம் செய்த இடங்களில் எல்லாம் பன்னீர் தெளித்துப் பச்சைக் கர்ப்பூரம் சந்தனம் கஸ்தூரி முதலியவற்றைத் தெளிக்க வேண்டும்'' என்று கட்டளையிட்டான்.

"தேவர்களே! நாம் உத்தரவிடும் போது நீவிர் மீன் பிடித்துத் தரவேண்டும்" என்று கட்டளை பிறப்பித்தான். தேவர்கள் அனைவரும் அஞ்சி நடுங்கிச் சூரன் கட்டளையைத் தவருமல் நிறைவேற்றி வைப்பதாகக் கூறினர்கள்.

ஆண்டவனின் ஆட்சிக்கும் அசுரன் ஆட்சிக்கும் உள்ள வேற்றுமையைப் பாருங்கள்! ஆண்டவனின் ஆட்சியில் அக்கினியும், வாயுவும், வருணனும் தங்களது இயற்கைப் போக்குப்படி நடப்பார்கள். அந்தப் போக்கை மாற்ற ஆண்டவனுக்குச் சக்தி இருப்பினும் அவர் அவ்வாறு செய்வதில்லை. அசுரனே தன்னையும் தன் சுற்றத்தினரையும் பொறுத்த மட்டில் இயற்கைச் சக்திகளும் செயற்கையாகத் தொழில்பட வேண்டுமென்று ஆக்ஞை யிட்டான்.

சூரபன்மன் தேவதச்சனுடைய மகளாகிய பதும கோமளையைத் திருமணம் செய்து கொள்ள விரும்பினன். விதிப்படி திருமணம் செய்து வைத்தார் சுக்கிராச்சாரியார். தேவர், அசுரர், கந்தருவர், சித்தர், கின்னரர், இயக்கர், நாகர், கிம்புருடர் முதலிய பல சாதிப் பெண்களைக் காமக் கிழத்தியர்களாகக் கொண்டு சூரன் இன்புற்றான். சிங்கமுகாசுரனுக்கு இயமனுடைய மகளாகிய விபுதையையும், தாரகாசுரனுக்கு நிருதியின் மகளாகிய சவுரியையும் திருமணம் செய்து வைத்து அவர்களை அவர்களது நகரங்களுக்கு அனுப்பி வைத்தான். தன் இளவல்களுக்கு இரண்டு கோடி வெள்ளம் சேனைகளையும் அளித்தான்.

விண்ணுலகத்திலும், மண்ணுலகத்திலும், ஏழ் பிலங்களிலும், எண்டிசைகளிலும் அசுர சேனைகள் சூரபன்மனுடைய கட்டளைப்படி கொடுங்கோல் செய்து வந்தார்கள். தான் வசித்த வீரமகேந்திரபுரத்தில் இலக்கம் வெள்ளம் அசுரர்களை மாளிகைகள் தோறும் இருத்தினன் சூரன். யானை, குதிரை, யாளி, கரடி, புலி, பன்றி, சிங்கம், மான் ஆகியவற்றின் முகங்களைக் கொண்ட எட்டு அசுரத்தலைவர்களை வீரமகேந்திரபுரத்தின் எட்டுத் திக்குகளிலும் உள்ள நகரங்களுக்கு அனுப்பி வைத்தான். தேவர்களும் முனிவர்களும் சூரபன்மனு



டைய வீர மகேந்திரபுரத்திலும், சிங்க முகாசுரனுடைய ஆசுர நகரத்திலும் தாரகாசுரனுடைய மாயமாபுரியிலும் சென்று அவர்கள் இட்ட பணியைச் செய்து வந்தார்கள்.

தேவர்கள் தமது விதியை நொந்து கொண்டு கற்பகத் தருவின் கீழ் வாழும் வாழ்க்கை நீங்கி வலைஞர்கள் போல் மீன் பிடிக்க வேண்டிய காலம் வந்துவிட்டதே என்று வருந்தி, சூரபன்மனை வணங்கி நாள்தோறும் மீன்களைப் பிடித்து வந்து அசுரர்களுக்குக் கொடுத்தார்கள். மீன் கூடைகளைச் சுமந்து வந்த தேவர் களை நோக்கிய அசுரர்கள் அவர்களை ஏளனம் செய்து துன்புறுத்தி மகிழ் வார்கள்.

சூரபன்மனுக்குப் பதுமகோமளை யிடத்துப் புதல்வன் ஒருவன் பிறந்தான். அம் மகவைக் கண்டு மகிழ்ந்த சூர பன்மன் விழாக் கொண்டாடினன். பொன் மழை பொழிந்தான். தன் சுற்றத்தார்க்கெல்லாம் செல்வங்களை வாரி வாரி வழங்கி மகனைத் தொட்டி லில் இட்டான். அரம்பையர்களும் அசுரப் பெண்களும் அக்குழந்தையை ஆசீர்வதித்தனர்.

வளர்பிறை போல் வளர்ந்து வந்த அக்குழந்தை ஒரு நாள் தொட்டிலில் தூங்கும்போது திறந்திருந்த சாளரத் தின் வழியாக சூரியகிரணம் தாக்கியது. உடனே அக்குழந்தை கோபத்துடன் ஆகாயத்தில் பாய்ந்து சூரியனைக் கையால் பிடித்து இழுத்து வந்து தொட்டிலின் காலில் கட்டிவிட்டு முன் போல் துயில் கொண்டது. விண்ணில் விரிசுடரோன் இல்லாமையால் விண்ண வர்கள் அஞ்சி வருந்தினர்கள். இந்திரன் முதலிய தேவர்கள் சூரபன்மனிடம் வந்து கதிரவனைச் சிறை விடுக்கும்படி வேண் டிக்கொண்டனர். சூரபன்மன் தன் மக னுடைய வீரச் செயலை நினைத்து மகிழ்ந்தான்.

''என் மகன் சூரியனைச் சிறை செய் தது எனக்குத் தெரியாது. என் மகன் சிறையிடும்படியாக சூரியன் என்ன குற்றம் செய்தான்?'' என்று கேட் டான். ''கதிரவனின் கிரணம் உம் மகனுடைய முகத்தைத் தீண்டியது. அதனால் சூரியனைப் பிடித்துச் சிறையி விட்டு விட்டான்'' என்று பிரமதேவர் கூறினர். ''நீங்கள் என் மகனிடம் இன்சொல்லால் வேண்டிக் கதிரவனைச் சிறை விடுத்து இங்கே கொண்டு வாருங்கள்'' என்றான் சூரபன்மன்.

அரம்பையர்கள் பாடியாட்டுகின்ற தொட்டிலில் கிடந்தான் சூரபன்மனின் மகன். பிரமதேவரும் ஏனைய தேவர் களும் அங்கு வந்து குழந்தைக்கு நல் லாசிகள் பல கூறினர்.

''உங்களுக்கு என்ன வேண்டும்? சொல்லுங்கள்'' என்று அக் குழந்தை பிரமதேவரிடம் கேட்டது.

''சூரியனைச் சிறையிலிருந்து விடு விக்க வேண்டும்'' என்று பிரமதேவர் வேண்டிக் கொண்டார்.

''உன்னுடைய அஸ்திரத்தை எனக் குத் தந்தால் சூரியனைச் சிறை விடுப் பேன்'' என்று குழந்தை கூறியது. அதற்கு இணங்கிப் பிரமதேவர் தமது மோகப் படையைக் குழந்தைக்குக் கொடுத்தார். அதனைப் பெற்ற அக் குழந்தை சூரியனைக் கட்டவிழ்த்து விட்டது.

கந்தவேளும் குழந்தையா யிருந்த போது பிரமனைச் சிறை புரிந்ததுண்டு. ஆனால் அந்தக் காதை உலக க்ஷேமமாகிய தத்துவ உபதேசத்தில் முடிந்தது. அசுர குல இளவரசன் சூரியனைச் சிறை வைத்ததோ அவனது சுயலாபத்தில் முடிந்தது. அமுதனுக்கும் அசுரனுக்கும் உள்ள வேற்றுமையைப் பாருங்கள்.

சூரியனும் பிரமதேவரும் குழந்தை யிடம் விடைபெற்றுக் கொண்டு சூரபன்மனிடம் சென்றார்கள். அவனி டம் நிகழ்ந்தவற்றை யெல்லாம் சொன் னார்கள். பானுவாகிய சூரியனிடம் தன் மகவு கோபித்த காரணம் பற் றியே சூரன் தன் குழந்தைக்குப் பானு கோபன் என்று அந்த நாளில் பெயர் சூட்டினான்.

பானுகோபனுக்குப் பின் பது கோமளையிடம் சூரபன்மனுக்கு அக்கினி முகன், இரண்யன், வச்சிரவாகு என் மூன்று புதல்வர்கள் பிறந்தார்கள். ஏனைய மனைவியரும் ஏககாலத்தில் மூவா யிரம் புதல்வர்களைப் பெற்றார்கள்.

சிங்கமுகாசுரன் தனது பட்டத்துத் தேவியாகிய விபுதையிடம் அதிசூரன் என்னும் மகனையும், மற்ற மனைவி யரிடம் நூறு புத்திரர்களையும் பெற் றான். தனது பட்டத்துத் தேவியாகிய சவுரியிடம் தாரகன் அசுரேந்திரன் என்னும் மகனைப் பெற்றான். அப் புதல்வன் சகல நற்குணங்களுக்கும் உறைவிடமாகத் திகழ்ந்தான். அறிவு மிக்க அவன் சகல கலைகளிலும் வல்லவ னாக வளர்ந்தான். அவன் தீமைகள் புரிய மாட்டான். பாவ காரியங்களில் ஈடுபட மாட்டான்; தருமமல்லாத வற்றை நினைக்கவும் மாட்டான். கள்ளிச் செடி அகிலைத் தந்தது போல் தாரகன் அசுரேந்திரனைப் பெற்றான்.

சூரபன்மனின் தங்கை அசமுகி திருமணம் செய்துகொள்ளாதவள். கற்பு நெறியைப் பின்பற்றாமல் விரும்பிய ஆடவனுடனெல்லாம் சேர்ந்து வாழ்ந்தாள். பாவமே வடிவாக வந்த அவள் தருமத்தைக் கனவிலும் நினைக்கவில்லை. அவள் தேவர்களின் மனைவியரைத் தன் தமையன்மார்களுக்கு மனைவியராக்கி வைப்பவள்; முனிவர்கள் செய்யும் வேள்விகளைக் கெடுப்பவள்; அசுரர் குலத்தை அழிக்க அநீதி புரிந்து உலவுவாள்; அழகிற் சிறந்த ஆடவரை வலியப் புணர்வாள்.

ஒருநாள் அசமுகி துருவாச முனிவருடைய ஆசிரமத்துக்குச் சென்று "உங்களுடன் கூடி மக்களைப் பெற வந்திருக்கிறேன்" என்று கூறினாள்.

துருவாச முனிவர், "பெண்ணே! உன்னுடன் நான் கூடினால் என் தவம் விணாகும்; நீ இங்கு நிற்பதே எனக்குப் பழியைத் தரும்" என்று கூறினார்.

"முனிவரே! என்னிடமிருந்து தப்பி ஓடிவிடலாம் என்று எண்ண வேண்டாம். நான் உங்களைக் கூடாது போக மாட்டேன்" என்று கூறி அசமுகி அவரைப் பலாத்காரம் செய்தாள். அப்பொழுது அவளிடத்தில் வலிமை மிக்க வில்வலன், வாதாவி என்ற புதல்வர்கள் பிறந்தார்கள்.

அக் குழந்தைகளை அசமுகி அன்புடன் தழுவி உச்சி மோந்தாள். அப் புதல்வர்கள் இருவரும் துருவாச முனிவரை வணங்கினார்கள். அவர் "உங்களுக்கு என்ன வேண்டும்?" என்று கேட்டார். "தந்தையே! உங்கள் தவம் முழுவதையும் எங்களுக்குத் தந்தருள வேண்டும்" என்று கேட்டனர். "மைந்தர்களே! நான் அரிதிற் செய்த தவத்தைத் தரமாட்டேன். வேறு பொருளைக் கேளுங்கள்" என்று துருவாசர் கூறினார். அப் புதல்வர்கள் கோபத்துடன் தங்கள் தந்தையாகிய துருவாச முனிவரையே கொல்ல விரைந்து எழுந்தார்கள். அவர்கள் செயலைக் கண்டு சினமடைந்த துருவாச முனிவர் "நீங்கள் நாடோறும் முனிவர்களுக்குத் துன்பம் செய்து வாழ்ந்து அகத்திய முனிவரால் அழியக் கடவது" என்று சாபம் கொடுத்து விட்டு மறைந்து போனார்.

வில்வலன், வாதாவி இருவரும் தாயாகிய அசமுகியிடம் சென்றனர். முனிவர்களைத் துன்புறுத்திக் கொல்லும்படி அவர்களுக்கு அசமுகி உபதேசம் செய்தாள். அங்கிருந்து வேறு வனம் சென்ற வில்வலனும் வாதாவியும் அக் கினியில் நின்று பிரமதேவரைக் குறித்து அளவற்ற காலம் கடும் தவம் செய்தனர். பிரமதேவர் தரிசனம் தராததால் மனம் வருந்திய வில்வலன் தன் தம்பியாகிய வாதாவியைக் கொன்று அவனது இரத்தத்தையும், தசையையும் நெய்யும் அவியுமாக நெருப்பில் சொரிந்து யாகம் செய்தான். பிரம்மதேவர் பிரசன்னமானார். வில்வலன் பிரமதேவரைப் பணிந்து துதித்து, "என் தம்பி குறையில்லாத வடிவத்துடன் எழுந்து வர வேண்டும்" என்று கேட்டான். "வாதாவி எழுக" என்று பிரமதேவர் கூறியதும் அவன் எழுந்து வந்தான்.

அதனைக் கண்டு அதிசயித்த வில்வலன் மனத்தில் சூதான எண்ணத்தோடு ஒரு வரம் கேட்டான். "இப்போது தாங்கள் கூறியவுடன் இறந்த வாதாவி மீண்டும் வந்தானன்றோ? இதே போல ஆட்டின் உருவம் கொண்ட என் தம்பி உடல் வெட்டுப்பட்டு இறக்க, அதன் பின் நான் 'தம்பியே எழுக' என்று அழைத்ததும் அவன் உயிர் பெற்று எழுந்து வரத் தாங்கள் வரம் தரவேண்டும்" என்று பிரமரைக் கேட்டுக் கொண்டான். பிரமதேவரும் வரத்தை அருளினார்.

பிறகு வில்வலன், வாதாவி இருவரும் சூரபன்மன் முன் சென்று தங்கள் வரலாற்றைச் சொல்லி அவனை மகிழ்வித்தனர். சூரபன்மன் அவ்விரு மருமக்களையும் தழுவி மகிழ்ந்து தன்னுடன் அவர்களைச் சில காலம் வைத்துக்கொண்டான்.

பிறகு அவர்கள் குடக நாட்டில் வளமை மிக்க ஒரு காட்டில் ஆசிரமத்தை நிறுவி அதில் முனிவர் போல் வேஷமிட்டு வசித்து வந்தார்கள். அவ்வழியே வரும் முனிவர்களைக் கொல்ல வேண்டும் என்று எண்ணிய வில்வலன், முனிவர்கள் வந்தால் அவர்களைப் பணிந்து உபசாரத்துடன் அழைத்து வருவான். "உணவு அருந்த வாருங்கள்" என்று கூறி ஆட்டுக் கடா வடிவத்தில் இருக்கும் வாதாவியைக் கொன்று கறி சமைத்து அவர்களுக்கு விருந்தளிப்பான். முனிவர்கள் விருந்துண்ட பின், "தம்பி எழுக" என்று கூவுவான். உடனே பிரமதேவர் தந்த வரத்தின் சக்தியால் வாதாவி, தன்னை உண்ட முனிவருடைய வயிற்றைக் கிழித்துக் கொண்டு வெளியே வருவான். இந்தச் சூழ்ச்சியில் சிக்கி இறக்கின்ற முனிவர்களின் தசைகளை இருவரும் உண்டு களிப்பார்கள். இவ்வாறே வாதாவியும், வில்வலனும் நாடொறும் முனிவர்களைச் சூழ்ச்சியால் கொன்று வந்தனர்.

**(தொடரும்)**

* என் மேனியெழிலுக்கு
ஆதரவு **லக்ஸ்**
என்கிறார் வைஜயந்திமாலா




மேனியழகு...
வைஜயந்திமாலாவுக்கு
எவ்வளவு முக்கியமோ
அவ்வளவு முக்கியம்
உங்களுக்கும்... எனவே
அதே கவனிப்புக்குரியது!

'என் போலவே உங்களுக்கும் முக்கியமானது மேனியழ
என்கிறார் வண்ணமயில் வைஜயந்திமாலா. 'பெண்மை
குக்கு அதுவே எழில் நிறைவு. மென்மையே உருவான
நுரையோடு கமகமவென்று என் மனம் கவரும்
சோப்பை நீங்களும் உபயோகித்தாலென்ன? உங்கள்
ருட அழகுசாதனமாக விளங்கட்டும் லக்ஸ்!

லக்ஸ் டாய்லெட் சோப் சினிமா நட்சத்திரங்களின் தூய,
அழகுசாதன சோப்: வெண்மையிலும், வானவில்லின் 4 வண்ணங்களிலும்

லின்டாஸ் - LTS. 189-140 TM

இந்துஸ்தான் லீவர்



# கந்தன் கருணை

## 22. விண்ணவர்கோன் மண்ணுலகேகினன்!

சூரபன்மன் இந்திரஞாலத் தேர்
[illegible]து ஏறி நாடொறும் ஆயிரத்தெட்டு
[illegible]ண்டங்களிலும் சென்று அரசு செய்து
[illegible]காண்டிருந்தான். ஒரு நாள் அவன்
[illegible]ாதாளத்தில் இருப்பான்; ஒரு நாள்
[illegible]ண்ணுலகத்தில் இருப்பான்; ஒருநாள்
[illegible]த்தியலோகத்தில் இருப்பான்; ஒரு
[illegible]ாள் வைகுந்தத்தில் இருப்பான். இவ்
[illegible]ாருகப் பகல் முழுவதும் வெளிச்
[illegible]சன்று மாலையில் வீரமகேந்திரபுரிக்குத்
[illegible]ரும்புவான் சூரபன்மன்.

அதிகார வெறியோடு காம வெறியும்
[illegible]ருந்தது. தன்னை யாரும் எதுவும்
[illegible]சய்ய முடியாது என்ற எண்ணத்தில்
[illegible]னம் போனபடி செல்ல விரும்பினன்.
[illegible]வம் புரிந்தால் விடையிறுத்தே
[illegible] வேண்டும் என்பதை மறந்தான்.
[illegible]துவே கட்டுக்கடங்காத அதிகார
[illegible]லத்தின் போக்கு, பின்னல் வரும்
[illegible]கட்டை உணராமல் கற்புக்கரசியாகிய
[illegible]தவி இந்திராணியையே அபகரிக்க
[illegible]ண்ணம் கொண்டான் சூரன், தன்
[illegible]டைத் தலைவனை அழைத்து, ''நீ
[illegible]ப்பொழுதே சென்று இந்திரனைப்
[illegible]டித்து என் முன் கொண்டு வந்து

நிறுத்து'' என்று கூறினன். இந்திராணியைக் கவர வீரப் பெண்களையும் ஏவினன். அவர்கள் சூரபன்மனின் கட்டளையை நிறைவேற்றுவதற்காக விரைந்து அமராவதி சென்றனர்.

அவர்களைக் கண்ட ஒற்றர்கள் இந்திரனிடம் செய்தியைக் கூறினர்கள். இந்திரன் இந்திராணியையும் அழைத்துக்கொண்டு மாயா சக்தியினல் பூமியில் மறைந்து சென்ருன். சூரபன்மனல் ஏவப்பட்ட அசுர வீரர்களும் வீரப் பெண்களும் அமராவதி சென்று இந்திரனையும் இந்திராணியையும் தேடினர்கள். அவர்கள் இருவரையும் காணுததால் ஏமாற்றம் கொண்டார்கள்.

வந்த காரியம் தோற்றுப்போன ஆத்திரத்தில் அங்குள்ள தேவர்களை அசுரர்கள் பிடித்து அடித்து ''இந்திரனும் இந்திராணியும் இருக்குமிடத்தைக் காட்டுங்கள்'' என்று வற்புறுத்திச் சித்திரவதை செய்தார்கள். அவர்களுக்கு இந்திரனும் அவனது சதியும் சென்ற இடம் தெரியாது என்று கண்டபின் அவர்களை விட்டுச் சென்ருர்கள்.

வீரமகேந்திரபுரிக்குத் திரும்பிய அசுரர்கள் வானுலகில் நிகழ்ந்ததை சூரபன்மனிடம் கூறினர்கள். சூரபன்மன் கடுங்கோபம் கொண்டான்; மணியை இழந்த நாகம் போல் வருந்தினன். இந்திரனும் இந்திராணியும் இருக்குமிடத்தை எப்படியும் அறிந்து வரும்படி பல ஒற்றர்களை ஏவினன். அந்த ஒற்றர்கள் உலகெங்கும் தேடித் திரிந்து கொண்டிருந்தார்கள்.

இந்திரனும் இந்திராணியும் நீங்கியதால் விண்ணுலகம் பொலிவிழந்தது. மதியும் விண்மீனும் இழந்த இரவு போலச் சோபை குன்றியது. தேவர்களின் புலம்பல் மிகுந்தது.

இந்நிகழ்ச்சிக்கு முன்னரே, இந்திரனின் சோதரனைபடியால் உபேந்திரன் எனப்படும் விஷ்ணுமூர்த்தி விண்ணுலகத்தை விட்டுத் தமது வைகுண்டத்தை அடைந்திருந்தார். இந்திரனின் புதல்வனுகிய சயந்தன் ஸ்ரீமன் நாராயணரைக் காண வைகுண்டம் சென்று அங்கேயே தங்கியிருந்தான். தனது தாய் தந்தையர் மறைந்தோடியதையும் அசுரர்களின் கொடுமையையும் கேட்டு அவன் மிகவும் வருந்தி மீண்டும் பொன்னுலகம் வந்தான். தேவர்களின் ஆருத்துயரைக் கண்டு மனம் நொந்தான். தாய் தந்தையைக் காணுமல் துயரக் கடலில் மூழ்கினன்.

நாரத முனிவர் சயந்தனின் முன் தோன்றினர். சயந்தன் நாரதரை வணங்கி, ''சூரபன்மனுக்கு அஞ்சி என்

தாய் தந்தையர் மறைந்தோடி ஒளிந்தனர்; அவர்கள் எங்கே சென்றனர் என்பதறியாமல் வருந்துகிறேன். எனது துயர் எப்போது நீங்கும்?'' என்றான்.

''சயந்தா! இன்பமும் துன்பமும் மாறி மாறி வருவது இயல்பேயாகும். சந்திரனுக்குத் தேய்வும் வளர்வும் மாறி மாறி நிகழ்வது போல் எவரது வாழ்விலும் உயர்வும் தாழ்வும் மாறி மாறி வந்தபடிதான் இருக்கும். வினைக்குத் தக்கவாறு நன்மை தீமைகள் வரும். வருந்தாதே. விரைவில் சூரபன்மன் அழிவான்'' என்று ஆறுதல் கூறினர். மனம் தேறிய சயந்தன் மற்ற தேவர்களுக்கும் ஆறுதல் கூறினான்.

விண்ணுலகிலிருந்து மறைந்து போன இந்திரன் தன் தேவியாகிய இந்திராணியுடன் தமிழகத்தில் உள்ள சீர்காழிப் பதியை யடைந்தான்.

தேவலோகத்தில் ஏகசக்கராதிபனாகி வாழ்ந்த காலம் முடிந்த பின் தனது எளிமையை உணர்ந்தான். அமரர் நாயகன் என்ற விருது போன பின் ஆண்டவனின் அடிமையாக இருக்கும் விருப்பம் அவனுள் எழுந்தது. சோதனைக் காலங்களிலேயே சித்தத் தெளிவும், தெய்வ நினைவும் மிகும். இறைவன் சோதனை புரிவதன் நோக்கமே இதுதான். தேவராஜன் தெய்வபக்தி மிகப் பெற்றான். ஆண்டவனருளின்றி உய்ய வழியில்லை யெனக் கண்டான்.

அசுரருக்கும் அமரருக்கும் வித்தியாசம் இதுவே. இரு சாராருமே தவறு செய்வதுண்டு. ஆனால் தவறு அடையுங்கால் அமரர்கள் தெய்வ நினைவு கொண்டு பச்சாதாபத்துடன் பக்தி புரிவர். தக்ஷன் செய்த வேள்வியில் தேவர் யாவரும் சிவநிந்தை புரிந்தது தவறு. அந்தத் தவற்றினாலேயே பின்னால் பலவாறாகத் துன்புற்றனர். அவ்வாறு துன்புறும்போது அவர்கள் தங்களது தவற்றுக்காகவே தண்டனை பெறுகிறோம் என்ற நல்லுணர்ச்சியைப் பெற்றிருந்தனர். அசுரரோ எத்தனை அபாயம் ஏற்படினும் அகம்பாவத்தை விடமாட்டார்கள்.

சிவபெருமானுக்குத் தொண்டு செய்ய விரும்பிய தேவராஜன் சீர்காழியில் திருநந்தவனம் அமைத்தான். சந்தனம், அகில் முதலிய மரங்களை வேலி ஊன்றிச் சிறு சண்பகம், கோங்கு, மல்லிகை, முல்லை, செவ்வந்தி முதலியவற்றைப் பயிர் செய்தான். அந்த நந்தவனத்தில் மலர்ந்த மணம் மிகுந்த மலர்களால் சிவபெருமானைப் பூசித்து வழிபாடு செய்து கொண்டிருந்தான்.

சூரபன்மனின் ஒற்றர்கள் அவ்விடத்தையும் நெருங்கினர். இதை அறிந்த இந்திரன் தன் மனைவியுடன் மூங்கில் வடிவாய் மறைந்திருந்து தவம் புரிலானான். சூரபன்மனின் ஒற்றர்கள் இந்திரனைக் காணாமல் திரும்பினர்கள்.

அவுணர்களின் கொடுங்கோன்மையால் மழை பொழியவில்லை. அதனால் இந்திரன் வளர்த்த திரு நந்தவனம் வாடியது. தேவராஜப் பதவியில் தான் சுகமாக இருக்க இயலவில்லை என்ற ஆண்டவனுக்குக் கிங்கரனாக இருந்து மலர் வழிபாடு செய்யவும் தடை வந்ததே என்று உளம் வருந்திய இந்திரன் எம்பெருமானை வணங்கித் துதித்தான்.

''தேவராஜன்! துயருறாதே! நீ வைத்த நந்தவனம் வாடிப்போயினும் தாலும் அழிந்து விடாது. இந்தத் தலத்தில் திவ்விய தீர்த்தமொன்று வந்து பாய்ந்து அதனை வளப்படுத்தும்'' என்று அசரீரி வாக்கு எழுந்தது.

''இதுவும் சிவபெருமானின் திருவருளே!'' என்று இந்திரன் மகிழ்ந்தான்.

தமிழகத்தைத் தேடிப் பாய்ந்து தாயாக அருள் புரியும் அந்தத் திவ்விய தீர்த்தத்தின் வரலாற்றை இனிப் பார்ப்போம். (தொடரும்)

# நம்பிக்கைக்கு உகந்த, தரத்தில் உயர்ந்த மோட்டார் உறுப்புகள்

டிவிஎஸ் வினியோகிக்கும் மோட்டார் உறுப்புகள் பரிசீலனை செய்யப்பெற்று, தேர்ந்த பிறகுதான் விற்கப்படுபவை இந்த உண்மையை பஸ், லாரி, கார் சொந்தக்காரர்கள் நன்கு அறிவர். ஆகையால்தான் டிவிஎஸ் வினியோகிக்கும் உறுப்புகளையே அனைவரும் வாங்குகிறார்கள்.

## டிவிஎஸ் வினியோகிக்கும் நம்பகமான இதர மோட்டார் உறுப்புகள்:

| | | | |
|---|---|---|---|
| | | | Standard Battery<br>ஸ்டாண்டர்டு பேட்டரி |
| Canara Springs and Leaves<br>கானரா ஸ்பிரிங்குகள், லீவுகள் | BORG & BECK Clutch & Spares<br>போர்க் & பெக் கிளட்ச், ஸ்பேர்கள் | MICO Fuel Injection Parts<br>மைக்கோ ப்யூயல் இன்செக்ஷன் பார்ட்டுகள் | Double Zip<br>டபிள் ஜிப பிரஸிஷன் பார்ட்டுகள் |
| QHR Tie Rod Ends<br>QHR<br>டை ராடு எண்டுகள் | TALNCO VALVES<br>ட்ரான்கோ வால்வுகள் | HELLA Horns<br>ஹெல்லா ஹாரன்கள் | ROLON Timing Chains<br>ரோலான் டைமிங் செயின்கள் |
| KAP AUTO PARTS<br>KAP<br>ஆட்டோ பார்ட்டுகள் | Fenner Fan Belts<br>பென்னர் பான் பெல்டுகள் | FRITZ Filter Elements<br>ப்ரிட்ஸ் பில்டர் எலிமெண்டுகள் | allite Bulbs<br>அல்லைட் பல்புகள் |

டி. வி. சுந்தரம் அய்யங்கார் & ஸன்ஸ் பிரைவேட் லிமிடெட்
மதுரை-திருச்சி-திருநெல்வேலி-புதுக்கோட்டை-சேலம் கோயமுத்தூர் திருவனந்தபுரம்




சுந்தரம் மோட்டார்ஸ் பிரைவேட் லிமிடெட்,
மதராஸ்-பெங்களூர் செகந்திராபாத் (டெக்கான்)

மதராஸ் ஆட்டோ சர்வீஸ் பிரைவேட் லிமிடெட்,
மதராஸ்-பெங்களூர்

# கந்தன் கருணை

## 23. குறுமுனியும் பெருமலையும்

பின்னர் நிகழப் போவன
யெல்லாம் சிவபெருமான் திருவ
ளால் முன்னரே அறியும் ஆற்ற
பெற்றவர் நாரத முனிவர். பி
ஞல் நடக்க வேண்டியதற்கு அ
குணமான செயல்களை முன்ன
அவர் தொடங்கி வைப்பா
அவர் விந்தகிரியை அடைந்
அதற்கு ஆசி கூறினர். "விந்
கிரியே! மேரு மலை மிகவும் கருவ
படுகிறது. 'நான் சிவபெரு
னின் வில்லாக வளைந்தேன். உ
தேவியார் என்னிடமே வள
தார். எல்லா மலைகளுக்கும் நா
அரசனுகத் திகழ்கிறேன். சந்தி
சூரியரும் மற்ற கிரகங்களும் எ
னையே வலம் வருகின்றன. நா
ஆயிரம் கொடுமுடிகளைக் கொ
டிருக்கிறேன். என்னுடைய
பாகத்தில் திருக்கயிலாய ம
இருக்கிறது. தேவர்கள் என்னிட
குடிகொண் டிருக்கிருர்கள். நா
பொன்னுகத் திகழ்கிறேன். எனக்
ஒப்பாக வேறு மலை இல்லை' எ
றெல்லாம் மேருமலை செருக்கு
றுளது" என்று கூறினர்.

நாரதர் கூறியதைக் கேட்
விந்தகிரி ஏக்கப் பெருமூ
விட்டது. "மேரு மலைக்கு எ
வளவு அகங்காரம்? வீரபத்தி
கடவுளாகிய சரபப் பற

திருமுருக
கிருபானந்தவாரியார்

பேருருவம் கொண்டு நரசிங்கத்தின் முன் நின்றபொழுது ஒரு பருக்கை போல் அதன் காலடியில் கிடந்த இந்த மேருவுக்கு இவ்வளவு செருக்கா? நாரத முனிவரே! மேரு மலையின் செருக்கை யொடுக்கி என் பெருமையைக் காட்டுகிறேன்'' என்று கூறிய விந்தகிரி உடனே வளரத் தொடங்கியது. விரைவிலேயே சத்திய உலகம் வரை வளர்ந்து நின்றது. அதனால் சந்திர சூரியரின் கதி தடைப்பட்டது.

தேவரும் முனிவரும் வருந்தினர். விந்தகிரியை அடக்கக் கூடியவர் யாரென யோசித்தனர். மகா சமுத்திரத்தை உள்ளங்கை நீராக எடுத்து ஆசமனம் செய்த அகத்திய முனிவரால்தான் விந்தகிரியின் தருக்கை அழிக்க முடியும் என்று ஆராய்ந்து தெளிந்தார்கள்.

அகஸ்தியர் பார்வைக்குச் சிறியவராக இருப்பார். இதன் தாத்பரியம் வெளித் தோற்றத்தில் சிறுமை காணுமிடத்தில் தான் உள்ளார்ந்த பெருமை உறையும் என்பதேயாகும்.

அண்ட கடாகம் வரை வளர்ந்த விந்தகிரியின் செருக்கை அடக்குவதற்காகச் சந்திர சூரியரும் பிறரும் அகத்திய முனிவரை நினைந்தார்கள்.

''மகத்துவ முடையா யோலம்
மறையுணர் மணியே ஒலம்
மிகத்துயர் படைத்தேம் ஒலம்
விமலனே ஒலம் விந்த
நகத்தினல் அலைந்தோம் ஒலம்
ஞான நாயகனே ஒலம்
அகத்திய முனிவா ஒலம்
அடிகளே ஒலம் ஒலம்!''

''தவசிரேஷ்டரான அகத்தியப் பெருமானே! கிரகங்களின் ஆகாய வழியை விந்தகிரி தடை செய்து நிற்பதால் உலகம் முழுவதும் இரவு பகல் பொழுதுகள் நிலைதடுமாறி விட்டன. அமிழ்தினும் இனிய தமிழ் கண்ட முனியே! இத்துன்பத்தை நீக்கியருள வேண்டும்'' என்று அவர்கள் வேண்டிக் கொண்டனர்.

அகத்திய முனிவர் மேரு மலைச் சாரலில் தவம் செய்து கொண்டிருந்தார். சூரிய சந்திரர் தம்மை நினைந்து வேண்டியதை அறிந்த அவர், இமையவரின் துயர் போக்கக் கருதினர். மதுரத் தமிழ் சுரந்த தவமுனியின் இதயம் கருணை மயமாகத் தானே இருக்கும்?

அகஸ்தியர் தம் சக்தியைப் பற்றித் தருக்குற வில்லை. தமக்கு ஏதும் சக்தி இருப்பின் அது இறைவன் அருளியதே எனக் கருதி அம் மகா முனிவர் சிவ பெருமானை மனத்தில் தியானித்தார்.

அந்தி வண்ணப் பெருமான் நந்தியுடன் வந்து அகத்திய முனிவருக்குக் காட்சியளித்தார். குறுமுனிவர் சிவபெருமானைப் பல முறை வணங்கி வழிபட்டு, ''விந்தகிரியின் செருக்கை அகற்றி உயிர்களுக்கு நலஞ் செய்யும் ஆற்றலை அருள வேண்டும்'' என்று விண்ணப்பித்துக் கொண்டார்.

''முனிபுங்கவ! நீ வேண்டிய ஆற்றலைத் தந்தருளினேம். விந்தகிரியை அடக்கி, அதன்பின் தென் திசையில் பொதிய மலையில் சென்றிரு'' என்று சிவபெருமான் அருளிச் செய்தார்.

அகத்தியர் சிவபெருமானைத் தொழுது, ''நான் எங்கு சென்றாலும் அபிஷேகப் பிரியரான தேவரீரைப் பூசிப்பதற்கு ஒரு தீர்த்தத்தைத் தந்தருள வேணும்'' என வேண்டினர்.

சிவபெருமான் திருக்கயிலாய மலையிலிருந்த ஏழு நதிகளுள் புனிதமாகிய காவிரி நதியை அழைத்து அகத்தியருடன் போகுமாறு பணித்தார்.

காவிரி சிவபெருமானை வணங்கினள். ''சுவாமி! இவர் ஐம்பொறிகளையும் அடக்கிய அருந்தவராயினும் ஓர் ஆடவர். இவருக்குப் பின் நான் செல்லுதல் முறையாகுமோ?'' என்று வினவினள்.

''பெண்ணே! இம்முனிவன் தவ ஒழுக்கத்தில் ஒப்பற்றவன். மாறுபாடில்லா மனத்தினன். நம் அடியார்களில் சிறந்தவன். நீ இவன் பின் தயக்கமின்றிச் செல்வாயாக! இவன் என்



றைக்கு உன்பொருட்டாகப் பார்த்து, 'போ' என்று கை காட்டுவானே அன்றே இவனை விட்டு நீங்கி உலகில் பரவுவாய்'' என்று சிவமூர்த்தி திருவாய் மலர்ந்தருளினர்.

அகத்திய முனிவரை நோக்கி, ''காவிரியை உன் கமண்டலத்தில் ஏற் பாய்'' என்று பணித்தருளினர் ஈசன்.

காவிரிநதியை அகத்தியர் கமண்டலத்தில் ஏற்றுக் கொண்டு தென் திசை நோக்கிப் புறப்பட்டார். அவர் செல்லும்பொழுது தாரகாசுரனுடைய மாய மாபுரி சமீபித்தது. அங்கே உள்ள கிரவுஞ்சன் என்ற அசுரன் அகத்தியர் வருவதைக் கண்டான். மண்ணுலகை விண்ணுலகாகவும் விண்ணுலகை மண்ணுலகாகவும், மலையைக் கடலாகவும் கடலை மலையாகவும், சூரியனைச் சந்திரனுகவும் சந்திரனைச் சூரியனுகவும் தோற்றுவித்து மாயம் செய்யவல்ல அந்த அசுரன் அகத்தியர் வரும் வழியில் பல சிகரங்களைக் கொண்ட மலையாய் நின்ருன். அந்த மலையினுள்ளே செல்வதற்கு ஒரு வழியும் இருந்தது. முனிவர் பெருமான் மலையின் நடுவே தெரிந்த வழியில் நடந்து சென்ருர். சிறிது தூரம் சென்றதும் அந்த வழி மறைந்து வேறு வழி தோன்றியது. அந்த வழியைப் பின்பற்றினர் அகத்தியர். சிறிது தூரம் சென்றதும் அந்த வழியும் மாயமாய் மறைந்தது. பின்னர், வேருெரு வழி தோன்றியது. அந்த வழியாக அகத்திய முனிவர் செல்லும் பொழுது அக்கினி நெருங்கிச் சூழ்ந் தது; சுழற்காற்று வீசியது; மழை பொழிந்து இடி இடித்து இருள் சூழ்ந் தது. இருள் படிந்ததும் கிரவுஞ்சன் பற்பல மாயங்களைச் செய்தான்.

'இது அசுரர்களின் வஞ்சனை' என் பதை முனிவர் ஞானத்தால் அறிந்து அனல்போல் சினந்து நகைத்தார். தமது கையிலிருந்த பிரம்ம தண்டத்தினல் மலையில் குத்தினர். மலை நொறுங்கிப் பல துவாரங்கள் ஏற்பட்டன. அகத்திய முனிவர் சினம் கொண்டு ''அறிவற்ற அசுரனே! நீ மலை வடிவாகவே இருந்து அவுணர்கட்கு இருப்பிடமாவாய்! உன்னல் சிவநிந்தை புரிந்த அமரர்கட்குத் துன்பம் நேரட்டும். எனது கைத்தண்டினல் குத்தி உன்மீது ஏற் படுத்திய துவாரங்கள் யாவும் மாயங்கட்கு உறைவிடமாகுக. நீ பின்னெரு காலத்தில் முருகனின் வேற்படையால் மாளக் கடவாய்'' என்று சபித்தார்.

தமது கமண்டலத்தில் உள்ள நீரை மந்திரத்துடன் தெளித்து, கிரவுஞ்சனின் மாயத்தைக் கெடுத்தார் அகஸ்தியர். தென் திசை வழியில் சென்ருர்.

தேவகிரிச் சாரலையை அடைந்தா அகத்தியர். காசியிற் சென்று க ஞுதல் பெருமானை வணங்கித் தி துப் புறப்பட்டார். அதன்பின் தெ நோக்கிச் செல்லும் வழியில் மிக உயர்ந்து வளர்ந்து நின்ற விந்தமலையை கண்டார். ''விந்த மலையே! யா பொதியாசலம் செல்ல இவ்வழி தோம்; வழி விடுக'' என்ருர்.

''கதிரவனும் திங்களும் செல்ல மு யாதபடி ஆகாய வழியை மறை நெடிய வடிவையுடைய திருமா போல் நிற்கும் நான் குறுகிய வுடைய உமக்குப் பயந்து விடுவேனே? வந்தவழியே திரும் போம்'' என்று விந்தமலை கூறியது.

மேருவின் தருக்கை அறுப்ப காக உருப்பெருக்கி நின்ற விந்த இப்போது தானே தருக்குற்று இப்ப பேசிற்று. ஆற்றல் உள்ளவிடத் அகம்பாவமும் தானே வந்து சேர்கி என்பதை உணர்த்தவே இச் சரிதங்க முனிவர்கள் தந்திருக்கிருர்கள்.

விந்தமலை கூறியதைக் கேட் அகத்தியர் நகைத்தார். அவரும் எ யற்ற ஆற்றல் பெற்றவர்தான். ஆ அகம்பாவமின்றி, அது ஐயன் அ பிரசாதமே என்றிருந்திருந்தார். போதும் ஐயனையே எண்ணி தமது கரத்தை நீட்டினர். குறு தோற்றமுடைய அவரது கரம் மே மேலும் நீண்டு கொண்டே சென் சத்தியலோகத்தைத் துழாவுமளவு குறுமுனியின் கரம் வளர்ந் வளர்ந்து வரும் தமது உள்ளங்கை விந்தமலையின் தலையில் ஆசி கூறு போல் வைத்தார் முனிவர். வளவே! பெருமை பேசிய பெரு பாதாளத்துக்குள் புதைந்து விட்ட இந்த அற்புதத்தைக் கண்டு விண்ண வியப்பெய்தினர். தமது கா விரலால் கைலாயத்தை இலங்கே மீது அழுத்திய சிவபெருமானின் வருள் பெற்றவர் எந்த அற்பு தைத்தான் செய்ய முடியாது? பா தில் அழுந்திய விந்தமலை ஆதிசேட வாசஸ்தலத்தை யடைந்தது. அப்பே தான் அதற்கு அறிவும் தெளிந்தது.

''தபோதனரே! அறியாது செ என் குற்றத்தை மன்னிக்க வேண் நான் திரும்பவும் உயர எழுங்கா எப்போது?'' என்று அகத்திய விந்தமலை வேண்டியது. ''யான் தெ திசை சென்று மீளவும் இவ்வழியே தி பும்போது மேலெழுவாய்'' என்ருர்.

அகத்திய முனிவர் தமது தெ திசைப் பயணத்தை மறுபடி தொடர்ந்தார்.

(தொட

நீங்கள் பொலிவுடனிருக்க சார்மிஸ் உபயோகியுங்கள்!



புதுமை பெறுக...
இதம் பெறுக...
நளினமாய் இருங்கள்
நாள் முழுதும்!

இளமையையும், புத்துணர்ச்சியையும் அளிக்கும் சார்மிஸ் டால்கம் பவுடர் நீங்கள் நாள முழுதும் நளினமாயிருக்க உதவுகிறது. உன்னத மனோரம்மிய மணம்கொண்ட சார்மிஸ் உங்களுக்கு சுகத்தையும் புத்துணர்ச்சியையும அளித்து, உங்கள் அழகை நன்கு சோபிககச் செய்கிறது!

# சார்மிஸ்

உன்னத, மனோரம்மிய மணத்துடன் கூடிய டால்கம் பவுடர்

CHTP.G H



## 24. காவிரியைத் தந்த கணநாதன்

**தட்சின** திசை நோக்கிச் சென்று கொண்டிருந்த அகத்திய முனிவர் வில்வலனும் வாதாவியும் வாழ்ந்து வந்த கானகத்தை நெருங்கினர்.

முனிவர் வருவதையறிந்த அவ்விரு அரக்கர்களின் இதயத்தில் ஆத்திரத் தீ மூண்டது; நாவிலோ உமிழ் நீர் சுரந்தது. அமுத மறைகளை உள்ளடக்கிய அருந்தவர்களைப் பட்சித்து ருசி கண்ட நாவல்லவா ?

''இதோ வருகிற இந்த அகத்திய முனிவன் கிரவுஞ்சனுகிய அவுணனைக் கடிந்தவன்; எனவே நமது பரம விரோதி. இவனுக்கு நமது வழக்கம் போல் உணவு படைத்துக் கொன்றுவிட வேண்டும்'' என்று ஒருவருக்கொருவர் பேசிக் கொண்டனர். உடனே,

வாதாவி ஆட்டுக்கடா வடிவம்கொண்டு புல் மேயத் தொடங்கினுன். வில்வலன் சடையும், திருநீறும், உருத்திராக்கமும், மரவுரியும் தரித்து முனிவர் போல் வடிவம் கொண்டு அகத்தியர் முன் சென்று முறைப்படி வணங்கினுன். ''எம்பெருமானே! இன்றே எளியவன் அரும்பேறு பெற்றேன். தங்களைக் காண இன்றைக்குத்தான் எனக்குக் கொடுத்து வைத்தது. இது எ ஆசிரமம். அடியேன் தரும் புற்கை அமுது செய்து ஆண்டருள வேண்டு என்று வேண்டினுன்.

வில்வலனுடைய அன்பு க வஞ்சனை மொழியைக் கேட்ட அ தியர் உள்ளத்தில் கருணை மிகுந் அவனுடைய வேண்டுகோளுக்கு இ தார். முனிவர் முக்காலமும் உ வார் என்பது உண்மையே. எ அந்தச் சக்தியை எப்போதும் ப படுத்த வேண்டும் என்ற அ மில்லை. வில்வலனிடம் அவர் அ பிக்கை கொள்ள இடமேயில்லாத தமது ஞான திருஷ்டியைப் ப படுத்த வேண்டிய அவசியம் எழவி

# கந்தன் கருணை

திருமுருக கிருபானந்தவாரியா



முனிவர் உண்ண இணங்கியதில் வில்வலன் மகிழ்ந்தான். தடாகத்தில் நீராடி மடப்பள்ளியை அடைந்து சுத்தி செய்தான். மிகவும் தூய்மையாகவும், சுவையாகவும் அன்னங்களையும் கறியமுதுகளையும் சமைத்தான். ஆட்டுக்கடாவாய் நின்ற வாதாவியை இழுத்து வந்து கொடுவாளினால் அறுத்துக் கறி சமைத்தான். பின்னர், பழங்களையும் தேன், நெய், பால் இவற்றையும் பூசைக்குரிய மற்ற திரவியங்களையும் சேகரித்து வைத்து அகத்திய முனிவரை அடைந்தான். அவரை வணங்கினான்.

''எம்பெருமானே! காலந் தாழ்ந்ததற்கு மன்னிக்க வேண்டும். உணவுக்கு எழுந்தருள்க'' என்று வேண்டினான். அகத்தியர் உணவு கொள்வதற்குச் சென்றார். அவரை வில்வலன் ஆசனத்தில் எழுந்தருளச் செய்து இலையிட்டு ஆட்டுக்கறியையும் பிற உணவுகளையும் படைத்தான். வஞ்சனையை உணராத அகத்திய முனிவர், சிவத்தைப் பேணித் திருவமுது செய்தார்; உண்டு முடிந்தபின் ஆசிரமத்தின் மற்றோரிடத்தில் சிவ சிந்தையுடன் சிரம பரிகாரம் செய்து கொண்டிருந்தார்.

பிரம தேவர் தமக்குத் தந்த வரத்தை நினைத்த வில்வலன் அகத்திய முனிவரைக் கொல்லக் கருதி, ''வாதாவி! விரைந்து வருவாய்!'' என்று அழைத்தான். உடனே வாதாவி அகத்திய முனிவரின் வயிற்றினுள்ளே ஆட்டுக்கடாவாய் எழுந்து நின்று, ''அண்ணா! இம் முனிவனின் வயிற்றைக் கிழித்துக் கொண்டு வெளி வருவேன்'' என்று ஆர்த்தான்.

அசுரர் செய்த மாயத்தை மாமுனிவர் உணராது போவாரா? மாயத்தை மாயத்தாலே மாய்க்க நினைந்தார். எளிதில் பெரிய காரியங்களைச் சாதித்து முடித்த சாதுவல்லவா அவர்? வெகு சுலபமாக வயிற்றைத்தடவி, ''வாதாபி, ஜீர்ணோபவ'' — ''வாதாவி, சீரணமாவாய்'' என்றார். அவ்வளவே! வாதாவி அகத்திய முனிவரின் வயிற்றுக்குள் வெந்து குழைந்து சீரணமாகி விட்டான்.

தம்பி வாதாவி வெளிவரமாட்டாது முனிவரின் உதிரத்திலேயே தங்கி இறந்ததைக்கண்ட வில்வலன் வெகுண்டு அசுர வடிவங்கொண்டான். ஒரு தண்டாயுதத்தை ஏந்தி அகத்திய முனிவரைக் கொல்ல வந்தான். அகத்தியர் தமது கரத்திலிருந்த ஒரு தருப்பையைச் சிவப்படைக்கலமாக்கி விடுத்

தார். அதனால் வில்வலனும் மாண்டான். பூதேவியை இரு கொடியோரின் கொடுமையிலிருந்து நீக்கி அருள் புரிந்து விட்டார் அகத்தியப் பெருமான்.

அதன்பின் முனிவர் மீண்டும் தமது வழியில் புறப்பட்டார். கொங்கு நாட்டை நோக்கிச் சென்றார். அவ்வாறு செல்லும்போது, இறந்த வில்வலனும் வாதாவியும் கரிய உடம்பும், சுழலும் கண்களும் உடையவராய் முனிவரை அணுகி அகன்றும் சூழ்ந்தும் ஆரவாரித்தார்கள். அதனைக் கண்ட முனிவர், 'நாம் கொன்ற வில்வலனும் வாதாவியும் துருவாச முனிவரின் புத்திரர்களாதலால், அவர்களைக் கொன்ற பாவம் பிரமஹத்தியாய் நம்மை இவ்வுருவங்களில் தொடர்ந்து வருகிறது. இப்பாவம் நீங்கும்பொருட்டு இங்கு சிவபெருமானை வழிபாடு செய்வோம்' என்று கருதி அங்கே ஒருபுறத்தில் சிவலிங்கம் அமைத்துப் பல நாட்கள் மெய்யன்போடு வழிபாடு செய்து கொண்டிருந்தார். அகத்தியரைத் தொடர்ந்த பிரமஹத்தித் தோஷம் நீங்கியது.

அகத்தியரின் செயல்களை உணர்ந்தார் நாரதப் பிரம்மம். வருங்காலத்துக்கு எப்படி வழி வகுப்பது என்பதைத் தெளிந்தார். சூரபன்மனுக்குப் பயந்து மூங்கில் வடிவாய்ச் சீர்காழியில் சிவபெருமானை நோக்கித் தவம் புரிந்து கொண்டிருக்கும் இந்திரனிடம் சென்றார். நாரதரைக் கண்ட இந்திரன் பணிந்து வணங்கினான்.

நாரதர் அவனை வாழ்த்தி, ''சுகமாய் இருக்கின்றாயா?'' என்று ஏதுமறியாதவர் போல் வினவினார். இந்திரன் தொழுத கையினனாய், ''சுவாமி! அடியேன் இது வரை சுகமாய்த்தான் இருந்தேன். இப்பொழுதுதான் அடியேன் செய்யும் சிவபூசைக்கு இடையூறு ஏற்பட்டுள்ளது. நான் சிவபூசைக்கு என்று பயிரிட்ட நந்தவனம் நீரின்றி வாடுகின்றது. எளியோனாகிய எம்பெருமானை எளிமையாகப் பூசிப்பதற்கும் கூடக் கொடுத்து வைக்கவில்லையே என்ற குறையால் நான் தேவராஜ பதவி போனதைவிட அதிகமாக வருந்துகிறேன்'' என்று கூறினான்.

''தேவராஜன்! சிவபூசைக்கு வந்த இடையூறு இறைவனருளால் இனிதே நீங்கும். சிவானுக்கிரகத்தால் பழையபடியே உனக்குப் பொன்னுலக அரசாட்சியும் வரப் போகிறது. அகத்திய முனிவர் கொங்கு நாட்டில் சிவபூசை செய்து கொண்டிருக்கிறார். அவருடைய கமண்டலத்திலுள்ள காவிரியாற்றை இங்கே வருமாறு செய்தால், உன் ம[illegible] குறை தீர்ந்து மகாதேவனை அபிஷே[illegible] நீர் கிடைக்கும்'' என்று நாரதர் கூறி[illegible]

''சுவாமி! அகத்திய முனிவ[illegible] கமண்டலத்திலுள்ள காவிரியாற்[illegible] இங்கே வரச் செய்வது எப்படி[illegible] என்று நாரதரிடம் இந்திரன் ஆ[illegible]மாகக் கேட்டான்.

''அகத்திய முனிவரின் கமண்ட[illegible]த்தைக் கவிழ்த்து விட்டால் கா[illegible] தன்னால் வந்துவிடும்'' என்றார் நாரத[illegible]

''கமண்டலத்தைக் கவிழ்ப்பது எ[illegible] காரியம்தான். ஆனால் கமண்டலத்[illegible]குரியவர் மகா தபஸ்வியாகிய அகத்[illegible] முனிவரல்லவா? அகத்தியரின் கம[illegible]லத்தைக் கவிழ்க்க வல்லவர் யா[illegible] அக்கினிமலையை அணுகும் கொசு[illegible] உளதோ?'' என்று இந்திரன் கேட்டா[illegible]

''இந்திரா! உனக்கு ஏன் இந்த ஐ[illegible] வினையைத் தீர்க்கத்தான் விக்நேசு[illegible] பெருமான் இருக்கிறாரே! விநா[illegible] கடவுளை மெய்யன்போடு வழிப[illegible] செய். அல்லல் களைந்தே அருள் [illegible] காட்டும் ஆனைமுகன், காவிரி இ[illegible] பரவக் கருணை புரிவார்'' என்று நார[illegible] நவின்றார்.

வந்திப்பாரது வினைகளை யெல்[illegible] தீர்க்கவல்ல விநாயகப் பெருமா[illegible] ஐந்து கரத்து ஆனைமுகப் பெரும[illegible] அருச்சனை புரிந்து துதித்து வழி[illegible]டான் இந்திரன்.

சொற்பதம் கடந்த தூய மெய்[illegible] அற்புதம் நின்ற கற்பகக் களி[illegible] பல கோடி கணங்கள் சூழ விநா[illegible] கடவுள் இந்திரனுக்குக் காட்சி[illegible]தார். அவரை இந்திரன் பன்மு[illegible] பணிந்து துதித்தான்.

''என்ன வரம் வேண்டும்?'' எ[illegible] மனம் குளிர்ந்து கேட்டார் வே[illegible]டிய வேண்டியாங்கு வழங்கும் விநா[illegible] பெருமான்.

ஈசனைத் திருமுழுக்காட்டத் தீ[illegible]மில்லாத குறையைத் தேவரா[illegible] தெரிவித்தான்.

இது இந்திரனுக்கு வரம[illegible]தோடு, தந்தைக்குச் செய்யும் தொ[illegible]மாயிற்றே என விக்நேசுவரர் ம[illegible]யுற்றார். ''இந்திரனே! தீர்த்தம்[illegible] வேண்டும்? கங்கை நதியை இ[illegible] அழைத்து வரட்டுமா? அல்லது கட[illegible]யெல்லாம் கொண்டு வர வேண்டு[illegible] என்று கேட்டார் தயாநிதி.

''சுவாமி! அவையெல்லாம் வே[illegible]டாம். அகத்திய முனிவர் கொ[illegible] நாட்டில் சிவபூஜை செய்து கொ[illegible]டிருக்கிறார். அவருடைய கமண்ட[illegible]லுள்ள காவிரியைத் தேவரீர் இ[illegible] வருமாறு செய்தால் நந்தவனம் செ[illegible]

கும்'' என்று இந்திரன் வேண்டிக் கொண்டான்.

''அவ்வண்ணமே செய்வோம். கவலைப்படாதே!'' என்று விநாயகக் கடவுள் அருள் புரிந்துவிட்டு விரைந்து கொங்கு நாடு சென்றார். அடியார் குறையை விரைந்து விரைந்து தீர்க்கும் வள்ளலன்றோ விநாயகர்?

**கொ**ங்கு நாடு சென்ற விநாயகப் பெருமான் தமது துப்பார் பெருந் திருமேனியின் பவள ஒளியையும், பரந்து விரிந்த பெருமையையும் அருட்பாங்கால் மாற்றிக் கொண்டு காக வடிவம் எடுத்தார்; அகத்திய முனிவரின் கமண்டலத்தின் மீது அமர்ந்தார். அகத்திய முனிவர் கையை உயர்த்தி அதனை ஓட்டினார். காக வடிவமாயிருந்த கணபதி உடனே கமண்டலத்தைக் கவிழ்த்து விட்டுச் சிறகடித்துக் கிளம்பினார். கமண்டலத்தினின்று பெருகிய காவிரியாற்றை நோக்கி, ''நீ பூமியிற் செல்லக் கடவாய்'' என்று பணித்தருளினர்.

தேவி காவிரி தனது யாத்திரையைத் தொடங்கினாள். விண்ணுலகமும் மண்ணுலகமும் நடுங்கும்படி ஆரவாரித்துக் காவிரி நதி விரைந்து பூமியில் பாய்ந்தது.

கமண்டலம் கவிழ்ந்ததைக் கண்ட அகத்தியர் சீறிக் காக்கையைப் பார்த்தார். சீற்றத்தில் ஞானதிருஷ்டியும் மறைந்தது. விநாயகர் காக வடிவம் நீக்கி அந்தண பிரமசாரி வடிவம் கொண்டு தேஜோமயமாக நின்றார்— இப்போதேனும் முனிவர் தம்மைப் புரிந்து கொள்வாரா என்று பரீட்சிப்பதே போல.

அகத்திய முனிவரின் சினம் அந்தணச் சிறுவனின் அழகில் லயிக்குமா? தேவ தேவனை அபிஷேகிப்பதற்காகத் தேவ தேவனிடமிருந்தே அவர் பெற்று வந்த தீர்த்தம் போய் விட்டதெனில் மனம் தாளுமா? புரம் எரித்த புரிசடைக் கடவுள் போலவே வெகுண்டார் அகத்தியர். ''கமண்டலத்தைக் கவிழ்த்த இவன் தேவனோ? அவுணனோ? வேறு எவனோ? அகந்தை கொண்ட இவன் வலிவை விரைந்து அழிப்பேன்'' என்று கருதி அந்தணச் சிறுவனைப் பின் தொடர்ந்து ஓடினார். முனிவர் ஓட முடியாமல் ஓடித் துரத்திக் கொண்டு வருவதைக் கண்ட விஷமக்கார விநாயகர் பயந்து ஓடுவது போல் தாமும் விரைந்து ஓடினார். அருந்தவ முனிவர் அந்தணச் சிறுவனது சென்னியிற் குட்டுவதற்குத் தம் இரு கரங்களையும் குவித்துக் குவித்துத் துரத்தினர். அந்தணச் சிறுவனைப் பிடிக்க முயன்ற அகத்தியர் தமது முயற்சி வெற்றி பெறாமல் மிகவும் தளர்ந்தார்; ''இவன் பெரும் மாயனாக இருக்கிறானே; என் செய்வது?'' என்று வருந்தினர்.

ஒற்றை மருப்புடைய வெற்றிக் கணபதி திருவுளம் இரங்கினர். வேதியக் கிழவனாரை இனியும் வேதனைப் படுத்தலாகாது எனக் கசிவு கொண்

## தொழில் நுட்பம்




''**ரொ**ம்ப வருத்தமாயிருக்குது, ஸார்! எனக்குக் கொடுத்தாப் போல நீங்க எல்லாருக்கும் ஈ விழுந்த காப்பிக்குப் பதிலா வேறே காப்பி கொடுத்துக்கிட்டிருந்தா உங்களுக்கில்லே நஷ்டமாகும்?''

''நஷ்டத்தைப் பார்த்தா முடியுங்களா? வாடிக்கையாளர் திருப்திதானே என்னுடைய திருப்தி?''

''சரி, நான் வரேன்!''

......

''டே, பையா!''

''என்னங்க?''

''அந்த ஈ விழுந்த காப்பியை என்னடா செஞ்சே!''

''அப்போவே நான் அதை எடுத்துப் போட்டுவிட்டு வேறொருத்தருக்குக் கொண்டு போய்க் கொடுத்துட்டேனே!''

''அப்படிச் சொல்லு! வாடிக்கையாளர் மட்டும் திருப்தி யடைந்தால் போதுமா? நாமும் திருப்தியடையணும் பாரு!''

தட்டிக் கொடுத்தவர்: ஓட்டல்காரர்.
முதுகைக் காட்டியவர்: சர்வர்.
தகவல்: ஒரு வாடிக்கையாளர்.

டார். ஞான ஸ்வரூபமாய் விளங்கும் தமது மலையனைய திருமேனியை அகத்தியருக்குக் காட்டித் தரிசனம் அருளினார்.

அகத்தியர் பரவசப் புல்லரிப்பு கொண்டார். அடுத்த கணமே தாம் செய்த அபசாரத்துக்காக நடு நடுங்கினார். ''ஆ! நான் கெட்டேன். ஐந்து கரத்து எந்தையா இங்கு என்னிடம் வந்து எழுந்தருளினார்? அறியாமையினால் நான் அடிக்கத் துரத்தி விட்டேனே!'' என்று கலங்கி ஏங்கினார். விநாயகப் பெருமானைக் குட்ட ஓங்கிய கரங்களால் தமது சென்னியில் இடி விழுந்தாற்போலக் குட்டிக் கொண்டார்.

கருணையே உருவான கணபதி அவரது கரங்களைப் பற்றி நிறுத்தி, ''அஞ்சாதே!'' என்று அபய வாக்கு அளித்தார். ''தேவேந்திரன் சிவபூஜைக்கு என்று நிலவுலகில் வைத்த நந்தவனம் நீரின்றிக் கரிந்து போய் விட்டது. அதனால் நீர் பெற விரும்பி நம்மைத் துதித்து வழிபட்டனன். அவன் வேண்டுகோளுக்கு இணங்கி நாம் காக வடிவாய் வந்து உன் கமண்டலத்தைக் கவிழ்த்துக் காவிரி நதியை நிலவுலகத்தில் பாயும்படி கட்டளையிட்டோம். தவத்திற் சிறந்த நீ நம் தந்தையாகிய சிவபெருமானிடத்து ஆராத அன்பு கொண்டவன்; ஆதலால் நமக்கும் நீ அன்பன். உனக்கு என்ன வரம் வேண்டுமோ, கேள்'' என்றார் விநாயகர்.

''ஞானமே உருவான யானைமுகத் தெய்வமே! அடியேன் தேவரீரிடத்திலும் சிவபெருமானிடத்திலும் குன்றாத அன்புடையவனாய் என்றும் இருக்க வரம் தர வேண்டும். இப்பொழுது அடியேன் செய்தது போல் தேவரீரது சந்நிதியில் சிரசில் குட்டிக் கொண்டு வழிபடுவோருக்கு அறிவு பெருக வேண்டும்; அவர்களது குறையை நீக்கி நல்லருள் பாலிக்க வேண்டும்'' என்று அகத்திய முனிவர் வேண்டிக் கொண்டார். ஐங்கரத்தண்ணல் அவ்வண்ணமே அருள் புரிந்தார்.

சிவக்கொழுந்தை எண்ணிச் சிரத்தில் குட்டிக் கொண்டால் அங்கு ஸஹஸ்ரார கமலத்தில் பெருகும் அமுதம் துளும்பி நாடிகள் வழியே நம் தேகம் முழுதும் பாய்ந்து திவ்விய உணர்வைத் தரும்.

சிரசில் குட்டிக் கொண்டு வழிபடுவது போல, காதைப் பிடித்துக் கொண்டு தோப்புக்கரணம் போடும் வழிபாடும் கணபதிக்கே உரியது. 'தோர்பி: கர்ணம்' என்பது கையால் காதைப் பிடித்துக்கொள்வதைக் குறிக்கும் வடமொழிச் சொல்.

கஜமுகாசுரன் மிகுந்த வலிமையுடையவன். சிவபெருமானை வேண்டிப் பெருந் தவம் புரிந்தவன். சிவபெருமான் அ- னுக்குக் காட்சி தந்தபோது ''விலங்குகளாலும், பூதங்களாலும், மானுடர்களாலும், கனலாலும், புனலாலும் பிறவற்றாலும் மரணமில்லாமல் இருக்க வேண்டும்'' என்று வரம் பெற்றான்.

வரத்தின் பலத்தினால் தருக்குற்றான். மாலயனாதி வானவர்கள் யாவரையும் அழைத்துத் தண்டித்து, கா- யும் மாலையும் அவர்கள் தன் முன் செவிகளையும் பிடித்துக்கொண்டு ஆயி- தோப்புக்கரணம் போட வேண்டுமெ- கட்டளையிட்டான்.

கஜமுகனால் துன்புற்ற அமரர்கள் சிவபெருமானிடம் சென்று முறையிட்டுக் கொண்டனர். சிவபெருமான் கஜமுகனைச் சங்கரிக்குமாறு கணபதிக்குக் கட்டளையிட்டார். விநாயகர் பரிவாரங்களுடன் சென்று கஜமுகனுடைய சேனைகளை யெல்லாம் வென்றார். எந்த ஆயுதத்தாலும் கஜமுகன் இறவாமலிருப்பதைக் கண்ட கணபதி தம்முடைய ஒரு கொம்பை முறித்து ஏவினார். யானையின் பெருமையும் அ- குமே அதன் தந்தத்தில்தான் உள்ளது. எனினும் உலகுக்கு உபகாரம் புரிவதற்காகப் பிள்ளையாரப்பன் தயங்காமல் தந்தத்தைத் தியாகம் செய்தார். அந்தக் கொம்பு கஜமுகனைப் பிரயாசையின்றி பிளந்தது. கஜமுகன் மூஷிக வடிவு கொண்டு விநாயகரை எதிர்த்தான். கணபதி அவன் மீது கருணை பொழிந்து அவனையே வாகனமாக்கிக் கொண்டருளினார்.

மாலயனாதி வானவர்கள் துன்பம் நீங்கி இன்பமடைந்து விநாயகமூர்த்தியை வணங்கி நின்றார்கள்.

''எங்கள் இடர்தீர்த்த எந்தையே! பன்னெடுங் காலமாக நாங்கள் கஜமுகன் முன்னிலையில் தோப்புக்கரணம் போட்டோம். தாங்கள் அவனை அழித்து எங்களுக்கு இன்னருள் புரிந்தீர்கள். நாங்கள் இனி தங்கள் திருமுன் தோப்புக் கரணம் போடுவோம். இது போல் தங்கள் திருமுன் தோப்புக்கரணம் போடுபவர் யாவரானாலும் அவர்கள் இடரைக் களைந்து ஆண்டருள் புரிய வேண்டும்'' என்று வேண்டிக் கொண்டார்கள்.

''உங்கள் விருப்பம் போலவே ஆகட்டும்'' என்று மனம் நிறைந்து கூறி- நிறைவின் சின்னமாகவே பே- வயிற்றுடன் இலங்கும் பெருமான் ''அசுரர் முன் செய்தாற் போல் ஆ- தோப்புக்கரணம் போட வேண்- மூன்று முறை போட்டாலே இ- அடைவோம்'' என்று வரமளித்தார் கரிமுக வரதர்.

(தொடரும்)

# காடக முத்தரையன்



கத்தியா, புத்தியா? எது அவசியம்? வெறும் கத்தியை மட்டும் வைத்துக் கொண்டு எதையும் சாதித்துவிட முடியாது. புத்தியின் உதவி இருந்தால்தான் எதிலும் வெற்றி அடைய முடியும். இதை அடிப்படையாக வைத்துக் கொண்டு இந்நாடகம் சரித்திர சம்பந்தம் பெற்று உருவாகியிருக்கிறது.

கி.பி. ஏழாம் நூற்றுண்டின் இடைக்காலத்தில் பல்லவ நாடு அரசு உரிமைப் பிரச்னையில் குழம்பித் தவித்தபோது, பல்லவ வம்சத்தைச் சேர்ந்த இரண்டாம் நந்தி வர்மனை அரியணை ஏற்றி அவனுக்கு உறுதுணையாக நின்றவன் காடக முத்தரையன். காஞ்சி மாநகரம் சளுக்கியன் கையில் விழுவதற்குக் காரணமாயிருந்தவன் காடக முத்தரையன்; பிறகு அதே காஞ்சியைப் பல்லவனுக்குத் திருப்பித் தந்ததும் அவன்தான். அவனுடைய சூழ்ச்சித் திறன்தான் நாடகத்தின் அடிப்படை.

மனோகர் காடக முத்தரையன் பாகத்தை ஏற்று அபாரமாக நடிக்கிறார். அரண்மனையின் ரகசியச் சுரங்கப் பாதை தத்ரூபமாக இருக்கிறது.

மூலக் கதை பொன்மலை இரா. பாண்டுரங்கனுடையது. நாடக ஆக்கம், வசனம் மதுரை திருமாறனுடையது.

காடக முத்தரையன் நல்லவனா, வில்லனா என்பதைக் கடைசிவரை நிர்ணயிக்க முடியாமல் 'சஸ்பென்ஸி'ல் வைத்திருப்பது நாடகத்தில் நல்லதோர் உத்தி.

திருமங்கையாழ்வாரை மேடை ஏற்றி அரசியல் சூழ்ச்சிகளில் பங்கெடுத்துக்கொள்ளச் செய்திருக்க வேண்டாமோ எனத் தோன்றுகிறது. மற்றபடி நாடக நடிகர்கள் அனைவரும் மிகத் திறமையாக நடித்திருக்கின்றனர். மிகவும் விறுவிறுப்பான நாடகம்.



# நெஞ்சுக்கு நீதி

ஆஸ்பத்திரி வார்டு, கட்டில்கள், நோயாளிகள், டாக்டர்கள், ஒரு நர்ஸ், ஒரு சிறுமி—அவள் தாய்—ஆகியவர்களை வைத்துக்கொண்டு ஒரு நாடகத்தை ஓட்டியிருக்கிறார்கள் அமெச்சூர் நடிகர்கள் குழுவினர்.

இந்நாடகத்தில் கொலைக் குற்றம் சாட்டப்பட்ட கைதிதான் பிரதான பாத்திரம். அவனையும் நாம் ஆஸ்பத்திரி நோயாளியாகத்தான் சந்திக்கிறோம். தன் மனைவி வேறொருவனோடு ஆனந்தமாக இருப்பதைப் பார்த்த கணவன் ஆத்திரத்தில் அவர்கள் இருவரையும் கொன்றுவிடுகிறான். கொலைகாரனாக நடித்த டி. எஸ். சேஷாத்திரி—தம் சிறந்த நடிப்பினால் அனைவரையும் உருக்கிவிட்டார்.



அடுத்தபடியாக இந்த நாடகத்தில் நடிப்பில் உயர்ந்து நின்றவர், புகழ்பெற்ற சேவா ஸ்டேஜ் நடிகை சாந்தினி. கொலையுண்டவனின் மனைவியாகத் தோன்றி அற்புதமாக நடித்தார். கண்ணீர் விட்டு அவர் நடித்தது பார்ப்பவர்களைக் கண் கலங்க வைத்தது.

நாடகத்தில் உருக்கத்தோடு கவர்ச்சியும் தேவை என்ற காரணத்தினால் சினிமாப் புகழ் குட்டி பத்மினியையும் சேர்த்திருந்தார்கள் போலும். ஓர் ஆண்மணியைப் பெண் நர்ஸாகப் போட்டுச் சிரிப்புமூட்டியிருக்க வேண்டாம். அதுவும் உடற்பருமனை வைத்துக் கொண்டு ஹாஸ்யங்களைப் புனைவது ரஸிக்கவில்லையே!

எழுத்தாளர் ''பிலஹரி'' ''நான் மனிதன்'' என்ற தலைப்பில் தாம் எழுதிய குறுநாவலை நாடகமாக ஆக்கித் தந்திருக்கிறார். கவிஞர் கண்ணதாசன் பாடல்கள் இயற்றியிருக்கிறார். காதல் காட்சி இல்லாமலே நாடகம் களை கட்டிவிட்டதென்றால் அது மகத்தான சாதனைதானே?

# 25. ஹரிஹர புத்திரன்

ஐந்து கரப் பெருமான் காக வடிவிற்
சென்று அகத்திய முனிவருடைய கமண்
டலத்தைக் கவிழ்த்ததால் அக் கமண்
டலத்தினின்றும் புறப்பட்ட காவிரி
நதி, பல காதவழி கடந்து சந்தன
மரம் முதலிய விருட்சங்களையும், யானைத்
தந்தம், பொன் முத்து முதலிய உயர்
பொருட்களையும் வாரிக்கொண்டு கீழ்த்
திசை நோக்கிச் சென்றது. புண்ணியம்
மிக்க தமிழ் நிலத்துக்கு மேலும் புண்
ணிய வளமூட்டியது. தமிழ் மக்களின்
வயிற்றுக்கு உணவு படைக்கும் மரகத
வயல்கள் காவிரியின் அருளில் தோன்றுவ
தோடு, உள்ளத்துக்கு உணவு படைக்கும்

தோறும் மலர் கொய்து பரமேசனு
வழிபாடு செய்து கொண்டிருந்தான்.

இதேபோதில் சூரபன்மனின் கொ
மையால் வருந்திய தேவர்களும்
காழிப் பதிக்கு வந்து சேர்ந்த
இந்திரனின் அடிகளில் வீழ்ந்து வண
''எங்கள் அரசே! அறநெறி சிறி
இல்லாத அசுரர்கள் வசத்தில் எங்க
விட்டு விட்டு இப்படி தேவியாரே
மட்டுமாக இங்கு வந்து விட்டீர்க
இது தகுமா? எங்களைக் காக்க வல்ல
தாங்களே அல்லவா? மன்னவனு
தங்கள் கடமையன்றோ மக்களா
எங்களைப் பரிபாலிப்பது? புரந்தர




தெய்வத் திருக்கோயில்களும் இனி
இந்தக் காவிரியின் இரு கரைகளிலும்
எழும்பி மகோன்னதமாக நிற்கப்போ
கின்றன. காவிரியின்றேல் தமிழகத்
துக்குப் பொருளாதாரமும் இல்லை;
அருளாதாரமும் இல்லையன்றோ?

இந்திரன் தவம் செய்து கொண்
டிருந்த சீர்காழிப் பதியைக் காவிரி
யடைந்தது. காவிரியைக் கண்ட இந்
திரன் துன்புற்று வெந்த தன் உள்ளத்
தில் அமுதப் பெருக்காகிய காவிரி
பாய்வதே போல் கவலை நீங்கினான்.
ஈசனுக்காக அவன் வளர்த்த நந்த
வனத்தில் தேவி காவிரி பாய்ந்து
காய்ந்த செடிகளுக்குப் புத்துயிர்
ஊட்டினாள். திவ்விய மலர்கள் மீண்
டும் புஷ்பித்தன. அமரேசன் காலந்

எமைப் புரந்திடாமல் இப்படி வெ
யேகலாமா? தாரகன் என்னும் ம
கஜம், சிங்க முகன் என்னும் கொ
சிங்கம், சூரன் என்னும் வெய்
— இவற்றிடம் தேவர்களாகிய ப
களைக் காட்டிக் கொடுத்து விட்டு
தாங்கள் மறைந்து வந்திருப்ப
நன்றோ? நாங்கள் சூரபன்மனு
ஊனும் மீனும் சுமந்து, மானங்கெ
ஞானம் கெட்டு உழல்கிறோம். வே
களை மறந்தோம், சீலமும் சிவ பூ
யும் எங்களை விட்டு நீங்கிவிட்ட
அமரபோகம் நீங்கியதற்காக வருந்
விடினும் ஆன்மபோதத்தை இழந்த
ரத்தைத் தாள முடியவில்லை. இனி
எங்களால் துன்பப்பட முடியா
எங்கள் இடர் நீங்க ஓர் உபா



தாங்கள்தான் காண வேண்டும்'' என்று வேண்டிக் கொண்டார்கள்.

இந்திரன் கலங்கினுன். நீண்ட நேரம் யோசித்தான். அயர்ந்து பெருமூச்சு விட்டான்.

''என் அருமைத் தேவர்காள்! சூரபன்மன் அளப்பரும் தவம் செய்திருக்கிருன். அவனுல்தான் நமது வாழ்வும் வலிவும் நீங்கின. என்னுல் எதிர்க்கவொண்ணுத அந்தப் பாவி தீய எண்ணங் கொண்டு அயிராணியைக் கைப்பற்றவும் என்னைச் சிறையிலிடவும் கருதிப் பல அசுரர்களை ஏவினுன். அவனுடன் போரிட முடியாது என்று கண்ட பின் நான் இந்திராணியுடன் இங்கு மறைந்து வந்தேன். என்னுல் வேருென்றும் செய்வதற்கு இல்லாததால் நீங்களும் அறியாமல் இங்கு வந்து சேர்ந்தேன். நமக்கு நலம் உண்டாக வேண்டுமானுல் ஈசுவரன் அநுக்கிரகத்தாலேயே அது கிட்டவேண்டும். இதன் பொருட்டு சிவத்தைப் பேணித் தவத்தைச் செய்து கொண்டிருக்கிறேன். இனி நாம் எல்லோரும் திருக்கயிலாய மலைக்குச் சென்று சிவபெருமானைத் தரிசித்து நம் குறைகளை முறையிடுவோம், வாருங்கள்'' என்றுன்.

தேவர்கள் மழை கண்ட பயிர் போல் மகிழ்ந்தனர். ''அரசே! இப்போதே நாம் கைலாய நாதனைக் கண்டு குறையிரந்து வருவோம்'' என்று ஆர்வத்துடன் கூறினுர்கள். இந்திரன் தேவர்களைச் சிறிது நேரம் அங்கேயே இருக்கச் சொல்லி, இந்திராணி இருக்கும் இடத்துக்குச் சென்றுன்.

''பெண்ணரசியே! தேவர்கள் இங்கு என்னிடம் வந்து தங்கள் குறைகளைக் கூறி முறையிட்டுக் கொண்டார்கள். நம் துன்ப நீக்கத்தின் பொருட்டு நான் தேவர்களுடன் கயிலை மலைக்குச் செல்கிறேன். விடை தருக'' என்று இந்திரன் கூறினுன்.

இந்திரன் கூறியதைக் கேட்ட இந்திராணி பாணம் ஏறுண்ட மயில் போல் மயங்கினுள். அவளை இந்திரன் அன்போடு எடுத்து மயக்கம் தெளிவித்தான்.

''ஐயனே! நான் பொன்னுலகப் பெருவாழ்வை விட்டு மண்ணுலகம் வந்தும் தங்களுடன் இருப்பதால்தான் மகிழ்ச்சி குன்றுமல் இருக்கிறேன். தாங்கள் இங்கிருந்து என்னைப் பிரிந்து சென்றுல் என்னுல் உயிர் வாழ முடியுமா? சக்கரவாகப் பட்சிக்குச் சந்

திரனும், வானம்பாடிக்கு மேகமும் துணையாயிருப்பது போல் எனக்குத் தாங்கள்தானே துணை? பிரிவாற்றுமை தாங்காது தவிப்பேன் என்பதோடு, தாங்கள் இல்லாதபோது கொடிய அவுணர்கள் வந்து துன்புறுத்தவும் நேருமே! நம் புதல்வன் சயந்தனும் இங்கு இல்லை; ஐராவதமும் இல்லை; வேறு பணிப் பெண்களும் இல்லை. பழிக்கு அஞ்சாதவரும் பாவங்களுக்கு உறைவிட மானேருமாகிய அவுணர்கள் என்னை அபகரிப்பார்கள். என்னை விட்டுச் செல்லாதீர்கள். நானும் உங்களுடன் வருகிறேன்'' என்று இந்திராணி நடுங் கிக்கொண்டே கூறினுள்.

அயிராணி கூறியவற்றைக் கேட்ட இந்திரன் சிறிது நேரம் யோசித்தான். பின்னர், ''அன்புக்குரியவளே! வருந் தாதே. உனக்குத் துணையில்லை என்று கலங்க வேண்டாம். சிவபெருமானுக் கும் திருமாலுக்கும் புதல்வராக உதித்த ஐயனுர் நமக்கு ஒப்பற்ற காவ லாக இருக்கிருர். அவரைத் தியானித் தால் இங்கு எழுந்தருளுவார். அவரிடம் உன்னை அடைக்கலமாகக் கொடுத்து நான் செல்கிறேன். அவர் உன்னைக் காத்தருள்வார். அஞ்ச வேண்டாம்'' என்று கூறினன்.

''சுவாமி! திருமாலுக்கும் சிவபெரு மானுக்கும் மகவு உதித்ததா? எப் போது? ஐயனுருடைய வரலாறு யாது? அடியேனுக்குச் சொல்லுங்கள்'' என்று தேவராணி ஆச்சரிய ஆர்வத்துடன் வினவினுள். ஐயனுரின் வரலாற்றைக் கூறத் தொடங்கினன் இந்திரன்.

''முன்பு திருமாலை முன்னிட்டுக் கொண்டு தேவர்கள் அமுதம் விரும்பிப் பாற் கடலைக் கடைந்த கதை நீ அறி வாயல்லவா? அப்போது ஆலகால விடம் எழுந்ததும், அதனைக் கண்டு தேவர்கள் அனைவரும் அஞ்சி நடு நடுங்கி ஓடியதும் உனக்குத் தெரிந்தவை தாமே? நாங்கள் திருக்கயிலாய மலை சென்று சிவபெருமானைத் தஞ்சம் அடைந்து முறையிட்டுக்கொள்ள, கரு ணையே உருவான கண்ணுதற் கடவுள் பாற்கடலினின்று எழுந்த ஆலகால விடத்தைத் தாமே உண்டு கண்டத்தில் அடக்கிக் கொண்டு தேவர்களுக்குத் திருவருள் பாலித்த அருட் சரிதை யும் நீ அறிவாய். பின்னர் தேவர்கள் தொடர்ந்து பாற்கடலைக் கடைய அமுதப் பொற்குடம் அதனின்று எழும்பியது. அமிர்தம் உண்ணுவதில் தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் போர் மூண்டது. திருமால் மூவுலகமும் விரும்பத் தக்க வண்ணம் மோகினி வடிவம் எடுத்தார். அம்மோகினி வடி வைக் கண்ட அசுரர்கள் அவளா அழகில் மயங்கி, காமப் பித்து கொண்டு அமிர்தத்தை மறந்தார்கள் தேவர்களும் மோகினியின் மீது மைய கொண்டார்கள். ஆம்! பெண்ணுசை யாரைத்தான் விட்டது?

'என்னு அவுணர் தொகையல்லயதை
எந்தை மாயம்
உன்னுடு வானேர் களும்பெண்மயல்
உற்று நின்ருர் ;
மண்ணுசை தன்னில் பொருளாசையின்
மாய வாழ்க்கைப்
பெண்ணுசை நீங்கல் எளிதோ
பெரியோர் தமக்கும் ?

''தேவர்களும் அசுரர்களும் காம தால் மயங்கி நின்றபோது, மோகி வடிவம் கொண்ட திருமால் அ களை நோக்கி, 'உங்கள் சண்டை விடுங்கள். இங்கு நான் இருக்கிறேன் அமிர்தமும் இருக்கிறது. இவ்விரண்டி நீங்கள் எதையாவது ஒன்றை விரும் எடுத்துக் கொள்ளுங்கள்' என்று கூ ஞர். பெண் மோகம் யாருக்கு இயல்பு. எனினும் விவேகமுடன் மு வெடுக்க ஒரு வாய்ப்பு உண்டா அறிவுடையோர் பெண்ணுசையை தள்ளி விடுவார்கள். அமரர்கள் இ வாறே மோகினி ஆசையை மறந் அமுதத்தை வேண்டினர். எக்கால திருந்தாத அசுரர்களோ பெண் பித் பிடித்து, ''மோகினியே வேண்டும் என்ருர்கள். மோகினி அசுரர்க பார்த்து, ''உங்களில் வீரன் யார் என்று வினவினுள். அசுரர்கள் ஒவ்வொ வரும் ''நானே வீரன்; நானே வீரன் என்று போட்டி போட்டுக் கொண் முன்வந்தார்கள். இதனுல் அசுரர்க குள்ளேயே சண்டை மூண்டது. சண்டையில் ஒருவரை ஒருவர் தாக் கொண்டு அழிந்து போனுர்கள்.

''திருமாலின் மோகினி வடி மாயத்தை அறிந்த அசுரர்களில் இ வர் மட்டும் சண்டையில் இறங்காம தேவ வடிவங் கொண்டு அம களுடன் கலந்து நின்ருர்கள். தி மால் மோகினி வடிவம் நீங் தேவர்களிடம் சென்று அமுதத்தை பகிர்ந்தளித்தார். அமரர் வடி லிருந்த அசுரர் இருவரும் அ தத்தைத் தேவர்களுக்கு முன்னதா உட்கொண்டனர். அதனைக் கண் சூரிய சந்திரர் 'இவர்கள் அமரர்க அல்ல' என்று திருமாலுக்கு உணர்த் ஞர்கள். திருமால் தன் கையிலிரு அகப்பையினுல் அவர்கள் தலை அடித்தார். அதனுல் அவர்களின் த

ண்டாகியது. அமுதம் கண்டத்தை அடையும்போது தலை முண்டத்திலிருந்து துண்டானதால் அவர்களின் உடல்கள் அழிந்தபோதிலும் தலைகள் அழியாமல் இருந்தன. ''நீங்கள் அமுதம் உண்டதால் விண்ணுலகில் இருக்கத் தகுந்தவர்கள்; நீங்கள் இருவரும் கிரகங்களாக'' என்று திருமால் பணித்தார். அதன்படி அந்த அசுரர்கள் இருவரும் ராகு, கேது என்னும் கிரகங்களானார். தேவி! இக்கதை யாவும் நீ முன்பே அறிந்திருக்கக் கூடியதுதான். இனி நீ அறியாத கதையைச் சொல்கிறேன்.

''தேவர்களுக்கு அமுதம் பகிர்ந்தளித்த பின் திருமால் தாம் முன்பு கொண்ட மோகினி வடிவுடன் பாற்கடலின் கரையில் இருந்தார். சிவபெருமானுக்கு நால்வகைச் சத்திகள். பராசக்தி மாய காரிய சம்பந்தத்தால் நான்கு வகையாகித் திருவருள் புரிவாள். உலகை உற்பத்தி செய்யும் ஜகன்மாதாவாக இருக்கும் போது சிவபெருமானுக்குத் தேவியான பார்வதியாகவும், அன்பு கொண்டு உலகை ரட்சிக்கும்போது திருமாலாகவும், கோபங்கொண்டு உலகைப் பட்சிக்கும்போது காளியாகவும், நன்மையை நிலைநாட்டுவதற்காகச் சமர் புரியும்போது துர்க்கையாகவும் விளங்குவாள்.

**ஏகைவ சக்தி; பரமேச்வரஸ்ய**
**ப்ரயோஜநார்த்தாய சதுர்விதாபூத்**
**போகேபவாநீ புருஷேஷு விஷ்ணு:**
**க்ரோதேச காளீ ஸமரேச துர்கா**

''தம் சக்திகள் நால்வரில் திருமாலும் ஒரு சக்தியாயிருப்பதை நம்மவர்க்குத் தெரிவித்தருளும் பொருட்டு, சிவபெருமான் பெருவனப்புடைய திருவடிவம் தாங்கித் திருப்பாற் கடலருகே வந்தார். அவரைக் கண்டு திருமாலாகிய மோகினி மாலாகி மையலுற்றாள். மின் சக்தி புவியில் பாய்வது போல் சக்தி சிவத்தினுள் பாயவே துடிக்கும். அண்ட சராசரங்களுக்கு உள்ள ஆகர்ஷணத்துக்குக் காரணமே சிவத்துக்கும் சக்திக்கும் உள்ள பரஸ்பர ஆகர்ஷணம் தான். அந்த ஆகர்ஷணத்துக்கே அன்பு என்று பெயர். கணவன் மனைவியிடையும், மாதா மக்களிடையும், தோழர்களிடையுமுள்ள அன்புக்கெல்லாம் ஊற்று சிவ சக்தியின் பரஸ்பர அன்பேயாகும். சக்தியாகிய திருமாலிடம் சிவபெருமான் ஈர்க்கப்பட்டார்.

''நின் வடிவம் எத்துணை இனிது, மோகினி!'' என இனிக்கக் கூறி அவளை அணுகினர்.



நாணமடைந்த விஷ்ணு, ''உலக மாதாவாகிய உமையம்மையார் என்றும் தங்களைக் காதலித்திருக்கத் தேவரீர் என்னை விரும்புவது ஏன்? முன்னொரு நாள் பங்கயனுக்குப் படைப்புத்தொழில் கைகூடும்பொருட்டுப் பார்வதி தேவியாருடன் தாங்கள் சேரும்படி வேண்டிக் கொண்டேன். ஆனால் துறவித் தெய்வமாகிய தேவரீருக்கு உமையம்மையாரிடத்தும் சிருங்கார நாட்டமில்லை. மேல் நோக்கிய வீரியம் உடைய தேவரீர் அடியேனைக் கருதி வந்த காரணம் யாதோ? தேவரீரது அற்புத விளையாட்டை அறிய வல்லவர் யாவர்?'' என்று வியந்து கூறினர்.

''மோகினி! நீயும் நமக்கு ஒரு சக்தியே. அன்று யாம் பிட்சாடனனாகத் தாருகாவனத்திற்குச் சென்று முனி பத்தினிகளைக் கவர்ந்தபோது நீயும் ஒரு பெண்ணாகி முனிவரைக் கவர்ந்து ஞானமளித்ததை மறந்தனயா? பழைய நான்முகன் இறந்து போனதும் நம்மை அடைந்து பிரமனைப் பெற்றதை மறந்தனயா?'' என்று கூறித் தமது பொற் கரத்தை நீட்டி மோகனசுந்தரியைப் பிடிக்கச் சென்றார் சிவபெருமான். நாணி ஓடினள் மோகினி. அரனார் அவளைத் தொடர்ந்து சென்றார். நாவ

லந் தீவில் வடதிசைக் கடலோரத்தில் உள்ள சால விருட்சத்தின் நிழலில் மணியும் ஒளியும் இணைந்தன. சிவமும் சக்தியாகிய திருமாலும் இணைந்தன!

[கண்டகி நதி அங்கிருந்து பிரவகித்தது. அதன் நீரில் வச்சிரதந்தி என்னும் ஜீவராசிகள் உள்ளும் புறமும் சக்கரக் குறியுடன் பொன் வண்ணமாய் உதித்தன. அவை மண்ணினுல் கூடுகளை உண்டாக்கி, அதிலேயே வாழ்ந்து மடியும்; அவை மடிந்த பின் அந்தக் கூடுகள் சக்கரக் குறியுடன் காணப்படும். அவற்றை ஆற்றோட்டம் கரையில் கொண்டு வந்து ஒதுக்கி விடும். உலகிலுள்ளோர் அவற்றை எடுத்துச் சென்று உள்ளே இருக்கும் பொன்னை எடுத்து அடையாளங்களைப் பார்த்து, இன்ன இன்ன மூர்த்தம் என்று உணர்ந்து விஷ்ணுவாக பாவித்துப் பூசிப்பார்கள். அந்த மண் கூடுதான் சாலக்கிராமம்.]

இந்திரன் தன் தேவியிடம் கதையைத் தொடருவான்:

''அரியும் அரனும் அன்பில் லயித்த போது, கரிய மேனியும், சிவந்த சடையும், செண்டு தரித்த கையுமாய் ஒரு குமாரர் அவதரித்தார். அப் புதல்வருக்கு ஹரி ஹர புத்திரர் என்று அரனுர் நாமம் சூட்டிப் பல வரங்களைத் தந்து உருத்திரர்களுக்குள் ஒருவராக்கினுர். ஒரு புவனத்தை நல்கி தேவர்களும் முனிவர்களும் வணங்கும் முதன்மையும் தந்தார். ஹரிஹர புத்திரரே சாஸ்தா என்றும் ஐயனுர் என்றும் ஐயப்பன் என்றும் திருநாமங்களைப் பெற்றுர்.

''சாஸ்தா உதிக்க வேண்டுமென்றே தான் அரனும் அரியும் ஒன்றுயினர். எனவே ஐயப்பன் அவதரித்தவுடன் திருமாலுக்கும் ஐயனுருக்கும் விடை தந்து மறைந்தருளினுர் துறவித் தெய்வமான சிவபெருமான்.

''சசிதேவி! ஹரிஹர புத்திரர் தம புவனத்தில் பூத கணங்களுடன் இரு பார். விண்ணவரும் மண்ணவரும் விரிஞ்சனும் வணங்கும் விசிட்டமுடையவர் அவர். விஷ்ணுவாலும் புகழத்தக்கவர். அவர் உன்னைக் காத்தருள்வார்'' என்று இந்திரன் கூறினுன்.

ஐயனுரின் பெருமையைக் கேட்டு மகிழ்ந்த இந்திராணி சீர்காழியிலேயே தங்கியிருக்க உடன்பட்டாள்.

இந்திரன் ஐயப்பனைத் தியானித்தான். அவர் பூத கணங்கள் சூழ வெள்ளை யானை மீது பூரணை, புட்கலை என்ற தேவியர் சமேதராய் அங்கு பிரசன்னமானுர். அவரை வணங்கி இந்திரன், ''எம்பெருமானே! பெருமானிடம் சூரன் கொடுமை விண்ணப்பிக்கும் பொருட்டு அடியேன் தேவர்களுடன் திருக்கயிலாயம் செல்கிறேன். நான் சென்று திரும்பி வரும் வரையில் இவளைத் தங்களிடம் அடைக்கலமாகத் தருகின்றேன். தமியேன் போய் வரும்வரை இவளைக் காத்தருள வேணும்!'' என்று வேண்டினுன்.

''அமரபதி! அஞ்ச வேண்டாம் இந்திராணிக்குத் துன்பம் வராமல் யாம் காத்து நிற்போம். நீ கயிலைக்குச் செல்க'' என்று ஐயனுர் பணித்தருளினுர்.

தமது வீரருள் வாட் போரில் நிகரற்ற மகா காளரை நோக்கி ''இந்திரன் திரும்பி வரும் வரையில் தனித்திருக்கும் சசிதேவியைக் காத்து நிற்பாய்'' என்று கட்டளையிட்டார்.

அமரர் கோன் அயிராணியிடம் விடைபெற்றுன்.

(தொடரும்)

குட்டிக்கதை



மடக்கி வைத்த காலுக்குக் கீழே மிருதங்கத்தை இடுக்கி வைத்துக் கொண்டு, 'வெளு, வெளு' என்று வெளுத்துக் கொண்டிருந்தார் மிருதங்கக்காரர்.

''ஐயோ, பாவம்!'' என்றது பிடில்.

''ஏனும்?'' என்று கேட்டது கஞ்சீரா.

''என்னதானிருந்தாலும் இப்படியா அடிப்பார்கள், மிருதங்கத்தை!'' என்றது அது.

''அடிக்காமல் தட்டியா கொடுப்பார்கள்?'' என்றது இது.

''ஏன், என்னவர் என்னை மீட்டுவது போல் அதனவர் அதையும் மீட்டினுல் என்னவாம்?'' என்று தம்பூரா கேட்டது.

கஞ்சீரா பெருமூச்சுடன் சொல்லிற்று:

''உன்னை மீட்டினுல் ஓசை கிளம்பி விடுகிறது; என்னையும் மிருதங்கத்தையும் அடித்தால் தானே ஓசை கிளம்புகிறது!''







1. நாதசுர வித்வான் குளிக்கரை ச்சையப்பாவுக்குத் தேசிய கலாசார கத்தின் ஆதரவில் நடந்த பாராட்டு ழாவில் பிரதம மந்திரி லால் ஹாதுர் அவர்கள் கோப்பை வழங்கிக் கௌரவிக்கிறார்.

2. மேற்கு ஜெர்மனி டெலிவிஷன் றுவனம் ஒன்றில் இந்தியாவுக்கான ழ்ச்சிகளில் பங்கு கொண்டு வரும் மாரி நவீன சுந்தரம்.



3. பிரபல வழக்கறிஞரும் மியூஸிக் அகாடமியின் தலைவருமான ஸ்ரீ கே.வி. கிருஷ்ணசாமி ஐயரின் சதாபிஷேகப் பாராட்டு விழா மியூஸிக் அகாடமியில் டாக்டர் சி. பி. ராமசாமி ஐயர் அவர்களின் தலைமையில் விமரிசையாக நிகழ்ந்தது. ஸ்ரீ கே. வி. கே. அவர்களின் இல்லம் சென்று ஸ்ரீ டி. எஸ். ராஜம் அவருக்குப் பரிசு வழங்கிக்கௌரவிக்கிறார்.

# கந்தன் கருணை

திருமுருக கிருபானந்தவாரியார்

## 26. அன்னப்பேடும் இராசாளியும்

இந்திரன் தேவர்களை அழைத்துக் கொண்டு திருக்கயிலாய மலையைச் சென்றடைந்தான். முதல் வாயிலை யடைந்ததும் திருநந்தித் தேவரை வணங்கித் தன் குறைகளைக் கூறினான்.

''சிவபெருமான் சனகாதி முனிவர் நால்வருக்கும் மௌனநிலையை உணர்த்திக்கொண்டிருக்கிறார். ஆகவே, இத் தருணம் அங்கு யாரும் செல்லக் கூடாது'' என்றார் நந்தி தேவர்.

சென்ற இடமெல்லாம் தோல்வியாயிற்றே என இந்திரன் மிகுந்த வேதனை அடைந்தான். நந்தி தேவரை வணங்கிக் கூறினான்: ''எந்தையே! சூரபன்மனுக்கு அடிமை செய்து இளைத்தோம். எங்கள் குறைகளை ஈசுவரனிடம் முறையிடவே வந்தோம். எங்கள் வேண்டுகோளை இறையவர் செவிமடுத்தாராகில் அவரது கருணைப் பண்புக் கேற்ப சூரனை உடனே சம்ஹரிக்க வேண்டியிருக்கும். அவ்வாறு அவர் சூரபன்மனை அழித்தால் அவனுக்கு முன்பு தாமே கொடுத்த வரத்தையும் அழித்ததாகும். சத்திய ஸ்வரூபமான சர்வேசுவரனே சொல் தவறினார் என்று ஏற்படும். மாறாக நாங்கள் விண்ணப்பம் விடுத்த பின்னும் எங்கள் அல்லலை அகற்றாவிட்டாலோ அருள் வள்ளல் என்று இறைவர் பெற்றுள்ள புகழுக்கு இழுக்கு உண்டாகும். ஆதலால் தான் நாங்கள் வேண்டுகோள் விடுத்து அவரை இக்கட்டில் ஆழ்த்தக் கூடாது என்றே மோன நிலையில் வீற்றிருக்கிறாரோ?'' என்று புலம்பினான் இந்திரன்.



இறைவனின் லீலையை யாரே அறிய வல்லவர்? காவிரியைத் தருவித்துக் கங்காதரனுக்கு அபிஷேகித்த இந்திரனும் ஐயனுடைய திருவிளையாடலைப் புரிந்துகொள்ளும் அறிவு பெறவில்லை. இறைவனின் செயலில் ஒன்றுக்கொன்று முரணான இழைகள் ஒருபோதும் மோதிக்கொள்ள மாட்டா. கோடானு கோடி அண்டங்களை ஆண்டவன் அம்மானையாக்கி ஆடும்போதும் அவை சிறிதேனும் கதி தவறாமல், ஒன்றோடொன்று மோதாமல், உரசாமல் சீராகச் செல்வதே போல், இறைவனின் திரு உள்ளத்தில் உள்ள கருத்துக்கள் அனந்தகோடியாயினும் அவை முரணின்றியே செயல்படும். சூரனுக்குத் தந்த வரமும், அமரருக்குப் புரிய வேண்டும் அருளும் ஒன்றுக்கொன்று முரணாகுமோ என்த் தேவர்கோன் திகைத்தான். ஆயினும் ஒன்று மறந்தான். கருமம் பயன் முடிவுறக் காலம் என்ற பெயரில் இறைவன் அமைத்துள்ள விந்தைப் பொருள், தான் நினைத்த முரண்களைத் தீர்க்குமென்பதை மறந்தான். கருமப் படி, தட்சன் வேள்வியில் தேவர்கள் சிவ அபசாரம் செய்ததற்கு ஈடாக அபராதம் செலுத்த வேண்டியவர்கள்



அதே கரும விதிப்படி, அளவற்ற தவமியற்றிய சூரன் அகிலாண்ட அதிகாரம் பெற உரிமை பெற்றவன். தேவர்களின் தீய கருமப் பயனையும், சூராதியவுணரின் நற்கருமப் பயனையும் இறைவர் ஒன்றோடொன்று இழையவிட்டார். தேவர்களுடைய தீய கரும பயன் முடியும்போதே, அசுரரின் நற்கருமப் பயனும் முடிய வேண்டுமென எண்ணம் கொண்டார். அந்த நாள் வருவதற்கு இன்னும் காலம் இருந்தது. எனவே தான் தேடி வந்த தேவருக்குத் தரிசனம் தராதிருந்தார் தயாநிதி! எல்லையற்ற துன்பமுற்ற இந்திரன் காலம் பிறக்கவில்லை என்பதை மறந்து மனமிடிந்து போனான். இமையவருடன் வெள்ளியம்பொருப்பில் ஒரு புறத்தில் காத்திருந்தான்.

ஃ ஃ ஃ

இந்திரன் திருக்கயிலை சென்ற பிறகு அவன் நினைத்துச் சென்ற காரியம் இனிது நிறைவேறும் பொருட்டு இந்திராணி சீர்காழி வனத்தில் தவம் செய்து கொண்டிருந்தாள். இந்திரன் நெடுநாட்களாகியும் திரும்பி வரவில்லை. கணவன் வராததால் தேய்பிறைச் சந்திரன்போல் தன் உடல் தேய, அழலிடைப்பட்ட மெழுகு போல் உள்ளம் உருகிக் கொண்டிருந்தாள் இந்திராணி.

இந்திராணிக்கு நேர் எதிரான ஒரு படைப்பு அசமுகி. பொறுமை, நாணம், கற்பு, ரூப சௌந்தரியம் யாவற்றிலும் இந்திராணிக்கு மறு துருவம் அசமுகி. இந்திராணி அன்னப் பேடு எனில் அசமுகியோ கோர இராசாளி.

அன்னப்பேட்டிடம் இராசாளி வந்து விட்டது!

அசமுகி தன்னுடைய தோழி துன்முகியுடன் சூலப் படையை ஏந்திச் சுற்றி வரும்போது இந்திராணி இருக்கும் நந்தவனத்துக்குள் வந்துவிட்டாள்! தவம் செய்து கொண்டிருந்த சசிதேவியைக் கண்டதும் அரக்கருக்கே உரிய இழுக்கான எண்ணம் அசமுகிக்குத் தோன்றியது: 'என் தமையனாகிய சூரபன்மனுக்கு அஞ்சித்தான் இந்திராணி தேவருலகிலிருந்து ஓடி ஒளிந்து இங்கு தவம் செய்து கொண்டிருக்கிறாள். இவளைத் தேடிப் பிடித்து வருவதற்காகவே அண்ணன் பல ஆட்களை அனுப்பி யிருக்கிறான். இப்போதோ நானே இவளைக் கண்டு பிடித்து விட்டேன். இவளும் தனியாக இருக்கிறாள். இவளைக் கவர்ந்து கொண்டு போய் அண்ணனுக்கு அளிப்பேன்' என்று எண்ணினாள்.

இந்திராணியை அணுகினாள் அசமுகி. பூசை வேளையில் பேயாக எதிரே நின்ற அவளைக் கண்ட இந்திராணி அஞ்சி நடுங்கி எழுந்தோட முயன்றாள்.

''நில்!'' என்று அதிரக் கூறியவாறு எதிரே வந்தாள் அசமுகி. அச்சத்தில் நடுங்கும் அழகு மங்கையைக் கண்டதும் அவளுக்கும் சிறிது மனம் இரங்கிற்று போலும்! ஆதரவாகப் பேசுவதே போலச் சொன்னாள்: ''இலட்சுமியும் கண்டு பொறாமைப்படத் தக்க இலட்சணவதியான நீ ஏன் உன்னுடைய இளமையை வீணாக்கித் தவம் செய்து கொண்டிருக்கிறாய்? நாட்டை இழந்து ஓடிவிட்ட இந்திரன் உனக்கேற்ற கணவன் அல்லன்; ஆயிரத்தெட்டு அண்டங்களுக்கும் தலைவனாகிய சூரபன்மனே உனக்குத் தகுந்த மணாளன். அவனும் உன்னை விரும்பித் தவம் புரிகிறான். அற்பனாகிய இந்திரனை வெறுத்து

அருமை பெருமை யுடைய என் அண்ணன் சூரபன்மனைக் கணவனுக அடைவாய். என்னுேடு விரைந்து என் அண்ணன் நகருக்கு வந்து அரியணை ஏறுவாய்'' என்று கூறினுள்.

அசமுகியின் சொற்களைக் கேட்ட இந்திராணி இடியேறுண்ட மயில் போல் செயலிழந்து கலங்கி நின்ருள். பதிவிரதா தருமத்தைப் பழுதின்றிக் காத்து வரும் தன் காதுகளில் இத்தகைய கடுஞ் சொல் விழலாயிற்றே என்றெண்ணிச் செவிகளைப் பொத்திக் கொண்டாள். சிறிது போதிலேயே தேவராணிக்குரிய கம்பீரமும், கடுங் கோபமும் கொண்டு, அசமுகியை நோக்கிக் கூறினுள்: ''அடி பேதாய்! பெண் குலத்தின் பெருமையை அழிக்கவே நீ பிறந்தாய் போலும்! தீதில்லாத கற்புடைய நான் தேவர் கோமானைத் தவிர ஏனையோரைக் கனவிலும் கருதேன். என் மானத்தையும் உயிரையும் காத்துக் கொள்ள எனக்கு எங்கும் காவல் உண்டு. நீ இங்கிருந்து விரைந்து செல்லாவிடில் அழிந்து போவாய்'' என்று கூறினுள். கற்பு என்ற பெருங் காவலோடு ஐயனுரின் அருட் காவலும் இருந்ததால் அயிராணி இவ்வாறு கூறினுள்.

அசமுகி வடவைத் தீயென வெகுண்டாள். ''அறிவற்ற அமரப் பெண்ணே! நான் உன் நன்மைக்காக நல்லது சொன்னேன். அந்த நல்ல வார்த்தைகள் உன் செவிகளில் ஏறவில்லை. மூவுலகாளும் அசுரர்கோனின் உடன் பிறப்பாகிய என்னைத் தாக்கிப் பேசினுய். உன்னை இப்போதே கொன்று தின்றுவிட என்னுல் முடியும். எனினும் என் அண்ணன் உன்னை விரும்புகிருன் என்பதால் உன்னைக் கொன்று புசிக்காமல் விட்டு விட்டேன். நீயாக என்னுடன் வராவிடில் நான் உன்னைப் பிடித்து இழுத்துச் செல்கிறேன், பார்!'' என்று ஆர்ப்பரித்த அரக்க இளவரசி, இந்திராணியின் திருக் கையைப் பிடித்து இயமன் உயிரை இழுப்பதுபோல் இழுத்துச் செல்ல முற்பட்டாள். பருந்து வாய்ப்பட்ட புள்ளின் பெடையைப் போலத் தவித்த இந்திராணி ஐயப்ப சுவாமியை எண்ணித் துதிக்கலானுள்.

''ஆனைச் சுருதி போர்சார்
அடலுருத் தீரனென்று ஏத்துங்
காரணக் கடவுள் ஓலம்;
கடல்நிறத்து எந்தாய் ஓலம்;
பூரணைக் கிறைவா ஓலம்;
புட்கலை கணவா ஓலம்;
வாரணத் திரைமேற் கொண்டு
வரும்பிரான் ஓலம்'' என்முள்

இந்திராணியின் பிரார்த்தனை ஐயனுரின் படைத் தலைவராகிய வீர மகாகாளரை எட்டியது. தேவியைக் காக்கவே சாஸ்தாவால் நியமிக்கப்பட்ட மகாகாளர் தமது வடிவாளைச் சுழற்றிக்கொண்டு அங்கு விரைந்து வந்து நின்ருர். இந்திராணியை நோக்கி, ''அம்மே அஞ்சாதே!'' என்று அபய ஹஸ்தம் தந்தார். அவளைப் பற்றி இழுக்கும் அசமுகியைப் பார்த்து இடி முழக்கக் குரலில் ''நில்'' என்று கட்டளை இட்டார். தன்னை அதட்டிய வீர மகா காளரை அலட்சியமாக நோக்கிய அசமுகி, ''மும்மூர்த்திகளே என்னை எதிர்த்து நிற்க மாட்டார்கள். அப்படி யிருக்க நீ யார் என்னைத் தடுக்க? இந்திராணியைக் காப்பாற்றவா இருக்கிருய்? உனக்கு இந்தக் காவல் வேலையைத் தந்தது, யாரப்பனே? மூவுலகங்களிலும் ஆதிபத்தியம் செலுத்தும் என் தமையனுக்கு மேலாகக் கட்டளை இட்டது யார் சொல்!'' என்று மிடுக்காகக் கேட்டாள்.

''இதோ சொல்கிறேன் கேள். மூவுலகங்களையும் காக்கும் கரிய மேனியன்; அவரது திருநாமம் ஐயன். அவரே எனக்கு இந்தப் பணியைத் தந்துள்ளார்'' என்று கூறினுர் வீர மகா காளர்.

'தாரணி முதல மூன்றுந்
தலையளி புரிந்து காப்பான்;
காரணி செறிந்துற்றன்ன
கரியவன்; கடவுள் வெள்ளை
வாரண முடைய ஐயன்;
மற்றிது பணித்தான்; எவ்பேர்
வீரரில் வீர னுன
வீரமா காளன்' என்முன்.

வீர மகாகாளர் இந்திரனைத்தான் 'ஐயன்' என்றும் 'வெள்ளை வாரணனென்றும் கூறினுர் என்று எண்ணி அசமுகி, ''நீயும் அற்ப இந்திரனின் ஆள்தானு?'' என்று கேட்டுத் தன் கையிலிருந்த சூலத்தை அவர் மீது எறிந்து அட்டகாசம் செய்தாள். வீர மகாகாளர் அந்தச் சூலத்தைத் தமது வாளால் அநாயாசமாகத் துண்டாக்கினுர். உடனே அவள் துன்முகியின் கையிலிருந்த சூலத்தை வாங்கி வீர மகாகாளரின் மார்பை நோக்கி விடுத்தாள். அதனை வாளினுல் வெட்டி வீழ்த்தினுர் மகாகாளர். அசமுகி பின்வாங்கிச் சென்று மலைகளையும் மரங்களையும் பறித்து வீசிப் போர் புரிந்தாள். மகாகாளர் மலைகளை வீசிய மகா பலம் பொருந்திய துன்முகியின் கரத்தையே இலகுவில் துண்

தார். அவனைக் காலால் உதைத்து உருட்டினார். துன்முகியின் கரத்தை யும் வெட்டி வீழ்த்தினார்.

உதிர ஆறு பெருக உருண்டாள் அசமுகி. அந்த நிலையிலும் அடியுண்ட வேங்கைபோல் ஆறாச் சினம் கொண்டு ''இந்திராணியை உண்பேன்'' என்று எழுவாள்; விழுவாள்; உதட்டைக் கடிப்பாள்; துடிப்பாள்; தனக்கும் தோல்வியா என்று எண்ணிப் பெருங் குரலெடுத்து ஓலமிடுவாள். ''உலகை யெல்லாம் அழிப்பேன்'' என்று சீறுவாள்.

உலகங்களை யெல்லாம் அழித்துவிட எண்ணிய அசமுகிக்கு ஆறுதல் கூறினாள் துன்முகி: ''தலைவிப் பெருமாட்டியே! வீர மகாகாளர் உங்கள் கரத்தை வெட்டியதற்காகப் பூவுலகும் பொன் னுலகும் என்ன செய்யும்? உலகங்களை எல்லாம் இதற்காக அழித்தால் அவற் றுக்குத் தலைவரான சூரபன்மாசுர ருக்குக் கோபம் ஏற்படாதா? தங்கள் துயர் துடைக்கத் தமையனார் உள்ள போது தாங்கள் ஏன் பழிவாங்க முற் படவேண்டும்? தாங்கள் இப்படித் துயர்ப் படலாகாது. இறைவனையும், ஞானிகளை யும் தவிர மற்ற உயிர்களுக்கு ஊழ்வினை யில் உண்டாகும் விளைவு நீங்காது'' என்று தேற்றினாள்.

**நினைவருங் கண்ணுதல்**
**நிமலற் கேயலால்**
**அனையனை அடைதரும்**
**அறிஞர்க் கேயலால்**
**எனைவகை யோர்க்குமெவ்**
**வுயிர்க்கும் ஏற்பதோர்**
**வினைபடும் இழிதுயர்**
**விட்டு நீங்குமோ?**

புராணங்களைத் தந்த முனிவர்களின் பெருமையைப் பாருங்கள். எந்தப் பாத்திரத்தையும் குறித்தும் அவர் களுக்குப் பற்றுக் கிடையாது. சத்தியம் ஒன்றிடம்தான் அவர்களுக்குப் பற்று. கண்ணன் செய்கிற மாயத்தையும் ஒளிக் காது எழுதுவார் வியாசர்; கர்ணன் போன்றவர் செய்கிற தருமத்தையும் தயங்காது கூறுவார். அரக்கியின் தோழி யான துன்முகி ஒரு நல்ல வார்த்தை கூறினால், அதையும் வியாசரோ, கச்சி யப்பரோ மறைக்க மாட்டார்கள்.

துன்முகியின் நன்மொழி கேட்ட அசமுகி எழுந்தாள். இந்திராணியைப் பார்த்து, ''உன்னையும் உன் கண வனையும், ஏனைய தேவர்களையும் என் அண்ணனைக் கொண்டு நொடிப் பொழு தில் சிறைப்படுத்துவேன். அப்ப[டி] செய்யாவிடில், நான் சூரபன்ம[ன்] தங்கையல்ல'' என்று சபதம் செ[ய்து] விட்டு அவ்விடத்தை விட்டு நீங்கின[ாள்].

அப்போதைக்குத் தெளிவு பெ[ற்ற] லும், பதியின்றிக் கலைமானைப் பி[ரிந்த] பிணை மானைப்போல மனம் பத[ைத்த] இந்திராணி கணவன் கருதிச் செ[ன்ற] காரியம் வெற்றி பெற வேண்டும் எ[ன்று] மீண்டும் தவம் செய்யலானாள்.

ஃ ஃ ஃ

சீர்காழி நந்தவனத்தில் இந்[திரா]ணிக்கு நிகழ்ந்த ஆபத்தை யெல்[லாம்] அறிந்த நாரத முனிவர் திருக்கயி[லை] மலைக்கு விரைந்து சென்றார். சிவபெ[ருமா]னைத்தரிசிப்பதற்கு உற்றசமயத்தை நோக்கியிருந்த இந்திரனிடம் நிக[ழ்ச்சி]களை எடுத்துரைத்தார். அதனைக்[கேள்]விப்பட்ட இந்திரன் தனது வி[தியை] நினைத்து வருந்தினான். திருந[ந்தி] தேவரை வணங்கி, ''அரனாரின் [தரி]சனத்துக்கு உற்ற சமயத்தை பார்த்துக் கொண்டு நெடுங்காலம் [இ]ருந்தோம். எங்கள் தீவினை கா[ரண]மாக இதுவரை நினைத்த கா[ரியம்] கைகூடவில்லை. பூவுலகம் செ[ன்று] தவம் செய்ய எங்களுக்கு விடை வேண்டும்'' என்று வேண்டிக்கொ[ண்]டான். திருநந்தித் தேவர் மனமு[வந்து] விடை கொடுத்தனுப்பினார்.

இறைவன் எங்குமே இருப்ப[வன்]. அடியாரின் பாவனை முதிரா விட்[டால்] அவரைக் கைலாயத்திலும் காண[முடி]யாது; பாவனை முதிர்ந்தாலோ சீர்[காழி]யில் என்ன, எங்குமே அவரைக் க[ண்டு] விடலாம்.

இந்திரன் மற்ற தேவர்களோடு [சீர்]காழிக்கு வந்தான். அயிராணி[யைக்] காத்து நின்ற மகாகாளரை அன்பு[டன்] தழுவிக் கொண்டு பல இனிய மொ[ழி]களைக் கூறி ஐயனாரிடம் அ[ன்பு] வைத்தான். பின்னர், தவம் செ[ய்து] கொண்டிருந்த தாரத்திடம் செ[ன்று] அவளது தாபத்தை நீக்கினான்.

சூராதியவுணர் படைகள் நொடியிலும் சீர்காழிக்கு வந்து[விடக்] கூடிய ஆபத்தை இந்திராணி இ[ந்திர]னுக்கு உணர்த்தினாள். அவ்விட[த்தை] விட்டு நீங்குவதே முறை என [இந்]திரன் கண்டான். இந்திராணியை[யும்] மற்ற தேவர்களையும் அழை[த்துக்] கொண்டு மேரு மலையிற் போய் ம[றைந்]திருந்தான்.

இந்திரனேயாயினும் வேறு யா[ரா]யினும் வினைப் பயன் விட[ுவதில்]லவா?

(தொட[ரும்])

திரன் முதலிய தேவர்கள், மன்மதன் மலர்க் கணை விடுப்பதைக் காணப் புறப்பட்டுக் கயிலை வந்தடைந்தனர். கயிலை மலையின் ஒரு புறத்தே அவர்கள் சிவபெருமானைத் துதித்துக் கொண்டிருந்தார்கள்.

சிவபெருமான் மீது குறி வைத்து ஐந்து மலர்க் கணைகளை விடுத்தான் மன்மதன். அந்தக் கணைகள் எம்பெருமான் மீது பட்டதும், நெற்றிக் கண்ணைச் சிறிதே திறந்து பார்த்தார்.

அவ்வளவுதான்! வெல்ல வந்தவன் வெந்து போனான். பெருமானின் பார்வையிலிருந்து எழுந்த தீ மன்மதனின் உடலை எரித்தது. அதனால் உண்டாகிய புகை கயிலை மலை முழுவதையும் சூழ்ந்தது. மன்மதன் சாம்பலாகி விட்டான்.

**விட்ட வெம் பகழி**
**யைந்தும் வியத்தகு விமலன்மீது**
**பட்டலுஞ் சிறிதே வேளைப்**
**பார்த்தனன் பார்த்த லோடும்**
**கட்டமல் பொதிந்த நெற்றிக்**
**கண்ணது கடிதே காமற்**
**சுட்டது கயிலை முற்றுஞ்**
**சூழ்புகை பரவிற் றன்றே**

மதனன் ஒருவன் எரிந்து தோன்றிய புகை கயிலை முழுவதையும் சூழ முடியுமா என்று வியக்க வேண்டாம். சின்னஞ்சிறு அணுவை ஆயுதத்தால் சிதைக்கும்போது எழும் புகைக் கொண்டல்கள் எவ்வளவு பரிமாணம் வியாபிக்கின்றன? இந்த அணு ஆயுதத்தைக் காட்டிலும் கொடிய ஆசை ஆயுதமல்லவா அனங்கன்?

எல்லாருக்கும் ஆசை உண்டாக்குவது மன்மதனுடைய வேலை. சிவபெருமான், தாம் ஆசையை அறவே களைந்ததோடு மட்டுமின்றி, ஆசையை அனைத்துலகுக்கும் உண்டாக்கும் அதிதேவதையையே அழித்து விட்டார்.

இந்துக்களுக்கு ஒரு மன்மதன், கிறிஸ்தவர்களுக்கு ஒரு மன்மதன், சோஷலிஸ்டுகளுக்கு ஒரு மன்மதன், கம்யூனிஸ்டுகளுக்கு ஒரு மன்மதன் என்று இல்லை. எல்லோருக்கும் ஒரே மன்மதன், மண்ணவர்க்கும் விண்ணவர்க்கும் அவன் பொதுவானவன். எனவே ஆங்கில மொழிப்படியும் அவன் காமன் (common). காமன் எரிந்த போது எழுந்த புகை, அரி அயனாதி தேவர்கள் பாற் கடலைக் கடைந்த சமயம் ஆலகால விஷம் தோன்றியதைப் போலிருந்ததாம். அது கண்ட நந்தி தேவர் 'மன்மதன் எரிந்து விட்டான்' என்று தம்மைச் சூழ்ந்திருந்த கணங்களிடம் கூறினார். ''சிவபெருமானின் நெற்றிக் கண் மன்மதனைச் சுட்டது என்று நினைக்காதீர்கள். கருணாமூர்த்தியான அவரை மலர்க் கணையால் மயக்கி விடலாம் என்றெண்ணிய மறச் செயலே சுட்டு விட்டது. ரதி தேவி பதியை இழந்த சோகத்தால் வருத்தமுற்று எம்பெருமானிடம் வேண்டிக் கொள்வாள். கண்ணுதற் கடவுள் மன்மதனை மீண்டும் எழுப்பித் தருவார்.

---

காலஞ்சென்ற சர்தார் படேலுக்கும் ராஜாஜிக்குமிடையே இருந்த நட்பின் வரலாறு தூய்மை மிக்க ஒரு சகாப்தமாகும். ''மாசில்லா ஒழுக்கமும் சிறந்த நிர்வாகத் திறமையும் தெளிந்த அரசியல் ஞானமும் படைத்தவர்'' என்று ராஜாஜியை வாயார வாழ்த்தியவர் சர்தார். பலநகர் மகாராஜா நம் மாநில கவர்னராயிருந்தபோது சென்னைக்கு விஜயம் செய்த படேல், ''நான் அரச வம்சத்தில் பிறந்த ஒரு மகாராஜாவை உங்களுக்குக் கவர்னராகத் தந்திருக்கிறேன்; நீங்களோ ஒரு சக்கரவர்த்தி ராஜாவையே எங்களுக்குக் கவர்னர்ஜெனரலாகத் தந்திருக்கிறீர்கள்'' என்றார்.

ராஜாஜியின் தலைமையை நம் ராஜ்யத்தில் சிலர் எதிர்த்தபோது பட்டேலுக்கு உண்டான சீற்றத்துக்கு அளவே இல்லை. இதில் படேலையும் சம்பந்தப்படுத்தி, அவர் பட்டாபி சீதாராமையாவின் தலைமையை ஆதரிக்கிறார் என்ற வதந்தி பரப்பப்பட்டது. இதைக் கேள்வியுற்ற சர்தார்ஜி, ''என்ன, ராஜாஜிக்குப் பதில் இன்னொருவரா? நான் சொன்னேனா? முழுப் பொய், மூடத்தனம்'' என்று அழுத்தம் திருத்தமாகக் கூறினார்.

ஆனால் கட்சியைக் கட்டுப்படுத்த படேல் இல்லாமற் போனாரே என்பதுதான் ராஜாஜியின் பெரும் துயரம்.



மனிதன் ஏன் தவறான வழியில் செல்கிறான் என்பதன் உண்மையான காரணத்தை அடிக்கடி நினைவுக்குத் தந்து கொள்ள வேண்டும். தீய செயல்கள் செய்தவர்களைக் கண்டு சாந்தம் இழக்காமல் அவர்கள் பால் அன்பு பாராட்ட இது பயன்படும்.

தன்னைத் தான் அடக்கியாளாமல், எண்ணங்கள் போனபடி விட்டுவிட்டால் பிறப்புடன் வந்திருக்கும் கர்ம மூட்டையின் வேகம் வேலை செய்யும். குண ரூபமாக அது அனைவரையும் வேதனைப்படுத்துகிறது. அந்த சுபாவம் காரிய ரூபமாக வெளிப்படுகிறது. இதை ஒருவனிடம் கண்டு நாம் கோபிக்கலாமா? மற்றவர்கள் செயலைக் கண்டு வெறுப்படையும்போதெல்லாம் அவனவன் தன் குறைகளை நினைவுக்குத் தந்து கொள்ள வேண்டும். 'உன் மனம் சுத்தமாக இருக்கிறதா? உன் சுபாவம் உனக்குத் தெரியுமே! மற்றவர்களுக்கு வெளிப்படையாகாவிடினும் அது உள்ளே செய்யும் வேலையை நீ கண்டிருக்கிறாயே! அதை அடக்கினது உன் பாக்கியம். மற்றவர்கள் அந்த பாக்கியத்தை அடையாமற் போனதற்கு வருந்த வேண்டும். கோபம் வேண்டாம்' என்று தனக்குள் எச்சரிக்கை செய்து கொள்ள வேண்டும். பாவம் செய்தான் என்றும் ஒருவனையும் நாம் துவேஷிக்கக் கூடாது. நாம் அந்தப் பாவம் செய்யவில்லை என்று கர்வப்படவுங் கூடாது. — ராஜாஜி

இந்தக் காட்சியை நீங்கள் பாருங்கள்'' என்றும் முக்காலமும் உணர்ந்த நந்தி தேவர், சுரகணங்களுக்குக் கூறினார்.

முப்புரத்தை எரித்த முக்கட்பெருமான் தமது அடியார் மூவரையும் எரிக்காது விட்டது போலத் தென்றல் தேருடைய மன்மதனை எரித்த எம்பெருமான் ரதி தேவியை எரிக்கவில்லை. சிவபெருமான் மன்மதனை எரித்துவிட்டு முன் போலவே மோன நிலையில் வீற்றிருந்தார். சிவபெருமானின் நெற்றிக் கண் மன்மதனை எரித்தது நிக்ரஹ சக்தியைக் காட்டுகிறது. இதே நெற்றிக் கண் முருகரைத் தோற்றுவித்து, அரக்கரை அழித்து நல்லோரை வாழ்விக்கிறது. இது அநுக்கிரக சக்தியைக் காட்டும். மாரனை அழித்த அதே கண்கள்தாம் குமாரனைத் தந்தருளின.

ரதி தேவி துயரக் கடலில் ஆழ்ந்தாள். அவள் கண்களிலிருந்து வழிந்த நீர் ஆறுபோல் ஓடிற்று. அவள் உடல் வியர்த்தது; ஆவி ஒடுங்கியது.

''பிராணபதி! பிராணபதி!'' என்று கதறிக் கீழே விழுந்தாள்.

செம்பதுமை திருக்குமரா! தமியேனுக்கு
ஆருயிரே! திருமால் மைந்தா!
சம்பரனுக் கொருபகைவா! கன்னல்வளைச்
சிலைபிடித்த தடக்கை வீரா!
அம்பவளக் குன்றனைய சிவன்விழியால்
வெந்துடலம் அழிவுற்றாயே!
உம்பர்கள்தம் விழியெல்லாம் உறங்கிற்றோ?
அயனும் உவப்புற் றானோ?

''திருமகள் பெற்ற செல்வப் புதல்வரே! என் ஆருயிரே! 'மன்மதனும் ரதியும் போல்' என்று உலகத்தார் ஒற்றுமைக்கு நம்மைச் சொல்வார்களே! அப்படியிருந்தும் சிவபெருமான் மீது போருக்குச் செல்ல வேண்டாம் என்று நான் சொன்னபோது கேட்கவில்லையே! கரும்பை வில்லாகக் கொண்டு இரும்பையும் உருக்கிய தாங்கள் கடைசியில் கருணாமூர்த்தியான கயிலைநாதரின் நெற்றிக் கண் பட்டு இறந்து விட்டீர்களே!'' என்று கதறினாள் ரதி.

மறைந்தவர்களின் உடலையேனும் பார்த்துத் துக்கத்தை முழுவதும் வெளிப்படுத்தும் பாக்கியம் கூட ரதிக்கு இல்லை; அவன் பஸ்மமாகிவிட்டான். இதை எண்ணி, ''வெந்துடலம் அழிவுற்றாயே!'' என்று கதறினாள்.

''சுவாமி! 'சிவபெருமான் மீது போருக்குப் போ; போ' என்று உங்களைப் பிடித்துத் தள்ளினார்களே அந்த தேவர்கள் உம்மை ஈசன் எரித்தபோது எப்படிப் பார்த்துக் கொண்டிருந்தார்களோ? 'தொலைந்தான் தம்பி; பங்காளி பங்கு கேட்க மாட்டான்' என்று உங்கள் அண்ணா பிரமதேவருக்கு உவப்பாக இருந்திருக்கும்.

''சுவாமி! நீங்கள் அலங்காரம்செய்து கொண்டு நிற்கும்பொழுது உங்களைக் கண்டு விம்மிதம் அடைவேனே! 'மன்மதனைப் போன்ற அழகு' என்று அழகுக்கு உங்களை யல்லவா இந்த உலகம் சொல்லுகிறது? உங்களுடைய மலை போன்ற தோள்களைத் தழுவிக் கொண்டிருந்த நான், அன்பு பொழியும் உங்கள் திருமுகத்தை இனி எந்தக் காலத்தில் பார்ப்பேன்? போன ஜன்மத்தில் ஒற்றுமையாக வாழ்ந்த கணவன் மனைவியரிடையே கலகம் செய்து அவர்களைப் பிரித்துவிட்டேன் போலும்! அவ்வினைதான் இப்போது வந்து வருத்துகிறதோ? எதுவும் தெரியாமல் வருந்துகிறேனே சுவாமி'' என்று பலவாறு புலம்பினாள் ரதி. (தொடர்)




1. திரு ஈ. ஸி. சாஸ்திரி எழுதியுள்ள 'தமிழ் சுலப சிட்சை' நூலைக் கல்சத்தா பல்கலைக்கழகத் துணை வேந்தர் டாக்டர் மல்லிக் வெளியிட்டார். 2. திரு ஜமதக்னியின் மேக சந்தேசம் நூல் வெளியீட்டு விழா மயிலை ஸ்ரீநிவாஸ சாஸ்திரி ஹாலில் நடந்தது. 3. லண்டனில் ஸ்ரீமதி சூர்யகுமாரி பி. பி. ஸி. தமிழ்ப் பகுதிக்குப் பேட்டி யளிக்கிறார். 4. வட ஆர்க்காடு ஜில்லா பூதேரி கிராமத்தைச் சேர்ந்த ஸ்ரீமான் பி. பி. ஸ்ரீநிவாச அய்யங்கார் அவர்களைக் ''கல்யாணம் அய்யங்கார்'' என்றால்தான் யாருக்கும் தெரியும். கணக்கற்ற ஏழைகளுக்குக்கல்யாணம் நடத்தி வைத்ததால் உண்டான பெருமை இது. ஸ்ரீ கல்யாணம் அய்யங்கார் அவர்களின் ஷஷ்டியப்தபூர்த்தி திருப்பதியில் சென்ற மாதம் வெகு விமரிசையாக நடந்தேறியது. திருவேங்கடமுடையான் இவருக்கும் இவரது குடும்பத்தினருக்கும் நலன்கள் பலவும் நல்க வேண்டுகிறோம்.



# 28. அபயமளித்தார் ஆறுமுகன்

தந்தையிடம் விடைபெற்றுத் தனது மாளிகைக்கு வந்த பானுகோபன் போருக்குச் செல்வதற்கு ஆயத்தம் தொடங்கினன். தும்பை மாலை அணிந்து, பல்வகைப் படைக்கலங்களை எடுத்துக் கொண்டு, இரண்டாயிரம் குதிரைகள் பூட்டிய தேரில் ஏறிப் புறப்பட்டான். அவனது சேனைகள் சென்றபோது ஏற்பட்ட புழுதியினல் வீரமகேந்திரபுரமே மறைந்தது. பானுகோபன் கடலைக் கடந்து பூமியை அடைந்தான். இடம் காட்டுவதற்காக

## கந்தன் கருணை

திருமுருக கிருபானந்தவாரியார்

உடன் இட்டு வந்திருந்த துன்முகியிடம், ''அசமுகி அத்தையின் கைகள் எந்த இடத்தில் வெட்டப்பட்டன?'' என்று கேட்டான்.

துன்முகி அவனைச் சீர்காழி நந்த வனத்துக்கு அழைத்துச் சென்றாள். நந்தவனத்தில் புகுந்தான் பானுகோபன். அவனது சேனைகள் நந்த வனத்தை அழித்தன. நந்தவனமெங்கும் தேடிப் பார்த்தபொழுது இந்திராணியையோ வீரமகாகாளரையோ காணுததால் பானுகோபன் மிகவும் ஆத்திரம் கொண்டான். பூவுலகெங்கும் தனது படைவீரர்களுடன் சென்று தேடினன். அங்கும் அவர்களைக் காண முடியவில்லை; நால்வகைச் சேனைகளுடன் விண்ணுலகம் சென்றான். அதனை அறிந்த தேவர்கள் அஞ்சியோடி இந்திரனின் புதல்வனாகிய சயந்தனிடம் சென்று படையெடுப்புச் செய்தியைத் தெரிவித்தனர். தேவர்களில் பலரும் தேவகுரு வியாழ பகவானும் தேவராஜனும் விண்ணுலகில் இல்லாத சமயம் அது. எனினும் சயந்தன் அசுரர்களை எதிர்த்துப் போரிடுவது என்றே தீர்மானித்தான்.

''அசுரர்களிடம் புறங்காட்டி ஓ... நமது தன்மானத்துக்குத் தக... இவர்களிடம் அடிமைப்பட்டு ... வாழ்வதைவிட எதிர்த்துச் சா... மேல். புறப்படுங்கள் போருக்கு'' எ... தேவர்களைத் தூண்டினன். அவர்... தங்களது அன்புக்குரிய இள... னுடன் உற்சாகமாக யுத்தத்... ஆயத்தம் செய்யலானார்கள்.

சிங்காதனத்தி லிருந்து இற... சயந்தன் ஐராவதத்தை எண்... வுடன் அந்தத் திவ்வியமான வெ... யானை அவன் எதிரில் வந்து நின்... அதன் மீது ஏறிக் கொண்ட சய... தேவர்கள் புடைசூழப் போரு... புறப்பட்டான்.

பானுகோபனின் சேனைக்கு எ... தேவர் படை அணிவகுத்து நின்... சமர் புரியாமலே அமரர் ஓடி வி... என்று எதிர்பார்த்த அசுரர்க... வியப்பாகி விட்டது. ''நன்றாயிருக்கி... நேற்று வரை நம்மிடம் ஏவல் செ... கொண்டிருந்த தேவர்கள் இ... நம்மை எதிர்த்துப் போர் செ... வந்து விட்டார்களே!'' என்று ஆச்... முற்று நின்றார்கள்.

இரு படைகளும் மோதிக் கொ... டன. இரு தரப்பினரும் வேற்ப... வாட்படை, சக்ரம், மழுப் படை... முத்தலைச் சூலங்கள், குலிச... முதலியவற்றைக் கொண்டு ... யாகப் போர் புரிந்தனர். ... வெள்ளம் போல் ஓடியது. ... நாட்கள் அடிமை வாழ்வு வா... இளைத்திருந்த வானவர்களால் ... கார பலம் பெற்று மதர்த்திருந்த ... கணங்களுக்கு ஈடு கொடுப்பது கடி... யிருந்தது. போர்க் களத்தில்... தேவர்கள் ஓடலாயினர். ஓடிய தே... களை அசுரர்கள் துரத்திச் சென்று ... றினல் கட்டிப் பானுகோபன... இழுத்து வந்தார்கள்.

தேவர்கள் கயிற்றினல் கட்டி ... கப்படும் கோரக் காட்சியை ... யானை மீது அமர்ந்திருந்த சய... கண்டான். அவனுக்குத் தன்... பொங்கியது; கோபம் மிகுந்தது. ... லுள்ள சக்தியை யெல்லாம் வரவ... துக் கொண்டு வில்லை வளைத்து நாணே... றிப் பாணங்களை மழை போல் பெ... தான். அதற்கு எதிராக அசுரர்... கோடிக் கணக்கில் பாணங்களை ... தார்கள். தன்னை நோக்கி ... பாணங்களை யெல்லாம் எதிர்ப் ப... களால் தவிடு பொடியாக்... சயந்தன். கடும் போர் புரிந்த... வெள்ளம் அசுரர்களையும் அழி... பானுகோபனுடைய படை...

லரை ஐராவதம் காலால் மிதித்து மிதித்தது. மற்றும் சில வீரர்களைத் தும்பிக்கையினால் வாரி வீசியது; சில வீரர்களைத் தந்தத்தினால் குத்திக் கொன்றது; சிலரை வாலினால் அடித்துக் கொன்றது.

அசுர வீரர்களின் தலைவன் நீல கேசன் சயந்தன் மீது நூறு பாணங் களை விடுத்தான். சயந்தனும் நூறு பாணங்களை விடுத்தான். அதனால் நீல கேசனின் கவசம் பிளந்தது. ஆத்திர மடைந்த நீலகேசன் பிறைமுக அஸ் திரத்தைச் சயந்தன் மீது விடுத்தான். அதனால் சயந்தனுடைய வில்லின் நாண் அறுந்தது. சயந்தன் நிராயுத பாணியாகி விட்டான். அஸ்திரசஸ்திர மற்ற சயந்தன் மந்திர தந்திரங்களை ஏவினான்; பலவித மாயங்களைச் செய்து விட்டான். அந்த மாயங்களை எதிர்த்துப் போர் செய்ய வகையறியாத நீலகேசன் மயங்கி விழுந்து இறந்தான். மிஞ்சியிருந்த அசுர வீரர்கள் பல திசைக ளிலும் சிதறி ஓடினார்கள். சோமாசுரன், மாபலி, சுரகேசரி, பதுமன், மாருத ன், தண்டகன், வாமன், வருணன், கதன் முதலியவர்களின் மாயாவிப் போர் முறை யாவும் தேவ ராஜகுமார ன் மந்திர பலத்துக்கு முன்னால் ஏதும் செய்ய இயலவில்லை.

அசுர வீரர்களின் தோல்வியையும், அவர்கள் மடிவதையும், சயந்தனின் ஆற்றலையும் கண்ட பானுகோபன் சுக்கிராச்சாரியார் முன்பு தனக்கு உப தேசித்திருந்த மூல ஞான மந்திரத்தை ஜபிக்கத் தொடங்கினான். அதன் மூலம் சயந்தன் செய்யும் மாயைகளை அறிந்து அதற்கு எதிராகப் போர் செய்தான். சயந்தனின் மாய உரு வங்கள் எல்லாம் மறைந்து விட்டன. சயந்தன் தன்னந் தனியனாக ஐராவ தத்தின் மீது அமர்ந்திருந்தான். அவ னுக்கு அருகில் ஆர்த்துச் சென்றான் பானுகோபன். ''இந்திர குமாரா ! நான் உனக்குப் பக்கத்தில் வந்தவுட னேயே உன் மாயா பலம் மறைந்து விட்டதெனில், என் வலிமை எப்படிப் பட்டது என்பதைத் தெரிந்து கொள். பாலப் பருவத்திலேயே நான் பகலவனைச் சிறை புரிந்தவன். எப்படிச் சிறை வைத்தேன் என்று நீ கண்ணுக்கு நேரே உணருவதற்காக இப்போது உன்னையும் சிறையில் அடைக்கப் போகி றேன். ஆற்றல் இருந்தால் வா என் னுடன் போருக்கு'' என்று அழைத் தான். இதைக் கேட்டதும் சயந்த னுக்குச் சினம் பிறந்தது.

இந்திர குமாரனுக்கும் சூரகுமார னுக்குமிடையே கடுமையான யுத்தம் நடந்தது. ஒன்றுக்கொன்று நேர் எதி ரான அசுர சக்திக்கும் தேவசக்திக்கும் உருவகம் தாங்கிய இளைஞர்களின் யுத்தம் அற்புதமாக இருந்தது. இரு வருமே சளைக்காமல் ஒருவரை யொரு வர் சாடிக் கொண்டார்கள். தேரிழந்து மறு தேர் ஏறிய பானுகோபன் சயந்தன் உடல் மீதும், ஐராவதத்தின் மீதும்



சரமாரி பொழிந்தான். சயந்தன் மயங்கி வெள்ளை யானை மீது விழுந்தான். அவனது உடலிலிருந்து பெருகிய உதிரம் தண்ணென்று தன் மீது பட்டதும் விசுவாசம் மிக்க வெள்ளை வாரணமாகிய ஐராவதம் நிலைமையைப் புரிந்து கொண்டது; கடுஞ் சினம் கொண்டது; பானுகோபனுடைய தேர் மீது பாய்ந்தது. தேரில் பூட்டப்பட்டிருந்த குதிரைகளையும், தேர்ப் பாகனையும் தாக்கி அழித்தது. தேரையும் ஓங்கித் தரையில் வீசி நொறுக்கியது. தேரிலிருந்த பானுகோபன் பூமியில் குதித்தான். வெகுண்டு ஐராவதத்துடன் போர் செய்தான். அவனது மார்பில் முட்டியது ஐராவதம். ஐராவதம் முட்டியதால் பானுகோபன் அழியவில்லை. மாருக, யானையின் தந்தங்கள் முறிந்தன. பானுகோபன் ஆவேசத்தோடு ஐராவதத்தின் துதிக்கையை ஒரு கையினுல் பிடித்து முறுக்கிக் கொண்டு மற்ருெரு கையினுல் திவ்விய கஜத்தை ஓங்கி அறைந்தான். குன்றனெனப் பருத்து நின்ற ஐராவதம் அடியின் பலத்தில் பாதியும், அடியுண்ட அவமானத்தால் பாதியுமாகத் தன் சக்தியை இழந்து அப்படியே தரையில் சாய்ந்தது. அதன் மீது மயங்கிக் கிடந்த சயந்தன் நிலத்தில் உருண்டு விழுந்தான். பூமி ஸ்பரிசம் பட்டதும் மயக்கத்தினின்று தெளிந்தான். நடந்தவற்றை யெல்லாம் அறிந்தான். தனது ஆற்றல் அடங்கி யொடுங்கி விட்டது என்பதை உணர்ந்தான்.

அசுர வீரர்களின் தலைவர்கள் அசக்தனுகக் கிடந்த சயந்தனைச் சூழ்ந்து கொண்டு, ''அடியுங்கள்; உதையுங்கள்'' என்று கூச்சலிட்டார்கள். அவர்களை விலக்கிக் கொண்டு அங்கே வந்த பானுகோபன், ''இவனைத் துன்புறுத்தாமல் தேவர்கள் இருக்கும் சிறைக் கூடத்தில் கொண்டு போய் அடையுங்கள்'' என்று உத்தரவிட்டான். என்ன இருந்தாலும் அசுரர்களின் இளவரசன் அல்லவா? அவனிடம் ஓரளவு கௌரவ புத்தி இருக்கவே செய்தது.

அசுர வீரர்கள் கயிற்றினுல் கட்டி ஏற்கனவே சிறை செய்யப்பட்டிருந்த தேவர் கூட்டத்தோடு இமையவரின் இளவரசனையும் சேர்த்து விட்டார்கள்.

வெற்றிகண்ட அசுரர்களின் வெறி முற்றியது. சொர்க்கம் எங்கும் சுற்றித் தேவர்களையும் அரம்பையர்களையும் பிடித்து வந்து பானுகோபன் முன்பு அசுர வீரர்கள் நிறுத்தினுர்கள். சொர்க்கத்தைக் கொளுத்திச் சாம்பராக்கி மிகவும் மகிழ்ந்தார்கள். தேவர்கள் சிறைப் பட்டதையும் பொன்னுலகம் மயானமானதையும் கண்ட பானுகோ... அளவிலா ஆனந்தமடைந்தான். அ... களை அழைத்து, ''நம்மை எதி... வானவர்களும் இந்திர குமார... அடிமைகளாக எனக்கு முன்னே செ... அவர்கள் கூருமல் கூறும் வெற்றி... உறைவிடமாக நான் அவர்களு... பின் ஊர்வலம் வரவேண்டும்'' எ... ஆணையிட்டான். அதன்படி அசுர... தேவர்களையும் சயந்தனையும் இழு... கொண்டு முன்னே சென்ருர்கள். பா... கோபன் வெற்றி வீரனுக மகே... புரியை அடைந்தான்.

சிறைப்பட்ட தேவர்கள் சூரபன்... முன்னிலையில் நிறுத்தப்பட்டனர். ... மிதத்துடன் தனது போர்த் திற... தந்தைக்கு விளக்கினுன் பானுகோப... சங்கற்பத்தைச் சிறப்புற நிறைவே... றித் திரும்பிய மகனைச் சூரபன்... ஆரத் தழுவிக் கொண்டான். ம... மகிழ்ச்சியுடன் கண்ட அதே கண்க... அனலை உமிழ்ந்தபடி தேவர்களை நோ... னுன் சூரன். ''என் தங்கையின் ... வெட்டுப்பட்டதற்குப் பிரதியாக இ... கள் எல்லோருடைய கைகளையும் து... யுங்கள்'' என்று காவலாளிகளுக்குக் ... டளையிட்டான். வானவர்களின் கை... யும் கால்களையும் காதுகளையும் அ... யின் எதிரிலேயே வெட்டி மகிழ்ந்த... காவலாளிகள். ஆனுல் என்னே ஆ... சயம்! தேவர்களின் அங்கங்களை வெ... வெட்ட தவ வலிமையால் அ... களுக்கு அங்கங்கள் மீண்டும் வ... தன. சூரபன்மன் பழிக்குப் பழி வா... முடியாது என்று கண்டான்.

தேவர்களுக்கும் தேவராஜ குமா... சயந்தனுக்கும் விலங்கு பூட்டப்பட்... சிறையில் அடைக்கப்பட்டார்கள். அ... பின்பு அவர்கள் அநுபவித்த இழிவு... காரணமாக தேவர்கள் தாங்கள் ... முன்பு அமுதம் அருந்திஞேம் எ... வருந்தலானுர்கள். இப்போது ... ரிடம் தோல்வியுற்றதற்குப் ... முன்பு அமுதம் கடையும்போதே ... களிடம் தோற்றிருக்கலாகாதா ... எண்ணினுர்கள். தேவர்கள் அ... உண்டிருந்ததால் மரணத்தை ... விட்டார்கள். இப்போது அற்ப... வருமான அசுரர்களின் கொடு... மைக்கு ஆளாகி அடிமை புரிந்த... ரர்கள் சாவையே வரவேற்றனர். ... அமுதமுண்டவர் எப்படிச் சாக முடி...

தீமையின் கலப்பில்லாத நல்ல... உலகில் கிடையாது. ஒளியும் நி... சேர்ந்துதான் இருக்கும்.

அங்கே போர்க்களத்தில் பா... பனின் தாக்குதலால் மயங்கி ...

முகமே
சொல்லும்...



அழகுப் பராமரிப்புக்கு
ஓர் அரிய தயாரிப்பு



தூய்மைப் படுத்துகிறது



பேணிக் காக்கிறது



இதமளிக்கும் லனேலின்
கொண்டது



— முற்றிலும் ஒட்டாத
தன்மை —



நிறைவான
மேனியெழிலைப் பெற



விடாமல் உபயோகியுங்கள்




லிக்விட் க்ரீம்

ஜான்ஸன் அண்டு ஜான்ஸன் ஆஃப் இந்தியா லிமிடெட்
30, போர்ஜெட் ஸ்டிரீட், பம்பாய்-26

* டிரேட் மார்க

JWT-JJ-2962



மனைவி: என்னத்துக்கு அர்த்த ராத்திரியில் ஒட்டடை அடிக்கறேள்?
கணவர்: இனிமே எனக்கு ராத்தூக்கம் இல்லேன்னு நிச்சயமாயிடுத்து. இரவுப் பொழுதை வீணுக்குவானேன் என்று......!

ஐராவதம் அறிவு தெளிந்து எழுந்தது. அசுரர் வசமாகி அழிந்து போன அமராவதிக்குள் நுழைய அதன் கம்பீரமான கால்கள் கூசின. பதவி போனபின் பரமன் நினைவு மிகுந்தது. பரமன் நினைவு வந்தால் தமிழ் மண்ணின் நினைவும் வரும். திருவெண்காடு என்ற திவ்விய ஸ்தலத்தை ஐராவதம் அடைந்தது. அங்கு எம்பெருமானைச் சிவாகம விதிப்படி பூசித்து, சிவபெருமான் திருவருளால், முன்பு இழந்த கோடுகளைத் திரும்பப் பெற்றது; திருவெண்காட்டிலேயே தங்கிவிட்டது.

அயிராணியுடன் மேரு மலையை அடைந்த இந்திரன் சொர்க்கம் எரியுண்டதையும் சயந்தன் சிறைப்பட்டதையும் அறிந்து துடிதுடித்தான்.

சிவபெருமானை நோக்கி நெடுநாட்கள் தவம் புரிந்தான். தேவர்களின் சிவாபசாரக் குற்றம் நீங்கும் தருணம் வந்தது. தருணேந்து சேகரப் பெருமான் தரிசனம் தந்தார்.

தமது மாமதுர மலர்வாய் திறந்து, தேமதுரத் திருவாய் திறந்து, "நாம் உமையை மணந்து ஒரு குமாரனைத் தருவோம். அவன் அசுரர்களை அழித்து உங்களுக்கு வாழ்வு தருவான்" என்று அருளி மறைந்தார் சிவபெருமான்.

பின்னர் நடந்ததெல்லாம் நாமறிவோம். எனினும், எல்லாமறியும் சர்வக்ஞராம் சண்முகநாதன் அறியாததுபோல் மாயம் செய்ததால், செவ்வேட் பரமன் செந்திற் கரையில் எழுந்தருளியிருக்க

அசுர உற்பத்தியிலிருந்து தொடங் வரலாற்றினை விரித்துரைத்த வியா பகவான் தொடர்ந்து கூறுவார்:

விஷ்ணு பிரமன் முதலிய தேவ களுடன் இந்திரன் ஆலோசனை நடத் மன்மதனைச் சிவபெருமானிடம் அனு பினான் செவ்வேட் பரமன். பெருமா மீது மலர்க்கணை விடுத்த மன்மத எரிந்து சாம்பரானான். இதனைக் கண் கலங்கிய தேவர்கள் தங்களை இனிய சோதிக்கலாகாது என்று எம்பெருமா வேண்டிக் கொண்டனர். ஐயனும் உ குழைந்தார். பார்வதி தேவியை மண பரமேசுவரர் தேவரீரைத் தமது நெ றிக் கண்களினின்றும் தந்தருளின தாங்கள் திரு அவதாரம் செய்த பின் இந்திரனும் பிரம விஷ்ணுக்களும் ம வானவரும் முனிவரும் புத்துணர் பெற்றனர். ஆயினும் அவர்கள் துன்ப முழுமையாகத் தீராமல் சூராதியவ ரின் ஆட்சியே இன்னமும் நடைபெற் வருகின்றது. அவர்களை அழிக்கத் தங் யன்றி வேறு எவராலும் இயலா ஆகவே, தாங்கள் விரைவிலேயே ந சுரர் வாழ வல்லசுரர் மாய அருள்பு வேணும்" என்று வியாழ பகவான் கந் கடவுளிடம் முறையிட்டுக் கொண்டா

வியாழ பகவானின் முதுகைத் தம திருவிரல்களால் தடவிக் கொடுத் அருள் புரிந்தார் குமாரசுவாமி.

"எம்பெருமானே! தேவரீர் அ சூரனை அழிக்க வேண்டும் என திருவுளம் கொண்டால் நொடி பொழுதில் அவ்வண்ணமே நடந்துவிடு ஆயினும், தேவரீர் ஒரு திருவிளையாட எண்ணி இங்கு எழுந்தருளியிருக் றீர்கள்" என்றார் வியாழ பகவான்.

கந்தவேள் தமது காந்தக் ஒளியைத் தேவராஜனிடம் பினார். "அமரபதி! துயர் வேண்ட தேவர்களைச் சிறை மீட்டு விண்ணு ஆட்சியைப் பழையபடியே உனக் தருவோம்" என்று வாக்களித் சத்திய ஸ்வரூபமான சக்திகுமாரர்.

பல்லாண்டுகளாக மழையின் காய்ந்து பாளம் பாளமாக வெடி பூமியின்மீது அமுத மழை பெய் அதனை நிலம் எவ்வளவு ஆர்வமாக விழுத்துக் கொள்ளும்? அதேபோல் பத்துக்குமேல் துன்பமாக அநுபவி அயர்ந்துபோய் அதனைத் தீர்க்கவெ பிறந்த முருகனின் அருளை நாடிய வர் ஆறுமுகனின் அபய வாக்கினை மோடு அருந்தினர். தம்மைக் வென்றே பிறந்த தெய்வத்தின் வாக்கு கேட்டுத் தேவர்கள் எல் லாத உவகை பெற்றுக் கருணை குப் போற்றி கூறினர்.

(தொடரும்)

கூட்டத்தில் பெருவாரியான கலகலப்பையும் சந்தோஷ ஆரவாரக் கைதட்டலையும் காண முடிந்தது. அது, பாரத் ஹெவி எலக்டிரிகல்ஸ் சேர்மன் ஸ்ரீ மாதூர், திருவெறும்பூர் திட்டத்தின் நிர்வாகி ஸ்ரீ ஆர். எஸ். கிருஷ்ணன் அவர்களின் பெயரைச் சொல்லி அவரது செயல்திறனைப் பற்றிக் குறிப்பிட்டபோதுதான்!

இப்படி அனைவரது பாராட்டுதலுக்கும் உள்ளான அந்தக் கிருஷ்ணன் யார் என்று வினவினேன். "கிருஷ்ணனைத் தெரியாதா? அதோ வாயில் பைப்பை இடுக்கிக்கொண்டு காட்சி தருகிறாரே, அவர் தான்!" என்றார்கள். பார்த்தால் மனுஷன் அடக்க ஒடுக்கமாக ஒரு மூலையில் உட்கார்ந்திருந்தார்! விழா முடிந்த பிறகு கொஞ்சம் பேச்சுக் கொடுத்தும் பார்த்தேன். பெரிய அதிகாரிக்கு இருக்க வேண்டிய மிடுக்கு, முறுக்கு ஏதுமின்றி இணை பிரியாத 'பைப்'பைக் கையிலெடுத்துக் கொண்டு உரையாடினார். சதா புன்முறுவல் பூத்த முகத்துடனும் குறுகுறுப்பான பார்வையுடனும் விளங்கும் அவரது வசீகர சக்தியை அப்போது உணர முடிந்தது. இத்தகைய ஒருவருக்குத் தமக்குக் கீழ் பணியாற்றுவோரிடம் தட்டிக் கொடுத்து வேலை வாங்கிக் கொண்டு போவதில் சிரமமே இருக்க முடியாது என்று தோன்றியது. ஸ்ரீ கிருஷ்ணனுக்கு உறுதுணையாக ஆரம்ப கட்டத்திலிருந்து பணியாற்றி வந்திருக்கிறார் இத்திட்டத்தின் இன்ஜினியர் ஸ்ரீ அச்சன் என்பதையும் ஸ்ரீ மாதூர் குறிப்பிட்டுப் பாராட்டினார்.

திருவெறும்பூர் தொழிற்சாலை, பாய்லர்களை மட்டுமின்றி, அதையொட்டிய வேறு சில உபகரணங்களையும் — வால்வுகள் போன்றவை — தயாரிக்கும். ஹைதராபாத்திலுள்ள நிறுவனங்கள் ஜெனரேட்டர்கள், ஸ்விட்ச் கியர்கள் ஆகியவற்றை உற்பத்தி செய்யும். இவற்றையெல்லாம் தயாரித்தளித்தால் மட்டும் போதுமா? அவை நன்கு செயல்படுகிற மாதிரி பழுதின்றி உருவாக்கப்பட்டுள்ளனவா என்று பரீட்சித்துப் பார்க்க வேண்டாமா? பாய்லரில் எங்கேனும் ஒரு சிறு வெடிப்புக் கான கீறல் விழுந்தால் கூடப் போதும்; பணம் நஷ்டமாவது மட்டுமல்ல; அது வெடிக்கும்போது உயிர்ச் சேதமுமல்லவா ஏற்பட்டுவிடும்? இங்கு தயாராகும் பொருள்களை நன்கு தரப் பரிசீலனை செய்யத் தேவையான எல்லா நவீன உபகரணங்களும் வைத்திருக்கிறார்கள். அதற்கென ஒரு தனி இலாகாவே இயங்குகிறது.

இத்தொழிற்சாலையை அமைக்கக் காவேரி ஸ்ட்ரக்சரல்ஸ், எவரெஸ்ட் இன்ஜினியரிங் ஒர்க்ஸ் போன்ற தனிப்பட்ட தொழிலகங்கள் பலவும் ஒத்துழைத்துள்ளன. மணலைக் கயிறாய்த் திரிப்பது என்பார்களே அப்படிக் காவேரி ஸ்ட்ரக்சரல்ஸில் இரும்பை வில்லாக வளைக்கிறார்கள், வெண்ணெயாக வெட்டித் தள்ளுகிறார்கள், தூணாக எழுப்புகிறார்கள், கட்டடங்களாக மாற்றுகிறார்கள். இதற்கெல்லாம் வசதியாக, இரும்பை வெட்ட, வளைக்க, துளை போட, ஒட்ட; டன் கணக்கான எடையுள்ள இரும்புத் தூண்களைத் தூக்க, நகர்த்த, நிமிர்த்த, இறக்க எல்லாவற்றுக்கும் தேவையான நவீன உபகரணங்கள், இயந்திரங்கள் உள்ளன. அந்த




கணவர் : இரவில் எனக்குத் தூக்கம் வருவதில்லையே என்ன செய்யலாம்?
மனைவி : தூங்காமல் இருக்கலாம்!

இயந்திரங்கள் இரும்பைப் படுத்தும் பாட்டைப் பார்த்த பிறகு, "இரும்பு மனிதன், இரும்பு இதயம்" என்ற வர்ணனைகளுக்கெல்லாம் அர்த்தமே இல்லை என்று நினைக்கும்படியாகி விட்டது. "இன்னும் சிறிது காலத்தில் காவேரி ஸ்ட்ரக்சரல்ஸில் டன்கணக்கான எடையுள்ள இரும்பைத் தூக்கும் சக்தி படைத்த கிரேன்களைத் தயாரிக்கவிருக்கிறோம்" என்று பெருமிதத்துடன் கூறினார் அதிபர் ஸ்ரீ வி. டி. ஸ்வாமி.

திருவெறும்பூர் பாய்லர் தொழிற்சாலை அங்குரார்ப்பண வைபவத்தை முன்னிட்டுக் கோலாகலமாக விளங்கிய வரவேற்பு வளைவுகள், தோரணங்கள், குலை தள்ளிய வாழைகள் ஆகியவற்றையெல்லாம் மீண்டும் கடந்து சென்னைக்குச் செல்லும் சாலையில் திரும்பினோம். நெடுந்தூரத்துக்கு நெடுந்தூரம், வாழை, கரும்பு, நெற் பயிர் என்று ஒரே பசுமை மயமாகத் 'தொழில் வளம் மட்டுமல்ல, நில வளத்திலும் இப்பகுதி சிறந்தோங்குகிறது' என்று சொல்லாமல் சொல்வது போல் காட்சியளித்தது திருவெறும்பூர். சற்றுத் தொலைவில் திருவெறும்பூர் குன்றும் கோவிலும் தென்பட்டன. கைலாச நாதர் எழுந்தருளியிருக்கும் அந்த ஸ்தலத்துக்குப் பொருத்தமாக முதல் நாளிரவு அங்கு அங்குரார்ப்பண வைபவத்தையொட்டிக் கலாக்ஷேத்திராவின் கண்ணப்பர் குறவஞ்சி நாட்டிய நாடகம் நடந்ததும், நாடகத்தின் இறுதியில் கண்ணப்பர் தமது காலைச் சிவலிங்கத்தின் மீது அடையாளமாக வைத்து இரண்டாவது கண்ணையும் பிடுங்கி அப்ப யத்தனித்தபோது நாடகம் பார்த்து வந்த கிராமவாசியொருவர் தம்மை மறந்து பரவச நிலையில் கன்னத்தில் 'பட்பட்'டென்று போட்டுக்கொண்டதும் நினைவு வந்தது.

நானும் இப்போது என்னையறியாமல் கன்னத்தில் போட்டுக் கொண்டேன்! தொழில் வளமும் நிலவளமும் இந்நாட்டில் போட்டி போட்டு வளர வேண்டுமானால் அவன் அருள் தானே தேவை?

—குட்டி கிருஷ்ணன்

# கந்தன் கருணை



திருமுருக கிருபானந்தவாரியார்

## 29. வீரவாகு தேவர் தூது

கண்ணைவிட உடலுக்குச்
சிறந்த உறுப்பு இல்லை. பெண்
ணுக்குக் கணவனைவிடச் சிறந்த
உறவு இல்லை. மக்களை விட மனி
தனுக்குச் சிறந்த செல்வம் இல்லை.
தாயை விடச் சிறந்த தெய்வம்
உலகில் ஒருவருக்கு இல்லை. இது
போல, தூதை விடச் சிறந்த
உறுப்பு காப்பியத்துக்கு இல்லை.
நமது காப்பியங்களி லெல்லாம்
தூது முக்கியமான இடம் பெற்
றுள்ளது. இராமாயணத்தில்
அங்கதன் தூது, மகாபாரதத்தில்
கிருஷ்ணன் தூது, நைடதத்தில்
அன்னப் பட்சியின் தூது முத
லியன முக்கியமான இடம் பெற்
றுள்ளன. இதிஹாஸ புராணங்
களின் இலட்சணத்துக்கு ஏற்ப
கந்த புராணத்தில் வீரவாகு
தேவர் தூது சிறப்பாக அமை
துள்ளது. தூது சென்றவர் வீர
விழுமிய திருத்தோள் பெற்ற வீ
வாகு தேவர்; தூது அனுப்பி
வர் சாட்சாத் ஷண்முகநாதனே
யாவர்.

திருச்செந்தூரில் தேவாதியரின்
துயர்களைத் திருச்செவிமடுத்
இன்னல் தீர்ப்பதாக அபய
அளித்த ஐயன் உடனே போரு
குப் புறப்பட்டு விடவில்லை. ஏனெ
னில், இறைவனின் சக்தி சா
தியிலேயே நிலைபெற்றது. சா
மான முறையில் சூரனுடை
தவற்றைத் திருத்த வொண்
மற் போனாலே போர் பு

வினு

வேண்டுமென எண்ணினர் சுவாமி. சாம — தான — பேத — தண்டம் என்ற வாறு படிப்படியாகவே போருக்குச் செல்ல வேண்டும் எனக் கருதினர். எதிராளியின் நல்லெண்ணத்துக்கு முழு இடமும் அளிக்கத் திருஉளம் கொண்டார். எனவேதான் சூரனிடம் முதலில் பேசிப் பார்ப்பது எனக் கருதினர்.

''தூதன் சொற்கேட்டுச் சூரன் தேவர்களைச் சிறையிலிருந்து விடுவித்தால் அழியாமல் வாழ்வான். அவ்வாறு செய்ய மறுத்தால், நாமே சென்று அவனை அழிப்போம். இதுவே அறநெறி'' என்று கூறினர் ஷண்முகர். வானவரும் சுவாமியின் உத்தேசத்தை ஆமோதித்தனர்.

''நமது வீரர்களில் சூரபன்மனிடம் வீரமகேந்திரபுரிக்குத் தூது செல்லத் தக்கவர் யார்?'' என்று வேலவர் கேட்டார்.

''கந்தநாயக! தேவர்களின் நிலைமை தங்களுக்குத் தெரியாததல்ல. அடியேன் உட்பட வானவர்கள் அனைவரும் சூரனுக்குக் கைகட்டி ஏவல் செய்து வருகிறோம். ஆகவே, நம்மில் யாரும் சூரனிடம் தூது சென்று உயிருடன் மீள முடியாது. வீரவாகு தேவர் ஒருவர்தான் தூது சென்றால் காரியத்தைச் சிறப்புற நிறைவேற்றிவிட்டுச் சூரனிடமிருந்து வெற்றியுடன் திரும்பி வரமுடியும்'' என்று பிரம்மதேவர் கூறினர்.

ஐயனின் திருஉள்ளத்துக்கு உகந்த யோசனையாகவே அது அமைந்தது. தமது பேரன்புக்குரிய வீரவாகுவை அருள் கனிய நோக்கினர் ஆறுமுகன்.

''வீரவாகு! நீ வீர மகேந்திரபுரிக்கு விரைந்து சென்று சூரபன்மனை அணுகி, சயந்தனையும் தேவர்களையும் சிறையிலிருந்து விடுவித்து நல்வாழ்வு வாழுமாறு அவனுக்கு அறநெறியை எடுத்துக் கூறு. அவன் செவி சாய்க்காவிட்டால், அவனையும் அவனது சுற்றத்தையும் அழிக்க நாம் நாளையே படையுடன் வருவோம் என்று தெரிவித்து மீண்டு வருக'' என்று குமாரக் கடவுள் வீரவாகு தேவருக்குக் கட்டளையிட்டார்.

அப்பணியைத் தலை மேல் தாங்கி வீரவாகு தேவர் புறப்பட்டார்.

புத்திரவாத்ஸல்யம் மேலோங்கிய இந்திரன் வீரவாகுதேவரின் பின்சென்று, ''வீரரே! முதலில் வீர மகேந்திரத்தில் சிறைப்பட்டிருக்கும் என் குமாரன் சயந்தனையும் மற்ற தேவர்களையும் கண்டு ஆறுதல் கூற வேண்டும். பின்பு தூதுசெல்லும் வேலையை முடிப்பீராக!'' என்று பிரார்த்தித்துக் கொண்டான்.

தேவர்கோனின் துயரத்தை அநுதாபத்துடன் புரிந்து கொண்ட வீரவாகுதேவர் ''அவ்வாறே செய்வோம். கவலைப்பட வேண்டாம்'' என்று கூறிப் புறப்பட்டார்.

இலக்கத்தெட்டு வீரர்களும் அவரை வணங்கிப் பின்தொடரலாயினர்.

''நீங்கள் பூதப் படைத் தலைவர்களுடன் இங்கேயே இருங்கள்'' என்று அவர்களுக்கு உத்தரவிட்டுப் புறப்பட்ட வீரவாகுதேவர் கடற்கரையை அடைந்தார்.

வீரவாகுதேவர் தம் கால்களின் வீரகண்டை 'கலீர் கலீர்' என ஒலிக்கக் கந்தமாதன பர்வதத்தின் உச்சியில் ஏறி நின்றார். அவர் உற்சாகத்துடன் திமுதிமு என ஏறி நின்றதும் அந்தப் பாரம் தாங்காமல் மலை பிளந்து நிலத்தில் அழுந்தி விட்டது. போரில் தோற்று ஓடி வந்து அந்த மலைக் குகைகளில் ஒளிந்து கொண்டிருந்த தாரகனின் படை வீரர்கள் வெளிப்பட்டனர்; வீரவாகுதேவரைக் கண்டதுமே புலன்களெல்லாம் செயவிழக்க, உயிரை விட்டனர். மகேந்திரபுரிக்குச் செல்ல வேண்டும் என்று எண்ணிய வீரவாகுதேவர் 'கந்தநாயகா' என்று தியானித்தார். அகில புவனண்டமாகவும் விளங்கும் ஐயனின் பெருமையை உள்ளத்தில் இருத்தி அதனுடன் வீரவாகுதேவர் லயம் அடைந்தபடியால் அவருமே விசுவரூபம் கொண்டார்.

உலகங்கள் எல்லாவற்றையும்ஒருங்கே பார்க்கத் தக்க அளவில் பெரிதாக விளங்கினர் வீரவாகுதேவர். அங்கு நின்றபடியே உலகில் உள்ள நகரங்களை யெல்லாம் பார்த்தார். சூரபன்மனின் பெரிய நகரத்தையும் நோக்கினர். அந்த நகரத்தையே கையால் பிசைந்து பகைவர்களை யெல்லாம் கொன்று



விடலாமா என்று ஓர் எண்ணம் தோன்றிற்று. சயந்தனும் மற்ற வான வரும் அங்குள்ள சிறையிலிருப்பதால் அந்நகர் முழுவதையும் நாசமாக்கலாகாது என்று தெளிந்து அந்த எண்ணத்தைக் கைவிட்டார். வீரவாகுதேவரின் பேருருவத்தைக் கண்ட அசுரர்கள், முன்பு அழிந்ததாகக் கூறப்பட்ட கிரௌஞ்ச மலைதான் இந்த மாயத்தைச் செய்கிறதோ என்று ஐயங் கொண்டனர். பிரம்மதேவர், இந்திரன், இலக்கத் தெட்டு வீரர்கள், மற்றும் பூதர்கள் ஆகியோர் வீரவாகு தேவரின் பேருருவத்தைக் கண்டு மகிழ்ச்சி ஆரவாரம் செய்தனர். ஆனால் வீரவாகுவோ தமது சக்தியில் பெருமிதமுறாமல், தமக்குச் சக்தி தந்த சக்தி குமாரனையே ஸ்மரித்திருந்தார்.

"ஆவதோர் காலை எந்தை
ஆறிரு தடந்தோள் வாழ்க!
மூவிரு வதனம் வாழ்க!
முழுதருள் விழிகள் வாழ்க!
தூவுடை நெடுவேல் வாழ்க!
தொல்படை பிறவும் வாழ்க!
தேவர்கள் தேவன் சேயோன்
திருவடி வாழ்க!" என்றான்.

இவ்வாறு ஆறுமுகக் கடவுளை வாழ்த்திய வண்ணம் வீரமகேந்திர புரத்தை அங்கிருந்தவாறே தமது விசுவரூபத்தால் நோக்கியவுடன் விசுவரூபத்தின் அவசியம் முடிந்ததென எண்ணினார் வீரவாகு தேவர். 'நான் இப்பேருருவத்துடன் சென்றால் உயிர்கள் அழியும்' என்று கருதி உருவத்தைக் குறுக்கிக் கொண்டார். பெரியோர்தான் பெருமையை எப்படிக் குறைத்துக் கொள்வது என்பதை அறிவர். அற்பர்களே தமக்குள்ள சக்தியை எப்போதும் பிரயோகம் செய்ய வேண்டும் என்று அலைவர். எளிமைக்கு உரிய பெருமையை உணர்ந்து சிறிய உருவம் எடுத்துக் கொண்ட வீரவாகுதேவர் கந்தமாதன மலையை முன் போலவே எழும்புமாறு அருள் செய்தார். அதன் பின் அம்மலையிலிருந்து வானமார்க்கமாகப் புறப்பட்டார் வீரவாகுதேவர். மீண்டும் எல்லையற்ற சக்தி அவரைத் தாமாகவே வந்தடைந்தது. அவர் புவியிலிருந்து வானத்துக்குக் கிளம்பிய வேகத்தில் பூமியிலுள்ள மலைகள் பல இழுக்கப்பட்டு அவருடன் செல்லத் தொடங்கின; அண்டங்கள் பின் தொடர்ந்தன; உயிர்கள் சுழன்றன. வீரவாகுதேவர் கடலில் பாய்ந்து சென்ற தோற்றம் சிவபெருமான் முப்புரத்தை நோக்கித் தமது திருவாய் எனும் வில்லில் பூட்டிய நெருப்புச் சிரிப்பு அம்பாகப் பாய்ந்ததை நினைவூட்டியது. 'கந்தவேள் சூரபன்மனை அழிக்க வேலாயுதத்தை விடுத்தாரோ?' என்று எண்ணும்படி வீரவாகுதேவர் கடற் பரப்பின் மீது வானவெளியில் தகதகவென்று ஒளிர்ந்தவாறு சென்றார்.

வீரமகேந்திர புரத்தின் வடபுறம் உள்ள இலங்கை என்னும் நகரத்துக்கு அருகில் போய்ச் சேர்ந்தார் வீரவாகுதேவர். யாளிமுகன் என்னும் அசுர வீரன் இலங்கையைக் காவல்புரியும் பொறுப்புப் பெற்றவன். வீரவாகு தேவர் அங்கே சென்ற போது, யாளிமுகன் சூரபன்ம மகாராஜனைத் தரிசிக்க வேண்டும் என்று சேனைகளுடன் வீரமகேந்திர புரிக்குச் சென்றிருந்தான். அவனது மகன் அதிவீரன் ஆயிரம் வெள்ளம் சேனைகளுடன் காவல் புரிந்து வந்தான். அவன் அந்தப்புரத்தில் இருக்கும்போது வடக்கு வாசலில் நின்ற படைத் தலைவனாகிய வீரசிங்கன், வீரவாகுதேவர் இலங்கையுள் நுழைந்து விரைந்து உட்சென்று கொண்டிருப்பதைக் கண்டான். ஐந்நூறு வெள்ளம் சேனைகளுடன் வீரவாகு தேவரை வழி மறித்தான்.

"உனக்கு உன் உயிர்மீது ஆசையில்லை போலிருக்கிறது. அதனால்தான் நீ தனியாக வந்திருக்கிறாய். நான் உன்னைக் கொல்வதற்கு முன், இங்கு வந்த காரணத்தைச் சொல்லிவிடு" என்று வீரவாகு தேவரிடம் ஆர்த்தான் வீரசிங்கன்.

"நான் வீரமகேந்திரபுரம் சென்று உயிருடனேயே திரும்பும் எண்ணத்துடன்தான் வந்திருக்கிறேன். உன்னால் என்ன முடியுமோ அதைச் செய்" என்று வீரவாகுதேவர் கூறினார்.

"இவனைக் கொல்லுங்கள்!" என்று சேனைகளுக்கு உத்தரவிட்டான் வீரசிங்கன். அவர்கள் வீரவாகுதேவரை வளைத்துக் கொண்டு ஆயுதங்களை ஏவிப் போர் புரிந்தார்கள். வீரவாகு தேவர் வாளாயுதத்தைச் சுழற்றிச் சுழற்றிச் சேனைகளை வெட்டிக் கொன்றார். அவுணர்கள் இறந்ததால் பெருகிய உதிரம் கடலில் போய்க் கலந்தது. வீரசிங்கனின் சேனைகள் எல்லாம் அழிந்தன. ஆத்திரங் கொண்டு எதிர்த்த வீரசிங்கனையும் எளிதில் சம்ஹாரம் செய்தார் வீரவாகு தேவர்.

வீரவாகு தேவர் இலங்கைக் கரையில் உள்ள மலையின் மூன்று சிகரங்களில் நடுச் சிகரத்தின் மீது பாய்ந்தார். அந்நகரை ஊனக் காவல் புரிந்து வந்த அதிவீரன்

## ங்கள் கூந்தல்
## டுப் போல் பளபளக்க

வர்த்தினி ரெடி மிக்ஸ்ட்
ஆயில் உபயோகியுங்கள். அது
ாக உங்கள் கூந்தலுக்கு அழகு
கிறது. தினமும் சிறிது ஹேர் ஆயில்
ாகித்தால் போதுமானது. பட்டுப
பளபளக்கும் நீண்ட கூந்தல்
ம். ஒருபொழுதும் சிக்குப் பிடிக்காது.
வர்த்தினி ஹேர் ஆயில் உபயோ
த் தொடங்குங்கள். உங்கள் கூந்தல்
ளவு அழகாகவும், அடர்த்தியாகவும்
கிறது என்பதைக் காணுங்கள்.




கேசவர்த்தினி
ரெடி மிக்ஸ்ட் ஹேர் ஆயில்

கேசவர்த்தினி கான்சென்ட்ரேட்டட் உபயோகிப்பது சிக்கனமானது.

கேசவர்த்தினி ஷாம்பூ உங்கள் கூந்தலை சுத்தமாகவும், சோபையுடனும் வைத்திருக்க உதவுகிறது.

கேசவர்த்தினி – உங்கள் தினசரி அலங்காரத்தில் ஒரு முக்கிய அம்சம்.

# கேசவர்த்தினி

கேசவர்த்தினி ப்ராடக்ட்ஸ்
கோயமுத்தூர் - 1.

மற்ற அவுணர்களும் நிலைகுலைந்து கலங்கினார்கள். கலக்கத்தைச் சமாளித்துக் கொண்டு எதிர்த்த அதிவீரனையும் அதி விரைவில் அழித்தார் வீரவாகு தேவர்.

பின்னர் இலங்கையை விட்டு எழுந்தார். அவர் வந்திறங்கிய வேகத்தில் கடலில் அழுந்திய இலங்கை அவர் எழுந்து சென்றதும் மீண்டும் பழைய நிலைக்கு உயர்ந்தது.

வீரவாகுதேவர் வான வழியில் சென்று மகேந்திரபுரியின் பெரும் மதில்களையும் உயர்ந்த கோபுரங்களையும் கூர்ந்து நோக்கினார். மகேந்திரபுரியின் வடக்குவாசலில் கோரன், அதிகோரன் என்ற இரண்டு அசுர வீரர்கள் காவல் செய்து கொண்டிருந்தனர். ஏராளமான யானைகள், தேர்கள், குதிரைகள், காலாட்படைகள் ஆகியன அவர்களுக்கு இருந்தன. 'இந்தப் படைகளை வெல்ல வேண்டுமென்றால் பகல் முழுவதும் கழிந்து விடும். மற்றும் இந்த நகரில் உள்ள இதர சேனைகளையெல்லாம் அழிக்க எவ்வளவோ காலம் ஆகும். அப்படியே அழித்தாலும் சூரபன்மன் வந்து எதிர்ப்பான். கந்தவேளை யன்றி வேறு ஒருவராலும் அவனைக் கொல்ல முடியாது. மேலும் தூதாக வந்த நான் போர் செய்து பொழுதைப் போக்குவது முறையன்று. வந்த வேலையைக் கருதிச் சூரபன்மனிடம் செல்வதே முறை' என்று ஒப்பற்ற புத்தி நுட்பம் படைத்த வீரவாகு தேவர் முடிவு செய்தார். பலத்த காவலுள்ள வடக்கு வாயில் வழியாகச் சண்டையின்றிச் சீக்கிரத்தில் உள்ளே போவது அரிது என்று கருதிக் கீழ்த்திசை வாயிலை அடைந்தார். அங்கு மகிஷாட்சன் (மேதிக் கண்ணன்), வீரபானு என்ற இரண்டு அசுரத் தலைவர்கள் வாளும் கையுமாகக் காவல் செய்து கொண்டிருந்தனர். நால்வகைச் சேனைகள் அவர்களுக்குத் துணையாகநின்று கொண்டிருந்தன. ''இந்த வாசலைக் கடந்து செல்வதும் அரிது'' என்று கருதிய வீரவாகு தேவர் தெற்கு வாயிலை நோக்கிச் சென்றார். கயமுகன் என்ற அசுரன் அந்த வாசலில் காவல் புரிந்து கொண்டிருந்தான். அவன் ஆயிரம் யானை முகங்களைக் கொண்டவன். தன்னுடன் போர்செய்வதற்குப் பகைவர்கள் இல்லையே என்று ஏங்குபவன். அவன் ஆகாயத்தில் செல்லும் வீரவாகு தேவரைக் கண்டு ''சீறுகின்ற சிங்கம் இருக்கும் குகையில் மான் வருவதுண்டோ? உன்னை அனுப்பியவர் யார்? நீ வந்த காரணம் என்ன?'' என்று கோபத்துடன் கூச்சலிட்டான்.

கயமுகன் கூறியதைக் கேட்ட வீரவாகு தேவர் சிரித்துக் கொண்டே ''அப்பனே, உயிரை விடுவதற்கு உனக்கு இத்துணை அவசரம் ஏன்? வலுவில் என்னை அழைக்கின்றாயே! வா வா'' என்றார். வீரவாகு தேவர் போரை விரும்பாவிடினும், யுத்தம் புரிய அழைப்பு வந்த பின் அதனை மறுப்பது வீரலட்சணமாகாது என்பதால் கயமுகனுடன் போர் தொடங்கினார். கயமுகன் பறித்தெறிந்த மலைகளையெல்லாம் மாலைபோல் மார்பில் ஏற்றுக் கொண்ட வீரவாகு தேவர் இறுதியில் கயமுகனுடைய மார்பில் ஒரு காலால் உதைத்ததுமே அவன் அலறி விழுந்து உயிர் இழந்தான்.

''கந்தவேளின் கட்டளையை விரைவில் நிறைவேற்ற முடியாமல் இப்படியே அசுரர்களுடன் போர் செய்து காலத்தைச் செலவிடும்படியாயிற்றே'' என்று வருந்திய வீரவாகு தேவர் சூரபன்மனின் நகரத்திற்குள் எளிதில்



செல்ல வழி என்னவெனச் சிந்திக்கலானார். இந்த வடிவத்துடன் அசுரக் காவல்காரர் கண்ணில் படாமல் செல்ல முடியாது என்று கருதிக் கந்தவேளைத் தியானித்து எவரும் காண்பதற்கு அரிய தோர் அணுவுருவங் கொண்டு மகேந்திரபுரியின் கிழக்கு வாயிலில் உள்ள கோபுரத்தின் மேல் அமர்ந்தார். 'அணுவிலும் நுணுகியவன்; பெரிதினும் பெரியவன்' என்று வேதம் ஆண்டவனை வருணிக்கிறது. முன்பு பெரிதினும் பெரியவனை பெருமான் வீரவாகுவுக்கு விசுவரூபம் தந்தான். இப்போது அணுவிலும் நுணுகிய அவனே அவருக்குச் சின்னஞ்சிறு உருவு அளித்தான்.

**கோ**புரத்தின் மீது அணு உருவில் அமர்ந்திருந்த வீரவாகு தேவர் வீர மகேந்திரத்தின் சிறப்புக்களைக் கண்டார். அங்கு நின்ற அளவற்ற சேனைகளைக் கண்டதும், வியாழ பகவான் கூறியதைக் காட்டிலும் அதிகச் சிறப்புடையது வீரமகேந்திரபுரம் என்று எண்ணினார். ''இங்கே யானைகள் எத்தனை? தேர்கள் எத்தனை? குதிரைகள் எத்தனை? காலாட் படைகளோ கடற்கரை மணல்களைக் காட்டிலும் அதிகம்!

சூரபன்மன் ஆயிரத்தெட்டு அண்ட
களிலும் உள்ள வளங்களையும் வனப்
புக்களையும் எப்படித்தான் இந்த ஒ
நகரத்தில் வைத்தானோ? பாலு
கோபன் சொர்க்கத்தை எரித்தான்
என்பது பொய். சொர்க்கம் தன்னை
காட்டிலும் எவ்வளவோ அழகா
இந்த மகேந்திரபுரியைக் கண்டு நா
மும் வெட்கமும் சுடத் தானே
எரிந்து அழிந்தது போலும்! இங்
பௌதிகப் பெருமைகள் எல்லாவற்
யும் கண்டேன். ஆனால் இந்
பெருமை எவ்வளவு இருந்தும் என்
இங்கு அறம் இல்லை; வாய்மை இல்
இரக்கம் இல்லை'' என்று எண்ணினா

செந்தாமரை மலர்மீதமர்ந்
வண்டுகள் தேன் பருகுவது போல
மகேந்திரபுரியிலிருந்த பெண்க
மாணிக்க மாளிகைகள் மீது அமர்ந்
கள்ளைப் பருகிக் கொண்டிருந்தன
அந்த மாளிகைகளிலே வருண
சிறந்த அரிசியைக் களைந்து கொடுக்க
அவற்றை அக்கினித் தேவன் தன்
தானே தீமூட்டிக் கொண்டு
களோடு கலந்து பக்குவம் செய்
வைத்தான். அத்தகைய அற்புத உண
வகைகளை அரக்கர் தம் மனைவியரோ
உண்டு மகிழ்ந்தனர்.

கொடுங்கோலாட்சியில், ஆளும் ச
படைத்தோருக்கு உற்றவர் யாவ
அமித சுகபோகம் பெற்று வாழ்
வழக்கம். அசுரர்கள் இருக்கும் இ
தைத் தேடிச் சென்று காமதேனு
சிந்தாமணியும் வேண்டியவற்
கொடுத்தன. வாயுதேவனே வீரம
திரபுரியின் வீதிகளைப் பெருக்க, வரு
பன்னீர் தெளிக்கின்றான்!

''வந்த காரியத்தை விட்டு இ
நகரத்து வளங்களையே பார்த்
கொண்டு காலந் தாழ்த்துவது
யல்ல'' என்று கருதிய வீரவாகு தே
சூரபன்மன் உறையுமிடத்தை அ
கருதி ஆகாய வழியாகத்
சூட்சும உருவுடன் சென்றார். 'சூ
காணுமுன் என் பிள்ளையைக்
ஆறுதல் கூறுக' என்று அமரர்
கேட்டுக் கொண்ட நினைவு அவ
வந்தது. உள்ளத்தில் அன்பும்,
மும், பரிவும் பெருக, தேவரும்
தனும் இந்தக் கேளிக்கை நகரில்
சிறைப்பட்டு அவலமாக அவதியு
றனரோ என்று தேடலானார். அ
தலைமை அமைச்சனாகிய தரும
னின் மாளிகைச் சிகரத்தில் தங்
ரைத் தம் பார்வையால் துழாவும்
சயந்தனும் தேவர்களும் சிறை
இடத்தைக்கண்டுபிடித்தார். (தொட

# 30. கனவில் தோன்றிய கந்தவேள்!

சரீரத்துக்கு வருகின்ற துன்பங்களை வைத்தியர் உதவியால் போக்கிக் கொள்ளலாம். மனத்தில் ஏற்படுகின்ற துன்பத்தை எம்பெருமான் ஒருவரால் மட்டுமே போக்க முடியும். அதனல் தான் திருவள்ளுவர் 'தனக்குவமை இல்லாதான் தாள் சேர்ந்தார்க்கல்லால், மனக் கவலை மாற்றல் அரிது'' என்று கூறியிருக்கிருர்.

சிறையில் நூற்றெட்டு யுகங்கள் துன்பப்பட்டு நாளுக்கு நாள் கொடுமை பொறுக்க முடியாமல் தவித்த சயந்தன் யாரை நம்பியும் பயனில்லை என்று கண்டு இறைவனெருவனையே கசிந்துருகி வேண்டினன்.

சயந்தன் சொர்க்க வாழ்க்கையைக் கண்டவன். அதன் நிலையாமையையும் இப்போது உணர்ந்து விட்டான். அவன் சொர்க்கவாசியா யிருந்ததால் தான் அசுரரின் எதிர்ப்புக்கு ஆளானன்.

சோகத்தின் தாலாட்டில் தன்... மறந்து உறக்கம் கொண்டான் சய... தன். அவனுக்கு அருள் புரிய என்ன... ஆண்டவனும் அதுவே தருணமென... கொண்டார். அவனது கனவி... முருகப் பெருமான் ஆறுதிருமுகமு... பன்னிரு திவ்விய கரங்களுமாக... தோன்றினர். தியான சுலோகத்துக்... சமமான ஒரு பாடலால் கச்சியப்ப... முருகனை வருணிக்கிருர்:

> வீறு கேதனம் வச்சிரம்
> அங்குசம் விசிகம்
> மாறி லாதவேல் அபயமே
> வலம்; இடம்வரதம்
> ஏறு பங்கயம் மணிமழுத்
> தண்டு வில் இசைந்த
> ஆறிரண்டு கை அறுமுகங்
> கொண்டுவேள் அடைந்தான்

வலது கரங்களில் ஐந்தில் பெரு... யுடைய சேவற்கொடி, வச்சிர...

# கந்தன் கருணை

திருமுருக
கிருபானந்தவாரியார்

எனவே, சொர்க்க போகத்தின் பயன் துயரம் ஒன்றே என்று இப்போது அவனுக்குத் தெளிவாயிற்று. இந்தச் சிறைவாசம் நீங்கினுலும் அதன் பின் மீண்டும் துன்பத்துக்கு இடமான சொர்க்கத்தை நாடுவதில் பயனில்லை; இனி தேவையானது இறைவன் திருவடி ஒன்றே; அதுதான் என்றென்றும் இன்பம் பயக்கவல்லது எனக் கண்டான்.

> '' தண்டேன் துவிக்கும் தருநிழற்கீழ்
> வாழ்க்கை வெஃகிக்
> கொண்டேன் பெருந் துயரம்
> வான்பதமும் கோதென்றே
> கண்டேன் பிரர்தம்
> பதத்தொலைவும் கண்டனனல்
> தொண்டேன் சிவனே நின்
> தொல்பதமே வேண்டுவனே!''

என்று அல்லும் பகலும் பிரார்த்தித் தான் தேவராஜகுமாரன்.

அங்குசம், அம்பு, வேல் இந்த ஆயு... களைத் தாங்கித் தன் வீரப் பெரு... யைப் பிரகடனம் செய்த ஐய... ஆருவது கரத்தால் தன் அன்பின் பெ... மையை அபய முத்திரையால் வெ... படுத்தினர். அடியாரின் பவ பயத்... யும் மற்ற பயங்களையும் போக்குவது... அவர்களுக்கு முக்திநிலை என்ற வரத்... யும், மற்ற கோரிக்கைகளையும் அ... பவரல்லவா ஐயன்! அத்தகைய வ... முத்திரையை இடது கரங்களில் ஒ... தாங்க, மற்ற ஐந்து கரங்களில் மே... ஞஸ்திரமான தாமரையையும், நா... தாலேயே எதிரியைக் கலங்கச் செய்... மணியையும், மற்றும் மழு, தண்... (கதை), வில் இவற்றையும் ஏ... வந்தார் கந்தன். அபய தத்துவ... வரத தத்துவமுமே இறுகினுற் போ... முறுவல் பூத்த ஆறுமுகங்களு... சயந்தனுடைய கனவில் காட்சி... தருளினர்.

அருணகிரிநாதர் வருணிக்கும் அழகை யும் இத்துடன் இணைத்துப் பார்த்து உள்ளம் இனிக்க வேண்டும்.

**சுடரணைய திருமேனி யுடையழகு முதுஞான**
**சொருபகிரி யிடமேவு முகமாறும்**
**சுரர் தெரியல் அவிபாட மழலைகதி நரைபாய**
**துகிர் இதழின் மொழிவேத மணம்வீச**
**அடர்பவள ஒளிபாய அரிய பரிபுரம் ஆட**
**அயில்கரமொடு எழில்தோகை மயில்ஏறி**
**அடியன் இருவினை நீறுபட அமரர் இதுபூரை**
**அதிசயமென்றருள் பாட வரவேணும்**

தந்தை இல்லாத இறைவனைத் தமக்குத் தந்தையாகக் கொண்டவர் முருகன். வில்லிப்புத்தூர் ஆழ்வார் சிவபெருமானைப் ''பிறப்பிலி இறப்பிலி'' என்று சொல்லுகிறார்; ''பிறவா யாக்கைப் பெரியோன்'' என்று இளங்கோ அடிகள் சொல்லுகிறார். இவன் தந்த குமரனைக் கண் நிறையக் கண்டான் சயந்தன். கனவுக் கண்ணால் காணவில்லை. சுவர்க்க லோகத்தையே வீண் கனவு எனக்காணும் ஞானக் கண்ணால் கண்டான்.

துன்பச் சுமையைத் தாங்க மாட்டாத சயந்தன் மூர்ச்சையாகி விட்டான். மூர்ச்சையானால் கண் மூடும். அப்போது தான் துக்கம் வரும். சயந்தன் கண்மூடி யிருக்கும்போது சுவாமி போய்க் காட்சி கொடுக்கிறார். ''முந்து கண்களாற் கண்டனன்'' சயந்தன் என்கிறார் பக்த கவி.

இந்தச் சரீரத்தினுள்ளே இன்னொரு சரீரம் இருக்கிறது. அதற்கு சூக்கும சரீரம் என்று பெயர். இந்த உடலை விட்டு உயிர் நீங்குவதைத் தான் மரணம் என்று சொல்கிறோம். கனமான ஸ்தூல சரீரத்தைக் கழற்றி வைப்பதுதான் மரணம்.

கோயில் திருவிழாக்களின் போது ஆடி பூதம் வரும்; ஆடும். அந்த ஆட்டத்தைச் சிறுவர் சிறுமியர் வேடிக்கை பார்ப்பார்கள். அந்தப் பூதம் தானாகவா ஆடுகிறது? பூத பொம்மைக்குள் ஆள் இருந்து கொண்டு அல்லவா ஆடுகிறான்? ஆட்டம் முடிந்ததும் அந்த ஆள் பூதத்தை விட்டுப் போய் விடுவான். அது போலவே ஒரு சரீரம் போனாலும் வேறு பல ஸ்தூல சரீரங்களுக்குள் சூட்சுமமாகப் புகுந்து ஒரே ஜீவன் கர்ம வினையைத் தீர்க்கிறான்.

கர்மத்தைத் தீர்த்துப் பரமனை அடைவதற்கென்றே அருமையாகக் கிடைத்த இந்த உடலை வீணாகத் தொலைத்து விடுகிறார்கள். இதைத்தான்

**நந்தவனத்திலோ ராண்டி — அவன்**
**நாலாறு மாதமாய்க் குயவனை வேண்டி**
**கொண்டு வந்தானொரு தோண்டி — அதைக்**
**கூத்தாடிக் கூத்தாடிப் போட்டுடைத்தாண்டி**

என்று பாடுகிறோம். நாலாறு மாத என்பது கர்ப்பவாச காலம். அப்படி கர்ப்பவாசம் செய்து பிறந்த காய தான் தோண்டி. உடம்பைப் பெ ஆத்மாவே ஆண்டி. குயவன் பிரம்ம தோண்டியின் பயன் நன்னீரைமொ வது. சிவானந்த வெள்ளத்தை மொ ளவே தவப் பயனாகக் கிடைத்த மானு சரீரம் பயனாக வேண்டும். சிவயோ புரிய ஏற்பட்டதே மானுட உடல்.

யோகம் என்றால் கூடுதல் என் பொருள். சிவத்தோடு — சுத்த ஞா தோடு ஒன்றுபடுதல் சிவயோகம். அ முதல் க்ஷகரம் வரையுள்ள ஐ தொரு அட்சரங்களுக்கும் அப் பட்டது சிவயோகம். ஐம்பத்தெ அட்சரங்களையும் மலராகக் கொ அவற்றை நாவு என்ற இடத்தி வைத்து, அன்பு என்னும் நாரி கட்டி, ஞானம் என்னும் வாசனை புத்தி என்னும் வண்டு மொய்க் மந்திர புஷ்ப மாலையைக் கட்டி பெருமானுடைய பவளப் பாதங்க சமர்ப்பிக்க வேண்டும்.

**ஆசைகூர் பத்த னேன்மனோ பத்ம**
**மானபூ வைத்து நடுவேயன்**
**பானநூ லிட்டு நாவிலே சித்ர**
**மாகவே கட்டி யொருஞான**
**வாசம்வீ சிப்ர காசியா நிற்ப**
**மாசிலோர் புத்தி யளிபாட**
**மாக்ருதா புஷ்ப மாலைகோ லப்ர**
**வாளபா தத்தி லணிவேனோ**

என்று அருணகிரிநாதர் மணக்க ம கக் கூறுகிறார். சிவயோகம் செய்யா இஷ்டப்படி தோண்டியை உருட்டி அது உடைந்து போகிறது. அ மரணம். அப்போது இந்த உடம்புதா போகிறது. இந்த உடம்பினுள் சூக்கும உடம்பு புண்ணிய பாப ப வேறு உடம்பில் புகுந்து அநுபவிக் இறக்கும் போது மட்டுமின்றி, இ கும் போதும் சூக்கும சரீரம் உ யிருக்கிறது. உறக்கத்தின் போ இதுவே இயங்குகிறது. அதன் மூ சயந்தன் கனவில் கந்தனைக் கண் தொழுதனன்.

சயந்தன் 'முந்து கண்களால்' மு வேளின் நவரத்தின வடிவத்தை கண்டான்; காலில் விழுந்தான்.

அவன் குமாரக் கடவுளைக் கண்ட யில்லை அல்லவா? எனவே, ஆறுமுக பன்னிரு கையுமுடைய இத்தெய் யாரென யோசித்தான்: 'வந்திருப்ப நாராயணர் அல்லர்; ஏனெனி அவரது நிறம் நீலம். இவ ரத்தின வண்ணர். பிரமனும் அ ஏனெனில், ஆறுமுகம் படைத்

ளார். ஆனாலும் அவர்களுக்கெல்லாம் மேலான அருளைப் பொழிகிறார்' என்று கண்டான் சயந்தன்.

''சுவாமி! தாங்கள் யார்?'' என்று முருகக் கடவுளையே வினவினான்.

கருணையே உருவான சுவாமி சயந்தனுடைய கண்ணீரைத் தாமே துடைத்தாராம். அவன் பாக்கியம்தான் என்னே? தம்மை அறிமுகப்படுத்த அங்கே யாரும் இல்லாததால் சுவாமி தம்மைத் தாமே அறிமுகப்படுத்திக் கொள்கிறார். என்ன எளிமை பாருங்கள்!

''சயந்தா! நான் சிவகுமாரன்! உன் துன்பத்தை நீக்கவே இங்கு வந்திருக்கிறோம். கவலைப்படாதே. தேவர்கள் சிறைப்பட்டபின் உன் தந்தை தன் குறையையும் உங்கள் குறையையும் எம்மிடம் முறையிட்டுக் கொண்டார். அந்த வேண்டுகோளின் படி நாம் எண்ணற்ற படைகளுடன் புறப்பட்டுப் பூவுலகம் வந்தோம். கிரவுஞ்ச மலையையும், தாரகனையும் அழித்து விட்டுத் திருச்செந்தூரில் வீற்றிருக்கிறோம். நான்முகனும் நாராயணரும் உன் தந்தையும் மற்ற தேவர்களும் எம்முடன் இருக்கிறார்கள். உன்னுடைய தங்கை தேவயானை மேருகிரியில் வளர்கிறாள். நீ யாரைக் குறித்துமே வருந்தாதே. உன்னைக் குறித்தும் வருந்தாதே. சூரபன்மனிடம் வீரவாகு என்ற தூதரை அனுப்பியிருக்கிறேன். அவன் நீதிநெறிகளைச் சொல்லுவான். ஆனால் அவற்றையெல்லாம் சூரபன்மன் கேட்கமாட்டான் என்பதும் எனக்குத் தெரியும். நாம் நாளையே செந்திலம்பதியை விட்டு நீங்கி மகேந்திரபுரிக்கு வர நேரும். பிறகு போர் மூளும். தேவர்களுக்கெல்லாம் நலன் விளையும்'' என்று கூறியருளினார்.

சயந்தன் சிந்தை குளிர்ந்து கந்தனை மனம் உருகிப் போற்றினான்.

''சயந்தா! நாம் அனுப்பியுள்ள தூதன் உன்னையும் தேவர்களையும் வந்து சந்தித்து ஆறுதல் கூறுவான்'' என்று திருவாய் மலர்ந்து மறைந்தார் ஆறுமுகன். சயந்தனுக்கு ஆறுதல் கூறியது போலவே முருகப் பெருமான் மற்ற தேவர்களின் கனவிலும் தோன்றி ஆறுதல் கூறி மறைந்தார். அவரொருவரால்தான் அப்படிக் கருணை வெள்ளம் பெருக்க முடியும்!

கனவு நீங்கி நனவு வரப் பெற்றதும் தேவர்கள் ஒருவருக்கொருவர் தாம் கண்ட கனவுகளைச் சொல்லிக் கந்தவேளின் திருவருளை நினைந்து ஆனந்தக் கடலில் ஆழ்ந்திருந்தனர்.

முன்பு தேவர்கோன் சிறையிலிருக்கும் சயந்தனுக்கு ஆறுதல் கூறுமாறு வீரவாகு தேவரிடம் கூறியதுடன், இப்போது ஷண்முகப் பெருமானும் அதனையே சயந்தனுக்கு வாக்களித்து விட்டதால், வீரவாகு சிறைச்சாலையை நெருங்கினார். மோகன மந்திரத்தால் காவலரை மயங்கச் செய்து சிறைச் சாலைக்குள் சென்றார்.

வீரவாகு தேவரைக் கண்ட சயந்தன் முன்னமேயே கந்தக் கடவுளின் வாக்குறுதியைக் கேட்டிருந்ததால், ''இவரே அவரது தூதர்'' என்று ஊகித்துக் கொண்டான். வீரவாகு தேவர் கந்தப் பெருமானின் திருநாமத்தைச் சொல்லிக் கொண்டே சயந்தன் முன் சென்றார். அத்திருநாமம் சயந்தன் காதுகளின் வழியே உள்ளம் புகுந்தது.

''சிவகுமாரராகிய கந்தவேளுக்கு நான் தம்பியும் தூதனுமாவேன்'' என்று வீரவாகுதேவர் தம்மை அறிமுகம் செய்து கொண்டார்.

'' எங்கள் துன்பத்தை நீக்கத் தாங்கள் வந்து விட்டீர்கள். எங்கள் சிறை வாழ்வும் இப்போதே நீங்கியது போல உணர்கிறோம்'' என்று சயந்தனும் தேவர்களும் கூறினார்கள்.

தமது தூதுப் பணியைக் கூறிய வீரவாகுதேவர், ''சிவபெருமானே ஆறு திருமுகங்களுடனும், பன்னிரண்டு திருப்புயங்களுடனும், கந்தவேள், முருகவேள் என்ற திருப்பெயர்களுடனும் உங்கள் துன்பங்களைப் போக்க வருவார். உங்கள் சிறையையும், பிரமன் குறையையும் மாய்த்து உலகங்களையெல்லாம் இரட்சிக்கும் பொருட்டே சிவபெருமான் கந்தவேளாக எழுந்தருளியிருக்கின்றார்'' என்றார்.

'' தன்னிகர் இன்றி மேலாய்த்
  தற்பர வொளியாய் யாரும்
உன்னரும் பரமாய் நின்ற
  ஒருவனே முகங்கள் ஆறும்
பன்னிரு புயமுங் கொண்டு
  பாலகன் போன்று கந்தன்
என்னுமோர் பெயரும் எய்தி
  யாவருங் காண வந்தான்.
பங்கய முகங்கள் ஆறும்
  பன்னிரு புயமுங் கொண்டே
எங்கடம் பெருமான் போந்த
  ஏதுமற் றென்னை என்னில்
செங்கண்மால் உந்தி பூத்தோன்
  சிறுமையும் மகவான் துன்பும்
உங்கடஞ் சிறையும் நீக்கி
  உலகெலாம் அளிப்பக் கண்டாய்''

வீரவாகு கூறியதை கேட்டுச் சோர்வு நீங்கி கொண்ட தேவர்கள், ''பெருமை... சிறந்த வீர திலகமே! நீர் வெ... பெறுவீராக!'' என்று தொழுது வாழ்த்தினார்கள். வீரவா... தேவர் சிறைக் கூடத்திலிருந்து பு... பட்டார்.

(தொடரு...

# கால்கேட்டின் மூலம் நாள் முழுவதும் வாய் துர்நாற்றத்தை அகற்றி பற்கள் சொத்தையாவதையும் தடுங்கள்!




ஏனெனில் ஒரே தேய்ப்பில் கால்கேட் டெண்டல் க்ரீம், துர்நாற்றத்தையும், சொத்தையையும் உண்டாக்கும் கிருமிகளில் 85 சதவிகிதத்தை ஒழித்துவிடுகிறது.

கால்கேட், 10ல் 7 சந்தர்ப்பங்களில் உடனடியாக வாய் துர்நாற்றத்தை அகற்றுகிறது என்பதையும், உணவு உட்கொண்டவுடன் கால்கேட்டினுல் பற்களைத்துலக்கும் முறையால், இது வரை பற்பசை வரலாற்றிலேயே கண்டிராத பெருமளவில் ஏராளமானவர்களுக்குச் சொத்தை தடுக்கப்படுகிறது என்பதையும் விஞ்ஞான ஆராய்ச்சிகள் நிரூபித்துள்ளன. இந்த சாதனை கால்கேட் ஒன்றுக்குத்தான் உண்டு.

கால்கேட்டின் நீடித்திருக்கும், நூதன நறுமணத்திற்காக, குழந்தைகள் அதனலேயேப் பல் துலக்க விரும்புகிறார்கள்.

நீங்கள் பற்பொடியை விரும்பினால், இந்தப் பலன்கள் அனைத்தையும் கால்கேட் டூத் பவுடர் மூலம் அடையலாம். ஒரு டப்பி பலமாதங்களுக்கு வரும்.




பரிசுத்தத்திற்கும், வாயில் நறுமணம் கமழவும், வெண்மையான பற்களைப் பெறவும் வழக்கமாக கால்கேட்டினுல் பல்துலக்குங்கள்.




...உலகிலேயே பெரும்பாலானவர்கள் மற்றெல்லாப் பற்பசைகளையும் விட, கால்கேட் டெண்டல் க்ரீமையே வாங்குகிறார்கள்.

DCG. 35.TAM.

# 31. சேவலும் மயிலும்

சயந்தன் கனவிலே கந்தவேள் சேவற் கொடியுடன் தோன்றியதாகக் கண்டோம். 'சூரபன்மன்தானே சம்ஹரிக்கப்பட்டபின் சேவலாகவும், மயிலாகவும் வந்தான்? சூரசம்ஹாரம் முடிவதற்கு முன் முருகனிடம் சேவல் ஏது?' என்று தோன்றும்.

இப்படி ஐயப்படுகிறவர்களுக்கு இதை விட ஆச்சரியமான ஒரு விஷயத்தைக் கூற வேண்டும். சிவபெருமானின் ஆறு திருமுகங்களிலிருந்து ஆறு பொறிகள் தோன்றி அவை சரவணபவனை உருப் பெறுமுன்பே சாக்ஷாத் முருகப் பெருமான் இருக்கத்தான் செய்தார். எந்த ஷண்முகர் தோன்ற வேண்டுமென்று தேவர்கள் பல்லாண்டு தவமிருந்தனரோ அந்த ஷண்முகர் தேவர்கள் தவம் செய்வதற்கும் முன்பிருந்தே இருக்கத்தான் செய்தார். நமக்குப் பழக்கமில்லாத தியாகராஜ கிருதியை இன்று ஒரு வித்துவான் வழக்குக்குக் கொண்டு வந்தால் அதைப் புதுமையானதாகவே கருதுகிறோம். எனினும் அது பழைமையானதுதானே? இதுவரை வழக்குக்கு வராத ஒரு புதிய பதிகமோ, பாசுரமோ இப்போது கண்டு பிடிக்கப் பட்டாலும் அவை உண்மையில் பழைமையானவையே அன்றோ? பரம்பொருள் எப்போதும் உண்டு, அது அநாதி எனில் அதன் திவ்விய உருவங்களும் என்றென்றும் உண்டு. ஆனால் புதிதாக உபாசிக்கும் போது அந்த அநாதிப் பொருள் புதிது போல் வந்துவிடுகிறது. முன்னைப்பழம் பொருட்கு முன்னைப் பழம்பொருளானது புதுமைக்கும் புதுமையாகி விடுகிறது. ஒலிகளின் ஆதாரமான நாதத்துக்கு உருவமான சேவற்கொடியையும், ஒளிகளுக்கு ஆதாரமான பிந்துவுக்கு உருவமான மயில்வாகனத்தையும் கொண்ட ஆனந்தத் தத்துவமாகிய முருகக் கடவுள் என்றும் உண்டு. ஆனால் அவர் தேவருக்கும் மற்றவருக்கும் தெரியாத மறை பொருளாக—குகையில் வாழும் குகனாக—இருந்தார். இவரையே தேவர்களின் பிரார்த்தனைக்குப் பின் ஈசுவரர் தமது நயனங்களின் மூலம் வெளியிட்டார்—பழம் பாடலைப் புதிதாகப் பாவலர் வெளியிடுவது போல். 'கொக்கரக்கோ' என்று கூவி உலகை எழுப்பும் சேவல் நாதத்தின் சின்னம்; உருவ அழகில் சிறந்த மயில் பிந்து தத்துவச் சின்னம்; அதுவே பிரணவமுமாம்; வேலாயுதம் ஞானத்தின் ஸ்வரூபம்; ஆனந்தத்தின்



...வகமான ஷண்முகரைப் போலவே ...வ யாவும் என்றென்றும் உண்டு.

ஃ ஃ ஃ

...ந்தவேளின் சேவல் மயில் இவற் ... பூர்விக விருத்தாந்தம் சிலவற்றை ...போது காண்போம்:



...லவாது தேசத்தின் அரசருக்கு ...ந புதல்வர்கள். அவர்களில் மூத்த ...வர் இருவர் அகத்தியரைச் சந்தித் ... ''பெருமானே! தாங்கள் எந்தத் ...த்தை வணங்குகிறீர்கள்?'' என்று ...வரை அரசிளங் குமரர்கள் ...னர்.

''தெய்வசிரேஷ்டராகிய முருகனைத் ... வணங்குகிறேன்'' என்றார் ...னி.

''...வமுனியே! மூவுலகிலும் அதிகத் ... புரிந்தவர் யார்?'' என்று இள ...கள் கேட்டனர்.

''எப்போதும் முக்தியின்பம் அநுபவிப்பவரே பெருந் தவம் புரிந்தவர். முக்தி இன்பம் பெறும் உபாயம் யாது? முருகப் பெருமானது திருவடித் துகள் பட்டால் போதும், முக்தி நிலைபெற்று விடலாம். முருகப் பெருமானின் வாகனமாகிய மயிலின் முதுகின் மீது அவருடைய திருவடி படுகிறது. அதே போல், அவரது துவஜமாகிய சேவல் மீதும் அவர் திருவடிபாலிக்கிறார். ஆதலால், சேவலும் மயிலும் பெரும் தவம் செய்தவை'' என்று அகத்தியர் எடுத்துக் கூறினர்.

இதனைக் கேட்ட இளவரசர் இருவரும் சேவலும் மயிலுமாகி எம்பெருமானின் செங்கமல பாதத்தைப் பெற வேண்டும் என்று எண்ணினர்கள். அகத்தியரிடம் சுப்பிரமணிய மந்திர உபதேசம் பெற்றுக் கயிலை மலைக்குச் சென்றனர். முருகப் பெருமானைக் குறித்துப் பஞ்சாக்கினி மத்தியில் ஒற்றைக் காலில் நின்று தவம் செய்தனர்.

கயிலை மலையில் சிவபெருமானைச் சேவிப்பதற்கு நாராயணர் வந்தார்; பிள்ளையாரப்பன் வந்தார்; முருகப் பெருமானும் வந்தார். சரவணப்

பொய்கையில் அவதாரம் செய்வதற்கு முன்பே முருகப் பெருமான் வந்தார்!

கயிலை மலையை அடைந்ததும், விக்நேசுவரப் பெருமான் தமது வாகன மாகிய மூஷிகத்தை வெளியில் விட்டு உள்ளே சென்றார். நாராயணர் தமது வாகனமாகிய கருடனை அதே போல் வெளியே விட்டுச் சென்றார். பிரம்மா அன்ன வாகனத்தை விட்டுச் சென் றார். சுப்பிரமணியர் மயிலையும் சேவலை யும் வெளியே நிறுத்தித் தாம் மட்டும் உள்ளே சென்றார். எல்லாத் தேவரது வாகனங்களும் கயிலையில் சுவாமி சந்நிதானத்துக்கு வெளியே நின்றன.

குட்டிக் கலகம் செய்பவர்கள் எப்போதும் எங்கும் உண்டு. கருட னும் அன்னமும் சேவலையும் மயிலை யும் நோக்கி, ''நீங்கள் உயர்ந்த பதவியில் இருக்கிறீர்கள். உங்கள் அந்தஸ்துக்கு ஆசைப்பட்டு உங்க ளுடைய பதவியை அபகரிக்க வேண்டு மென்று இரண்டு ராஜகுமாரர்கள் தவம் செய்து கொண்டிருக்கிறார்கள்'' என்று கோள் மூட்டின. ஒருவன் தமது பதவியில் வர முயலுகிறான் என்றால் யாருக்கும் சினம் பொங்கத் தானே செய்யும்? மயிலுக்கும் சேவ லுக்கும் சீற்றம் மூண்டது. தவம் செய்து கொண்டிருந்த ராஜகுமாரர் களிடம் சென்று அவர்களைத் தாக்கித் தவத்தைக் கெடுத்து விட்டன.

தவம் தடையுற்றதே என்று ராஜ குமாரர்கள் மிகவும் விசனம் கொண் டனர். கருடனும் அன்னமும் சேர்ந்து சூழ்ச்சி செய்ததால்தான் சேவலும் மயிலும் தங்கள் தவத்தைக் கெடுத் தன என்று உணர்ந்த ராஜகுமாரர்கள் பழிக்குப் பழி வாங்க வேண்டும் என்று எண்ணினார்கள்.

பிறிதொரு நாள் சிவபெருமானைச் சேவிக்க பிரம்மா, நாராயணர், சுப்பிர மணியர், விநாயகர் ஆகியோர் கயிலை மலைக்கு வந்தனர். முன் போலவே அவர்கள் தங்கள் வாகனங்களை வெளி யில் விட்டுச் சென்றனர். இச் சமயத்தில் இரு இளவரசரும் சேவல், மயில் இவற் றிடம் சென்று, ''உங்களுக்குப் பலமே இல்லையாம்! கருடன் சிறகை அசைத் தால் மலையே அசையுமாம்! உங்கள் இருவருக்கும் அத்தகைய ஆற்றல் இல்லையாம். 'என் அழகு அந்த மயிலுக் கும் சேவலுக்கும் வருமா?' என்று அன்னம் வேறு பெருமை பேசுகிறது'' என்று கயிறு திரித்தார்கள்.

இழிகுணங்களுக்கு எப்போதுமே குறைவிருந்ததில்லை போலும்!

தாங்கள் இகழ்ச்சிக்கு ஆளாக்கப் பட்டதாக அறிந்தவுடனே மயிலும் சேவலும் வெஞ்சினம் கொண்டன கருடனையும் அன்னத்தையும் தாக்கின தங்களுக்குச் சக்தியில்லை என்று அ சொன்னதாக எண்ணித் தங்களுடை சக்தியை யெல்லாம் திரட்டிக் கொ டன. கருடனையும், அன்னத்தைய போரில் கொன்றே விட்டன. இச்செ விஷ்ணுமூர்த்திக்கும் சதுர்முகனுக்கு எட்டியது.

சேவகன் தவறு செய்தால் மு லாளியிடம் போய்ச் சொல்லுவ தானே முறை? நாராயணரும், பிரம் வும் முருகப் பெருமானிடம் சென் சேவலும் மயிலும் செய்த சே தைக் கூறினார்கள்.

கருடனையும் அன்னத்தையும் உயி பித்து விட்டு, நீதி தங்கிய தேவ முருகப் பெருமான் மயிலையும் சேவ யும் அழைத்து, ''என்ன நடந்தது என்று ராஜ கம்பீரமாகக் கேட்டார்.

''வலிமை இல்லை, அழகு இ என்று கருடனும் அன்னமும் எங் இகழ்ச்சியாகப் பேசினவாம். ஆதலா அவற்றைக் கொன்று விட்டோம் என்று மயிலும் சேவலும் உ மையை உள்ளபடி கூறின. சத்தி தின் சந்நிதானம் அல்லவா?

''கருடனும் அன்னமும் உங்களிட நேராக வந்து இகழ்ந்து பேச லையே?'' என்று வினவினார் முருகன்.

''இல்லை. இரண்டு ராஜகுமாரர் எங்களிடம் வந்து இவ்விவரம் தெரி தார்கள்'' என்று மயூரமும் குக் மும் கூறின.

இளவரசர் இருவரையும் அழைத் முருகப் பெருமான். விசாகப் பெ மான் செய்த விசாரணையில் அவர் நடந்தவற்றை யெல்லாம் கூறினர்.

''மயிலாகவும், சேவலாகவும் ஆ தங்களுக்கு வாகனமாகவும் கொடி வும் திகழ வேண்டும் என்று நாங் கயிலை மலையில் தவம் செய்து கொ டிருந்தோம். அப்போது கருட அன்னமும் மயிலிடமும் சேவலிட சென்று, 'உங்கள் பதவியை அபக இரண்டு ராஜ குமாரர்கள் முயல் றனர்' என்று கூறின. அதைக் கே சேவலும் மயிலும் எங்களைத் தா எங்கள் தவத்தைக் கெடுத்து விட் இதனாலேயே நாங்கள் பழி வாங்கினோ என்று ராஜகுமாரர்கள் கூறினார்கள்.

''சேவகர் செய்யும் பிழை யஜமானரிடம்தான் கூற வேண் யன்றி நேரடி நடவடிக்கை எடு கூடாது என்ற நீதி மரபை நான் னும், திருமாலும்கூட வழு கடைப்பிடித்து வர, நீங்கள் மீ குற்றமாகும். கருடனும் அன்ன






HERCULES
MADE IN INDIA

தவறு செய்திருந்தாலும் அதற்காக நீங்கள் தரும யுத்த முறையை விட்டு, ஏமாற்று வஞ்சனை செய்தது பொருந் தாது. அசத்தியத்தையும் சத்தியத் தால்தான் வெல்ல முடியும். பொய்க்கு என்றும் வெற்றி கிடையாது. உங்கள் குற்றத்துக்காக நீங்கள் அசுரர்களாகக் கடவது'' என்று சாபமிட்டார் முருகப் பெருமான். மயிலும் சேவலும் செய்த குற்றத்துக்காக அவற்றைப் பதவியி லிருந்து நீக்கி விட்டார். பதவியிலிருந்த வர்கள்தான் நீக்கப்பட்டார்களேயன்றிப் பதவி நீக்கப்படவில்லை. முருகப் பெரு மானுக்கு வேறு மயிலும் வேறு சேவலும் வாகனமாக, கொடியாக அமைந்தன. இவ்விரு பதவிகளுக்காகப் பெரும் தவம் செய்து பிறகு தவறான வழியில் சென்று ஐயனின் சாபம் பெற்ற அரச குமாரர் இருவரும் ஒன்று சேர்ந்து தான் சூரபன்மனாக வந்தார்கள்.

நாதம், விந்து என்று இரண்டாகப் பிரித்துச் சொன்னாலும் உன்னத அநு பூதி நிலையில் இவையும் ஒன்றிவிடும். இவற்றைத் தனிப்பட்ட இரு வேறு தத் துவங்களாகக் கொள்ளக் கூடாது என்ப தால்தான் சூரன் ஒருவனே சேவல், மயில் இரண்டும் ஆனான் என்கிறோம்.

சூரன் பூர்வ ஜன்மத்தில் செய்த தவத்துக்குப் பலன் அளிக்க வேண்டும் என்று கருதினர் சுவாமி. சூர சம் ஹாரம் செய்வதால்தான் அவன் இந்த இரு உருவங்களை அடைய முடியும் என்றே சரவணப் பொய்கையில் அவ தாரம் செய்தார். அதாவது, தேவர் களின் தவத்துக்கிரங்கி, அவர்களுக்கு அருள் புரிவதற்காக மட்டும் முருகன் பிறக்கவில்லை. தேவர்களின் விரோ யான சூரன் முன் பிறவியில் செய் தவத்துக்குமிரங்கி அவனுக்கும் அரு செய்ய வேண்டும் என்றே அவர் உதி தார். இவ்வாறு இருசாராரிடமும் பா பட்சமின்றிக் கருணை புரிய எம்பிரா யன்றி வேறு யாரால் இயலும்?

சிவபெருமான் என்றைக்கு உண்டே அன்றே சுப்பிரமணியசுவாமியும் உண் சிவபெருமானின் பல்வேறு அம்ச களில் முருகன் ஒருவர். சிவபெருமா உமை, கணபதி, சுப்பிரமணியர் இ நால்வரும் வேறு வேறு அல்லர்.

நெருப்பு சிவபெருமான்; நெருப்பி உள்ள சூடு பராசக்தி; நெருப்பி சிவப்பு வண்ணம் கணபதி; நெருப்பி உள்ள ஒளி முருகன்.

'டார்ச் லைட்'டை இருளில் ஒளி வீ செய்தால் ஒளிக் கற்றை நீண்ட தூர துக்குச் சென்று அங்குள்ள பொரு களைத் துலக்கமுறச் செய்வதைக் கா போம். அதே சமயத்தில் பல்பு உள் இடத்திலும் ஒளி இருக்கும். அதுபோ சிவபெருமானிடத்து எப்போதும் உள் சக்தி வெளியேயும் தனிப்படத் தோன் ஞல் அம்பாள் என்கிறோம். உற்சவ களில் சுவாமியுடனேயே ஒரு தே மூர்த்தம் இருக்கும். பின்னல் த யாகவும் அம்பிகை வருவார். 'சக் ளத்திகள்' என்று இவ்விருவரை கி மியமாகச் சொல்வார்கள். அது தவ உடன் வரும் அன்னை டார்ச் ப லேயே உள்ள ஒளி; தனித்து வருபவ வெளியே வீசும் ஒளி. சிவத்தின் கரு உமாதேவி, கணபதி, சுப்பிரமணியர் மாய்த் தனிப்படவும் வெளிப்படுகிற

**சுடரோ சிவபெருமான் சூடுபரா சக்தி**
**திடமார் கணநாதன் செம்மை.**
**படரொளியே**
**கந்தவே ளாகும் கருதுங்கால் சற்றேனு**
**வந்ததோ பேத வழக்கு?**

மகாதேவன் மலர்; உமை அ உருவம்; விநாயகர் அதன் வண்ண முருகனே மலரின் மணம்.

நான்கு வேதங்களும் ஒரே மெ பொருளைச் சுட்டுவது போல், மெய்ப்பொருள் இந்த நான்கும நிற்கிறது. என்றுமுள்ள அப்பெ ளுக்கு இந்த நான்கு வடிவங்கள் றும் உண்டு. எனவே முருகன் என் உண்டு. அவரது மயில் வாகன சேவற் கொடியும் எப்போதுமே உ

சயந்தனின் கனவில் வந்த மு கையில் சேவற் கொடி இரு எப்படி என்று இப்போது பு தல்லவா?

(தொட



# வல்லவனுக்கு வல்லவன்





இது நான்கு வல்லவர்களின் கதை. ஒவ்வொரு வரும் அவரவர் துறையில் வல்லவர்கள். ரமேஷ், பாபு, பிச்சுவா பக்கிரி, பிரகாஷ் —

பரம ஏழையும், என்ஜினியருமான ரமேஷ் லக்ஷாதிபதியின் மகள் கீதாவைக் காதலிக்கிருன். அந்தக் கனவு நனவாகும் தருணத்தில், விதி சதி செய்கிறது; செய்யாத திருட்டுக்காக ரமேஷ் போலீசா ரால் துரத்தப் படுகிருன். ஒருபுறம், பிச்சுவா பக்கிரி இவன் உயிருக்கு விலே பேசுகிருன். மறுபுறம் ஜம்பு என்ற போக்கிரி இவனைக் கொல்வதற்காகப் பணத்தை வாரி இறைக்கிருன். பக்காத் திருடனுன பிரகாஷ் ரமேஷுக்கு நண்பனுக நடிக்கிருன்.

யார் திருடன், யார் போலீஸ் அதிகாரி என்ப தெல்லாம் திரைக்கதையின் சஸ்பென்ஸுகள்! சந்தேகங்கள் தீர்ந்ததும், உண்மைக் குற்றவாளி அகப் பட்டுக்கொள்ள, காதலர்கள் ஒன்றுசேர்கின்றனர்.

ரமேஷாக நடிக்கும் அசோகனுக்கு நிறைய சான்ஸ்! ஆடவும், பாடவும், ஓடவும், ஓடி ஒளியவும், ஓய்ந்த நேரத்தில் காதல் புரியவும் அவருக்குச் சரி யாக இருக்கிறது. நன்ருக நடித்திருக்கிருர்.

டாக்ஸி டிரைவர் பாபுவாக வரும் தங்கவேலு வழக்கம்போலவும் வேடிக்கையாகப் பேசி, தமாஷாக நடிக்கிருர்.

இவர் இல்லாமல் கதையேயில்லே. மனேரமா வெறும் தமாஷ் நடிகையாக வராமல், வில்லனின் கையாளாக வந்து சிறப்பாய் நடித்திருக்கிருர்.

மணிமாலா, பணக்காரப் பெண் கீதாவாக வந்து எடுப்பான எழிலுடன் அசோகனேடு காதல் புரிகிருர்.

வில்லன் மனேகர், பிச்சுவா பக்கிரி என்னும் பொல்லாதவனுக வந்து, கடைசியில் இன்ஸ்பெக்ட ராக மாறுகிருர். மிகத் திறமையோடு நடிக்கிருர்.

சதா சிகரெட் புகை மண்டலத்தில் கம்பீரமாகத் தோன்றும் ஜெமினி கணேசன் பெரிய வில்லன் பாகம் ஏற்று அதிகமாகப் பேசாமல் அருமையாக நடித்திருக்கிருர். ஏழு பாடல்களில் "மனம் எனும் மேடை மேலே" என்னும் பாடல் நன்ருயிருக்கிறது.

இது ஒரு ஹிந்திப் படத்தின் தழுவல். மாடர்ன் தியேட்டர்ஸின் உரிமையாளரான காலஞ்சென்ற டி. ஆர். சுந்தரத்தின் மகன் ஆர். சுந்தரம் படத்தை டைரக்ட் செய்திருக்கிருர். திரைக்கதையில் பாராட்டக் கூடிய புதிய அம்சமாக எதுவும் இல்லாததால், சப்பென்று போய் விடுகிறது.

சேலம் மாடர்ன் தியேட்டர்ஸாரின் நூருவது பட மான "வல்லவனுக்கு வல்லவன்" நூற்றுக்கு ஒன்ருகப் பாராட்டும்படியில்லே. நூற்றில் ஒன்ருகத் தான் இருக்கிறது. ●

---

'ஆறறிவு படைத்த மனிதனைவிட ஐந்தறிவு படைத்த மிருகம் எவ்வளவோ தேவலே' என்பது அறிஞர்கள் கண்ட முடிவு. 'தாயும் மகளும்' படத் தில் ஐந்தறிவு படைத்த குதிரை தன்மீது அமர்ந்த தலைவன் முதுகில் கத்தியால் குத்தப்பட்டுக் கீழே விழுந்ததும் உதவிக்கு ஆளே அழைத்துவர வேக மாக ஓடுகிறது. ஆடிப் பாடிக் களிக்கும் பெண்கள் பாட்டு கேட்டதும் மெதுவாகச் செல்கிறது; பாட்டு முடி யும் வரை அது காத்திருந்து, பாட்டு முடிந்ததுமே அருகில் சென்று, அத்தனே பெண்களில் கதாநாயகி யின் புடவையை மட்டுமே பிடித்து இழுத்து வந்து கதாநாயகனிடம் சேர்க்கிறது! பிறிதொரு சமயத் தில் கதாநாயகனிடம் கதாநாயகியை முட்டி மோதித் தள்ளிப் போய்க் காதலர்களே ஒன்று சேர்க் கிறது; அவர்கள் காதல் விளேயாட்டுக்களேக் கண்டு வெட்கி நாணுகிறது! தேவர் படத்தில் குதிரை நன்ருக நடிக்கக் கேட்பானேன்?

'தாயும் மகளும்' தலேப்பு சமூகக் கதைபோல் தொனித்தாலும் வழக்கமான ராஜாராணிக் கதை. நல்ல நாட்டின் மன்னன் மாறவர்மன் நல்லவன். அவன் பிள்ளே அரசப்பன் கொடியவன். அவன் கோட்டைப்புறக் காவலன் சோணையாவின் குடும்பத்துக்கு கெடுதல் தேடுகிருன். நல்லவனுன மாறவர்மன் தன் தலேவனுல் கொல்லப்பட்டதும் அரசப்பன் கூட்டுச் சேர்ந்து கொட்டமடிக்கிருன்; சோணையா குடும்பத்தைச் சேர்ந்த வள்ளியைக் கவரப் பார்க்கிருன். கடைசியில் கொடியவர்கள் அழிவதும், சோணையாவின் மகன் மருது மணப்பது மாக கதை சுபமாக முடிகிறது.

வள்ளியாகக் கே. ஆர். விஜயாவும், அவள் தாய் சோணையாவின் மனைவியாக எம். வி. ராஜம்மாவும் வந்து ஒரு சிறிது உயிரளிக்கின்றனர். கத்திச் சண்டைக்கும், கொண்டாட்டத்துக்குமே நடிப்பைவிட முக்கியத்துவம் அளித்துள்ள இந்தப் படத்தில் நீங்கள் எதிர்பார்த்த மாதிரியே கதை சுபமாக முடிந்து விடுகிறது. ஹிச் காக் மாதிரி சஸ்பென்ஸ் அளித்து உங்களைத் திணற அடித்தால் அப்புறம் உங்கள் உடம்புக்கு ஆகுமா?



தாயும் மகளும்

# 32. பகைவனுக்கு அருள்

**வீ**ரவாகு தேவர் சிறைக் கூடத்தினின்று ஆகாய வழியாகப் புறப்பட்டார். சூரபன்மனின் அரண்மனைக் கோபுரத்தைக் கண்டு அதன் அழகை வியந்தார். கோபுர வாயிலில் உக்கிரன் மாயூரன் முதலிய அரக்க வீரர்களும், நால்வகைச் சேனைகளும் காவல் காத்துக் கொண்டிருந்தனர். ஆகவேதான் வீரவாகு தேவர் நிலத்தில் நடந்து செல்லாமல் வான வழியே சென்று அவ்வரண்மனையைக் கண்டார். அது நவரத்தின மயமாக ஜொலித்தது. ராஜ சபையில் இரத்தினம், முத்து, பவளம், கோமேதகம்,



வைரம், இவற்றால் இழைத்து அணி செய்யப்பட்ட சிங்காதனத்தில் வீற்றிருந்தான் சூரபன்மன். அவனுக்கு மேனகை, திலோத்தமை, ஊர்வசி முதலிய தெய்வ மாதர்கள் ஆலவட்டம் வீசிக் கொண் டிருந்தார்கள். சந்திரனும் சூரியனும் இரண்டு பக்கங்களிலும் குடைப் பிடித்து நின்றார்கள். அரம்பையர் நடனமாடிக் கொண்டிருந்தனர். வித்யாதரரும், கிந்நரரும் வீணை வாசித்துக்கொண்டிருந்தனர். துதிப் பாடகர்கள் பிரம்பை ஏந்தித் துதித்தனர். சூரபன்மனுடைய தலையிலே இரத்தின முடி ஒளிர்ந்தது. காதுகளில் குண்டலங்கள் ஆடின. உடலில்

கலவைச் சாந்தின் மணம் கமழ்ந்து கொண்டிருந்தது. இடுப்பிலே பீதாம்பரம் அணிந் திருந்தான். அதில் உதரபந்தம் என்னும் அணி யும் இருந்தது. மழைச் சூல் கொண்ட பெரிய கருமேகம் ஒன்று சந்தியா காலத்தின் நானாவித வர்ண விசித்திரங்களால் தன்னை அலங்கரித்துக் கொண்டிருப்பது போல் சூரபன்மன் வீற்றிருந்தான்.

சூரபன்மனுடைய அவையின் சிறப்பையும், அவன் பெருமை யையும் கண்ட வீரவாகு தேவருக்கு அவனிடம் கௌரவ புத்தியும், இரக்கமும் ஏற்பட்டன. 'இந்த போக வாழ்வை யெல்லாம் பர மேசுவரனிடமிருந்து அல்லவா

# கந்தன் கருணை

திருமுருக கிருபானந்தவாரியார்

இவன் தவமியற்றிப் பெற்றிருக் கிறான்? பாவம்! தேவர்களைச் சிறை வைத்த ஒரு குற்றத்துக்காக இவ் வளவும் தொலையப் போகிறதே!' என்று பரிதாபப் பட்டார். 'தூது செல்லும் நான் சூரபன்மனைத் திருத்த முயலுவேன். என்னுடைய சொல்லால் அவன் திருந்தவில்லை யெனில் முருகப் பெருமானின் வேலினால் தான் திருந்துவான்' என்று எண்ணினார்.

புத்தியில்லாத தூக்கணாங் குருவி யொன்று மரத்தில் கூடு கட்டி முட்டையிட்டது. அது முட்டையிடு வது ஓர் இடம்; குஞ்சு பொரிப்பது மற்றோரிடம்தான். குஞ்சு பொரிக் கும் இடத்துக்கு முட்டையை எடுத் துச் சென்றது குருவி.

வெளிச்சம் வேண்டும் என்பதற்காகக் கொஞ்சம் களிமண் எடுத்து வந்து, ஒரு மின் மினிப் பூச்சியைப் பிடித்து அந்த மண்ணில் குத்தி வைப்பது தூக்கணாங் குருவிகளின் வழக்கம். ஆனால் அந்தப் புத்தியில்லாத தூக்கணாங் குருவி மின்மினிப் பூச்சி யென்று நினைத்துக் கொள்ளியுடனிருந்த ஒரு சுள்ளியைக் கொண்டு வந்ததாம். அதைக் கூட்டிற்குள் கொண்டு போய் வைத்தால் என்னவாகும்?

மெய்ச்சோதி தங்கு சிறுகொள்ளி தன்னை
விரகின்மை கொண்ட குருகார்

மச்சோதம் என்று கருதிக் குடம்பை
தனில் உய்த்து மாண்ட கதைபோல்

அச்சோ எனப்பல் இமையோரை ஈண்டு
சிறைவைத்த பாவம் அதனால்

இச்சூர பன்மன் முடிவெய்து நாளை
இதனுக்கோர் ஐயம் இலையே

சூரபன்மன் வீரமகேந்திரபுரியாகிய தன் குருவிக் கூட்டில் மின்மினி என்று எண்ணித் தேவர்களாகிய தீக்கங்குகளை வைத்திருந்தான். 'தீயில் வெந்து மாள விருக்கிறானே' என்று அந்தப் பகைவனிடம் அருள் கூர்ந்தார் கருணை வடிவான முருகப் பெருமானின் தூதர்.

சூரபன்மன் உயர்ந்த சிம்மாதனத்தில் கால் மேல் கால் போட்டுக்கொண்டு உட்கார்ந்திருக்கிறான். 'மேரு மலையை வில்லாகக் கொண்டுள்ள சிவபெருமானின் புதல்வரும் வீரவேலைத் தாங்கும் திருமான முருகப் பெருமானுடைய தூதனாகச் செல்லும் நான் சூரபன்மனுடைய சபா மண்டபத்தில் அவனுக்குத் தாழ்வாக உட்கார்ந்தால் முருகப் பெருமானுக்கு அல்லவா அவமானம்?' என்று எண்ணினார் வீரவாகு தேவர்.

'கந்த நாயகா' என்று தியானித்தார் வீரவாகு தேவர். சிவபெருமான் திருவருளால் திருஞான சம்பந்தருக்கு முத்துப் பந்தரும், முத்துச் சிவிகையும் வந்தன அல்லவா? அதுபோல ஆயிரங் கோடி சூரியன் ஒளி வீசுவது போன்று ஜகஜ்ஜோதியாக



ஜொலிக்கும் பொன்மணிச் சிங்காதனம் ஒன்று முருகப் பெருமான் திருவருளால் அந்தச் சபையில் அக்கணமே தோன்றியது.

இனைய துன்னியே அறுமுகப்
பண்ணவன் இருதாள்

நினையும் எல்லையில் ஆங்கவன்
அருளினால் நீசியில்

தினகரத் தொகை ஆயிர
கோடி சேர்ந் தென்னக்

கனக மாமணித் தவிசொன்று
போந்தது கடிதின்

வீரவாகு தேவர் அதில் அமர்ந்தார். சூரபன்மன் அவரைக் கண்டான். அவனுடைய உள்ளுணர்ச்சியே அவர் தேவர்களின் சார்பில் வந்திருப்பவர் என்று உணர்த்தியது.

வீரவாகு தேவரை ஏறிட்டு நோக்கினான் சூரன். அவர் அரியணை வரவழைத்த அற்புதத்தைக் கண்டு அலமந்து விடவில்லை என்பதை வெளியிட்டான். "நீ வரவழைத்தாயே பொன்மணிச் சிம்மாதனம்; அந்த வேலையை எங்கள் வீட்டுப் பெண்கள் செய்வார்கள். எங்கள் ஊரில் கர்ப்பத்தி லிருக்கின்ற ஒரு

# காஷ்மீர் பொக்கே டால்க் உபயோகித்து மணிக்கணக்காக சுகந்தத்துடனும், புதுமையுடனும் இருங்கள்

அன்றலர்ந்த மலர்களின் புதுமையுட சுகந்தத்துடனும்கூடிய காஷ்மீர் பொ டால்க் உங்களைச் சூழ்ந்து பரவி இருக்கட்டும்... உங்களைச் சுற்றி அதன் குளுமையான, பூவிதழ்போன்ற மென் யான ஸ்பரிசத்தையும், வசீகரிக்கும் நறுமணத்தையும் உணர்ந்து அனுபவி கள். பலமணிகளுக்குப் பிறகும், காஷ்மீர் பொக்கே டால்க்கின் குன்றா நறுமணமும், புதுமையும், மலர்க்கொத்துகள் போன்று உங்களைச் சூழ்ந்து நிற்பதை உணர்வீர்கள்.






காஷ்மீர் பொக்கே ஒரு உன்னதமான அழகுசாதன டால்க் மட்டுமல்ல. குழந்தைக்கும் ஏற்ற அற்புத டால்க். அது இருவருமே உபயோகிக்கக்கூடிய சௌகரியமான ஒரு பவுடர்!






## காஷ்மீர் பொக்கே

ஆடவர் விரும்பும் சுகந்தமுள்ள டால்கம் பவுடர்

கால்கேட்டின் தரமான தயாரிப்பு

மாதக் குழந்தையும் இந்த வித்தை யைச் செய்யும். நீ செய்தது என்ன பிரமாதமான செப்படி வித்தை! உன் உயிர் போவதற்கு முன்னே நீ யார் என்பதைச் சொல்லி விடு'' என்ருன்.

''உரைசெய் இந்நகர் மகளிரும்
செய்வர். ஊன்முற்றுக்
கருவின் உள்ளுறு குழவியும்
செய்திடும் கருத்தில்
வரைகளும் செயும் மாக்களும்
செய்யும் மற்று அதனுல்
அரியது அன்றரோ பேதைநீ
புரிந்திடும் ஆடல்!''

சூரபன்மன் தொடர்ந்து கூறுவான்: ''தேவேந்திரன் என்னைக் கண்டு பயந்து ஓடி விட்டான். பிரம்மா என் னுடைய திசைக்கே வரமாட்டார். நாராயணரோ திரும்பிக்கூடப் பார்க்க மாட்டார். எல்லோருக்கும் தலைவ ராகிய ஈசனே அடியவனுகிய என்னிடம் ஏன் கோபித்து வரப் போகிருர்? அப் படியிருக்க என் அரண்மனையில் பிர வேசித்துள்ள நீ யார்?'' என்று கேட் டான் சூரபன்மன்.

வீரவாகு தேவர் மறுமொழி சொல் லார்:

''புரந்தரன் குறை அயன்முதல்
அமரர் தம் புன்மை
வருந்தும் வானவர் சிறையெலாம்
நீக்கி மற்றவர் தம்
திருந்து தொல்லிறை உதவுவான்
செந்திமா நகர் வந்
திருந்த ஆதியம் பண்ணவன்
அடியனேன் யானே''

''தேவேந்திரன் குறை தீரும்பொருட் டும், தேவர்கள் சிறை மீளும் பொருட் டும் திருச்செந்தூர் வந்திருக்கின்ற ஆதிப் பரம்பொருளாக இருக்கின்றவரின் அடி யவன் நான்'' என்று கூறினர் வீரவாகு தேவர்.

முருகவேளைப் போலவே வீரவாகு தேவரும் சிவகுமாரர்தான். 'சிவபெரு மான் என்னிடம் பகைகொண்டு இங்கு வர மாட்டார்' என்று கூறிய சூரனிடம் வீரவாகு தாம் சிவகுமாரனே எனக் கூறி மரியாதை பெற்றிருக்கலாம்; அல் லது தம்மை முருகனின் தம்பி என்று பெருமையாகச் சொல்லி யிருக்கலாம். ஆயினும் பணிவின் உருவாக அண்ண லின் பணியில் வந்த வீரவாகு அவ்விதம் சொல்லவில்லை. 'ஆறுமுகனின் அடி யேன்' என்றே சொல்கிருர். அண்ண லிடம் அவ்வளவு மரியாதை. அந்த விநயம்தான் இந்த நாட்டின் அடிப் படைப் பண்பு.

சூரபன்மன் ஆச்சரியமடைந்தான். ''முருகனைப் பற்றிக் கேள்விப்பட்டிருக் கிறேன். தேவர்களுக்கு உதவி புரிய அவன் முயல்வதை அறிவேன். என் அருமைச் சோதரன் தாரகனை அவன் வதம் செய்ததாகவும் சொல்லப்படு கிறது. எனினும் அவன் சின்னஞ் சிறு பாலகன், பால் மணம் மாருதவன் என்ப தால் அவன்மீது போருக்குச் சென்ருல் மாருத பழி வருமே என்று விட்டு விட்டேன். நீ அவனுக்குத் தூதனு? வேண்டுமானுல் அந்தக் குழந்தையே என்னிடம் நேராக வந்திருக்கலாம். சரி வந்த விஷயம் என்ன? சொல்'' என்று கேட்டான் சூரபன்மன்.

சூரனின் பெருமையைக் கண்டு அவ னது தவத்தை எண்ணி மகிழ்ந்த வீர வாகுவுக்கு அவனுடைய வாழ்வு முடியும் தருணம் வந்ததே என்று கருணை ஏற் பட்டது. கருணை ஏற்பட்டால் உள் ளத்தில் சகோதர பாவம் ஏற்படும். அவ்வாறே வீரவாகு தேவருக்கும் ஏற் பட்டது. உண்மையிலேயே உலகத்து உயிரினங்கள் அனைத்தும் உடன்பிறந் தவையே அன்ருே? நல்லன கொடியன யாவும் உடன்பிறந்தவைதாம். இதையே தான் புராணங்கள் காசிபர் என்ற தத்துவமாக்கிக் காசிபருக்கே தேவர் அசுரர், மனிதர் மற்றும் எல்லா ஜீவ ராசிகளும் பிறந்தன என்கின்றன. இதை நினைந்து வீரவாகு சூரனிடம் அருளுடன் அறத்தைக் கூறிப் பேசலானுர்.

(தொடரும்)

டிவிஎஸ் ரீடிரெடிங்கின் உயர்தரத்திற்குச் சிறந்த சான்று

# டிவிஎஸ் ரீடிரெட் செய்த ஒரு டயர் 56,394 மைல் உழைத்தது - இன்னும் உழைக்கக்கூடிய நல்ல நிலைமையில் இருக்கின்றது *

| இணையற்ற சாதனை * | |
|---|---|
| புது டயர் டிரெட் | 36,987 மைல் |
| டிவிஎஸ் முதலாவது ரீடிரெடிங் | 41,073 மைல் |
| டிவிஎஸ் இரண்டாவது ரீடிரெடிங் | 15,321 மைல் |
| இன்னும் | 10,000 மைல் ஓடக்கூடும் |



இப்பொழுது இது இரண்டாவது முறை ரீடிரெட செய்ய பட்டது. மூன்றாவது முறையும் இது ரீடிரெடிற்கு உகந்த இவ்வித உழைப்பு, டிவிஎஸ் ரீடிரெட் செய்த டயர்களி சாதாரணம். இதற்கு அடிப்படைக் காரணம் விஞ்ஞா ரீதியில், துளியும் பிசகாமல், கண்ணும் கருத்துமா டிவிஎஸ் பணி செய்வதே.

**நாங்கள் கையாளும் முறை:**

(1) டயர்களை சுத்தம் செய்து, சிறு கண்ணாடித் துண்டுகள், ஆணிகள், கற்கள், முதலியவற்றை அப்புறப்படுத்தி, உள் ளும் புறமும் சுத்தப்படுத்தி, புதுப்பிப்பதற்கு வேண்டிய பக்குவம் செய்கிறோம்.

(2) கேஸிங்குகளுக்கு தேவையான இடங்களில் புதிய வலு வுகளை (plies) கொடுத்து பலப்படுத்துகிறோம்.

(3) எக்ஸ்ட்ரா-திக் காமெல்-பாக் ரப்பரை உபயோகப்படுத் துகிறோம் இந்த ரப்பர் கெடாமல் இருக்கும்பொருட்டு குளிர்சாதன அறையில் அடைத்து வைத்திருக்கிறோம்.

டிவிஎஸ் ரீடிரெடிங் செய்வதால் ஒரு டயருக்கு அதிக மைல் கள் கிடைக்கின்றன. அதனால் ஒரு ரூபாய்க்கு இன்னும் அதிக டயர் மைல்கள் கிடைக்கின்றன.




டிவிஎஸ் —

**இந்தியாவிலேயே மிகப்பெரிய ரீடிரெடிங் ஸ்தாபனம்**

**சுந்தரம் இண்டஸ்ட்ரீஸ் பிரைவேட் லிமிடெட்** (டிவிஎஸ் ஸ்தாபனம்)

தொழிற்சாலைகள்: பங்களூர் கோயமுத்தூர் புதுக்கோட்டை செகந்திராபாத் திருநெல்வேலி

குறிப்பு: தற்பொழுதும் உழைக்கும் டயரின் ... இந்த ரிகார்டுகளை எங்கள் சென்னை ஆபீஸில் ... பார்வையிடலாம்.

# கந்தன் கருணை

## 33. விழலுக்கு இறைத்த நீர்

சகோதர பாவத்துடன் சூரபன்மனுக்குத் தருமத்தை எடுத்துக் கூறுகிறார் வீரவாகுதேவர் :

தாதை யாகியோன் காசிபன்
  ஆங்கவன் தனயன்
ஆத லால்உனக் கமரரைச்
  சிறைசெய்வ தரனே
வேத மார்க்கமும் பிழைத்தனை
  சிறுபொருள் விழைந்தாய்
நீதி யால்உல களிப்பதே
  அரசர்தம் நெறியே

உயிரினங்கள் அத்தனை பேருக்கும் காசிபர்தான் பிதா. காசிபருக்குப் பதின்மூன்று மனைவிகள். அதிதியின் வயிற்றிலே முப்பத்து முக்கோடி தேவர்களும் பிறந்தனர். திதி என்பவளின் வயிற்றில் அறுபத்தாறு கோடி அரக்கர்கள் பிறந்தார்கள். மதி என்பவள் மனிதர்களைப் பெற்றாள். சுரபி என்பவள் பசுக்களைப் பெற்றாள். குரோதவசை என்பவள் கழுதை, கடம்பை, ஒட்டகம் முதலிய விலங்குகளைப் பெற்றாள். வினதை என்பவள் காற்று, இடி, மின்னல், அருணன், கருடன், கூகை, பருந்து முதலியவற்றைப் பெற்றாள். மாதங்கி என்பவள் வயிற்றில் யானை முதலியன பிறந்தன. தாம்பிரை என்பவள் ஊர்க் குருவி, காடை, கௌதாரி முதலியவற்றைப் பெற்றாள். சுதை என்பவள் பாம்பு முதலியவற்றைப் பெற்றாள். அரிட்டை என்பவள் ஓணான், உடும்பு முதலியவற்றைப் பெற்றெடுத்தாள். இப்படியாக, காசிபராலும் அந்தப் பதின்மூன்று பெண்களாலும் இந்த உலகம் உண்டாயிற்று. அதாவது சகல புவனங்களிலும் உள்ள எல்லா ஜீவராசிகளும் சக்திகளும் தவத்தினின்றே தோன்றின என்பது இதன் பொருள். தவம் நல்ல பொருளைச் சார்ந்திருப்பின் அதனின்று நல்லது பிறக்கும்; தீய பொருளைச் சார்ந்திருப்பின் தீயது பிறக்கும். தீபத்தைப் போல நல்லது - அல்லது இரண்டின்மீதும் சமமாகப் பிரகாசிப்பதே தவம். தவம் என்பது மன ஒருமைப்பாட்டின் முதிர்ச்சி. மனத்தை நல்ல இலட்சியம், தீய இலட்சியம் இரண்டின் மீதும் ஒரு



திருமுருக கிருபானந்தவாரி

...ப்படுத்தலாம் அல்லவா? காசிபரும், ...வர் மணந்த பெண்களும் ஸ்தூலமான ...ர் மட்டுமல்ல; தத்துவச் சின்னங்களாக ...ம் அமைந்தவர்கள். நல்லவை மட்டுமே ...றைவன் படைப்பு, தீயவை சாத்தா ...ன் படைப்பு என்று கிறிஸ்துவ சமயம் ...போல் கூருமல் நன்மை, தீமை எல்லாம் ...ரே பரம்பொருளிடமிருந்து உண்டா ...ன என்ற நம் மதக் கருத்தையே காசிப ...டமிருந்து உயிர்க் குலம் அனைத்தும் ...பிறந்ததாகக் கூறுகிறோம். இதை சூர ...க்கு நினைவூட்டுகிறார் வீரவாகு தேவர்.

"சூரபன்மனே! உனக்குத் தந்தை ...சிபர். தேவர்களும் அவருடைய ...ல்வர்கள்தான். எனவே, தேவர்கள் ...க்கு மூத்த சகோதரர்கள். அவர் ...ளை நீ சிறை வைப்பது நியாயமா, ...ர்மமா? நீ வேத நெறியை விட்டு ...ட்டாய். செம்மையான நெறியை ...கைக்கொள்ளவில்லை. அற்பப் பத ...வியைப் பெரிதாக நினைத்துக் கொண் ...டிருக்கிறாய். மன்னனுக்கு என்று நீதி ...நெறி உண்டு. அந்த நெறியில் நிற்பது ...ன் அரசனுக்கு அழகு. அந்த ராஜ ...ர்மத்தை நீ மேற்கொள்ள வேண் ...டாமா? குற்றமற்றவர்களைச் சிறையில் ...வைத்திருக்கலாமா? முன் காலத்தில் ...சுரர்களுக்குத் தேவர்கள் துன்பம் ...செய்திருக்கிறார்கள் என்பதற்குப் பிரதி ... அவர்களைச் சிறை வைப்பதா ...ருந்தாலும் அதற்கும் ஓர் எல்லை ...க்க வேண்டாமா?

"ஒருவன் கொலை செய்தால் அந்தப் ...பம் அவன் ஒருவனைத்தான் பற்றும்; ...ன் குடும்பத்தினர் எல்லோரையும் ...து. ஆனால் குடும்பத்தைப் பற்று ...ம் பாபம் ஒன்று உண்டு. பரம ...க்களுக்கும், மிகவும் உத்தமமான ...யவர்களுக்கும் எவன் ஒருவன் ...செய்கிறானோ, மகான்களுக்கு ...கெடுதல் எண்ணுகிறானோ அவன் ... அழிவுக்கு மட்டுமின்றித் தன் ...த்தாருடைய அழிவுக்கும் காரண ...ன். அதுமட்டுமல்ல, பிறவி எழுந் ...தும் எழுந்தோறும் அந்தப் பாபம் ...த் தொடரும்.

...ரபன்மா! நீ எத்தனை சாதுக் ...ளும், மகரிஷிகளுக்கும் தீங்கு ...தாய்? நீ இப்போதேனும் திருந்தி ...முருகன் அருள் பெற்று உய்வாய். ...லாவிடில் கூண்டோடு அழிந்து ...வாய். உனக்கு அறிவுரை சொல்ல ... இல்லை. நான் சொல்கிற ...ரையையேனும் மனத்தில் வாங்கிக் ...ம். போனதெல்லாம் போகட்டும். ...இப்பொழுதேனும் தேவர்களைச் சிறையிலிருந்து விட்டு உய்ய வேண்டும் என்பதற்காக உனக்கு நீதி நெறியை இதமாகச் சொல்லச் சொன்னார் முருகப் பெருமான். இன்னமும் நீ பிடிவாதமாக இருந்தால் முருகப் பெருமான் உன்னைக் குலத்தோடு அழித்து விடுவார். இது உறுதி'' என்று வீரவாகு தேவர் கூறினார்.

அவர் கூறியதைக் கேட்ட சூரபன் மனின் கண்கள் தீப்பொறி கக்கின. ஆத்திரத்துடன் அட்டகாசம் செய் தான். வீரவாகு தேவரை நோக்கி, ''நீ தூதனாக இருப்பதால் உன்னை விட்டு விடுகிறேன். மாதரையும், தூத ரையும் கொல்லக் கூடாது. நீ சொன்ன மொழிகளைச் சிவபெருமான் என்னிடம் வந்து சொல்லியிருந்தால் கௌரவமாக இருந்திருக்கும்; நாராய ணர் வந்து சொல்லியிருந்தாலும் பாதக மில்லை. ஆயிரத்தெட்டு அண்டங்களை யும் வென்று ஏகச் சக்கராதிபதியாய் விளங்கும் எனக்குப் பல் முளைக்காத சின்னஞ் சிறு குழந்தை புத்தி சொல்லி யனுப்ப, அதனை ஏவலாளாகிய நீ எடுத்தியம்புவதா? இதைவிட அவ மானம் என்ன வேண்டும்? தூதனே! சிறையில் அடைத்து வைத்திருக்கும் தேவர்களை ஒருகாலும் விடுதலை செய்ய மாட்டேன். அதுமட்டும் அல்ல; எனக் குப் பயந்து எங்கோ ஓடி ஒளிந்து கொண்டிருக்கிற இந்திரனையும் பிடித் துச் சிறை செய்யவிருக்கிறேன். என் அருமைச் சோதரன் தாரகனைக் கொன்றவன் சிறுபிள்ளை என்பதாலேயே, 'பச்சிளங் குழந்தையுடனா போர் செய் வது?' என்று கட்டுப்படுத்திக்கொண் டேன். மற்றபடி எனக்கு உன் முருக னிடம் அச்சமேதும் கிடையாது. அவ னுடைய குழந்தைப் பேச்சுக்கு இந்த சூரன் செவி சாய்க்க மாட்டான். என் போக்கை யாரும் மாற்ற முடியாது'' என்று கர்ஜித்தான்.

**''மேலை ஆயிரத்தெட்டெனும்**
**அண்டமும் வென்றே**

**ஏலு கின்றதோர் தவியிறை**
**யாகிய எனக்குக்**

**கோல வாலெயி றின்னமுந்**
**தோன்றிலாக் குதலைப்**

**பால னேகோலம் இனையன**
**புந்திகள் பகர்வான்!''**

''என் ஆளுகைக்குட்பட்ட ஆயிரத் தெட்டு அண்டங்களிலே, ஆயிரத் தெட்டு நாராயணர்கள் எனக்கு அடங்கி வேலை செய்கிறார்கள். ஓர் அண்டத் திற்கு ஒரு பிரம்மா வீதம் ஆயிரத் தெட்டு பிரம்மாக்கள் என் ஏவலில்

செய்கிறார்கள். ஓர் அண்டத்திற்கு ஓர் இந்திரன் வீதம் ஆயிரத்தெட்டு இந்திரர்கள் என் உத்தரவுக்குக் காத்து நிற்கிறார்கள். என்னிடம். தோற்றுப் போய், எனக்கு 'ஜய விஜயீபவ' கூறு கிறார்கள். அப்படியிருக்க ஏன் வீண் பேச்சு? சிறு குழந்தையின் பேச்சைக் கேட்டு இங்கே வந்த உன்னை ஒரு பேதை யாகக் கருதி உனக்கு உயிர்ப் பிச்சை கொடுத்தேன். பிழைத்துப் போ, ஓடு'' என்றான்.

சூரபன்மனின் மறுமொழியைக் கேட்ட வீரவாகு தேவருக்கு ஆத்தி ரம் பொங்கியது. ஆயினும் சூரபன் மனுக்காக இரக்கப்பட்டார். 'அவன் விளங்காமல் பேசுகிறான். நான் வந்தது அவனுக்கு விளங்க வைக்கத்தானே? அவன் விளங்காமல் கூச்சல் போட் டால் நாமும் எதிர்க் கூச்சல் போடு வதா?' என்று எண்ணினார். மீண்டும் நல்ல வார்த்தை கூறினார்.

முருகப் பெருமான் சிறுவராயிருப்பி னும் சக்தியில் மிகப் பெரியவர் என்று சூரனுக்கு விளக்குமுகமாக, அரியும் அயனும் அடிமுடி தேடியும் காண முடியாத அரன்மகன் அவர் என்பதைக் கூறினார் வீரவாகு.

**மண் அளந்திடும் மாயனும்**
**வனசமே லவனும்**
**எண்ணரும் பகல் தேடியுங்**
**காண்கிலா திருந்த**
**பண்ணவன் நுதல் விழியிடைப்**
**பரஞ்சுடர் உருவாய்**
**உண்ணிறைந்த பேரருளினால்**
**மதலையாய் உதித்தான்**

சிவஜோதியின் அடி, முடி தேடுகை யில் மேலே போனவர் அன்ன வடி வெடுத்த அயன். கீழே சென்றவர் வராக வடிவு கொண்ட விஷ்ணு. வராகம் எங்கே வாழும்? காட்டில். காட்டுப் பன்றி என்றே சொல்கிறோம் அல்லவா? அன்னம் வாழ்வது தாமரை யில். இங்கோ தாமரையில் வாழ்கின்ற அன்னம் சிவனாரின் சடை என்ற காட் டைத் தேடியது. வராகமோவெனில் பரமசிவனின் பாதமாகிய தாமரையைத் தேடியது. இயற்கைக்கு மாறாக நடந்த தால் இரண்டாலும் பரம்பொருளை அடைய முடியவில்லை. சூரனும் தன் னுடன் பிறந்தவரே தேவர் என்ற இயற்கை உறவை மறந்து சென்றான். எனவே பிரம்ம விஷ்ணு காண இயலாத பரமசிவத்தின் மறு உருவமான முருகன், இயற்கையை மீறும் அரக்கனை அழிப் பான் என்பதை வீரவாகு கூறாமல் கூறினார்.

**முன்ன வர்க்குமுன் னாகுவோர்**
**தமக்கு முற்பட்டுத்**
**தன்னை நேரிலாத ஈசனும்**
**தனிப் பெயர் தாங்கி**
**இன்னுயிர்க் குயிராய் அரு**
**வுருவமாய் எவர்க்கும்**
**அன்னை தாதையாய் இருந்திடும்**
**பரமனே அவன்காண்''**

சிவபெருமான் வேறு; கந்தன் வே என்று நினைத்ததுதான் சூரபன்ம செய்த பெரும் பிழை. சிவபக்தனென தன்னைச் சொல்லிக்கொண்ட சூரனுக் வீரவாகு இதனை எடுத்துக் காட்டின

**''ஈசனே அவன் ஆடலால்**
**மதலை ஆயினன்காண்**
**ஆசிலா அவன் அறுமுகத்**
**துண்மையால் அறிநீ**
**பேசில் ஆங்கவன் பரனொடு**
**பேதகன் அல்லன்**
**தேசுலா வகன் மணியிடைக்**
**கதிர்வரு திறம்போல்''**

''சூரபன்ம! ஆறு முகம் கொ சங்கரரே திருவிளையாடல் காரண ஷண்முகராக வந்திருக்கிறார். மாண மணியிலிருந்து ஒளி வரும். அந்த வேறு; மணி வேறு அல்ல. சி என்னும் மாணிக்கக் கல்லிலிருந்து வீ ஒளி கந்தன்.

''சூரபன்ம! ஆயிரத்தெட்டு அண் களின் அதிபதி என்பதால் தரு றுப் பேசுகிறாய். ஆனால் அனந்த பெற்ற பரம்பொருளின் சிருஷ்டி தும் உன் ஆளுகைக்கு வந்துவிடவ என உணர்வாயாக. பிருதிவி மு ஒவ்வொரு பூதத்துக்கும் பல அண்டங்கள் உள்ளன. அதிலே ஆளுகைக்கு உட்பட்டது ஆயிரத்தெ அவ்வளவே! பிரபஞ்சத்தில் கடுகு மாத்திரத்தை ஆளுகின்ற உ இவ்வளவு பெருமை எனில் எ புவனங்களையும் அண்டங்களையும் ஆளுகின்ற எம்பெருமானின் பெ எப்படி இருக்கும்? அவரது சக்தி யிருக்கும்? அதை உன்னால் இயலுமா? ஆயினும் எம்பெருமா சக்தி இருப்பது மட்டுமின்றிக் க யும் உள்ளது. கந்தன் கருணை உ கடுகளவு ஏற்பட்டாலும் அகில களுக்கும் தலைவனுவதைவிடப் பேறும் ஆற்றலும் பெறுவாய்'' உபதேசித்தார்.

இந்தக் கருத்தைக் குமரகு சொல்லுகிறார்:

**பெரும்புலி யூரெம்பிரானருள் மே**
**துரும்பும் படைத்தழிக் கும்**
**அகிலாண்டத் தொ**

''பிரபஞ்சம் எங்கும் நிறைந்து அருள் செய்கின்ற குமரவேளுக்கு எங்கும் திரு முகங்கள்; எங்கும் திருக்கண்கள்; எங்கும் திருச்செவிகள்; எங்கும் திருக்கரங்கள்; எங்கும் திருவடிகள்; எங்கும் திருமேனி. அடியார்கள் எங்கெங்கு கண்ணீர் விடு கிறார்களோ அங்கெல்லாம் தேடிச் சென்று அவரது முகம் அருள் புரிகிறது.

**எங்கனும் பணி வதனங்கள்**
**எங்கனும் விழிகள்**
**எங்கனும் திருக் கேள்விகள்**
**எங்கனும் கரங்கள்**
**எங்கனும் திருக் கழலடி**
**எங்கனும் வடிவம்**
**எங்கனும் செறிந்தருள்**
**செயும் அறுமுகத் திறைக்கே**

''சூரபன்மனே! ஆண்டவனைப் பற்றி உனக்குத் தெரியாது. கோட்டானுக்குப் பகலில் கண் தெரியாது. ஆதலால் அதற்கு சூரியன் தெரியாது. சூரியனைக் கோட்டானுக்குத் தெரியவில்லை என்பதால் சூரியன் இல்லை என்று சொல்லி விட முடியுமா?'' என்றார் வீரவாகு.

சூரனின் சாம்ராஜ்யத்தில் இயமனுக்கு வேலை இல்லை. அங்கே, நோய் இல்லை; வறுமை இல்லை எனில் அசுர சைனியங்கள் எப்படிப் பெருகி யிருக்கும்? இவை யாவற்றுக்கும் சூரனின் தவமே காரணம். ஆனால் எம்பெருமான் எதிர்த்து வந்தால் இவ்வனைத்தும் அழிவு பட்டுவிடும் என வீரவாகு அறிவுறுத்தினார். ஆகாயத்தைத் தொடுகின்ற உயரத்துக்கு எழுந்துள்ள புழுதி மலை மீது யுகாந்த காலத்தில் சண்ட மாருதம் வீசினால் புழுதி இருக்கும் இடம் தெரியுமா? அந்தப் புழுதிபோல் அசுரர் இருந்த இடம் தெரியாமல் சிதறிப் போய் விடுவர் என்று கூறினார் வீரவாகு.

ஒரு கோடி காகங்கள் சேர்ந்து மாநாடு நடத்தினாலும் ஒரு சின்னஞ்சிறு கல்லை எறிந்தால் அவை அனைத்தும் பறந்து ஓடும் அல்லவா?

**காகமா னவைகோடி கூடினும்**
**ஒருசிறு**
**கல்லின்முன் னெதிர்நிற்குமோ ?**

அவ்வாறே ஆயிரம் கோடி அசுரர்களாகிய காகங்களுக்கு முருகப் பெருமானின் வேல் ஒரு கல்லாக வரும் என்று வீரவாகு தேவர் கூறினார்.

முதலையும் மூர்க்கனும் கொண்டதை விட மாட்டார்கள். சூரபன்மனின் சொல் மூர்க்கத்தனமாகவே இருந்தது. வீரவாகு கூறிய மொழிகளைக் கேட்டு சூரபன்மன் திருந்தவில்லை. அவரது



நல்லுபதேசம் விழலுக்கு இறைத்த நீராகவே வீணாயிற்று. முன்னிலும் பெருஞ் சினம் கொண்டான் சூரன். ''உயிரை விட்டாலும் விடுவேனே யன்றித் தேவர்களைச் சிறையினின்றும் விடுதலை செய்ய மாட்டேன்'' என்றான். அதைக் கேட்ட வீரவாகு தேவர், ''அப்படியானால் நீ ஐயனின் வேலால் அழிந்து படுவாய்'' என்றார்.

தூதாக வந்த அநுமனைக் கொன்று விடச் சொன்ன இராவணனிடம், 'தூதரைக் கொல்லுதல் நீதியும் அல்ல; நெறியும் அல்ல' என்று கூறித் தடுத்தார் விபீஷணர். ஆனால் சூரபன்மன் பிறர் எடுத்துரைக்க இடம் வைக்காமலே, தூதரைக் கொல்லுதல் கூடாது என்பதை உணர்ந்தவன். எனவே வீரவாகு தேவரைக் கொல்ல ஆணை பிறப்பிக்கவில்லை. அருகிலிருந்த வீரர்களில் ஆயிரவரை நோக்கி, ''இவனையும் பிடித்து, இவன் காக்க வந்த தேவருடன் சிறையில் அடையுங்கள்'' என்று உத்தர விட்டான்.

வீரர்கள் வீரவாகு தேவரைப் பிடிப்பதற்குச் சூழ்ந்து கொண்டார்கள். தனியொருவரான அவரே அந்த ஆயிரம் வீரர்களின் சிகைகளையும் ஒரு கையால் பிடித்துச் சூரபன்மனின் அவைக்களத்திலேயே அடித்துக் கொன்றார்; மலைகளைப் பெயர்த்தெறிந்து நகரையே நிர்மூலமாக்கினார். சூரனின் எதிரிலேயே இறந்தவரின் உடலங்களை எறிந்து அங்கிருந்து கிளம்பினார்.

அவர் அகன்றதும் அவர் அமர்ந்திருந்த சிங்காதனமும் மாயமாய் மறைந்தது. **(தொடரும்)**

 

நங்கையர் மேனி நலம்பெற்று மிளிர...

கோகுல் **ஸான்டால்** டாய்லெட் பவுடர்

•

கோகுல் **ஸான்டல்வுட்** டாய்லெட் பவுடர்

•

கோகுல் **ப்யூடி பவுடர்**

•

கோகுல் **டர்மரால் சோப்**



டி. எஸ். ஆர் & கோ

மதராஸ்

&

கும்பகோணம்










CRITERION-TSE-360

# கந்தன் கருணை

## 34. "நாளைக்குப் புறப்படுவோம்!

வீரவாகு செய்த வீர சாகஸங்களைக் கேட்கக்
கேட்க சூரபன்மனுக்கு ஆத்திரம் எல்லைமீறிப் போ
கிற்று. சதமுகனை அழைத்து "நீ போய் அவனைப்
பிடித்து அடக்கிக் கொண்டு வா" என்று ஆணை
யிட்டான். சதமுகன் வீரர் பலரின் துணையுடன்
வீரவாகு தேவரைத் தொடர்ந்தான். வீரவாகு
தேவர் கந்தவேளைத் தியானித்துச் சதமுகனின்
படையுடன் போரில் இறங்கினார். கந்தன் கருணை
யினால் அசுரர் எய்த படைக்கலங்களைத் துகள்து
ளாக்கி அழித்தார். இருபதினாயிரம் சிகரங்களைக்
கொண்ட ஒரு சூளிகையைப் பறித்து அசுரர்கள் மீது
எறிந்தார் வீரவாகு தேவர். அது அசுரர்களை மாய்த்
தது. வீரவாகு தேவர் சதமுகனைப் பூமியில் உருட்டி
அவனுடைய நூறு தலைகளையும் இடறிக் கொன்றார்.
'கருணை நிறைந்த கந்தவேளின் அறவுரையை
இகழ்ந்து பேசிய சூரபன்மனின் அத்தாணி மண்ட
பத்தை முதலில் அழித்துவிட்டுப் பின்னர் அவனது
நகரத்தையும் அழிக்க வேண்டும்' என்று எண்ணி
கொண்ட வீரவாகு தேவர் பேருருவம் கொண்
டார். அந்தப் பேருருவத்தின் சுமை தாங்காது
வீரமகேந்திரபுரி நடுங்கியது.

அரண்மனையைக் காவல் புரிந்த ஐம்பது வெள்ள
அசுரர்களையும் அழித்த வீரவாகு தேவர் ஐந்நூறு
யோசனை அகலமும் ஆயிரம் யோசனை உயரமும்
இலட்சம் சிகரங்களும் கொண்ட ஒரு செய்குன்றை
கையால் பெயர்த்தெடுத்து அத்தாணி மண்டபத்தின்
அதனை வீசினார். அதனால் மண்டபத்தின் பெரு
பகுதி அழிந்தது. இதனைக் கண்ட சூரபன்ம
ஐந்நூறு முகங்களும், ஆயிரம் தோள்களும் உடை
ஆயிரம் வீரர்களை ஏவினான். அவர்கள் வீரவா
தேவரை யடைந்து போர் செய்வதற்கு முன்
அவர் வீரமகேந்திரபுரியின் சோலை, மண்டபம், கோ
ரம் இவற்றையும் மற்றுமிருந்த வனப்புக்களை
அழித்து, மதில்களை உதைத்துச் சிதைத்துச் சூரபன்
னின் அரண்மனையையும் அழித்தார். சூரபன்மனி
அரண்மனையைச் சூழ்ந்த அகழியைத் தூர்த்
அசுரர்கள் இறந்ததால் ஏற்பட்ட உதிரப் பெருக்க
வீரமகேந்திரத்தைச் சேருக்கியது. வரவிருக்
பேரழிவுக்குக் கட்டியம் கூறியதுபோல் வீரமகேந்
புரி தன் வளங்களையெல்லாம் இழந்து அழிந்தது.

ஐந்நூறு தலைகளும் ஆயிரம் கைகளும் கொண்
சகத்திரவாகுகள் வந்து வீரவாகுதேவரை எதி
தனர். அவர்களை மராமரத்தினால் அடித்துக் கொ
ன்றார் வீரவாகுதேவர். ஆகாயத்தில் நின்று போரை
பார்த்துக் கொண்டிருந்த சூரபன்மனின் ஒற்றர்
சகத்திரவாகுகளை வீரவாகுதேவர் கொன்று விட்
செய்தியைச் சூரனுக்குத் தெரிவித்தார்கள். இ
செய்தியைக் கேட்ட சூரபன்மனின் கோபம் வட
முகாக்கினி போலக் கொழுந்து விட்டெரிந்தது.

அசுராதிபதியின் இளைய மகன் வச்சிரவாகு
அவன் வச்சிர சரீரமும், பத்துத் தலைகளும், இருப
தோள்களும் உடையவன். தந்தையின்

## திருமுருக கிருபானந்தவாரியார்

தைக் கண்ட அவன் தானே வீர வாகுவைச் சிறைப்பிடிக்கச் சென்றான்.

பதினாயிரம் குதிரைகள் பூட்டப் பட்ட ஒரு தேரின் மீது, போர்க் கோலம் பூண்ட வச்சிரவாகு ஏறிக் கொண்டான். அவனது தோழர் களும் தேர்களில் ஏறிக் கொண்டு, வச்சிரவாகுவைச் சூழ்ந்தனர். பேரிகை, சங்கு, உடுக்கை, துந்துபி முதலிய வாத்தியங்கள் முழங்க, வச்சிரவாகு தனது சேனைகளுடன் வீரவாகு தேவரை நோக்கி விரைந்து சென்றான். அவன் போருக்குப் புறப்பட்டுச் சென்றபோது துர்ச் சகுனங்கள் பல தோன்றின. காகம், கழுகு, பருந்து முதலியவை இரத் தத்துடன் கூவின. வச்சிரவாகுவின் கையிலிருந்த வில் தன்னாலே நழுவி விழுந்தது. அவனது அம்பறாத் தூணி அறுந்தது. தேர்க்கொடிகள் கிழிந்து விழுந்தன. வச்சிரவாகு வின் இடத் தோளும், இடக் கண் களும் துடித்தன.

வச்சிரவாகு போர்க்களத்தை அடைந்தான். அவனிடம் சூரபன்ம னின் முகச் சாயலைக் கண்டார் வீர வாகுதேவர். ''சூரபன்மனின் புதல் வர்களில் ஒருவன் வந்திருக்கிறான். இவனையும் அழித்து இன்று மாலை கந்தக் கடவுளின் திருவடிகளைத் தரிசிக்கும்படி விரைந்து செல் வேன்'' என்று தமக்குத் தாமே சொல்லிக் கொண்டு, கந்தவேளின் கருணையை வேண்டி வணங்கித் துதித்தார். பின் தமது தோள்களைத் தட்டி ஆரவாரம் செய்தார். அப் போது வானமும் வையமும் குலுங்கின.

''இப்பொழுது எழுந்த ஒலியைப் போன்று பதினான்கு உலகங்களிலும் நான் கேட்டதில்லை. இது என்ன ஒலி?'' என்று தனது தேர்ப்பாகன் விசயனிடம் கேட்டான் வச்சிரவாகு.

''இளைய மகாராஜா! அந்தத் தூதன் தோள்களைத் தட்டினான். அதனால் ஏற்பட்ட ஒலி இது'' என்று தேர்ப்பாகன் கூறினான்.

வீரவாகுதேவருக்கும் வச்சிரவாகு வின் படைகளுக்குமிடையே பயங் கரப் போர் மூண்டது.

அசுர வீரர்களும் வச்சிரவாகுவின் அருமைத் தோழர்களும் வீரவாகு தேவரால் மாண்டனர். வச்சிர வாகுவை நெருங்கிய வீரவாகுதேவர் பேருருவம் எடுத்து ஆரவாரம் செய்தார்.

இருவரும் சளைக்காமல் களைக்கா மல் கோர யுத்தம் புரிந்தனர். போரின் தீவிரம் முற்றி, வீரவாகு வின் அங்கங்கள் மீதெல்லாம் அம்பு தொடுத்துப் புண்ணாக்கினான் வச்சிரவாகு.

வெகுண்டெழுந்த வீரவாகு தேவர் வச்சிரவாகுவின் தேரைக் கையால் எடுத்து வானத்தில் எறிந் தார்; அவனுக்குத் துணையாக வந் திருந்த மற்ற தேர்களை அழித்தார். விண்ணில் தேருடன் தூக்கி எறியப் பட்ட வச்சிரவாகு இலட்சம் யோசனை தூரம் ஆகாயத்தில் சென்று வீரவாகுதேவரின் முன்பு திரும்பி வந்து விழுந்தான். சிறிதும் களைப்பின்றி வீரவாகு தேவருடன் மீண்டும் போர் செய்ய ஆயத்த மானான். உடனே, வீரவாகுதேவர் அவனது வில்லைப் பறித்து முறித் தார். அதன்பின் வாட்படையால் வீரவாகுதேவரை எதிர்த்துப் போர் செய்தான் வச்சிரவாகு. தமது வாளி னால் அவனது கையை வெட்டி வீழ்த்தினார் வீரவாகுதேவர். ஒரு கை துண்டிக்கப்பட்டதும் மற்றொரு கையால் ஒரு தண்டாயுதத்தை எடுத்து வீரவாகுதேவர் மீது எறிந் தான் வச்சிரவாகு. அந்த ஆயுதத் தைப் பொடியாக்கி வச்சிரவாகுவின் பத்துத் தலைகளையும் வாளாயுதத் தினால் அறுத்தார் வீரவாகு. அசுர அரசிளங்குமரன் மாண்டான்.

வச்சிரவாகு இறந்தபின் வீரவாகு தேவருடன் போர் செய்ய அசுரர்கள் எவரும் முன் வர வில்லை. மாலைப் பொழுது வருவதைக் கண்ட வீர வாகுதேவர் கந்தக் கடவுளின் திரு வடிகளை நினைந்து, திரும்பிச் செல்ல விரும்பினார். போரை விட்டு வீதி வழியே காற்றும் கனலும் காலனும் சேர்ந்து போவது போலப் போனார்.

ஆகாய வழியாக வீரமகேந் திரத்தை விட்டுப் புறப்பட்டார் வீரவாகு. வடதிசையில் உள்ள இலங்கை மலையை அடைந்தார். ஆயிரம் முகங்களும் ஈராயிரம் கைக ளும் உடையவனும், இயமபுர வாசல் போன்ற வாய்களைப் பெற்ற வனுமான யாளிமுகன் இலங்கை யைக் காவல் செய்து கொண்டிருந் தான். அன்று காலை அவன் சூரபன்ம னிடம் சென்றிருந்தான். அப்போது

தனது மகன் அதிவீரன், வீரவாகுவால் கொல்லப்பட்ட செய்தியறிந்தான். வீர வாகுதேவர் விரைந்து செல்லுவதைக் கண்ட அவன், 'என் மகன் அதி வீரனைக் கொன்றவன் அதோ வருகிருன்' என்று கூவித்து ஆத்திரமுற்ருன்.

யாளிமுகனும் அவனது வீரர்களும் வீரவாகு தேவரைச் சூழ்ந்து கொண்டார்கள். வீரவாகுதேவர் அக்கூட்டத்துள் நுழைந்து அவர்களை வெட்டிவீழ்த்திஞர். யாளிமுகனின் ஈராயிரம்கைகளையும் அவர் அறுத்துத் தள்ளினர். அவன் தனது ஆயிரம் துதிக்கைகளாலும் வீரவாகுதேவரைப் பிடிக்க முயன்ருன். அவனது ஆயிரம் தலைகளையும் ஒருங்கே அறுத்து யாளி முகனைக் கொன்ருர் வீரரில் வீரரான வீரவாகு.

இடையூறுகள் யாவும் நீங்கின. அதன்பின் ஒரே மூச்சில் வீரவாகு தேவர் கடலைத் தாண்டிக் கந்த மாதன மலையைச் சார்ந்துள்ள திருச்செந்தூரை அடைந்தார். கந்தக் கடவுளின் பூத சேனைகள் வீரவாகு தேவரைக் கண்டு முழுமதியைக் கண்ட கடல் போல் கோஷித்தன. பூதகணங்களின் தலைவர்கள் கரம் குவித்து அவரை வணங்கிப் பின்னர் ஆரத் தழுவிக் கொண்டார்கள்.

பகைவனிடத்தும் அன்பு செய்யும் வீரவாகு தம் உற்ருேரின் அன்பில் கரைந்தார். ''அந்தப் பாவிகள் வாழும் ஊரைப் பார்த்ததால் அடைந்த பாவம் உங்களைக் கண்டதால் நீங்கிப் போயிற்று'' என்று அவர்களிடம் மிகுந்த அன்புடன் கூறினர் வீரவாகு தேவர்.

என்றுமே ஆணவத்துக்கு அன்பின் குரலும் அறத்தின் குரலும் கேட்பதில்லை. அநுமன் சீதாதேவியை விடுவிக்குமாறு எவ்வளவோ தருமங்களை எடுத்துச் சொல்லியும் இராவணன் திருந்தவில்லை. உலகளந்தபெருமான் தம் பாதம் நோக நடந்து சென்று, ''பஞ்சவர்க்கு ஐந்து வீடுகள் கொடுத்தாலும் போதும்'' என்று துரியோதனனிடம் கையேந்திக் கேட்டும் அவன் இணங்கினனில்லை.

ஆணவமே வடிவான சூரபன்மன் கந்தநாயகனின் பெருமையை உணரவில்லை; வீரவாகுதேவர் எவ்வளவோ எடுத்துரைத்தும் திருந்தவில்லை.

ஒருவன் தன் குற்றங்களை உணருவது போன்ற பெருமை வேறெதிலும் இல்லை. இதற்கும் ஆண்டவனே மனிதனாக வந்து வழிகாட்டியிருக்கிருர். ராமபிரான் சீதையைக் காணுமல் வருந்திய போது, தம்பி இலக்குவன் சொல்லைக் கேளாத தம் குற்றத்தை விட்டுக் கூறி ஏங்கினர். இல்லாத குற்றத்தை யெல்லாம் தம் மீது ஏற்றி உருகி அழுவர் மெய்யடியார். ''குலம் பொல்லேன்; குணம் பொல்லேன்'' என்று கூறி இறைவனிடம் முறையிடுகின்ருர் அப்பர் பெருமான். அருணகிரிநாதரோ, உலகிலொருவன் எவ்வளவு தவருக இருக்க முடியுமோ அத்துணைத் தவறுகளும் தம்மிடமிருப்பதாக பாவித்துப் பாடுகிருர்:

அவகுண விரகனை வேதாள ரூபனை
அசடனை மசடனை ஆசார ஈனனை
அகதியை மறவனை ஆதாளி வாயனை
அஞ்சுபூதம்

அடைசிய சவடனை மோடாதி மோடனை
அழிகரு வழிவரு வீணுதி வீணனை
அழுகலை யவிகலை ஆருன வூணனை
அன்பிலாத

கவடனை விகடனை நாணு விகாரனை
வெகுளியை வெகுவித மூதேவிமுடிப
கலியனை அலியனை ஆதேச வாழ்வனை
வெம்பிவிழு

களியனை யறிவுரை பேணுத மாநுட
கசனியை யசனியை மாபாத குகிய
கதியிலி தனையடி நாயேனை யாளுவ
தெந்நாளோ?

குற்றங்களைச் செய்யாத பெரியோர்கள், பற்பல குற்றம் செய்த மக்களும் பாடி உருகுவதற்கென்றே இப்படி யெல்லாம் மொழிந்திருக்கின்றனர்.

எண்ணிறந்த குற்றங்களைச் செய்த சூரன் பச்சாத்தாபமோ, திருந்தவேண்டும் என்ற உணர்வோ பெறவில்லை.

திருச்செந்தூர் திரும்பிய வீரவாகு தேவர், முருகப் பெருமான் திருவடிகளை வணங்கி இவ்விஷயத்தை யெல்லாம் கூறலானர்.

''அண்ணலே! கல்லைப் பஞ்சாக்க முடியாது. மூடர்களை யாராலும் திருத்த முடியாது. தேவரீரின் திருவார்த்தைகைச் சூரபன்மனிடம் கூறினேன். எவ்வளவோ எடுத்துச் சொல்லியும் சூரபன்மன் திருந்தவில்லை. வேல் ஒன்று தான் அவனைத் திருத்தும்'' என்ருர் வீரவாகுதேவர்.

''வீரவாகு! நீ எப்படி மீண்டு வந்தாய்? நீ செய்த செயல்கள் யாவை? அவற்றைப் பற்றி யெல்லாம் சொல்லவில்லையே. அவற்றையும் சொல்'' என்று அன்பு உருவமான ஆறுமுக வள்ளல் ஆர்வமிகுதியுடன் அவரைக் கேட்டார்.

''தங்களுக்குக் கூறவும் வேண்டுமா? சூரபன்மனின் நகரத்திற்குச் சென்று [illegible]ண்ட போது அடியேனின் காரியத் [illegible]தத் தடுத்து இடையூறு செய்தவர் [illegible]த் தேவரீரின் திருவருளைத் துணை [illegible]கக் கொண்டு தானே வென்று [illegible]தேன்?'' என்று வீரவாகுதேவர் கூறினர்.

முருகக் கடவுளின் திருவுள்ளத்தின் [illegible] சங்கற்பம் உருவாயிற்று. பிரமன், இந்திரன் முதலிய தேவர்களைப் பார்த்து, ''நாம் சொல்லியனுப்பிய அறிவுரையைச் சூரபன்மன் ஏற்றுக் கொள்ளவில்லை. ஆதலால், நாமே நாளைக்கு அவனோடு போர் செய்யப் புறப்படுவோம்'' என்று கூறியருளினர்.

தேவர்கள் அதனைக் கேட்டுப் பேரானந்தம் எய்தினர். ''எங்கள் துன்பம் இப்போதே நீங்கியது'' என்று கூத்தாடினர்.

வீரவாகுதேவர் தாம் சயந்தனைச் சிறையில் சந்தித்து வந்ததையும், அவனுக்கு ஆறுதல் கூறியதையும் இந்திரனுக்கு எடுத்துரைத்தார். இன்பம் என்பதையே மறந்திருந்த இந்திரனும் அதைக் கேட்டுப் பெருமகிழ்ச்சியுற்றன்.

இங்கே திருச்செந்தூரில் தேவர்கள் இவ்வாறு மகிழ்ந்திருந்த வேளையில், வீரமகேந்திரபுரியிலே வச்சிரவாகு இறந்ததையும் வீரவாகுதேவர் மீண்டு சென்றதையும் கேள்வியுற்ற சூரபன் [illegible]ன் துயரக் கடலில் ஆழ்ந்திருந்தான்; அவனது சுற்றத்தாரும், பதுமகோமளை [illegible]ம் கதறி அழுதார்கள். மகேந்திரபுரியில் மங்கல ஒலி அடங்கியது; அழுகைக் [illegible]ரல் ஓங்கியது.

ஆற்றொணுத் துயரில் சூரபன்மன் ஆழ்ந்திருந்த போது, மந்திரி தருமகோ[illegible]ன் வந்து வணங்கினன். ''ஆயிரத் [illegible]தெட்டு அண்டங்களையும் அளவற்ற செல் [illegible]ங்களையும் பெற்று ஒப்பாரும் மிக்காரு [illegible]மின்றி ஆட்சி புரியும் அரசர்க்கரசே! தாங்கள் கண்ணீர் விட்டால் மும் [illegible]ர்த்திகளும் தேவர்களும் நகைக்க [illegible]மாட்டார்களா? உங்கள் புகழ் குன்றிப் போகாதா? எவ்வளவு இன்னல்கள் [illegible]ர்ந்தாலும் மன வலி குன்றாது [illegible]ம் எண்ணிய காரியங்களைச் செய்து [illegible]டிப்பார்களே வீரர்கள். விதியை [illegible]வெல்ல யாராலும் முடியாது. உங்கள் [illegible]தல்வனின் விதி முடிந்து விட்டது. ஆத [illegible]ல்தான் கந்தனின் தூதன் அவனைக் [illegible]கொன்றானேயன்றி, அந்தத் தூதனின் [illegible]ரத்தினுல் நம் இளவல் இறந்துபட [illegible]வில்லை. [illegible] வரம்பில்லா வரங்களைப் பெற்ற தாங்கள் இதற்காக வருந்தக் கூடாது'' என்று கூறி, மேலே நடக்க வேண்டியதை ஆராய்ந்து பார்க்கும் படி வேண்டினன்.

சூரபன்மன் ஒருவாறு மனம் தெளிந்தான். இனி என் செய்வது என்று யோசித்த அவன் அழிந்த நகரத்தைப் புதுப்பித்துத் தன் தோல்வியை விரைவில் மறைத்துவிட வேண்டும் என்று முடிவு செய்து கொண்டான். அருகிலிருந்த சேவகர்களை நோக்கி, ''நீங்கள் விரைந்து சென்று பிரம்மனை அழைத்து வாருங்கள்'' என்று உத்தர விட்டான்.

அந்தச் சேவகர்கள் அச்சத்துடன் கூறினர்: ''பிரமன் இந்திராதி தேவர்களோடு முருகனுடன் போய்த் தங்கி இருக்கிறுன் என்று நேரில் பார்த்தவர்கள் சொன்னர்கள்; நாம் அழைத்து அவர் வருபவராகத் தெரியவில்லை.''

சூரபன்மன் நெருப்புச் சிரிப்பு சிரித்தான். ''இந்த அண்டத்துப் பிரமன்தானே நமக்குத் துரோகம் செய்து விட்டு எதிரியுடன் போய்ச் சேர்ந்து கொண்டான்? மற்ற அண்டங்களில் ஒன்றின் பிரமனை அழைத்து வாருங்கள்'' என்று உத்தரவிட்டான்.

அதன்படி ஒரு பிரமன் வந்ததும், ''எதிரியின் தூதன் அழித்த இந்நகரத்தை முன் போல் அழகாக நிர்மாணம் செய்'' என்று சூரன் உத்தரவிட்டான். ''இமைப் பொழுதில் உமது ஆணையை நிறைவேற்றுவேன்'' என்று கூறிய இந்தப் பிரமன் வீரமகேந்திரபுரியின் அழிந்த வீதிகளை முன்னிலும் அழகுற அமைத்தான்; சோலைகள் முன்னிலும் பசுமையாகத் திகழ்ந்தன; நீர் நிலைகளிலே நீர் வளம் முன்னிலும் மிகுந்தது; முன்னிலும் உறுதியாக மதில்களும் கோபுரங்களும் அமைந்தன. அவற்றைக் கண்டு மகிழ்ந்த சூரபன்மன், அதன் அழகை வியந்தான். ''நீ உன்னுடைய அண்டத்துக்குச் சென்று முன் போல் படைப்புத் தொழிலைச் செய்து கொண்டிரு'' என்று பிரமனுக்கு ஆணையிட்டான்.

(தொடரும்)

---

## மறக்காதே !

ஓடிக்கொண்டிருந்த சைக்கிளின் முன் சக்கரம் பின் சக்கரத்தைப் பார்த்து ''நான் செல்லும் வழியில்தானே நீ வருகிறுய்?'' என்று சிறிது ஆணவத்துடன் கேட்டது.

பின் சக்கரம் முன் சக்கரத்திடம் ''நான் ஓடுவதால்தான் நீ சுழன்று செல்கிறுய்'' என்றது.

ஓட்டிக்கொண்டிருந்த மனிதன் தன்னைத் தனக்கு மேல் இருந்துகொண்டு ஒருவன் ஆட்டி வைக்கிறுன் என்பதை மறந்து தன்னுல்தான் வண்டி ஓடுகிறது என்று நினைத்தான். -அபிஜித்




"இரண்டு அல்லது மூன்று ரும்
சார் நம்ப வீடு. அதற்காக 'ஆர்கிடெக்
வேறு பணம் அழுவானேன்?'' என்
கூறித் தாங்களாகவே பிளான் போட
பிக்கும் சிலரைப் பார்க்கிறோம். அ
சக்திக்கேற்ப ஓர் 'ஆர்கிடெக்'டைத் தே
தெடுத்து அவரைக் கலந்தாலோசிப்ப
பண விரயம் என்று கருதலாகாது. எ
யில் எழில் காண அவர் உங்களுக்கு உ
முடியும். பெரிய வீடானாலும் வெ
தோற்றத்தில் படாடோபத்தைக் காட்டி
வனப்பே மனத்தில் பதிகிற மாதிரி அ
வேண்டும். முக்கியமாக வர்ணம் தீ
யில் பல்வேறு நிறங்களை அள்ளித் தெ
தாற்போல் டெக்னிக் கலர் பண்
அமைதியான, கண்ணுக்குக் குளிர்ச்சி
இரண்டு அல்லது மூன்று நிறங்களைத் தே
தெடுத்து அவற்றைப் பொருத்த
இடத்தில் பூச வேண்டும். நீங்கள் அ
வீட்டைக் கட்டும்போது உங்கள் நகர
அழகுபடுத்துகிறீர்கள் என்பதைக்
போதும் மறக்கலாகாது.

இங்கே உள்ள படங்களில் சுமாரான வ
யுடைய ஒருவர் மாடியில்லாமல் கட்
கொள்ளக்கூடிய வீட்டினைக் காண்கிறோ
முதல் இரு படங்கள் ஒரே வீட்டின் இ
வேறு கோணங்களிலிருந்து பார்க்கும்போ
அளிக்கும் தோற்றத்தையும் மூன்று
படம் அதே வீட்டின் பிளானைச் ச
மாற்றி அமைத்தால் எப்படி யிருக்
என்பதனையும் உணர்த்துகின்றன. வீட்
லுள்ள அறைகளின் கிரவுண்ட் பிளா
கொடுக்கப்பட்டுள்ளது. 1. முன் வராந்
2. ஹால். 3, 3A. குளியலறையுடன் கூ
ஓர் அறை. 4, 4A. குளியலறையுடன் கூ
இன்னுமோர் அறை. 5. பின் வராந்
6. சமையலறை. 7. சாப்பிடும் அ
8. ஸ்டோர். 9. மற்றொரு குளியல
10. கார் ஷெட்.





# கந்தன் கருணை

திருமுருக கிருபானந்தவாரியார்

## 35. மந்திராலோசனை

சூரன் செந்தில் மாநகருக்கு அனுப்பியிருந்த பகன், மயூரன் முதலிய ஒற்றர்கள் முருகப் பெருமானின் சேனைகளைக் கண்டு திரும்பி வந்தார்கள். அவர்கள் அசுரபதியை வணங்கி, "நாளையே இங்கு வந்து யுத்தம் செய்வது என்று முருகன் இப்பொழுது முடிவு செய்துள்ளான்'' என்று கூறினர்.

மந்திரிகளையும் சேனாதிபதிகளையும் தமது புதல்வர்களையும் அழைத்தான் சூரன். மந்திராலோசனை தொடங்கியது; மந்திராலோசனை நடக்கும்பொழுது வேறு யாரும் உள்ளே இருக்கக் கூடாது. வண்டு உருவத்தில் வந்துகூட தேவர்கள் ரகசியங்களை அறிந்து செல்வார்கள். ஆகவே, 'அழைத்தவர்களைத் தவிர ஈ, எறும்புகூட அங்கிருக்கக் கூடாது' என ஆக்ஞை விட்டான் சூரபன்மாசுரன்.

தேவர்கள் வண்டு உருவம் எடுப்பார்கள் என்பதற்கு ஒரு கதை:

தமயந்தியின் சுயம்வரத்திற்கு இந்திரன், அக்கினி பகவான், இயமன், வாயுதேவன் ஆகிய நால்வரும் சென்றிருந்தார்கள். நள மகாராஜனிடம் தமயந்திக்கு ஆறாத காதல் என்றறிந்த தேவர்கள் நளனையே அடைந்தனர்.

தமயந்தி தங்களில் ஒருவருக்கே மாலையிட வேண்டுமெனவும், நளனே கூறினால்தான் இவ்வாறு செய்யத் தமயந்தி சம்மதிப்பாள் என்றும் அவர்கள் கூறினர். பிறர் கேட்டால் தன் காதலையும் தியாகம் செய்யக் கூடியவன் நளன் என்ற நம்பிக்கையிலேயே இப்படிக் கூறினர்.

அவர்களது நம்பிக்கை வீண் போகவில்லை. நளன் அக்கணமே தேவர்களுக்காகத் தன் காதலைத் தியாகம் செய்து தமயந்தியிடம் தூது போக முடிவு செய்து விட்டான். ஆனால் கன்னி மாடத்தில் காவலில் உள்ள கன்னிகையை எப்படிச் சந்திக்க இயலும் என்பது குறித்தே கவலைப்பட்டான்.

''கவலைப்படாதே! அஞ்சனமொன்று தருகிறோம். அதை இட்டுக்கொண்டால் யார் கண்ணுக்கும் நீ தென்பட மாட்டாய்'' என்று தேவர்கள் நளனிடம் கூறி அவனுக்கு மை கொடுத்தனர். அதை இட்டுக்கொண்டு, யார் கண்ணுக்கும் தெரியாமல் தமயந்தியின் கன்னிமாடத்தைச் சென்றடைந்தான் நளன்.

தான் தேவர்களுக்குத் தந்திருந்த வாக்கிலிருந்து சற்றும் பிறழாமல் தன் உள்ளம் கவர்ந்தவளிடம் கள்ளமின்றிப் பேசினுன் அந்த உத்தமன்:

''தமயந்தி! என் உடல் அற்ப உடம்பு. எனக்கு நரை திரை மூப்பு உண்டு; மரணமும் உண்டு. ஆனுல் முப்பத்து முக்கோடி தேவர்களுக்கும் தலைவன் இந்திரன். அவனுக்கு அழியாத வாழ்வு உண்டு. ஐராவதம் உண்டு. சிந்தாமணி, அமிர்தம் எல்லாவற்றுக்கும் அவனே அதிபதி. இத்துணை பெருமை வாய்ந்த இந்திரனுக்கே மாலையிட்டு உன் மணாளனுக்கிக்கொள். அல்லது அக்கினி, வாயு, இயமன் ஆகிய அரும்பெரும் தேவரில் ஒருவருக்கு மாலையிடு. என்னை மணப்பதைவிட இவர்களில் ஒருவரை மணப்பதால் நீ அதிக நலன் பெறுவாய்'' என்றுன். மறுத்த தமயந்தியிடம் தேவர்களின் பெருமைகளை மீண்டும் மீண்டும் எடுத்துரைத்தான்.

நளனிடம் இவ்வளவு சத்தியமிருந்த போதிலும், அவனைத் தமயந்தியிடம் அனுப்பிய தேவர்களோ நளன் வாக்குத் தத்தம் செய்தபடி உண்மையாக நடப்பானு என்று சந்தேகித்தனர். எனவே, அவனைத் தூதாக அனுப்பிய பின் அவர்களும் வண்டு வடிவமாகவும், காற்று வடிவமாகவும் அவனைப் பின் தொடர்ந்து சென்று தமயந்தியிடம் அவன் பேசியதைக் கேட்டனர்.

இந்த ஆற்றல் தேவர்களுக்கு எப்போதும் உண்டு. இதனுல்தான், ''வண்டையும், காற்றையும் உள்ளே விடாதே'' என்று உத்தரவிட்டான் மந்திராலோசனை நடத்திய சூரபன்மன்.

**ம**ந்திராலோசனை மண்டபத்தில் மன்னர் மன்னனுகிய சூரபன்மன் பேசலானுன் : ''துணைவர்களே! அமைச்சர்களே! நமது பகைவர்களாகிய தேவர்களை நீங்காத சிறையிலிட்டேன். தேவர்களின் சிறையை நீக்குவதற்காக சிவபெருமான் ஒரு குமாரனைப் பெற்று இங்கு அனுப்பி வைத்தார். பூவுலகம் வந்த அந்தக் குமரன் கிரவுஞ்ச மலையை அழித்தான்; தாரகனைக் கொன்றுன். அதன்பின் கடற்கரையில் வந்திருந்து, ஒரு தூதனை என்னிடம் அனுப்பினுன். அத் தூதன் இலங்கை மலையில் பாய்ந்து அதனை அழித்தான். அஞ்சாமல் வந்து என் அவைக்களத்தில் வீற்றிருந்து சில வார்த்தைகள் பேசினுன். என் கண்முன்னே சில அசுரர்களைக் கொன்றுன். இந்த நகரைப் பாதிக்கு மேல் அழித்துவிட்டான். என் அருமந்தப் புதல்வன் வச்சிரவாகுவைக் கொன்று விட்டான். தூதனுய் வந்து இவ்வள[…] அட்டூழியங்களைச் செய்த அவனை[…] பிடித்துச் சிறையில் தள்ளினே[…] இல்லை; கொன்றேன் இல்லை. பெரும் பழியைப் பெற்று விட்டேன். அது மட்டுமல்ல; அந்தத் தூதன் வீரமகே[…] திரபுரியிலிருந்து திரும்பிச் செல்[…] போது, நம் பெரும் காவலாள் யா[…] முகனையும் கொன்று விட்டான்.

''துணைவர்களே ! கவனமாக் கேளுங்கள். தூதனுப்பிய குமர[…] கடலைத் தாண்டி இங்கு வந்து நம்மே[…] போர் புரியவும் துணிந்திருக்கிறு[…] இந்தத் தகவலை ஒற்றர்கள் வ[…] சொல்லுகிறுர்கள். நானே செ[…] இமைப் பொழுதில் சேனைகளையும், வீ[…] களையும் அந்தக் குமரனையும் வெ[…] ஒழித்து விடலாமா என்றுகூட எண்[…] னேன். ஆனுல் சூரன் என்னும் பெ[…] பெற்ற நான் — எண்ணற்ற படைப[…] பொருந்திய நான் — போயும் போயு[…] பூதர்களுடனும் ஒரு பாலகனுடனு[…] போர் செய்வதா என்று நினைத்[…] வாளாவிருந்து விட்டேன். எத்தகை[…] வீரமும் வலிமையும் செல்வமு[…] ஒருவர் பெற்றிருந்தாலும் தம் து[…] வர்களுடன் ஆராய்ந்தே ஒரு செய[…] செய்ய வேண்டும். ஆகவே தா[…] உங்கள் யாவரையும் இங்கு கூட்[…] யுள்ளேன். நாம் என்ன செய்வதென்[…] ஆராய்ந்து சொல்லுங்கள்.''

சூரபன்மனின் அமைச்சர்கள்[…] எருமை முகம் அமைந்த மகிஷன் சூரப[…] மனை வணங்கிக் கூறினுன் : ''அரசே[…] உங்[…] திருமாலையே வென்றவர் தம்பி தாரகாசுரன். அவரையு[…] கிரவுஞ்ச மலையையும் வென்ற வீரன[…] சிறுவன் என்று கூறுவது சரியாகும[…] கடலைத் தாண்டி வந்து நம் நகரத்[…] அழித்ததோடு வச்சிரவாகுவை[…] கொன்ற துஷ்டனை சாமானிய தூ[…] என்று கருதுவது பொருத்தமா[…] தானு? உமது தம்பியும் கிரவுஞ்ச ம[…] யும்அழிந்த அன்றே அந்தச் சிவகுமார[…] மீது போருக்குப் போயிருக்க வேண்[…] அப்படி செய்திருந்தால் அந்தத் தூ[…] வந்து இங்கு அட்டூழியம் செய்திரு[…] முடியுமா? போகட்டும். கடந்த[…] எண்ணி வருத்தப்படாமல் இன்றே [...] லில் இறங்குங்கள். நால்வகைச் சே[…] களோடும் சென்று போர் புரிவோம்[…] முன்னைப் போல் அஜாக்கிரதைய[…] இருந்து காலந் தாழ்த்தி விடலாகாது.''

மகிஷன் கூறி முடித்ததும் மற்றொ[…] அமைச்சனுகிய துர்க்குணன் எ[…] தான். ''அரசே! தாங்கள் இதுவ[…] திருமாலோடும் மற்றைய தேவ[…]

# கால்கேட்டின் மூலம் நாள் முழுவதும் வாய் துர்நாற்றத்தை அகற்றி பற்கள் சொத்தையாவதையும் தடுங்கள்!




ஏனெனில் ஒரே தேய்ப்பில் கால்கேட் டெண்டல் கிரீம், துர்நாற்றத்தையும், சொத்தையையும் உண்டாக்கும் கிருமிகளில் 85 சதவிகிதத்தை ஒழித்துவிடுகிறது.

கால்கேட், 10ல் 7 சந்தர்ப்பங்களில் உடனடியாக வாய் துர்நாற்றத்தை அகற்றுகிறது என்பதையும், உணவு உட்கொண்டவுடன் கால்கேட்டினுல் பற்களைத் துலக்கும் முறையால், இது வரை பற்பசை வரலாற்றிலேயே கண்டிராத பெருமளவில் ஏராளமானவர்களுக்குச் சொத்தை தடுக்கப்படுகிறது என்பதையும் விஞ்ஞான ஆராய்ச்சிகள் நிரூபித்துள்ளன. இந்த சாதனை கால்கேட் ஒன்றுக்குத்தான் உண்டு.

கால்கேட்டின் நீடித்திருக்கும், நூதன நறுமணத்திற்காக, குழந்தைகள் அதனுலேயே பல் துலக்க விரும்புகிருர்கள்.

நீங்கள் பற்பொடியை விரும்பினுல், இந்தப் பலன்கள் அனைத்தையும் கால்கேட் டூத் பவுடர் மூலம் அடையலாம். ஒரு டப்பி பல மாதங்களுக்கு வரும்.




பரிசுத்தத்திற்கும், வாயில் நறுமணம் கமழவும், வெண்மையான பற்களைப் பெறவும் வழக்கமாக கால்கேட்டினுல் பல்துலக்குங்கள்.




... உலகிலேயே பெரும்பாலானவர்கள் மற்றெல்லாப் பற்பசைகளையும் விட, கால்கேட் டெண்டல் கிரீமையே வாங்குகிருர்கள்.

DCG. 36. TAM.

களோடும் போர் செய்வதற்கென்று சென்றதில்லை. உமது தம்பிமார்களைக் கொண்டே அவர்களை யெல்லாம் போரில் வென்றீர்கள். அப்படிப்பட்ட தாங்கள் இன்றைக்கு ஒரு சிறுவனை எதிர்த்துப் போருக்குச் செல்வதா ? தவத்தைப் பெருக்கி அழியாத வளங் களையும், அளவற்ற ஆயுளையும், வீரத் தையும் பெற்றுக் கொண்டதெல்லாம் ஒரு சிறுவனோடு போர் புரிவதற்குத் தானு? சிறுவனுக்காக வந்த தூதனைத் தொடர்ந்து நீங்கள் போக வேண் டுமா? கொசுவைக் கொல்லச் சிம்மமா செல்வது? நமது படைத் தலைவர்களை அனுப்பி வைத்தால் அவர்களே அந்தப் பூதகணங்களையும் சிவ குமாரனையும் வென்று வருவார்கள்; இது திண்ணம்.''

தலைமை அமைச்சனுகிய தரும கோபன் எழுந்தான்: ''அரசர்க்கரசே! அச்சிறுவனுடன் சக்கரவர்த்தி போர் செய்வது புன்செய் நிலத்தை நவரத் தினங்கள் பதித்த பொற்கலப்பையால் உழுவது போலத்தான். அவன் உங்க ளைக் கண்டதும் புறமுதுகு காட்டி ஓடி விடுவான். அப்படி அவன் ஓடிவிட் டால், 'கேவலம் இந்தச் சிறுவ னுடனு போர் புரிய வந்தோம்' என்று நீங்கள் எண்ணி அவனைத் தொடர்ந்து சென்று கொல்லாமல் மன்னித்து விட்டு வந்து விடுவீர்கள். அவனுக்கு அழிவு ஏற்படாது. தனக்குச் சமான மில்லாதவர்களுடன் அறிஞர்கள் போர் செய்ய மாட்டார்கள். உங்கள் குமாரர் களான அக்கினிமுகன், இரணியன் இரு வரில் ஒருவரை அனுப்பினுலே போதும். நகத்தால் கிள்ளியெறியும் முளையை வாளால் வெட்டுவார்களா? சிவபெரு மான் கொடுத்த வேலாயுதத்தை அச் சிறுவன் செலுத்தியதும் அதற்கு மாறுன படையை விடுக்காததால் தாரகன் மாண்டான். இதை வைத்து அந்தச் சிறுவனை வீரன் என்று கருதுகிறீர்களா? கிரவுஞ்சமலை அழிந்தது என்று சொல் கிறார்கள். ஆனுல் கிரவுஞ்ச மலைக்கு அகத்தியரின் சாபத்தினுல்தான் அழிவு வந்தது என்பதை மறப்பதற்கில்லை அல்லவா? அழியாத தேர், கவசம், வில் முதலியவற்றை வச்சிரவாகுவுக்குக் கொடுக்கவில்லை. அவைகள் இல்லாத தால்தான் முருகனின் தூதன் வந்து தாக்கியபோது வச்சிரவாகு இறந்தான். இனி பலப் பல சொல்ல வேண்டாம். அந்தச் சிறுவனையும் அவனுடன் உள்ள மற்ற வீரர்களையும் இங்கிருந்தே பாணம் போட்டு நான் கொன்று விடுகிறேன். அல்லது ஒரு சேனுதிபதியை அனுப்பி வைத்தால் அவனே முருகனை வென்று விடுவான்'', என்று கூறினுன்.

தர்மகோபன் சொல்லி முடித்ததும் உடல் குலுங்கச் சிரித்தான் காலசித்து என்ற அமைச்சன். சூரபன்மனை நோக்கி, ''அரசர்க்கரசே! இது என்ன பெரிய பிரமாதமான காரியம்? திருச் செந்தூரில் வந்திருக்கும் சிறு பாலனை அநாயசமாகத் துரத்துவதற்கு மந்திரா லோசனையும் செய்ய வேண்டுமா? திருமாலோடும், இந்திரனேடும், சயந்த னேடும்சமர்செய்தபோதுகூடத் தாங்கள் இவ்வாறு மந்திராலோசனை செய்த தில்லையே! இதோ என்னை அனுப் புங்கள். நான் சென்று அந்தச் சிறுவனை யும் அவனுடைய பூதப் படைகளையும் காலபாசத்தால் கட்டி இழுத்துக் கொண்டுவருகிறேன்'' என்று கூறினுன்.

● காட் (Cod) என்னும் கடல் மீனிலிருந்து எண்ணெய் எடுக்கிறுர்கள் அல்லவா? அந்த மீன் எண்ணெயை (Cod Liver Oil) புஷ்டிக்காகப் பலர் சாப்பிடுகிறுர்கள். இந்த மீனுக்கு வைட்டமின் எல்லாம் சூரியனிட மிருந்து கிடைக்கிறதாம்! ஆனுல் இந்த ஆழ்கடல் மீன் சூரியனைத் தன் வாழ்நாளில் ஒரு தடவைகூடப் பார்ப்பதே இல்லை!

## உங்களுக்குத் தெரியுமா?

● நமக்கு சூரியனின் மொத்த உஷ்ண சக்தியில் $\frac{3}{10,000,000,000}$ பங்குதான் கிடைக்கிறது; அதாவது ஆயிரம் கோடியில் மூன்று பாகம்தான் கிடைக்கிறது. இதில் இன்னும் ஐந்து சதவிகிதம் குறைந்தால் என்னவாகும் தெரியுமா? ஒரு ஜீவராசி யும் இவ்வுலகில் வாழவே முடியாது!

காலசித்து கூறியதைக் கேட்ட சன் டன் எழுந்து தன்னெருவனை அனுப்பி வைத்தாலே போதுமென்றுன்.

அசுரர் படைத் தலைவனுன அனலி கோபத்துடன் எழுந்தான். ''ஏதோ ஒரு முடிவு உடனேயே செய்வோம். அற்பச் சிறுவனை அழிப்பதற்காக இன்னமும் மந்திராலோசனை செய்வது அவ மானம்'' என்று கூறினுன்.

விழிகளில் தீப்பொறி பறக்க எழுந் தான் சிங்கன். ''அரசே! இந்த அண்டத்தில் உள்ளவர்கள் எல்லோரும் வந்து என்னுடன் போர் செய்தாலும், நான் ஒருவனே தனித்து நின்று யுத்தம் செய்து அவர்களை வெல்லுவேன். என்னைப் பற்றி நானே சொல்லிக் கொள்வது சரியல்ல. போருக்குச் செல்ல உத்தரவு கொடுங்கள். பகைவர்களைக் கண்டதுண்டமாக வெட்டி வீழ்த்தி வெற்றியுடன் வருகிறேன்'' என்றுன்.

சூரபன்மனின் புதல்வர்களில் ஒருவ னுன இரணியன் எழுந்தான். ''தந்

தையே! முன்பே எனக்கு உத்தரவு கொடுத்திருந்தால் அந்தப் பகைவர்களையெல்லாம் வென்று சரியான பாடம் புகட்டியிருப்பேன்'' என்றான்.

இரணியனின் தம்பியான அக்கினிமுகாசுரன் சூரபன்மனை நோக்கி, ''அப்பா! தாங்கள் போவானேன்? அல்லது நான்தான் போவானேன்? இதென்ன பெரிய காரியம்? என்னுடைய ஆட்களை அனுப்பினாலே போதும். நம் பகைவர்கள் அவ்வளவு பேர்களையும் கொன்று விட்டு வருவார்கள்'' என்றான்.

இப்படியாக அனைவரும் பலப் பல பேசுகையில் சூரபன்மனின் மூத்த மகனும் வீராதி வீரனுமான பானுகோபன் கம்பீரமாக எழுந்திருந்து பேசலானான்.

''தந்தையே! பெரியோர்களே! சகாக்களே! வணக்கம். சென்று போனதை யெல்லாம் பேசிப் பயனில்லை. இப்பொழுது நாம் என்ன செய்ய வேண்டும் என்பதைப் பற்றிச் சிந்திக்க வேண்டும். நம்முடைய எதிரிகளின் பலத்தை மிகையாகக் கூறுவது தவறு எனில், ஒரேயடியாக அலட்சியம் செய்வதும் தவறு. அந்தச் சிறுவனின் பலத்தையும், பூதர்களின் ஆற்றலையும் அறிய வேண்டுமானால், நானே போயாக வேண்டும். என்னை அனுப்பி வையுங்கள். சென்று மீளும்போது அவர்களைப் பாசத்தால் கட்டி இழுத்துக்கொண்டு வருகிறேன்'' என்றான் வீராவேசத்தோடு.

இதுவரை பேசியவர்களிடையே முருகனுடன் போரிடத்தான் வேண்டுமென்பதில் கருத்து வேறுபாடு இல்லை. போருக்கு யார் செல்வது என்பதில்தான் அபிப்பிராய பேதம். இப்போது அடிப்படையிலேயே அபிப்பிராயபேதம் கொண்ட சிங்கமுகாசுரன் எழுந்தான். சிம்மத்தின் தலை பெற்ற இவன் சூரபன்மனின் தம்பி; பெரிய விவேகி.

அண்ணன் சூரபன்மன் காலில் விழுந்து எழுந்து அதன்பின் சிங்கமுகாசுரன் பேசலானான்: ''மந்திராலோசனை கூறியவர்கள் எல்லோரும் அறிவுரை சொல்லவில்லை. அவ்வளவு பேரும் அறிவின்றி உளறினார்கள். பசி என்று துடித்தவனுக்குப் பாஷாணத்தை உணவு என்று கொடுப்பது போல் — தாகத்திற்குத் தண்ணீர் கேட்டவனுக்கு அக்கினித் திராவகம் கொடுப்பது போல் — இவர்கள் செய்து வருகிறார்கள். அடியேன் சொல்வதைத் தாங்கள் கவனமாகக் கேட்டு வாழ வேண்டும். அண்ணா! மயக்க உணர்வினால் மீன்கள் தூண்டில் முள்ளை உணவு என்று எண்ணி அதனைக் கடித்து அதனில் அகப்பட்டு வருந்துதல் போல, தேவர்களுக்குத் தீமை செய்ததால் இப்போது பெருமைப் பட்டாலும் இறுதியில் இன்னலே அடைவோம். தேவர்களைச் சிறையினின்றும் இன்னும் விடுதலை செய்யாத காரணத்தாலேயே ஆறுமுகக் கடவுள் போர் செய்ய வந்துள்ளார்.

''அண்ணா! செந்தில்மாநகரம் வந்துள்ள கந்தக் கடவுள் எத்தனை சக்தி பொருந்தியவர் என்பதைத் தாங்கள் ஏற்க மறுப்பது நமக்கு அபாயமாகவே முடியப் போகிறது.....''

இவ்வாறு தம்பி கூறி வருவதைக் கேட்ட சூரபன்மன் இடைமறித்துக் கோடையிடிபோல் சிரித்தான். சிங்கம் போல் கர்ஜித்தான். ''தம்பி! நன்றாயிருக்கிறது உன் பேச்சு. உனக்குப் புத்தி மயக்கம் ஏற்பட்டு விட்டதா? யாரிடம் யாரைப் பற்றி பேசுகிறாய்?

''இளைய சகோதரா! எனக்குச் சிவ பெருமான் கொடுத்த வரம் அழியாததன்றோ? 'நமது சக்தி ஒன்றே உன்னை வெல்லும். வேறு எவரும் உன்னை வெல்ல முடியாது' என்று சிவபெருமான் கூறியது பொய்யாகுமா? வரத்தைக் கொடுத்தவரே அழிப்பாரா? தாரகன் இறந்தான் என்றால் அவன் என்னைப்போல் அரிய தவம் செய்து அழியா வரத்தைப் பெறவில்லை. வச்சிரவாகு சிறுவன். வலிமை குறைந்தவன். ஆதலால் இறந்தான். ஆயிரத்தெட்டு அண்டங்களை ஆட்சி புரிந்து தேவர்களை ஏவலர்களாக்கிக் கொண்ட என்னை யார் வந்து எதிர்த்தாலும் என்னிடம் தோற்றுவிடுவார்கள். அப்படியிருக்க, என்னிடம் வந்திருக்கும் சிறுபாலகன் என்னை வெல்ல முடியும் என்று நீ நினைப்பது 'கண்ணில்லாதவன் சூரியனைப் பழம் என்று காட்ட, கையில்லாதவன் அதனைப் பிடித்துக் கொண்டான்!' என்பதைப் போலிருக்கிறது'' என்றான் சூரபன்மன்.

''எண்ணி லாததோர் பாலகன்
எனைவெல்வன் என்கை
விண்ணி லாதவன் தன்னையோர்
கனியென வெஃகிக்
கண்ணி லாதவன் காட்டிடக்
கையிலா தவன்போய்
உண்ணி லாதபேர் ஆசையால்
பற்றுமா(று) ஒக்கும்''

இவ்வாறு மூர்க்கத்தனத்தில் ஊறிப் போய்ப் பிடிவாதமாகப் பேசிய சூரனிடம் சகோதர வாஞ்சை கொண்ட சிங்கமுகாசுரன் மேலும் உண்மைகளையும், நீதிகளையும் எடுத்துரைக்கலானான்.

(தொடரும்)

# கந்தன் கருணை



## 36. அறிவுரை பலிக்கவில்லை!

சூரனுக்குச் சிங்கமுகாசுரன் ...வனின் பெருமையை விளக்கலானான்:

"முருகன் சிவபெருமானின் கண்களி...ன்று உதித்த சோதி. சிவபெருமா...ன் பெருமையை நன்கு அறிந்த ...ங்கள் அவரது செழுஞ்சாருகத் ...தான்றியுள்ள குமரனின் ஆற்றலை ...லட்சியம் செய்வது எப்படிப் பொருந் ...ம்? அவர் வேதங்களாலும் அறிந்து ...காள்ள முடியாத முதற் பொருள். ...ற்கருமங்கள் இல்லாத பாமரர்களால் அறிய முடியாத சிற்பரமூர்த்தியைப் ...லகன் என்று இகழ்ந்து பேசுகின் ...ர்கள். சிறியதோர் ஆலம் விதையில் ...கப் பெரிய மரம் ஒடுங்கியிருந்து ...தான்றுவது போல் எல்லாப் பொருள் ...ளுக்கும் ஆதாரமான சிவத்தின் ஆற்ற...த் தம்மில் பெற்றவரே ஆறுமுகக் ...மரனார்.

"சீலம் இல்லவர்க் குணர
வொண்ணுத சிற்பரனைப்
பாலன் என்றனை அவனிடத்தில்
பல பொருளும்
மேலைநாள் வந்து தோன்றிய
சிறியதோர் வித்தின்
ஆலம் யாவையும் ஒடுங்கியே
அவதரித் ததுபோல்

"உருவம் சிறியதா யிருப்பதைக் கொண்டு அவருடைய ஆற்றலைக் கணிக்க முடியுமா? அவர் உருவமேயற்ற அருவமுமாவர்; உருவமுமாவர். அவரது திருவிளையாடலை யாரே கூற முடியும்?

"அருவு மாகுவன்; உருவமும்
ஆகுவன்; அருவும்
உருவு மில்லதோர் தன்மையும்
ஆகுவன்; ஊழின்
கருமம் ஆகுவன்; நிமித்தமும்
ஆகுவன்; கண்டாய்
பரமன் ஆடலை யாவரே
பகர்ந்திடற் பாலார்

"அண்ணா! சிவபிரானின் அடியாராகிய தாங்கள் சிவமே தந்த முருகனைச் சிறுவராக நினைத்தது எப்படிப் பொருந்தும்? உமக்கு வரம் தந்த சிவபெருமான் தாமே உம்மை அழிப்பது முறையல்ல என்ற காரணம் பற்றித்தான் முருகனைத்தோற்றுவித்திருக்கிறார்.

திருமுருக கிருபானந்தவாரியார்

" வரமளித்த யாம் அழிப்பது
முறையன்று வரத்தால்
பெருமை பெற்றுள சூரனை
அடுவது பிறர்க்கும்
அரிதெனப்பரன் உன்னியே
தன்னுரு வாகும்
ஒருமகற்கொடு முடித்துமென்
றுன்னினான் உளத்தில்

"நல்ல கட்டையைப் போட்டு அனல் மூட்டினால் அவ்வளவும் சிவப்பாயிருக்கும். சிறிது நேரம் சென்று பார்த்தால் மேலே முழுதும் சாம்பல் பூத்திருக்கும். சுவாமியின் திருமேனி நெருப்பு. மேலே நீறு பூத்திருக்கும். நீறுதானே என்று கையை வைத்தால் சுட்டுவிடும். அந்தக் காரியத்தைத்தான் நீங்கள் செய்கிறீர்கள் அண்ணா! அதற்குத்தான் இவர்கள் அறியாமையால் உம்மை மேலும் ஊக்குகின்றனர்.

"சிவம் வெறும் வெண்ணீறு என எண்ணினால் நெருப்பாகச் சீறும். சிவம் நெருப்பு என அறிந்து அடங்கி யிருப்பின் அதன் வெண்ணீறே தண்ணென அருள் செய்யும். ஞானவொளி வீசுவது திருநீறு. இறைவன் திருநீற்றையணிவது தன்னை நினைக்கின்ற ஆன்மாக்களில் வினைகள் பொடிபட வேண்டும் என்பதன் பொருட்டேயாகும்." என்றெல்லாம் சிங்கமுகன் கூறினான்.

சிவபெருமான் அணிந்திருக்கின்ற சந்திரனும் வெண்மை; தும்பை மலரும் வெண்மை. அவரது வாகனமாகிய ரிஷபமும் வெண்மை. வாசம் செய்யும் மலை வெள்ளியங்கிரி. உண்மையின் உருவான வெண்மை ஐயனைக் குறித்த எல்லாப் பொருட்களுக்கும் உண்டு. அதுவே அடியவர் மனத்தை வெளுக்கச் செய்யும்.

கடவுளுக்கு உருவத்தைக் கற்பனையாகப் படைத்தார்கள் என்று சிலர் கூறுகிறார்கள். அற்ப மனிதனா கடவுளுக்கு உருவம் படைக்கிறான்? உருவத்தை எம்பெருமானே எடுத்துக் கொண்டார். இதன் உட்பொருளை சிங்கமுகாசுரன் வாயிலாகக் கச்சியப்பர் விளக்குகிறார்.

"குரவரைச் சிறு பாலரை
மாதரைக் குறைதீர்
விரத நற்றொழில் பூண்டுளோர்
தம்மை மேலவரை
அருமறைத் தொழிலாளரை
ஒறுத்தனர் அன்றோ
நிரய முற்றவும் சென்றுசென்
றலமரும் நெறியோர்

(நிரயம் — நரகம்)

"நரகத்துக்குப் போய்த் துன்பப்படுபவர் யார்? பெரியவர்களுக்குத் துன்பம்

செய்தவர்கள்; குழந்தைகளுக்குத் ...
செய்தவர்கள்; பெண்களை ...
கொல்கிறவர்கள்; விரதம் இருப்பவர் ...
குக் கெடுதல் செய்வோர்; தான ...
செய்வோரைத் தடுப்போர் ஆகிய ...
எல்லோரும் நரகங்களுக்குச் ...
துன்புறுவார்கள். ஆகவே, ...
தேவர்களுக்கும் முனிவர்களுக் ...
தாங்கள் தீங்கு செய்வது ...
அல்ல" என்று சிங்கமுகாசுரன் கூ ...

"தமையனே! எல்லாம் ...
தாங்கள் மயங்கி இருக்கிறீர்கள். ...
கத்தில் உள்ள தாங்கள் எனக்கு ...
கம் என்கிறீர்கள். அடியேன் ...
தைக் கேளுங்கள். முருகனின் ...
சக்தியை உணருங்கள்.

" வேதக் காட்சிக்கும் உபநிடத்
துச்சியில் விரித்த
போதக் காட்சிக்கும் காணலன்,
புதியரில் புதியன்;
மூதக் கார்க்கு மூதக்கவன்
முடிவிற்கு முடிவாய்
ஆதிக் காதியாய் உயிர்க்குயிராய்
நின்ற அமலன்.

"அவர் வேதங்களின் ஞானத்திற் ...
உபநிடதங்களின் ஞானத்திற்கும் ...
தற்கு அரியவர்; புதியார்க்கும் புதி ...
முதியர்க்கும் முதியவர்; முதலுக் ...
லானவர்; முடிவிற்கும் முடிவு ஆன ...
உயிர்க்கும் உயிராய் நின்றவர்" ...
சிங்கமுகாசுரன் ஸ்வாமியின் ...
மையை அண்ணனுக்கு எடுத் ...
கூறினான்.

ஒரு பேராசிரியர். அவருக்குப் ...
னெட்டு பாஷைகள் தெரியும். ...
கரைக்குச் சென்றார் அந்தப் பேராசி ...
மணலில் அமர்ந்ததும் அவரது சிந் ...
வேலை செய்யத் தொடங்கியது.

"கடவுளின் நிறம் என்ன? அ ...
குணமென்ன? அவன் உருவம் என் ...
என்ற தீவிரமான ஆராய்ச்சியில் ...
தார் பேராசிரியர். அப்போது சி ...
குள்ளன் ஒருவன் அங்கே வந் ...
'குடுகுடு' வென்று பார்ப்பதற்கே வி ...
மாக ஓடலானான். ஓட்டமாக ஓடி ...
தண்ணீரில் இறங்கினான். கிளி ...
ஒன்றில் கடல் நீரை முகர்ந்துகொ ...
டான். அங்கிருந்து ஒரே ஓட் ...
ஓடிவந்து கிளிஞ்சலில் முகந்துகொ ...
நீரை மணலில் கொட்டினான். ...
யாக அவன் ஓடுவதும், கிளிஞ் ...
நீர் முகந்து வந்து மணலில் கொ ...
வதுமாக இருந்தான். ஆராய்ச் ...
ஆழ்ந்திருந்த பேராசிரியரின் கவ ...
சித்திரக் குள்ளன் மீது திரும்பி ...

சித்திரக்குள்ளனின் செய்கை அவருக்கு விசித்திரமாக இருந்தது.

பேராசிரியர் சித்திரக்குள்ளனைக் கூப்பிட்டு "நீ என்ன செய்துகொண்டிருக்கிறாய்?" என்று கேட்டார்.

அதற்கு நேரடியாகப் பதில் கூறாத குள்ளன் "ஐயா! இன்று உலகில் ஏழைகள் அதிகமா? பணக்காரர்கள் அதிகமா?" என்று கேட்டான்.

"ஏழைகள்தான் அதிகம்" என்று பதில் சொன்னார் பேராசிரியர்.

"உலகில் ஏழைகள் அதிகமாக இருப்பது எனக்குப் பிடிக்கவில்லை. நான் ஒரு புரட்சிகரமான வேலை செய்கிறேன். அதன்மூலம் ஏழைகளாக இருப்பவர்கள் அனைவரையும் பணக்காரர்களாக ஆக்கப்போகிறேன். ஏழைப் பெண்கள் அனைவருக்கும் விலையுயர்ந்த நகைகளைக் கொடுக்கப் போகிறேன். ஏழைகளையெல்லாம் கோடீசுவரர்களாக்குவதற்காகவே இப்போது வேலை செய்கிறேன்" என்று கூறிப் புறப்பட்டுவிட்டான் சித்திரக்குள்ளன்.

சித்திரக்குள்ளன் கூறியதைக் கேட்ட பேராசிரியருக்கு முன்னமே ஏற்பட்டிருந்த வியப்பு பன்மடங்கு அதிகரித்தது.

சித்திரக் குள்ளன் பழையபடியே கடலுக்குள் ஓடுவதும், கிளிஞ்சலில் நீர் முகந்து வந்து மணலில் கொட்டுவதுமான தனது வேலையை வேகமாகச் செய்து கொண்டிருந்தான். நெடுநேரம் ஆகியும் சித்திரக் குள்ளன் தனது வேலையை நிறுத்தவில்லை.

பேராசிரியரின் பொறுமை எல்லை கடந்து விட்டது. மீண்டும் சித்திரக் குள்ளனை அழைத்தார். அவன் வந்து நின்றதும் "உன்னுடைய வேலை முடிந்து விட்டதா?" என்று கேட்டார்.

"ஐயா! நான் மேற்கொண்டிருக்கும் வேலை எவ்வளவு பெரியது! அதற்குள் முடிந்துவிடுமா?" என்று ஒரு போடு போட்டான் சித்திரக் குள்ளன்.

"தம்பி! நீ சொல்வதும், செய்வதும் எனக்குச் சிறிதும் புரியவில்லை. இந்தக் கிளிஞ்சலில் நீர் முகந்து வந்து மணலில் கொட்டுவதற்கும் ஏழைகளைப் பணக்காரர்களாக்குவதற்கும் என்ன சம்பந்தம்?" என்று கேட்டார் பேராசிரியர்.

"ஐயா! சமுத்திரத்துக்குக் கடல் என்பதைப் போலவே வேறொரு பெயரும் உண்டு தெரியுமா?" என்று கேட்டான் சித்திரக்குள்ளன்.

"ஆம் தம்பி! ரத்னாகரம் என்ற பெயரும் சமுத்திரத்துக்கு உண்டு" என்று பதில் சொன்னார் பேராசிரியர்.

"முத்து, பவளம், வலம்புரி, நவரத்தினங்கள் முதலிய விலையுயர்ந்த பொருள்கள் எல்லாம் இந்தக் கடலில் இருக்கின்றன. கடல் நீரைக் கிளிஞ்சலில் முகந்து வந்து மணலில் கொட்டிவிட்டால் கடல் நீர் வற்றி விடும். கடல் வற்றிய பிறகு அதிலுள்ள முத்து, பவளம், வலம்புரி, நவரத்தினம் முதலிய எல்லாவற்றையும் எடுத்து ஏழைகள் அத்தனை பேருக்கும் கொடுத்தால் பணக்காரர் ஆகிவிடுவர் அல்லவா? அதற்காகத்தான் இப்பொழுது கிளிஞ்சலில் நீரை முகந்து வந்து மணலில் கொட்டுகிறேன்" என்று பதில் கூறினான் சித்திரக்குள்ளன்.

சித்திரக்குள்ளன் கூறிய பதிலைக் கேட்டதும், சிரிப்பை அடக்க முடியா

மல் நெடு நேரம் வாய் விட்டுச் சிரித்தார் பேராசிரியர்.

''அது சரி ஐயா! நீங்கள் ஏதோ ஆழ்ந்த யோசனையில் இருந்தீர்களே! எதைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருந்தீர்கள்?'' என்று கேட்டான் சித்திரக்குள்ளன்.

''நான் கடவுளைப் பற்றி ஆராய்ச்சி செய்து கொண்டிருந்தேன்'' என்ருர் பேராசிரியர்.

இந்தப் பதிலைக் கேட்ட சித்திரக்குள்ளன் அவர் சற்று முன் சிரித்ததைவிட அதிகமாகவே 'கலகல'வெனப் பலமாக நகைக்கலானுன்.

''ஏன் சிரிக்கிருய்?'' என்று கேட்டார் பேராசிரியர்.

''அதுவா? சின்னக் கிளிஞ்சலில் தண்ணீர் முகந்து வந்து மணலில் கொட்டினுல் கடல் வற்றிவிடுமா என்று நினைக்கிறீர்கள், நீங்கள் கடவுளைப் பற்றிச் செய்யும் ஆராய்ச்சியும் அது போன்றது தான். தங்களுடைய சிறிய அறிவினுல் கடவுளையும் அவரது அனந்த கலியாண குணங்களையும் அளவுகட்டி விட முடியுமா? கடவுளை ஆராயும் உங்கள் வேலை முடிவதற்குள் நான் என் வேலையை முடித்து விடுவேன்'' என்று பதில் சொன்னுன் சித்திரக்குள்ளன்.

இந்த உண்மையைச் சிங்கமுகாசுரன் சூரபன்மனுக்குச் சொல்கிறுன். ஆண்டவனின் உருவம் என்ன?

'' ஞானந்தான் உருவாகிய
நாயகன் இயல்பை
யானும் நீயுமாய் இசைத்தும்
என்ருல் அஃதெளிதோ
மோனந் தீர்கலா முனிவருந்
தேற்றிலர் முழுவதும்
தானுங் காண்கிலன் இன்னமுந்
தன்பெருந் தலைமை

''ஞானமே வடிவமாக இருக்கிற எம்பெருமான் திருமேனியின் தன்மையை நீயும் நானும் சொல்வதென்ருல் அஃது எளிதோ? பரம மௌனிகளாக இருக்கின்ற ஞானிகளுக்கே அவர் பெருமை தெரியாதே!

''முருகப் பெருமானுக்குத் தன் பெருமை தெரியாமலில்லை. அவர் சர்வக்ஞர். சிலரிடம் அளவுக்குமேல் செல்வமிருந்தால் எவ்வளவு இருக்கிறது என்று தெரியாது. அது போலத்தான் முருகனுக்கும்.

''அண்ணு! தத்துவங்களை யெல்லாம் கடந்து தனி முதல்வனுயிருக்கின்ற முருகப் பெருமானைப் பாலன் என்று இகழ்ந்து பேசுகிருயல்லவா? உனக்குத் தன் பேராற்றலை உணர்த்துவான் வேண்டியே அவர் போர்க் களத்தில் வந்திருக்கிருர். பிறப்பவர் இறப்பது நிச்சயம். வச்சிர சரீரம் பெற்றுவிட்டோம் என்றும், ஆதலால் அழிவு இல்லை என்றும் எண்ணி விடவேண்டாம். தேவர்களையெல்லாம் சிறையிலிருந்து விடு



செய்து அழியாமலிருக்க வழி தேடுங்கள்'' என்று சிங்கமுகாசுரன் கூறினன்.

''ஊன வில்லே யொடித்துக் கூனியின் சூழ்ச்சியினுல் அரசை இழந்து ஒட்டை மரத்தில் அம்பு விடுத்து, நான் இழைத்த சூழ்ச்சியினுல் மனைவியை இழந்து, உயிரைச் சுமந்து நிற்கும் மானுடனையா நீ பரம்பொருள் என்று கூறு கின்ருய்?'' என்று விபீஷணரைப் பார்த்துக் கேட்டான் இராவணன்.

அது போலவே, இங்கே சூரபன்மன் முருகனைப் பற்றிப் பேசிப் பாலன் என்று பழித்துப் பேசலானுன்.

" காற்றில் தள்ளுண்டு, நெருப்பினில்
சூடுண்டு, கங்கை
ஆற்றில் தாக்குண்டு, சரவணம்
புக்கு அலைப்புண்டு
வேற்றுப் பேர் முலை யுண்டு
அழுதே விளையாடும்
நேற்றைப் பாலனையோ
பரம்பொருளென நினைந்தாய்?''

''காற்றினுல் தள்ளப்பட்டும், நெருப்பினுல் கொளுத்தப்பட்டும், கங்கை நதியில் அலைக்கழிக்கப்பட்டும், சரவணப் பொய்கை அலைகளால் மோதப்பெற்றும், தாய் அல்லாத வேற்றுப் பெண்களிடம் ஸ்தன்ய பானம் செய்தும் அழுது விளையாடும் பாலனையா பரம்பொருள் என்ருய்? நான் பெரியவன்; வரங்கள் பல பெற்றவன். ஆகவே, அந்தச் சிறுவனை வென்று நான் வெற்றி வாகை சூடுவேன். அசுரர் குலத்தில் பல பேரை அழித்தார்கள். நம் குலத்தை அழித்த தேவர்களைச் சிறை வைத்தது குற்றமன்று. குற்றம் செய்தவர்களைத் தண்டிப்பது நியாயமே என்று மனுநூல் கூறுகிறது. ஆகவே ஒரு போதும் நான் தேவர்களைச் சிறையினின்றும் விடுவிக்க மாட்டேன். அது மட்டுமல்ல; எனக்குப் பயந்து ஓடி ஒளிந்து கொண்டிருக்கும் இந்திரனையும் பிடித்துக் கொண்டு வந்து சிறையில் வைப்பேன். என்னை எதிர்த்துச் சிவபெருமானே வந்து போர் செய்தாலும் பயப்பட மாட்டேன். நீ எனக்கு உடன் பிறந்தவனுயிருந்தும் வானவர்களுக்குப் பரிந்து பேசுகின்ருயே! உடன் பிறந்தே எனக்கு வெடி வைக்க முற்படும் உன்னைவிட எனக்கு வேறு பகையும் வேண்டுமோ? பூமிக்குப் பாரமாகவா நீ ஆயிரம் சிம்மத் தலைகளையும் இரண்டாயிரம் தோள்களையும் சுமந்து கொண்டிருக்கிருய்? உன்னுடைய வலிமையும் வீரமும் எங்கே போய்விட்டது? உன்னுல் அசுரர்களின் புகழ் மங்கிவிட்டது. நீ உயிருடன் இருப்பதும் ஒன்றுதான்; இறப்பதும் ஒன்றுதான். நான் போகிறேன் போருக்கு. நீ உன் நகரம் சென்று உடம்பில் ஒரு புண்ணும் படாமல் சௌக்கியமாக இரு'' என்று கர்ஜித்தான் சூரபன்மன். **(தொடரும்)**

ஒருவனது வெளித் தோற்றத்தைக் கண்டு மட்டும் ஆசாமி எப்படிப்பட்டவன் என்று மதிப்பு போட்டு விடக் கூடாது என்பார்கள். ஒருவன் அணிந்திருக்கும் ஆடை அணிகளிலிருந்தே அவன் எத்தகையவன் என்று எடை போட்டு விடலாம் என்றும் கூறுவார்கள். ஆகக்கூடி பகட்டாக இல்லை என்றாலும் பார்ப்பதற்குப் பளிச்சென்று விளங்குவது குறிப்பாகப் பட்டண வாசத்துக்கு இன்றியமையாததாகிறது.

படத்தில் கல்பனா அணிந்திருக்கும் சட்டை கசங்காத தன்மை பெற்ற காலிகோத் துணியினாலானது. சட்டையில் காணப்படும் "டிசைன்"கள் தற்கால நாகரிகத்துக்கு ஏற்ப அமைந்தவை என்பதோடு மேனாட்டிலிருந்து தருவிக்கப்பட்ட உயர்தர நூல்களால் போடப்பட்டவையாம். ஸ்பரிசத்துக்கு இந்தப் பகுதிகள் ஓரளவு ஸாடினின் தன்மை கொண்டிருக்கின்றன.

நல்ல துணியைத் தேர்ந்தெடுப்பதுடன் அதனை நவீன பாணியில் வெட்டித் தைப்பதிலும் அக்கறை செலுத்த வேண்டும். காலரின் அமைப்பைக் குறிப்பாகக் கவனிக்கவும். சட்டையின் கைகள் சற்று இறுக்கமாகவும் தூக்கலாகவும் உள்ளதைக்



# இன்றைய நாகரிகம்



காலணிகள்: பம்பாய் ஜே. ஜே. அண்ட் சன்ஸ் தயாரிப்பு.
சட்டை தயாரிப்பு: குத்தூஸ், 2/80 பிராட்வே, சென்னை-1
பேண்ட்: பேஷன் ஹோம், வாலஸ் ரோடு, சென்னை-8
போட்டோ: ஸ்டில்லோகிராப் ஸ்டுடியோ, சென்னை17




# இன்பமான கனவுகள் உட்வர்ட்ஸுக்கு நன்றி!

மந்தம், புளிப்பு, உப்புசம் மற்றும் பல்முளைக்கும்போதுள்ள உபாதைகளிலிருந்து உடனடி நிவாரணம்பெற உட்வர்ட்ஸ் கிரைப் வாட்டர் உபயோகியுங்கள்.

**இது 100 வருடங்களாக புத்திசாலிகளான தாய்மார்களால் உபயோகிக்கப் பட்டு வருகிறது**

'dyfi ATC-308 TAMA



# கந்தன் கருணை

## 37. மூண்டதே போர்!

இராமரை மானுடன் என்றான் இராவணன். கிருஷ்ணரை இடையன் என்றான் துரியோதனன். இதேபோல் முருகனைப் பாலன் என்றான் சூரபன்மன்.

உண்மை என்னவெனில் கடவுள் பாலனாக வந் கடவுள் மானிடனாக வந்தார்; கடவுள் யாத வந்தார். கடவுளைக் கல் என்கிறார்கள் சிலர்; கல்லுக்குள்ளும் விளங்குகிறார்.

சிங்கமுகாசுரன் எவ்வளவோ சொல்லியும் முருகனைச் சிறு குழந்தையாகத்தான் காண முடி தேவர்களைச் சிறையிலிருந்து விடுவிக்க முடியாது பிடிவாதமாகக் கூறி விட்டான்.

சிங்கமுகாசுரனுக்குத் தாபம் பொங்கியது. " நல்லதைச் சொன்னேன். கேட்காமல் இகழ்ந்துவிட்டார் தமையனார். பின்னால் என்ன என்பதை அவர் அறிந்து கொள்ளவில்லை. விதியின் செயல். விதியை வெல்ல யாரால் சிவபெருமான் அண்ணனுக்குத் தந்தருளிய கால முடிந்து மறைய வேண்டிய தருணம் நெருங் போலும்'' என்று மனத்துக்குள் எண்ணினான். உள்ளத்தில் சகோதர வாஞ்சை பெருக்கெடுத்




'அண்ணன் தன்னை எவ்வளவு கடிந்து கொண்டாலும் அவனைக் கைவிட லாகாது. அவர் இறப்பதற்கு முன்பே தான் இறப்பது முறை' என்று முடிவு செய்து கொண்டான். சூரபன்மனை நோக்கி, ''அண்ணா! நான் தவறு ஏதும் செய்திருந்தால் மன்னித்து விடுங்கள். நான் போருக்குச் செல்கிறேன். போரில் பகைவர்களைக் கொன்று வெற்றியுடன் மீளுவேன். எனக்கு விடை தாருங்கள்'' என்று கூறினான்.

பொது தருமமும், குடும்ப தருமமும் ஒன்றோடொன்று உரசுவதுண்டு. இவற்றில் விபீஷணன் ஒரு விதமும் கும்பகர்ணன் ஒரு விதமும் முடிவெடுத்தனர். சிங்கமுகாசுரன் கும்பகர்ணனைப் போலவே முடிவெடுத்தான்.

தம்பியின் சொற்களைக் கேட்டு சூரபன்மன் அளவிலா ஆனந்தமடைந்தான். ''தம்பி! உன் வல்லமை எனக்குத் தெரியும். என் நெஞ்சுறுதியைச் சோதிக்கத்தான் முன்பு ஏதேதோ பேசினாய் போலும்! நீ உன் ஊருக்குச் செல். அங்கு படைகளையெல்லாம் திரட்டிக்கொண்டு தயாராக இரு. போருக்கு நான் அழைக்கும்பொழுது வரலாம்'' என்று கூறினான். அதன்படியே சிங்கமுகாசுரன் தனது நகரமாகிய ஆசுரத்துக்குச் சென்றுவிட்டான்.

**யு**த்தம் தொடங்கிவிட்டது. தர்மத்துக்கும் அதர்மத்துக்கும் நடக்கும் யுத்தம் இது. யுத்தத்தில் தர்மம்தானே வெல்லும்? உலகம் தோன்றிய நாள் தொட்டு அதர்மம் ஒரு நாளும் வென்றதில்லை.

இராமாயண யுத்தம் ஆசைக்கும் நிராசைக்கும் நடந்த யுத்தம். இராவணன் ஆசை பற்றித்தானே போர் செய்தான்? இராமச்சந்திரமூர்த்திக்கு நிராசை. ராஜ்யபாரம் செய்ய வேண்டும் என்ற ஆசை இல்லை; பொன்னாசை இல்லை; பெண்ணாசை இல்லை. நிராசை

உள்ளவர்தான் கடவுள். ஆசையற்ற வர்களுக்குத்தான் நிம்மதி இருக்கும்.

**அவாஇல்லார்க்கு இல்லாகும் துன்பம்**
**அஃதுண்டேல்**
**தவா அது மேன்மேல் வரும்**

என்பார் திருவள்ளுவர். அவர் அழ காகச் சொல்லிவிட்டார். தன்னைவிடக் கீழான நிலையில் உள்ளவர்களைக் கண்டு ஒருவன் தான் பெற்றுள்ள மேல் நிலைக் காக மகிழ்ச்சி யடைய வேண்டும். அப் போதுதான் மனத்தில் சாந்தி ஏற்படும் என்று குமரகுருபரரும் சொல்லுகின்றார்.

**தம்மின் மெலியாரை நோக்கித்**
**தமதுடைமை**
**அம்மா பெரிதென் றகமகிழ்க !**

இராவணனுக்கு இலட்சம் மனைவிகள். அப்படியிருக்க இன்னொருவன் மனைவியை அபகரித்துச் சென்றான். அதனால் அவ னுடைய புதல்வர்கள் அழிந்தார்கள். நாடு அழிந்தது. பிரஜைகள் அழிந்த னர். இறுதியில் அவனும் அழிந்து விட்டான். இராவணன் ஆசையினால் அழிந்தான். ஆசைக்கு அடிமையாகின் றவன் அழிவையே அடைவான். பிறர் பொருளை விரும்பினான் துரியோதனன். அதனால் அவன் அழிந்தான்.

சூரபன்மன் அறநெறியை விட்டு விட்டு அதர்மத்தைக் கடைப்பிடித் தான். அதனால் அழியப் போகிறான்.



கதிரவன் உதயகிரியினை அடைந் தான். திருச்செந்தூரில் , எழுந்தருளி யிருந்த கந்தக் கடவுள் வீரவாகு தேவரை நோக்கி, ''பழிக்கு அஞ்சாது பாவங்களைப் புரியும் சூரபன்மனையும் சூது நிறைந்த அசுரர்களையும் அழித்து தேவர்கள் துயர் நீக்குவதற்காக வீர மகேந்திரபுரி செல்ல வேண்டும். நம் தேரைக் கொண்டுவா'' என்று கட்டளை யிட்டார். தங்கள் துயரெல்லாம் நீங்கி யது என்று கருதிய தேவர்கள் கந்தப் பெருமானின் கழலினை வணங்கித் துதித்தனர்.

கந்தப் பெருமானின் கட்டளைப்படி வீரவாகு தேவர் மனோவேகத் தேரைக் கொண்டுவந்து எம்பெருமானின் திரு முன்னர் நிறுத்தினர். சிங்காதனத்தி லிருந்து இறங்கிய எம்பெருமான், ''நாம் சூரபன்மனை அழிக்க வீரமகேந் திரபுரி செல்கிறோம். நீங்களும் அவ ரவரது வாகனங்களில் நம்முடன் புறப் பட்டு வாருங்கள்'' என்று தேவர்களுக்கு உத்தரவிட்டார்.

பிரமதேவர் அன்னப் பறவைமீது திருமால் கருடன் மீதும், இந்திரனு மற்றைய தேவர்கள் தத்தம் வா னங்கள்மீதும் ஏறிக் கந்தவேளைச் சூழ்ந் கொண்டார்கள். நினைத்த மாத்திரத் லேயே எல்லாப் புவனங்களையு அழிக்கும் ஆற்றல் பெற்ற படை தலைவர்கள் நூற்றெட்டுப் பேரு தொடர்ந்தார்கள். அதனை அடுத் இரண்டாயிரம் பூதப் படைகளும் ஆ வாரத்துடன் புறப்பட்டன. வா வர்கள் பூமழை பொழிந்தார்கள்.

முருகப் பெருமானுடன் சென் பூதப் படைகளின் பேரொலி எங்கு ஒலித்தது. அவர்கள் சென்றபோது ஏ பட்ட புழுதி சூரிய சந்திரர்களுடை ஒளியையும் மறைத்து விட்டதாம். கட லில் பூத சேனைகள் இறங்கினர்கள் அவர்களுக்குக் கடலே கணுக்கால் அள தான் இருந்தது. கடலில் இருந்த பெ பெரிய மீன்களும் திமிங்கிலங்களும் சி புழுக்களைப் போன்றிருந்தன. பூத படை இறங்கிக் கடலைக் கலக்கியதா அது சேறாகியது. அந்தச் சேறு உலர்ந் பின் புழுதியாக எங்கும் பறந்தது.

வீரமகேந்திரபுரி தென்கடலில் உள் தொரு தீவு. வடக்கே உள்ள தீ இலங்கை. அந்த வழியாக எம்பெ மான் சென்றபோது, பிரமன், திருமா இந்திரன் ஆகிய மூவரும் சுவாமியை வணங்கி, ''மகா பாவியாக உள்ள சூ பன்மன் இருக்கும் மகேந்திரபுரி தங் திருப்பாதம் பதியத் தகுதி பெற் தல்ல. அந்நகருக்கு அடுத்த எல் யாகிய இங்கேயே தங்கியிருந்து போ செய்வதற்குப் பாசறை அமைத் கொள்ளலாம்'' என்று வேண்டி கொண்டார்கள். சுவாமி அந்த வேண் கோளை ஏற்றுக் கொண்டார். தே தச்சனை அழைத்து, ''உடனே விரைந் இங்கு ஒரு பாசறை ஏற்படுத்து'' என் எம்பெருமான் ஆணையிட்டார். அ ஆணையின் வண்ணம் தேவதச்சன் ஒ பாசறையை அமைத்தான். அத ஏமகூடம் என்று பெயரிடப்பட்டது.

எம்பெருமானின் தேர் கீழே இற கியது. சுவாமி ஏமகூடத்தின் வீதிகள் பூத சேனைகளை நிறுத்தினர். இலக்க தொன்பது வீரர்களோடு திருக்கோயி னுள் சென்று அரியணையில் அமர்ந்தா ஏமகூடம்தான் கதிர்காமம். கதிர்கா என்றால் ஒளி மயமான விருப்பத் யெல்லாம் நிறைவேற்றித் தருவ என்று பொருள். அங்கே சுவாமி ஒ மயமாக விளங்குகின்றார். பே கோலத்துடன் இருக்கிறார். எவ அவரைத் தரிசிக்கக் கூடாது என்

...ர போடப்பட்டுள்ளது. அங்கே ...ன கற்பூர தீப ஒளியைத் தரி...ம் செய்ய வேண்டும். கதிர்காமத்து ..., காமக் குரோத உணர்ச்சிகளை ...பிடித்தாது. கதிர்காமத்தைப் பற்றி ...ணகிரி நாதர் பாடுகின்றூர்.

...ருவுமடி யார்கள் மனதில் விளையாடு
மரகத மயூரப் பெருமாள்காண்
...மணிதரளம் வீசி யணியருவி சூழ
மருவுகதிர் காமப் பெருமாள்காண்

...ருகப் பெருமான் கதிர்காமத்தில் ...து தங்கிவிட்டார். சூரபன்மன், ...ருக்கு வர வேண்டாமா?

நாரதர் தேவரிஷி. அவர் ககன ...ர்க்கமாகச் சஞ்சரித்துக் கொண்டிருந்...ர். மெத்தப் படித்த அவரைப் ...ன்ற ஞானியோ தவசியோ இன்...ருவர் கிடையாது. நாரதரின் மகி...களை நிறைய எடுத்துச் சொல்கிறூர் ...ாசர். அவரை ஏனைய மக்கள் கலகக்...ரர் என்று எண்ணிக் கொண்டிருக்கி...ர்கள். அப்படி நினைக்கச் செய்தவர்கள் ...டகக்காரர்கள். நாடகக்காரர்கள் ...கள் நாடகங்களில் சுவையுள்ள பாத்...ம் வேண்டுமென்பதற்காக ஒரு நார...ரைப் படைத்து அவரைக் கலகம் புரிய ...வைக்கின்றனர். இதனுலேயே மக்கள் ...வரைக் கலகக்காரர் என்று எண்ணிக் ...கொண்டிருக்கிறூர்கள். நாரதர் கலகக்...காரராயிருந்தால், "ரிஷிகளில் நான் ...ரதரா யிருப்பேன்" என்று பகவான் ...தையில் சொல்லுவாரா? திருப்பரங்...ன்றத்தில் முருகப் பெருமானுக்கு ஒரு ...க்கத்தில் தெய்வ யானையை நிறுத்தி...ருக்கிறூர்கள். மற்ருெரு புறத்தில் ...ரக்ஷாத் நாரதப் பிரம்மம் இருக்கிறூர். ...ரதர் கலகக்காரராயிருந்தால் எம் ...பருமான் தம் பக்கத்தில் வைத்துக் ...கொண்டிருப்பாரா?

...பரதனைப் பார்த்த குகன், "அடி, ...தை, குத்து, கொல்லு" என்று கத்தி...ன். பரதன் மிகவும் நல்லவன். ஆனுல் ...குகனுக்கு அவனைப் பற்றித் தெரியாது. ...யோக்கிய சகோதரன் அண்ணனைத் துரத்திக் கொண்டு வருகிறுன் என்று எண்ணினுன் குகன்.

குகன் பரமயோக்கியன். அவசரக்கார ஞன இலட்சுமணன் அவனுக்கு விஷ ஊசி ஏற்றிவிட்டான். அதனுல்தான் குகன் விஷம் கக்கினுன். அதுபோலவே சில நாடகக்காரர்கள் நாரதரைப் பற்றி மக்களுக்கு விஷ ஊசி ஏற்றிவிட்டார்கள்.

"ஐயையோ! கொலை!" என்று கத்தினுன் கிராமத்தான். சப்தம் கேட்டுப் போலீசார் ஓடி வந்தார்கள். உள்ளே போய்ப் பார்த்தார்கள். டாக்டர் 'ஆபரேஷன்' செய்து கொண்டிருந்தார். கிராமத்தான் எதைக் கொலை என்று சொல்கிறுனே அந்த 'ஆபரேஷ'னைச் செய்துகொள்ள ஆயிரக் கணக்கில் பணம் கொடுக்கிறூர்கள். ஆகவே, அறுப்பதற்குக் கொலை என்று பெயருண்டு; ஆபரேஷன் என்ற பெயரும் உண்டு. நாரத முனிவர் செய்தது 'ஆபரேஷ'னே யன்றிக் கொலை அல்ல. பிரச்னைகள் விரைவில் முடிய வேண்டுமென்பதற்காகவே அங்குமிங்குமாக ஓடி ஓடிப் புதிய நடவடிக்கைகளைத் தொடங்கி வைப்பார் அவர்!

சிலமு லாவிய நாரதர் வந்துற்
றீதவள் வாழ்புன மாமென முந்தித்
தேமொழி பாளித கோமள இன்பக்
கிரிதோய்வாய்

சேலொடு வாளைவ ராலிகள் கிளம்பித்
தாறுகொள் பூகமளாவிய இன்பச்
சிரலை வாய்நகர் மேவிய கந்தப்
பெருமாளே!

இது அருணகிரிநாதர் வாக்கு. காவிரிப் பெருக்கு போல் வருகிறது. கந்தவேள் ஏமகூடத்தில் எழுந்தருளி யிருந்ததை உணர்ந்த நாரதர் ஆயிரம் தந்தியை யுடைய மகதி வீணையை மீட்டிக் கொண்டு சூரனின் தலைநகரான வீர மகேந்திரபுரிக்குச் சென்றூர்.

"நாரதரே! வாரும்!" என்று வரவேற்றூன் சூரபன்மன். "எங்கே வந்தீர்?" என்று விசாரித்தான்.

நாரதர் எல்லோருக்கும் நல்லவர்.

''சூரபன்மா! உன்னைப்போல் இன்னொருவர் உண்டா என்று உலகமெல்லாம் வர வர அதிகமாகவே பேசிக் கொள்கிறது'' என்றார் நாரதர்.

நாரதரின் பேச்சுக்கு இரண்டு பொருள். 'உன்னால் முடியாத காரியம் என்ன இருக்கிறது?' என்றும், 'நீ எதையும் கூசாமல் செய்வாய்' என்றும் இரண்டு பொருளில் சொன்னார் நாரதர்.

சூரபன்மன் தற்பெருமையுடன் தனக்குள் சிரித்துக் கொண்டான். நாரதர் தமது பேச்சைத் தொடர்ந்தார்.

''மகா யோக்கியர்கள் மாதிரி நடந்து கொள்ளும் தேவர்கள், கைலாயம் சென்று உன்னைப் பற்றி சிவபெருமானிடம் முறையிட்டார்கள். அவர்கள் தான் முறையிட்டுக் கொண்டாலும் இந்தச் சிவபெருமான் அவர்களின் பேச்சைக் கேட்டு நெற்றிக் கண்ணைத் திறக்கலாமா? நெற்றிக் கண்ணைத் திறந்ததனால்தானே ஆறு குழந்தைகள் உதித்துக் கந்தன் என்னும் குமாரன் வந்தான்? ஆனால் ஒன்றை மட்டும் நீ சிந்திக்க வேண்டும். ஆகாய அளவுக்கு அடுக்கி வைக்கப்பட்டுள்ள பஞ்சை எரிக்க ஏராளமான தீவர்த்திகளா வேண்டும்? நீ மகா பலசாலி. எத்தனை எதிர்ப்பையும் எரிக்கக்கூடிய ஒரு தீவர்த்தி நீ. உன்னிடம் எதிர்ப்பு ஒன்றும் நடக்காது. அந்தக் கந்தனின் ஆட்கள் உன் தம்பி தாரகன் ஏமாந்திருந்த சமயம் பார்த்து அவனைக் கொன்றிருப்பார்கள். உன்னிடம் வாலாட்ட முடியுமா? அந்தக் குழந்தை கதிர்காமத்துக்கு வந்துவிட்டதாம். நீ இப்பொழுதே புறப்பட்டுப் போருக்குப் போகவில்லையென்றால் உனக்குத்தான் கெட்ட பெயர்'' என்று கூறிய நாரதர், மீண்டும் இரு பொருளில் குறும்புடன் பேசினார்: ''நீ போனால் எல்லாம் முடிந்துவிடும். உன்னைப் பற்றியேதான் நான் எப்பொழுதும் சிந்தித்துக்கொண்டிருக்கிறேன். அதனால் தான் இதைச் சொல்ல வந்தேன்'' என்று கூறினார்.

நாரதர் கூறியதைக் கேட்ட சூரபன்மனின் கண்கள் அனலைக் கக்கின. ''அந்தச் சிறுவன் மகேந்திரபுரியை இந்திரலோகம், பிரம்ம லோகம், விஷ்ணு லோகம் போல் சர்வ சாதாரணமாக எண்ணிக் கொண்டிருக்கிறான் போலும். ஆயிரத்தெட்டு அண்டங்களை ஆட்சி செய்பவன் நான். என் ஆணையை மதியாமல் கடலைத் தாண்டி வந்த அந்தச் சிறுவனை இப்பொழுதே ஒழித்துக் கட்டுகிறேன். இதற்கு நானே போகவேண்டிய அவசியமில்லை. என் புதல்வன் பானுகோபனை அனுப்புகிறேன். உமது கண்களாலே வெற்றியுடன் திரும்புவதைக் காணலாம்'' என்று கூறினான்.

''சூரபன்மா! இதுதான் அழிவுக்கு வழி! இனியும் தாமதம் செய்யாமல் அக் குமாரனோடு போர் செய்ய உடனே படைகளை அனுப்பு. வெற்றி கிடைக்க வேண்டும் என்று நான் போய்த் தவம் செய்கிறேன்'' என்று கூறிவிட்டு கைலாய மார்க்கத்தில் புறப்பட்டு விட்டார் நாரதர். யாருடைய அழிவையும் யாருடைய வெற்றியையும் அவர் மனத்தில் கொண்டிருந்தார் என்பதைச் சூர... புரிந்துகொள்ள முடியுமா?

தனது அருகில் நின்ற ஒற்றர்களை அழைத்துச் சூரபன்மன், ''வருணனை விரைவில் கொண்டு வாருங்கள்'' என்று உத்தரவிட்டான். அவ்வாறே வருணன் அழைத்து வரப்பட்டான். ''வருணனே! அந்தக் குமாரனும் பூத சேனைகளும் கடலைக் கடந்து இங்கு வர ஏன் அனுமதித்தாய்?'' என்று கோபத்துடன் கேட்டான் சூரபன்மன்.

''மன்னர் மன்னவா! திருமால், பிரமன், இந்திரன், இலக்கத்தொன்பது வீரர்கள் ஆகியோருடன் சிவகுமாரன் விண் வழியே சென்றார். எனினும் அவர்களை நான் தடுக்க முடியவில்லை. பூத சேனைகள்தான் என்மீது நடந்து சென்றனர். அப்போது கடல் அவர்களது கணுக்கால் வரை கூட எட்டவில்லை. ஆகவே அவர்களைத் தடுத்து நிறுத்த முடியாமல் போய்விட்டது. அவர்களை நான் எதிர்த்திருந்தால் முன்பு அகத்தியர் செய்தாற் போல் என்னைக் கையால் அள்ளிக் குடித்தது போல் செய்திருப்பார்கள்'' என்று நடுங்கிக் கொண்டே கூறினான் வருணன்.

இதற்குள் முருகக் கடவுள் மகேந்திரபுரியை நெருங்கி விட்டார். இதனைக் கண்ட ஒற்றர்கள் சூரபன்மனிடம் ஓடி வந்தார்கள். ''அரசே! திருமால், பிரம்மன், இந்திரன் முதலிய தேவர்களுடனும், இலக்கத்தொன்பது வீரர்களுடனும், இரண்டாயிரம் வெள்ளம் பூதசேனைகளுடனும் சிவகுமாரன் மகேந்திரபுரியின் வடதிசையில் வந்து பாடி வீடு அமைத்துத் தங்கியிருக்கிறார்'' என்று கூறினார்கள்.

சூரபன்மன் துடிதுடிப்புடன், ''ஒற்றர்களே! நீங்கள் போய்ப் பானுகோபனை விரைந்து அழைத்து வாருங்கள்'' என்று கட்டளையிட்டான்.

''உத்தரவு'' என்று கூறிப் புறப்பட்ட ஒற்றர்கள், பானுகோபன் அரண்மனையை அடைந்து சூரனின் ஆணையைத் தெரிவித்தார்கள்.

(தொடரும்)

# கந்தன் கருணை

திருமுருக
கிருபானந்தவாரியார்

## 38. ஆதவன் அஞ்சினன்!

போருக்குத்! துடித்துக கொண்டிருந்த பானுகோ பன் அரியணையை விட்டு அவசரமாக இறங்கினன்; விரைவாகத் தேரில் புறப்பட்டான்.

பானுகோபனின் தேர் சூரபன்மனின் அரண்மனையை அடைந்தது. ''தந்தையே! என்னை அழைத்த காரணம் யாது?'' என்று பானுகோபன் சூரனை வினவினன்.

''மகனே! இலக்கத் தொன்பது வீரர்களுடனும் பூத சேனைகளுடனும் கந்தன் திருச்செந்தூரிலிருந்து நம் நகருக்கு வந்து வடக்கு வாயிலில் பாடி விடமைத்துக் கொண்டு தங்கியிருக்கிறன். நமது வீரமகேந்திரம் இந்த வீரர்களும் பாலனும் வரக் கூடிய நகரமா? நம்மை எதிர்த்து வந்திருக்கும் பகைவர்களோ மிகச் சிறியவர்கள்; நானே அண்டங்களை யெல்லாம் ஆளும் அரசர்க்கரசன். ஆகவே, நீ உன் சேனைகளுடன் சென்று அவர்களை வென்று வா'' என்று சூரபன்மன் உத்தரவிட்டான்.

''போருக்குப் போ'' என்று சூரபன்மன் கூறிய சொல்லைக் கேட்டதும் பானுகோபனின் தோள்கள் பூரித்தன. ''அப்பா ! அந்தச் சிறுவனையும் அவனுடன் வந்திருக்கும் படைகளையும் வென்று வருவது எனக்குப் பெரிய செயல் அன்று. அந்தப் பாலனை எதிர்த்துப் போருக்குச் செல்ல நான் முன்பிருந்தே துடித்திருக்கிறேன். இப்போது என் சேனைகளுடன் சென்று அந்தப் பாலனை வென்று வருவேன்'' என்று கூறி விடைபெற்றுக் கொண்டான்.

பானுகோபன் ஆடை ஆபரண
களைச் சிறப்பாயணிந்து கொண்டான்
வச்சிர கவசம் அணிந்து அம்பறு
தூணியும் பாணங்களும் எடுத்
கொண்டான்; வாட்படையை ம
கில் செருகிக் கொண்டான்; வீரக் கழ
அணிந்து கொண்டான்; நெற்றி
பட்டங் கட்டிக் கொண்டு தும்பை, மா
யணிந்தான்; பாணங்கள் தாக்காம
இருப்பதற்காக உடும்புத் தோல
செய்யப்பட்ட உறைகளைத் தரித்
கொண்டு, பல்வகை ஆயுதங்கள் ஏந்தி
சதுரங்க சேனைகள் சூழ முப்பதி
யிரம் குதிரைகள் பூட்டப்பட்ட
தேரில் ஏறிப் போருக்குப் புறப்பட்டா

சதுரங்க சேனைகளுடன் பா
கோபன் போருக்குப் புறப்பட்டதை
கண்ட நாரத முனிவர் ஏமகூ
பாசறையை அடைந்து முருகக் க
ளின் திருவடிகளை வணங்கி
'' சுவாமி ! தேவரீர் இங்கு எ
தருளியிருப்பதை அறிந்த சூரபன்
தங்களோடு போர் செய்ய அவ
குமாரனுகிய பானுகோபனை அனு
யிருக்கிறன். பானுகோபன் எ
ணற்ற சேனைகளுடன் போர்க் கோ
பூண்டு வருகிறன். அவனைத் தேவரீ
சிவபெருமானுமன்றி வேறு எவ
எதிர்க்க முடியாது. அவன் திருமா
யும், பிரம்மாவையும், இந்திரனை
வென்றவன். மாயங்கள் பல கற்றவ
அவனுக்கு பிரம்மா தமது அஸ்தி
களைக் கொடுத்திருக்கிறர். வருண
பாசத்தையும், இயமனின் சூலத்
யும் கவர்ந்தவன் அவன். ஆகவே
தாங்களே அவனைக் கொல்ல வே
டும்'' என்று வேண்டிக் கொண்டா

நாரத முனிவர் கூறியவற்றை
கேட்ட எம்பெருமான் புன்முறு
செய்தார்.

''வீரவாகு!'' என்று அழைத்தார்.

வீரவாகுதேவர் வந்து முரு
பெருமானின் காலில் விழுந்தார்.

''நம்முடன் போர் செய்ய சூரப
மன் தனது மகனுகிய பானுகோப
அனுப்பியிருக்கிறன். நீ இலக்கம் வீ
களுடனும், உனது எட்டுத் த
களுடனும், ஆயிரம் வெள்ளம்
சேனைகளுடனும் போய் மகேந்திர
யைத் தாக்கிப் பானுகோபனை வெ
வருவாயாக'' என்று ஆணையிட்ட
வீரவாகுதேவர் முருகப் பெருமா
வணங்கி விடைபெற்றுச் சென்றார்.

மேருகிரி போன்ற ஒரு வில்
அம்பறுத் தூணியும் ஏந்தி
தேரில் ஏறிக் கொண்டார் வீரவா
ஆயுதங்கள் நிறைந்த தேர்கள்



அவரைச் சூழ்ந்து கொண்டன. ஆயிரம் வெள்ளம் பூதர்களும் இலக்கத்தெட்டு துணைவர்களும் போர்க்கோலம் புனைந்து சூழ்ந்தனர். வீரவாகுதேவரின் தேர் புறப்பட்டு மகேந்திரபுரியின் மதிற் பக்கத்தே வந்தது. அசுரர்கள் பானுகோபனிடம் ஓடி, வீரவாகுதேவர் போருக்கு வந்துள்ள செய்தியைத் தெரிவித்தார்கள். அதைக் கேட்ட பானுகோபன், கைகொட்டி, ''என்னை எதிர்த்து வந்திருக்கும் வீரர்களை அழிப்பேன்'' என்று ஆரவாரித்துப் போருக்குப் புறப்பட்டான்.

அசுர சேனைகளுக்கும் பூத சேனைகளுக்குமிடையே போர் தொடங்கிற்று. அசுர சேனைகள் அளவற்ற ஆயுதங்களை எறிந்து போர் புரிந்தனர். பூத சேனைகள் மரங்களையும் மலைகளையும் பெயர்த்து வீசி அசுரர்களை மாய்த்தனர். இப்படியாக இரண்டு பக்கங்களிலும் உள்ள சேனைகள் துவந்த யுத்தம் செய்தன. இரு திறத்திலும் பலர் இறந்ததால் உதிரம் கடல்போலப் பெருகியது. பூத சேனைகள் மிகுந்த ஆத்திரங் கொண்டு அசுர சேனைகளுடன் கடுமையாகப் போர் செய்தன. அசுரர்கள் அத்தாக்குதலைத் தாங்கவொணாது சிதறி ஓடினார்கள். அவர்கள் சிதறி ஓடுவதைக் கண்ட அசுரப் படைத் தலைவனான அனலி தன் கையிலிருந்த வில்லை வளைத்து நாணை மீட்டினான். அந்த ஒலியைக் கேட்டுத் தேவர்களும் அஞ்சினர். அவன் தீக்கணைகளால் பூத சேனைகளின் தோள்களைத் துளைத்தான். அனலியின் கடும் போரைக் கண்ட பூதசேனைத் தலைவன் சிங்கன், தன்கையிலிருந்த தண்டினால் அனலியின் தேரில் பூட்டப்பட்டிருந்த குதிரைகளை அடித்துக் கொன்றான். அனலியின் தேரில் பாய்ந்து வதைத்து வில்லைப் பிடுங்கி எறிந்தான் சிங்கன். அனலி தன் கையிலிருந்த தண்டினால் சிங்கனின் தலையில் அடித்தான். சிங்கன் அவனைப் பிடித்துச் சுழற்றித் தரையில் அடித்தான். அவ்வளவில் அனலி இறந்தான்.

அசுர சேனைகளின் மற்றொரு தலைவனான சண்டன் சிங்கனுடன் போருக்கு வந்தான். இறந்த அனலியின் கையிலிருந்த தண்டைப் பறித்துச் சண்டனின் தேரில் பாய்ந்த சிங்கன், அந்தத் தண்டினால் சண்டனின் தோளைத் தாக்கினான். அந்த நிலையில் சண்டன் தன்னுடைய கைத் தண்டினால் சிங்கனின் மார்பில் அடித்தான். இருவரும் பெரு

# சேவைக்கு ஒரு சகோதரி

## ஆகஸ்ட் 15ந் தேதி இதழில் ஆரம்பமாகி

மூச்சு விட்டு மயங்கித் தேரினின்றும் கீழே விழுந்தார்கள்.

அசுர சேனைகளின் இன்னொரு தலைவனான மாயன் என்பவன் சண்டன் மயங்கி விழுந்ததைக் கண்டான். உடனே தேரில் ஏறி அந்த இடத்துக்கு விரைந்தான். அப்போது, பூதசேனைகளின் தலைவனான நீலன் அவனை எதிர்த்துச் சென்று மார்பை நோக்கித் தண்டத்தை எறிந்தான். உடனே நீலன் மீது ஒரு சூலத்தையெறிந்தான் மாயன். அந்தச் சூலம் தாக்கியதால் நீலனின் மார்பிலிருந்து உதிரம் பெருக்கெடுத்தோடியது. சிறிது நேரம் மூர்ச்சித்திருந்த நீலன் அறிவு தெளிந்ததும் மாயனின் மார்பில் ஓங்கி அடித்தான்; அவனது தோள்களைக் கட்டிப் பிடித்துக் கழுத்தில் கடித்தான்; அவனது உடலில் உள்ள குருதியைக் குடித்தான். மாயன் மாண்டான்.

இதற்குள் போர் செய்து மூர்ச்சித்துத் தேரினின்றும் கீழே விழுந்த சண்டனும் சிங்கனும் அறிவு தெளிந்து எழுந்தனர். பழையபடி போர் தொடங்கினர். சிங்கன் தண்டத்தினால் சண்டனை அடித்து அவனது தோளை ஒடித்தான். தன்னுடைய ஒடிந்த தோளையே தண்டாக ஏந்திப் போர் செய்தான் சண்டன். இருவருக்கும் கடுமையாகப் போர் நடந்தது. இறுதியில் சிங்கன் சண்டனைக் கொன்றான்.

சண்டன் இறந்ததைக் கண்டதும் அசுர சேனைத் தலைவர்களில் மற்றொருவனான அசமுகன் ஒரு தேரில் ஏறிச் சிங்கனை நெருங்கினான். அந்த இருவருக்குமிடையே மது என்னும் பூத சேனைத் தலைவன் பாய்ந்தான். அசமுகன் மதுவின் மீது பாணங்களை ஏவினான். அந்தப் பாணங்களைச் சிறிதும் பொருட்படுத்தாத மது அருகிலிருந்த ஆலமரம் ஒன்றைப் பெயர்த்து அதனால் பாணங்களைத் தடுத்துக்கொண்டே அசமுகனின் தேரில் புகுந்தான். அப்போது அசமுகன் கையிலிருந்த வில்லும் பாணங்களும் கீழே நழுவி விழுந்தன. அதனைக் கண்ட மது, ''நீ போருக் ஏற்ற வீரன் அல்ல'' என்று கூறி தேரை விட்டு இறங்கிச் சென்று வி டான். அசமுகனுக்குச் சொல்ல மு யாத வெட்கம் ஏற்பட்டது. ஒருவாறு மனம் தேறிய அவன், மதுவைத் தேடிச் சென்று போருக்கு அழை தான். ''வீரம் இல்லாத உன்னுட போர் செய்வது எனக்கு இழுக்காகும்'' என்று மது கூறினான். அசமுகன் வி வில்லை. மதுவின் மேல் பல பிறைமு கணைகளை விடுத்தான். அப்போதும் ம ஆயுதம் எடுக்காமல் அக் கணைக யெல்லாம் கையால் விலக்கித் தடு தான். உடனே அசமுகன், சூலம், வே முதலியவற்றை மதுவின் மீது எறி தான். அசமுகனின் தேரை எடுத் கடலில் வீசியெறிந்தான் மது. அ முகன் தேரிலிருந்து பாய்ந்து வந் மதுவுடன் மற்போருக்கு வந்தான் மது ஓங்கி ஓர் உதை கொடுத்தான் அசமுகன் ஆகாயத்துக்குப் போ அங்கிருந்து கீழே வந்து விழுந்தான் உடனே எழுந்து மதுவின் மார்பி இடி முழக்கம் போன்று அடித்தான் பின்னர் மாயமாக விண்ணில் மறைந் விஷ்ணுவின் சக்ராயுதத்தை மதுவி மீது விடுத்தான். சக்ராயுதம் தரு ஸ்வரூபம். அது ஒரு காலும் அதரும போர் புரியாது. நிராயுதனாயிருந் மதுவைச் சக்கரப் படை ஒன்றும் செய் வில்லை. அது திரும்பிச் சென்று அசமு னின் தலையையே அறுத்தது. அசமுக இறந்தான்.

அசமுகன் இறந்தபின் எஞ்சியிருந் 'அசுரத் தலைவர்கள் நால்வகைச் சை யங்களுடனும் சென்று பூதப் பன களுடன் கடுமையாகப் போர் செ தார்கள். இதனால் பூத சேனைகள் பு கொடுத்து ஓடின. இலக்கம் வீரர்க ஒருவனான தண்டகன் அசுர சே களின் மீது மழைபோல் பாணங்க விடுத்தான். அந்தப் பாணங்களை

...த்ததலில் அசுரர்களின் நால்வகைச் ...களும் சிக்கி அழிந்தன. உதிரம் ...ஆறு போல் ஓடியது. உயிர் ...த்த அசுரர்கள் 'பிழைத்தால் ...தும்' என்று திசை தெரிந்த ...ம் சிதறியோடினுர்கள்.

அசுர சேனைகள் சிதறி ஓடுவதைக் ...டான் பானுகோபன். 'போரில் ...ன முன்னணிக்குச் செல்லாமல் ...வியங்களை மட்டும் முன்னுல் ...னுப்பியதால்தான் இந்த நிலை ஏற் ...டது. சரி! நடந்ததை நினைத்துப் ...யனில்லை. இனி ஆக வேண்டியதைக் ...விக்க வேண்டும்' என்று எண்ணிய ...வீரனுகிய பானுகோபன் தானே ...ருக்குச் செல்வதென்று முடிவு ...ய்து பூத சேனைகளுக்கிடையே புகுந் ...ன். தனது வில்லை வளைத்துக் ...க்கற்ற பாணங்களைப் பூதர்கள் ...ஏவினுன். பூத வீரர்கள் மலைகளைப் ...யர்த்து பானுகோபன் மீது எறிந்த ... அந்த மலைகளை யெல்லாம் ...ணங்களினுல் தகர்த்தான் பானு ...பன். ஆயிரங் கோடிப் பாணங்களைப் ... சேனைகளின் மீது விடுத்தான். அத ... பூத சேனையைச் சேர்ந்த வீரர்கள் ...ர் இறந்தனர். உயிர் தப்பியவர்கள் ...ரவாகுதேவரிடம் ஓடினுர்கள்.

பூத வீரர்கள் சிதறி ஓடியதைக் ...ண்ட பூதப் படைத் தலைவன் உக்கிரன் ...ரவாரத்துடன் ஒரு தண்டாயு ...த்தை எடுத்துக்கொண்டு போய் பானு ...பனை எதிர்த்துப் போரிட்டான். ...னுகோபன் பெரிய வில்லாளி.

மைக்கின்ற மேனி நெடும்பூதனை
 வஞ்சன் வாளி
தைக்கின்றில வானுதி மாய்ந்து
 தளர்ந்து வீழ்ந்த
மொய்க்கின்ற இன்பும் அறனும்
 வினையாது வாளா
பொய்க்கின்ற வன்கைப் பொருள்
 வல்லையில் போவதேபோல்

ஆயிரமாயிரம் பாணங்களை விடுத்தான் பானுகோபன். எடுக்கும் போது ஆயிரம், தொடுக்கும் போது இலட்சம், விடுக்கும் போது கோடியென்று பாணங்களைப் போட்டான். உக்கிரனிடம் வில்லே கிடையாது. அவன் தனது தோளை உலுக்கி விட்டான். 'மைக்கின்ற மேனி' என்று பாட்டு கூறுவதற்கு 'கரிய மேனி' என்று பொருள். பானுகோபன் விடுத்த பாணங்களில் ஒன்றுவது கரிய மேனியை உடைய உக்கிரனின் உடலைத் துளைக்கவில்லை. பானுகோபன் விடுத்த எல்லாப் பாணங்களும் அவனது உடலில் பட்டுக் கூர் மழுங்கி உதிர்ந்து விழுந்தன. பொய்யே பேசுகின்றவன் கையில் ஒரு காலத்தில் பொருள் சேர்க்கின்ற மாதிரி இருக்கும்; ஆனுல் நிற்காது. எந்த வழியாகப் போயிற்று என்றே தெரியாமல் அது மறைந்து விடும். கடையர்களிடம் உள்ள பொருள் அறத்திற்கு உதவாது. அந்தப் பொருள் செல்லும் வழி கூடத் தெரியாமல் போகின்ற மாதிரி பானுகோபன் விடுத்த பாணங்கள் என்னவாயின என்றே அறியாதபடி அழிந்து விட்டனவாம்.

பானுகோபனுக்கும் உக்கிரனுக்கும் கடுமையாகப் போர் நடந்தது. பானுகோபனின் தேரில் பூட்டப்பட்டிருந்த குதிரைகளை யெல்லாம் உக்கிரன் அடித்துக் கொன்றுன். பானுகோபன் வேறொரு தேரில் ஏறிக் கொண்டு பாணங்களை விடுத்து உக்கிரன் கையிலிருந்த தண்டத்தை ஒடித்தான். உக்கிரன், பானுகோபனின் தேரை அலக்காகத் தூக்கி ஆகாயத்தில் எறிந்தான். அது சூரிய மண்டலம் வரை சென்றது. பானுகோபன் தன்னை நோக்கி வருவதைக் கண்ட சூரியன் அஞ்சியோடினுன். முன்பு பானு கோபனுல் துன்பமடைந்தவ னல்லவா சூரியன்? பானுவாகிய சூரியனிடம் கோபித்ததாலன்றோ அவனுக்குப் பானுகோபன் என்ற பெயரே உண்டாயிற்று? (தொடரும்

ஆவணி பிறந்தால் கல்யாண சீசனும் ஜாம்ஜாமென்று ஆரம்பமாகி விடும். சர்வாலங்கார பூஷிதையாக என்கிறோமே அந்த அலங்காரத்தை வாழ்நாளில் ஒரு முறைதான் திருமண தினத்தன்றுதான் சூடுகிறது, இந்த நாகரிக யுகத்தில். அன்று உற்றமும் சுற்றமும் கண்குளிர மணப்பெண்ணைப் பார்த்து மகிழ்ந்து விட வேண்டியதுதான். மறுபடியும் அந்தச் சந்தர்ப்பம் கிடைப்பது அரிதல்லவா?

வலதுபுறம் குமாரி ராதா காஞ்சிபுரம் பட்டுப் புடவையை மடிக்கட்டாக அணிந்து பொலிகிருர். ஒன்பது கெஜம் - மஞ்சள் சிவப்பு கலர்களில் சிறு கட்டங்கள் போடப் பெற்றது. கரை: பச்சை - இரண்டு பட்டை கெட்டிச் சரிகை டிசைன். நல்லியின் சொந்தத் தறிப் புடவையான இதற்குப் பாலும் பழமும் என்று பெயராம்!

இந்தப் பக்கத்தில் குமாரி மீனு உடலில் வரிவரியாகச் சரிகைக் கோடுகள் இழையோடும் கெம்புக் கலர் கூரைப் புடைவை யுடுத்தி



மகிழ்கிருர். ஆறு கெஜம். பட்டையான, டிசைன்களுடன் கூடிய கெட்டிச் சரிகைக் கரை.

நகைகளின் பட்டியலை நாங்கள் கூறப் போவதில்லை. மொத்தம் பதினைந்து ரகங்கள் உள்ளன. அவை என்னென்ன என்று பெயர் சொல்லி எண்ணிப் பாருங்களேன்! புன்னகையை மறந்து விடாதீர்கள்!




# 39. அமருக்குப் புறப்பட்ட அமரநாயகன்

உக்கிரனால் தூக்கியெறியப்பட்டு சூரிய மண்டலத்தை அடைந்த பானு கோபனின் தேர் அங்கிருந்து கன வேகமாகக் கீழே விழுந்தது. அதற்கும் உயிர் தப்பிய பானுகோபன், இமைப் பொழுதில் தன்னைச் சமாளித்துக் கொண்டு உக்கிரனைத் தூக்கி ஆகாயத்தில் வீசினான். அவன் ஆகாயத்திலிருந்து கீழே விழும் போது பிரம்மாஸ்திரத்தை மார்பிலே ஏவினான். அதனால் உக்கிரன் மயங்கி விழுந்தான்.

உக்கிரன் மயங்கி விழுந்ததைப் பூதப் படை வீரன் தண்டி கண்டான். உடனே ஒரு மலையைப் பெயர்த்து பானுகோபன் மீது வீசினான். பானு கோபன் பாணங்களை விடுத்து அந்த மலையைத் தூள் தூளாக்கி விட்டான். பானுகோபன் விடுத்த பாணங்களால் தாக்குண்ட தண்டி சோர்ந்து விழுந்தான். பூதப் படையைச் சேர்ந்த பிநாகி ஒரு மலையைப் பெயர்த்துப் பானு கோபன் மீது எறிய முயன்றான். அவன் மீது ஆயிரம் பாணங்களை விடுத்தான் பானுகோபன். அதனால் பிநாகியும் தளர்ச்சியடைந்தான். மற்ற பூத சேனை வீரர்கள் சிறிது நேரம் பானு கோபனுடன் போர் புரிந்தார்கள். ஆனால் பானுகோபன் அவர்களைச் சிதற அடித்தான்.

பூத சேனையைச் சேர்ந்த வீரர்கள் சிதறி ஓடுவதைக் கண்டதும் இலக்கம் வீரர்களும் பெருங்கோபத்துடன் பானு கோபன் மீது மழை போலப் பாணங்களைப் பொழிந்தார்கள். பானுகோபன் ஆயிரம் கோடிப் பாணங்களை விடுத்து அவற்றையெல்லாம் ஒடித்தான். மேலும் ஆயிரம் கோடிப்பாணங்களையெல்லாம் ஒடித்தான். மேலும் ஆயிரங் கோடிப் பாணங்களை இலக்கம் வீரர்கள் மீது விடுத்தான். அவர்கள் அந்தப்

பாணங்களை முறித்துப் பல பாணங்களை பானுகோபன்மீது ஏவினர்கள். பானுகோபன் மிகுந்த கோபத்துடன் எண்ணற்ற பாணங்களை இலக்கம் வீரர்கள் மீது விடுத்து அவர்கள் கையிலிருந்த விற்களையும் அழித்தான். இலக்கம் வீரர்களும் வேறு விற்களை எடுத்துக் கொண்டு பாணங்களை விடுத்தார்கள். பானுகோபனும் அளவற்ற பாணங்களை விடுத்தான். இலக்கம் வீரர்கள் உடலிலும் பாணங்கள் தைத்து அவர்கள் வருந்திஞர்கள். பானுகோபன் இறுதியில் அவர்களை வென்று விட்டான்.

இலக்கம் வீரர்களும் பானுகோபனிடம் தோற்றதும் வீரகேசரி பானுகோபன் மீது பாணங்களை விடுத்தார். இருவருக்கும் கடுமையான விற்போர் நடந்தது. பானுகோபன் கடைசியாக நாராயணஸ்திரத்தை வீரகேசரி மீது செலுத்தினன். அந்த அஸ்திரம் வீரகேசரியின் மார்பில் புகுந்தது. வீரகேசரி மயங்கி விழுந்தார். முருகப் பெருமானின் ஆணையினல்தான் அவரது ஆவி பிரியாமல் நின்றது.

பின்னர் பானுகோபனுடன் வீரமார்த்தாண்டர் கடும் போர் புரிந்தார். அவரது நெற்றியில் உடைவாளால் பானுகோபன் தாக்கினன். வீரமார்த்தாண்டர் மயங்கி விழுந்தார். வீர ராக்கதர் பானுகோபனை எதிர்த்துப் போரிட்டார். பானுகோபன் அவர் மீது பிரம்மாஸ்திரத்தை விட்டு மயக்கினன். அதன் பின் வீராந்தகர், வீரமகேச்சுரர், வீரதீரர், வீரமகேந்திரர், வீரபுரந்தரர் — ஆகியவர்கள் பானுகோபனுடன் போர் செய்து தோல்வியுற்றனர்.

முன்பு பூதசேனைகளுடன் போர் செய்து சிதறியோடிய அசுர வீரர்கள் பானுகோபன் போரில் வெற்றிமுகம் பெறுவதைக் கண்டதும் திரும்பி அவனிடம் வந்து சேர்ந்தார்கள். பானுகோபன் வீரவாகு தேவரை நோக்கி வந்தான். அதனைக் கண்ட வீரவாகு தேவர் கந்தவேளைத் தியானித்துக் கையில் வில்லை எடுத்துக் கொண்டார். தேரை வேகமாகச் செலுத்தும்படி கட்டளை யிட்டார்.

வீரவாகுதேவர் வில்லை வளைத்து நாணை மீட்டினர். அந்த நாணொலி, தேவர்களுக்கு அமிர்தம் உண்பதைப் போலிருந்ததாம். வீரவாகு தேவருக்கு எதிராகப் பானுகோபன் தனது வில்லை வளைத்து ஒலி எழுப்பினன். அந்த ஒலி, தேவர்களுக்கு விஷத்தை உண்பது போன்றிருந்ததாம்.

வீரவாகுதேவருக்கும் பானுகோபனுக்கும் கடுமையாகப் போர் நடந்தது. இருவரும் ஆயிரக் கணக்கி பாணங்களை மழை போல் பொழி தார்கள். இந்தப் பாண மழையி பூமியும் வானும், கடல்களும் மறை தன. அவர்களின் கடும் போரை கண்ட தேவர்களும் அசுரர்களும் அச்சத்தினல் பல திக்குகளிலும் ஓடி னர்கள். வீரவாகுதேவர் சர்வசங்கார மூர்த்தியைப் போல் போர் புரிந்தார் பானுகோபனின் தேரை அழித்தார் பானுகோபன் வேருெரு தேரில் ஏறி பாணங்களை விடுத்தான். பானுகோப னின் வில்லையும் வச்சிர கவசத்தையும் வீரவாகுதேவர் உடைத்து விட்டார். பானுகோபனின் மார்பிலிருந்து உதிரம் பெருகி வழிந்தது. பானுகோபன் மார் பில் முன்பு ஏற்படுத்திய துளையின் வழி யாக வீரவாகுதேவர் ஆயிரம் பாண களை விடுத்து அவனது முதுகில் தொங் கிக் கொண்டிருந்த அம்பறுத் தூணியை அறுத்தெறிந்தார். அதனல் மனம் தளர்ந்த பானுகோபன், ''வில் வித்தை யினல் இவனை வெற்றி கொள்ள முடியாது'' என்று முடிவு செய்து கொண்டான்.

பானுகோபன் முன்பு பிரம்மதேவ ரிடமிருந்து மோகஞஸ்திரம் பெற்றிரு தான். அந்த அஸ்திரத்தை எவ மீதாவது செலுத்தினல், அதனு தாக்கப்படுகிறவரின் அறிவு மயங்கும் அந்த அஸ்திரத்தை எடுத்து, "நீ வேகமாய்ச் சென்று எதிரியின் அறிவை மயங்கச் செய்து கொன்று விடுவாயாக" என்று கூறி விடுத்தான் பானுகோபன் பயங்கரமான அந்த அஸ்திரம் எங்கும் இருளைப் பரப்பி விரைந்து சென்றது அந்த அஸ்திரம் சென்ற போது பூத சேனையைச் சேர்ந்த வீரர்கள் பயந்து விழுந்தனர். பூதசேனைத் தலைவர்க மயங்கி விழுந்தனர். அஸ்திரம் நெருங்க நெருங்க இலக்கத்தெண்மரும் வீரவாகு தேவரும் மயங்கி விழுந்தனர். இந்த நிலையை ஆகாயத்திலிருந்து கவனித்த பானுகோபன் மயங்கி விழுந்தவர்கள் மீது ஏராளமான பாணங்களை விடுத் தான். பாணங்கள் தைத்ததால் அவர் களின் உடல்கள் சல்லடைக் கண் போலாகி விட்டன.

இலக்கத்தெண்மரும், பூதசேனைகளும் வீரவாகுதேவரும் அறிவு மயங்கி கிடந்ததை யாவுமறியும் முருகவேள் உணர்ந்தார்.

பானுகோபன் விடுத்த மோகஞஸ்தி ரத்தை எதிர்க்க அமோக அஸ்தி ரத்தைத் தமது மலர்க் கரத்தி லேயே எடுத்தார். ''பானுகோபன் விடுத்த மோகஞஸ்திரத்தின் சக்தி

...கெடுத்து வெற்றியுடன் திரும்பி ...'' என்று கூறி அதனை விடுத்தார். ...அஸ்திரம் விண் வழியே சென்று ...ார்க்களத்தை யடைந்து மோகன ...திரத்தின் மாயையைக் கிரகித்துக் ...ண்டது. வீரவாகுதேவரும் மற்ற ...ளும் தூக்கத்திலிருந்து எழுவது ...ல் எழுந்தனர். முருகப் பெரு ...ன் விடுத்த அஸ்திரம் தன் பணியை ...த்தபின் பரமனிடமே திரும்பிச் ...ன்று விட்டது.

...மயக்கம் தெளிந்தெழுந்த வீரவாகு ...தேவர், 'வஞ்சனையால் வலிமையைக் ...டுத்த பானுகோபனை உடனே ...கொல்லுவேன்' என்று எண்ணிப் பாசு ...தாஸ்திரத்தைக் கையில் எடுத்து ...தனை விடுப்பதற்குச் சிந்தித்தார்.

...மோகனாஸ்திரத்தினால் மயங்கிவிழுந்த ...ர்கள் அறிவு தெளிந்து எழுந்ததை ...ம், வீரவாகுதேவர் பாசுபதாஸ்திரம் ...டுப்பதற்குத் தயாராயிருப்பதையும் ...ந்த பானுகோபன், ''இனி இங்கு ...ந்தால் பாசுபதாஸ்திரம் உயிரை ...ப்பத்து விடும்'' என்று உணர்ந்து அங் ...ருந்து மாயமாக விண்ணில் சென்று ...மறைந்து விட்டான். அசுர வீரர்களும் ...மறைந்து ஓடி விட்டனர். மறைந்து ...கின்றவனைக் கொல்வது யுத்த ...தர்மம் ஆகாது என்பதால் வீரவாகு ...தேவர் ஆயுதத்தை விடுக்காது இருந்து ...விட்டார். ஓடி ஒளிந்ததே பகைவரின் ...தோல்விக்குச் சமமெனப் பூதர்கள் ...மகிழ்ந்தனர்.

...இலக்கத்தெண்மரும், பூதவீரர்களும் ...வீரவாகுதேவர், ஜயசங்கம் ஊதிக் ...கொண்டு பாசறையை அடைந்தார். ...அங்கு எழுந்தருளியிருந்த அருள்மூர்த்தி ...ஆகிய கந்தவேளின் திருவடிகளை ...எல்லாவரும் நன்றியுடன் தொழுதனர். ...யுத்தகளத்தில் நிகழ்ந்தவற்றை யெல் ...லாம் மகிழ்ச்சியுடன் செவிசாய்த்துக் ...கேட்ட செவ்வேட்பரமன், வீரர்களுக்கு ...விடைகொடுத்து அவரவர் விடுதிகளுக்கு ...அனுப்பி வைத்தார்..

ஃ ஃ ஃ

விண்ணில் மாயமாய் மறைந்த ...பானுகோபன் பெருத்த அவமானத் ...துடன் புறக்கடை வழியாக மகேந்திர ...த்துக்குச் சென்று தன் உடலில் ஏற்பட் ...டிருந்த புண்ணுக்கு மருந்து தடவிக் ...கொண் டிருந்தான். உடலைப் புண் ...படுத்தியதை விட அவமானமும், துக்க ...மும், பழியும் அவனது உள்ளத்தை ...அதிகமாக வாட்டிக் கொண்டிருந்தன.

...போன மகன் வெற்றியோடு திரும்பி ...வருவான் என்று சூரபன்மன் எதிர் பார்த்துக் கொண்டிருந்தான். பானு கோபன் வந்துவிட்ட செய்தியைச் சேவகர்கள்தான் அவனிடம் தெரிவித் தார்களே தவிர, பானுகோபன் சூர பன்மனிடம் வரவில்லை. ''பானுகோபன் எங்கே?'' என்று சேவகர்களைக் கேட் டான் சூரபன்மன். ''தோட்டத்துப் பக்கம் வந்து படுத்திருக்கிறார்'' என்று சேவகர்கள் பதில் கூறினார்கள்.

சூரபன்மனின் உள்ளம் கொதித் தது. 'ஹூம், இவனும் சிறுவன் தானே? போனால் போகிறது. நானே நானே போகிறேன். அந்தக் கந்தனை எவ்வாறேனும் வென்று விரைவில் திரும்புவேன்' என்று தன்னைத் தானே தேற்றிக் கொண்டான் சூரன். மறுநாள் யுத்த ஏற்பாடுகளை எப்படி யெல்லாம் செய்ய வேண்டும் என்ற சிந்தனையில் அதன்பின் ஆழ்ந்தான்.

## எப்படி முடியும்?



**காதல்**

பாஸ்கர் ஓர் அமெச்சூர் நாடக நடிகன். அவனை அமுதா அன்புடன் காதலித்தாள். முதன் முறையாக அவன் ஒரு நாடகத்தில் கதாநாயகனாக நடித்ததைக் கண்டாள். அவர்கள் சந்திப்பு அடிக்கடி நிகழ்ந்தது. வழக்கம் போல் பார்க், பீச், சினிமா, இத்தியாதி காதலர்கள் இடங்களைச் சுற்றிய பின், காதலில் கரை கண்டவர்களாய் ஒருவர் மற்றவரின்றி வாழ்வதில்லை என்று உணர்ந்தனர்.

அப்போதுதான் அமுதாவுக்கு ஒரு சந் தேகம் எழுந்தது.

பாஸ்கர் நடிகனாயிற்றே! தன்னை முழு மனத்துடன்தான் காதலிக்கிறானா அல்லது நடிப்பா? இதை எப்படி உணருவது?

ஒரு நாள்--

அவளைத் தேடி அவன் வரும் போது அவள் தன் மேஜையின் மீது ஒரு கடி தத்தை வைத்திருந்தாள். அதாவது தான் ஓர் இக்கட்டில் சிக்கி யிருப்பதாகவும் அதனால் அவனை மணக்க முடியாதென்றும் தன்னை மறந்து மன்னித்து விடும்படியும் அதில் எழுதியிருந்தாள்.

அன்று வீட்டில் யாரும் இல்லை.

பாஸ்கர் உள்ளே நுழைந்ததும் அறை யின் மறைவு ஒன்றில் ஒளிந்து கொண்டு நடப்பதைக் கவனிக்கலானாள்.

பீரோவின் பின்னே ஒளிந்திருந்த அவளால் பாஸ்கரைப் பார்க்க முடியவில்லை. ஆனால் அவள் காதுகள் கூர்மையாகின.

சிறிது நேரம் நிசப் தம்! பிறகு----

எப்படி முடியும்?
சிந்திக்க. பிறகு
அடுத்த பக்கம் பார்க்க



## இப்படி முடியும்



'ஐயோ, என் அன்பே! நீ இன்றி நான் எப்படி உயிர் வாழ்வேன்? என்னைப் பிரிந்து செல்ல உனக்கு எப்படியடி மனம் வந்தது? இதோ...... இன்றே.... இங்கே.... இப்போதே என் உயிரையும் முடித்துக் கொள்கிறேன்.'

ஒலிந்த இடத்திலிருந்து ஓடோடி வந்தாள் அமுதா. அவள் கண்கள் பனித்திருந்தன. அவனுக்குத்தான் அவளிடம் எத்தனை அன்பு!

'எப்படி அமுதா என் நடிப்பு? அடுத்த வார நாடகத்தின் உச்ச கட்டத்தின் வசனம்! உன்னைக் காணவில்லையா? ஒருவரையும் காணும். இப்படியே ஒத்திகை பார்த்துக் கொண்டேன்! எப்படி? நீ இங்குதான் இருக்கிறாயா?'

அமுதா திகைத்தாள்! அவள் கடிதம் பிரிக்கப்படாமல் மேஜை மீது அப்படியே இருப்பதை அப்போதுதான் பார்த்தாள் அவள்!

ஜீவா ரமணி



மறு நாள் பொழுது புலர்வதற்கு முன் நித்திரையிலிருந்து எழுந்த சூரபன்மன், நித்திய கருமங்களை முடித்துக் கொண்டான். சபாமண்டபம் சென்று சிம்மாசனத்தில் ஏறி அமர்ந்தான். சேனைத் தலைவர்களும், அமைச்சர்களும் அவனைச் சூழ்ந்தார்கள்.

"நமது சேனைகளை அழைத்து வாருங்கள்" என்று ஒற்றர்களிடம் கட்டளையிட்டான் சூரன். இரதகஜ துரகபதாதிக்ள் அடங்கிய பல வகை ஆயுதங்களை ஏந்திய இலட்சம் வெள்ளத்திற்கு மேற்பட்ட வீரர் படைகளைத் திரட்டி ஒற்றர்கள் அனுப்பினார்கள். அந்தச் சைன்யங்கள் வீரமகேந்திர புரியைச் சூழ்ந்து ஆரவாரம் செய்தன.

சூரபன்மன் சிகரம் ஒன்றின் மீதேறி நான்கு திசைகளிலும் தனது பார்வையைச் செலுத்தினான். கதிரவனின் ஒளிக் கதிர்கள் பாய முடியாத அளவுக்கு நெரிசலாகக் குவிந்திருந்த சேனையைக் கண்டதும் அவன் உள்ளத்தை வாட்டிய துன்பம் பறந்தது. எதிரிகளை அப்போதே வென்றவன் போல் களிப்புப் பெற்றான்.

சிகரத்திலிருந்து இறங்கி ஆயுத சாலைக்குச் சென்ற சூரபன்மன் சிவ தனுசு, பாசுபதாஸ்திரம் போன் தெய்வாஸ்திரங்களை எடுத்துக் கொ டான். அட்சய அம்பருத் தூணி முதுகில் கட்டிக் கொண்டான். தலை வைர முடியைத் தரித்துத் தும்பை மா அணிந்து கொண்டு தேரில் ஏறின அண்டங்கள் அதிரக் கனைக்கு குதிரைகள் பூட்டப்பட்டிருந்த அந் தேர் வாயு வேகத்தில் புறப்பட்ட அசுர வீரர்களும் அமைச்சர்களு நால் வகைச் சேனைகளும் அவனை தொடர்ந்தனர்.

சூரபன்மனின் தேர் அரண்ம வாயிலைக் கடந்தது. சிங்கமுகாசுரனி மகன் அதிசூரனும், தாரகாசுரனி மகன் அசுரேந்திரனும் போர்க்கோ பூண்டு, சூரபன்மனிடம் வந்து அவ வணங்கினார்கள். "நீங்கள் இருவ தலைவராக இருந்து படைகளை அ வகுத்துச் சென்று போர் புரியுங்கள் என்று அவர்களுக்குக் கட்டளையி டான் சூரபன்மன். அவர்கள் அ விதமே செய்தனர்.

பூமி அதிர அசுரப் படைகள் அ வகுத்துச் சென்ற போது புவியை தாங்கும் ஆதிசேஷன் தலையை நெ தான். அஷ்டமா நாகங்களும், தி யானைகளும் அஞ்சின. அணிவகுத் சென்ற யானைகள் பிளிறிய ஒலி எ திசைகளையும் கிழித்துக் கொண் பரவியது.

சூரபன்மன் சதுரங்க சேனைகளுட போருக்கு வருவதை யறிந்த இந்திர கந்தவேளிடம் ஓடினான். கரு நிறைந்த பெருமானின் திருவடிக வணங்கி, "எம்பெருமானே! சூரபன் இலட்சம் வெள்ளம் சேனைகளுட போருக்கு வருகிறான். தேவரீர் சூரப மனை வென்று எங்கள் அரச உரி களையும் பொன்னுலக வாழ்வையு மீட்டுத் தரவேண்டும்" என்று வி ணப்பித்துக் கொண்டான்.

"அஞ்சாதே அப்பனே!" என் திருவாய் மலர்ந்தருளிய தேவதேவ வாயு தேவனை அழைத்துத் தே கொண்டு வரும்படி ஆணையிட்டா வல்லசுரரை மாய்க்கவும் நல்ல சுர வாழ்விக்கவுமே வந்துதித்த சரவ பவன் போர்க்கோலம் பூண்டா மனோவேகத் தேரில் ஏறிப் புறப் டார் குமாரக் கடவுள். பூத சேனை கடலும் அஞ்சும் வண்ணம் ஆரவார செய்து புறப்பட்டன. வீரவாகு தே ரும், தம்பியரும், இலக்கம் வீரரு பூத கணத் தலைவர்களும் போர் கோலத்துடன் பூத சேனைக கிடையே சென்றனர்.

(தொடரு

# எப்பொழுதும் புத்துணர்ச்சியுடன் இருங்கள்
# நாள்முழுவதும் சுறுசுறுப்பாக
# இயங்குவதற்கான புத்துணர்ச்சிக்கு
# புதிய கால்கேட் லோர்னே டால்க்

புதிய கால்கேட் லோர்னே டால்க்கின் புதுப்பிக்கும் நறுமணம் உங்களைக் குளுமையுடனும், புத்துணர்ச்சியுடனும் வைத்திருக்கிறது....நாள் முழுவதும் அந்தத் துடியான சுறுசுறுப்பைத் தருகிறது. இளமைத் துடிப்பும், சுறுசுறுப்பும், விளையாட்டுகளில் பிரியமுள்ளவர்கள் குறிப்பாக கால்கேட் லோர்னே டால்க் வியர்வையைத் துரிதமாக கிரகித்துக்கொண்டு தாங்கள், நாள் முழுவதும் உற்சாகமாக இருக்க உதவுவதை நன்கு அறிவார்கள்!

இது சிக்கனமானதும்கூட! உங்கள் குடும்பத்தினருக்கு கால்கேட் லோர்னே டால்க்கை வாங்குங்கள்.—அது சுறுசுறுப்பான நாகரீக மக்களுக்கேற்ற புதியதொரு பரவசமூட்டும் நறுமணம் கொண்டது!








CIT.GJ.TAN

# கந்தன் கருணை

வெள்ளம் பெருக்கெடுத்தோடியது. அப்போது, சூரனின் படையி சிறந்ததொரு வீரனான அதிசூர கோபத்துடன் பாணங்களை மழை போல் பொழிந்தான். அவனது வி லாற்றலைக் கண்ட பூத சேனைக திகைத்து நின்றன. உக்கிரன் என் பூத சேனைத் தலைவன் தண்டாயுதத்தை எடுத்துச் சுழற்றி அதி சூரனின் மா பில் எறிந்தான். அதைக் கண்ட அசு வீரர்கள் ''அதிசூரன் இறந்தான்'' என்று அலறினார்கள். உக்கிரன் எறிந் தண்டாயுதம் அதிசூரன் மார்பிலிருந்




## 40. யுத்தம் வலுக்கிறது!

யுத்த களத்தில் அசுர வீரர்கள் பூத சேனையைச் சூழ்ந்தனர். போர் தொடங்கிற்று. பூதர்களில் பலர் கைகால்களை இழந்தனர். பூத சேனைத் தலைவர்கள் அசுர வீரர்களில் பலரை அழித்தனர். அவர்கள் இறந்துவிழுந்ததால் பிணங்கள் மலைபோல் குவிந்து கிடந்தன. உதிர

கவசத்தை அழித்தது. ஆயினும் னது உயிர் போகவில்லை. மடைந்த அதிசூரன் உக்கிரன் மீது ரம் பாணங்களை விடுத்தான். பாணங்கள் தைத்ததால் உடலிலிருந்து உதிரம் பெருகிப் ந்து; அவன் உடலெல்லாம் யது. பெரிதும் ஆத்திர உக்கிரன் ஒரு பெரிய பெயர்த்து அதிசூரன் ஏறிவந்த

வீசினான். அவனது தேர் சுக்கு நூறாக உடைந்து அழிந்தது. அதிசூரன் வேறொரு தேரில் ஏறிப் போர் புரிந்தான். அந்தத் தேரில் பூட்டப்பட்டிருந்த குதிரைகளை அழித்தான் உக்கிரன். அதிசூரன் உக்கிரனின் உடலில் பல பாணங்களை விடுத்தான். அவற்றைக் கண்ட தேவர்கள் அவனது ஆற்றலை வியந்து பாராட்டினர்.

இந்திரன் பிரம்மனை நோக்கி, ''அதிசூரன் ஏவிய தெய்வாஸ்திரங்களையெல்லாம் உக்கிரன் வாரி விழுங்கிவிட்டானே; அதற்குக் காரணம் என்ன?'' என்று கேட்டான்.



றைத் தண்டாயுதத்தால் தடுத்து நிறுத்தினான் உக்கிரன். உக்கிரன் மீது தெய்வாஸ்திரத்தைச் செலுத்தவேண்டும் என்று முடிவு செய்த அதிசூரன் ஆக்னேயாஸ்திரத்தை விடுத்தான். அதன் உக்கிரத்தைக் கண்ட உக்கிரன் கந்தவேளின் திருவடிகளைத் தியானித்தான். கந்தக் கடவுள் அவனுக்கு அருள் புரிந்தார். அதிசூரன் வருணாஸ்திரத்தையும், வாயு அஸ்திரத்தையும், நாராயணாஸ்திரத்தையும் விடுத்தான். அவற்றையெல்லாம் தன் இரு கைகளாலும் வாரி விழுங்கிவிட்டான் உக்கிரன். அதனைக் கண்டு அதிசூரன் அதிசயித்து நின்றபோது உக்கிரன் வேகமாகப் பாய்ந்து அசுர சேனையைச் சேர்ந்த வீரர்கள் பலரைக் கொன்றான். எஞ்சிய அசுர வீரர்கள் ஓடினர். உக்கிரனின் செய

''உக்கிரன் அரிய தவம் செய்து சிவபெருமானிடம் வரம் பல பெற்றவன். கந்தவேளின் திருவருள் பெற்றவன். திருமாலின் சக்கராயுதத்தை விழுங்கிய ததீசி முனிவரைவிட ஆற்றல் மிக்கவன். ஆகவே, இவன் தெய்வாஸ்திரங்களை விழுங்கியது வியப்புக்குரியதல்ல'' என்று பிரம்மதேவர் விடை கூறினர்.

யுத்த களத்தில் உக்கிரமாகப் போர் செய்த உக்கிரன் மீது அதிசூரன் பாசுபதாஸ்திரத்தை விடுத்தான். இந்த

அஸ்திரம் சிவபெருமானுல் அதிசூர னுக்கு வழங்கப்பட்டது.

தருமமே உருவமான பரமனின் பெய ரைத் தாங்கிய அந்த திவ்வியப்படை அற வழியினின்று அணுவளவும் பிறழாது. இந்தப் பாசுபதாஸ்திரத்தை அதிசூர னிடம் வழங்கிய போது, ''கையில் ஆயுதம் இல்லாதவர் மீது செலுத் தினுல் அது அவர்களைத் தாக்காமலும் உன்னிடம் திரும்பாமலும் நம்மிடம் வந்து விடும்'' என்று சிவபெருமான் அருளியிருந்தார். இப்போது அந்த அஸ் திரம் சீறிக் கொண்டு உக்கிரனைத் தாக்க நெருங்கியது. உடனே அதன் மர்மத்தை அறிந்த உக்கிரன் தன் கையிலிருந்த ஆயுதத்தைத் தூர எறிந்து விட்டு நிராயுதபாணியாகக் கைகுவித்து நின்று பஞ்சாட்சர மந் திரத்தை ஜபித்து அதனைத் தொழு தான். பாசுபதாஸ்திரம் அவனைத் தாக்காமல் சிவபெருமானிடமே சென்றுவிட்டது. அதிசூரன் வியப்பி லாழ்ந்தான். தன் தேரை விரைவாகச் செலுத்தி உக்கிரனுக்கு அருகே வந்து தேரிலிருந்து இறங்கி தண்டாயுதத்தைச் சுழற்றி உக்கிரன் தோள் மீது வீசி யெறிந்தான். அந்தத் தண்டாயுதத் தைப் பிடுங்கிய உக்கிரன் அதனுலேயே அதிசூரனின் மார்பில் ஓங்கி அடித் தான். அதிசூரனின் மார்பு பிளந்தது. பெயருக்கேற்ப அதிசூரனுகவே இருந்த வீரனும் மரணமடைந்தான்.

அதிசூரன் இறந்ததைக் கண்ட அசுரேந்திரன் சீறிப் பாய்ந்து பூத சேனை களைத் தாக்கத் தொடங்கினுன். அவன் விடுத்த பாணங்களால் பூதர்களில் பலர் இறந்தனர். பூதப் படையைச் சேர்ந்த கனகன் அசுரேந்திரனுடன் போர் செய்தான். அசுரேந்திரன் ஆயி ரக் கணக்கில் பாணங்களை விடுத் தால் கனகன் மயங்கி விழுந்தான். உடனே பூதப் படையைச் சேர்ந்த உன்மத்தன் என்பவன் யுத்த களத் தில் இறங்கினுன். அசுரேந்திரனின் பாண மழையில் அவனும் மயங்கி விழுந்தான். பூதப் படையைச் சேர்ந்த மந்தன், சிங்கன், தண்டகன், கோ... கன், விசயன் ஆகியோர் அசுரேந் திரனுடன் போர் செய்து தோற்றுர்கள். இதனைக் கண்ட வீரவாகு தேவர் தாமே கோபத்துடன் அசுரேந்திர னுடன் போர் செய்ய முன்வந்தார். ஆக்ரோசமாகப் போரிட்டு அவனு... தலையை அறுத்தார். தேவர்கள் மலர் மாரி பொழிந்து மகிழ்ந்தனர். அசுர படைகள் சிதறியோடின. (தொடரும்)

## எப்படி முடியும்?





ஒரு கிராமத்தில் ஒரு கிழவி இருந்தாள். நாலு பேருக்குச் சாப்பாடு போட்டு ஜீவனம் நடத்தி வந்தாள். அவள் வீட்டில் எப்போதும் சாப்பிட வரும் ஆட்கள் கூட்டம் இருந்து கொண்டேயிருக்கும்.

ஒரு நாள் இரவு மணி பத்துக்கு மேல் இருக்கும். யாரோ வெளியூர்க்காரர்கள் நால்வர் பாட்டி வீடு தேடி வந்தனர். அந்தக் கிழவியும் அவசரம் அவசரமாக வந்தவர்களுக்குச் சமையல் தயார் செய்து முடித்தாள். அந்த நால்வரைத் தவிர வேறு யாரும் இல்லை அப்போது.

மங்கிய லாந்தர் விளக்கின் ஒளியில் அவள் சமைத்த சுவையான உணவில் பல்லி விழுந்த விவரம் அவளுக்குத் தெரிய வில்லை. பலன்...? உணவையுண்ட நால் வரும் சவமானுர்கள்,

கிழவி நடுநடுங்கி விட்டாள். விடிந்து, விஷயம் தெரிந்தால் அவளுக்கு ஆபத்தல் லவா? நாலு பிணங்களையும் அகற்ற வேண்டுமே! கிழவி கெட்டிக்காரி.

கிழவியின் வீடு ஊருக்கு வெளியே சற்றுத் தொலைவில் இருந்தது.

சுடுகாடு வெட்டியான் ஒருவனை அவளுக் குத் தெரியும். அவன் ஒரு சுத்த மக்கு. அவனைத் தேடிப் போனுள் கிழவி.

''ஊரிலிருந்து என் உறவினர் ஒருவர் வந்தார். திடீரென மாரடைப்பினுல் இறந்து விட்டார். காலை வரை பிணத்தை வைத்திருந்தால் என் வீட்டில் யாரும் சாப்பிட மாட்டார்கள். என் பிழைப்பு கெட்டு விடும். தயவுசெய்து பிணத்தை எடுத்துக் கொண்டு போய் இப்போதே புதைத்து விடு. பணம் தருகிறேன்'' என்றுள் கிழவி.

வெட்டியானும் பிணத்தை எடுத்துக் கொண்டு கிளம்பினுன். அடையாளம் தெரியாமல் இருப்பதற்காகப் பிணங்களின் நெற்றியில் பட்டையாகப் பெரிய நாமம் தீட்டியிருந்தாள் கிழவி.

முதல் பிணத்தைக் கொண்டு போய்ப் புதைத்து விட்டுத் திரும்பி வந்த வெட்டியானி டம் கிழவி, 'ஐயோ இதென்ன அநியாயம்! நீ எடுத்துக் கொண்டு போன பிணம் மறுபடியும் வந்து இங்கு கிடக் கிறதே' என்று கூவினுள்.

திடுக்கிட்ட வெட்டியானும் அந்தப் பிணத் தைப் பார்த்தான். அவனுக்கு அடை யாளம் தெரியவில்லை! ஒரே நாமம்தானே! மூளை கெட்ட அவன் இரண்டாவது பிணத் தையும் தூக்கிக் கொண்டு போனுன். இப் படியே நான்கு பிணங்களையும் அப்புறப் படுத்தி விட்டாள் கிழவி! இதற்குள் விடிந்து விட்டது. அப்போதுதான் நாலாவது பிணத்தைப் புதைக்கக் குழிவெட்டிக் கொண் டிருந்தான். அதே சமயம்.....

(எப்படி முடியும்?

சிந்திக்க. பிறகு, 33-ம் பக்கம் பார்க்க)

## பாட்டியின் சாமர்த்தியம்



## 41. முதல் சந்திப்பு

அதிசூரனும் அசுரேந்திரனும் போர்க் களத்தில் இறந்ததையும் அசுர சேனைகள் சிதறி ஓடுவதையும் கண்ட சூரபன்மன் வடவாமுகாக்கினி போலக் கனன்று எழுந்தான். தானே போரில் குதிக்க வேண்டியதுதான் என முடிவு செய்தான். தனது தேரில் ஏறிப் போர்க் களம் வந்து தனுசை வளைத்து நாணை மீட்டிப் பெரும் ஒலி எழுப்பினான். அந்த ஒலியைக் கேட்ட பூத சேனைகள் அஞ்சி நடுங்கின. அச்சங் கொண்ட அவர்கள் தலைவிரிகோலமாக ஓடினர். சூரபன்மனின் நாணொலியின் ரீங்காரம் பன்னிரண்டு ஆண்டுகள் வரை விடாமல் ஒலித்தது. அந்த ஓசையைக் கேட்டு நாராயண மூர்த்தியே தமது தலையை அசைத்தார். பிரம்மன், இந்திரன், இயமன் ஆகியோர் தங்களுக்கு என்ன நேருமோ என்று அஞ்சினர்.

பூதசேனைத் தலைவர்கள் நூற்று எண்மரும் மனத்தைத் திடம் செய்து கொண்டு சூரபன்மன் மீது மலைகளையும் மரங்களையும் வீசியெறிந்தார்கள். சூரபன்மன் பத்து லட்சம் கோடி பாணங்களை விடுத்துத் தன் மீது சீறி வந்த மலைகளையும் மரங்களையும் துகள்களாக்கினான். பூதசேனைத் தலைவர்கள் நூற்றெண்மரும் வருந்திச் சோர்ந்து மயங்கினர். இலக்கம் வீரர்களையும் கண் பஞ்சடைந்து போகச் செய்தான் சூரன். வீரமார்த்தாண்டர், வீரராக்கதர், வீரமகேந்திரர், வீரதீரர், வீரமகேச்சுரர், வீரகேசரி, வீரபுரந்தரர், வீராந்தகர் ஆகியோரையும்



சூரபன்மன் தோல்வியடையச் செய்து எதிர்ப்பவர்கள் எவருமின்றிப் போர்க் களத்தில் உலவிக் கொண்டிருந்தான்.

வீரவாகுதேவர் தேரில் ஏறிச் சூரபன்மன் இருக்கும் இடத்துக்குச் சென்றார். ''முன்பு வந்து நம் நகரத்தை அழித்துச் சென்றவன் இவன் தான்'' என்பதைச் சூரன் அறிந்ததும், பெரும் கோபம் கொண்டு, வீரவாகுவை இழித்தும் பழித்தும் பேசினான். அதன் பின் இருவருக்குமிடையே அதிகோரமான போர் மூண்டது. வீரவாகு தேவர் சூரபன்மனின் நெற்றியைக் குறி வைத்து எய்த பாணங்கள் வைர மலையில் தாக்கிய பொன்னூசிகளைப் போல முனை மழுங்கித் துகளாகி வீழ்ந்தன. வீரவாகு தேவர் வாயுவாஸ்திரம், அக்கினி அஸ்திரம், சூரியாஸ் திரம் வருணாஸ்திரம், இந்திராஸ்திரம், நிருதி அஸ்திரம் முதலிய தெய்வாஸ்திரங்களை ஏவினார். அந்தத் தெய்வப் படைக் கலங்களும் சூரபன்மனின் உடலில் பட்டு வலிமை யிழந்து அழிந்தன.

சூரபன்மனின் அளப்பரும் ஆற்றலைக் கண்டு வியந்த வீரவாகுதேவர் பிரம் மாஸ்திரத்தையும் நாராயணாஸ்திரத் தையும் ஏவினார். அவையும் தமது ஆற்றல் ஒழிந்து அழிந்தன. சூரபன் மன் பெற்றுள்ள வரங்களின் சிறப்பை யும் அவனது வல்லமையையும் எண்ணி வியந்து நின்றார் வீரவாகுதேவர்.

சூரபன்மன் வீரவாகுதேவரை நோக்கிக் கொக்கரித்தான்: '' அற்பனான தூதனே! மும்மூர்த்திகளுக்கும் முதல்வராகிய தேவ தேவன் சிவபெருமான் தந்தருளிய வரங்களின் மகிமையினால்,

எந்தத் தெய்வாஸ்திரத்தை என் மீது ஏவினாலும் என்னை வெல்ல முடியாது'' என்று ஆர்ப்பரித்தான்.

தேவாதிதேவனான சிவபெருமானின் பெயர் பூண்ட அஸ்திரமே எஞ்சியிருந்தது. வீரவாகு தேவர் பாசுபதாஸ்திரத்தை எடுத்து வழிபாடு செய்து சூரபன்மன் மீது பிரயோகித்தார். அந்த அஸ்திரம் வடவாமுகாக்கினி போன்று இடி மின்னல்களுடனும் விஷத்துடனும் இருளைப் பரப்பி ஆரவாரத்துடன் சென்றது. அதிவேகமாக ஆரவாரம் செய்து வரும் பாசுபதாஸ்திரத்தைக் கண்டதும் சூரபன்மன் தன்னிடமிருந்த பாசுபதாஸ்திரத்தை எடுத்து வழிபாடு செய்து ஏவினான். இரண்டு சிவாஸ்திரங்களும் பிரபஞ்சங்கள் எல்லாம் அஞ்சி நடுங்கும்படி போரிட்டுத் தம்மை விடுத்தவர்களிடமே திரும்பிச் சென்று விட்டன. பிறகு இருவரும் முத்தலைப் பாணம், வேல், தண்டாயுதம் இவற்றால் போர் செய்து கொண்டார்கள்.

சூரபன்மனின் தண்டாயுதம் வீரவாகுதேவரின் மார்பைத் தாக்கியது. அவரது உடலிலிருந்து உதிரம் ஊற்றெடுத்து ஆறு போல் ஓடியது. வீரவாகுதேவர் செயலற்றுத் தேரின் மீது விழுந்தார். தேவர்கள் கதிகலங்கினர். அப்போது வீரவாகுதேவரின் தேர்ச் சாரதியாகிய விசாலி தேரை ஒரு பக்கமாகச் செலுத்தினான். சூரபன்மன் வீரவாகுதேவர் ஒருவாறாக ஒழிந்தான் என்று எண்ணிப் பூதசேனைகளின் மீது பாணங்களைச் சூறாவளி போல் விடுத்தான். பூதசேனையைச் சேர்ந்தவர்களில் எண்ணற்றவர் இறந்தனர். எஞ்சியவர்கள் பயந்து ஓடினர்.

பூதசேனைகளும், வீரவாகுதேவரும் போர்க் களத்தில் வலியிழந்து சின்னாபின்னப்பட்டிருப்பதை யறிந்த கந்தவேள், தமது சாரதியாகிய வாயுதேவனைப் பார்த்து, ''நமது தேரை வேகமாகச் செலுத்திச் சூரபன்மன் முன் கொண்டு போய் நிறுத்து'' என்று ஆணையிட்டார். அதன்படி நவரத்தினமயமான அந்தத் தேரை மனோவேகத்தில் ஓட்டிக் கொண்டு போய்ப் போர்க்களத்தில் இறுமாந்திருந்த சூரபன்மன் முன் கொண்டு போய் நிறுத்தினார் வாயுதேவன்.

சூரபன்மனுக்கும் எம்பெருமானுக்கும் இதுதான் முதல் சந்திப்பு. எப்பொழுதும் முதல் சந்திப்புக்குத்தான் பெருமை அதிகம். அருளுக்கும் இருளுக்கும், கருணைக்கும் கொடுமைக்கும், அறிவுக்கும் மருளுக்குமிடையே நேர்ந்த சந்திப்பு இது. முருகப் பெருமானைப் பார்த்தான் சூரபன்மன். பயங்கரமான அந்தப் போர்க்களத்திலே, பகைமை தலைவிரித்தாடும் யுத்த பூமியிலே கருணை வழியும் முகத்துடன் காட்சி தந்தார் கந்தப் பெருமான்.

முண்டக மலர்ந்த தன்ன
  மூவிரு முகமுங் கண்ணுங்
குண்டல நிறையுஞ் செம்பொன்
  மவுலியங் கோல மார்பும்
எண்டரு கரம்ஈ ராறும்
  இலங்கெழிற் படைகள் யாவும்
தண்டையுஞ் சிலம்பும் ஆர்க்குஞ்
  சரணமும் தெரியக் கண்டான்

தாமரை மலர்ந்தது போன்ற குளிர்ந்த ஆறுமுகங்களைக் கண்டான் சூரபன்மன். அந்த முகங்களிலே கருணை நிலவு வழிகிறது. பன்னிரு திருச்செவிகளைப் பார்த்தான். அவற்றில் பன்னிரண்டு குண்டலங்கள் மிளிர்ந்தன. ஆறு பொற்கிரீடங்கள்; அழகான திருமார்பு. தண்டையும் சிலம்பும் அணிந்திருந்த தாமரைப் பாதங்களையும் கண்டான். இதிலிருந்தே முருகன் குழந்தை என்று தெரிகிற தல்லவா? ஞானியருக்கும் தவசியருக்கும் எட்டாத முருகப் பெருமானை முடியிலிருந்து அடிவரை கண்டான் சூரபன்மன். அவனைப்பற்றி ஆச்சரியப்படுகிறார் கச்சியப்பர்.

பூவல கண்ட மெல்லாம்
  புரந்திடுஞ் சூரன் தன்னைத்
தீவினை யாளன் என்றே
  செப்புவர்; சிறப்பின் மிக்க
மூவிரு முகத்து வள்ளல்
  முன்னர்வந் தெய்தப் பெற்றான்
ஆ! இவன் தவத்திற்கன்றி
  அறத்திற்கும் முதல்வன் அன்றோ?

'எல்லோரும் சூரபன்மனைக் கொடியவன், தீவினையாளன் என்று சொன்னார்கள். அப்படிச் சொல்ல எனக்கு விருப்பம் இல்லை. அவன் எத்துணைக் காலம் தவம் செய்திருந்தால் ஆண்டவன் அவனுக்குக் காட்சி தருவார்? அவன் தவம் மட்டும் அல்ல; அறமும் செய்திருக்கிறான். கண்ணுக்குத் தெரியாமல் முந்தைய ஜென்மத்தில் செய்திருக்கிறான். தேவர்களும் முனிவர்களும் இன்னமும் இத்தன்மையன் என்று கண்டு கொள்ள முடியாத பரம் பொருளை நன்றாகக் கண்டவன் அன்றோ சூரபன்மன்?'' என்று கச்சியப்பர் வியந்து சொல்கிறார்.

சுவாமியைக் கண்டும் பரகதி கோரும் ...மையைப் பெறவில்லை சூரபன்மன். ...த்து வைத்தும் கொடுத்துவைக்க ...' என்று கூறுவது போல், சுவாமி ... பார்த்த சூரபன்மன் அவரை ...கி அருள் பெறவில்லை. கேலியாகச் ...த்தான்.

''குழந்தை முருகா! தேவர்கள் ...னை ஏமாற்றி இங்கே கொண்டு ...திருக்கிறார்கள். உன் மேல் எனக்குக் ...பம் ஏற்படவில்லை; பச்சாத்தாபம் ...ன் வருகிறது. உனக்கு உதவியாக ...ந்த சேனைகளின் ஆற்றல் அழிந்தது. ...த சேனைகள் புறங்கொடுத்து ஓடி ...ட்டன. கடைசியில் சின்னஞ்சிறு ...ழந்தையான நீ என்னுடன் போர் ...ய்ய வந்திருக்கிறாய். உன் தந்தை ...கிய சிவபெருமானும், திருமாலும், ...ம்மாவும் என்னுடன் போர் செய்ய ...ண்டும் என்று எண்ணியதில்லை. அப் ...படியிருக்கச் சிறுவனான நீ வந்திருக்கிறாய். ...ன்னை மன்னித்து விடுகிறேன். நீ ...போய் விளையாடிக் கொண்டிரு'' என்று ...ரபன்மன் கூறினான்.

சூரபன்மன் கூறியதைக் கேட்டு ...ம்பெருமான் புன்னகை புரிந்தார். ...கொடிய நஞ்சை நோக்கிக் குளிர்ந்த ...வாமுதம் பேசியது: ''சூரபன்ம! ...சொன்னபடி நான் குழந்தைதான். ...னால் என் கையில் உள்ள வேல் ...ழந்தையல்ல. நீ சிறந்த வீரன். ...யால் பேசாதே. கையால் பேசு'' ...என்றார் எம்பெருமான்.

...என்றும் புதிய, நினைக்குந்தோறும் ...புதுவமான அநுபவத்தைத் தருகிற ...னவ ரூபனான எம்பிரான் குழந்தை ...னே?

...எம்பெருமான் கூறியதைக் கேட்ட ...ரபன்மனுக்குக் கோபம் பொங் ...யது; அவனது கண்கள் அக்கினி ...வாலையைக் கக்கின. தனது பெரிய ...ல்லை வளைத்தான். கந்தவேள் ஒரு ...பெரும் வில்லை வளைத்து நாணொலி செய் ...ார். அண்டங்கள் யாவும் உடைவது ...போன்ற பெருமுழக்கம் ஏற்பட்டது. ...இதிகாச புராணங்களில் கண்டுள்ள ...போர்களிலெல்லாம் முதலிடம் பெறும் ...கத்தான போர் தொடங்கியது. ...மனுக்கும், சுவாமிக்கு மிடையே ...போர் தொடங்கியது. சூரபன்மன் ...கொடி பாணங்களைத் தொடுத்தான். ...அந்தப் பாணங்களினால் எம்பெரு ...மானும், அவரது தேரும் மறைக்கப் ...பட்டன. முருகப் பெருமான் விடுத்த ...பாணங்கள் சூரபன்மனின் பாணங்களை ...அழித்தன. சூரபன்மன் நஞ்சுதோய்ந்த ...பாணங்களை விடுத்தான். அந்தப் ...பாணங்களையும் அழித்தார் சுவாமி.

சூரபன்மனின் தோள்களை நோக்கிப் பதினன்கு பாணங்கள் விடுத்தார். அந்தப் பாணங்கள் சூரபன்மனின் தோள்களைத் துளைக்கவில்லை; மாறாக ஒடிந்து வீழ்ந்தன. அவனது வச்சிர உடலின் வலிமையைக் கண்ட எம் பெருமான், ஆயிரம் பாணங்களை விடுத்து வில்லை ஒடித்தார். சூரபன்மன் பிரம்மதேவர் அளித்திருந்த அயிற் படையை விடுத்தான். அதனை அழித் தார் சுவாமி.

பின்னர், சூரபன்மனின் தேரையும், அவனுக்கு உதவியாக வந்திருந்த பதினன்கு லட்சம் தேர்களையும் சிதைத்து அழித்தார். முருகப் பெருமா னது வல்லமையைக் கண்ட சூரபன்மன் முத்தலைச் சூலம் ஒன்றை எடுத்து அவர் மீது வீசினன். அதனைப் பாணங்களினால் வீழ்த்திய எம்பெருமான், சூரபன்ம னின் தேரின் குடையையும், அவனது மகுடத்தையும் வீழ்த்தினர். சூரனின் ஆபரணங்களையும் அவனது நெற்றியி லிருந்த வீரப் பட்டயத்தையும் அழித் தார். சூரபன்மனுக்கு ஏற்பட்ட பரிபவ நிலையைக் கண்ட அவனது வீரர்கள் முருகப் பெருமானைச் சூழ்ந்துகொண்டு கொடிய போர் செய்தனர். முருகப் பெருமான் தம் திருக் கரத்திலிருந்த சக்ராயுதத்தை ஏவினர். அந்த சக்ராயு தம் அசுரர்களின் சிரங்களை அறுத்தும், கரங்களைத் துண்டித்தும் சூரபன்மனின் நூறாயிரம் வெள்ளம் சேனைகளையும் அழித்து விட்டது.

இப்படியாக எம்பெருமானுக்கும், சூரபன்மனுக்கும் நீண்ட நேரம் போர் நடந்தது. 'சுவாமி, நீண்ட நேரம் போர் செய்ய வேண்டுமா?' என்ற கேள்வி வரும். எம்பெருமான் விளை யாடுகிறார் — பெற்றோர் குழந்தையுடன் விளையாடுவது போல்.

குழந்தையுடன் விளையாடுகிற பொழுது வருகிற ஆனந்தம் சுதானந் தம். கடவுளோடு விளையாடுகிறபோது வருகிற ஆனந்தம் சதானந்தம். சூர பன்மன் சுவாமிக்குக் குழந்தைதானே? அதனால் நீண்ட நேரம் விளையாடினர். அவனது போர் ஆற்றலை உலகுக்கு அறிவிக்க வேண்டும் என்றே, தாம் விரைவில் வென்று விடாமல் அதிக நேரம் விளையாடினர்.

நூறாயிரம் வெள்ளம் சேனைகளும் அழிந்து விட்டதைக் கண்ட சூரபன் மன், இனி நின்றால் அபஜயம் என்று எண்ணினன். அவமானம் அடைந்து குன்றிப் போனன். போர்க்களத்தி லிருந்து விலகி, தொங்கிய தலையுடன் தோட்டத்து வழியாக வீரமகேந்திர புரம் சென்றான். (தொடரும்)

# அம்மாவின் சமயோசிதம் உதவியது!














# கந்தன் கருணை

## 42. சீறி மோதிய சிவப் படைகள்

போர்க்களத்தில் சூரபன்மன் தோற்று ஓடியதைக் கண்டதும், திருமால், பிரம்மா, இந்திரன் முதலிய தேவர்கள் எல்லையற்ற மகிழ்ச்சியடைந்தனர். நன்றி நிறைந்த நெஞ்சத்துடன் முருகப் பெருமானை வணங்கித் துதித்தனர். ''எம்பெருமானே! தோல்வி என்பதையே அறியாத சூரபன்மன் இன்று தான் தேவரீரோடு போர் செய்து தோற்று ஓடியிருக்கிறான். தேவரீர் மட்டும் அவனைக் கொல்ல வேண்டும் என்று நினைத்திருந்தால் அவன் தப்பியோடியிருக்க முடியாது. தப்பி ஓடிய அவனைத் தாங்கள் வேலினால் அழிக்க வேண்டும்'' என்று வேண்டிக் கொண்டார்கள்.

திருமுருக கிருபானந்தவாரியார்

நின்ற கோபுரத்தை அடியோடு பெயர்த்துக் கடலில் வீசினர். திருப்பாற்கடலில் மந்தரகிரி அமிழ்ந்ததுபோல் அந்தக் கோபுரம் சமுத்திரத்தில் அமிழ்ந்தது. அதனுல் கடல் நீர் பொங்கியெழச் சூரபன்மனின் நகரத்து வீதிகள் யாவும் வெள்ளக் காடாயின. அந்த வெள்ளத்தில் மிதந்து வந்த மீன்களும் திமிங்கிலங்களும் அசுரர்களை விழுங்கின.

பூதசேனைகள் மதிலின் வடதுபுறக் கோபுரத்தைத் தகர்த்து, நகருக்குள்





ரபன்மன் போரில் தோற்று ஓடி
அறிந்த பூதசேனைகளும், அவற்
தலைவர்களும் ஆரவாரத்துடன்
பெருமான் அருகே வந்தனர்.
சூரபன்மனின் நகரத்து மதிலை
அவனது அரண்மனையையும்
த்துக் கடலில் வீசி யெறிவோம்''
கூறி, மதிற் பக்கம் படையெடுத்
சென்றனர். வீரமகேந்திரபுரியை
கையிட்டனர். மதிற்சுவர்களும்
புரங்களும் தரைமட்டமாயின.
ரமகேந்திரத்தின் காவலாளியான
ப் படைத் தளபதி அதிகோர
ரும் பூதப் படைத் தலைவர்களில்
ஒகிய மேகனுக்கும் கடும் போர்
ந்தது. மேகன் அதிகோரனின் மார்
ம் தோள்களிலும், கபாலத்திலும்
அறைந்தான்: அதிகோரன் அலறி
ந்து அழிந்தான். அதன் பின்னர்
சேனைகள் மதிலின் முதல் வாயி
ச் சென்று, அங்கே வானளாவி

நுழைந்து எதிர்த்து வந்த அசுரர்களையெல்லாம் கொன்று குவித்தார்கள். பூதசேனைகளுக்குத் திடீரென்று ஓர் எண்ணம் தோன்றியது. பட்டணத்துக்குள் பிரவேசிக்கும்போது தலைவனுன பெருமான் அல்லவா முன்செல்ல வேண்டும் என்று கருதினுர்கள். கந்தவேளை அழைத்து வருவதற்காக அவர் இருந்த இடத்துக்குத் திரும்பிச் சென்ருர்கள்.

**போ**ர்க்களத்தில் தோற்று ஓடி வந்த சூரபன்மன் தனது அரண்மனையின் அந்தப்புரத்துக்குச் சென்ருன். அவனது இன்னுயிர் மனைவி பதுமகோமளை வாசம் செய்யும் மாளிகையை அடைந்தும் அவளைப் பார்க்கவில்லை; பேசவுமில்லை. உணவும் கொள்ளாது ஒருவருடனும் பேசாது, தனியாக அமர்ந்து தனக்குப் போர்க்களத்தில் நேர்ந்த அவமானத்தையெல்லாம் எண்ணி மனம் குமுறிக் கொண்டிருந்தான்.

சூரபன்மன் போரில் தோற்று வந்த
செய்தியைத் தூதர்கள் மூலம் கேட்ட
பானுகோபன் துடி துடித்து, மனம்
புழுங்கினுன். சூரபன்மன் இருக்கும்
இடத்துக்குச் சென்று தந்தையை
வணங்கினுன். ''நீங்கள் ஏனப்பா யுத்
தத்துக்குச் சென்றீர்கள்? உங்கள் உத்
தரவுப்படி நேற்று நான் யுத்தத்துக்குச்
சென்று கடுமையாகப் போர் செய்
தேன். நான் மோசனுஸ்திரத்தை ஏவிக்
குமாரனின் வீரர்களது வலிமையை
இழக்கச் செய்து வெற்றிவாகை சூடிக்
கொண்டிருந்தேன். அந்தச் சமயம்
பார்த்து அந்தக் குமாரன் என் மீது
அமோகாஸ்திரத்தை விடுத்தான். அத
ஞல் என்னுடைய மோசனுஸ்திரத்தின்
வலிமை குன்றியது. வலிமை இழந்து
மயங்கிக் கிடந்த அவனது வீரர்களும்
தெளிவுபெற்று விட்டார்கள். எனினும்
நான் உயிருடனிருக்கும் வரையில் அவன்
என்னை வென்று விட்டதாகச் சொல்ல
முடியுமா? இது போல் ஓரிரு சறுக்
கல்கள் நேரிடுவது யுத்தத்தில் சகஜம்
தானே? எனவே, இன்றேனும் எதிரி
களை எப்படியும் கொன்று அழித்துவிட
வேண்டுமென்று நான் ஆயத்தமாகிக்
கொண்டிருந்தேன். அதற்குள் தாங்
களே போருக்குச் சென்றதாக அறிந்
தேன். அழியாத வரம் பெற்ற தாங்கள்
ஒரு பாலகனுடன் போருக்குச் செல்ல
லாமா? நடந்தது நடந்து விட்டது.
நாளைக்கு நானே போருக்குச் சென்று
வெற்றி வீரனுகத் திரும்புகிறேன்.
எனக்கு[விடை தாருங்கள்'' என்றுன்.

''மகனே! நீ பேசுவது நமக்குஉவகை
தருகிறது. எனினும் அந்தச் சரவண
பவனின் ஆற்றலை நீ சரியாகப் புரிந்து
கொள்ளவில்லை. நானும் முன்பு அவனைச்
சிறுவனுகவே மதித்தேன். ஆனுல் அவ
னுடன் போர் செய்ததிலிருந்து மும்
மூர்த்திகள் சேர்ந்தாலும் அவனை வெல்ல
முடியாது என உணருகிறேன். அவ
னுடன் எதிர் நின்று போர் செய்ய என்
ஒருவனுல்தான் முடியும். அந்தக்
குமாரனின் இரண்டாயிரம் வெள்ளம்
சேனைகளுக்கும் தலைவனு யிருக்கிற வீர
வாகுவை நீ தனிமையில் போருக்கு
அழைத்து வெற்றி கொள். அதுவே
உன் சக்திக்குத் தகுந்த செயல். இதற்
காக நாளைய தினமே சேனைகளுடன்
புறப்படு'' என்று விடை கொடுத்தான்.

தந்தையிடம் விடைபெற்று அரண்
மனைக்கு வெளியே வந்த பானுகோப
னிடம் மகேந்திரபுரியின் வீரர்கள் ஓடி
வந்து வணங்கினுர்கள்.

''அரசிளங்குமரரே! பூதசேனைகள்
திரண்டு வந்து தலைநகரை முற்றுகை
யிட்டு மதில்களை இடித்துத் தகர்த்து
விட்டனர். அதிகோரனையும், அ
வீரர்கள் பலரையும் அழித்து விட்டன
நகருக்குள் கடல் நீர் புகுந்து வ
கிறது'' என்று கூறினுர்கள்.

பானுகோபன் உடனே அரும் சக்தி
பெற்ற அசுரத் தச்சர்களை வரவழைத்
மதில்களைச் சீர்படுத்தும்படி ஆணை
டான். மகேந்திர ஜாலம் போல் அ
தச்சர்கள் விரைவிலேயே முன்
காட்டிலும் பன்மடங்கு எழிலும்
வும் பொருந்திய மதில்களை மகேந்
புரிக்குக் காப்பாக அமைத்தனர். ப
யிரம் வெள்ளம் படைகளுக்குத் த
ஞன மகாகாயனை எல்லைக் காவலு
வைத்தான் பானுகோபன்.

அன்றிரவு நீங்கியது. கதிர
கதிர்களை வீசி இருளை நீக்கி ஒளி
பெய்தான். பானுகோபன் தன் கா
கடன்களை முடித்துக் கொண்டா
தனது பாட்டியாகிய மாயாதேவி
நினைந்து வேண்டினுன். மாயை அ
கணமே அவன் முன் தோன்றி, ''
தாய்! என்னை அழைத்த காரண
என்ன?'' என்றுள்.

''பாட்டி! நான் நால்வ
சேனைகளுடன் சென்று போரி
முருகனின் தூதனிடம் வலிமை குன்
திரும்பி விட்டேன். அதனுல் எனக்
பெரும் அவமானம் நேர்ந்தது
மாருத பழியும் நேர்ந்தது, பாட்
என்னேடு போர் செய்து வெற்றிபெ
பகைவர்களை இன்று நான் வெல்
தற்குப் படை தந்தருள்க'' எ
பானுகோபன் வேண்டிக் கொண்ட

மாயா தேவி ஒரு மாயப் ப
கலத்தை உண்டாக்கிப் பானுகோ
கையில் கொடுத்தாள். ''பௌத்தி
இப்படைக் கலம் பகைவர்களின் அ
மயக்கும். இதனை விடுத்தால் வெ
உனக்கே'' என்று கூறி மீண்டாள்.

பானுகோபன் மிகவும் மகி
போர்க் கோலம் பூண்டு தேரில்
புறப்பட்டான். அளவற்ற தெய்வ
திரங்களையும் அவன் கொண்டு
றுன். அவனுடன் நாற்பதின
வெள்ளம் சேனைகள் சென்றன.

மதிற்புறத்தை அடைந்த
ராஜகுமாரன் ஆயிரங் குதிரை
களைக் கொண்ட ஒரு தூதனை அழை
''நீ கந்தப்பனின் பாசறைக்குச்
வாய். வீரவாகு தேவரிடம்,
றைய யுத்தத்தில் உனது உயிரைக்
ருவதற்காகப் பானுகோபன் வந்
கிருன். உடனே விரைந்து போரு
புறப்படு' என்று தூது சொல்லி
என்று அனுப்பினுன்.

வீரவாகு தேவர், தூதன்
னதைக் கேட்டுச் சிரித்தார். ''



# "அப்பா அம்மா செய்யறதேல்லாம் தப்பு தான் . . . ஆனல்

"...ஆனுல் இந்த விஷயத்தில் அவர்கள் செய்வது சரியான காரியம்தான். அவர்கள்
இரண்டு பேருக்குமே பாங்க் ஆ:ப் பரோடாவில் கணக்கு இருக்கிறது. எனக்கு பதினலு
வயதானதும் நானும் ஒரு கணக்கு வைத்துக்கொள்ளலாம் என்கிருர்கள். நானே பணம்
போட்டு வாங்கலாம். அதோடு 4% வட்டியும் கிடைக்கும். அதுவரை என் சிற
உண்டிப்பெட்டியை நான் நிரப்பிவருகிறேன்..."

இன்றைய மக்கள், எத்தனையோ வகை தொழில்புரியும் மக்கள், பாங்க் ஆ:ப் பரோடாவில்
கணக்கு வைத்துக்கொள்கிருர்கள். (அவர்கள் அதையே பயன்படுத்த காரணங்கள்
என்ன? அந்த பாங்கு நவீன வசதிகளுடன் சீரான முறையில் நடைபெறுகிறது; மக்கள்
ஆலோசனை பெற அங்கே போகலாம். அங்கே உதவி கிடைக்கிறது என்பதும் அங்கு
அவர்களை கவனித்துப் பணிபுரிகிருர்கள் என்பதும் பொதுஜனங்களுக்குத் தெரியும்).
ஆம், பாங்க் ஆ:ப் பரோடா ஒவ்வொரு வாடிக்கைக்காரரின் தேவையையும் உணர்ந்து
சேவை செய்கிறது. எனக்கும் கூட.

மதராஸ் ராஜ்யத்தில் எங்களுக்கு கோயம்பத்தூர், லால்குடி, மணச்சநல்லூர்,
தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளி, இவ்விடங்களிலும், மதராஸ் தலைநகரில், கார்த் பீச்ரோடு
(முக்கிய கிளைக் காரியாலயம்), ஏரபாலு செட்டி தெரு, மைலாபூர், தியாகராயநகர்,
அம்பத்தூர், மௌண்ட் ரோடு, இவ்விடங்களிலும் கிளைகள் உள்ளன.

## மைனர் கணக்கு

தி
பாங்க் ஆ:ப் பரோடா
லிமிடெட்
(ஸ்தாபிதம்: 1908)
தலைமை ஆபீஸ்: பரோடா

'உங்கள் சேவை எங்கள் கடமை' என்ற தலைப்பில் எங்கள் பல்வேறுவகைப் பணிகளை
விளக்கும் இலவச வெளியீட்டைக் கேட்டுப் பெறுங்கள்

...ன் உயிரைக் கவருவதற்காக நான் ...தா வருகிறேன் என்று அவனிடம் ...ச் சொல்'' என்று கூறினர். பின் ...துணைவர்கள் சூழக் கந்தக் கடவுளை ...அவரது திருவடிகளை வணங்கி ...ர். ''பானுகோபன் மாயை ...தால் என் வேல் வந்து துணை ...யும்'' என்று அருளி அவர்களுக்கு ...தந்து அனுப்பினர் ஆறுமுகன். ...யைதனை அழிக்கும் ஞானத்தின் ...வேயன்றோ வேலாயுதம் ?

...த சேனைகளும் அவுண சேனைகளும் ...தின. அப்போரில் பூதர்கள் சிலரும் ...ணர்கள் பலரும் இறந்தனர். அன்று ...வாகுவுக்கும் பானுகோபனுக்கு ...டயே அற்புதமான போர் நடை ...ற்றது. பானுகோபன் சிறியெழுந்து ...ணப் படையை விடுத்தான். அது ...காலத்துக் கடல் வெள்ளம் ...ல் பரந்து விரைந்தது. வீரவாகு ...ர் அதற்கு எதிராக அக்கினிப் ...டையை விடுத்தார். அந்தப் படையி ...ந்து புகையும் பொறியும் எழுந்து ...டங்கள் வெடித்தன. கங்கை வற்றி ...கடல்கள் சுருங்கி மலைகள் வெடித்து ...ம் பிளந்தது. அக்கினிப் படை ...கம் எல்லாம் எரிய வந்து பானு ...பனின் வருணப் படையை வற்றச் ...ய்து விழுங்கியது. பானுகோபன் ...யுப் படையை விடுத்தான். யுகாந்த ...ருதம் போல் சீறிச் சென்ற அந்தப் ...ட அக்கினிப் படையை அணைத்துப் ...ப் படைகளைக் கொல்ல வந்தது. ...வாகு தேவர் நாகப் படையை ...த்தார். அந்தப் படை அளவற்ற ...ம்புகளின் கூட்டமாய்ச் சென்று, ...யுப் படையை உண்டது. பானு ...பன் கருடப் படையை விடுத்தான். ...னல் நாகப் படை அழிந்தது. கோப ...ற வீரவாகுதேவர் நந்திப் படையை ...னர். அந்தப் படை எண்ணற்ற ...ங்களின் உருவுடன் அண்டங்கள் ...ர ஆரவாரம் செய்து சென்று ...டப் படையை அழித்தது.' பானு ...பன் இமயப் படையை விடுத்தான். நந்திப் படை அதனையும் அழித்தது. நந்திப் படையின் ஆற்றலைக் கண்ட பானுகோபன் பிரம்மப் படையை விடுத்தான். அந்தப் படையும் நந்திப் படையைக் கண்டு வணங்கிச் சென்றது. பானுகோபன் விஷ்ணுப் படையை ஏவினன். அது நந்திப் படையுடன் போர் புரிந்து கொண்டிருந்த போது வீரவாகு தேவர் வீரபத்திரப் படையைச் செலுத்தினர். வீரபத்திரப் படை விஷ்ணுப் படையை அழித்தது. அதனைக் கண்ட பானுகோபன் சிவப் படையை எடுத்து வழிபட்டு விடுத்தான். உடனே வீரவாகு தேவரும் சிவப் படையைப் பூசித்து விடுத்தார். இரு சிவப் படைக் கலங்களும் ஊழிக் காற்றையும், தீயையும், நஞ்சையும், நீரையும், காளிக் கூட்டங்களையும் காலர் கூட்டங்களையும் உண்டாக்கிக் கொண்டு எங்கும் போர் செய்தன. உருத்திர கணங்களும் தோன்றிப் போர் செய்தனர். பலவிதமான ஆயுதங்களும் மழைபோல் பொழிந்தன. மேரு மலை துகளாயிற்று; கடல் வற்றியது; உயிர்கள் யாவும் துடித்து உலைந்தன; குலமலைகள் குலைந்தன; அச்சத்தினல் பூதேவியும், சீதேவியும் திருமாலைத் தழுவிக் கொண்டார்கள். தேவர்கள் நிலைதடுமாறி ஓட, பானுகோபனுடன் வந்த சேனைகள் விலகாமல் நின்று யுத்த சக்தி தாங்க முடியாமல் அழிந்தன.

பானுகோபன் ஒருவனே உயிர் பிழைத்து நின்றான். ''ஊழிக் காலம் இதுதானே?'' என்று அஞ்சி நின்றான்.

வீரமகேந்திரபுரி அஞ்சி நடுங்குவதைக் கண்ட சூரபன்மன், ''இவ்வாறு நிகழ்வதற்கு என்ன காரணம்?'' என்று அறிந்து வருமாறு தூதர்களை அனுப்பி நடந்தவற்றை அறிந்தான். 'பானுகோபன் சிவப் படையை விடுத்தும் வீரவாகுவை வெற்றிகொள்ள முடியவில்லையா?' என்று ஆச்சரியமும் ஆத்திரமும் ஒருங்கே அடைந்தான். (தொடரும்)







## ன்னதான் முடிவு?

படத்தின் ஆரம்பம் முதல் இறுதிவரையில் முடிவு என்னவா க்கும் என்று ஊகிக்கும் வண்ணம் விறுவிறுப்பும், சுவாரசியமும் றைந்திருக்கிறது. குற்றம் செய்தவன் தான் செய்த குற்றத்தை ர்ந்து மனப்பூர்வமாக மன்னிப்புக் கோருகிருன். குற்றம் சுமத்தப் ட நிரபராதி சிறைத் தண்டனையை அனுபவித்துவிட்டு விடுதலை டந்து பழிவாங்கும் உணர்ச்சியோடு துடிக்கிருன். பொங்கி யெழும் ந்தப் பழி வாங்கும் உணர்ச்சி எப்படித் தணிந்துவிடுகிறது என்பதை ந்தப் படம் அருமையாய் எடுத்துக்காட்டுகிறது. நடிப்புத் திறமையும், டுக்கமான பாத்திரப் படைப்பும் இந்தப் படத்தின் உயிர்நாடிகளாய் ளங்குகின்றன. தமிழ்ப் படங்களின் தரம் குறைவதற்குத் தோன்ருத் ணையாயிருந்து வரும் காதல் காட்சிகளின் வாடையே இல்லாமல் ருப்பது ஒரு விசேஷம். வழக்கமான முதல் இரவுக் காட்சிகள்கூட ல்லையென்ருல் பார்த்துக் கொள்ளுங்களேன்! பாடல்கள் மூன்றே ன்றுதான்! குறைந்த வசனம்; நிறைந்த நடிப்பு!

நடிப்புக்கு முதலிடம் பெறுபவர் பாலையாதான். குற்றம் உள்ள நெஞ்சம் குறுகுறுக்கும் என்பார்கள். அவர் நெஞ்சு மட்டும் குறுகுறுக்க வில்லை; உடல் முழுவதுமே செய்த குற்றத்துக்கு இரங்கி வருந்துகிறது. பழம் பெரும் நடிகரை எவ்வளவு பாராட்டினுலும் தகும்.

இந்தப் படத்தில்தான் ஏ. வி. எம். ராஜன் தம் பாத்திரத்துக்கு ஏற்ப நடித்திருக்கிருர். பழி வாங்கும் உணர்ச்சியில் துடிக்கும் துடிப்பில் நடிப்பின் சிகரத்தைத் தொட்டு விடுகிருர்.

அஞ்சலி தேவியின் நடிப்பில் காணும் இயல்பான போக்கு நன்ருயிருக்கிறது. வி. எஸ். ராகவனுக்கு இந்தப் படத்தில் தான் சரியான 'சான்ஸ்' கிடைத்திருக்கிறது. கிடைத்த சான்ஸைக் கைவிடாமல் பயன்படுத்தி விட்டார். குடிகாரப் பிரபுவாக வரும் வி. கே. ராமசாமிக்கு இணை அவரேதான்! அபாரமான நடிப்பு! வசந்தியின் நடிப்பு இயற்கையா யிருக்கிறது.

'கலைதனில் விழுந்த கலை யெடுப்பாய்' என்ற கொத்தமங்கலம் சுப்புவின் நடன அபிநயப் பாட்டு நவீன பாணிக் கதம்ப நடனங்களுக்கு நல்ல சாட்டையடி கொடுக்கிறது. அந்தக் காட்சி நன்ருகப் படமாக்கப்பட் டிருக்கிறது.

சினிமாக் கதைக்காக வட நாட்டுக்குக் காவடி எடுக்காமல் தமிழ் நாட்டுச் சரக்கைப் படமாக்கி யிருப்பது பாராட்டுக்குரியது.

மூலக்கதை தமிழ் எழுத்தாளர் 'மகரிஷி'யினுடையது. கதை, வசனம், டைரக்ஷன் யாவும் கே. எஸ். கோபாலகிருஷ்ணனுடையது. மூன்றே மாதங்களில் இச்சிறந்த படத்தைத் தயாரித்திருப்பது அவருடைய திறமைக்கு ஓர் எடுத்துக்காட்டு.

என்னதான் முடிவு: தமிழ்ப் படங்களுக்கு நல்ல எதிர்காலம் இருக்கிறது என்பதுதான்!

## நீலவேணி (நாடகம்)

'சமூக நாடகங்களைத் தம் வாழ்வோடு ஒட்டிய சம்பவங்களாக ரசிகர்கள் கருதுவதால் சிறு குற்றங் குறைகள் இருந்தாலும் அவற்றை மறந்து விடுவார்கள். ஆனுல் சரித்திர நாடகத்துக்கு வரும்போது ரசிகர்கள் பழங்காலத்தைப் பற்றிய அளவற்ற கற்பனைகளுடன் வருவார்கள். அவர்கள் மனத்தைத் திருப்தி செய்வதென்பது இலேசான காரியமல்ல.' இப்படித் தலைசிறந்த தொழில்துறை நடிகர் திரு எம். ஜி. ஆர். 'நீலவேணி' சரித்திர நாடகத்தில் கலந்துகொண்ட பயில்முறை நடிகர்களின் சிறப்பைப் பாராட்டும்போது கூறினுர்.

பர்மாஷெல் கிளப்பின் பயில்முறை நடிகர்கள் வித்வான் வே. லக்ஷ்மணன் எழுதிய இரண்டாம் நந்திவர்மன் காலத்திய சரித்திர நவீனமான 'நீலவேணி'யை முதல் முறையாக அண்ணுமலை மன்றத்தில் அரங்கேற்றினர். நாடகத்தைப் பார்த்தபொழுது இது முதல் அரங்கேற்றம் என்று தெரியவில்லை. பலமுறை பண்பட்டு நடித்த நாடகத்தைப் பார்த்த திருப்தி நிலவியது. உதயசந்திரனுக வந்த திரு டி. என். வேங்கடராமன் தம் தலைசிறந்த நடிப்பினுல் அன்று பலரது உள்ளங்களைக் கவர்ந்தார். தொழில்துறை நடிகர்களுக்குப் பயில்துறை நடிகர்கள் சளைத்தவர்கள் இல்லை என்பதை நிரூபித்தார்.

பாண்டிய மன்னன் கயற்கண்ணி என்னும் பாவையின் மயக்கத்தில் தன் மனைவி கோப்பெருந்தேவியையும், செல்வத் திருமகள் நீலவேணியையும் புறக்கணிக்கிருன். நீலவேணி கொடிய வில்லன்களான காலவர்மன், சித்திரமாயன் இவர்களின் பிடியிலிருந்து தப்பி உதயசந்திரனிடம் தன் மனத்தைப் பறி கொடுக்கிருள். உதயசந்திரன் - நீலவேணி காதல் காட்சிகள் சினிமாக் காட்சிகளைப் பார்ப்பது போல் அமைந்திருந்தன. பாசம், நீதி, அறம் இவற்றிடையே நிகழ்ந்த கடும் போட்டியில் அறம் வெல்கிறது. நீலவேணியைத் தீயவர்களிடமிருந்து மீட்கிருன் உதயசந்திரன்.

காட்சிக்குக் காட்சி விருவிருப்பும், என்ன நடக்குமோ என்ற ஆவலைத் தூண்டும் முறையிலும் நாடகம் அமைந்தது, பர்மாஷெல் பயில்முறைக் குழுவினருக்குப் பாராட்டைத் தேடித் தந்தது.



# 43. முருகன் மகிமை




திருமுருக கிருபானந்தவாரி

இரு சிவப் படைக் கலங்களும் தமது வலியைச் சுருக்கிக் கொண்டு தம்மால் அழிந்த மலை, கடல், அண்டங்கள் முதலியவற்றை முன்போல் நிலை நிறுத்தித் தம்மைச் செலுத்தியவர்களிடமே மீண்டும் சென்றன. அழிக்கவும் ஆக்கவும் ஆற்றல் பெற்ற ஆயுதம் அல்லவா அது...?

வீரவாகு தேவருடன் செய்த யுத்தத்தில், உடன் வந்த சேனைகளையெல்லாம் இழந்து தனித்து நின்றான் பானுகோபன். 'தனியொருவனாக வீரவாகு தேவருடன் போர் செய்தால் தான் இறப்பது உறுதி. ஆகவே, இனி யுத்தகளத்தில் நிற்பதும் சரியன்று' என்று அஞ்சி வானில் மறைந்து நின்றான். அவன் மறைந்தோடியதைக் கண்ட பூத சேனைகள், 'பானுகோபன் தோற்று விட்டான்' என்று ஆரவாரம் செய்தன. அப்போது பொழுது சாய்ந்துவிட்டது. பூதப் படைகள் யாவும் பாசறைக்குத் திரும்பின.

வானில் மறைந்து நின்ற பானுகோபன், 'இன்றும் நான் தோல்வியுடன் திரும்பினால் நம் புகழ் அடியோடு அழியும். ஆகவே, பகைவரை எப்படியேனும் வெல்ல வேண்டும். வீரவாகுவுக்கு எதிரே நின்று போர் செய்து வெற்றி கொள்ள முடியாது. எனவே, தந்திரத்தினால்தான் வெல்ல வேண்டும்' என்று எண்ணினான். தனது பாட்டி மாயாதேவி கொடுத்த மாயப் படைக்கலத்தை எடுத்து வழிபட்டு, "நீ ஒருவரும் அறியாவண்ணம் சென்று பகைவர்கள் உயிரையும், உணர்வையும் கெடுத்து நன்னீர்க் கடலில் எறிவாய்" என்று சொல்லி விடுத்தான்.

உண்மையான மகாவீரர்கள் எடுத்த எடுப்பிலேயே சக்தி மிகுந்த அஸ்திரங்களை உபயோகிக்க மாட்டார்கள். ஆயுதத்தின் ஆற்றலைவிடத் தங்களது ஆற்றலைக் காட்டியே வெல்ல முயலுவார்கள். முடியாமற் போனால்தான் ஆற்றல் மிகுந்த அஸ்திரங்களை எய்வார்கள். நோய் முற்றினால்தானே வைத்தியர் சக்தி மிகுந்த மருந்துகளைத் தருவார்? யுத்தம் தீவிரமடைந்தால்தான் மகாவீரர்கள் ஆயுதங்களைப் பிரயோகிப்பார்கள்.

வானிலிருந்து பானுகோபன் மாயப் படையைச் செலுத்தினான். அது யாரும் அறியாவண்ணம் பூமியை வந்தடைந்தது. பூத சேனைகளின் அறிவை மயக்கியது. ஆயினும் எம்பிரானின் அருள் பெற்ற அவர்களின் உயிரைக் கவர அதனால் முடியவில்லை. மாயப்படை ஊழிக் காற்றின் வடிவெடுத்து ஆலகால விஷம்போல் பரந்தது. வீரவாகு தேவர் முதலிய அனைவரையும் விண் வழியே எடுத்துச் சென்று ஆறுகளையும் கடல்களையும் கடந்து நன்னீர்க் கடலில் அவர்களை அழுத்தியது. அவர்கள் அங்கிருந்து வெளியே கிளம்பாதபடி தடுத்தது.

அதனைக் கண்ட பானுகோபன் மகிழ்ச்சிப் பெருக்கினால் ஜயசங்கம் ஊதினான். விண் வழியாக விரைந்து வீரமகேந்திரம் சென்றான். சூரபன்மனைப் பணிந்து, "இன்று நான் பல வாறுகப் போராடி வீரவாகுவையும், இலக்கத்தெண்மரையும் ஆயிரம் வெள்ளம் பூத சேனைகளையும் கொன்று வென்றேன். அவர்களது உடல்களைச் சுத்தோதக் கடலில் இட்டேன். அப்பா! இனி நீங்கள் வருத்தப்பட வேண்டாம். நான் படைகளோடு நாளை சென்று ஆறுமுகனை வென்று, மால், அயன், இந்திரன் முதலியோரைப் பிடித்துக் கொண்டு வருகிறேன்" என்றான்.

பானுகோபன் கூறியதைக் கேட்ட சூரபன்மன் உளம் உவந்து மகனைத் தழுவிக் கொண்டான். "மகனே! ஒ



...ன் தந்தைக்குச் செய்ய வேண்டி ...தை நீ செய்துவிட்டாய். உன்னால் நம் ...லம் உயர்ந்தது. இனி நமக்கு ஒரு ...றையுமில்லை. நீ கூறியபடியே நாளைக் ...லே சென்று முருகனை வென்று பிர ...தி தேவரைப் பிடித்துக் கொண்டு ...வா'' என்று கூறிப் புதிய அணிகலன் ...ளை அணிவித்து வாழ்த்தி அனுப்பி ...ன். பானுகோபன் தன் அரண் ...னைக்கு வந்து அளவிலா மகிழ்ச்சி ...யோடிருந்தான். வீரமகேந்திரபுரி முழு ...வதும் அன்றிரவு ஒரே களியாட்டம்; வெற்றிக் கொண்டாட்டம்.

பானுகோபனின் மாயப் படையால் வீரவாகு தேவர் முதலியோர் நன்னீர்க் கடலில் அழுந்திவிட்டதைக் . கண்டு தேவர்கள் பதைத்தோடினர். நாரத மகரிஷி முருகப் பெருமானிடம் தேவர்களுக்கு முன்னே விரைந்தோடி விஷயத்தைத் தெரிவித்தார்.

கந்தவேள் தமது வேற் படையை நோக்கினார்.. ''நீ நன்னீர்க் கடலுக்குப் போய் அங்கிருக்கிற மாயப் படையை அழித்து, வீரவாகு முதலியோர் மயக்கத்தை நீக்கி அவர்களை இங்கே அழைத்து வா'' என்று பணித்து வேலை விடுவித்தருளினார் விமலர்.

கங்கை அன்னதோர் வாலிதா
  கியபுனற் கடற்போய்
அங்கண் வைகிய மாயமாப்
  படையினை அழித்து
வெங்கண் வீரர்மால் அகற்றியே
  அனையவர் விரைவில்
இங்கு வந்திடத் தந்துநீ
  செல்கென இசைத்தான்

வேற்படை ஆயிரம் கோடி சூரிய ஒளி போல் புறப்பட்டது. அந்தப் படையுடன் வருணன், வாயு, இந்திரன், அயன், அரி இவர்களின் படைகள் சேவித்துக் கொண்டு உடன் சென்றன. வேற்படை ஆறுகளையும் ஏழு கடல்களையும் கடந்து நன்னீர்க் கடலை யடைந்தது. வேலை வணங்கி, ''மாயப் படையை வெல்லும் திறனின்றி நான் செயலற்றிருக்கிறேனே யன்றிப் பூதப் படைகளுக்குப் பிழையேதும் செய்யவில்லை'' என்று கூறித் தொழுதான். வேற்படை கடலரசனுக்கு அருள் செய்தது. கடலில் ஆழ்ந்து கிடந்த அனைவருக்கும் வெகு எளிதில் உணர்ச்சி தந்தது. அவ்வளவில் மாயப் படை தானாகவே அழிந்தது. ஒளி வந்தால் இருள் தானாகவே ஓட வேண்டியதுதானே? தீபத்தை எடுத்து வருபவர் இருளை நோக்கிப் 'போ' எனப் பிடித்துத் தள்ள வேண்டியதில்லையே!

நன்னீர்க் கடலில் ஆழ்ந்திருந்த வீரவாகு முதலியோர் எழுந்து கடலுக்கு மேல் வந்தனர். கரையற்ற கருணைக் கடலைப் பெருக்கிய கந்தவேளைத் தியானித்து நின்றனர். வேற் படையை வணங்கித் துதித்தனர். வணங்கிய படியே வேற் படைக்குப் பின்னால் சென்றனர். வேல், முருகப் பெருமானின் திருக்கரத்தில் வந்தமர்ந்தது.

வேற் படைக்குப் பின்னே சென்ற வீரவாகு தேவர், ''பானுகோபனைக் கொன்றாலன்றிக் கந்தவேளைச் சேவிக்கச் செல்ல மாட்டேன். பானுகோபனைக் கொல்லவில்லையென்றால் வில்லுடன் நெருப்பில் புகுவேன்'' என்று சபதம் செய்தார்.

ஃ ஃ ஃ

அப்போது நள்ளிரவு. வீரவாகு தேவரும் துணைவர்களும் வீரமகேந்திர புரியின் மேற்கு வாயிலையடைந்தனர். நகரம் ஒரே வெற்றிக் களியாட்டமாயிருந்தது. பூத சேனைகள் கடல் உடைந்தாற்போல் ஆரவாரம் செய்


LIFEBUOY
for health

அந்த ஆரவார ஒலியைக் கேட்ட ...ர்கள் வானை நோக்கினார்கள். ...னது உடல் வியர்த்தது. வெஞ் ... கொண்டார்கள். வாரிதியின் ... அழுத்தப்பட்டவர் எப்படி ... வாழ்வும் வலிவும் பெற்றனர் ... வியந்து நடுங்கினர்.

...மகேந்திரபுரியின் மேற்கு வாயி... புலிமுகன் என்பவன் காவல் காத்... கொண்டிருந்தான். மாயவளிடத்... தோன்றிய அவன் அறக் கடவுளை ... பிடித்துச் சிறை செய்தவன். தீச் ... போன்ற உடலைக் கொண்டிருந்த ... நஞ்சினும் கொடியவன். அவன் ...வகைப் படைகளுடனும் பூத ...னைகளை எதிர்த்தான். பூத சேனை ... அவுணரும் கடும் போர் புரிந் ... புலிமுகனும் சிங்கன் என்னும் ... சேனைத் தலைவனும் சூலப் படை ... போர் செய்தார்கள். இருவரும் ...த்தினால் ஒருவரையொருவர் குத்தி ... சூலங்கள் இருவருடைய மார்பு ...யும் பிளந்து கொண்டு முதுகில் ...ப்பட்டன. இருவரது உடல்களி ...ன்றும் உதிரம் பெருகியது. மீண்டும் ...டும் உடலில் பல இடங்களில் சூலத் ... குத்தி அவர்கள் போர் செய் ... இருவரிடத்துமிருந்த சூலங்கள் ...து வீழ்ந்தன. சூலங்களை இழந்த ...வரும் மற்போர் செய்தனர். முடி... சிங்கன் புலிமுகனைக் கொன்றான்.

...ன்னர் பூதசேனைகள் நகரத்திற்குள் ...ந்து மதில்களையும் மாளிகைகளையும் ...த்துத் தள்ளி அழித்தார்கள். அவு...களைக் கூட்டம் கூட்டமாக அழித் ...ர்கள். வீரவாகு தேவர் அக்கினிப் ...டையையும் வாயுப் படையையும் ... ''இந் நகரத்தை எரியுங்கள்'' ...று பணித்தார். இரண்டு படை...ம் நகரை எரிக்கத் தொடங்கின. ...ன் சில இடங்கள் எரிந்தன; சில ...ங்கள் கரிந்தன; சில இடங்கள் ...டிந்தன; சில இடங்கள் வெடித்தன. ... இடங்கள் புகைந்தன. சிவபெரு...னின் திருமுறுவலால் முப்புரம் ...ந்தது போல் அந்நகர் எரிந்தது.

...கரம் எரிவதைக் கண்ட தூதர் சிலர் ...பன்மனிடம் ஓடினார்கள். நடந்த ...ச்சிகளை யெல்லாம் அவனுக்குத் ...ரிவித்தனர்.

...ரபன்மன் மிகுந்த சினம் கொண்...ன். ஒற்றர்களை அழைத்தான். ...ங்கள் எல்லோரும் ஆகாயத்துக்குச் ...ந்து சென்று, உலகனைத்தையும் ...ழிக்காலத்தில் அழிக்கச் செல்வதற் ... உறங்கிக் கொண்டிருக்கும் மேகங் ... இங்கே அழைத்து வாருங்கள்''



''நீங்கள் நாடகத்திலே வில்லனாக நடிக்கலாம். அதற்காக என்னிடம் கொஞ்சும்போதுகூட வில்லன் பார்வை, வில்லன் சிரிப்பு வேணுமா அத்தான்?''

என்று உத்தரவிட்டான். அதன்படி ஒற்றர்கள் ஆகாயத்துக்குச் சென்று மேகங்களைச் சூரபன்மனிடம் அழைத்து வந்தார்கள். ''மேகங்காள்! இந் நகரத்தை எரிக்கின்ற தீயை அணையுங்கள்'' என்று பணித்தான் சூரபன்மன். அவனது ஆணைப்படி ஊழிமேகங்கள் மழை பொழிந்தன. அதனால் தீ தணிந்தது.

மழை பொழிந்து தீ அணைந்ததைக் கண்ட வீரவாகு தேவர், தீயை மேகங்கள்தான் அழித்தனவோ, அல்லது இதுவும் அவுணர்களின் மாயமோ என்று பலவாறாக யோசித்துக்கொண்டிருந்தார்.

நாரத முனிவர் அங்கு தோன்றினார். சூரபன்மனின் கட்டளைக் கிணங்க ஊழிக் காலத்து மேகங்கள் இந்தத் தீயைத் தணித்தன. ''வீரரே! இதற்கு மாற்றாக வடவாமுகாக்கினிப் படையைச் செலுத்துங்கள்'' என்று கூறிவிட்டு மறைந்தார்.

வீரவாகு தேவர் வடவாமுகாக்கினிப் படையைச் செலுத்தினார். அப்படை விரைந்து சென்று மேகக் கூட்டங்களில் உள்ள நீரைக் கடிதில் உண்டு வீரவாகு தேவரிடம் திரும்பி வந்தது. எதிரிக்கு உதவி செய்த போதிலும், வலிவிழந்து நின்ற முகிற் கூட்டங்களிடமும் கந்தவேள் கருணை பாலித்தார். வலிமை பெற்ற அம்மேகங்கள் நகரினின்று வெளியேறிப் பெரும் புறக் கடலை நோக்கி ஓடின. பூத சேனைகள் பெரும் ஆரவாரம் செய்தன. தேவர்கள் பூமழை பொழிந்தார்கள்.

நடந்தவற்றை அறிந்து ஆறாத சீற்றம் கொண்ட சூரபன்மன் ''நானே

சென்று பூத சேனைகளையும் வீரவாகு தேவரையும் மற்றையோரையும் கொன்று அந்த முருகனையும் வென்று வருகிறேன். எனது தேரைக் கொண்டு வருக'' என்று ஆணையிட்டான்.

சூரனின் மகனுகிய இரணியன் எழுந்தான். அவனுக்கு மூன்று தலைகள். அவன் மாயங்களையும் வஞ்சனைகளையும் கற்றிருந்தாலும், சிறந்த நீதிமான்; நல்லவன்.

ஆம், சூரபன்மனுக்கும் ஒரு நல்ல மகன் பிறந்திருக்கிறுன்! மரங்களெல்லாம் ஒன்று போலவே காய்க்கும். ஆனுல் மனிதர்களுக்குக் குழந்தைகள் எல்லாம் ஒன்றுபோல் பிறப்பதில்லை.

ராவணனுக்கும் சூர்ப்பனகைக்கும் உடன் பிறந்த விபீஷணன் பரமபாகவதனுக இல்லையா? கும்பகருணனும் இராவணனைத் திருத்த எவ்வளவோ முயலவில்லையா?

சந்ததி வளர்ச்சியை விரும்பிய நாயக நாயகிகள் சயன அறையில் மனம் ஒருமித்தவர்களாயும், மகிழ்ச்சியுடையவர்களாயும், கலக்கமில்லாதவர்களாயும் இருந்தால்தான் நல்ல பிரஜை உற்பத்தியாகு மென்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. தம்பதி சேரும்போது அவர்கள் எந்தக் குணத்துடன் இருக்கிறுர்களோ அதே குணத்துடன்தான் குழந்தைகள் பிறக்கும். ஆதலால் சற்புத்திரர்கள் பிறக்க வேண்டும் என்ற நோக்கமுடைய சதிபதிகள் கடவுள் பக்தி நிறைந்த உள்ளத்துடனும் தூய்மையுடனும் இருக்க வேண்டியது அவசியமாகும்.

இரணியன் தந்தையிடம் பேசலானுன். ''நாம் தேவர்களைச் சிறை செய்தது பாவம். ஆயிரத்தெட்டு அண்டங்களை ஆளும் ஆட்சியும் வரமும் சிவபெருமானிடம்தான் பெற்றிருக்கிறீர்கள். அப்பரமேசுவரன் நம்மிடம் உள்ள தீமை காரணமாக அவ்வரங்களை மாற்ற நினைப்பாராயின், அதன் பின் நம் சக்தியெல்லாம் எம்மாத்திரம்? நன்றி மறந்தவனைக் கொல்லக் கூற்றுவன் என்ற ஒருவன் தேவையில்லை. அவன் மறந்த நன்றியே அவனை அழித்து விடும்.''

ஒன்றொரு பயன்றனை
உதவினோர் கனங்
கன்றிட ஓருவிலை
கருதிச் செய்வரேல்
புன்றொழில் அவர்க்குமுன்
புரிந்த நன்றியே
கொன்றிடும் அல்லது
கூற்றும் வேண்டுமோ?

இதுதான் கந்த புராணம் உணர்த்தும் மிகப் பெரும் படிப்பினை. இதை இத் தொடரின் தொடக்கத்திலேயே கூறியிருக்கிறோம்.

இரணியன் தொடர்ந்தான்: ''அப்பா! சிவபெருமானை எதிர்த்து இதுவரை பிழைத்தவர்கள் உளரோ? பார்வையாலேயே மன்மதனைப் பொடிபடச் செய்ததையும், சிரிப்பினுல் முப்புரங்களை எரித்ததையும், அங்கதாசுரனைச் சுழலும்படி சூலத்தின் மேல் இட்டதையும் கால் விரலால் சலந்திரனை அழித்ததையும் நீங்கள் கேட்டதில்லையோ? அவர் காலால் காலனை உதைத்தவர். அரியயனுதி தேவர்கள் பயந்தோடி வந்து அடைக்கலம் புகுந்தபோது ஆலகாலம் உண்டவர். அப்பா, நீங்கள் எதிர்த்தீர்களே முருகப் பெருமானை, அந்தப் பாலன் யார் தெரியுமா? சர்வலோக சரண்யனுகிய பரமேசுவரனேதான் குழந்தையாக வந்திருக்கிறுர்.

''விஷ்ணு மூர்த்தி வராகமூர்த்தியாக அவதரித்து இரணியனைக் கொன்று வெற்றியிலே செருக்கடைந்தார். 'நானே உலகங்களுக்கெல்லாம் தலைவன்' என்று மயங்கினுர். இரண்யாட்சனும் அப்படித்தான் எண்ணினுன். இரண்யாட்சனுடைய இரத்தத்தை வராகமூர்த்தி பருகியதால்தான் நாராயணருக்கும் அந்த எண்ணம் வந்துவிட்டது. வெறியில் அஷ்ட திக்குகளை இடித்துத் தள்ளியது திவ்விய வராகம். மேகங்கள் அஞ்சும்படி ஆர்ப்பரித்தது. கண்கள் கண்ணில் ஊழித் தீயைச் சிந்தியது. மதம் பிடித்துப் பூமியைத் தோண்டி உலவியது. இதைக் கண்டு பிரம்மன் இந்திரன் முதலிய தேவர்கள் பயந்து வெள்ளியங்கிரி சென்று சிவபெருமானிடம் முறையிட்டுக் கொண்டார்கள். சிவபெருமான் குன்றம் எறிந்த குமரக் கடவுளைத்தான் அனுப்பினுர். குமரக் கடவுள் வராகமூர்த்தியை வேலினுல் நெற்றியில் குத்தினுர். மகாலட்சுமி வந்து மாங்கல்யப் பிச்சை கேட்க, வேலை நிலத்தில் அழுத்தி ஆற்றலைக் குறுக்கினுர். குமாரக் கடவுள் அந்த வராகமூர்த்தியின் கொம்பைப் பறித்துக் கொண்டு போய்ச் சிவபெருமானிடம் கொடுத்தார். அந்தக் கொம்பைச் சிவபெருமான் மார்பிலே தரித்துக் கொண்டார்.

''பன்றியங் கொம்புகம
டம்புயங் கஞ்சுரர்கள்
பண்டையென் பங்கமணி
பவர் சேயே

— திருப்புகழ்

(தொடரும்)

தென்னிந்தியர்களின்
சுவைக்கேற்றபடி
பிரத்தியேகமாகத்
தயாரிக்கப்பட்டது






# ஜி.பி
## பெருங்காயம

**உயர்தர மிஸ்கி கலவை**
கோபால்ஜீ அண்டு கம்பெனி, 218, சாமுயல் ஸ்ட்ரீட், பம்பாய் 3

**ஏஜெண்ட்: தென் இந்தியா**
கோபால்ஜீ அண்டு கம்பெனி, 203, கோவிந்தப்ப நாயக்கன் தெரு, தபால் பெட்டி எண் 1255, மதராஸ்-1

**ஏஜெண்டுகள் தேவை—**
எல்லா முக்கிய பலசரக்கு கடைகளிலும் கிடைக்கும்.






திருமுருக கிருபானந்தவாரியார்

## 44. தானவன் மீனமாயினான்!

மாதவன் கூர்ம அவதாரம் எடுத்து அமுதம்பெற உதவிய பின்னரும் தம்மை விடச் சிறந்தோர் ஒருவரும் இல்லை என்று செருக்குற்று ஏழு கடல்களையும் ஒன்றுகூட்டி அவனியை அழிக்கும்படி அதன் வெள்ளத்தைக் கலக்கினார். ஆயிரம் கரங்களாலும் ஆழியை வற்றச் செய்தார். கடலில் இருந்த திமிங்கிலங்கள், மீன் முதலிய எல்லாவற்றையும் உண்டும் பசி தணியாமல் கடல் நீர் முழுதும் குடித்து விட்டுத் தரைமட்டும் தெரியும்படி சேற்றையும் நக்கியது திவ்விய கூர்மம். அப்போது பிரமாதி தேவர்கள் கைலாயம் சென்று சிவ பெருமானிடம் முறையிட்டுக் கொண்டனர். கறைமிடற் றண்ணல் கருணை பூத்து, ''அஞ்ச வேண்டாம்'' என்று அபயம் தந்து, தமது மடித் தலத்தில் எழுந்தருளியிருந்த கந்தப் பெருமானை அனுப்பினார். குமாரக் கடவுள் திருப் பாற்கடலை அணுகி ஒரு ஹுங்காரம் செய்தார். அதனைக் கேட்ட அளவிலேயே ஆமை மூர்ச்சித்தது. முருகப் பெருமானுடன் வந்த ஐயனார் ஆமையைப் பிடித்து இழுத்து வெளியே கொண்டு வந்தார். கந்தவேள் தம் திருவடியினால் அதனை எற்றினார். நிலம் பிளக்க, திக்கு செவிடுபட ஆமை மல்லாந்து விழுந்தது. கந்தப் பெருமான் எஃகுத் தண்டால் அந்த

ஆமையை ஓங்கியடிக்க எண்ணினுர்.. அப்போது இலட்சுமி தேவி வந்து கண்ணீர் உகுத்து வடிவேற் பரமனே வணங்கினுள்.

மருவார் செழுங்கூந்தல்
    வானிகலன் பூண்டிருப்பத்
தருநிழன் மேவிச்
    சசிவாழ்வி ஞேடிருப்பத்
திருவோ திருவிழப்பாள்
    தேவர்கு ளாமணியே!
மருகோய்! உயிரளித்தென்
    மங்கலநாண் காப்பாயே
மங்காத காமர்பிடி
    மான்மருங்கு வைத்தருளும்
எங்கள் பெருமானே!
    யேத்துவார் கண்மணியே!
கங்கை குமரா! என்
    காதலனே யுய்வித்து
மங்கல நாண்பிச்சை
    வழங்காய் வழங்காயே
மூவரென வோதும்
    முதல்தே வரிலொருவன்
ஆவி யழிந்தால்
    அவுணர்நினை யேசாரோ?
தேவரிடர் தீர்ப்போய்
    சிற்றடிச்சி மங்கலநாண்
காவல் புரியாயேல்
    என்னுங் களேகண்ணே

இவ்வாறு இலட்சுமி தேவி பல வாறுகத் துதித்து முந்தானேயை நீட்டி மாங்கல்யப் பிச்சை கேட்டாள். முருகப் பெருமான் மனம் இரங்கினுர். ஆமை யைக் கொல்லாது அதன் ஓட்டினே மட்டும் பெயர்த்துக் கொண்டு போய்ச் சிவபெருமான் முன் வைத்தார். சிவ பெருமான் கந்தவேளே யணைத்து ஆமை யின் ஓட்டைப் பிரம்ம விஷ்ணுக்களின் சிரமாலேக்கு நடுநாயகமாகத் தரித்துக் கொண்டார்.

''அப்பா! இவ்வாறு செயற்கரிய செய்த முருகப் பெருமான் தன்னந் தனியனுக எதையும் செய்வான். இன் ஞெருவரின் சகாயம் அவருக்குத் தேவை யில்லே. அசகாயசூரர் என்று அவருக்குப் பேர் இதனுல்தான். அவரைச் சிறுவன் என்று இகழாதே'' என்று கூறினுன் இரணியன். பிள்ளேப் பிராயத்தில் குமா ரக் கடவுள் புரிந்த அற்புதங்களேயும் எடுத்துக் கூறினுன்.

வாசவன் குறையும் அந்தண்
    மறையவன் குறையும் மற்றைக்
கேசவன் குறையுப் நீக்கிக்
    கேடிலா வெறுக்கை நல்க
ஆசிலோர் குழவி போலாய்
    அறுமுகங் கொண்டான் எண்டோள்
ஈசனே என்பதல்லால்
    பிறிதொன்றை இசைக்கலாமோ?

இரணியன் சூரபன்மனுக்கு முருகப் பெருமானின் பேராற்றலே எவ்வளவோ எடுத்துச் சொன்னுன்.

தாய் குழந்தையை வாரியணேத்து முத்தமிட்டு, ''என்னேப் பெற்ற செல் வமே!'' என்று கொஞ்சுவாள். அந்தக் குழந்தையா அந்த அம்மாளேப் பெற் றது? இல்லே. அகிலாண்ட கோடியை யும் படைத்த குழந்தை முருகனேயொட் டித்தான் இப்படி அன்னே மகனே அருமைக்கிடும் வழக்கு பிறந்தது.

''கங்கைதன் புதல்வன் என்றும்
    கார்த்திகை மைந்தன் என்றும்
செங்கண்மால் மருகன் என்றும்
    சேனேயின் செல்வன் என்றும்
பங்கயன் முதலோர் தேறுப்
    பரஞ்சுடர் முதல்வன் தன்னே
இங்கிவை பலவுஞ் சொல்லல்
    ஏழைமைப் பாலதன்றே?''

''அப்பா! மூவர்க்கும் தேவர்க்கும் எட்டாத முழு முதற்கடவுளேக் கங்கை யின் புதல்வன் என்றும், கார்த்திகை மைந்தன் என்றும், திருமால் மருகன் என்றும் சொல்வது ஏழைமை (முட் டாள்தனம்) அல்லவா? அவர் அகில லோக ஏகநாயகன்'' என்கிருன், இரணியன்.

'ஏழை' என்ற சொல்லுக்கு வறிய வன் என்று நாம் பொருள் கொள் கிறோம். அறிவு இல்லாதவன்தான்



ஏழை என்று நூல்களிலே பொருள். ஐந்து கோடி சொத்துள்ளவனுக்கும் அறிவு இல்லையென்றால் அவன் ஏழை தான்.

மரணம் கிட்டியவனுக்கு மருந்து பிடிக்காது. இரணியன் கூறிய அற வுரையைச் சூரபன்மன் கேட்கவில்லை.

பிடிவாதக்காரர்கள் யார் எவ்வளவு எடுத்துச் சொன்னாலும் கேட்க மாட் டார்கள். சம்புகுத்தன், மாகுத்தன் என்ற இரு பெரும் கல்விமான்களின் கதை இதற்கு உதாரணம். சம்புகுத்தன் சிவபக்தன்; மாகுத்தன் அம்பாள் பக்தன். இருவருக்கும் வாதம் நடந்தது. 'சக்திதான் பெரியது' என்றான் மாகுத் தன். 'சிவனே பெரியவர்' என்றான் சம்புகுத்தன்.

கடவுளுக்கு இரண்டு பக்கங்கள் உண்டு. ஒன்று உஷ்ணம்; மற்றொன்று குளிர்ச்சி. உஷ்ணம் சிவம்; குளிர்ச்சி பார்வதி. குளிர்ச்சி பச்சையாக இருக் கும். உஷ்ணம் சிவப்பாயிருக்கும். அத னால்தான் அம்பாளுக்கு மரகத மேனி; எம்பெருமானுக்குப் பவள மேனி.

இதனை உணராது வாதம் செய்து கொண்டிருந்தனர் சம்புகுத்தனும் மாகுத்தனும். படித்தவர்கள் சண்டை இலேசில் தீராது.

தங்களுடைய வாதத்துக்குத் தீர்ப்பை ஆண்டவனிடமே சென்று கேட்கலாம் என்று இருவரும் வேதா சலம் என்ற இடத்துக்குச் சென் றார்கள். வேதமே மலையான இடம் அது; அங்கே சென்று ஆண்டவனிடம் ''சிவம் பெரிதா? சக்தி பெரிதா?'' என்று கேட்டார்கள்.

''சிவமும் சக்தியும் ஒன்றுதான்; பொன்னும் அணிகலனும் போல் தாதான்மியம்; பேதமில்லை'' என்றார் ஆண்டவன்.

இருவரும் சந்நிதியிலிருந்து வெளியே வந்தார்கள். வந்ததுமே, ''என்ன இருந்தாலும் சிவமே பெரிது'' என் றான் சம்புகுத்தன் மீண்டும். ''சக்தியே பெரிது'' என்றான் மாகுத்தன் விடா மல். இவர்களது வாதத்தையும் பிடி வாதத்தையும் கண்ட சுவாமி, ''இரு வரும் கழுகுகளாகப் போகக் கடவது'' என்று சாபம் கொடுத்தார். கழுகு களாக மாறிய அவர்கள், ''எத்தனை காலம் இப்படி இருப்பது?'' என்று கேட்டார்கள். ''கலியுகம் முடியும் வரையில் கழுகுகளாய் இருங்கள்'' என் றார் ஆண்டவன். இந்தக் கழுகுகள் தான் திருக்கழுக்குன்றத்தில் இன்னமும் வருகின்றன.

பிடிவாதக்காரர்களான சம்புகுத்த னும் மாகுத்தனும் சாட்சாத் சிவபெரு மானே சொல்லியும் கேட்கவில்லை. சூரபன்மனும் அப்படிப்பட்ட பிடிவாதக் காரன்தான்.

இரணியனுடைய அறவுரையைக் கேட்ட சூரபன்மன் ஆலகாலம் போல் கொதித்தான். அவனது உடல் வியர்த் தது; இதழ்கள் துடித்தன; கண்கள் சிவந்தன. கைகொட்டிச் சிரித்தான். இரணியனைப் பார்த்து, ''அறிவிலியே! நீ ஒரு சிறுவனின் ஆற்றலைப் பற்றியும், தூதனின் வீரத்தைப் பற்றியும், நான் செய்ய வேண்டுவது என்ன என்பதுபற்றியும் சொன்னாய். இவற்றை யெல்லாம் உனக்குச் சொல்லிக் கொடுத் தது யார்? சொல். அவனை இப் பொழுதே கொல்கிறேன். அவனை மட்டு மல்ல; அவனது குலத்தையே வேரறுக் கின்றேன். அது மட்டுமல்ல. இன் னொரு முறை இப்படி ஏதேனும் பேசி னால் உன்னையே இயமபுரத்துக்கு அனுப்பவும் தயங்க மாட்டேன்'' என்று வெகுண்டுரைத்தான்.

இரணியன், 'விதியை யாரால் வெல்ல முடியும்? தந்தைக்கு அழிவு காலம் வந்து விட்டது. அவர் இறப்ப தற்குமுன் நாம் இறந்து விடுவது நலம்' என்று எண்ணினான். சூரபன் மனை வணங்கி, ''அப்பா! சிறுவ னாகிய நான் செய்த பிழையைப் பொறுத்துக் கொள்ளுங்கள். நான் போருக்குச் செல்கிறேன். விடை கொடுங்கள்'' என்று வேண்டிக் கொண் டான். இரணியனின் சொல் சூரபன்ம னின் சினத்தைத் தணித்தது. மகனைத் தழுவி மகிழ்ந்து விடை கொடுத்து அனுப்பினான்.

இரணியன் போர்க்கோலம் புனைந்து ஆயிரம் சிங்கங்கள் பூட்டப் பெற்ற தேரில் ஏறிப் போர்க்களம் சென்றான். ஆயிரம் தோழர்களும், ஆயிரம் சேனாதி பதிகளும், நாலாயிரம் வெள்ளம் சேனைகளும் அவனுடன் சென்றன.

இரணியன் போருக்கு வந்தபோது நாரதர் வீரவாகுதேவரிடம் தோன்றி, ''இவன் சூரபன்மனின் மகன். பெரிய மாயாவி. இவனை வெல்ல உம்மை யன்றி வேறு யாராலும் முடியாது'' என்று கூறி மறைந்தார்.

முதலில் இரணியனுக்கும் நீலன் என்ற பூத சேனைத் தலைவனுக்கும் போர் நடந்தது.

நீலன் இரணியனை உதைத்து உருட்டி மிதித்தான். அதனால் இரணியனின் தலையும் மார்பும் பிளந்தன. அவன் வாயிலிருந்து உதிரம் கொட்டியது.

அந்த நிலையில் அவன் ஒரு மாயா மந்திரத்தை உச்சரித்தான். இரணியனைப் போல இன்னோர் உருவம் உண்டாயிற்று. அதனுடன் நீலன் பலவாறு பொருது போர் செய்தான். அம்மாய வடிவத்தின் தலையில் தண்டத்தால் அடித்தான் நீலன். அவ்வடிவம் ஆகாயத்துக்குச் சென்றது. நீலன் அதனைப் பின் தொடர்ந்து சென்றான். அந்த உருவம் மறைந்தது. இப்படியாக, அந்த உருவம் விண்ணில் செல்லும்; மண்ணில் வரும்; சேய்மையதாகும்; அண்மையதாகும்; முன்னே வரும்; பின்னே வரும். பலவுருவாகும். நீலன் சற்றுத் திகைத்தான். கடைசியில் 'இது மாயமே' என்று உணர்ந்தான். இதற்குள் பூமியில் விழுந்து கிடந்த இரணியன் அயர்வு நீங்கி எழுந்தான். நீலன் மீது தீக்கணைகளை விடுத்து உடம்பைத் தொளைத்தான். நீலன் சலித்துத் திகைத்து வருந்தினன்.

இரணியனின் மாயத்தைக் கண்ட வீரவாகுதேவர் சினங் கொண்டார். முருகப் பெருமானைத் தியானித்துத் தேரைச் செலுத்திக் கொண்டு இரணியன் முன்பு வந்து ஞானப் படையை விடுத்தார். அதனால் இரணியனின் மாயை அழிந்தது. இருவருக்கும் உக்கிரமான போர் நடந்தது.

இரணியனின் வில், தேர், வச்சிர கவசம், சேனைகள் எல்லாம் அழிந்தன.

இந்நிலையில் அறிவாளியான இரணியன் யோசித்தான்: 'சிற்றப்பா சிங்கமுகாசுரன் அழிந்து விட்டார்; தந்தையான சூரபன்மனும் அழியப் போகிறார். எல்லோரும் இறந்து விட்டால் பிதுர்க்களுக்குச் செய்ய வேண்டிய தீக்கடனும், நீர்க் கடனும் செய்வது யார்? அதற்கு ஓர் ஆள் இருக்க வேண்டாமா?' என்று எண்ணினன்.

''தென்புலத்தார் தெய்வம் விருந்து
ஒக்கல் தான் என்றாங்கு
ஐம்புலத்து ஆறு ஓம்பல் தலை''

என்கிறார் திருவள்ளுவர். ஒரு கிருகஸ்தன் பிதிரர்கள், தெய்வம், உறவினர், விருந்து ஆகியோரைக் காக்க வேண்டும். இது வீட்டுத் தலைவனின் கடமை.

''மைந்தனைப் பெறு
கின்றதும் மாசிலாப்
புந்தி அன்பொடு
போற்றி வளர்ப்பதும்
தந்தை மாண்டுழித்
தம்முறைக் கேற்றிட
அந்தமில் கடன்
ஆற்றுதற் கேயன்றோ?''

''அப்பா அம்மா நம்மைப் பெற்று வளர்த்ததெல்லாம் கடைசிக் காலத்தில் கடன் ஆற்றுவதற்காக அல்லவா? ஆயிரத்தெட்டு யுகங்கள் வாழ்ந்த அப்பா இறந்து விட்டால் எள்ளும் தண்ணீரும் இறைப்பது யார்?'' என்று எண்ணிய இரணியன் திடீரென்று மறைந்து கடலில் மீனாகப் போய் விட்டான்.

வீரவாகுதேவர் வெற்றிச் சங்கை ஊதினார். அவர் நினைத்தால் கடலை வற்றச் செய்து பாணம் விட்டு இரணியனைக் கொன்றிருக்கலாம். ஆனால் உயிருக்குப் பயந்து மீனாகப் போனவனைக் கொல்லுவது ஆண்மையல்ல என்று விட்டு விட்டார்.

இரணியன்தான் கடைசிக் காலத்தில் சூராதி அவுணர்களுக்குப் பிதுர்க் காரியம் செய்தான். இது போலவே தான் இராவணனுக்கு விபீஷணர் பிதுர்க்காரியம் செய்தார்; துரியோதனனுக்கு அவனை வென்ற தருமராஜரே செய்தார். (தொடரும்)





● உயர்தரமான விக்கிரகங்கள் நமது கோயில்களிலிருந்து களவாடப்பட்டு மேல்நாடுகளில் விற்கப்படுகின்றன. இதுவரை இவ் வியாபாரத்தில் ஈடுபட்டிருப்பவர்கள் சுமார் பதினைந்து கோடி ரூபாய் லாபம் கண்டிருக்கிறார்கள்!

# களவு போகும் கலைச் செல்வங்க[ள்]

கே. ஆர். என். சுவாமி

நம் நாட்டில் போதிய விழிப்பில்லை. நமது விலைமதிக்கவொண்ணு அருங்கலைச் செல்வங்கள் வெளிநாடுகளில் சட்டவிரோதமாகக் கொண்டு போகப்பட்டு விற்கப்படுகின்றன. இது குறித்து ஓர் அதிர்ச்சியோ, கிளர்ச்சியோ நம் மக்கள் மனத்தில் இல்லாதது மிகவும் வருந்தத் தக்கது.

போனுல் மீண்டும் பெற முடியாத உயர்தரமான விக்கிரகங்கள் நமது கோவில்களிலிருந்து களவாடப்பட்டு, மேல்நாடுகளில் விற்கப்படுகின்றன. இவ்வியாபாரத்தில் ஈடுபட்டிருப்பவர்கள் சுமார் பதினைந்து கோடி ரூபாய் லாபம் சம்பாதித்திருக்கிறார்கள்.

பழம் கலைப் பொருள்களை வியாபாரம் செய்வது எங்குமே உண்டு. ஆனுலும் சிறிதும் தேசபக்தியற்ற ஆறு வியாபாரக் கம்பெனிகள் அகில உலகத் தொடர்பு ஏற்படுத்திக் கொண்டு இந்த அநீதியான வியாபாரத்தை நடத்தி வருகிருர்கள் என்று நம்பகமாகத் தெரிய வந்திருக்கிறது.

இந்த வியாபாரக் கம்பெனிகள் கல்கத்தாவில் மூன்றும், பம்பாய், சென்னை, டெல்லி ஆகிய மூன்று இடங்களிலும் முறையே மூன்று கம்பெனிகள் ஆக ஆறு கம்பெனிகள் இருக்கின்றன என்று நம்பகமாகத் தெரிய வருகின்றது. இந்தத் திருட்டில் திடீரென்று ஒரு புதிய வேகம் ஏற்பட்டிருப்பதற்குக் காரணம் மேல்நாட்டினருக்கு நமது கலைச் செல்வங்கள் மேல் ஏற்பட்டிருக்கும் மோகம்தான். முக்கியமாக மேல்நாட்டுப் பொருட்காட்சி சாலைகளும், கலைச் செல்வ சேகரிப்பாளர்களும் மிக ஆர்வத்துடன் வாங்குகிருர்கள். கலைச் செல்வங்களை வாங்குவது வியாபார முறையில் பார்த்தாலும் நல்ல முதலீடு செய்வதாகும். கலைச்செல்வங்களுக்கு இறக்குமதி சுங்க வரி கிடையாது.

மற்றெரு முக்கியமான காரணம் சட்டவிரோதமாகவாவது மேனுட்டுச் செலாவணியைச் சம்பாதிக்க வழி இவ்வியாபாரத்திலிருப்பதால், மும்முரமாக நடைபெறுகிறது. மேலும் கிழக்கு ஆசிய கலைச் செல்வங்கள் கிடைப்பது அரிதாகி வருகிறது. கம்யூனிஸ்ட் சீனுவிலிருந்து ஒன்றுமே வெளி வராது. ஜப்பானே தனது கலைச் செல்வங்கள் வெளியில் போக விடாமல் பாதுகாத்து வருகிறது. ஆகவே, ஆசிய கலைச்செல்வங்கள் என்றால், இந்திய நாட்டுச் செல்வங்கள்தான் கிடைப்[ப]தால், அவற்றையாவது வாங்குவோம் என்[று] மேனுட்டினர் துரிதமாக வாங்குகின்றனர்.

இந்தக் களவு மிக சாமர்த்தியமாகத் திட்[ட]மிட்டு நடத்தப்படுகிறது. எந்த ஜில்லாவி[ல்] அதிகமாகக் கோவில்கள் இருக்கின்றனவோ, எங்கு புராதனப் பொருட்களைச் சேமித்[து] வைக்கும் பொருட்காட்சிச் சாலை இரு[க்]கிறதோ, அந்தப் பிரதேசம் இந்தத் திருட்[]டுக்கு நல்ல நிலைக்களனுகிறது. சென்னை இராஜ்யத்தில் தஞ்சையும், மேற்கு வங்கத்தி[ல்] பர்துவானும், உத்தரப் பிரதேசத்தில் மதுரா நகரமும் — மதுரா மாவட்டமும், ஒரிஸ்ஸா[]வில் புரி, கோனுர்க், கட்டாக் ஆகிய ஊர்[]களும் மத்தியப் பிரதேசத்தில் காஜுராஹோ ஆலயமும், பட்னு, லக்னே, சித்தூர், கல்[]கத்தா ஆகிய நகரங்களில் உள்ள பொருட்[]காட்சிச் சாலைகளும் இந்த அக்கிரமமான திருட்டுப் புரட்டுகளுக்குத் தேர்ந்தெடுக்கப்[]பட்ட இடங்கள் ஆகும்.

மிகவும் துணிகரமான கொள்ளை மத்தியப் பிரதேசத்திலிருக்கும் புகழ்பெற்ற பாக் குகை[]களில் நடைபெற்றிருக்கிறது.

அங்கு குகையின் உத்தரத்தில் வரையப்[]பட்டிருக்கும் வண்ண ஓவியத்தை மிக சாமர்த்[]தியமாக வெட்டி எடுத்துக் கொண்டு போயி[]ருக்கிறார்கள். வெட்டி எடுக்கப்பட்ட பகுதி சிறிதும் பழுது அடையாமல் எடுத்திருக்[]கிருர்கள். ஒருகால், அப்பகுதியை மேனுட்டுக் 'கலைப் பொருள் சேகரிப்பாளர்கள்' தேர்ந்[]தெடுத்திருக்க வேண்டும். இதுவரை திரும்பப் பெற்றபாடில்லை. இந்தச் சாமர்த்தியமான வேலையைப் பார்த்து, 'எல்லா வசதிகளையும் பெற்ற இந்திய சர்க்காரின் புதைபொருள் இலாக்காவினர்களால்கூட இவ்வளவு திறம்[]பட எடுத்திருக்க முடியாது' என்று ஹாஸ்ய[]மாகக் கூறுவது உண்டு.

சில மாதங்களுக்கு முன்பு காஜுராஹோ ஆலயத்திலிருந்தும் பொருட்காட்சிச் சாலைகளி[]லிருந்தும் இருபத்தொரு சிற்பங்கள் களவு போயிருக்கின்றன. இரண்டரை அடி உயர[]முள்ள பிரசித்தி பெற்ற சூரியநாராயண உருவம் த்யோகர் என்ற ஊரில் உள்ள வைத்தியநாத தாம் கோவிலிலிருந்து சில

# 45. மாண்டவர் மீண்டனர்!

போருக்கு ஆற்ருது இரணியன் கடலில் மறைந்த செய்தியை ஒற்றர்கள் சூரபன்மனிடம் சென்று தெரிவித்தனர். அதைக் கேட்ட சூரபன்மன் மனம் குன்றி நாணமடைந்தான். எவருடனும் பேசவே அந்த மாவீரனுக்கு வாய் எழவில்லை. அத்தருணம் அவன் மைந்தனுகிய அக்கினிமுகன் அவனிடம் வந்தான்.

அக்கினிமுகன் திக்குப் பாலர்களையும், சூரியன் தேரையும், திக்கஜங்களையும் வாட்டியவன். தாய் வயிற்றில் இருக்கும்போதே நெருப்பைக் கக்கிய




வன். சந்திரனைச் சிறை செய்தவன். அரியும் அயனும் ஊரும் கருடனையும் அன்னத்தையும் பிடித்து வந்து விளையாடியவன்.

''அப்பா! தூதாக வந்த வீரவாகு அவ்வளவு வலிமையுள்ளவனு? இதோ அவனையும் அவனுடன் வந்துள்ள சேனைகளையும் வென்று வருகிறேன். விடை தாருங்கள்'' என்று சூரனை உத்தரவு கேட்டான் அக்கினிமுகன். சூரபன்மன் அவனுக்கு விடை தந்து அனுப்பினுன்.

பாட்டியாகிய மாயை கொடுத்த வில்லையும் தெய்வாஸ்திரங்களையும் எடுத்துக் கொண்டு தேரில் ஏறிப் புறப்பட்டான் அக்கினிமுகன்.

யுத்த களத்தில் பூதசேனைகளும் அவுணர்களும் கடும் போர் செய்தார்கள்.

நவவீரர்களில் ஒருவராகிய வீரபுரந்தரர் ஊழித்தீயைப் போல் உருத்து, வில்லை வளைத்து அவுணர்களின் தேர்களை அழித்தார்; அவுண சேனுதிபதியான சோமகண்டனின் தலையை அறுத்தார்; அக்கினிமுகனுக்கு உயிர்த்

...வளுக நின்ற மேகனையும்
...ன்ருர். அக்கினிமுகன் தானே
...ல் அவரை எதிர்த்துக் கணை
...ழை பொழிந்தான். அவருடைய
...ரையும் வில்லையும் உடைத்து
...று பாணங்களால் மார்பைத்
...ளைத்தான். அவுணர்கள் ஜெயசந்
...தோஷ ஆரவாரம் செய்தார்கள்.
வீர புரந்தரரின் வலிமை
...ழிந்ததைக் கண்ட அவரது
...ணவர்களான நவ வீரருள்
...ரவாகு தவிர ஏனைய எழுவரும்
...க்கினிமுகனை வளைத்துப் பாண
...ழை பொழிந்தனர். அதனல்
...சுரனின் வில்லும் தேரும் அழிந்
...ன. வீரர்கள் அவன் மார்பில்

...ஆயிரம் கணைகளைச் செலுத்தினுர்கள்.
அக்கினிமுகன் வேறொரு தேரில் பாய்ந்
...தான். நவவீரருள் எழுவரையும் சினத்
...துடன் நோக்கி, ''இத்துடன் அழி
...யுங்கள்'' என்று சிவப் படைக்கலத்தை
...டுத்து வழிபட்டு விட்டான். அப்
...படைக்கலம் விரைந்து சென்றது.
அதனை ஏழு வீரர்களும் கண்டு அக்கினிப்
...படை என்று எண்ணி, வருணப் படைக்
...கலங்களை விடுத்தார்கள். சிவப்படைக்
...கலம் அவற்றை விழுங்கி உலகம்
அதிரச் சென்று எழுவருடைய உயிரை



''வக்கீல் சார்! வர வர என் பெண்டாட்டி தொண தொணப்புத் தாங்க முடியலே! இப்பவே விவாகரத்துக்கு ஏற்பாடு பண்ணுங்க!''

யும் நொடியில் கவர்ந்து மீண்டது. நவ வீரரில் எழுவர் இவ்வாறு இறந்தமை கண்ட பூதரும் அமரரும் வெருவி இருந்தனர். வீரவாகுதேவர், பூதவீரர்களுக்கு அபயம் தந்து, அக்கினிமுகனை எதிர்த்தார். இருவரும் பலப் பல கணைகளை விடுத்துக் கடுமையாக அமர் புரிந்தனர். முடிவில் வீரவாகுதேவர் நஞ்சு பாய்ச்சிய கூர்மையான நூறு பாணங்களை விடுத்தார். அவை அக்கினி முகனுடைய மார்பைத் துளைத்தன. அக்கினிமுகன் அலறித் தேர்மீது சாய்ந்தான். அவன் மார்பிலிருந்து உதிரம் வெள்ளம்போல் பெருகியது. அவனது உயிர் போவதும் வருவதுமாக இருந்தது. ஒருவாறு தெளிந்த அக்கினிமுகன், இளமையில் தான் வழிபட்ட காளியை நினைந்தான். 'பகைவர்களுடைய போரில் நான் தோற்ருல் அந்தத் தருணத்தில் உதவி செய்ய வேண்டும்' என்று அக்கினிமுகன் அந்த நாளில் காளியிடம் வரம் கேட்டுப் பெற்றிருந்தான்.

அக்கினிமுகன் காளியை நினைந்ததும், அவள் சூலத்தையும் வாளையும் ஏந்திச் சிங்க வாகனத்தின் மீது வந்தாள். அக்கினிமுகனை அடைந்து, ''அஞ்ச வேண்டாம். உன் பகைவர்களாகிய பூதசேனைகளைக் கொல்வேன்' என்று அருளி, பூதர் அனைவரையும் அழிக்குமாறு முத்தலைச் சூலத்தை விடுத்தாள். அது தீயையும் புகையையும் சிந்திப் பல காளிகளையும் உண்டாக்கி விரைந்து சென்றது. வீரவாகு தேவர் காளியின் சூலத்தை நோக்கிப் பதினுன்கு கணைகளைச் செலுத்தி, அதைப் பொடியாக்கினுர். காளி மிகவும் சினந்தாள். மற்ருெரு சூலத்தை விடுத்தாள். அது ஆலகாலம் போல் கொதித்துச் சென்றது. வீரவாகுதேவர் ஆயிரம் கணைகளால் அதனைத் துணித்தார். காளி உள்ளம் கனன்று சிங்க வாகனத்திலின்றும் இறங்கிக் கூரிய வாளை எடுத்து வீரவாகு தேவரை வெட்ட வந்தாள். வீரவாகுதேவர் அவளுடைய எட்டுக் கரங்களையும் இடக் கரத்தால் பிடித்து, வலக்கரத்தால் மார்பில் ஓர் அறை அறைந்தார். காளியின் மார்பு கிழிந்தது; வாயும் மூக்கும் உதிரம் சொரிய மூர்ச்சித்துக் கீழே விழுந்தாள். ஆணவமும் வீரமும் அழிந்த அவள் நாணத்துடன் வீரவாகுதேவரின் ஆற்றலை வியந்தாள். கந்தப்பெருமானின் ஏவலால் வந்துள்ள வீரவாகுதேவரை எதிர்த்து யார்தான் வெற்றி காண முடியும்? வீரவாகுவிடம், ''வெற்றி உமக்கே'' என்று வாழ்த்திவிட்டுச் சிங்கத்தின் மீதேறித் தன் படைகள் சூழ்ந்து வரத் தனது இடத்துக்குச் சென்ருள் காளி.

அசுர காளி வீரவாகுதேவரை வாழ்த்தி அவரிடம் விடைபெற்றுச் செல்வதைக் கண்ட அக்கினிமுகாசுரன் மிகுந்த சினங்கொண்டு காளியை இகழ்ந்தான். ''வீரவாகுதேவரை நானே கொல்வேன்'' என்று சேனைகள் சூழத் தேரில் புறப்பட்டான். இருவரும் கோரமாகப் பொருதார்கள்.

இறுதியில் வீரவாகுவின் வீரபத்திராஸ்திரமானது அக்கினிமுகன் விடுத்த பிரமாஸ்திரத்தை விழுங்கி, அவனது தலைகளை வெட்டிக் கீழே தள்ளி உயிரையும் குடித்துவிட்டு வீரவாகுதேவரிடம் மீண்டது. அக்கினிமுகாசுரன் இறந்ததைக் கண்ட அமரர்கள் ஆனந்தக்கூத்தாடி ஆர்த்தார்கள்; வீரவாகு தேவரை வாழ்த்தினுர்கள்.

அவுண வீரர்களை யெல்லாம் கொன்று போர்க்களத்தின் நடுவே நின்ற வீரவாகுதேவரை பூதர்களும், இலக்கம் வீரர்களும் வந்து சூழ்ந்தார்கள். மூர்ச்சித்துக் கிடந்த வீர புரந்தரரும் அங்கு வந்து சேர்ந்தார். ஆனால் வீரவாகுதேவரின் தம்பியர்களான எழுவர் மட்டும் அங்கு காணப்படவில்லை. அவர்களைக் காணுது வருந்திய வீரவாகு, ''மற்ற எழுவரும் எங்குற்றனர்?'' என்று வினவினுர்.

பூதவீரனுன உக்கிரன், ''நூறு யோசனைக்கு அப்பால் ஆலமர நிழலில்

மாண்டு கிடக்கிருர்கள் ''
இதனைக் கேட்ட வீரவாகு திடுக்கிட்டார். மனத்தைத் கொண்டு அருகில் இருந்தோர் உடன் வர ஆலமரத்தடிக் சென்ருர். அங்கே பிணக் குவியல் மீது தம்பியர் எழுவரும் கிடந்ததைக் கண்டார்; தம்பி எழுவரையும் எடுத்தணைத்துப் புலம் அவர் கண்கள் குருதிநீரைச் ...தன.

...மீர் தம்பிமீரென் றுரைத்திடும்
தழுவிக் கொள்ளும்
...மீ ரென்னும்; ஐயோ!
எங்ஙனஞ் சென்றீர் என்னும்;
...பினேனென்னும் என்னை
விட்டகன்றீரோ வென்னும்
...னேன் உம்மை யென்னும்
நானுமக்கயலோ வென்னும்

...ருக இருக்கிறது உன் வீரம்! ...வேருக்கு இனி நான் என்ன ...வேன்?'' என்று பற்பலவாறு ... கண்ணீர் விட்டுக் கவலையில் ஆழ்ந் வீரவாகு. சிறிது போதில் மீண் ...வரை வீரம் பற்றிக் கொண்டது.

...வைத் தீயைப் போல் வெகுண்டு, ... தம்பியர் உயிரைக் கொண்டு ... இயமனை இக்கணமே கொல் ... மார்க்கண்டேயர் உயிரைக் கவர ...போது பட்ட உதையை மறலி ...னென் போலும்? திருநீறும் கண்டி ... பூண்டு சிவநாமத்தை உச்சரிக் ... உண்மையான சிவபக்தர்களிடம் ... கூடாது என்ற சிவாக் ... அந்தக் கூற்றுவன் மறந்தான் ...யும்! ஆறுமுகப் பெருமானின் ...வர்களாகிய என் தம்பியரின் ... இயமன் எப்படித்தான் ...து சென்ருனே ?'' என்று இயம ...னைந்தார்.

''நீறு முகத்தார் கண்டிகை
பூண்டார் நிமலன்பேர்
கூறு முகத்தார் தம்புடை
செல்லக் குலேகூற்றன்
ஆறு முகத்தான் அடியவர்
ஆவி யலேத்தானே
சேறு முகத்தாழ் கரியை
அடாதோ சிறுபுள்ளும்?''



வீரவாகுதேவர் வில்லை யெடுத்து நாணை மீட்டினர். ஒரு பாணத்தை எடுத்து அதில் நகத்தினல், ''கூற்று வனே! என்னுடைய தம்பியர் உயி ரைக் கொண்டு வா'' என்று எழுதி விடுத்தார்.

பாணம் இயம லோகத்தில் போய் விழுந்தது. இயமன் எடுத்துப் பார்த் தான். வீரவாகுதேவர் விடுத்த பாணம் என்பதை அறிந்ததும், நடுநடுங்கினன்; ''தூதர்களே! நவவீரர்களில் யாரை யாவது கொண்டு வந்திருக்கிறீர் களா ?'' என்று தூதர்களிடம் வினவி னன். இயமலோகம் முழுவதும் தேடி னர்கள் தூதர்கள். அங்கு காண வில்லை. ஏழு வீரர்களும் கைலாய மலையில் சூக்கும சரீரத்துடன் விளை யாடிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் எழுவர் உயிரையும் இயமன் போர்க் களத்துக்குக் கொண்டு வந்து உடலில் சேர்ப்பித்தான்.

தூங்கி எழுந்தாற்போல் வீரர் எழுவரும் உயிர்த்தெழுந்தார்கள். வீர வாகுதேவர் பூதவீரர்களின் உள்ளம் எல்லையில்லா உவகை பூத்தது.

இயமன் வீரவாகுதேவரைத் தொழுது, ''உங்கள் தம்பியர் உயிரை அடியேன் கவர்ந்து செல்வேனு? கைலே சென்றிருந்த அவர்களை இங்கு அழைத்து வந்தேன்'' என்று வேண்டி அருள் பெற்றுச் சென்ருன். (தொடரும்)

# அந்த ஒரு நாள்

**ஆர். சூடாமணி**

தூங்கி எழுந்து உட்கார்ந்தாள். நிலைபுரியாத ஒரு கனம் உடலெங்கும் அழுத்தியது. உள்ளத்தையும் உதறித் தெளிவித்துக் கொள்ள வேண்டும் போல் ஏதோ குழப்பத்தின் இருட் திரள் வரி வரியாய் வட்டமிட்டது.

''அம்மா!''

நிச்சயமின்றி அவள் உதடுகளில் புன்னகைச் சாயல் நெளிந்தது. இன்னமும் மன இடுக்குகளில் தேங்கி நிற்கும் பனிப் புகையிடையே வெளிறிய சிற்றொளியாக அமுதாவின் கவலை படர்ந்த முகம் தனியாய் மிதந்து தெரிந்தது.

''எழுந்து பல்லைத் தேய்க்கிறியா அம்மா? இல்லையானல் பேஸினையும் பேஸ்ட் பிரஷையும் இங்கேயே கொண்டு வரட்டுமா ?''

ஏன் இந்தக் கேள்வி? ராத்திரி படுத்துத் தூங்கப் போனது நன்ருக நினைவு இருந்தது. உடல் நிலையில் கோளாறு ஏதும் இருக்கவில்லையே. காலையில் கண் விழிக்கும்போது மட்டும் தனக்கு என்ன நேர்ந்து விட்டிருக்குமென்று நினைத்து மகள் இப்படிக் கேட்கிருள்?

''எழுந்து வரேன், அமுதா! படுக்கையில் எதுக்குப் பல் தேய்க்கனும்? புதுசாயிருக்கே!''

''அதுக்கில்லையம்மா! ஒரு வேளை உனக்கு அசதியாயிருக்குமோன்னுதான்.....''

''அழகாயிருக்கு போ.''

துளசி எழுந்து நின்ருள். பூமி நிலைமாறிச் சுழன்றது. ஒரு நிமிஷம் வான்வெளியில் தலை கீழாய் மோதி அதிர்ந்து போனுள். தாவித் தடவிய கைப்பிடியில் சூனியம்.

''அம்மா, அம்மா!''



அலண்டு போன அமுதாவின் குரல். தான் அவள் பிடியினுள் அடங்கித் தலையைப் பற்றிக் கொண்டிருப்பது துளசிக்கு உணர்வாகியது. யுகமாய் நீண்டுவிட்ட கணப் பொழுதில் ஒரு மயக்கமா? அவளுக்கு உடம்பு சரியாய்த்தான் இல்லையோ ஒருவேளை? அது அவளுக்கு முன்பாக அமுதாவுக்கு எப்படித்தான் தெரிந்ததோ?

''உட்காரும்மா. நான் தண்ணீர் கொண்டு வந்து தரேன்.''

''வேணும். நானே நடக்கிறேன். கொஞ்சம் பிடிச்சுக்கோ போதும். என்னமோ களைப்பாய்த்தானிருக்கு. ஏன்னு எனக்குத் தெரியலே.''

இன்னும் அதிகப் பரிவுடன் அமுதாவின் கரங்கள் அவளை அரவணைத்தன.

பல் கழுவிக் காப்பி அருந்தினுள். நாற்காலியில் அவளை அமர்த்திய வாறே, ''கொஞ்சம் ஒய்வெடுத்துக்கோ அம்மா!'' என்ருள் அமுதா. மென்மையில் அழுந்திய குரல். கண்ணேரங்களில் சோகம் வெம்பினுலும் வெடித்து விடாமல் பூச்சுப் போடும் உதட்டு முறுவல். சோகத்தையும் மீறிய ஆழ்ந்த கவலையின் மூட்டம் பதிந்த முக பாவம்.

துளசி மகளை ஏறிட்டு நோக்கினுள். அமுதா எவ்வளவு அழகு! சட்டென்று யோசனை தாவியது; பையனும் அழகுதான்! ஜோடிப் பொருத்தம் வெகு அருமை. அமுதாவின் திருமணம் நிச்சயமாகி விட்டது

# கந்தன் கருணை

## திருமுருக கிருபானந்தவாரியார்

## 46. திசை சேர்ந்த திக்குயானை

அக்கினிமுகாசுரன் இறந்ததையும், ண்ட எழுவர் உயிர் பெற்றதையும் ர்த்துக் கொண்டிருந்த ஒற்றர்கள் ச் சென்று சூரபன்மனிடம் நிகழ்ந் தை உரைத்தனர். அதைக் கேட்ட ரன், ''மகனே! மகனே!'' என்று றியழுது துயரக் கடலில் ஆழ்ந்தான். ந்தத் துயர்ச் செய்தியை அறிந்த சூர ன் மனைவி பதுமகோமளை அழுது ற்றி ஆற்ருெணுத் துயரத்தில் மூழ்கி ள். இச் செய்தி நகரத்தில் பரவவே, ரமகேந்திரம் முழுதும் அழுகை பொலி பரவியது.

சூரபன்மனின் புதல்வர்கள் மூவா ர். அவர்கள், அக்கினிமுகன் இறந்த தயும் அதனல் சூரபன்மன் துயரக் டலில் ஆழ்ந்திருப்பதையும் அறிந்து ரபன்மனின் அரண்மனைக்கு வந் ார்கள்; தந்தையை வணங்கினுர்கள். 'தந்தையே! இலக்கத்தொன்பான் வீர டம் போர் செய்ய அக்கினிமுகன் ருவனை அனுப்பினீர். மெலியரா னும் பலர் கூடினுல் வலியரையும் வல்லுவர் என்பதை நீங்கள் அறிந்த இல்லையா? அக்கினிமுகன் இறந்ததற் ாகத் துயரப்பட வேண்டாம். நாங்கள் வாயிரம் பேர்கள் இருக்கிருேம். இன் ும் இரணியன் இருக்கிருன்; பானு கோபன் இருக்கிருன். இவ்வளவு பேர்கள் இருக்கும்பொழுது உங்களுக்கென்ன றை? நால்வகைச் சேனைகள் அழிந்து ட்டனவே என்று கவலைப்படுகிறீர் ளா? அந்தக் கவலையும் வேண்டாம். உங்கள் காலாட்படைகளுக்கு அழிவு இல்லை. இதுவரை போரில் இறந்த சேனை னை இப்போதும் இருக்கிற நம்முடைய சேனைகளோடு ஒப்பிட்டுப் பார்த்தால் டுகளவே மாய்ந்ததாகவும், மலை ளவு மீதமிருப்பதாகவும் தெரியும்'' என்று கூறினர்.

அவர்களுக்கு சூரபன்மன் விடை ந்து. போர்க்களம் அனுப்பி வைத் தான். எண்ணில்லாத சேனைகளுடன் யுத்தப் பறையறிவித்துக் கொண்டு அவர்கள் போர்க் களம் அடைந்த போது அது கண்ட அமரரும் அஞ் சினுர்கள்.

பூத சேனைகளுக்கும் அவுணப் படை களுக்கும் பயங்கரப் போர் மூண்டது. போரில் அசுரர் பலர் மாண்டனர். எண் ணிறந்த பூதகணங்களும் இறந்தன.

விஜயன், ஜயன், இடபன், கரவீரன், அதிகோரன், அசலன், அதிகுணன், வாமனன், அந்தன், அகலிங்கன், அந கன், சதவலி, மாருதன், வருணன், சசி கண்டன் முதலாகிய ஆயிரவர் வீர வாகு தேவரிடம் விடைபெற்றுக் கந்தக் கடவுளைத் தியானித்து மூவாயிரவரை எதிர்த்துப் போருக்குச் சென்றனர்.

இரு தரத்தாரும் பொருததின் இறுதி யில் ஆயிரவரில் விஜயனைத் தவிர ஏனையோர் அனைவரும் வலியிழந்து தோற்ருேடினுர்கள்.

துணைவர்கள் தோற்று ஓடியதைக் கண்ட விஜயன், 'சூரபன்மன் குமா ரர்கள் மூவாயிரவரையும் யானே கொல்வேன்' என்று வஞ்சினம் கூறி ஞன். சிவபெருமான் கொடுத்த அழி யாத வில்லை எடுத்து வளைத்து மூவா யிரவர் மீது பாண மழைகளைச் சொரிந்தான். அப் பாணங்களால் தாக் குண்டவரின் அங்கங்கள் அறுந்தன வெனினும் பிரம்ம தேவர் கொடுத் திருந்த வரத்தின் பலத்தால் அறுந்த அவயவங்கள் மீண்டும் வந்து கூடின.

அதனைக் கண்ட விஜயன் திகைத் தான். அவர்கள் பெற்றுள்ள வரத்தின் சிறப்பை உணர்ந்தான். முருகன் திரு வடித் துணையின்றி இவர்களை வெல்லு வது அசாத்தியம் என்று உணர்ந்தான். முருகப் பெருமான் திருவடியைச் சிந் தித்து உள்ளம் உருகினுன்; கண்களால் நீர் பெருக்கியபடியே கந்தவேளைத் தியானித்தான்.

ஆறுமா முகப்பிரான்
அன்றி யிவ்விடை
வேறொரு துணையிலை
மெய்ம்மை யீதெனத்
தேறினேன் அவனடி
சிந்தை செய்தனன்
மாறிழி யருவிநீர்
வழியுங் கண்ணினுன்.

'உள்ளம் உருகினுல் உடனுவார்' என்பது வேதமொழியல்லவா? பக்தி வலையிற் படும் அருள் வள்ளலாகிய ஆறுமுகப் பெருமான் அவன் முன் விண்ணில் தோன்றினுர். "அன்ப! இம் மூவாயிரவரும் பிரம்மனிடம் வரம் பெற்றவர்கள். இவர்களைத் தனித் தனியாய்ப் போரிட்டு வெல்வது உன்னுல் முடியாத காரியம். மூவாயிரவரையும் ஏககாலத்தில் ஒரே படையால் வீழ்த்த வேண்டும். அப்போதுதான் அவர்கள் இறப்பார்கள். இந்தா! இது கால வயிரவப் படை. இந்தப் படையால் நீ அவர்களைச் சங்காரம் செய்" என்று கூறித் திவ்வியாஸ்திரத்தை விஜயனுக்குத் தந்து மறைந் தருளினுர். விஜயன் மனம் மகிழ்ந்து அன்புடன் அப்படைக் கலத்தைப் பூஜித்து விடுத்தான். வயிரவப் படைக்கலம் விரைவாக வருவதை மூவாயிரவருள் ஒருவனுன உன்மத்தன் கண்டான். "இந்தப் படைக்கலம் வந்து நம்மைத் தாக்குவதற்கு முன் ஒரு மாயப் படையினுல் இவனை அழிப்பேன்" என்று எண்ணி மாயப் படையை விடுத்தான். விஜயன் விடுத்த வயிரவப் படை விரைந்து சென்று எங்கும் அருளைப் பரப்பியது. மாயப் படையை அழித்தது. மூவாயிரவரையும் ஒரு கணத்தில் கூண்டோடு அழித்து மீண்டது. தேவர்கள் விஜயன் மீது பூமழை பொழிந் தார்கள். பூதர்கள் சந்திரனைக் கண்ட கடல்போல் ஆரவாரித்தார்கள்.

மூவாயிரம் பகைவர்களை வெல்ல வழி காட்டிய முருகக் கடவுள் நமது புலன்களாகிய பஞ்சேந்திரியம் என்ற ஐந்தே பகைவர்களை வெல்லுவதற்கும் வழி காட்டுவார். அதனை நமக்கு உணர்த்தியருள வேண்டும் என்று நாம் கண்ணீர் மல்கிக் கசிந்துருக வேண்டும்.

வரத்தினர் மூவா யிரவரை வெல்லும்
வழிதனை யறிந்திலேன் என்று
சிரத்தையோ டுன்னைத் தியானித்த விஜயன்
திகைப்பறத் தந்திரம் உரைத்தாய்
உரத்தினர் ஐவர் என்னிடை யிருந்தே
ஓரஒட்டார் உன்னை அவரைத்
தரத்தினில் வெல்லும் தந்திரம் யாதோ
சாற்றுதி தணிகை நாயகனே

(தணிகைநாயகன் மாலை)

மூவாயிரம் புதல்வர்களும் ஒருசேர மாண்ட செய்தியைக் கேட்ட சூரபன்மன் சிங்காதனத்தினின்றும் நிலத்தில் வீழ்ந்து புலம்பினுன். தனது ஆட்சி அதிகாரப் பிரபை மங்கி மறையும் நாளும் வந்ததோ என எண்ணினுன். அப்பொழுது சூரியனும் அஸ்தமித்தான்.



தலைமை அமைச்சன் தருமகோபன் சூரபன்மனிடம் வந்து வணங்கினான். ''தானவேந்திரா! வருந்தாதீர்! இதுவரை பெற்ற வெற்றியை எல்லாம்விட உமது வருத்தமே தமக்குப் பெரிய வெற்றி என்று வானவர் கொக்கரிப்பார்கள். போர் முனையில் இறந்தவர்கள் தந்தையானாலும், புதல்வர்களேயானாலும் அதற்காக வருந்தித் தளர்வது ஆற்றல் மிக்க வீரர்களுக்கு அழகல்ல.

''முந்துறும் மாற்றலர்
முனைவெம் போரிடைத்
தந்தையர் விளியினும்
தமர்கள் மாயினும்
மைந்தர்கள் விளியினும்
மான வீரர்கள்
சிந்தைகொள் வன்மையிற்
சிறிதும் தீர்வரோ?''



''கவர்ந்து சென்ற உயிர்களைத் தர இயமன் இருக்கிறான்; உடலைப் படைத்துத் தர பிரம்மன் இருக்கிறான். எஞ்சியுள்ள நமக்கும் வலிமை இருக்கவே இருக்கிறது. எல்லாம் இருக்கும்போது ஏன் ஏங்க வேண்டும்?'' என்று ஆறுதல் கூறினான்.

இயமனையும், பிரம்மனையும் ஆட்டிப் படைக்கும் ஆற்றல் இப்போதே தன் கைமீறிவிட்டது என்பதை சூரன் அறிவான். எனினும் தன் உடலில் உயிர் உள்ள அளவும் வருந்துவதில்லை என்று தெளிந்தான். ''அமைச்சரே! இயமனைப் போல் நானே சென்று எதிரிகளை அழித்து வருகிறேன்'' என்று கோபாவேசத்துடன் கூறினான். தருமகோபன் சூரபன்மனை வணங்கி, ''அரசர்க்கரசே! தாங்கள் இங்கேயே இருங்கள். யானே சேனைகளுடன் சென்று பகைவர்களைக் கொல்வேன்'' என்று வேண்டிக்கொண்டான்.

போர்க் கோலம் பூண்ட தர்மகோபன் புண்டரீகம் என்ற திக்கு யானை மீதூர்ந்து, பற்பல படைக்கலங்களைத் தாங்கி, போர் முரசறைய அவுண சேனைகளும் அமைச்சரும் சமுத்திரம்போல் சூழப் போர்க்களத்தை யடைந்தான். அதனைக் கண்ட தேவர்

கள் ''மாவீரர் பலரை வென்றோம். எனினும் புற்றீசல்களாகக் கிளம்பிக் கொண்டேயிருக்கின்றனரே! இதோ யானை மீது மதயானையாக வருபவனை வெல்வதரிது'' என்று அஞ்சியோடினர்.

தருமகோபன் போர்க்களம் அடைந்ததும் பூதர்கள் அவனை எதிர்த்து ஆரவாரம் செய்தனர். பூதப் படைக்குப் பலியான அவுணர் தலைவர் அனைவரும் தருமகோபன் கண்முன் தோன்றினர். அவன்து அஞ்சா நெஞ்சிலும் அச்சம் குடிகொண்டது. தன்னைத் தானே தேற்றிக் கொண்டான்.

அவுண சேனைகளும் பூத சேனைகளும் எதிர்த்துப் போராடின.

இலக்கம் வீரர்கள் போர் செய்து இளைத்தனர். அவுண அமைச்சர்கள் முன்னிலும் பன்மடங்கு வீரத்தோடு விளங்கி நின்றார்கள். அவர்களைக் கண்ட வீர மார்த்தாண்டர் வெகுண்டு எழுந்தார். அவர் ஒருவரது சீற்றம் பூதப் படை முழுவதற்கும் புத்துயிரூட்டியது. அவுணர்களைப் பூதர்கள் கொன்று குவித்தனர்.

தன்னுடைய படைகள் அழிந்ததைக் கண்ட தருமகோபன் சினந்து பூதர்கள் மேல் எண்ணற்ற கணைகளை விடுத்தான். அந்தப் பாணங்களின் தாக்குதலால் பூதர்கள் நடுங்கி மெலிந்தனர். புண்டரீகம் என்ற திக்கு யானை பூதர்களைத் துதிக்கையால் தூக்கி வீசியது. காலாலும், வாலாலும், தந்தங்களாலும் பூதரைச் சின்னபின்னப்படுத்திக் கொன்று வீழ்த்தியது. பூதர்கள் அந்த யானையின் மீது மலைகளை எறிந்தனர்; சரமழை பொழிந்தனர். அந்தப் பாணங்கள் தைத்ததால் திக்கு யானையின் உடல் முழுதும் உதிரம் பெருக்கெடுத்தோடியது. அந்தத் திக்கஜமோ சிறிதும் தளர்ச்சியடையாமல் பூத வீரர்களைத் தாக்கிக் கொன்றது.

வீர புரந்தரர் ஒரு வேலை எடுத்துத் தருமகோபன் மார்பை நோக்கி எறிந்தார். தரும கோபன் கதாயுதத்தை எடுத்து வீர புரந்தரர் மேல் எறிந்தான். அது வீர புரந்தரர் மார்பிற் பட்டதும், அந்த நிகரற்ற மாவீரரும் துன்பமுற்று நடுங்கி விம்மி வருந்தினர்.

இக் காட்சியைக் கண்ட வீரவாகு தேவர் மனத்தினும் விரைந்து தருமகோபன் முன்னே வந்தார். தருமகோபன் வீரவாகுவின் மீது செலுத்திய பாணங்கள் அவரது திருமேனியில் பட்டு, இரப்பவர்க்கு ஈயாது கரந்து, இரவாத செல்வர்கட்கு ஈந்த பொருள் போலப் பயனின்றிக் கூர் மழுங்கி வீழ்ந்து அழிந்தன. வீரவாகு தேவர் சினந்து ஒரு வேலை எடுத்து விடுத்தார். அது தருமகோபன் விடுத்த கணைகளையெல்லாம் அழித்துக்கொண்டு அவனது மார்பைத் துளைத்துச் சென்றது. தருமகோபன் மார்பினின்றும் உதிரம் வெள்ளம் போல் பெருக்கெடுத்தது. 'ஓ' என்று அலறி வீழ்ந்து மூர்ச்சித்தான் தருமகோபன். அவனது நிலைமையை உணர்ந்த திக்குயானை ஆர்த்து அசைந்தோடி வந்து வீரவாகு தேவரின் தேரைத் தன் கோடுகளினால் தாக்கியது. ஓர் இரும்புலக்கையால் வீரவாகு தேவருடைய தேர்ப் பாகனை அடித்துக் கொன்று தேரையும் அழித்தது. வீரவாகு தேவர் பிறிதொரு தேரின் மீது பாய்ந்து யானையின் துதிக்கையை ஒரு கரத்தாற் பற்றி மற்றொரு கரத்தால் அதன் கன்னப் பிரதேசத்தில் அறைந்து வெகு தூரத்துக்கப்பால் செல்லும்படி வீசி யெறிந்தார். யானை விண்ணுலகுக்கு எழும்பி மீண்டும் போர்க்களத்தில் வந்து வீழ்ந்தது.

மூர்ச்சை தெளிந்த தருமகோபன் மீண்டும் போர் தொடங்கினான். வீரவாகு தேவர் மீது குலிசப் படையை வீசினான். அதனை அவர் கையினாற் பற்றித் தருமகோபனுடைய மார்பில் அடித்தார். திருவடியால் அவனை ஒரு தரம் உதைத்தார். ஆயுதங்களுக்கு இல்லாத ஆற்றல் அவரது திருமேனி அவயவங்களுக்கே இருந்தன போலும்! தருமகோபன் உயிர் துறந்தான்.

மயக்கம் தெளிந்து உயிர்த்து மெல்ல எழுந்த திக்குயானை தருமகோபன் மாண்டதைக் கண்டது. அவனது மார்பில் தன் சக்தியையெல்லாம் திரட்டிப் போர் செய்து கடமையைச் செலுத்தி விட்டது. இப்போது அது வீரவாகுவை வணங்கி, ''எம்பெருமானே! கோபம் கொள்ளாமல் சிறியேன் சொல்வதை அருள் கூர்ந்து கேட்டருள வேணும். நான் திக்கஜம். திசையைக் காவல் செய்பவன். கீழ் மகனாகிய இத் தருமகோபன் இட்ட சிறையில் பல நாட்கள் வருந்தினேன். அவனுக்கு வாகனமாகி இதுவரை சுமந்து வந்தேன். அவனுடைய ஏவல் பலவற்றைச் செய்து வந்தேன். இன்றோடு நீசன் சேவகம் முற்றுப் பெற்றது. உய்வு பெற்றேன்'' என்று நெகிழ்ந்து கூறியது.

''இனி நீ உன்னுடைய திக்குக்குச் சென்று காவற் பணி புரியலாம்'', என்று வீரவாகு தேவர் அதற்கு விடை கொடுத்தார்.

திக்கு யானை தன் இருக்கை சேர்ந்தது.

(தொடரும்)



# கந்தன் கருணை

திருமுருக கிருபானந்தவாரியார்

## 47. மண்ணான மாவீரன்

திருமகோபன் இறந்த செய்தியைக் ட்ட சூரபன்மன் அறிவிழந்து ஓவியம் ல் கிடந்தான்.

மன்னன் சூரபன்மன் மயங்கியிருந்த ாது தூதர் சிலர் இளவரசன் பானு பனை அடைந்தனர். ''அரச குமார! ன்பு நீங்கள் விடுவித்த மாயப் படைக் த்தால் நன்னீர்க் கடலில் வீழ்த்தப் ற்ற வீரவாகு தேவர் முதலியோரை ருகன் பாசறையிலிருந்து கொண்டே லால் மீட்டார். அக்கினிமுகன். வாயிரவர், தருமகோபன் ஆகியோ ம் ஒருவர் பின் ஒருவராகப் போரில் ந்தாயிற்று. இரணியனும் மீளுகி ிந்தான். இவற்றை யெல்லாம் கேட் ந் தங்கள் தந்தையாரும் வெந்துயர் ாண்டுள்ளார்'' என்று கூறினார்கள்.

பானுகோபனுக்கு அவமானமும் ஆத் ரமும் ஆருத் துயரும் ஒருங்கே பொங்கி வந்தன. 'நமது பெரு வாழ்வுக்கு இறுதி வந்து விட்டது போலும்' என்று எண்ணினான். ஒரு வாறு தன்னைத் தெளிவித்துக் கொண்டு தந்தையையும் தெளிவிக்க நினைந்தான். அவன் மனத்தில் ஒரு தெளிவு பிறந் தது. முருகனை வெல்வது சாத்திய மல்ல என்று தெளிந்து அதனையே தந் தைக்கும் எடுத்துச் சொல்வதற்காக விரைந்தான்.

''நான் நன்னீர்க் கடலில் மூழ்கடித் தவர்களை நொடியில் மீட்ட முரு கனின் சக்தியை இன்னமும் தாழ்த்தி மதிப்பிடலாகாது. அதிகம் சொல்வா னேன்? தாங்களே முதல் நாள் அந்தப் பாலகனோடு போர் புரியச் சென்ற போது வில்லம்புகளை இழந்து தோற்று வந்தீர்கள் அன்றோ? இன்னமும் முரு கனுக்குக் கோபம் வரவில்லை. அவன் சினமுற்று விட்டால் அதனைத் தாங்குவ தற்கு எவரால் முடியும்? மாயோன் சக்கரத்தை மாலையாகத் தரித்த தார கனையும் கிரௌஞ்ச மலையையும் அழித்த வேற்படையை எதிர்ப்பவர் யாவர்?

''அப்பா! முருகன் முனிந்தால் அண் டங்கள் அனைத்தையும் அழிப்பான். அவ னுடைய தூதனாகிய வீரவாகுவை வெல் வதுகூட அரிதுதான். நடக்கக் கூடிய காரியத்துக்குத்தான் பெரியோர்கள் நீண்ட நாட்களாயினும் முயற்சி செய் வார்கள். இயலாத செயலில் அறிவுடை யோர் ஈடுபட மாட்டார்கள்.

''நெடிது பற்பகல் செல்லினும்
நிரம்புவ தொன்றை
இடை விடாமலே முயன்றுபெற்
றிடுகின்ற தியற்கை;
உடல்வ ருந்தியும் தங்களால்
முடிவுறு ஒன்றை
முடியு மீதெனக் கொள்வது
கயவர்தம் முறையே''

''அப்பா! வலிமை மிக்க புதல்வர் களை இழந்து விட்டீர்கள். உங்களுக்கும் எனக்கும் குறி பார்த்து நிற்கிறான் இய மன். போர் என்றால் புறம் கொடுப்ப வன் அல்லன் நான். இன்று உங்களிடம் இப்படியெல்லாம் பேசுவதால் போருக்கு அஞ்சினேன் என்று எண்ணிவிடாதீர்கள். நீங்கள் இன்னும் பல்லாண்டு பல் லாண்டு வாழ வேண்டும் என்னும் ஆசை யால் இவற்றைச் சொன்னேன். தேவ ரைச் சிறை விடுத்து உய்வு பெறுவோம்'' என்று கூறினான்.

சூரபன்மனுக்கு அழிவு காலம் நெருங்கி விட்டபடியால் அறிவு பிறக்க மறுத்தது. பானுகோபன் கூறியவற்றைக் கேட்டுச் சினமே யடைந்தான் சூரபன்மன். ''இந்த உலகில் நிலைத்து நிற்கக் கூடியது புகழ் ஒன்றுதான். இப்பொழுது நான் எதிரிகளுக்குப் பயந்து தேவர்களைச் சிறையிலிருந்து விடுவித்தால் என்னை யார் மதிப்பார்கள்? சூரன் என்று பேர் பெற்ற நான் என் சூரத்தனத்தை ஒருபோதும் இழக்க மாட்டேன். பிடித்த சிறையை ஒரு போதும் விடமாட்டேன். நிலையற்ற வாழ்வை எண்ணி அழியாப் புகழை இழந்துவிட மாட்டேன். உயிரை விட்டாலும் விடுவேனே யன்றி அதிகாரத்தை விட மாட்டேன். மகனே! நீ போருக்கு அஞ்சி விட்டாய். நீ உன் வீடு சென்று நிம்மதியாய் உறங்கு. நானே போருக்குச் செல்கிறேன்'' என்றான் சூரபன்மன்.

'சரி, இது வினையின் தவிர்க்க முடியாத போக்கு. தந்தையைத் தடுப்பது சாத்தியமல்ல' என்று எண்ணிய பானுகோபன், தந்தையுடன் உறுதுணையாக நின்று போர் புரிய முடிவு செய்து கொண்டான்.

''அப்பா! நான் அறிவில்லாமல், ஏதேதோ கூறி விட்டேன். அந்தப் புன்மொழியை மனத்தில் கொள்ளாமல் பொறுத்தருள வேண்டும். தாங்கள் இப்போது போருக்குச் செல்ல வேண்டாம். நானே சென்று நம் நகரத்தை அழிக்கும் பூத கணங்களையும், வலிமை மிக்க வீரவாகு தேவரையும் வெல்ல முயல்வேன்'' என்று கூறிப் புறப்பட்டான்.

பானுகோபன் பொன் தேரில் ஏறிப் போருக்குப் புறப்பட்டான். நால் வகை அவுணச் சேனைகளும் வந்து சூழ்ந்தன. போர்ப் பறைகள் முழங்கின. தேர்களில் ஏற்றியிருந்த கொடிகள் சூரிய மண்டலத்தை மறைத்தன. போர்க்களத்தை யடைந்த பானுகோபன் அங்கே இறந்து கிடந்த தம்பியரைக் கண்டு எல்லையில்லாத துன்பமுற்றான். துயரம் வெஞ்சினமாயிற்று. ''பூதர்களையும் வீரவாகுவையும் கொல்வேன்'' என்று சபதம் கூறினான்.

அவுண சேனைகளும் பூதசேனைகளும் போர்க் களத்தில் ஒன்றோடொன்று எதிர்த்து அமர் புரிந்தன. அவுணர்கள் அழிவதைக் கண்ட பானுகோபன் சினமுற்றுச் சரமழை பொழிந்து பூதர்களைச் சின்னாபின்னம் செய்தான். பூதர்கள் மனம் பதைபதைத்துத் தோற்று ஓடினார்கள்.

வீரவாகு தேவர் முருகவேளைத் தியானித்து முன்னணிக்கு வந்து சேர்ந்தார். வில்லை வளைத்துக் கணை மழை பொழிந்து அவுணச் சேனைகளை யழித்தார். அதைப் பார்த்த பானுகோபன் வீரவாகு தேவர் திருமுன் வந்து, ''தூதனே! உன்னைக் கொல்வதாகச் சபதம் செய்து வந்திருக்கிறேன். நீ இங்கிருந்து உயிருடன் திரும்பிச் செல்ல முடியாது'' என்று சூளுரைத்து ஆயிரம் கணைகளை விடுத்து அவர் மார்பைத் துளைத்தான். அதனால் சிறிது கிலேசமுற்ற வீரவாகு தேவர், பானுகோபன் புயத்தில் ஆயிரம் கணைகளை விடுத்தார். பானுகோபன் நூறு கணைகளை விடுத்து வீரவாகு தேவரின் வில்லைத் துணித்தான். வீரவாகுதேவர் ஒரு வேலாயுதத்தை எடுத்துப் பானுகோபன் நெற்றியை நோக்கி எறிந்தார். பானுகோபனின் நெற்றியைத் துளைத்தது வேல். ஒரு கணம் பானுகோபன் அறிவிழந்து நின்றான். வீரவாகு தேவர் வாயு, அக்கினி, சூரியன், பிரம்மன், விஷ்ணு அஸ்திரங்களை ஏவினார். பானுகோபனும் அதே தெய்வப் படைக்கலங்களை ஏவி அவற்றின் போக்கை மாற்றினான்! 'மாயையினாலேயே வீரவாகு தேவரை வெல்ல வேண்டும்' என்று கருதி, வீரவாகு தேவருக்கு நாற்புறமும் தேருடன் மாயமாக மறைந்தே சுற்றி வந்து கணை மழை பொழிந்தான். வீரவாகு தேவர் ஞானாஸ்திரத்தை விடுத்தார். ஞானம் வந்தவுடன் மாயை தானே ஒழிந்தது. பானுகோபன் மாயை ஒழிந்து விண்ணில் வெளிப்பட்டு நின்றான்.

அவனை நோக்கிய வீரவாகு தேவர் ''வஞ்சகனே! இனி நீ என்னிடமிருந்து தப்ப முடியாது. உன்னை நான் இங்கேயே கொல்வேன்'' என்று கூறித் தேருடன் ஆகாயத்தில் சென்று கணைகளைச் சொரிந்தார். நீரும் நெருப்பும் மாறிப் போராடுவது போல் இருவரும் போர் செய்தார்கள். அவர்களுடைய தேர்கள் இரண்டும் ஓர் இமைப் பொழுதினுள் ஆயிரத்து நூறு கோடி சாரிகைகள் திரிந்தன. அவர்கள் விடுத்த பாணங்கள் உலகெங்கும் திரிந்தன. இவர்களுடைய போரால் கடல்கள் வற்றின; மேகங்கள் கரிந்தன; திக்கஜங்கள் எரிந்தன; உடுக்கள் பொரிந்தன; அண்டங்கள் வெசித்தன. அமரரும் ஏனோரும் இறும்பூதுற்று, ''இவரைப் போல் போர் செய்தவர் யாவருளர்? இவருக்கிணை யாவருளர்?'' என்று புகழ்ந்தார்கள்.

பானுகோபன் கடும் கோபம் கொண்டு பிரம்மன் முன்னாளில் தனக்கு அளித்த வேற் படையை யெடுத்து விடுத்தான். அதனைத் தடுப்பதற்காக



# கேன்சரின் அடையாளம் என்ன?

...ராசியைக் குறிக்கும் நண்டு. ● ஆனால், நாம் இங்கு கேன்சர் எனும் புற்றுநோய்பற்றிக் கூறப்போகிறோம். இந்தியாவில், ஆண்டு
...ம் 2,00,000க்கும் மேற்பட்ட மக்கள் இந்தப் பயங்கர நோய்க்கு இரையாகின்றனர். இந்த புற்றுநோய்க்கு பல அடையாளங்கள்
... அவற்றில் பல போலியானவையாகும். உடலிலுள்ள ஒரு வகையான செல்கள், தடுக்க இயலாதபடி மிகப் பெருமளவில
...முக்கியமான செல்களை அவை அழித்து விடுகின்றன. இதனால் புற்றுநோய் உண்டாகிறது. இது ஏன் நேரிடுகிறது என்பது
...தும் தெரியாது. முன்னெச்சரிக்கை எடுத்துக்கொள்ளும் அளவிற்கு எந்தவிதமான வலியும் தெரிவதில்லை. ● புற்றுநோய்களை
...காள்ள, அதன் அபாய அறிகுறிகளை விழிப்புடன் கவனிக்கவேண்டும். ஆரம்ப நிலையிலேயே சிகிச்சையை மேற்கொண்டால்
...நோயைக் குணப்படுத்த முடியும். இல்லையெனின் அது உயிருக்கே ஆபத்தை விளைவிக்கும். ● புற்றுநோயினின்றும் உங்களைக்
...த்துக்கொள்ள கீழே உள்ளதைக் கத்தரித்து வைத்துக் கொள்ளுங்கள், உங்களுக்கு உதவும்.

| இந்தியாவில் காணப்படும் புற்று நோயின் பொதுவான வகைகள் | அபாய அறிகுறிகள். |
|---|---|
| 1. கன்னமும் நாக்கும் | சிறு ரணங்கள் அல்லது காலிஃப்ளவர் போன்ற வளர்ச்சி. |
| 2. தொண்டை | தொண்டையில் ஏதோ ஒரு வெளிப்பொருள் சிக்கிக்கொண்டிருப்பது போன்ற ஒரு உணர்வு. விழுங்கவோ, சுவாசிக்கவோ சிரமப்படுதல். குரலில் ஒரு வித மாற்றம். |
| 3. மார்பு | கட்டி இருத்தல். அதனால் வலியில்லாமலும் இருக்கலாம். |
| 4. கருப்பை | வழக்கத்திற்கு மாறாக இரத்தப்பெருக்கு, குறிப்பாக பெண்களுக்கு மாதவிலக்கு நின்றபின். |
| 5. வயிறு | திடீரென்று பசியாமை அல்லது அடிவயிற்றில் வலியிருத்தல் அல்லது இரத்த வாந்தி எடுத்தல். |
| 6. எலும்புகள் | வழக்கத்திற்கு மாறாக வீக்கம்—வலியில்லாமலும் இருக்கலாம். |
| 7. நுரையீரல் | தொடர்ச்சியான கரகரப்பு அல்லது காரணமின்றி இருமுதல். எச்சிலில் இரத்தம் கலந்திருத்தல். |
| 8. பெருங்குடல் | மலம் கழித்தலில் ஏதேனும் மாற்றம் இருத்தல். |
| 9. ப்ரோஸ்ட்ரேட் கிளாண்ட் | சிறுநீரில் இரத்தமிருத்தல். |
| 10. கண் | பார்வை மங்குதல் அல்லது கண்ணிலுள்ள மணியில் பொன்னிறம் அல்லது வெண்ணிறம் தென்படுதல்—குறிப்பாக குழந்தைகளுக்கு. |
| 11. தோல் | பரு அல்லது மறுவில் ஏதேனும் மாற்றமிருத்தல் அல்லது ரணம் தொடர்ந்திருத்தல். |

**செய்ய வேண்டுவது என்ன?**

1. உடனே மருத்துவரை நாடவும்.
2. 45 வயதிற்குப்பின் எந்த விதமான வலியின் அறிகுறி தோன்றவிடினும் உடலை அடிக்கடி பரிசோதித்துக் கொள்ளவும்.
3. புகையிலை பிடிக்க வேண்டாம். புகையிலை எரியும்போது, அது உண்டாக்கும் அதிகச் சூட்டினால், 3,4.போன்ற பென்சைப்ரைன் எனும் ஒரு வித இரசாயனம் உண்டாகிறது. புற்று நோயை உண்டாக்கும் பெரும் சக்தி வாய்ந்த பொருள் இது.
4. சுண்ணாம்பு மற்றும் புகையிலை கலந்துள்ள தாம்பூலத்தைத் தவிர்க்கவும்.



வாழ்க்கை ஒப்பற்றது. அதனைக் காப்பீர் ஆயுள் இன்சூரன்சு மூலம்

ASP-LIC-HS-1

# டுவின் டஸ்கர் பாப்ளின்



மேன்மையான தயாரிப்பு - நாள்பட உழைக்கும் - விலையிலும் சிக்கனமானது! டுவின் டஸ்கர் பாப்ளின் பார்வைக்குப் பகட்டானது - உழைப்பில் நீடித்தது. எவ்வளவு சலவை செய்தாலும் அதன் நெசவின் நேர்த்தியை இழக்காதது.

டுவின் டஸ்கர் பாப்ளின் இரண்டு வகைகளில் கிடைக்கிறது.

**மதுரை மில்ஸ் கம்பெனி லிமிடெட்**, மதுரை

உயர்ந்த ரக நூல்களுக்கு உலகப் பிரசித்தி பெற்றது

மானேஜிங் ஏஜண்டுகள் : ஏ. & எப். ஹார்வி லிமிடெட்

ஹார்வி



டுவின் டஸ்கர்

பாப்ளின் - டிரில் - கேம்பிரிக்



மதுரையைச் சேர்ந்த ஹார்விஸ்

வீரவாகு தேவர் ஆயிரங் கோடி பாணங்களை ஏவினர். அந்தப் பாணங் களை அழித்த பிரம்மாஸ்திரம் விண் வழியே விரைந்து வந்தது. வீரவாகு தேவர் கந்தக் கடவுளைத் தியானித்து சிவபெருமான் தந்த வாட் படையை எடுத்து வீசினர். அது பிரம்மாஸ் திரத்தை வீழ்த்தியதைக் கண்டு, தேவர்கள் ஆனந்தக் கூத்தாடினர்கள். வீரவாகு தேவர் வாளை உறையில் இட்டார். பானுகோபன் வாளை உருவிச் சிங்க ஏறுபோல் பாய்ந்து வீரவாகு தேவரின் வில்லைத் துணித் தான்.

வீரவாகு உருத்திரரைப் போல் உத் தண்டமாகச் சினந்தெழுந்தார். தமது வாளை எடுத்து எதிர்த்துப் போராடினர். அக்கினியும் இயமனும் போராடு வதைப் போல் அவர்கள் இருவரும் வாட் போர் செய்தனர். கால் கை களைத் துணிக்கக் குறி வைத்து வாளை வீசினர்கள். சூறைக் காற்று போல் சுற்றினர்கள். பானுகோபன் தான் கற்ற வாள் வித்தையின் வலியால் வீரவாகு தேவருடைய வாளை விலக்கி அவருடைய தோளில் வெட்டினன். அவருடைய தோளினின்றும் உதிர வெள்ளம் பெருகியது. பானுகோபன் செருக்குடன் நின்றிருந்தான். வீரவாகு தேவர் வேலாயுதக் கடவுளைத் தியானித்து வலிமை முழுவதையும் திரட்டி வாளை வீசி பானுகோப னுடைய வலத் தோளைத் துணித் தார். வெட்டுண்ட வலக்கையோடு சேர்ந்து வீழ்கின்ற வாட் படையை இடக் கையாற் பறித்த பானுகோபன் அடங்காத கோபத்துடன் எதிர்த்துப் போர் செய்ய முயன்றன். வீரவாகு தேவர் அவனது இடத் தோளையும் வெட்டினர். பானுகோபன் மாயப் படையை விட நினைத்தான்.

நினைப்பு நினைப்பாகவே முடிந்ததே யன்றி நடப்பாக மாறவில்லை; வீர வாகு தேவர் பானுகோபனது தலையை அனுயாசமாக அறுத்தெறிந்தார். பானுகோபனுடைய தலையும் புயங் களும் உடம்பும் மண்ணில் வீழ்ந்தன. அளவற்ற ஆற்றல் பொருந்திய மாவீர னின் உடல் ஆற்றலை யெல்லாம் இழந்து வெறும் சவமாக மண்ணில் சாய்ந்தது. மண்ணாசை கொண்டவன் மண்ணோடு மண்ணாயினன். கதிரவனை யும் கலங்கச் செய்த அவுண குலச் சிம்மத்தின் அழிவு கண்டு முனிவரும் தேவரும் மகிழ்ச்சிக் கடலில் மூழ்கினர். வீரவாகு தேவர் மீது பூமழை பொழிந் தனர். அரக்கர் குலச் சூரியன் அஸ்த மித்தவுடன் கதிரவனும் பன்னாட்களாக உள்ளூறக் கொண்டிருந்த கவலை தீர்ந்து களன்று ஜொலித்தான். (தொடரும்)

# வாழ்க்கை ஒரு சாதனை

ஸரோஜா ராமமூர்த்தி

நானும், ராஜியும் மயிலையில் கபாலீசுவரர் கற்பகாம்பாளைத் தரிசனம் செய்துவிட்டுத் திரும்பிக் கொண்டிருந்தோம். பன்னிரண்டு ஏ—நம்பர் பஸ்ஸில் குளத்தங்கரையில் ஏறினவர்கள் அபிராமபுரம் தாண்டும் வரை பேசவில்லை. தெருவில் நிகழும் சம்பவங்கள், ஓடும் வாகனங்கள், வரிசை வரிசையாக நிற்கும் பெரிய பங்களாக்கள் எதுவுமே என் கவனத்தை ஈர்க்கவில்லை. இவைகளுக்கெல்லாம் மேலாகக் கற்பகாம்பிகையின் தெய்விக அருள் நோக்கின் நெகிழ்ச்சியில் என் உள்ளத்தில் ஏதோ ஒன்று நிரம்பி வழிந்து கொண்டிருந்தது. 'ஆனந்தமா, திருப்தியா?' எது என்று என்னால் விண்டு சொல்ல முடியவில்லை.

ராஜி திடீரென்று பேச ஆரம்பித்தாள்.

''ரொம்ப நேரம் ஆகிவிட்டது. மாம்பலத்தில் பாலு வீட்டில் போய்ச் சாப்பிட்டு விடுவோம்... என்ன?'' என்று கேட்டாள் என்னிடம்.

நெற்றியெங்கும் கவிந்திருந்த நரைத்த கூந்தலின் நடுவே பளிச்சென்று குங்குமம் துலங்கியது. வகிட்டில்கூடத்தான். ராஜி என்னைவிட ஐந்தாறு வயது மூத்தவள். வாழ்க்கையின் ஆரம்பத்தில் நானும், அவளும் அரிச்சுவடி பயில ஒன்றாக நடை பயின்றவர்கள். காலேஜ் கீலேஜ் என்று எங்கள் இருவரையுமே எங்கள் பெற்றோர் எட்டிப் பார்க்க விடவில்லை. ஆனால் ராஜி சரளமாக ஆங்கிலம் பேசுவாள். பழக்கம்தான் காரணம். பத்தாவது வரை படித்தவர்கள் நன்றாக ஆங்கிலம் பேச முடியும், பிழையின்றி எழுத முடியும் என்றிருந்த காலத்தைப் பற்றிச் சொல்கிறேன்.






## 48. புத்திர சோகம்

சூரன் தந்த அதிசூரனாகிய அரசிளங் குமரன் பானுகோபன் வீர சுவர்க்கம் எய்தியதும் வீரவாகுதேவர் ஆகாயத்திலிருந்து மண் தலத்துக்கு வந்தார். துணைவர்களை நோக்கி, ''மாயங்கள் செய்த பானுகோபன் அழிந்தான். நமது சபதம் முடிந்தது. நாம் சேனைகளோடு சென்று முருகவேளைச் சேவிப்போம்'' என்று மன நிறைவுடன் கூறினார்.

பூதர்கள் ஜயசங்கம் ஊதிக்கொண்டு பாசறை சென்றடைந்தனர். அவ்வளவுக்கும் காரணமாயிருந்தும், அவ்வளவிலிருந்தும் ஒதுங்கியிருந்த முருகப் பெருமானின் கழலிணைகளில் பல முறை பணிந்து எழுந்தனர். முருகப் பெருமான் தம்பியை அணைத்துக் கொண்டார். அப்போது அத்தவயோக நாதனின் கண்களிலிருந்தும் ஆனந்த பாஷ்பம் பெருகிற்றாம். ''தம்பி, வீரவாகு! உன் வீர பராக்கிரமம் கண்டு நாம் மகிழ்ந்தோம். உனக்கு என்ன வரம் வேண்டும்?'' என்று அருளிக்கேட்டார் ஆறுமுகப் பெருமான்.

வீரவாகுதேவர் முருகப் பெருமானிடம் இந்திர பதவி கேட்பாரோ, பிரம்ம பதவி கேட்பாரோ, குபேரப் பதவி கேட்பாரோ, விஷ்ணு பதவி கேட்பாரோ என்று அப்போது இந்திரன், பிரமன், குபேரன், விஷ்ணு முதலியோர் நடுங்கிக் கொண்டு நின்றார்களாம். ஆனால் வீரவாகு அப்படியெல்லாம் கேட்டு விடுவாரா? அவர் என்ன கேட்டார் ?

''கோல நீடிய நிதிபதி
வாழ்க்கையுங் குறியேன்;
மேலை இந்திரன் அரசினைக்
கனவிலும் வெஃகேன்;
மால யன்பெறு பதத்தையும்
பொருளென மதியேன்
சால நின்பதத் தன்பையே
வேண்டுவன் தமியேன்''

''செல்வத்தினால் அல்லல் விளையும்; ஆதலால் குபேர சம்பத்து எனக்கு வேண்டாம்'' என்று வீரவாகுதேவர் கூறியதைக் கேட்ட குபேரன், நிம்மதியாய்ப் பெருமூச்சு விட்டான். 'இந்திரலோக ஆதிபத்தியத்தைக் கனவிலும் கருத மாட்டேன்' என்று அவர் கூறியதைக் கேட்ட இந்திரன், ''பிழைத்

தேன்'' என்று ஆசுவாசம் செய்து கொண்டான். பிரம, விஷ்ணுக்களின் பதவியும் வேண்டாம் என்று கூறிய வீரவாகு அயனுக்கும் திருமாலுக்கும் விச்ராந்தி தந்தார். ''தேவரீர் திருவடியில் என்றும் மாருத அன்பு வேண்டும்'' என்று அவர் வேண்டியபோது அமரர் அனைவரும் உருகி விட்டனர்.

இறைவன் திருவடிகளிடத்து மாரு அன்பு பூணுவதைவிடப் பெரும் பதவி தருவது ஒன்றுமில்லை. ஆன்மாவாகிய கொடிக்கு இறைவனுடைய திருவடியே கொழுகொம்பாகும். இறைவனடி சேர்ந்தார்க்கே துன்ப நீக்கமும் இன்ப ஆக்கமும் உண்டாகும். இறைவனடி சேர்ந்தாரே பிறவிப் பெருங்கடல் நீந்துவர்; இறைவனடி சேர்ந்தார்க்கு யாண்டும் இடர் எய்தாது எனத் தமிழ் மறை கூறும்.

காவிக் கமலக் கழலுடன்
சேர்ந்தெனைக் காத்தருளாய்

என்பது கந்தரலங்காரம்.

வீரவாகுதேவர் கேட்ட இந்த வரம் முத்தியைக் காட்டிலும் சிறந்தது. ''உதிக்காது உடையவர் திருவடி பக்தி. உதித்தால் அதுவே முத்தி'' என்று பிரகலாதன் தமக்கே சொல்லிக் கொண்டார். வீரவாகுவோ அதனை முத்தியிலும் பெரிதாகக் கருதினர். ''அடியேன் உய்யும் பொருட்டு பக்தி என்ற வரம் தாருங்கள்'' என்று கேட்டுக் கொண்டார்.

''தம்பீ! உனக்கது தந்தனம்'' என்று அருளிச் செய்தார் முருகப் பெருமான்.

''அந்த நல்வரம் முத்தியின்
அரியதொன் றதனைச்
சிந்தை செய்திடு தவத்தரும்
பெறுகிலர்; சிறியேன்
உய்ந்தி டும்வகை அருள்செய
வேண்டுமென் றுரைப்ப
எந்தை கந்தவேள் ''உனக்கது
புரிந்தனம்'' என்றுன்.

மற்றைய துணைவர்கள் யாவர்க்கும் முருகக் கடவுள் நல்லருள் புரிந்து இருக்கை போக விடை கொடுத்து அனுப்பினர். வீரவாகுதேவரும் மற்றவர்களும் அவரவர் உறைவிடங்களுக்குச் சென்றுர்கள்.

தயங்கித் தயங்கி அவன் தூதர்கள் பானுகோபன் வதையுண்ட செய்தியைச் சூரனிடம் கூற அசுரேந்திரன் உடலெல்லாம் வியர்த்து அறிவு சோர்ந்து மயங்கினன். அக்கணத்தில் அவன் உயிரே ஊசலாடியது. மாண்டவன் போல் வீழ்ந்தான். பின்னர் ஒருவாறு தெளிந்து எழுந்து பானுகோபனை நினைத்து நினைத்துப் பலப் பல கூறிப் புலம்பினன்.

''புத்திரர்கள் பலர் இறந்தும் நீ ஒருவன் இருக்கின்றுய் என்று உள்ளத்தை உறுதிப்படுத்திக் கொண்டிருந்தேன். உன்னையே உற்ற துணை என்று கருதினேன். உற்ற துணையாகத்தானே நீயும் எனக்கு நன்மொழி கூறினுய். ஆனல் உனது அறிவுரையைக் கேளாமல் கெட்டேன். உனைப் பலி கொடுத்தேன். உங்களை யெல்லாம் இழந்தபின் இப்போது நான் மட்டும் தருமத்தைப் பின்பற்றித் தப்பப் போவதில்லை. போருக்குச் செல்லத்தான் போகிறேன்.

''கண்மணி! உனக்கு அஞ்சி எப்பொழுதும் உன்னையே மலரேந்தி வழிபட்ட தேவர்கள் இப்பொழுது மகிழ்ந்தனரோ? உனக்குப் பயந்து துயிலாது உழன்று கொண்டிருந்த திருமால் இனி நன்ருக சேஷசயனத்தில் உறங்குவான். சிறு வயதில் நீ சிறை பிடித்த சூரியனும் மகிழ்ச்சியுடன் வானில் சஞ்சாரம் செய்வான். என் கண்மணியே! மந்திரிகளும் மற்றப் புதல்வர்களும் மாண்டு என்னை ஆருத் துயரத்தில் ஆழ்த்திய போது நீதான் என் துயர் துடைக்க இருந்தாய். அண்டங்களையெல்லாம் ஆளும் நான் என் கண்ணீரைத் துடைக்க யாருமில்லா அவலமாகி விட்டேன். இன்னமும் நான் இறக்கவில்லையே! பரமேசுவரனலன்றி எனக்கு அழிவு கூடாது என்று வரம் பெற்றேனே! அதற்கான தண்டனையாகவே இன்னமும் உயிர் வாழ்கிறேனு?'' என்று புலம்பி அழுதான் சூரபன்மாசுரச் சக்கரவர்த்தி.

போர்க்களத்தில் இறந்து கிடந்த பானுகோபனின் உடலை அவுணர்கள் சூரபன்மன் முன் கொண்டு வந்து கிடத்தினுர்கள். உயிரற்ற மகனின் உடலைக் கண்ட சூரனின் உள்ளத்தில் ஆவேசம் மிகுந்தது. ''மகனே! உன்னைக் கொன்ற அந்த வீரவாகுவைக் கொன்ருலன்றி என் மனம் அமைதியுருது'' என்று சூளுரைத்துத் தேம்பினன். சூரனின் ராணியான பதுமகோமளையின் ஆருத் துயரை எப்படி விவரிப்பது?

அரண்மனையில் மட்டுமின்றி வீர மகேந்திரமெங்கும் புலம்பல் ஒலி மிகுந்

தது. கணவன் இறந்ததற்காகப் பல அரக்கிகள் அழுதார்கள். உடன் பிறந்தவன் போய் விட்டானே என்று பல ராட்சஸிகள் அழுதார்கள். இப்போது மகாராஜனின் அரண்மனையிலேயே பெரிய மரணம் நேர்ந்துவிட்டபடியால் அரக்கிகள், 'நம் வீட்டிலும் அழுது அரசனின் அரண்மனையிலும் போய் அழ வேண்டாம். ஒரேயடியாக அரண்மனைக்கே போய்ச் சேர்ந்து அழுவோம்' என்று கருதினர்கள். வீர மகேந்திரபுரத்திலுள்ள பெண்கள் எல்லாரும் அரண்மனைக்குச் சென்று சூரபன்மனின் மனைவி பதுமகோமளையைக் கட்டிப் பிடித்து அழுதார்களாம்.

சூரபன்மன் ஒருவாறு தேறினன். ''எதிரிகள் யாவரையும் இன்றைக்கே கொல்வேன். அவர்களுடைய உதிரத்தைச் சொரிந்து ஒரு வேள்வியைச் செய்து இறந்து கிடக்கும் என் மகனை எழுப்புவேன். அவனுடைய உடம்பை ஓரிடத்தில் சேமித்து வைத்துப் பத்திரமாகப் பாதுகாத்து வாருங்கள்'' என்று அவுணர்களுக்கு உத்தரவிட்டான் சூரபன்மன்.

எனினும் அன்றைய மன நிலையில் தானே அன்று போருக்குச் செல்வது பலன் அளிக்காதோ என்றும் சூரன் கருதினன் போலும். சில தூதர்களை அழைத்தான்.

'' தூதர்களே! நம் எதிரிகளை எனது தம்பி சிங்கமுகனுக்கு இரையாக்குவேன். நீங்கள் ஆசுர நகரம் சென்று என் அருமைத் தம்பியை அழைத்து வாருங்கள்'' என்று கட்டளையிட்டான்.

தூதர்கள் மனே வேகமாய் வடக்குக் கடலில் உள்ள ஆசுர நகரம் சென்று சிங்கமுகனைத் தொழுது நிகழ்ந்தவற்றையெல்லாம் கூறி, சூரபன்மனின் கட்டளையையும் தெரிவித்தார்கள். அவற்றைக் கேட்ட சிங்கமுகன் பொங்கியெழுந்தான். தூதர்களை நோக்கி, ''எனது சேனைகளைத் திரட்டிக்கொண்டு வாருங்கள்'' என்று உத்தரவிட்டான். அதன்படி நால்வகைச் சேனைகளும் விரைந்து வந்து அவனைச் சூழ்ந்தன. சேனதிபதிகளும் வீரர்களும் சூழச் சிங்கமுகன் தேர் ஏறி வீரமகேந்திரபுரம் புறப்பட்டான். ஒரு நாழிகைப் பொழுதுக்குள் விண் வழியாக வீரமகேந்திரபுரம் வந்தடைந்தான். மாபெரும் வீரனுகிய அவனது வருகையைக் கண்ட தேவர்கள் அச்சத்தினல் கலக்கமடைந்தனர். (தொடரும்)







# கந்தன் கருணை

திருமுருக கிருபானந்தவாரியார்

## 49. சிங்கமுகன் சமருக்கு ஏகினான்

கந்த புராணத்தில் சிங்கமுகன் வதம் ஒரு சிறந்த பகுதி. சிங்கமுகனுக்கு ஆயிரம் தலைகள்; இரண்டாயிரம் கைகள். ஆன்மாக்களின் சுபாவம் எப்படி யிருக்கிறது என்று ஆராய்ந்தால் ஒன்றுபோல் இன்னோர் ஆன்மா இருப்பதில்லை. ஒரே தாய் தந்தையர்க்கு நான்கு பிள்ளைகள் பிறந்தால் நான்கு பிள்ளைகளும் நான்கு விதமாக இருக்கின்றன. ஆனால் மரத்தில் பழுக்கின்ற பழம் அப்படியில்லை. ஒரு மரத்தில் பச்சரிசி மாங்காய் இனிப்பாக இருக்கிறதென்றால், அந்த மரத்தில் காய்க்கும் எல்லாக் காய்களும் இனிக்கும்.

மனிதன் அப்படியில்லை. ஒரே தாய் தந்தையருக்குப் பிறந்தவர்களில் ஒருவன் திருடனாக இருப்பான்; வேறொருவன் தர்மவானாக இருப்பான். ஒரே தாய் தந்தையருக்குப் பிறந்த சூரன் — சிங்கமுகன் இவர்களிடையே இத்தகைய குணசித்திர வித்தியாசத்தைக் காண்கிறோம். சூரன் முற்றிலும் தீயவன். சிங்கமுகனுக்கோ நீதி தெரியும். ஆனால் அதைக் கையாள முடியவில்லை. பாவம் என்று தெரிந்தும் அந்தச் செயலையே செய்வான். முருகப் பெருமானின் பிரபாவங்களைச் சூரபன்மனிடம் சிங்கமுகனைப் போல் வேறு எவரும் எடுத்துச் சொல்லவில்லை. அவ்வளவு எடுத்துச் சொல்லியும் பயனில்லாமல் போகவே அவனே முருகனிடம் போருக்குத் தயாராகி வந்து விட்டான்.

ஆன்மாக்களுக்கு மூன்று மலங்கள் உண்டு. ஆணவ மலம், கன்ம மலம், மாயா மலம் என்று அவற்றுக்குப் பெயர். ஆணவ மலம் இயல்பாக இருப்பது. இடையிலே வருவது கன்ம மலமும் மாயா மலமும். ஆணவ மலத்தைப் போக்கவே இவை இடையில் வருகின்றன. தேரை ஓட்ட வேண்டுமானால் சன்னமும், மிதிக்கின்ற சறுக்கு மரமும் வேண்டும். சறுக்கு மரமாக இருப்பது கன்ம மலம். மூங்கில் சன்னமாக இருப்பது மாயா மலம். இந்த இரண்டு சாதனங்களைக் கொண்டு ஆணவ மலம் செயல் படுகிறது. சூரபன்மன் ஆணவ மலம், சிங்கமுகன் மாயா மலம்; தாரகாசுரன் கன்ம மலம்.

சூரபன்மனுக்கு உற்ற துணையாக இருந்தவர்கள் எல்லோரும் அழிந்து விட்டார்கள். சிங்க முகன் மட்டுமே உயிரோடு இப்போது இருக்கிறான். நால் வகைச் சேனைகளோடும் அவன் வீரமகேந்திரபுரம் வந்து சூரபன்மனை விரைவிலடைந்து அவனது காலில் அடியற்ற மரம்போல் விழுந்தான். "தம்பி!" என்று துன்பமும் அன்பும் ஒழுக அழைத்து அவனை ஆசனத்தில் அமர வைத்தான் சூரபன்மன்.

"அண்ணா! தூதர்கள் எல்லாவற்றையும் சொன்னார்கள். மூவர்க்கும் தேவர்க்கும் யாவர்க்கும் எட்டாத முழு முதற் கடவுளைப் பாலகன் என்று எண்ணிவிட்டீர்கள். என் பேச்சையும் ஒரு பொருட்டாக எடுத்துக் கொள்ளவில்லை. தானாகவும் தெரியாமல், பிறர் சொல்லியும் கேளாமல் கெட்டீர்களே" என்று துக்கப்பட்டுச் சொன்னான் சிங்கமுகன்.

மூலமும் முடிவுமில்
லாத மூர்த்தியைப்
பாலனென் றெண்ணினை
படுவ தோர்ந்திலை
ஆலம தானதே
ஐய என்மொழி
மேலையின் விதியையார்
வெல்லும் நீரினார்.

பெண்ணுக்கு மாப்பிள்ளை தேடினுர் ஒருவர். வரப் போகிற வரன் முப்பத்திரண்டு குணங்களும் பொருந்திய வனுக இருக்க வேண்டும் என்று வந்த ஜாதகங்களை யெல்லாம் கவனமாகப் பார்த்தார். எந்த ஜாதகமும் முப்பத்திரண்டு குணங்களுடன் பொருந்தி வரவில்லை. கல்யாணத் தரகர் ஒருவர் அவரிடம் வந்தார். ''ஒரு வரன் இருக்கிறுன். பெரிய இடத்துப் பிள்ளை. சர்வ லட்சணங்களும் பொருந்தியவன். முப்பத்திரண்டு குணங்களில் இரண்டு மட்டுமே குறைவாக இருக்கிறது. அந்த வரனைப் பேசி முடித்து விடலாமா?'' என்று கேட்டு மாப்பிள்ளையின் புகைப் படத்தையும் காண்பித்தார்.

புகைப்படத்தைப் பார்த்த பெண்ணின் தந்தை ''இந்த வரனையே நிச்சயம் செய்து விடுங்கள்'' என்று கூறினுர். தரகருக்கு ஐந்நூறு ரூபாய் தரகும் தந்து விட்டார்.

திருமணம் நிச்சயமாகி விட்டது. காலையில் ஆறு மணிக்கு முகூர்த்தம். மாப்பிள்ளை வந்து மணவறையில் உட்கார்ந்தார். மணப் பெண்ணும் வந்து அமர்ந்தாள். திருமாங்கல்யதாரணம் நடந்து விட்டது. பொரி சிந்துவது என்று ஒரு சடங்கு. திருமணம் நடத்தி வைத்த புரோகிதர் மாப்பிள்ளையின் கையில் பொரியை அள்ளிக் கொடுத்தார். அதை வாங்கிக்கொண்ட மாப்பிள்ளை வாயில் போட்டுக் கொண்டார். அதைக் கண்டு சபையிலிருந்தவர்கள் எல்லோரும் சிரித்துவிட்டார்கள். பெண்ணைக் கொடுத்தவருக்கு எப்படி இருக்கும்? முப்பது குணங்களை யல்லவா எதிர்பார்த்தவர்?

புரோகிதர் மெதுவாக மாப்பிள்ளையிடம் ''பொரியை நெருப்பில் போட வேண்டும்'' என்றுர்.

''முதலிலேயே சொல்லக் கூடாதா? ஹூம்...இப்போது போட்டால் போகிறது'' என்று சொல்லிக் கொண்டே வாயில் போட்டுக்கொண்ட பொரியை நெருப்பில் துப்பினுர்.

புரோகிதருக்கு ஒருபுறம் சிரிப்பு; மற்ெருரு புறம் கோபம். ''மாப்பிள்ளை! நீங்கள் ஒன்றும் செய்ய வேண்டாம்; நானே உங்களுக்காக ஹோமம் செய்கிறேன். நீங்கள் சும்மா உட்கார்ந்திருங்கள்'' என்றுர். உடனே மாப்பிள்ளை முழங்காலைக் கட்டிக்கொண்டு உட்கார்ந்தார். அதைக் கண்ட புரோகிதர், ''இப்படி உட்காரக் கூடாது'' என்று கூறினுர். உடனே மாப்பிள்ளை மணவறையை விட்டு எழுந்து வேகமாகச் சென்று விட்டார்.

பெண்ணின் தந்தைக்கு ஆத்திரம் பெருகியது. ''கொண்டு வா அந்தத் தரகனை'' என்றுர். தரகர் வந்ததும் அவர் தம்மை ஏமாற்றி விட்டதாகக் கடிந்து கொண்டார்.

தரகர் சொன்னுர்: ''நான்தான் அப்பொழுதே சொன்னேனே—முப்பத்திரண்டில் இரண்டு குணங்கள் குறைவு என்று; மாப்பிள்ளைக்குத் தன்னுலும் தெரியாது. பிறர் சொன்னுலும் தெரியாது.''

சூரபன்மனும் இதே குண விசேஷம் பெற்றவன்தான். இதனை எடுத்துக் காட்டிய சிங்கமுகாசுரன் ஒரு முத்தாய்ப்புக் கொடுத்தான். ''அண்ணு! வெள்ளம் வந்த பின் அணை போடுவதில் பயனில்லை. முன் வினையை யாரால் வெல்ல முடியும்? நான் அதிகம் பேசவில்லை. போருக்குச் செல்கிறேன். ஆனல் திரும்பி வரமாட்டேன். வேலாயுதத்திடம் சென்று யார் திரும்ப முடியும்? நீங்களாவது அழியாமல் இருக்க வேண்டும். தேவர்களைச் சிறையிலிருந்து விட்டுவிடுங்கள்.''

விடைபெற்றுக் கொண்டான் சிங்கமுகன்.

மகேந்திரபுரியிலுள்ள தன் மாளிகையைச் சென்றடைந்த சிங்கமுகன் அன்ன மலைகளையும், மாமிசக் குன்றுகளையும், பால், தயிர், நெய், கள், இரத்த ஏரிகளையும் தின்று, குடித்து, போர்க் கோலம் பூண்டான். பத்து லக்ஷம் குதிரைகளைப் பூட்டிய தேரில் ஏறி, மந்திரிகளும் மைந்தரும், இலட்சம் வெள்ளம் சேனைகளும் சூழப் போர்க் களத்துக்குச் சென்றுன்.

சிங்கமுகாசுரன் போருக்குச் செல்வதை யறிந்த நான்முகன், இந்திரன் திருமால் முதலிய வானவர்கள் பயந்து பாசறைக்கு விரைந்தனர். திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் கந்தக் கடவுளைத் தொழுது, ''ஆயிரம் தலைகளையும், இரண்டாயிரம் கைகளையும் உடைய சிங்கமுகாசுரன் போருக்கு வருகிறுன். அவன் ஆயிரத்தெட்டு அண்டங்களையும் வென்றவன். ஆயிரம் யோசனை உயரமுள்ளவன். அளவில்லாத வரம் பெற்றவன். பூமியை ஒரு கையால் தாங்க வல்லவன். வீரத்தில் மட்டுமின்றி வஞ்சனையிலும் மாயையிலும் வல்லவன். மேரு மலையைத் தண்டாயுதம் என்று எடுத்து அண்ட கடாகத்தை அடித்தவன். எவ்வுலகத்தையும் பிணிக்கத் தக்க இரண்டு பாசங்களை ஏந்திய கைகளை யுடையவன். சூரபன்மனுக்குத் தம்பியான இவன் எண்ணற்ற சேனைகளோடு வருகிறுன். அவனைக் கொன்று எங்களைக்

எங்கள் தீபாவளி விசேஷ தயாரிப்புகள்

இன்று பலராலும் விரும்பப்பட்டு பெருவாரியாக விற்பனையாகின்றன—

※ காஞ்சனு, புவனேஷ் வயலட் காமதேனு, கற்பகம் வண்ணங்களில் நந்தினி, மேஜிக் ஐ ஸில்வர்டச், கோல்டன்டச் தீபா, ரங்கோலி புடவை பாவாடைகள்

நீங்கள் வாங்கி விட்டீர்களா ?

# தாரகராம் ஸில்க் ஹவுஸ்

9\4, சத்யமூர்த்தி ரோடு - - கோயமுத்தூர்

( போன் : 2871 )

---

# தி மதருஸ் இண்டஸ்ட்ரியல் இன்வெஸ்ட்மெண்ட் கார்ப்பரேஷன் லிட்.

23, நுங்கம்பாக்கம் ஹைரோடு ※ (போன்: 82026) ※ சென்னை - 34

பிக்ஸட் டிபாஸிட்டுகள்

ரூ. 50,000/- வரை செய்யப்படும் பிக்ஸட் டிபாஸிட்டுகள் ஏற்றுக்கொள்ளப்படும் கீழ்க்கண்ட கவர்ச்சிகரமான விகிதங்கள்

| | | |
|---|---|---|
| 1 வருடமும் அதற்கு மேலும் 2 வருடங்களுக்குக் குறைவாக | 6¼% | வருடத்திற்கு |
| 2 வருடங்களும் அதற்கு மேலும் 3 வருடங்களுக்குக் குறைவாக | 6½% | ,, |
| 3 வருடங்களும் அதற்கு மேலும் 5 வருடங்களுக்குக் குறைவாக | 6¾% | ,, |
| 5 வருடங்களும் அதற்கு மேலும் 7 வருடங்களுக்குக் குறைவாக | 7¼% | ,, |
| 7 வருடங்களும் அதற்கு மேலும் | 7½% | ,, |

பிக்ஸட் டிபாஸிட்டுகளுக்காக வாங்கப்படுவது குறைந்தபக்ஷம் ரூ. 5000/-

புதிய தொழில்களை ஆரம்பிக்கவும், பழைய தொழில்களை விஸ்தரிக்கவும், தேவையான நிதியை உதவ, சென்னை அரசாங்கம், மதரூஸ் இண்டஸ்ட்ரியல் இன்வெஸ்ட்மெண்ட் கார்ப்பரேஷனை ஆரம்பித்துள்ளது. கார்ப்பரேஷன் ஏற்றுக் கொள்ளும் பிக்ஸட் டிபாஸிட்டுகளின் அசலுக்கும் வட்டிக்கும் சென்னை அரசாங்கம் நிபந்தனையின்றி உத்தரவாதம் அளித்திருக்கிறது.

D. V. நரசிம்ஹன், M. A., C. A. I. I. B., காரியதரிசி




Rexona
GOOD FOR YOUR SKIN

த்தருள வேண்டும்'' என்று வேண்டிக் கொண்டார்கள்.

வானவர் வேண்டுகோளைச் செவித்தார் கந்தக் கடவுள். வாயுவனை அழைத்து, ''நம்முடைய ரைக் கொண்டு வா'' என்று பணித்தார். பெருமானே போருக்குப் புறப் எண்ணி விட்டார் என்பது புலற்று. அது அவரது கௌரவத் தகாது; சூரன் மீண்டும் ருக்கு வருமளவும் பெருமான் வர ண்டியதில்லை எனக் கருதினர் வீர கு தேவர். முருகவேளைப் பணிந்து, எம்பெருமானே, வந்திருப்பவனே பன்மனின் தம்பிதான். நான் பிரமணியரின் தம்பி. தம்பி மீது ம்பியைப் போருக்கு அனுப்புங்கள் பி'' என்று வேண்டிக்கொண்டார்.

'சிங்கமுகாசுரன் எதிரில் நிற்கக்கூட க்கு ஆற்றல் இல்லை' என்று சொல் மலே எம்பெருமான் திருவுள்ளத் சிரித்துக் கொண்டு, ''நல்லது. னைகளுடன் முன்னே நீ செல்வாயாக'' று கூறியருளினர்.

தம் மாளிகைக்குச் சென்ற வீர கு தேவர் போர்க் கோலம் பூண்டு லக்கத்தெண் மரும் ஆயிரம் வெள்ளம் தப் படைகளும் சூழப் போர்க் த்தை யடைந்தார். போர்க்களத் பூதப் படைகளும் அவுணப் டைகளும் போரைத் தொடங்கின.

அவுணப் படையினரின் வீராவேசத் க்குதலால் பூதப் படையினர் நிலை லந்தனர். பூத சேனைகளின் நிலை யக் கண்ட சிங்கன் என்னும் பூத னுதிபதி ஒரு தண்டத்தை எடுத்து த்திரத்துடன் அவுணர்களைத் தாக்கி ன். சிங்கனுக்கு எதிராக அவுணப் டையைச் சேர்ந்த தசமுகன் என்ப ன் வில்லை எடுத்து மழை போல் பாணங்களைப் பொழிந்தான். அந்தப் பாணங்களையெல்லாம் சிங்கன் தண் டத்தால் அடித்து நொறுக்கினன். பின்னர் அதே தண்டத்தால் தசமுகன் அணிந்திருந்த கவசத்தையும் அழித் தான். கவசத்தை இழந்த தசமுகன் ஒரு தண்டத்தை எடுத்துச் சிங்கன்மீது வீசி யெறிந்தான். அந்தத் தண்டம் சிங்கன் மார்பில் பட்டதும் ஒடிந்தது. அதனைக் கண்டு ஆத்திரமடைந்த தசமுகன் ஒரு மழுவைச் சிங்கன் மீது எறிந்தான். அந்த மழுவை ஒரு தண்டி னல் அடித்து வீழ்த்திய சிங்கன், அதே தண்டினுல் தசமுகனின் வில்லை ஒடித் துத் தூளாக்கினன். தசமுகன் நெருப் புருவமாகிய வேல் ஒன்றைச் சிங்கனுக்கு எதிராகச் செலுத்தினன். சிங்கன் சக்கரப் படையை விடுத்து அந்த வேற் படையை அழித்தான். அதைக் கண்ட தசமுகன் ஒரு தண்டத்தை யெடுத்துச் சிங்கனின் மார்பை நோக்கி எறிந்தான். அந்தத் தண்டம் சிங்க னின் மார்பில் பாய்ந்தது. உதிரம் பொங்கியது. சிங்கன் கோபாவேசத் துடன் தசமுகனின் மார்பில் ஓங்கி அறைந்தான். அந்த அறை தசமுக னின் உயிரை மாய்த்தது.

பூத சேனையைச் சேர்ந்த அநகன் அற்புதமான போர்த் திறனைக் காட்டி அசுர சேனைகளை நிலைகுலைய ஓடச் செய் தான். துன்முகன் அவர்களைத் தடுத்து நிறுத்தி, ''வீரர்களே! இந்தப் பாணங் களைக் கண்டு நீங்கள் பயந்து ஓடலாமா? என்றைக்காவது சூரியனை மின்மினிப் பூச்சிகள் வெற்றி கொள்ள முடியுமா? என்னை நம்பிப் போரைத் தொட ருங்கள்'' என்று ஊக்க மளித்தான். தனது வில்லை வளைத்துப் பாணங்களைப் பூதர்கள் மீது பொழிந்தான். அது பயனளிக்காதது கண்டு நூறு நூறு மாய வடிவங் கொண்டு ஒவ்வொரு பூதரையும் தாக்கினன்.

வீரவாகு தேவர் அவனுடைய மாய வடிவங்களை ஞானப் படையால் அழித் தார். அவுணர் படை யாவும் ஓட்டம் பிடிக்கத் தனித்து நின்றிருந்த துன் முகனின் வில்லையும், பாணங்களையும் கவசங்களையும் வீரவாகு தேவர் அழித்து விட்டார். 'இனி இவர்களுடன் போர் செய்தால் இறப்பது திண்ணம். ஆகவே ஒளிந்துகொள்வதே பிழைக்க வழி' என்று கருதி ஒரு மந்திரத்தை உச்சரித் தான் துன்முகன். மந்திர மகிமை யால் விண்ணில் மறைந்தான். ''ஓடி ஒளிந்த அவனை விரைந்து சென்று பிடிப்போம்; வாருங்கள்'' என்று பூதர்கள் கூறினர்கள். வீரவாகு தேவர் ''யுத்தத்துக்குப் பயந்து ஓடியவர்களையும் சரணடைந்தவர்களையும் கொல்லுதல் தகாது'' என்று நீதி கூறினர்.

பூத சேனைகள் அவர் சொல்லுக்குக் கீழ்ப்படிந்தன.

அவுண வீரர்கள் தோற்று நாலா திசைகளிலும் ஓடுவதைக் கண்ட சிங்க முகாசுரன் முன்னணிக்கு வந்தான். பூதர்கள் அவன் முன் கூடி மலைகளை யும் மழுக்களையும், தண்டங்களையும் எழுப்படைகளையும் வீசிப் போரிட் டார்கள். சிங்க முகாசுரன் அவற்றை நோக்கிப் பெருமூச்சு விட்டான். அவ் வளவுதான். பூதர்கள் சண்டமாருதத் தில் அகப்பட்ட பூளைப் பூக்கள் போல் போயினர்.

**(தொடரும்)**

## வேண்டிய அளவு பாலும் சர்க்கரையும் சேருங்கள்

## ...பாக்கியை ப்ரூக் பாண்ட் பார்த்துக் கொள்ளும்!

சுவையிலும் நறுமணத்திலும் நீங்கள் ஒரு பாக்கெட்டில் தயாரிக்
கக்கூடிய தேனீர்க் கோப்பைகளின் எண்ணிக்கையிலும் ப்ரூக்
பாண்ட் ஒரு பொழுதும் மாறுவதில்லை. புத்தம் புதிய தன்மையி
லும் அவ்விதமே. எப்படியென்ருல்?

ஒரு தனிப்பட்ட கலவன் தயாரிக்க, ப்ரூக் பாண்டின் தேயிலை
ருசி கண்டு தரம் காண்பவர்கள் 600க்கு மேலான தேயிலை வகை
களை ருசி பார்க்கின்றனர். அவற்றுள் சில தேயிலைகளை டிகாக்
ஷனுக்கென்றும், மற்றவைகளை நறுமணத்திற் கென்றும் தேர்ந்
தெடுக்கிருர்கள். கலவன் செய்யப்பட்ட இத் தேயிலைகள் நீங்கள்
விரும்புகின்ற சுவையை ஒவ்வொரு தடவையிலும் தவருமலே
தருகின்றன.

புத்தம் புதிய தன்மைக்கோ வெனில் ப்ரூக்
பாண்ட், நாடெங்கிலுமுள்ள 600,000க்கு
மேலான கடைகளுக்கு பிரதிவாரமும் புதியதாக
தேயிலைகள் வினியோகம் செய்கின்றனர். வேறெ
வரும் செய்யாத ஒன்று இது!




தவருமல் ப்ரூக் பாண்ட் தேயிலை வாங்குங்கள்
—நீங்கள் விரும்பி அருந்தும் தேனீர் தருவது!

JWT BB 2650




# 50. உதயமும் அஸ்தமனமும்

பூத வீரர்கள் மீண்டும் தைரியத்
த் தருவித்துக் கொண்டு சிங்க
காசுரனை எதிர்த்துப் போர் செய்
ர்கள். சிங்கமுகாசுரன் தேரை விட்டு
றங்கி பூதர்களில் சிலரைக் கீழே எறிந்
ன்; சிலரை விண்ணில் எறிந்தான்;
ரைப் பிரம்ம உலகில் எறிந்தான்;
ரை விஷ்ணு உலகில் விசினான்;
ரை நிலமெங்கும் வீசினான்; சிலரைக்
லில் எறிந்தான். சிலரை ஒடித்தான்;
ரை மிதித்தான்; சிலரை நசுக்கி
ன்; சிலரை அரைத்தான்; சிலரைத்
ன்றான்; சிலரை நிலத்தில் வைத்துக்
ய்த்தான். சிலரை வெட்டினான். இப்
யாகச் சிங்கமுகாசுரன் கணப்பொழு
கண்ட கண்டபடி பூத வீரர்களைக்
ட துண்டமாக்கிக் கொன்று குவித்
தால் எங்கும் உதிர வெள்ளம் பெருக்
டுத்தோடியது. அது கடலில் கலந்து
லையே செந்நிறமாக்கியது.

அழற்கண்ணார் என்ற வீரர் சிங்க
காசுரன் மீது பல கணைகளை விடுத்
ர். அந்தக் கணைகள் அவரது மார்
பட்டதும் முனை மழுங்கி முறிந்து
ழுந்தன. அழற்கண்ணார் வடவாமுகாக்
விபோல் சினந்து ஒரு சூலப் படையைச்
ங்கமுகாசுரன் மீது எறிந்தார். அந்தச்
லம் சிங்கமுகாசுரன் மீது பட்டதும்
மலையில் பட்ட முள்ளைப் போல்
ஒடிந்து விழுந்தது. சிங்கமுகாசுரனின்
வலிமையைக் கண்டு வியந்த அழற்
கண்ணார் ஒரு தண்டத்தை எடுத்து
அவன் மீது எறிந்தார். அது சிங்க
முகாசுரனின் தேர்ப்பாகனின் தலையைச்
சிதறடித்தது. அதனைக் கண்டு சினந்த
சிங்கமுகாசுரன் தண்டாயுதத்தை எறிந்
தான். அது அழற் கண்ணாரின் மார்
பைப் பிளக்க உதிர வெள்ளம் பெரு
கியது. அவர் மூர்ச்சித்தார். சிங்க முகன்
வேறொரு தேர்ப்பாகனைத் தம் தேரில்
அமர்த்திக் கொண்டு பூத வீரர்களின்
மீது போர் செய்யப் புறப்பட்டான்.

சிங்கமுகாசுரன் போர் செய்ய வரு
வதைப் பூதப் படையைச் சேர்ந்த
சுமாலி என்பவன் கண்டான். உடனே
அவன், மேரு மலையைப் போன்ற ஒரு
மலையைப் பெயர்த்து வீசி ஆரவாரம்
செய்தான். அந்தப் பெரிய மலையைச்
சிங்கமுகாசுரன் பந்து போல் ஒரு
கையால் பிடித்துச் சுமாலி மீது
திருப்பி யெறிந்தான். அதனால் சுமாலி
உணர்விழந்து, செயலிழந்து நிலத்தில்
விழுந்தான்.

அடுத்து, தண்டி என்பவன் தண்டை
ஏந்திச் சிங்கமுகாசுரனுடன் சண்டை

செய்தான். சிங்கமுகன் அழியவில்லை; தண்டாயுதம்தான் அழிந்தது. சிங்க முகன் தண்டியைக் காலினால் உந்தி, வானவர்களும் அஞ்சும்படி ஆரவாரம் செய்து விண்ணில் வீசி யெறிந்தான். விண்ணிற் சென்ற தண்டி திரும்பி வந்து சிங்கமுகாசுரனின் இரண்டாயிரம் தோள்களின் மீது குதித்தான். சோலை களில் பாயும் குரங்கு போல் அவன் தோள்களில் உதைத்துத் திரிந்தான். சிங்கமுகனோ தனது தோள்களில், ''ஓர் ஈ உலவுகின்றது'' என்ற அளவுக்கே எண்ணி ஒரு கையால் சொறிந்து தண் டியை உருட்டித் துடைத்து விட்டான். தண்டி செயலற்றுப் போனான். பூதர்கள் யாவரும் பயந்து ஓடினார்கள்.

அவர்களை ஊக்குவான் வேண்டி இலக் கத்தெட்டு வீரர்களும், சிங்கமுகாசுர னுக்கு முன்னே தேரைச் செலுத்திக் கொண்டு வந்து சூழ்ந்து கணைகளைப் பொழிந்தார்கள். சிங்கமுகாசுரன் தேரி னின்றும் கீழே இறங்கிச் சென்று இடி போன்ற பெரு முழக்கத்துடன் இலக்கத்தெண்மரின் தேர்களில் சில வற்றைத் தூக்கி எறிந்தான். அவர் களது தேர்களிலேயே சிலவற்றை எடுத்து மற்றவற்றோடு மோதும்படி அடித்து நொறுக்கினான். இலக்கத் தெண்மரும் வலிமை இழந்து ஓடி னார்கள். சிங்கமுகாசுரன் தனது தேரில் வெற்றி வீரனாக ஏறிக் கொண்டான்.

வீரவாகு தேவர், கோபத்துடன் தேரைச் செலுத்திக் கொண்டு சிங்க முகாசுரன் முன்பு வந்தார். பெரிய வில்லை வளைத்துப் பல கோடி பாணங் களைப் பொழிந்தார். எதிர்த்து வந்த அவுணர்கள் தலை சிதறின; வெட்டுண்ட அவர்கள் பூமியில் விழுந்து உருண்டனர். அளவற்ற அவுணர்கள் மடிந்ததால் எங்கு நோக்கினும் பிண மலையே காட்சி யளித்தது. அம்மலைகளைச் சுற்றிப் பேய்கள் சுற்றிக் கொண் டிருந்தன. இறந்த அவுணர்களின் உடலினின்றும் பெருக்கெடுத்தோடிய உதிர வெள்ளம் இறவாமல் நின்றிருந்த அவுணர்களை அடித்துச் சென்று கடலில் கொண்டு போய்ச் சேர்த்தது.

இதனைக் கண்ட சிங்கமுகாசுரனின் மக்களாகிய சதவீரர்களுக்குச் சினம் பொங்கியது. கணைகளை மழையென வீரவாகு தேவர்மீது பொழிந்தனர். அவற்றையெல்லாம் தனது கணைகளால் மாற்றினார் வீரவாகு தேவர். வீரவாகு தேவரை விற் போரில் வெல்ல முடி யாது என்பதை உணர்ந்த சதவீரர்கள் வாட்போர் தொடங்கினர். சிவபெரு மான் தந்தருளிய வாளுடன் வீரவாகு அவர்கள் மீது பாய்ந்தார். சத வீரர்கள் அங்கம் அங்கமாகக் குறி பார்த்து வீசிய வாள் படையினாலும் வீரவாகு தேவருக்குத் தீங்கு எதுவும் ஏற்படவில்லை. உடனே அவர்கள் கூட்டமாகச் சென்று வீரவாகு தேவ ரைப் பிடித்துக் கொண்டார்கள். அத னால் ஆத்திரமடைந்த வீரவாகு தேவர் தமது வாள் படையினால் சதவீரர் களின் உடலைப் பலவாறாக வெட்டிக் கொன்று குவித்தார். சதவீரர்களைக் கொன்ற பின் தேரில் ஏறிக் கொண் டார் வீரவாகு தேவர்.

தமது புதல்வர்களான சதவீரர்கள் இறந்ததைக் கண்ட சிங்கமுகாசுரன் பெரும் துன்பத்தில் ஆழ்ந்தான்.

இதன் பிறகு சிங்கமுகனும் வீர வாகுவும் நேருக்கு நேர் சந்தித்தனர். வீரவாகு தேவரை ஏற இறங்கப் பார்த்தான் சிங்கமுகாசுரன். அவனது கண்கள் தீயைக் கக்கின. ''உ...ம், சிவகுமாரன் என்றால் ஆறு முகங்கள் இருக்கும். உனக்கு ஆறு முகங்கள் இல்லை. ஒரே முகம் உடைய நீ சிவ குமாரன் அன்று. நீ யார்? எண்மர் களில் ஒருவனோ? இலக்கம் வீரர்களின் தலைவனோ? நீதான் முன்பு நமது ஊருக்கு வந்த தூதனோ? யார்? சொல்'' என்றான்.

சிங்கமுகனின் கேள்விக்குப் பதில் கூறினார் வீரவாகு தேவர்.

''சிவகுமாரராகிய முருகப் பெருமா னின் அடிமை நான். முன்பு உங்களது மகேந்திரபுரிக்குத் தூதனாய் வந்து முருகப் பெருமானின் அருளினால் நக ரத்தை அழித்துத் திரும்பிச் சென்ற வன் நானேதான். ஆறுமுக சுவாமியின் கிருபையால் அளவற்ற அவுணர்களைக் கணப் பொழுதில் அழித்த நான் உன் னையும் கொல்வதற்காக அவரது அநுக்கிரகத்தைப் பிரார்த்தித்து இங்கு வந்து நிற்கிறேன். என் பெயர் வீர வாகு'' என்று கூறினார்.

''வினயமாகப் பேசுவது போலப் பேசியே உன்னைப் பற்றி நீ தற்பெருமை அடித்துக் கொள்கிறாய். போர்ப்பயிற்சி பெறாதவர்களையும், நகரில் உள்ள பாம ரர்களையும் வெல்லுவதுதான் சுத்த வீரனின் ஆண்மையோ? உன்னையும் உன் தரப்பினர் அவ்வளவு பேரையும் வதைக்க வந்துள்ளேன். சிறையில் சிக்கி யுள்ள தேவர்களைச் சிறை விடுக்க வந்துள்ள நீங்கள், உங்கள் உடலில் அடைபட்டுள்ள உயிரை விடுத்துப்

வீர்கள்'' என்று இடிபோல் கர்ஜித்
ன் சிங்கமுகாசுரன்.
சிங்கமுகாசுரனின் வீர கர்ஜனை
கேட்ட வீரவாகு தேவர்
த்துப் பதினெட்டுக் கணைகளைச்
முகாசுரன் மீது செலுத்தினார்.
ப் பாணங்கள் அவன் மார்பில்
ப் பயனற்று வீழ்ந்தன.
டர்ந்து இருவருக்கும் வெகு
ரமான போர் நடைபெற்றது.
முகாசுரன் தன் கையிலிருந்த
ப் படையைச் சுழற்றி வீரவாகு
வர்மீது வீசினான். விண் வழியே வந்த
தச் சூலத்தின் ஆற்றலைக் கண்ட
வாகு தேவர் அதனை எதிர்த்து
ரம் பாணங்களை விடுத்தார்.
ப் படை அந்தப் பாணங்களையும்
த்திவிட்டு வீரவாகு தேவரை
க்கிச் சென்றது. இதனைக் கண்ட
க்கத்தெண்மரும் வீரர்களும் கலக்க
டைந்தனர். தம்மை நோக்கி வந்த
ப் படையை வீரவாகு தேவர்
பெருமான் அளித்த வாள் படை
ல் இரு துண்டங்களாக வெட்டினார்.
ம் பொங்கச் சிவப் படைக்கலத்தை
த்து வழிபாடு செய்து ''சிங்க
ாசுரனைக் கொல்வாயாக'' என்று
டுத்தார். சிங்கமுகாசுரனும் அதற்
திராக இன்னொரு சிவப் படைக்
த்தையே வழிபாடு செய்து விடுத்
ான். இருவரில் எவருமே அழியவில்லை.
வப்படைக் கலங்கள் இரண்டும் ஒன்றோ
டான்றுவந்து கலந்து தம்மைச் செலுத்
யவர்களிடமே திரும்பிச் சென்றன.

சிங்கமுகாசுரனைக் கொல்ல முடிய
ல்லையே என்று வீரவாகு தேவர்
பரிதும் வருந்தினார். ஆறுமுகக்கடவு
டம், 'தாங்கள் இவனோடு யுத்தம்
ரிய வேண்டாம்; நானே இவனை
முடிப்பேன்' எனத் தாம் கூறியது
வவறோ?' என்று எண்ணினார். 'இவ
து ஆற்றலைக் காணுங்கால் ஆறுமுகக்
கடவுளின் திருக்கரத்திலுள்ள படை
களாலன்றி வேறு எவற்றினாலும்
இறக்க மாட்டான் என்றே தோன்று
கிறது. ஆயினும், இவனது தேரை
யும், படைக் கலங்களையும், சேனை
களையுமாவது அழிப்பேன்' என்று
கருதினார் வீரவாகு. சிங்கமுகாசுரனின்
தேர்ப்பாகனது தலையைத் துண்டித்
தார். சிங்கமுகாசுரனின் தேரை
அழித்தார். அந்தச் சமயம் பார்த்துப்
பூத வீரர்கள் சிங்கமுகாசுரனைச் சூழ்ந்து
மலைகளையும் படைக்கலங்களையும் வீசிப்
போர் செய்தார்கள். சிங்கமுகாசுர
னின் தேர் அழிந்து விட்டதால் அவன்
வேறொரு தேரில் ஏறி ஆயிரம் கைகளி
லும் வில்லும் அம்பும் எடுத்துக்

சுகுநீலன்

''அத்தான்! மைசூர்ப்பாகு நானே செய்தேன்.
உப்பு போதுமா என்று பாருங்களேன்!''

கொண்டு அளவற்ற பாணங்களை
விடுத்தான். அந்தப் பாணங்கள் தாக்கி
யதால் போருக்கு வந்த பூதர்கள்
மாண்டனர். சிங்கமுகாசுரனின் பாணத்
தினால் தாக்கப்படாத உடலே இல்லை
யென்றாகிவிட்டது.

வீரவாகுவும் சிங்கமுகனும் இலட்சக்
கணக்கான பாணங்களால் பரஸ்பரம்
தாக்கிக் கொண்டனர். சிங்கமுகா
சுரன் பெருஞ் சீற்றத்துடன் இரண்
டாயிரம் பாணங்களைச் செலுத்தினான்.
அந்தப் பாணங்களால் வீரவாகு
தேவரின் கையிலிருந்த வில் வெட்டுண்டு
வீழ்ந்தது. அவர் வேறொரு வில்லை எடுப்
பதற்கு முன் சிங்க முகாசுரன் கணை
மழை பொழிந்து அவர் மார்பைத்
துளைத்தான். வீரவாகுதேவர் வெகுண்டு
சிங்கமுகாசுரனின் தேரை அழித்து
அவன் ஆயிரம் விற்களையும் அழித்தார்.
அது கண்ட வானவரும் நான்முகனும்,
நாரணரும் ஆர்த்தனர். அதனால் சிங்க
முகாசுரன் நாணமடைந்தான்.

வீரத்தால் செய்வதற்கு இனி ஏது
மில்லை என்று கண்ட சிங்கமுகாசுரன்
தனது தாயாகிய மாயை அளித்த
மாயா பாசத்தை எடுத்து விடுத்தான்.

பிரளய கால இருளைப் போன்ற
கனந்தகாரத்தைப் பரப்பிச் சென்ற
அந்த மாயா பாசம், ஏழு கடல்களும்
ஒன்று சேர்ந்து மணல்களை வாரி
யடித்துக் கொண்டு செல்வதுபோல்
வீரவாகு தேவர் முதலிய இலக்கத்
தொன்பதின்மரையும் ஏனைய பூதர்
களையும் மயக்கி அடித்துச் சென்று
உதயகிரியில் வைத்தது. தமது உணர்வு
களின் அஸ்தமனத்தை அடைந்த
பூத வீரர்கள் உதயகிரியில் மயங்கிக்
கிடந்தனர்.

**(தொடரும்)**

# இரு இதயங்கள்

கோமகள்

சென்ற முறை கல்லூரி விடுமுறை விட்டபோது கசந்து கொண்டேதான் கிராமத்துக்குப் போனேன். இப்போது அப்படியில்லை. விடுமுறை எப்போது வரும், கிராமத்துக்கு எப்போது போகலாம் என்று காத்திருந்தேன். எனவே, விடுமுறை ஆரம்பித்த முதல் நாளே குலாபி சென்னையில் வாங்கி வருமாறு பணித்திருந்த சாமான்களின் பட்டியலோடு சைனுபஜாருக்குப் புறப்பட்டேன்.

அலங்காரப் பொருள்கள், நைலான் ஒயர், பாசி மணிகள், வண்ண நூல் உருண்டைகள், வளையல்கள் என்று அவள் எழுதியிருந்ததை யெல்லாம் வாங்கியபின், குலாபிக்குப் பொருத்தமாக வேறு ஏதேனும் ஒரு பரிசு வாங்க விரும்பி யோசித்தேன். அழகாகவும், எப்போதும் உபயோகமாகவும் வேண்டுமானுல் நல்ல உயர்ந்த பேனு ஒன்று வாங்கித் தருவதே சிறந்ததென முடிவு செய்து அவ்வாறே வாங்கினேன்.

புகைவண்டியில் செல்லும்போதே குலாபியின் நினைவு ரோஜா மணமாக மனத்தைச் சூழ்ந்திருந்தது.

என் சென்ற பிரயாணத்தின் போது கிராமத்து வீட்டில் பொழுது போகாமல் அடைந்து கிடந்தபோதுதான் அப்பாவைப் பார்க்கத் தம் பெண் குலாபி என்ற ஹரிணியோடு ராம்லால் வந்திருந்தார். கிராமத்தில் ஓர் எஸ்டேட்டை வாங்கி அங்கேயே ஒரு மாதமாக அவர் குடிவந்து விட்டாராம். நில விவகாரங்களில் ஊருக்குப் புதிதாகையால் அப்பாவின் யோசனையைக் கேட்கத் தினசரி வருவாராம். அவ்வப்போது மகளையும் அழைத்து வருவாராம்.

குலாபி என்ற பெயர்தான் அவளுக்கு எத்தனை பொருத்தமானது! அவள் நிறமும், அழகும், அந்த முகமும் எல்லாம் ரோஜாவின் அம்சம்தான். இளமைக் கொலுவில் இன்ப நிறைவெய்திப் பவனி வரத் துடிக்கும் அவள் கண்களைக் கண்டு நான் மெய் சிலிர்த்தேன். அவளது சகஜமான பேச்சும், கலகலப்பான சுபாவமும் என் அன்னையைக் கவர்ந்தது. அதன் பயன் குலாபி அடிக்கடி வீட்டுக்கு வந்தாள். மாலை வேளைகளில் வயல் வெளிகளைப் பார்வையிடும் சாக்கில் நானும் ஊரின் ஒதுக்குப்புறத்திலிருந்த அவர்கள் வீட்டுக்குப் போக ஆரம்பித்தேன். உள்ளே குலாபியின் தாயார் வேலையாக இருப்பாள். ராம்லால், நான், குலாபி மூவரும் எதைப் பற்றியாவது பொழுதுபோக்காகப் பேசிக் கொண்டிருப்போம். சிலபோது ராம்லால் இருக்க மாட்டார். அப்போது நானும், குலாபியும் மட்டுமே எதைப் பற்றியாவது பேசிக் கொண்டிருப்போம். அவளுக்குச் சரத் சந்திரர், காண்டேகர் நாவல் எல்லாம் மிகவும் பிடிக்கும். நல்லவேளையாக நான் சிறு வயதில் அவற்றை யெல்லாம் படித்திருந்ததால் அதைப் பற்றிப் பேசி என் ஞாபக சக்தியின் திறமையையும், ரசிகத் தன்மையையும் காட்டிக் கொள்ள முடிந்தது.

அந்த விடுமுறை முடிந்தபோது நான் அவளிடம் வருத்தத்தோடு விடைபெற்றேன். அவள் கண்கள் பொங்க விடை கொடுத்தாள். பிறகு சமாளித்தவாறே ஒரு சில பொருள்கள் வாங்கி வரும்படி பட்டியல் கொடுத்தாள்.

கிராமத்தை அடைந்ததும் குளித்து உடைகள் மாற்றிக் கொண்டதும் அவசரம், அவசரமாகக் குலாபிக்கு வாங்கிய பொருள்களோடு அவள் வீடு நோக்கிப் பறந்தேன்.

''எனக்குத் தெரியும், நீங்கள் இப்போதே வருவீர்கள் என்று! இல்லையானுல் நானே வந்திருப்பேனே...'' என்று மகிழ்வோடு வரவேற்ருள் குலாபி.

''ஏன், நீ வாங்கி வரச் சொன்ன பொருள்களைப் பார்க்க அத்தனை ஆசையா?''

''ஓ! ஈசுவர் பாபுவைப் பார்ப்பதைவிட மற்றப் பொருள்களைப் பார்ப்பதில் எனக்கு அத்தனை பிரியம் கிடையாது. தெரிந்து கொள்ளுங்கள்'' என்று செல்லக் கோபம் காட்டினுள் அவள்.

''அதிருக்கட்டும், குலாபி! நான் வரப் போவது எப்படித் தெரியும் உனக்கு?''




## 51. அம்பிகையின் வாகனம்

போர்க்களத்தில் எதிர்த் தரப்பிலிருந்து படைகளை யெல்லாம் சிங்கமுகன் உதயகிரிக்கு உருட்டி விட்டான். இனி ஆறுமுகரும், இதுவரை போர்க்களம் வராத பூதப் படைகளும்தான் அவனோடு போருக்கு வரவேண்டும். ''சிவகுமாரன் எனக்குப் பயந்து ஓடி ஒளிவானா? அல்லது இவ்வளவு நடந்த பின்னும் தைரியமாகப் போருக்கு வருவானா? அந்தப் பாலகன் எங்குள்ளான்?'' என்று அண்டங்கள் வெடிக்கும்படி ஆரவாரம் செய்து கூறினான்.

ஓர் ஒற்றன் அவனிடம் வந்து, ''சிவகுமாரன் சேனைத் தலைவர்களுடனும், ஆயிரம் வெள்ளம் பூதப் படைகளுடனும், இந்திரன் பிரம்மன் விஷ்ணு, முதலியோருடனும் பாசறையில் இருக்கிறார்'' என்று கூறினான். அதைக் கேட்டு நகைத்த சிங்கமுகாசுரன், ''அவர்கள் இங்கு என்னை எதிர்க்க வருவர் என எதிர் பார்த்துக் காலதாமதம் செய்வதில் பொருள் இல்லை. பயந்து ஒளிந்திருக்கும் அந்தப் பாலகனையும் படையினரையும் இப்பொழுதே அவர்களது பாசறைக்குச் சென்று கொல்வேன்'' என்று கோஷித்தான். அவ்வாறே பாசறை நோக்கிப் போருக்குப் புறப்பட்டான்.

சிங்கமுகாசுரன் வருவதை யறிந்த தேவர்கள் வாட்டமடைந்து குமாரக் கடவுளிடம் நிகழ்ந்தவற்றை யெல்லாம் கூறினார்கள். பெருமான் புன்முறுவல் செய்தார். பாசறையினின்று வெளி வந்தார். தம்முடைய தேரைக் கொண்டு வரும்படி பணித்தார். அதன்படி வாயுதேவன் மனோவேகத் தேரைக்கொண்டு வந்து நிறுத்தினான்.

''நாமே புறப்படுவோம்'' என்றார் சுவாமி.

சாம்பூநதம் என்ற பொன் ஆயிரம் மாற்றுத் தங்கம். அவற்றில் நவரத்தினக் கற்கள் பதிக்கப்பட்ட பாதுகைகளைச் சிருஷ்டி கர்த்தாவும், சரஸ்வதி காந்தனுமான பிரம்மதேவன் சரவணபவருக்குச் சமர்ப்பித்தார். அந்த இரத்தினப் பாதுகையின்மீது தமது இரத்தினத் திருவடி வைத்துப் புறப்பட்டார் சுவாமி. தேவேந்திரன் தங்கப் பிடி போட்ட வெண்சாமரம் வீசினான். முப்பத்து மூன்று கோடி தேவர்களும் ஆலவட்டம் வீசினார்கள். சூரியனும் சந்திரனும் வெண் கொற்றக்குடை பிடித்தார்கள். அறக் கடவுள் உடைவாள் ஏந்தி வந்தான். இயக்கர் தலைவனான குபேரன் தாம்பூலப் பெட்டி தாங்கினான். வருணன் படியகம் ஏந்தினான்.

இந்திரன் கவரி சாய்ப்ப
இமையவர் வட்டம் விசச்
சந்திரன் தபனன் என்போர்
தன்னிழல் கவிப்புத் தாங்க
அந்தகன் உடைவாள் பற்ற
இயக்கர்கோன் அடைப்பை
கொள்ளச்
சிந்துநீர் அரசன் செம்பொற்
படியகம் ஏந்தச் சென்ருன்.

சகல தேவர்களும் கைங்கரியம் செய்ய, சகல தேவர்க்கும் நாயக ரான சுவாமி மனோ வேகத் தேரில் தமது மனோகரமான பாதம் பதித்து ஏறி வீற்ருர். கடல்கள் நாணும்படி ஆயிரம் வெள்ளம் பூதர்கள் ஆர வாரம் செய்து சூலம், மழு, தண்டம், எழு, மலை முதலியவற்றை ஏந்தி எம்பெருமானைச் சூழ்ந்து சென்ருர்கள். பானுகம்பன் என்ருெரு பூத வீரன். அவனுக்கு இரண்டாயிரம் கைகள்; இரண்டாயிரம் கால்கள். இரண்டா யிரம் கைகளிலும் இரண்டாயிரம் வலம் புரிச் சங்கங்களை எடுத்து வெற்றி ஊதினுனும்.

மூவர்கள் முதல்வன் வந்தான்;
முக்கணன் குமரன் வந்தான்;
மேவலர் மடங்கல் வந்தான்;
வேற்படை வீரன் வந்தான்;
ஏவருந் தெரிதல் தேற்ருது
இருந்திடும் ஒருவன் வந்தான்;
தேவர்கள் தேவன் வந்தான்;
என்றன சின்ன மெல்லாம்.

''மும்மூர்த்திகளுக்கும் முதல்வன் வந்தான்; சிவகுமாரன் வந்தான்; பகைவர்கள் என்னும் யானைகளுக்கு ஆண் சிங்கமாயுள்ளவன் வந்தான்; வேற்படை வீரன் வந்தான்; யாவ ரும் அறிதற்கரிய தனி முதல்வனுகிய பெருமான் வந்தான்; தேவாதிதேவன் வந்தான்'' என்று திருச் சின்னங்கள் கட்டியம் ஒலிக்கச் சுவாமிநாதர் போர்க் களம் வந்தார்.

சிங்கமுகாசுரனும் படைகளோடு வந்து எதிர்த்தான்.

இருதிறப் படைகளும் போர் செய்த போது அவுணர் பலர் அழிந்தார்கள். அதனைக் கண்ட சிங்கமுகாசுரன் மிகப் பெரிய மாயாவுருவத்தை யெடுத்து, தேவர்கள் நடுநடுங்க வந்து இரண் டாயிரம் கரங்களால் ஆயிரம் வெள் ளம் பூத வீரர்களையும் எடுத்து விழுங்கி விட்டான். 'இனி நம்மையும் சிங்க முகாசுரன் விழுங்கி விடுவான்' என்று தேவர்கள் ஓடி ஒளிந்தார்கள். சிங்க முகாசுரனின் வயிற்றுக்குள் சென்ற பூதர்கள், ''இத்துணைக் காலமாகப் போரிலேயே ஈடுபட்டிருந்ததால் எம் பெருமானை அதிகம் ஸ்மரிக்க இயல வில்லை. சிவபெருமானைத் தியானிப்ப தற்கு மற்றைய இடங்களை விடச் சிங்கமுகாசுரனின் வயிறே ஏற்ற இடம்'' என்று இருந்து விட்டனர்.

இதுகாறும் வீரமகேந்திர புரத்துக்குத் தோல்விச் செய்தியே எடுத்துச் சென்ற தூதர்கள் சூரபன்மனிடம் ஓடிச் சென்றனர், இன்று வெற்றிப் பெருமை யுடன். சிங்கமுகாசுரன், வீரவாகு முதலிய இலக்கத்தொன்பதின்மரையும் ஆயிரம் வெள்ளம் பூதர்களையும் மாயத் தினுல் மயக்கி உதயகிரியில் வைத் திருப்பதையும், முருகனோடு வந்த ஆயிரம வெள்ளம் பூதர்களையும் விழுங்கி விட்டதையும் கூறினர். ''இனி முருகன் அழிவான்'' என்று ஆர்ப்பரித்தனர்.

சூரபன்மன் மிகவும் மகிழ்ச்சி கொண்டான். அரியணையிலிருந்து இறங் கிச் சென்று தூதர்களை அன்புடன் தழுவிக் கொண்டான். அருகிலிருந்த ஏவலனை நோக்கி, ''ஊரிலுள்ள பல சேனைகளையும் திரட்டிச் சிங்கமுகனுக்கு உதவியாக அனுப்பு'' என்று ஆணை யிட்டான். பறையறிவிக்கப்பட்டது. மகேந்திரபுரியிலுள்ள சேனு வீரர்கள் ஆரவாரத்துடன் அணிவகுத்துச் சிங்க முகாசுரன் நின்று கொண்டிருந்த போர்க்களத்தை யடைந்தனர்.

தன் தம்பியின் போர்த் திறத்தைத் தானே காண வேண்டும் என்று எண்ணிய சூரபன்மன் கோபுரத்தின் மீது ஏறி நின்று போர்க்களத்தை நோக்கினுன். முருகவேள் தனித்திருப் பதையும், தன் தம்பியின் வெற்றி யையும் கண்டு நகைத்தான். ஏக நாயகனுகிய சுவாமி ஏகாந்தமா யிருப்பதன் உட்பொருளை அவன் எப்படி அறிவான்?

சிங்கமுகாசுரன் பூத வீரர்களை விழுங்கியதைக் கண்ட முருகவேள் போர் செய்யும் திருவிளையாடலைப் புரிய வேண்டும் என்று திருவுளங் கொண்டார்; முறுவல் பூத்துக் கொண்டே முன்னணிக்கு வந்தார். அவுண வீரர்கள் பெரும் ஆரவாரம் செய்து அவரைச் சூழ்ந்து பாணங்களை ஏவினுர்கள். குமாரக் கடவுள் வில்லை யெடுத்து நாணொலி செய்தார். அந்த 'டங்கார' நாதத்தைக் கேட்டே அவுண வீரர்கள் தங்கள் கைகளி லிருந்த ஆயுதங்களை நழுவ விட்ட னர். யானைகளும், குதிரைகளும் அவ் வொலியைக் கேட்டு வீழ்ந்தன. தேர்கள் அதிர்ந்து சிதறின. அதனைக் கண்டு வியந்த சிங்கமுகாசுரன் குமாரக் கடவுளின் திருமுன் வந்தான்.

கந்தவேளும் சிங்கமுகாசுரனும் இப்போதுதான் முதன் முதலில் சந்திக்கின்றனர். முதல் சந்திப்புக்கு எப்பொழுதும் பெருமை உண்டு.

''சுவாமி, சுவாமி என்று பேசப்படும் முருகன் சின்னக் குழந்தையாக அல்லவா இருக்கிறான்?'' என்று தனக்குள் கூறிச் சிரித்துக் கொண்டான் சிங்கமுகாசுரன்.

சுவாமி பரம்பொருள் என்பது சிங்கமுகாசுரனுக்குத் தெரியும். ஆனாலும் போர்க்களம் அல்லவா? அறிவு மயங்கும். இது இறைவன் திருவிளையாடல். சிங்கமுகன் ஷண்முகரிடம் பேசலானான்:

'கண்ணுதல் முதல்வன் மைந்த
கழறுவன் ஒன்று கேண்மோ
எண்ணலர் வலியை மாற்றல்
இறையவர் கடனே அற்றால்
விண்ணவர் தமைத் தண்டித்தோம்
அவர்க்குளும் அல்லை வேறோர்
நண்ணலன் எமருக் கில்லை
நடந்ததென் அமருக் கென்'றான்.

''சிவகுமார! ஒரு விஷயம் சொல்கிறேன். கவனமாய்க் கேள். பிராமண தர்மம் வேறு; க்ஷத்திரிய தர்மம் வேறு. யார் என்ன சொன்னாலும் பொறுமையாக இருப்பவர் பிராமணர். க்ஷத்திரியரால் அப்படி இருக்க முடியாது; இருக்கவும் கூடாது. பகைவர்களை (எண்ணலர் — பகைவர்) அடக்கி ஒடுக்குவது ராஜ தர்மம். அந்த ராஜ தர்மத்தின்படி பகைவர்களை அடக்க வேண்டுமாதலால் நாங்கள் தேவர்களைச் சிறையில் வைத்தோம். அதிலே தவறு என்ன இருக்கிறது?

'' எங்களுக்குப் பகைவர்கள் தேவர்கள். அந்தத் தேவர்கள் கூட்டத்தில் நீயும் ஒருவன் என்றால், அவர்கள் சார்பில் நீ வரலாம். ஆனால், நீ இந்தத் தேவர்கள் கூட்டத்தில் ஒருவன் அல்லவே? நீ விருப்பு வெறுப்பு இல்லாத சுவாமி என்கிறார்களே! நீ ஏன் போருக்கு வந்தாய்? கைலாயத்திலுள்ள சிவபெருமான் மீது கடுகளவும் எங்களுக்குப் பகைமை இல்லையே? எமதாற்றல் அவர் தந்ததேயன்றோ? அப்படியிருக்க, அவரது மைந்தனாகிய நீ எம்முடன் போருக்கு வந்த காரணம் யாது?'' என்று கேட்டான் சிங்கமுகாசுரன். அவனது கேள்வியில் நியாயம் இருக்கிறது.

சுவாமி அதற்கு என்ன விடை சொல்கிறார்?

''உறைதரும் அளியன் தன்னை
வலியவன் ஒறுக்கின் நாடி
முறைகெழ தண்ட மாற்றி
அண்டங்கள் முழுவ துக்கும்
இறையினைப் புரிதும் அற்றால்
நீவிர்கள் இமையோர்க் கிட்ட
சிறையினை அகற்ற வந்தேம்
செருவுமத் திறத்துக் கெ''ன்றான்

ஒரு தந்தை. அவருக்கு இரண் பிள்ளைகள். மூத்த பிள்ளைக்கு எலு புருக்கி வியாதி. இளையவன் 'கொழு கொழு'வென்றிருக்கிறான். பொழு விடிந்ததும் இளைய பிள்ளை பணியார பாத்திரத்தை எடுத்து வைத்து கொண்டு உண்ணத் தொடங்குகிறான் ''பல் விளக்காமல் உண்ணலாகாதடா என்கிறான் எலும்புருக்கிப் பிள்ளை.

''இப்படித்தான் செய்வேன். யோசனை ஒன்றும் சொல்லத் தேவை யில்லை'' என்று விதண்டை கூறுகிறா இளையபிள்ளை.

''இரு; இரு! அப்பாவிடம் சொ கிறேன்'' என்று எழுந்து போனா எலும்புருக்கிப் பிள்ளை.

''அப்பாவிடமா சொல்லுவாய்? என்று அண்ணனைக் கீழே தள் முதுகில் குத்தினான் இளையவன். 'அப் அப்பா!' என்று அலறினான் மூத் பிள்ளை. இந்த அழுகுரல் தந்தைக் எட்டியது. தந்தை வந்து பார்த்தா இளையவன் மூத்தவனை அடித்து கொண்டிருந்தான்.

தந்தைக்கு இரண்டு பேரும் பிள் கள்தானே? இளையவன் மூத்த பி ளையை அடித்தால் அடிக்கட்டும் என் விட்டு விடலாமா? ''அண்ணனை அடிக் லாமா?'' என்று இளையவனைச் சினந் கேட்டார்.

''அடித்தால் என்ன?'' என்று கே டது இளையபிள்ளை.

''அடித்தால் வலிக்கும்'' என்ற தந்தை.

''வலித்தால் என்ன?'' என் கேட்டது இளையபிள்ளை.

'' என்னவா ? இதோ புரிந் கொள்'' என்று அவன் முதுகிலே தந்தை அடித்தார். அப்படி அடித்த னால்தான் வலியைப் புரிந்து கொ டான் இளையபிள்ளை; தவற்றையு விட்டான்.

கந்தப் பெருமான் சிங்கமுகாசு னுக்கு இந்த நீதியைத்தான் சொ னார். ''சிங்கமுகாசுரனே! நீங்கள் பர சாதுக்களான தேவர்களுக்குத் துன்ப செய்தபடியினால் இந்தப் போர் வ திருக்கிறது. எளியவரை வலியவ ஒறுத்ததால் வலியவரை நீதி முறை படி தண்டித்து அறத்தை நிலைநிறுத் வந்திருக்கிறோம்'' என்று அருளினார்.

முருகவேள் கூறியதைக் கேட் சிங்கமுகாசுரன் சிரித்தான். போர்

செய்த சதி அது. சிங்கமுக ...தி உணர்விழந்தான். 'தேவர்கள் ...றுகிறார்கள். அவர்கள் எங்கள் நேரடியாகப் போர் செய்ய முடி... அப்படிப்பட்டவர்கள் எங்க... போர் செய்யச் சிவபெருமானை ...த்து வந்திருக்கலாம். அவரை ...த்து வந்திருந்தால் எங்களுக்கு எவ் கௌரவமாக இருந்திருக் ...வா நீ சிறு குழந்தை. உன்னைக் ...று விட்டால் உமாதேவியார் ...த்தப்படுவார்கள். எனவே, உன் கொல்ல விரும்பவில்லை. நீ போய் ...யாடிக் கொண்டிரு'' என்றான்.

...கப் பெருமான் வாயால் மறு ...ழி சொல்லவில்லை. அநாயாச ஒரு பாணத்தை விடுத்தார். அந்த போன்ற வடிவம் கொண்டிருந்த ...முகாசுரன் மார்பில் அப்பாணம் ...து முதுகில் ஊடுருவிச் சென்றது. வெள்ளம் பெருகியது. ஒரு ...டி முன் இறுமாப்புடன் பேசிய ...னன் பெருந்துன்பமடைந்து கலங் ...ன். பாணம் ஊடுருவிச் சென்ற ..., மார்பும் முதுகும் வாயில் ...ப் போல் பிளக்க, அவனது ...ற்றில் அடக்கமா யிருந்த பூத ...ர்கள் அவ்வழியே குதித்து வெளிப் ... முயன்றனர். சிங்கமுகாசுரன், ...ர்கள் வழியைப் பத்துக் கைகளால் ...க் கொண்டு கந்தவேள் மீது ஒரு ...டத்தை எடுத்து வீசினான். முருகக் ...வுள் நொடிப் பொழுதில் நான்கு ...ணங்களால் அவன் நெற்றியைத் ...த்தார். சிங்கமுகாசுரன் மூர்ச்சித் ...ன். தனது வயிற்றில் தோன்றிய ...யிலே அடைத்துக் கொண்டிருந்த ...னது கரங்கள் நழுவின. உடனே ...ர்கள் அனைவரும் வெளிப்பட்டு ...கவேளைச் சூழ்ந்து கொண்ட... திருவருள் இருக்க இறந்த பூதர்கள் ...ந்ததில் அதிசயமென்ன?

...மாயப் படையால் உதயகிரியில் ...டைக்கப்பட்டிருந்த வீரவாகுதேவரை ..., மற்றப் படைத் தலைவர்களையும் அழைக்க வேண்டும் என்று திருவுளம் கொண்ட முருகப் பெருமான் மீண்டும் ஒரு பாணத்தை ஏவினார். அந்தப் பாணம் உதயகிரியில் சென்று மாயா பாசத்தை அறுத்து, வீரவாகுதேவர் முதலியோர்க்கு உணர்வு தந்து, புட்பக விமானம் போலாகி அவர்களை ஏற்றிக் கொண்டு வந்து முருகவேள் திருமுன் விடுத்தது. எல்லோரும் இளம்பூரணரது திருவடிகளை வணங்கி வாழ்த்தினார்கள். மறைந்தவர் யாவ ரும் வருவது கண்டு சிங்கமுகன் ஆசா பங்கமும் ஆத்திரமும் கொண்டான்.

இதற்குள் குமாரக் கடவுளின் நாணொலி கேட்டுச் சோர்வுற்று மயங்கி வீழ்ந்த அவுண சேனைகள் மயக்கம் தெளிந்து விரைந்து போர் புரிய வந் தன. அவர்கள் கோபத்துடன் படைக் கலங்களை வீசிக் கொண்டு முருகப் பெருமானைச் சூழ்ந்து கொண்டனர். குமரவேள் புன்முறுவல் பூத்துக் கோடி கோடி பாணங்களை விடுத்தார். அவர் விடுத்த பாணங்களில் சில அக்கினியை யொத்தன; சில நஞ்சையொத்தன; சில இருளையொத்தன; சில பாம்பு களை யொத்தன; சில கூற்றுவனை யொத்தன; சில சூலத்தையொத்தன; சில அறத்தை நிறுவியதால் பிரம்ம தேவரை யொத்தன; சில உலகங்களை ரட்சித்ததால் திருமாலையொத்தன; சில அவுணர்களை அழித்ததால் உருத் திரனை யொத்தன.

அறத்தை நல்கலின் அந்தணன்
போல்வன; அகிலத்
திறத்தை அன்பொடு போற்றலில்
செங்கண்மால் போல்வ
ஒறுத்து மன்னுயிர் உண்குறும்
அவுணரை ஒருங்கே
இறுத்தல் செய்திடுந் தன்மையால்
ஈசனே போல்வ

முருகவேள் விடுத்த அனந்த கோடி பாணங்கள் கணப் பொழுதுக்குள் அவுண சேனைகள் அனைத்தையும் அழித் தன. சிங்கமுகாசுரன் தனித்தவனாயி

...ரும் வெடியும் — 1965 மாடல்



ஞன். அவன் முன்பு கொண்டிருந்த மாய வடிவம் முருகவேளின் பாணத்தினுல் அழிந்தது. ஆகவே, பழைய வடிவத்துடன் தேரின் மேல் நின்ருன்.

தன்னுடைய படைக் கலங்கள் முருகப் பெருமானிடம் பயனற்றுப் போனதைக் கண்ட சிங்கமுகாசுரன் இரண்டாயிரம் கைகளாலும் கந்தவேலைப் பிடித்து விடலாம் என்று கோபத்துடன் பாய்ந்து வந்தான். அந்தக் கரங்களை யெல்லாம் கணைகளால் அறுத்துத் தள்ளினர் சுவாமி. வெட்டுண்ட அந்தக் கரங்கள் தரையில் விழுவதற்கு முன்பே வேறு கரங்கள் முளைத்தன. நிலத்தில் விழுந்த கைகளை முளைத்த கைகளால் எடுத்துக் கொண்டு போருக்கு வந்தான் சிங்கமுகாசுரன். பெருமான் அவனது ஆயிரம் தலைகளையும், இரண்டாயிரம் கரங்களையும் அறுத்தார். அவை மீண்டும் முளைத்தன. இப்படியாக முருகப் பெருமான் சிரங்களையும் கரங்களையும் அறுக்க அறுக்க அவை முளைத்துக் கொண்டேயிருந்தன. ''சிங்கமுகன் யாகாக்கினியில் சிரங்களை அறுத்து ஆகுதி செய்த பலனுல் தான் அறுந்த சிரங்களும் கரங்களும் மீண்டும் மீண்டும் முளைக்கின்றன'' என்று முருகப் பெருமான் எண்ணினர்.

சிங்கமுகாசுரன் ஆரவாரத்துடன் சிரித்தான். ''முருகனே! இப்போதாவது தெரிகிறதா? எத்தனை முறை கரங்களையும், சிரங்களையும் அறுத்தாய்? எத்தனை முறை அவை முளைக்கின்றன? இவை யெல்லாம் உன்தந்தை கொடுத்த வரத்தின் பலம். கோடி முறை அறுத்தாலும் அவை முளைத்துக் கொண்டேயிருக்கும். ஆகவே, என்னைக் கொல்ல உன்னுல் முடியாது. நீ புத்திசாலிப் பிள்ளையாயின் போர்க்களத்தினின்று உடனே புறப்பட்டுச் செல்'' என்ருன்.

''சிங்கமுகனே! இவ்வளவு நேரம் உன்னுடன் நான் போர் செய்ததாக நினைக்கிருயா? எனது தந்தை உனக்கு அளித்த வரங்களின் பெருமையைத் தேவர்களுக்குக் காட்டினேன். அவ்வளவுதான். அப்பனே, இதுகாறும் விளையாடினேன்; இனி சமர் புரிவோம்'' என்ருர் முருகப் பெருமான்.

கந்தவேள் கூறியதைக் கேட்ட சிங்கமுகாசுரன் இடிபோல் ஆர்த்தான்; மலைகளைப் பெயர்த்து வீசிஞன். அந்த மலைகளைத் தூள் தூளாக்கிய சுவாமி அவனது மார்பில் ஆயிரம் பாணங்களைச் செலுத்தினர். அதனுல் அவனது மார்பு பிளந்தது.

ஷண்முகநாதன் கூறுவார்: ''சிங்கமுகனே! இப்பொழுது ஒரு பாணம் விடுகிறேன். உன் சிரங்களும் கரங்களும் முளைக்கின்றனவா என்று பார்'' என்று ஓர் அஸ்திரம் விடுத்தார். அந்த அஸ்திரம் தலையும் இரு கைகளும் தவிர ஏனைய சிரங்களையும் கரங்களையும் ஒரே வீச்சில் அறுத்துத் தள்ளியது. சிங்கமுகாசுரனின் வெட்டுண்ட தலை களும் கைகளும் மீண்டும் முளைக்க ஆரம்பித்ததைக் கண்ட பெருமான் ''ஹூம்'' என்று உரப்ப, அவை அ கணமே உள்ளே புகுந்து ஒளிந்தன.

''சிவபெருமான் தந்த வரத்தை மாற்றி விட்டார் முருகன். அவரை யார் எதிர்க்க முடியும்? சிவன் வேறு முருகன் வேறு அல்ல. இனி முருகன் நம்மைக் கொன்று விடுவார்'' என்று முடிவு செய்து கொண்டான் சிங்கமுகன்.

''முருகா! நீ வேல் ஒன்றை மட்டும் வைத்துக் கொண்டு என்னைக் கொல்ல நினைக்கிருய். வேலைத் தவிர வேறு ஆயுதத்திஞல் என்னைக் கொல்ல முடியுமா?'' என்று கேட்டான் சிங்கமுகாசுரன். அவர் புல்லை ஏவினுலும் புவனம் முழுதும் அழிந்து விடும் என்பதை மறந்து பேசினுன்.

சுவாமியின் வலது கையில் குலிசாயுதம் இருந்தது. இடக்கையில் இருந்தது வேலாகிய சக்தியாயுதம். அந்தக் குலிசாயுதத்தைப் பிரயோகம் செய்தார். அவ்வாயுதம் விரைந்து சென்று புஜபல பராக்கிரமனும், அறிவாளியாயிருந்தும் அறிவை உறவுக்காக முறித்துக் கொண்டவனுமான சிங்கமுகாசுரனை பூப்பறிப்பது போல் லகுவாகக் கொன்றது. கங்கையில் நீராடி அசுர ரத்தத்தின் மாசுகளைக் களைந்து, கந்தன் கைக்குத் திரும்பி வந்தது.

பிரமாதி தேவர்கள் ஆரவாரம் செய்து ஆனந்தக் கூத்தாடினர்; பூ மழை பொழிந்தனர்.

சிங்கமுகாசுரன் இறக்கவில்லை. அவனை இறக்கச் செய்வது கருணை மூர்த்தியின் கருத்தல்ல. அவனைத் திருத்துவதே அவரது திருத்தொழில். சிங்கமுகாசுரன் சிம்ம வாகனமாகப் பராசக்திக்குத் தொண்டு செய்ய அனுப்பி வைத்தார் சுவாமி. தேவிக்கு என்றுமே தர்ம ஸ்வரூபமான சிம்ம வாகனமுண்டு. அதனுடன் சிங்கமுகனும் ஐக்கியமாகி அம்பிகையின் திவ்விய ஸ்பரிசத்தைப் பெற்ருன் என்பதே தாத்பரியம். வதம் செய்தாலும் அது இதமாக முடிவதை நம் புராணங்களில்தான் காணலாம்.

முருகப் பெருமான் அனைவருக்கும் அருள் செய்து வீரவாகுதேவரோடு பாசறை திரும்பிப் பொற் பீடத்தில் எழுந்தருளினர்.

(தொடரும்)



# கந்தன் கருணை

திருமுருக
கிருபானந்தவாரியார்

## 52. ஆணவத்தின் குரல்

ங்கமுகாசுரன் அழிந்த செய்தி
ட சூரபன்மன் அலமந்து போய்
ான். ''ஆ! இரு சிறகுகளா
த தாரகன், சிங்கமுகன் இரு
யும் இழந்து சிறகொடிந்த பறவை
விட்டேனே! தந்தையும் தாயும்
மாய் இருந்த சிங்கமுகன் போய்
டபின், எனக்கு என்ன வாழ்வு
டிக் கிடக்கிறது? இனி வெற்றிக்
நான் போராட வேண்டியதில்லை.
ும் போர்க்களத்தில் மடிந்து உன்
சேரவேதான் சண்டையிட வேண்
, என்று கூறிப் புலம்பினன். அருமை
பானுகோபன் மாண்டபோது
யதைவிட உணர்ச்சியுடன் தம்பிக்
க் கதறினன்.

''பொன்னை நிலந்தன்னைப்
புதல்வர்களை மங்கையரைப்
பின்னை யுளபொருளை
யெல்லாம் பெறலாகும்
என்னை யுடைய
இளங்கோவே இப்பிறப்பில்
உன்னை இனிப்பெறுவது
உண்டோ உரையாயே''

ருவன் பெரு நிதியத்தை இழந்து
டாலும் பிற்பாடு சம்பாதித்துக்
ள்ளலாம். குழந்தை ஒன்று தவறி
விட்டாலும் பகவான் கிருபை புரிந்
தால் இன்னொரு குழந்தையைக்
கொடுப்பார். மனைவி மறைந்தாலும்
மறு மணம் செய்து கொள்ளலாம்.
ஆனால் தம்பியின் இழப்புக்கு இட்டு
நிரப்ப எது உண்டு ?

இராம பிரான் சீதையைப் பிரிந்தார்;
வருத்தப்பட்டார். தற்கொலைக்கு முயல
வில்லை. இளையபெருமாளாகிய இலட்சு
மணரை அயோமுகி தூக்கிக் கொண்டு
போய்விட்டாள். குறித்த நேரத்தில்
இலக்குமணர் திரும்பி வராததால்,
''தம்பி இறந்தே விட்டான்'' என்று
கருதிய இராமர் கத்தியை எடுத்துக்
கழுத்தைக் குறி வைத்துக் கொண்
டாராம்.

''அறப்பால் உளதேல்
அவன்முன் னவனுப்
பிறப்பா னுரின்வந்
துபிறக் கவெனு
மறப்பால் வடிவாள்
கொடுமன் னுயிரைத்
துறப்பா னுறுகின்
றதொடர்ச் சியின்வாய்''

மனைவி இடையிலே வந்தவள் ;
தம்பி அப்படியன்று. என்று தம்பி
பிறந்தானே அன்றே அவனுக்கு



மனைவி: அப்பப்பா! போதும்; ஓட்டலில் தங்கி விட்டு வந்தது போதும். இது நம்ப வீடுன்னு ஞாபகம் இல்லாமல் இன்னும் ஓட்டலில் தங்கியிருப்பது மாதிரியே நடந்துகொள்றீங்களே!

அண்ணனுண்டு. பாசம் சிறந்தது. ஆகவே வாஞ்சைகளிலெல்லாம் சகோதர பாசம் சிறந்தது.

சகோதர பாசத்தினுல் சூரபன்மன் ஆயிரத்தெட்டு அண்டங்களும் அதிரு மாறு கதறியழுதான்.

இனிக் கதறுவதற்கில்லை என்ற நிலையில், உற்றமனத்தையும் போரில் காவு தந்த சூரபன்மன் தானும் குமரக் கடவுளுடன் சமரம் புரிவதற்கு எண்ணினுன்.

ஃ ஃ ஃ

சூர சம்ஹாரம் கந்தபுராணத்தின் மிகச் சிறந்த பகுதி. திருச்செந்தூர் முதலிய முருகத் தலங்களிலெல்லாம் சூரசம்ஹார விழா இப்பொழுதும் மிகச் சிறப்பாக நடைபெறுகிறது.

இந்தத் தொடரின் ஆரம்பத்தில் கூறியவற்றை ஈண்டு நினைவு கொள்வோம். கலியுகம் தருமத்தைக் காய்ச்சி வறுக்குமே என முனிவர்கள் வியாஸாசாரியாரிடம் முறையிட்டனர். ''கலியுகப் பாவங்களைப் போக்க ஒரு தெய்வம் உண்டு'' என்ருர் வியாஸாசாரியார். ''அது எந்தத் தெய்வம் ?'' என்று முனிவர்கள் கேட்டனர்.

''கந்தஸ்ய கீர்த்திம் அதுலாம் கல்மஷ நாசினீம்'' அதாவது, ''கந்தனுடைய கீர்த்தி ஒன்றுதான் கலியின் பாவங்களைப் போக்கவல்லது'' என்று வியாஸ பகவான் கூறினர்.

கார்த்திகேயனின் கீர்த்தியைச் சொன்னுர் மகரிஷி. கீர்த்தி என்ற பதம் 'புகழ்' என்பதைக் குறிக்கும். தமிழில் கந்தனைப் பாடிப் பரவிய அருணகிரி பெருமானும், வியாஸர் கூறிய கந்தனின் கீர்த்தியையே குறிப்பது போல தமது பாக்களுக்குத் திருப்புகழ் எனப் பெயரிட்டார். அல்ல, அருணகிரி ஸ்வாமி அப்படிப் பெயரிட வில்லை. வியாஸ பகவான் சொன்னதை நினைவில் வைத்திருந்த வேலாயுதப் பெருமானே 'திருப்புகழ்' எனப் பெயரிட்டார்.

முருகப் பெருமானிடம் அருள் பெற்றவர்கள் பலர். ஆனுல் மெய்ஞ்ஞான பண்டிதனும் செவ்வேட் பரமன் திருவாக்கால் பிரணவ மந்திர உபதேசம் பெற்றவர்கள் மூன்றே பேர்கள் தான். அவர்கள், தேவசிரேஷ்டர் சிவபெருமான்; முனி சிரேஷ்டர் அகத்தியர் ; நரசிரேஷ்டர் அருணகிரிநாதர்.

வேலா சரணம் சரணமென்மேல்
வெகுளாமல் இனி
மேலாயினுங் கடைக்கண்பார்
பருப்பத வேந்தன்மகள்
பாலா குறுமுனியார்க்குந்
திருப்புகழ்ப் பண்ணவர்க்கும்
ஆலால முண்டவர்க்கும் உபதேசித்த
என் ஆண்டவனே

— முருகரந்தாதி

''அருணகிரி! நம் திருப்புகழை உலகம் உய்யப் பாடு'' என்ருர் முருகவேள். நூல் ஒன்றைப் பாடினுல் ஆசிரியர்தான் அதற்குப் பெயர் வைப்பார். ஆனுல், அருணகிரிநாதர் பாடிய நூலுக்குக் காவியநாயகராம் முருகப் பெருமானே திருப்புகழ் என்று பெயர் வைத்தார். (இவர் கச்சியப்பரின் கந்த புராணத்தைச் சரி பார்த்ததையும் இந்தச் சரிதைத் தொடக்கத்தில் கண்டிருக்கிறோம்.)

''முருகப் பெருமானே பெயரிட்டது உங்களுக்கு எப்படித் தெரியும் ?'' என்று கேட்பவர்களும் இருக்கலாம். அருணகிரிநாதரே விடை கூறுகிருர்.

பக்கரைவி சித்ரமணி பொற்கலணை
யிட்டநடை
பட்சியெனு முக்ரதுர கமுநீபப்
பக்குவம லர்த்தொடையும் அக்குவடு
பட்டொழிய
பட்டுருவ விட்டருள்கை வடிவேலும்
திக்கமதும திக்கவரு குக்குடமும் ரட்சைதரும்
சிற்றடியுமுற்றிய பனிருதோளும்
செய்ப்பதியும் வைத்துயர்தி ருப்புகழ்வி
ருப்பமொடு
செப்பென எனக்கருள்கை
மறவேனே

இவ்வாறு இணையற்ற புகழை— எல்லாம் தீர்த்திம்' என்று வியாஸர் ய மகிமையை — முருகன் பெற்ற முக்கியமான காரணம் சூரசம் ம் செய்ததுதான். சூரனை வதைக் தான் ஸ்வாமி தோன்றியதே ?

அருணகிரிநாதரின் பக்தி நூலுக்குப் யளித்த குமாரக் கடவுளேதான் முத்தைத் தரு' என்று அடியும் ந்துத் தந்து மறைந்தார். அக் த்திலே,

முத்தைத் தரு பத்தித் திருநகை
அத்திக் கிறை சத்திச் சரவண
முத்திக் கொரு வித்துக் குருபர''

ப் பாடிய அருணகிரிநாதர் நாதாந்த ய சிவயோகத்தில் அமிழ்ந்து விட் ர். அப்புறம் திருப்புகழ் பாடுவது படி? 'ஏன் இன்னும் திருப்புகழ் வில்லை?' என்று முருகப் பெரு ன் அவரெதிரே தோன்றி வினவினர்.

'ஐயனே! வேதாகமங்கட்கும் எட் த நின் புகழை ஏடு எழுதா முழு டியாகிய எளியேன் எங்ஙனம் பாடு ன்?'' என்று அருணகிரிநாதர் ட்டார்.

'வயலூருக்கு வா'' என்றார் முருகப் நமான். வயலில் பயிர் விளையு ப் போலே அருணகிரியின் நாவில் வினைப் பயிர் செய்யத்தான் பரமன் ழைத்தார்.

அருணகிரிநாதர் வயலூர் சென்றார். முருகன் தமது திருக்கை வேலைப் யில் பாய்ச்சினர். சக்தி உருவான தம் பாய்ந்ததும் சக்தி தீர்த்தம் பியின்று பெருகியது. இதைப் பாடு ர் அருணகிரிநாதர்.

ஒ ருரித்தஎன் மன்ன எனக்குநல்
கர்ண மிர்தப்பதம் தந்தகோவே
லார் மனத்துட னில்லா மனத்தவ
ன்ன டியிற்றடம் கண்டவேலா

. . . . . . . . . . . . . . . . . . . . . .

அருணகிரியின் மனத்தில் கவித்து தை ஊற்றெடுக்கச் செய்தவர் கண் க்குத் தெரியும் தடாகத்தையும் ற்றுவித்தார். கிரி என்றால் மலை; அருணகிரிநாதர் தம் மனம் கல் லிருந்ததாகச் சொல்கிறார். அந்தக் நார் உரித்தாராம் எம்பெரு ன். 'கர்ணமிர்தம்' என்பது அருண யின் செவியில் சுவாமி அமிருத பிரணவ உபதேசம் செய்த க் குறிப்பிடுகிறது. கவியின் செவி கர்ணமிர்தம் பாய்ந்தவுடன் மற்றவர்களுக்கும் கர்ணமிர்த



''ஜூரிகளே! இதென்ன? உங்க எல்லார் உடம்பி லும் காயம்?''

''குற்றவாளி உண்மையிலேயே சண்டை போட்டாரா? என்பது பற்றி எங்களுக்குள் ஏகமனதாக முடிவுக்கு வர முயற்சி செய்ததின் பலன்தான் இது!''

மாகத் திருப்புகழ் பாடத் தொடங்கி விட்டார். ஐயன் வேலால் தீர்த்தம் உண்டாக்கியதைக் 'கன்னடியிற்றடம் கண்ட வேலா' என்கிறார் அருணைப் பெருமான். இத்தடாகத் தீர்த்தத்தால் சிவபிரானுக்கு முருகன் பூஜை செய் தார். இங்கு சுவாமியின் பெயர் அக்கினீசுவரர். அம்பாள், முன்னிலை நாயகி. பூர்வஸ்திதி நாயகி என்று வடமொழியில் கூறுவர். ஸ்தூலத் துக்கு முன்னரே சூட்சுமமாகவும், சூட்சுமத்துக்கும் முன்னரே காரண மாகவும் இருப்பதால், தேவியைப் பூர்வ ஸ்திதி நாயகி எனக் கூறுவது பொருந்தும். எனினும், 'முன்னிலை நாயகி' என்பதற்கு வேறு பெரும் கருத்தும் கொள்ளலாம். தன்மை— முன்னிலை — படர்க்கை என்ற முன்னிலை யும் இங்கு பொருந்தும்.

ஆன்மாக்கள் மூன்று வகை. ஒரு மலம் உடைய ஆன்மாக்கள் சில; இரு மலம் உடைய ஆன்மாக்கள் சில; மும்மலம் உடைய ஆன்மாக்கள் சில. ஒருவர் வீட்டுக்குள் இருக்கும்பொழுது வெறும் பனியன் மட்டும் அணிந்து கொள்கிறார். கடை வீதிக்குப் போகும் பொழுது சட்டையணிந்து கொள்கிறார். ஆபீசுக்குப் போகும்போது பனியனும் சட்டையும் அணிந்து அவற்றின்மேல் கோட்டும் போட்டுக் கொள்கிறார். அது போல் ஒருமலமுடைய ஆன்மாக்கள் விஞ்ஞானகலர். இருமலமுடைய ஆன் மாக்கள் பிரளயாகலர். மும்மலமுடைய ஆன்மாக்கள் சகலர்.

கந்த சஷ்டியை யொட்டி இவ்விதழ் அட்டைப் படத்தில் பாதாமி (வாதாபி) கார்த்திகேயனின் திரு உருவத்தை வழங்குகிறார் ஓவியர் திரு மணியம்

மும்மலமுடைய ஆன்மாக்களுக்கு (சகலர்) பகவான் மானிடச் சட்டை தாங்கி வந்து அருள் புரிவார்; சுவாமி தம் திவ்விய சொரூபத்துடன் வரமாட்டார்; விறகில் தீயைப்போன்று மிக மிக மறைந்திருப்பார். இறுதியில் சிவமேயாகி ஆளப்பட்ட மாணிக்க வாசகருக்கே சுவாமி திவ்விய சொரூபத்துடன் வராமல் உத்தமமான மானுட சொரூபத்துடன் அந்தணராக வந்து தரிசனம் தந்ததுண்டு.

செந்தழல் புரைதிரு மேனியுங் காட்டித்
திருப்பெருந் துறையுறை கோயிலுங் காட்டி
அந்தண னவதும் காட்டிவந் தாண்டாய்
ஆரமு தேபள்ளி யெழுந்தரு ளாயே

— திருவாசகம்

அருணகிரிநாதருக்குக்கூட சுவாமி முதலில் மானுட உருவில் வேதியராகத்தான் காட்சியளித்தாராம். அந்தணனாக வந்த சுவாமி அருணகிரிப் பெருமானைக் கடைக் கண்ணால் நோக்கினார். ஒரு மலம் போய் விட்டது. இரு மலமுடைய ஆன்மாக்களுக்கு — (பிரளயாகலர்) இறைவன் பாலில் நெய் போல் மறைய நின்று தோன்றுவார். ஒரு மலமுடைய ஆன்மாக்களுக்குள்ளே (விஞ்ஞானகலர்) மணியில் ஒளிபோல் அற்புதமாக மறைவு என்று சொல்ல வொண்ணா லயமாகத் தோன்றுவார். மும்மலம் உள்ள ஆன்மாக்களுக்கு மானுட வடிவிலும், இரண்டு மலமுள்ள ஆன்மாக்களுக்கு, சுப்பிரமணிய பக்தர்களாயிருந்தால் ஆறு முகங்கள், பன்னிரண்டு தோள்களுடனும் ஒரு மலமுள்ள ஆன்மாக்களுக்கு ஜோதியாகவும் ஆண்டவன் காட்சி தருவார். ஒரு மலமுள்ள ஆன்மா தன்மை. இரண்டு மலமுள்ள ஆன்மா முன்நிலை. மூன்று மலமுள்ள ஆன்மா படர்க்கை.

இந்த நுணுக்கத்தை வைத்துத்தான் திவ்விய ரூபத்துடன், தோன்றும் தேவியை முன்னிலை நாயகி யென்று பெயரிட்டார்கள்.

''உலகெ லாம்உணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர்ச்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்''

மும்மலமுடைய ஆன்மாக்களுக்கு 'உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவர்'. இருமலமுடைய ஆன்மாக்களுக்கு 'நிலவுலாவிய நீர்மலிவேணியன்.' ஒருமலமுடைய ஆன்மாக்களுக்கு 'அலகில் சோதியன்'.

சூரன் — தாரகன் — சிம்மமுகன் ஆகிய மும்மலங்களில் சுவாமி இரண்டை ஒழித்தாயிற்று. இன்னும் ஒன்றே மீதம். சூரனையும் ஒழித்தபின் ஜோதி ஸ்வரூபமாகி விடுவார். சிவபெருமான் நயனங்களினின்று ஜோதியாகத் தோன்றியவர் ஜோதிமய உருவை நன்கு புலப்படுத்திக் கொள்வார். இதுவே முருகப் பெருமானுடைய கீர்த்தியின் பூர்த்தியாகும். சூர சம்ஹாரத்தின் பெருமை இதுவே. கீர்த்தியை, திருப்புகழை நாம் எல்லோரும் உணர வேண்டும் என்பதற்காகவே சூரன் அவரது பெருமையை உணர்ந்து திருந்தவில்லை. குமாரக் கடவுளோடு தானே போர் செய்ய வேண்டும் என்று எண்ணினான். ஆயிரங்கோடி ஒற்றர்களை அழைத்தான். ''ஆயிரத்தெட்டு அண்டங்களிலுமுள்ள சேனைகள் யாவற்றையும் விரைவில் திரட்டிக் கொண்டு வாருங்கள்'' என்று ஆணையிட்டான்.

(தொடரும்)



எழுத்தாளர்களின் எழுத்துப் பணி சிறக்கச் செய்வதே இந்த வெள்ளி விழா ஆண்டை விமரிசையாகக் கொண்டாடுவதற்கான சிறந்த வழி என்ற அளவில் இருபத்தையாயிரம் ரூபாய் பரிசுத் திட்டம் வைத்துள்ளோம். சிறந்த நாவலுக்கு முதல் பரிசு 10,000 ரூபாய்; இரண்டாவது பரிசு ரூபாய் 7,500 மூன்றாவது பரிசு ரூ. 5,000. சிறந்த சிறுகதைக்கு ரூ. 1000; இரண்டாவது பரிசு ரூ. 500; மூன்றாவது பரிசு, பத்துச் சிறுகதைகளுக்கு ஒவ்வொன்றுக்கும் ரூ. 100 வீதம் ரூ. 1000.

இந்த நாவல், சிறுகதைப் போட்டிகளுக்கு ஒருவர் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பி வைக்கலாம்.

இந்தப் போட்டிக்கு வரும் சிறுகதை, நாவல்களைப் பரிசிலனை செய்து தீர்ப்பளிக்க இலக்கியத் துறையிலும், எழுத்துத் துறையிலும் முதிர்ந்த பஞ்சாயத்தார்கள் நியமிக்கப்படுவார்கள். இந்த நாவல், சிறுகதைப் போட்டிகளின் விஷயத்தில் ''கல்கி'' ஆசிரியரின் தீர்ப்பே முடிவானது.

**முடிவுத் தேதி 31-12-65 என்பதை நினைவூட்டுகிறோம்.**

# MY FAIR LADY

புகழ்பெற்றதோர் ஆசிரியரின் கற்பனையிலே ருவாகிப் புத்தகமாக வெளிவந்த போது உலக க்களின் ஒருமித்த பாராட்டுதல்களை அமோகமாகப் பெற்றது ஒரு நாடகம். அதை மேடை ஏற்றிய போது, சங்கீத உல்லாசக் கதை அமைப்பைக் கொண்ட அது; மிக அதிக நேரம் மேடையில் நடிக்கப்பட வேண்டிய அது; இதுவரை எந்த நாடகமுமே அளித் திராத வெற்றியை ஆறு வருடங்கள் தொடர்ந்து நடந்து, 2,717 காட்சிகளை நடத்தி ரசிகர்களை மகிழ் வித்தது. மேடையிலே வெற்றிக் கொடி நாட்டிய கத்தான அதைத் திரைக் காவியமாக்கத் திரைப் படத் தயாரிப்பில் ஆற்றலும் அனுபவமும் பெற்ற வர்கள் முனைந்தால் அந்தப் படம் எப்படி இருக்கும் என்று சொல்லவும் வேண்டுமா? எட்டு அகாதமி பரிசுகளைத் தட்டிக் கொண்டு போயிற்று அந்தப் படம். 'வருடத்தின் மிகச் சிறப்பான படம்', 'தலை சிறந்த நடிகர்' 'ஒப்பற்ற டைரக்ஷன்' ஆகிய பரிசு களும் இதனுள் அடக்கம் பெறுகின்றன.

இத்தனை ஏற்றங்களுக்கும் உரித்தான அந்தப் படம்தான் 'என்னுடைய கவர்ச்சி மிகு மங்கை'. (My Fair Lady) பெர்னார்ட் ஷாவின் பிக்மிலியன் என்ற நாடகத்தைத் தழுவித் தயாரிக்கப்பட்டது தான் இந்தப் படம். மிக நாசுக்காகக் கேலி செய்வதில் புகழ்பெற்ற ஷாவின் படைப்பான இதில் கண்ணியமான உயர்தர ஹாஸ்யம் விரவிக் கிடக்கிறது. வாழ்க்கையின் கீழ்ப்படியில் வாழும் ஒரு பெண்ணை நாகரீகத்தின் உச்சாணிக் கிளையில் வாழும் சமூகத்தினரிடையே பழகும் பாவையாக மாற்ற முயன்று அதில் வெற்றியும் அடைகிறார் ஒரு பேராசிரியர். இதுதான் கதை. ஆனால் இரண்டே வரியில் இத்தனை இலகுவாக இதைச் சொல்லி விட்டாலும் இரண்டு மணி நேரம் ஓடும் இந்தப் படம் ரசிகர்களுக்குப் பூரணமான இன்பத்தை அளிக்கிறது. பிரதான ஆண் பாத்திரமாக வரும் ரெக்ஸ் ஹாரிஸன் சிறந்த நடிகர் என்ற பரிசு பெற்றிருக்கிறார் இந்தப் படத்தின் மூலம். முன்பே பல ஆஸ்கார்களை வாங்கியவர்தான் ஹாரிஸன். கிளியோபாட்ராவில் சீஸராக வந்ததை மறந்துவிட முடியுமா? 'அன்னாவும் சயாம் தேசத்து மன்னனும்' (Anna and The King of Siam) என்ற படத்தில் மன்னனாக வந்ததைத்தான் மறந்துவிட முடியுமா? குண சித்திர நடிகரான ஹாரிஸனின் நடிப்பை இந்தப் படத்தில் புகழுவதற்கு வார்த்தைகள் கிடையாது. ஆகவே படத்தை நீங்கள் பார்த்துவிட வேண்டியது தான். நியூயார்க் மேடையிலேயும் இதே பாத் திரத்தை ஹாரிஸன்தான் ஏற்று 1006 காட்சிகளில் தோன்றி நடித்துள்ளார். அதனால் அந்தப் பாத் திரத்தின் படைப்பிலே எத்தகைய மெருகு ஏறி இருக்கும் என்பதைச் சொல்லத் தேவையில்லை. பிரதான பெண் பாத்திரமாக வரும் ஆட்ரி ஹெப்பர்ன் - ஹாரிஸனுக்கு இணையாக முதலில் பூக்காரியாகவும் பிறகு நாகரிக மங்கையாகவும் அற்புதமாக நடித்துள்ளார். குரல் மாற்றத்துக் காக அவர் புரொபஸரோடு போராடும் கட்டங்களிலும் அதன் பிறகும் உணர்ச்சியோடு உன்னதமாக நடித் துள்ளார். ஹெப்பர்னின் விழிகளோ பாவங்களை உதிர்க்கின்றன. காட்சியமைப்பு, ஒலி, ஒளி, வர்ணக் கலவைகள் ஆகிய எல்லாவற்றிலுமே சிறந்து விளங்குகிறது இந்தப் படம். சங்கீத உல்லாசப் படமான இதில் வசனங்கள் கூடப் பாடல்களாகப் பாடப் படுகின்றன. ஆனால் சலிப்பு என்பதே ஏற்பட வில்லை. அத்தனை எளிய, இனிய மெட்டுக்கள். பொருள் பொதிந்த வார்த்தைகளைக் கொண்டிருக் கின்றன பாடல்கள்.

மொத்தத்தில் கண்ணுக்கும் கருத்துக்கும் உயர்ந்த ஹாஸ்யத்துக்கும் நடிப்புக்கும் சங்கீதத் துக்கும் விருந்தாக அமைந்துள்ளது —மை பேர் லேடி. நீண்ட நாட்களாக எதிர்பார்த்திருந்த இந்தப் படம் ரசிகர்களுக்கு மன நிறைவையும் மகிழ்ச்சியையும் தரவல்லது!

# கந்தன் கருணை

திருமுருக கிருபானந்தவாரியார்

## 53. கணைமழை பொழிந்த கருணை முகில்

சூரபன்மனின் ஆணைப்படி ஒற்றர்கள் ஆயிரத்தெட்டு அண்டங்களுக்கும் சென்று சேனைகளைத் திரட்டிக் கொண்டு வந்தார்கள். அச் சேனைகள் உலகங்களெல்லாம் நடுங்க வந்து கூடின.

சூரபன்மன் சிவபூஜை செய்து ஆகாரம் உண்டான். நீறணிந்து, நறுமணம் பூசிக்கொண்டு பெரும் பொருளைத் தானமாக அள்ளி வீசினான். பின் போர்க்கோலம் பூண்டு, முன் யாகத்தில் தோன்றிய பெரிய தேரின்மீது ஏறிப் புறப்பட்டான். சிவப் படைக்கலம் முதலியவைகள் நிறைந்த ஆயிரம் கோடி தேவர்களும், சிங்க வாகனமும் இந்திர ஞாலத் தேரும் சூழ்ந்து வந்தன. பேரிகைகள் முழங்கின. எண்ணில்லாத சேனைகளுடன் சூரபன்மன் போர்க்களம் சேர்ந்தான். தமது இன்னலுக்கெல்லாம் காரணமான அவனைக் கண்ட இமையவர் இரத்தக் கண்ணீர் வடிய அரற்றினார்கள். இந்திரன் தான் உற்ற அவமானங்களை யெல்லாம் எண்ணி வருந்தினான். நான்முகனும் அரக்கன் ஆணைக்குட்பட்டுத் தான் வாழ்ந்ததை நினைந்து மனம் விம்மினார். வீரரும் பூதரும் வெய்துயிர்த்தார்கள்.

மாலும் அயனும், மகபதியும் கந்தவேளிடம் வந்து வணங்கி, சூரபன்மன் போர்க்களம் வந்துள்ள செய்தியைத் தெரிவித்தார்கள். கந்தப் பெருமான் கடைக்கண் நோக்க, வாயுதேவன் மனோவேகத் தேரைக் கொண்டு வந்து நிறுத்தினான். புத்தேளிர் பூமழை பொழிந்தனர்.

முருகனின் முதற் தலைமையில் மகிழ்வுடனே போர்க்களம் எய்திய அமரர்கள் போர்க்களத்தை அடைந்ததும் எண்ணிறந்த அசுரர் படை கண்டு அயர்வு எய்தினர். கொசுக்களும், கிருமிகளும் கோடிக் கணக்கில் பெருகுவதுபோல் நல்லன பெருகுவது கிடையாது. தீய சக்தி யாவற்றையும் தேவநாயகன் தேய்த்தொழிப்பதற்குத் தருணம் வந்து விட்டபடியால் அவை அவுணர் உருவில் கணக்கிட முடியாத பெருமளவில் திரண்டு விட்டன.

வரத்தினிற் பெரியர் மாய
வன்மையிற் பெரியர் மொய்ம்பின்
உரத்தினிற் பெரியர் வெம்போர்
ஊக்கத்திற் பெரியர் எண்ணில்
சிரத்தினிற் பெரியர் சீற்றச்
செய்கையிற் பெரியர் தாங்கும்
கரத்தினிற் பெரியர் யாரும்
காலனிற் பெரியர் அம்மா

''ஆயிரத்தெட்டு அண்டங்களிலும் உள்ள அவுண சேனைகள் அனைத்தும்இன்று வந்து விட்டன. இவர்கள் கடல்களைப் பருகுவர், வடவைத் தீயினும் கொடியவர்; மேரு மலையைப் பந்தாடுவர்; சண்டமாருதத்தின் எதிரே பஞ்சு போல் இவர்கள் முன் நாம் அழிவோம். எங்கும் அசுரர்களாயிருப்பதால் ஓடி ஒளிவதற்கும் இடமில்லை. இவர்களுடன் போர் புரிந்து அழிவது உறுதி'' என்றே பூத வீரர்கள் எண்ணத்தொடங்கிவிட்டனர். துன்ப காலத்தில்தான் தெய்வநம்பிக்கை மிகவும் பெருகும்; அதேபோல் துன்ப காலத்தில்தான் அது மிகவும் தளரவும் செய்யும். பிற்பாடு துன்பம் தீர்ந்தபின் தேவர்களின் பக்தி முறுகி முதிர்வதற்கெனவே இப்போது சிறிது தளர்ச்சி கண்டது. முருகவேள் தம் தரப்பில் தலைமை தாங்குவதையும் அவர்கள் மறந்து அச்சத்துக்காட்பட்டனர்.

இந்திரன் நடுங்கிக் கொண்டே திருமாலிடம் வந்தான். ''சூரபன்மன் ஆயிரத்தெட்டு அண்டங்களிலுமுள்ள அசுர வீரர்களுடன் ஆறுமுகக் கடவுள்மீது போர் செய்ய வந்துவிட்டான். சூரனுடைய படைகளை அழிக்கவே ஊழிக் காலம் சென்றுவிடும். அவ்வாறாயின் சூரன் மாள்வது என்று? நான் பொன்னுலகம் ஆள்வது என்று?'' என்று முறையிட்டான்.

திருமால் முருகப்பெருமானின் பெருமையை இந்திரனுக்கு எடுத்துரைத்தார்.

காலமாய்க் காலம் இன்றிக்
கருமமாய்க் கருமம் இன்றிக்
கோலமாய்க் கோலம் இன்றிக்
குணங்களாய்க் குணங்கள் இன்றி

...மாய் ஞாலம் இன்றி
...நாதியாய் நங்கட் கெல்லாம்
...மாய் இருந்த வள்ளல்
...முகங் கொண்டு உற்ருன்

...பரமனின் புகழ் பாடினர்.

"இந்திரனே! முன்னர் மேரு ...யில் முருகவேள் மூவரும் ...ரும் உயிர்களும் தன்பாற் ...டி ஒரு வடிவங் கொண்டதை ...றந்து விட்டாய் போலும்! ... குமாரக் கடவுள் பிரம்மா ...ப் படைப்பார்; என் உரு ... காப்பார். ஈசன் போல் ...ப்பார். வேதங்களுக்கெல் ...ம் எட்டாதவர் அவர் உருவா ... குணங்களாயும், உலகமாயும் ...வற்றைக் கடந்து அப்பாலாகி ... நிற்கும் மின்உருவம் போன்ற ...ரது வடிவம் யாராலும் அவ் ...வு சுலபமாக அறிந்துகொள்ள ...யாது. அதனை விளக்கும் ...ற்றல் வேதங்களுக்கும் இல்லை.

...ன்னுரு வமைந்த கஞ்சப்
புங்கவனாகி நல்கும்
...ன்னுருவாகிக் காக்கும்
ஈசன்போல் இறுதி செய்யும்
...ன்னுரு என்ன யார்க்கும்
வெளிப்படான்போலும்? அன்னான்
...ன்னுரு மறைக ளாலும்
சாற்றுதற்கு அரிய தன்றே

...யிருங் கடலிற் சூழ்ந்த
பற்றலர் படையை எல்லாம்
...பின்னும் முன்னம் வீட்டும்
சிறுவன்என் றெண்ணல் ஐய!
...யிரகோடி கொண்ட அண்டத்தின்
உயிர்கட் கெல்லாம்
நாயகன் அவன்காண் நாம்செய்
நல்வினைப் பயனால் வந்தான்"

இந்திரனை 'ஐய' என்று அழைத்தாராம் நாராயணர். "தேவேந்திரா! சமுத்திரம் போல் உள்ள இந்தச்சைன்யங்கள் எல்லாம் முருகப் பெருமான் 'ஏ' என்று சொல்லும்போதே அழிந்து விடும். அவர் இப்படைகளையெல்லாம் மிக விரைந்து அழிப்பார். அவர் திருவுளங் கொண்டால் புன்முறுவலால் அழிப்பார்; கோபத்தினால் கொல்வார்; திருவாக்கால் அழிப்பார்; பார்வையால் அழிப்பார். இஃது அவருக்கு ஒரு திருவிளையாடல்; முருகப் பெருமானைக் குழந்தை என்று



எண்ணாதே. அவருடைய வேற் படையால் சூரன் அழிவான். எம்பெருமான் கருணைக் கடல். நம்மீது கொண்ட அருட் கருணையினால் தான் அவர் சூரனுடன் போர் செய்யவந்திருக்கிறார். ஆயிரங் கோடி அண்டங்களுக்கும் அவர் நாயகன். நாம் செய்த நற்பேற்றினால் அவர் நமக்குக் காட்சி தந்திருக்கிறார்.

சூரனே முதலோர் தம்மை
இமைப்பினில் தொலைக்க உன்னின்
மூரலால் அடுவன்; கொண்ட
முனிவினால் அடுவன்; வாய்மைச்
சீரினால் அடுவன்; நாட்டச்
செய்கையால் அடுவன் என்றால்
நேரிலா முதல்வன் வன்மை
யாவரே நிகழ்த்தற் பாலார்?

"ஆகவே, தேவேந்திரா, கவலைப்படாதே. சூர ஸம்ஹாரம் விரைவில் நடைபெறும். நீ பொன்னுலகம் பெறுவாய்" என்று திருமால் கூறினர்.

இதிகாச புராணங்களிலேயே மிகப் பெரிய போரும் தொடங்கியது.

**பூ**த வீரர்கள் அவுண வீரர்களுடன் பொருது புறந் தந்தார்கள். இலக்கத்தெண்மர் வலிமைஇழந்து ஓய்ந்தார்கள். அதனைக் கண்ட

வீரவாகு தேவர் தம் வில்லை வளைத்துக் கணை மழை பொழிந்தார். எனினும் அவுண வீரர்கள் அழியாததைக் கண்டு வருந்தி இளைத்துக் கந்தவேள் அருகிற் சென்றார்.

அவுண வீரர்கள் ஆறுமுகக் கடவுளைச் சூழ்ந்து, தண்டு, சக்கரம், குலிசம், சூலம், வேல், கோடரி, பாசம், அம்பு முதலிய ஆயுதங்களையும் தெய்வாஸ்திரங்களையும் ஏவி ஆரவாரம் செய்தார்கள்.

பூத வீரர்கள் புறங்கொடுத்ததையும், இலக்கத்தெண்மர் வலியிழந்து ஓய்ந்ததையும், வீரவாகு தேவர் வருந்தி நிற்பதையும், அவுண வீரர்கள் ஆரவாரம் செய்வதையும் கண்ட குமாரக் கடவுள் சிறுநகை புரிந்து வில்லைத் திருக்கரத்தில் ஏந்திக் கணை மழை பொழிந்தார். பூமியில் நின்ற அவுண வீரர்கள் அனைவரும் அழிந்தனர்.

போர் நடைபெறும் பூமியில் நுழைவதற்கு இடமின்றி வெளியே நெருங்கி நின்ற அவுணர்கள் சினந்து உட்புகுந்தனர். தேவர்கள் துதிக்கவும், வீரர்கள் அருகிற் சூழவும் குமாரக் கடவுள் அவுணர்களின் எதிரே எழுந்தருளினர். மீண்டும் பெரும் போர் தொடங்கியது. முருகப் பெருமான் வாயுவைப் பார்த்து, ''நாலா பக்கங்களிலும் தேரைச் செலுத்து'' என்று பணித்தார். வாயு அதனைக் கேட்டு வணங்கி அவுணர் நிற்குமிடந்தோறும் தேரைச் செலுத்தினர். அத்தேர் பூமியிலும், திசைகளிலும், வானத்திலும், கடல்களிலும் எங்கும் விரைந்து சென்றது. குமாரக் கடவுள் தம்மை நெருங்கி நிற்கும் அவுண சேனைகளின் மேல் ஆயிரங் கோடி கணைகளைச் செலுத்தினர். அண்டம் நிறைந்த அவுணர்கள் கந்தவேள் கணைமழையால் அழிந்தனர். பிணமலைகள் குவிந்தன. உதிர வெள்ளத்தில் பிணங்கள் மிதந்தன. அந்த உதிரத்தைக் குடித்தும், மாமிசத்தைத் தின்றும் ஜீரணமாகாமல் பேய்கள் கரணம் அடித்து விளையாடுகின்றனவாம்.










குமாரக் கடவுளின் தேர் அவர் விடுக்கும் கணைகளைவிட விரைந்து சென்றது. தேரைச் செலுத்தும் வாயுவையும், கணைகளை விடுக்கும் குமாரக் கடவுளையும் அமரர் வியந்து பாராட்டித் துதித்தனர்.

இவ்வண்டத்தில் உள்ள அவுணர் படைகள் மட்டுமின்றி, மற்றைய அண்டங்களில் உள்ள அவுண சேனைகள் புறப்பட்டு வருவதைக் கண்ட குமாரக் கடவுள் மீண்டும் படைகள் வராதபடி அண்ட கோளகையின் வாயிலை அடைத்தார். தம் கணைகளினால் இறந்த அவுண வீரர்களின் பிண மலைகள் பாதாளத்திலும், கடலிலும், பூமியிலும் மிக உயர்ந்து நிற்பதைக் கண்டு தமது பன்னிரண்டு திருக் கண்களையும் கொடிய வடவாக்கினி போல் ஜொலிக்கச் செய்து உற்று நோக்க அவை வெந்து நீறாகி வெற்றிடமாயின. இரத்த வெள்ளமும் வறண்டது. மூவுலகங்களும் முன்போல் விளங்கின.

போர்க்களத்தில் நின்ற சூரபன்மன் முருகப் பெருமானின் இத்தகைய திவ்வியப் பெருஞ் சாதனைகளையும் அவற்றை அவர் திருவிளையாடலாகவே அநாயாசமாகப் புரியும் பாங்கினையும் கண்டான். தன் சேனைகளை அழித்த சேவலானை நேருக்கு நேர் எதிர் கொண்டு போர் புரியத் தானே முன்வந்தான்.

இடியேற்றைத் தேடிச் சென்றது வெந்நாகம்.

(தொடரும்)

# கந்தன் கருணை

திருமுருக கிருபானந்தவாரியார்

## 54. அற்புதப் போர்

பெருமானின் தோற்றத்தையும் பன்னிரண்டு திருக் கரங்களையும் கண்டான் சூரபன்மன். அவற்றின் அழகு அந்த அவுணனை ஈர்க்கவில்லை. பெருமான் தமது கரங்களில் ஏந்திய ஆயுதங்களே அவனுக்கு முக்கியமாகத் தெரிந்தன. 'ஓகோ, தன் வலிமையையும், வீரத்தையும் காட்டுகிறானே?' என்றே சினமுற்றான் சூரன்.

மேரு மலை போன்ற வில்லை எடுத்துச் சூரபன்மன் நாண் ஏற்றினான். அதனைக் கண்ட பூத வீரர்கள் மலைகளையும், மரங்களையும், சூலங்களையும் சூரபன்மன் மீது எறிந்து போர் செய்தார்கள். சூரபன்மன் மழையெனப் பொழிந்த கணைகளால் பூதப் படைகள் அழிந்தன. இலக்கத்தெண்மர் சூரபன்மனைச் சூழ்ந்து கணைகளைப் பொழிந்தனர். அக்கணைகள் சூரபன்மனின் உடலில் பட்டு அழிந்தன. இலக்கத்தெண்மர் புறங் கொடுத்து ஓடினர். வீரவாகு தேவர் சூரபன்மனின் தேரிற் பாய்ந்து சிவபெருமான் தந்த வாளாயுதத்தினால் அவனுடைய வில்லை வெட்டினார். கடுஞ் சினங் கொண்ட சூரபன்மன் இடியேறு போல் அவர் மார்பில் அறைந்தான். உதிரம் பெருகச் சோர்ந்து கீழே விழுந்தார் வீரவாகுதேவர். அவரைத் தூக்கி ஆகாயத்தில் எறிந்தான். வானத்தில் சென்ற வீரவாகுதேவர் உணர்வு பெற்று விரைவில் மீண்டு வந்து முருகவேள் அருகிற் போய் நின்றார்.

வீரவாகுதேவர் வெட்டிய வில்லைக் கீழே எறிந்த சூரபன்மன், வேறொரு பெரு வில்லை எடுத்து நாணொலி செய்தான். அதனைக் கண்ட கந்தவேள் தாமும் ஒரு மகா தனுசை யெடுத்து வளைத்து டங்காரம் செய்தார். சூரபன்மன் இருபது இலட்சம் கணைகளைப் பொழிந்தான்.

குமாரக் கடவுள் எதிர்க் கணைகளை விடுத்து அவற்றை அநாயாசமாக அழித்தார்.

மேலும் மேலும் பாணங்களைக் குமாரக் கடவுள் மீது ஏவினான் சூரபன்மன். என்னே அவனது அறிவின்மை! நெருப்பை அழிப்பதாக எண்ணிக் கொண்டு யாரேனும் அக்கினிக் கோளத்தில் விறகை எறிவாரா? சூரனின் பாணங்கள் பரமனை அடைந்ததும் நெருப்பை அடைந்த விறகு போல் அழிந்தன. இவ்வாறாக, இருவரும், விடுக்கிற கணைகள் மண், விண், கடல், மலை முதலிய எங்கும் உலாவின. கந்தப் பெருமானும் சூரபன்மனும் போர் செய்வதைக் கண்ட வீரலட்சுமி, ''இவ்விருவருள் எவரிடம் செல்வது?'' என்று ஐயுற்று நின்றாள்.

குமாரக் கடவுளின் கணைகளை யெல்லாம் சூரபன்மன் அழித்தெறிந்தான். அவருடைய தேரில் கட்டிய கொடியை அறுத்து வீழ்த்தி வெற்றிச் சங்கை ஊதினான். கணைகளை விடுத்து அவருடைய திருமேனியை மறைத்தான். முருகவேள் மகிழ்ச்சியோடு அவனது புஜபல பராக்கிரமம் முழுவதும் வெளியாவதற்கு இடமளித்தார். இனிபொறுப்பதற்கில்லை என்ற நிலை தோன்றியவுடன் ஏழு பாணங்கள் விடுத்துக் கொடியை அறுத்துக் கடலில் இட்டார். அதனைக் கண்ட பானுகம்பன் என்ற பூதப்படைத் தலைவன் தனது ஆயிரம் வாய்களிலும் ஆயிரம் வெற்றிச் சங்குகளை வைத்து ஜயகோஷம் எழுப்பினான். பானுகம்பனின் சங்கொலியைக் கேட்டுத் திருமாலின் பாஞ்சஜன்யம் சங்கும் திடீரென்று முழங்கியது. மற்ற தேவர்களும் தத்தமது சங்குகளை ஊதி ஆர்த்தனர்.

அக்கினி தேவனிடம் அமரர்கள், ''நமது குமாரக் கடவுளின் தேரில் கொடியில்லை. ஆதலால் நீ சென்று கொடியாயிருப்பாயாக'' என்று ஏவினார்கள். தேவர்கள் பணித்தவாறு அக்கினி தேவன் கோழிக் கொடியாகி முருகப் பெருமான் திருத்தேரின் மீது ஏறி அண்டங்கள் வெடிபடக் கூவினான்.

> **ஏவ லோடும்**
> **எரிதழற் பண்ணவன்**
> **வாவு குக்குட**
> **மாண்கொடி யாகியே**
> **தேவ தேவன்**
> **திருநெடுந் தேர்மிசை**
> **மேவி ஆர்த்தனன்**
> **அண்டம் வெடிபட**

இமையவர்களின் ஆரவார ஒலி கேட்டுச் சினந்த சூரபன்மன், தேவர்

நோக்கி, "என் முன்னே வருவ-
ப் பயந்திருந்த தேவர்களே!
ளுக்கு இத்துணை ஆணவமா?
வாரமா? முதலில் உங்களைக் கொல்
ன்" என்று தேரை வானத்தில்
லுத்தினான். சூர்பன்மன் தேரோடு
ன்னுலகத்தில் நின்று கோடானு
டி பாணங்களைத் தேவர்கள் மீது
லுத்தினான். அதனால் தேவர்கள்
ன்பட்டுச் சிதறி ஓடினார்கள். அத
க் கண்ட கந்தக் கடவுள் பூமியில்
ன்றபடியே எண்ணற்ற பாணங்களை
த்துச் சூரபன்மனின் கணைகளை
த்தார். பின் வாயுவை நோக்கி,
ம்முடைய தேரை விரைந்து வானத்
ல் செலுத்து" என்று பணித்தார்.
யு தேரைச் செலுத்திக் கொண்டு
ன்னுலகத்தில் சூரபன்மனுக்கு எதிரே
காண்டு போய் நிறுத்தினார். சூரபன்ம
க்குப் பயந்து சிதறிய ஓடிய தேவர்
ளுக்குக் குமாரக் கடவுள் அபயஹஸ்
ம் தந்து அவுண மன்னனுடன் அற்
ப் போர் புரிந்தார். இருவருடைய
தேர்களும் காற்றாடி போலவும் குயவ
ன் கைத் திகிரி போலவும் சரளமாகச்
ழன்றன. பாதாளத்திலும், கடல்
டுவிலும், அண்ட கடாகங்களிலும்
ரிகை வந்தன. அத்தேர்களின் ஒலி
யைக் கேட்டுத் தேவர்கள் பாடி
னார்கள். யட்சகர்கள் மருண்டார்கள்;
ாகர்கள் அலைந்தார்கள்; மலைகள்
ளைந்தன; கடல்கள் வற்றின; பூதலம்
டுங்கின; நட்சத்திரங்கள் உதிர்ந்
ன; மேகங்கள் சிந்தின.

இறுதியில் தேரையும், குதிரைகளை
ும், பல ஆயுதங்களையும் இழந்த
ூரபன்மன் கையிலேந்திய வில்லோடு
ூமியை அடைந்தான். சுவாமியும்
ூதலமுற்றார். மீண்டும் பயங்கரப்
போர் நடந்தது.

வெற்றி தோல்வியில்லாமல் போர்
நீடித்தது. சூரபன்மன் மாய யுத்தம்
செய்ய எண்ணி விண்ணில் தோன்றி
னான். உடனே குமாரக் கடவுளும்
அவனைப் பின்தொடர்ந்து வானத்தில்
சென்று அவனை எதிர்த்தார். சூரபன்மன் மீண்டும் மண்ணில் தோன்றினான். முருகவேளும் பூமியில் வந்து போர் செய்தார். சூரபன்மன் அங்கிருந்து மறைந்து தன் வடிவை மறைத்து நன்னீர்க் கடல் நடுவில் தோன்றினான். எங்கும் எப்போதும் தங்கும் முருகவேள் அங்கும் தோன்றிப் போர் செய்தார். சூரபன்மன் அவ்விடத்திருந்தும் மறைந்து திக்கின் முடிவுக்குச் சென்றான். முருகக் கடவுள் தொடர்ந்து சென்று சமர் செய்தார். சூரன் பாதாளத்துக்குச் சென்றான். முருகவேளும் பாதாளத்தில் பாத தளம் பொருத்திப் போர் செய்தார். சூரபன்மன் அங்கிருந்து மறைந்து மேரு மலையின் உச்சியில் தோன்றுவான்; மேக நடுவில் தோன்றுவான். முருகவேளும் ஆங்காங்கு தொடர்ந்து சென்று போர் புரிந்தார். சூரபன்மன் தன்னுடைய இந்திரஞாலத் தேரை நினைத்து அழைத்து அதன் மீதேறி ஒரு கணப் பொழுதும் ஓரிடத்தில் நிற்காமல் சூறைக் காற்று போல் சுழன்று அண்டகோளகையின் வாயிலை அடைந்தான். அங்கு சேனைகள் வராவண்ணம் முருகவேள் தம் கணைகளினால் வாயிலை அடைத்திருப்பதைக் கண்டு நகைத்தான். வில்லை வளைத்துப் பல கோடி கணைகளைச் செலுத்தி அண்ட கடாகத்தின் வாயிலை மூடியிருந்த தடைகளைத் துணித்தான். உடனே அப்பால் அண்டங்களில் நின்று கொண்டிருந்த நால்வகைச் சேனைகளும் ஆர்த்து வந்தன. அவை ஆயுதங்களை எறிந்து குமாரக் கடவுளைச் சூழ்ந்தன. குமரவேள் தீ எழும் படி சிறுநகை செய்தார். அந்தச் சேனைகள் யாவும் சாம்பராயின. உடனே மற்றோர் அண்டத்துள்ள சேனைகள் வந்து கந்தவேளை எதிர்த்தன. அந்தச்சேனை களை ஹுங்காரத்தாலும் பார்வை





''பெண்களின் கண்களைக் கயல் விழிகள் என்று ஏன் மீன்களோடு ஒப்பிட்டுச் சொல்கிறீர்கள்?''

''மணிபர்ஸ் என்ற தடாகத்தில் நீந்துவதால்...!''

யாவும் அழித்தார் எம்பெருமான். மீண்டும் மீண்டும் வேறு அண்டங்களி லுள்ள சேனைகள் வந்து கொண்டே யிருக்க, குமாரக் கடவுள் தமது திருக் கரத்திலுள்ள மழு, சூலம், சக்கரம், தண்டு, எழு என்ற ஐந்து படைக்கலங் களை நோக்கி, ''நீங்கள் விரைந்து சென்று நம்மைச் சூழ்ந்த அவுண சேனைகளையும் கொன்று வாருங்கள்'' என்று கூறி விடுத்தார். அப்படைக் கலங்கள் பற்பல உருவங்களை எடுத் துச் சென்று ஆயிரத்தேழு அண்டங் களுக்கும் சென்று அங்குள்ள சேனைகள் யாவற்றையும் அழித்து மீண்டன.

பல கோடி அவுணர்களும் அழிந்த தைக் கண்ட சூரபன்மன், 'ஒரு கணப் பொழுதில் இவனைக் கொல்வேன்' என்று கூறி முன்னர்ச் சிவபெருமான் தந்த சக்கரப் படையை எடுத்து வழி பட்டு முருகவேள் மீது செலுத்தி னன். முருகப் பெருமான் அதனை ஒரு திருக்கரம் நீட்டிப் பரிசுப்பொருளைப் பெறுவது போலப் பற்றினர்.

மனம் தளர்ந்தான் சூரபன்மன். உள்ளத்தை உறுதிப்படுத்திக் கொண்டு இந்திரஞாலத் தேரின் மீதேறினன். மாயையால் அளவற்ற உருவங்களை எடுத்துப் பாண மழை பொழிந் தான். குமாரக் கடவுள் ஞானாஸ் திரத்தை எடுத்து விடுத்தார். அந்த அஸ்திரம் விரைந்து சென்று சூரபன்ம னின் மாயைகளை யெல்லாம் அழித் தது. வலியிழந்த சூரபன்மன் தேரோடு மறைந்து போய் விட்டான். அவ னுடன் எம்பெருமானும் மறைந்து போனர். அண்டங்கள் எல்லாம் நிலை குலைந்தன. முருகக் கடவுளைக் காணாது அமரர்கள் தாய் தந்தையரை விட்டுப் பிரிந்த குழந்தைகள்போல் வாடி வருந்தினர். பிரம்மதேவர் முதலி யோர் திருமாலிடம் சென்று, ''சூர பன்மனைத் தொடர்ந்து சென்ற பெரு மானின் நிலை யாதோ?'' என்று முறையிட்டுக் கொண்டனர்.

ஓதி யாகியும் உணர்ந்தவர்க்
குணரவும் ஒண்ணு

நீதி யாகியும் நிமலம
தாகியே நிகழுஞ்

சோதி யாகியும் தொழுதிடும்
எம்மனோர்க் கெல்லாம்

ஆதி யாகியும் நின்றவன்
அறுமுகன் அன்றோ!

''தேவர்களே! அஞ்சாதீர்கள்! ஆதி பரம்பொருளாக இருக்கிற எம் பெருமானுக்கா ஆபத்து வரும்? சூர பன்மன் வலிமையை மதித்து அச்சப் படாதீர்கள். ஆறுமுகக் கடவுளாக விளங்குபவர் ஆதிமுதல்வர் என்பதை நீங்கள் மறந்து விடாதீர்கள்'' என்று கூறினர் திருமால்.

திருமால் கூறியதைக் கேட்டுத் தேவர்கள் மனத் தெளிவும் மகிழ்ச்சி யும் பெற்றனர்.

எல்லா அண்டங்களுக்கும் ஓடிய சூரபன்மன் அங்கெல்லாம் முருக வேளுடன் போர் செய்து கடைசியில் மகேந்திரபுரிக்கே திரும்பினன். குமாரக் கடவுளும் திரும்பி வந்து தேவர்கள் நெஞ்சில் பால் வார்த்தார். விடாது தொடர்ந்து சென்றார். அங்கிருந்த அவுண வீரர்கள் முருகவேளைச் சூழ்ந்து ஆரவாரம் செய்தனர். ஆறுமுகக் கடவுள் அந்தச் சேனைகளை நோக்கித் திருப் புன்முறுவல் செய்தார். அந்தப் புன்முறுவலால் சூரபன்மன் சேனை முழுவதும் அழிந்தது. அவுண சேனைகள் எல்லாம் அழிந்ததைக்கண்ட தேவர்கள் மகிழ்ந்து பூமாரி பொழிந்தார்கள்.

அவுண சேனைகள் எல்லாம் அழிந்து தனித்து நின்றான் சூரபன்மன்.

(தொடரும்)

# கந்தன் கருணை



திருமுருக
கிருபானந்தவாரியார்

## 55. பட்சியை சிட்சித்த பரமன்

அவுண சேனையனைத்தையும் இழந்த சூரன் ஆற்றாமை தாங்கொணுது 'அம்மா' என்று தன் தாயான மாயையை அழைத்தான். அவனது அம்மா மாயா தேவி உடனே அங்கு தோன்றினுள்.

''தாயே, நான் தனித்து நிற்கிறேன். நீதான் எனக்கு உதவி புரிய வேண்டும்'' என்று அவளை வேண்டிக் கொண்டான் சூரபன்மன்.

''மகனே! எல்லோரும் அழிந்தபின் கூட உன் மனம் தெளிவு பெறவில்லையே? தேவர்களைச் சிறையிலிருந்து விடுவிக்க விரும்பவில்லை. முழுமுதற் கடவுளாகிய முருகவேளைப் பாலகன் என்று எண்ணி விட்டாய். அவரை எதிர்க்கக் கூடாது'' என்று மாயை புத்திமதி கூறினுள். மாயையே ஞானத்தைப் பேசினுள் என்பது விந்தையிலும் விந்தையன்றோ? ஆனல் இதற்கும் மசியவில்லை, அழிவை நாடிவிட்ட அவுணனின் அறிவு.

''அம்மா! நீ எனக்கு உபதேசம் செய்ய வேண்டியதில்லை. உதவிதான் செய்ய வேண்டும். உதவப் போகிருயா இல்லையா?'' என்று கோபத்துடன் கேட்டான் சூரபன்மன்.

''என்ன உதவி செய்ய வேண்டும்?'' என்று கேட்டாள் மாயை.

''இறந்தவர்கள் எல்லோரும் மீண்டும் உயிர் பெற்று எழுவதற்கு வழி சொல்'' என்று கேட்டான் சூரபன்மன்.

மாயையும் அதற்கு வழி கூறலானுள். ''மகனே, ஏழுகடல்களுக்கப்பால் அமுத சீத மந்தர கூடம் என்று ஒரு மலை இருக்கிறது. அதனை இங்கே கொண்டு வந்தால் இறந்தவர்கள் எல்லோரும் உயிர் பெற்று எழுவார்கள்.'' இவ்வாறு கூறி மறைந்தாள் மாயை.

சூரபன்மன் இந்திரஞாலத் தேரினின்றும் இறங்கிச் சிங்க வாகனத்தில் ஏறிக் கொண்டான். இந்திர ஞாலத் தேரை நோக்கி, ''நீ ஏழு கடல்களுக்கும் அப்பால் உள்ள அமுதகூட மந்தர மலையை இங்கே கொண்டு வா'' என்று ஏவினுன்.

இந்திர ஞாலத் தேர் ஏழு கடல்களையும் கடந்து சென்று அமுதசீத மந்தர மலையைப் பெயர்த்து எடுத்துக் கொண்டு வந்தது. அந்த மலையின் காற்றுப் பட்டவுடன் இறந்த அசுரர்கள் அனைவரும் உயிர் பெற்று எழுந்தனர். அசுரத் தரப்பில் இறந்து வீழ்ந்த குதிரைகளும், யானைகளும் எழுந்தன. சிங்கங்கள் எழுந்தன. சிங்கமுகாசுரன் எழுந்தான். பானுகோபன் எழுந்தான். அக்கினி முகன் எழுந்தான். வச்சிரவாகு எழுந்தான். தருமகோபன் எழுந்தான். அதிசூரன், அசுரேந்திரன் ஆகியோரும், மூவாயிரவரும் மற்றையோரும் உயிர் பெற்று எழுந்தனர்.

சூரபன்மன் மட்டற்ற மகிழ்ச்சியடைந்தான். இவ்வளவு காலப்போரில் அவன் இழந்ததவ்வளவையும் அல்லவா மீண்டும் பெற்று விட்டான்? 'இனி உய்வு இல்லை' என்று தேவர்கள் ஏங்கினுர்கள். பூத வீரர்கள் கலங்கினுர்கள்.

முருகவேள் மட்டும் முறுவல் பூத்தார். ஏனைய பூதப் படையினரும் தேவரும் தாங்கள் மகத்தான போர் புரிந்து தமது திறத்தைக் கொண்டே இவ்வளவு நாள் போரில் அவுணர்களைக் கொன்றதாகச் செருக்குற்றிருக்கக்கூடும் அல்லவா? அத்தகைய செருக்கைக் களைய வேண்டுமென்றே இன்று இறந்த அசுரர் யாவரும் உயிர் பெற்றுத் தனியொருவரான தம்மாலேயே வெல்லப் படுவதற்காக வந்துற்றனர் என்று கருதினுர் கந்தசுவாமி. சர்வ சம்ஹார அஸ்திரத்தை எடுத்தார்.

திருச்செய்ஞலூர் என்பது சண்டேசுவர நாயனுர் அவதரித்த தலம். அங்கே முருகப் பெருமான் சிவபெருமானைப் பூஜை செய்தபோது சிவபெருமான் இந்த சர்வ சம்ஹார அஸ்திரத்தை அளித்தார். அதனை இப்போது எடுத்து விடுத்தார் சுவாமி. அந்த அஸ்திரம் விரிசடைக் கடவுள் திரிபுரமெரித்தது போல் யாவரையும் கண நேரத்தில் ஒருங்கே அழித்தது. மாண்டவர்கள் அனைவரும் எவ்வளவு வேகமாக உயிர் பெற்று எழுந்தார்களோ, அவ்வளவு வேகமாக அழிந்தும் விட்டார்கள். இந்திரஞாலத் தேரின் மீதிருந்த அமுதசீத மந்தர கூடமும் தூளாகியது. இனி அவர்களைப் பிழைப்பிக்க வழி ஏது?

கனவிலும் கருதவொண்ணுத நிதியம் கிடைத்த பின் கிடைத்த வேகத்திலேயே கைவிட்டுச் சென்றது போல் சூரபன்மன் சோர்ந்தான். உற்றம், சுற்றம் அனைத்தும் இழந்த சூரபன்மன் முருகவேளும் தன்னைப் போல் தனித்திருக்க வேண்டும் என்று கருதினுன்.

தனித்திருக்கும் ஏகநாயகன்தான் ஐயன் என்பதை அவன் எப்படி அறிவான்?

இந்திர ஞாலத் தேரை நோக்கிய சூரன், ''நீ பூதரையும் வீரரையும் கவர்ந்து சென்று அண்டகோளகையின் உச்சியில் அடைத்து வைத்துக் கொண்டிரு'' என்று கட்டளை இட்டான். இந்திரஞாலத் தேர் வீரவாகு முதலிய வீரர்களையும், இலக்கத்தொன்பதின்மரையும், இரண்டாயிரம் பூத வெள்ளங்களையும் மயக்கி வாரிக்கொண்டு அண்டகோளகைக்குச் சென்று சூரபன்மன் கட்டளைப்படி அங்கேயே அடைத்து வைத்துக் கொண்டிருந்தது.

முருகவேள் தனித்து நின்றார்.

முருகவேளுடன் தன்னந்தனியாக நிற்கும் மகா அநுபவத்தை அருணகிரிநாதர் இன்னம் ஒருவருக்கு இசைக்க இயலாது என்பார். சூரனும் தான் சுவாமியுடன் தன்னந்தனியாக நின்றான். ஆனால் உணர்வில் என்னே மாறுபாடு?

முருகனைத் தனித்து நிற்கச் செய்த இந்திர ஞாலத் தேரின் வலிமையைக் கண்டு சூரன் வியந்தான்; மகிழ்ந்தான். அந்த வியப்பையும், மகிழ்ச்சியையும் விநாடியில் தவிடுபொடி செய்ய வேலாயுதப் பெருமான் அறிய மாட்டாரா? கணையை எடுத்தார் சுவாமி; வில்லிற் பூட்டி விடுத்தார். அப்படை வேற்படை போன்று ஒளி வீசி எல்லா உலகங்களையும் கடந்து சென்று இந்திர ஞாலத் தேரை அடைந்து அதன் ஆற்றலை அழித்தது. பிறகு அத்தேரைப் பூமிக்குக் கொண்டுவந்து பெருமான் முன்னிலையில் நிறுத்தியது. அதனின்று வீரவாகு தேவரும் மற்ற வீரரும் பூதரும் மண்ணிற் குதித்து முருகப் பெருமானை வணங்கினார்கள். இந்திர ஞாலத் தேரை நோக்கிய குமாரக் கடவுள், ''இனி சூரபன்மனிடம் செல்லாதே; இங்கேயே நில்'' என்று பணித்தார். அந்த ஆணையின் வண்ணமே தேர் பெருமான் அருகில் நின்றுவிட்டது.

தேர் போய் விட்டாலும் சூரனுக்கு ஒரு சிங்க வாகனம் உண்டு. அதன் மீது ஏறிச் சினத்துடன் கந்தவேள்மீது கணைகளைப் பொழிந்தான். முருகப் பெருமானும் சினத்துடன் கணைகளை விடுத்துச் சூரபன்மன் விடுத்த கணைகளை எல்லாம் அழித்தார். சூரபன்மன் எம்பெருமானின் தேர்ப் பாகனாகிய வாயுவின் மீது பாணங்களை விடுத்தான். வாயுவின் உடல் எல்லாம் புண்பட்டது. வாயு தேவன் வருந்திப் புலம்பித் தேர்க் குதிரைகளை ஓட்டாமலிருந்தான். எம்பெருமான் உடனே ஆயிரம் கணைகளைச் செலுத்திச் சூரபன்மனின் வில்லைத் துண்டித்தார். சூரன் முன்பு சிவபெருமான் அளித்திருந்த முத்தலைச் சூலத்தை எடுத்துக் கொண்டு முருகவேளை நெருங்கினான். அவனது வாகனமாகிய சிங்கம் சீறிப் பாய்ந்து முருகவேளின் தேர்க் குதிரைகளை அடித்துப் புண்படுத்தியது. சூரபன்மன் முத்தலைச் சூலத்தைச் சுழற்றிக் கந்தவேள் மீது வீசினான். மின்போன்று ஒளி வீசிய அச் சூலம் ஆகாய வழியாகச் சென்றது. செல்லும்பொழுது தீ சிந்தியது; இடிகள் முழக்கமிட்டன. அந்தச் சூலத்தின் மீது பெருமான் ஆயிரம் கணைகளை விடுத்தார். அக்கணைகளை யெல்லாம் அழித்த சூலம் முருகப் பெருமானை நெருங்கியது. ஆறுமுகக் கடவுள் தம்முடைய திருக் கரத்திலிருக்கும் குலிசத்தை நோக்கி, ''சூரபன்மன் விடுத்த சூலத்தைப் பிடித்துக் கொண்டு வா'' என்று கட்டளையிட்டார். குலிசம் அனல் மழை பொழிந்து சென்று சூலத்தின் மூன்று தலைகளையும் கவ்விக்கொண்டு அதனைக் கைதியாக்கி இழுத்து வந்தது. செவ்வேள் இரண்டாயிரம் கணைகளை விடுத்துச் சூரபன்மனின் வாகனமாகிய சிங்கத்தைச் சம்காரம் செய்தருளினர்.

சூலமும் சிங்கமும் அழிந்ததைக் கண்ட சூரபன்மன் ஊழித் தீப்போல் வெகுண்டான். மாயத்தினால் ஒரு பெரிய சக்கரவாகப் பறவை வடிவத்தை எடுத்து உலகமெல்லாம் அஞ்சும்படி சிறகுகளை வீசி ஆகாயத்திலே பறந்தான்.

சக்கரவாகப் பறவை ஆகாயத்திலேயே பிறப்பது; பூலோகத்தில் அது ஒருபோதும் தங்காது. சூரியனின் வெப்பம்தான் அதற்கு ஆகாரம். சக்கரவாகப் பறவை ஆகாயத்தில் பறக்கும்போது முட்டையிடும். அந்த முட்டை வெப்பத்தினால் பூமியை நோக்கி வரும். அவ்வாறு வரும்போதே முட்டை வெடித்துக் குஞ்சு வெளியே வரும். குஞ்சு வெளியே வந்ததும் பூமிக்கு வராமல் தாய் தந்தையரிடமே ஆகாயத்துக்குப் பறந்து விடும்.

அந்தப் பறவையின் உருவத்தைத் தான் எடுத்துக் கொண்டான் சூரபன்மன்; வானத்தில் பறந்தான். தன் சிறகுகளினால் கதிரவனின் ஒளியையும் மறைத்துத் திரிந்தான். கடல் போல் திரண்டிருந்த பூத சேனைக்குள் புகுந்து சிறகுகளால் அடித்தான். மூக்கினால் கொத்திச் சிலரை விழுங்கினான். முருகப் பெருமானின் தேரைச் சூழ்ந்து கொண்டு தேர்ப் பாகனை அடித்தான். தேரில் பூட்டப்பட்டிருந்த குதிரை

...க் கொத்தினான்; பூதப் படைத் தலைவர்களைப் பிடித்துக் கொண்டான். இவ்வாறாக, சூரபன்மன் ஆகாயத்தில் பறந்து திரிந்து அமர்க்களம் செய்து கொண்டிருந்தான்.

சக்கரவாகப் பறவை வடிவங் கொண்ட சூரபன்மன் மீது எம்பெருமான் பலகோடி கணைகளை விடுத்தார். அவற்றையெல்லாம் சிறகுகளாலும், அலகாலும், காலாலும் அடித்து முறித்தான் சூரபன்மன்.

'பட்சி உருவங் கொண்டவனைத் தேரோடு தொடர்ந்து செல்வது முறையன்று' என்று திருவுளங் கொண்ட முருகவேள் இந்திரனை நோக்கினார். ஆண்டவனது அருட்குறிப்பையுணர்ந்த இந்திரன், நீண்ட தோகையுடைய மயில் உருவங் கொண்டு வந்து வணங்கித் துதித்தான். ''பறவை வடிவங் கொண்ட சூரபன்மன் செல்லும் இடங்களுக்கெல்லாம் சென்று போர்செய்து வெல்ல அடியேன் மீது எழுந்தருள வேண்டும்'' என்று வேண்டிக்கொண்டான். ஆறுமுகப் பெருமான் தேரினின்றும் இறங்கி இந்திரனாகிய மயில் மீது ஏறிக் கொண்டு சூரபன்மனாகிய சக்கரவாகப் பறவையைத் தொடர்ந்து சென்றார்.

சுவாமியின் நியாய உணர்வைத்தான் பாருங்கள். சிறகினால் மலைகளையும் அசைக்கும் ஆற்றல் பெற்ற சூரபன்மன், ''என்னைக் கண்டு பயந்த இந்திரன் மயில் வடிவங் கொண்டு இந்தக் குழந்தையை அழைத்து வந்திருக்கிறானே; குழந்தையைக் கொல்வதற்கு முன் மயிலைக் கொல்ல வேண்டும்'' என்று எண்ணி இந்திரனைத் தாக்கினான். மயிலும் சக்கரவாகப் பறவையும் ஒன்றையொன்று எதிர்த்துப் போர் செய்தன. சக்கரவாகப் பறவை மயிலின் தலையில் உள்ள கொண்டையைப் பறித்து முகத்தைக் கொத்தியது. ''சுவாமி! சுவாமி!'' என்று அலறினான் இந்திரன். அதனைக் கண்ட ஆறுமுகக் கடவுள் சினந்தார். கறங்கு போல் சுழன்று திரியும் சக்கரவாகப் பறவையைத் தொடர்ந்து சென்று, மார்பிலும், முகத்திலும், கால்களிலும் பாணங்களைப் பொழிந்து உடலைத் துளைத்தார். சக்கரவாகம் பதைத்துச் சிறகுகளை உதறியது; எண்டிசைகளிலும் கோபத்துடன் திரிந்தது. முருகப் பெருமான் அந்த இடங்களுக்கும் தொடர்ந்து சென்றார். முருகப் பெருமானுக்கு ஈடுகொடுக்கச் சக்கரவாகத்தினால் இயலவில்லை. வலிமை இழந்த அப்பறவை இறுதி முயற்சியாக முருகப் பெருமானின் கையில் உள்ள வில்லை முறிக்க வேண்டும் என்ற எண்ணத்துடன் நெருங்கி வந்தது. வேலாயுதக் கடவுள் வாளை வீசிச் சக்கரவாகத்தை இரு துண்டுகளாக வெட்டி வீழ்த்தினார். வானவர்கள் வாழ்த்தினார்கள்; மகிழ்ந்து கூத்தாடினார்கள்.

(தொடரும்)



பிராட்வே என்ற பெயரைக் கேட்டதும் அகலமான வீதியை எதிர்பார்த்தால் அன்றும் இன்றும் சங்கடம் தான். ஆனால் அன்று காலார நடந்து களைப்பாற மர நிழல் கிடைத்தது; இன்று கிடையாது என்பதுடன் வேறு பலவிதங்களிலும்தான் பிராட்வே நாற்சந்தி எவ்வளவு மாறிவிட்டது!



## அன்றும் இன்றும்

அத்தியாயம் நாற்பத்தேழு

## பதினைந்தாம் நம்பர் அறை

பெங்களூர் தண்டு, சௌத் ப்ரேட் ரோட்டில் மூன்று மாடிகள் கொண்டு அமைந்த- நவீன வசதிகளுடன் கூடிய- பெரியதொரு ஹோட்டல். அந்த ஹோட்டலின் இரண்டாவது மாடியில் வரிசையாகப் பதினைந்து அறைகள். அவை ஒவ்வொன்றிலும் தனித்தனியாகக் குளியலறை, ரேடியோ, டெலிபோன், மின்சார விசிறி, உயர்தர சோபாக்கள், இரண்டு கட்டில்கள், மேசை, நாற்காலிகள் முதலானவை இருந்தன. சன்னல், கதவுகளுக்கு அழகிய திரைச் சீலைகளும் போடப்பட்டிருந்தன.

அறைக்கு வெளியே நீண்ட வராந்தாவின் நெடுகிலும் கண்ணுக்கினிய வண்ண மலர்கள் பூத்துக் குலுங்கும் பூத்தொட்டிகள் அழகுற வைக்கப்பட்டிருந்தன. அவற்றின் இடையிடையே உயிருள்ள மீன்கள் நீந்தும் கண்ணாடிப் பெட்டிகள், அறை ஒன்றின் ஒரு நாளைய வாடகை முப்பது ரூபாய்- உணவு, மற்ற வகையறுக்கள் நீங்கலாக!

அப்படி இருந்தும் அந்தப் பதினைந்து அறைகளில் பதினான்கு அப்போது நிறைவாகி யிருந்தன. ஒரே ஓர் அறைதான் — அதோ,



# கந்தன் கருணை

திருமுருக கிருபானந்த வாரியார்

## 56. மனம் இணங்கியது; மானம் பிணங்கியது!

சக்கரவாகப் பறவை வெட்டி வீழ்த்தப் பட்டதும், சூரபன்மன் அண்ட முகட்டை உரசும் உயரத்துக்கு மண் வடிவாக உருமாறினன். ஏழு கடல்களையும் வற்றச் செய்து கதிரவன் செல்லும் வழியையும் மறைத்தான். திக்குகளையெல்லாம் மூடினன். முருகக் கடவுள் ஏழு பாணங்களை விடுத்தார். அவை ஏழு கடல்களாகச் சென்று சூரபன்மனின் அம்மாய உருவை அழித்துக் கடல் வடிவம் மாறி முருகக் கடவுளை வந்தடைந்தன. சூரபன்மன் தண்ணீர் வடிவாகி விண்ணுலகத்தைத் தொடும் வண்ணம் எழுந்து நின்றான். முருகப் பெருமான் நூறு பாணங்களை விடுத்தார். அவை ஊழித் தீயின் வடிவம் எடுத்து நீரை உண்டு திரும்பின. சூரபன்மன் அனல் வடிவமாக அண்டங்களெல்லாம் தீயுமாறு வந்தான். எம்பெருமான் ஆயிரம் கணைகளை விடுத்தார். அவை பெருங்காற்று வடிவங் கொண்டு சூரபன்மனின் மாய அக்னியை அழித்து எம்பெருமானிடம் திரும்பி வந்து சேர்ந்தன. சூரபன்மன் சூறாவளியாகி மலைகள் பஞ்சுபோல் பறக்கும்படி ஆர்த்து நின்றான். ஆறுமுகக் கடவுள் இலட்சம் பாணங்களை விடுத்தார். அவை பாம்பு வடிவாய்ச் சென்று சூரனின் புது வடிவை விழுங்கி மீண்டன. (பாம்புகள் காற்றைப் புசிக்கும் என்பது ஒரு நம்பிக்கை.)

சூரபன்மன் நான்கு நாட்கள் வரையும் தொலையாது நின்று பலப் பல உருவங்களில் முருகப் பெருமானுடன் போர் புரிந்தான். மும்மூர்த்திகள் போல் வந்தான்; இந்திரன் போன்று வந்தான். இயமனைப் போன்று வந்தான். பேயைப் போன்று வந்தான்; கடல் போன்று வந்தான்; முகில் போன்று வந்தான்; இடி போன்று வந்தான்; நாகங்களாக வந்தான்; நஞ்சு போல் வந்தான்; மலைபோல் வந்தான்; சூரியனைப் போன்று வந்தான்; திக்கஜங்கள் போன்று வந்தான்; சிங்கம் போன்று வந்தான்; தாரகாசுரனைப் போன்று வந்தான்; சிங்கமுகனைப் போன்று வந்தான்; பானுகோபனைப் போல் வந்தான்; அக்கினிமுகாசுரனைப் போன்று வந்தான்; தருமகோபனைப் போல வந்தான்; இவ்வாறுக மாயமாகப் பற்பல உருவங்களையெடுத்த சூரபன்மன் யாண்டும் நிறைந்த முருகப் பெருமானைச் சூழ்ந்தான். இவ்வற்புதத்தைக் கண்ட தேவர்கள் மூலைக்கொருவராய் அஞ்சியோடினர்கள்: ''பாணங்களே! நீங்கள் சென்று சூரபன்மன் மாயங்கள் அனைத்தையும் அழித்து வாருங்கள்'' என்று ஆறுமுகக் கடவுள் ஆயிரங் கோடி பாணங்களை விடுத்தார். அவை சூரபன்மன் எடுத்த ஒவ்வொரு வடிவத்துக்கும் தனித்தனியே ஏழு மடங்கு வடிவம் எடுத்து மாய வேஷங்களையெல்லாம் அடியோடு அழித்து மீண்டன.

மாய வேஷங்கள் யாவும் தீர்ந்த பின் சூரபன்மன் போர்க்களத்தில் பெருங்கோபத்துடன் தனித்து நின்றான்.

முருகப் பெருமான் அவனை நோக்கி, ''அறிவிலியே! அழியும் மின்னலைப் போன்று நீ எடுத்த மாய வேஷங்களையெல்லாம் நாம் அழித்தோம். அழியாத நமது பெரிய வடிவத்தை உன் தவத்தினால் நீ காண்பாயாக'' என்று விசுவரூபத்தைச் சூரபன்மனுக்குக் காட்டியருளினர். அதனைப் பார்ப்பதற்குரிய ஞானக்கண்ணையும் சூரனுக்குத் தந்தார்.

பகைவனுக்குப் பரமன் புரிந்த பேரருளைப் பாருங்கள். தமது மகத்தான சொரூபத்தினைத் திவ்விய தரிசனம் காட்டுகிறார். பாரதப் போர்க்களத்தில் பக்தனான பார்த்தனுக்குப் பரந்தாமன் விசுவரூபம் காட்டி அருளினர். முருகனோவெனில் எதிரிக்கு அந்த எழிற் கோலத் தரிசனம் தந்தருள் செய்கிறார்!

முருகப் பெருமான் விசுவரூபம் எடுத்த போது, கடல், உலகம், திசை, அண்டம், தேவர்கள், உயிர்கள் யாவும் அவரது திருமேனியில் அடங்கின. அந்தத் திருமேனியின் உள்ளடியில் மலைகளும், புறவடியில் கடல்களும், பாத விரல்களில் இடியும், நட்சத்திரங்களும், சிகரங்களும் அடங்கியிருந்தன. பரட்டில் வருணனும், குபேரனும், நிருதி அரக்கர்களும், கணைக்கால்களில் முனிவர்களும் சிந்தாமணி முதலிய மணிகளும் அடங்கியிருந்தன. முழந்தாளில் வித்தியாதரர் முதலியவர்களும், தொடையில் இந்திரனும், சயந்தனும், தொடைமூலத்தில் இயமனும், காலனும் அடங்கியிருந்தனர். அரையின் முற்பக்கத்தில் அசுரர்களும், விலாப்புறங்களில் தேவர்களும்,

மூலாதாரத்தில் நாகர்களும், குறியில் அமிர்தமும், நாபியில் உயிர் வர்க்கங்களும், மார்பில் சர்வ கலைகளும் உபவீதத்தில் ஞானமும் அடங்கியிருந்ததைக் கண்டான் சூரபன்மன். உரோமத்தில் அண்டங்களும், அங்கையில் சகல போகங்களும் அடங்கியிருந்தன. தோள்களில் திருமாலும், பிரமனும் அடங்கினர். கைவிரல்களில் தெய்வப் பெண்களும், கண்டத்தில் ஒலியின் கூட்டங்களும் அக்கினியும், வாயில் வேதங்களும், பற்களில் அட்சரங்களும், நாவில் சிவாகமங்களும், உதட்டில் ஏழுகோடி மகா மந்திரங்களும், நாசியில் வாயுவும், கண்களில் சூரிய சந்திரர்களும், காதுகளில் திக்குகளும் அடங்கியிருந்தன. நெற்றியில் பிரணவமும், தலையில் பரசிவமும் பொருந்தித் தோன்றியதும், அநந்த கோடி சூரியர்கள் ஒருங்கே கூடினாற் போல் பேரொளியுடன் கூடியதுமான ஒப்பற்றவிசுவரூபத்தைக் கண்டதும் சூரபன்மனின் அறிவு தெளிந்தது. அவன் பெரும் வியப்புற்றான்.

முருகப் பெருமானின் விசுவரூபத்தைக் கண்ட தேவர்கள், அத்திருவுருவத்தைக் கண்டு அஞ்சி நடுங்கினார்கள். ஆறுமுகக் கடவுள் தமது திருக்கரத்தை அமைத்து, ''அஞ்ச வேண்டாம்; அஞ்ச வேண்டாம்'' என்று திருவருள் புரிந்தார். தேவர்கள் உள்ளம் உவந்து தனித் தனியே போற்றி செய்து புகழ்ந்தார்கள்.

விசுவரூபத்தைக் கண்டு வியப்படைந்த சூரபன்மனுக்கு எம்பெருமான் சிறிது நல்லுணர்ச்சி தந்தருளினார். நல்லுணர்வு பெற்ற சூரபன்மன், 'அன்று தூது வந்த வீரவாகு தேவர், முருகனும் ஈசனும் ஒருவரே' எனக் கூறினாரே; அது முற்றிலும் உண்மை' என்று தெளிந்தான். 'முருகனைப் பாலன் என்று இகழ்ந்தேனே' என நொந்து கொண்டான். முருகப் பெருமான், தேவர்க்கும் மூவர்க்கும் முதலாய் நின்ற முழு முதற் பொருள் என்ற உணர்ச்சி உண்டாகியது.

''கோலமா மஞ்ஞை தன்னில்
குலவிய குமரன் தன்னைப்
பாலன் என்றிருந்தேன் அந்நாள்
பரிசிவை உணர்ந்தி லேனால்
மாலயன் தனக்கும் ஏனை
வானவர் தமக்கும் யார்க்கும்
மூலகா ரணமாய் நின்ற
மூர்த்தி இம்மூர்த்தி அன்றே?

முருகப் பெருமானுடைய பெருமையை நினைந்து வியப்புற்று, முருகப் பெருமானின் அழகில் பரவசமடைந்தான் சூரபன்மன். தம்பி சிங்கமுகாசுரனும் இரணியனும் ''முருகன் பாலன் அன்று'' எனச் சொன்னது உண்மை என்று உணர்ந்தான். தனக்கு முருகப் பெருமான் ஞானக் காட்சி தந்தருளியது தவப்பயன் என்று புகழ்ந்து கொண்டான். ''விசுவ ரூபத்தில் உள்ள ஒளியும் சீரும் இளமையும் அழகும்



ஆகிய இவைகளெல்லாம் உலகில் வேறு யாரிடத்தில் உள்ளன! ஆகா! அற்புதத்தோடு பலகால் பார்க்கினும் இன்னும் என் பார்வையும் தெவிட்டவில்லையே! சமானமில்லாத இத்தனிப் பெருங் கடவுளுடைய விசுவரூபத்தை நோக்கி மிகவும் அஞ்சுவதன்றி தேவர்களுள்ளும் இதனைக் காண வல்லார் யார்? நான் அழியாத சிறந்த வரத்தைப் பெற்றுள்ளேன். ஆதலால்தான் காண்கின்றேன். நான் மன்மதனைப் பார்த்திருக்கிறேன். அவன் மிகுந்த அழகன் என்று எனக்குத் தெரியும். அவன் எரிந்து விட்டான். இவரது விசுவரூபத்தில் நான் ஆயிரங்கோடி மன்மதர்களைப் பார்க்கின்றேன்.

ஆயிர கோடி காமர்
அழகெலாந் திரண்டொன் ருகி
மேயின எனினும் செவ்வேள்
விமலமாஞ் சரணந் தன்னில்
தூயநல் எழிலுக்காற்ரு தென்றிடில்
இனைய தொல்லோன்
மாயிரு வடிவிற் கெல்லாம்
உவமையார் உகுக்க வல்லார்?

'மன்மதன் கருவேள்; இவரோ செவ்வேள். ஆயிரங் கோடி மன்மதர்களின் அழகைத் திரட்டி உருட்டியெடுத்தாலும் அது முருகப் பெருமானின் பாத நுனியில் தங்கும் அழகுக்கு ஈடாகாது' என எண்ணினன்.

முருகப் பெருமான் அழகே வடிவானவரன்ரே ?

எழுதரிய அறுமுகமும் அணிநுதலும்
வயிரம் இடை
யிட்டுச் சமைந்தசெஞ் சுட்டிக்
கலன்களும் துங்கநீள்பன்
னிருகருணை விழிமலரும் இலகுபதி
னிருகுழையும்
ரத்னக் குதம்பையும் பத்மக் கரங்களும்
செம்பொன்நூலும்
மொழிபுகழும் உடைமணியும் அரை
வடமும் அடியிணையும்
முத்தச் சதங்கையும் சித்ரச்சிகண்டி
யும் செங்கைவேலும்
முழுதும் அழ கியகுமர கிரிகுமரி
யுடனுருகு
முக்கட் சிவன் பெறுமசற்புத்ர
வும்பர்தம் தம்பிரானே

என்று அருணகிரிநாதர் பாடுகிருர்.

மனத்துக்கும் நோக்குக்கும் வாக்குக்கும் எட்டாத கடவுள், 'மனத்துக்கும் நோக்குக்கும் வாக்குக்கும் எட்டும் வடிவழகு உருவமாய்' வந்து விட்டார்!

வாசித்துக் காணெணுதது பூசித்துக்
கூடொணுதது
வாய் விட்டுப் பேசொணுதது
நெஞ்சினுலே
மாசர்க்குத் தோணுதது நேசர்க்குப்
போரொணுதது
மாயைக்குச் சூழொணுதது விந்துநாத
ஓசைக்குத் தூரமானது மாகத்துக்
கிறதானது
லோகத்துக் காதியானது கண்டு
நாயேன்
யோகத்தைச் சேருமாறு மெய்ஞ்
ஞானத்தைப் போதியாயினி
யூனத்தைப் போடிடாது மயங்கலாமோ

சூரபன்மன் விம்மிதமடைந்தான். அந்தக் காட்சியைக் கோடிக்கணக் கான யுகங்கள் பார்த்தாலும் அவனது மனம் அடங்காது போன்றிருந்தது.

ஒற்றென முன்னம் வந்தோன்
ஒருதனி வேலோன் தன்னைப்
பற்றிகல் இன்றி நின்ற
பராபர முதல்வன் என்றே
சொற்றனன் சொற்ற எல்லாம்
துணிபெனக் கொண்டிலேனல்
இற்றைஇப் பொழுதில் ஈசன்
இவன்எனுந் தன்மை கண்டேன்

சூரபன்மன் யுத்தத்தில் சரணுகதி செய்யவில்லை. வீர லட்சணத்துக்கேற்றபடி உறுதியாகப் போர் புரிந்து வேறு விதத்தில் சரணுகதி செய்து பேறு பெறுன்; போர் முடிவில் அவன் அழியவில்லை. சேவலும் மயிலுமாக ஆக வேண்டும் என்று பண்டைக் காலத்தில் தவம் செய்தவன் சூரபன்மன். அத்தவம் நிறைவு பெறுவதற்கே — சூர் வடிவம் நீங்கி ஐயன் கைஆயுதப் பட்டுச் சேவலும் மயிலுமாவதற்கே — அவன் இனி போர் புரியப் போகிறுன்.

தீயவை புரிந்தா ரேனும்
குமரவேள் திருமுன் உற்ருல்
தூயவ ராகி மேலைத்
தொல்கதி யடைவர் என்கை
ஆயவும் வேண்டுங் கொல்லோ
அடுசமர் இந்நாள் செய்த
மாயையின் மகனும் அன்றே
வரம்பிலா அருள்பெற் றுய்ந்தான்

சேறு படிந்த உடம்புடைய ஒருவன் நீரிற் படிவானுயின் அவன் உடம்பு தூய்மையுறும். அதுபோல் அகத்தில் ஆணவ மலச்சேறுடையவர்களும் ஞான தேசிகராகிய எந்தை கந்தவேள் திருமுன்னுற்ருல் ஆணவச் சேறு நீங்கித் தூயவராகி மேலைத் தொல்கதியடைவர். இதனை ஆராய வேண்டா; சூரபன்மனே போதிய சான்று என்கின்

ரர் கச்சியப்ப சிவாச்சாரியார். கொடிய வனுகிய சூரபன்மன் நெடிது போர் செய்து எல்லேயில்லாத திருவருளுக்கு ஆளானுன்.

முருகப் பெருமானின் விசுவரூபத்தைக் கண்ட சூரபன்மனின் சினம் தணிந்தது. உரோமங்கள் பொடித்தன; கண்ணீர் பெருகியது; எலும்பு உருகியது; அன்பு பெருகியது. அகந்தை நீங்கி ஞானம் உண்டாகியது. க்ஷேமத்தைக் குறிக்கும் வகையில் அவனது வலப் புயமும் வலக் கண்ணும் துடித்தன. 'இது நான் செய்த தவப் பயனே யாகும்' என்று எண்ணிப் பெருமிதம் கொண்டான். ''அருட்கடலாகிய எம் பெருமான் என் மீது போருக்கு வந்திருக்கிறுரே; அதற்கு என்ன நோக்கம் இருக்க முடியும்? இந்த மூடனுக்கு அருள் புரிய வேண்டும் என்ற கருணையிஞல் வந்திருக்கிறுர்'' என்று எண்ணிஞன். 'நான் மிகுந்த பாக்கியசாலி. பரம்பொருளே நேருக்கு நேர் பார்த்த நான் சாதாரணமானவஞ?' என்று இறும்பூது எய்திஞன்.

வான்காணு மறைகாணு மலரோன் காணுன்
மால்காணுன் உருத்திரனும் மறித்துக் காணுன்
நான்காணு இடத்தனைக் காண்போம் என்று
நல்லோர்கள் நவில்கின்ற நலமே

கந்தப் பெருமானைத் தொழுதிட வேண்டும் என்று எண்ணிஞன் சூரபன்மன். அவனுடைய மனம் வணங்கியது. ஆனுல் மானம் வணங்கவில்லை. தடுத்தது. அது ஒன்றே முருகவேளைத் தொழ விடாமல் அவனைத் தடுத்து விட்டது.

சூழுதல் வேண்டும் தாள்கள்
தொழுதிடல் வேண்டும் அங்கைத்
தாழுதல் வேண்டும் சென்னி
துதித்திடல் வேண்டும் தாலு
ஆழுதல் வேண்டும் நிமை
அகன்றுநான் இவற்கு ஆ ளாகி
வாழுதல் வேண்டும் நெஞ்சம்
தடுத்தது மானம் ஒன்றே

(தாலு — நாக்கு)

கச்சியப்பரின் வாக்குத் தித்திக்கிறது.

''வானுளோர் சிறையை நீக்கி
வள்ளலே வணங்கி யிந்த
ஊனுலாம் உயிரைப் போற்றி
அளியர்போல் உறுவன் என்னில்
ஆனதோ எனக்கிதம்மா ஆயிர
கோடி யண்டம்
போனதோர் புகழும் வீரத்
தன்மையும் பொன்றிடாவோ?''

''கூன், குருடு, செவிடு போன்ற ஊனங்கள் எல்லாம் இந்த உடம்போடு போய் விடும். ஆனுல் தன்மானம் இழந்து தவிப்பதால் ஏற்படும் விளைவு ஏழு ஏழு பிறப்புக்கும் தொடர்ந்து வரும்'' என்று சொல்லுகின்றுன் சூரபன்மன். ''நான் தன்மானம் இழந்து வாழமாட்டேன்'' என்று முன்பு அறிவுரை கூறிய இரணியனிடம் சொல்லி விட்டான்.

அந்தத் தன்மானம்தான் இப்போது சூரனை முருகனைத் தொழவொட்டாமல் தடுத்தது. (தொடரும்)






# B·I



## S. S. ரஜுலா

**சென்னையிலிருந்து**

1965 டிசம்பர் 3 — 1965 டிசம்பர் 27

சென்னையிலிருந்து பினாங்கு மற்றும் சிங்கப்பூருக்கு பிரயாணம் செய்ய விரும்பும் பிரயாணிகள் தயவுசெய்து கீழ்க்கண்ட விலாசதாரருக்கு விண்ணப்பிக்கவும்.

**மெஸர்ஸ் பின்னி & கோ., லிமிடெட்**
7. அரமனைக்காரத் தெரு, சென்னை -1

அல்லது கீழ்க்கண்ட கம்பெனியின் அங்கீகாரம் பெற்ற பாஸேஜ் புரோக்கர்களுக்கு விண்ணப்பிக்கவும்

**C. M. குட்டி**
புரொப்ரைட்டர்: குட்டி டிராவல் சர்வீஸ்
38, அங்கப்ப நாயக்கன் தெரு
சென்னை -1

**மெஸர்ஸ் கேரளா டிராவல்ஸ்**
மாஸ்காட் ஹோட்டல்
திருவனந்தபுரம்

**நாகப்பட்டினத்திலிருந்து**

1965 டிசம்பர் 4 — 1965 டிசம்பர் 28

நாகப்பட்டினத்திலிருந்து பினாங்கு மற்றும் சிங்கப்பூருக்குப் பிரயாணம் செய்ய விரும்பும் பிரயாணிகள் தங்களது பிரயாண டிக்கட்டுகளை கீழ்க்கண்ட விலாசத்தில் நேரிடையாகப் பெற்றுக் கொள்ளலாம்.

**மெஸர்ஸ் மதுரா கம்பெனி பிரைவேட் லிமிடெட்**
முதல் லைன் பீச் ரோடு, நாகப்பட்டினம்

பினாங்கு, போர்ட் ஸ்வெட்டன்ஹாம், சிங்கப்பூர் முதலிய இடங்களுக்கு நேரடியாக ஏற்றிச் செல்லவும், சிங்கப்பூரில் கப்பல் மாற்றி ஆஸ்திரேலியா நியூஜிலாந்து துறைமுகங்களுக்கு அனுப்பவும் சரக்குகள் சென்னையிலிருந்தும் நாகப்பட்டினத்திலிருந்தும் ஏற்றுக் கொள்ளப்படும்.

பிரயாணிகள் மற்றும் சாமான்கள் ஏற்றும் விவரங்களுக்குத் தயவுசெய்து எழுதவும்:

**பின்னி & கம்பெனி லிமிடெட்**
7. அரமனைக்காரத் தெரு, சென்னை-1

**மதுரா கம்பெனி பிரைவேட் லிட்.**
முதல் லைன் பீச் ரோடு, நாகப்பட்டினம்

ஏஜெண்டுகள்: பிரிட்டிஷ் இந்தியா ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனி லிமிடெட்

# 57. "வேற்படை என்ன செய்யும்?"

சுவாமியுடன் சமர் புரிவது என்றே ன் சங்கற்பித்து விட்டான். எனி வேலாயுதனின் விசுவரூப தரிச பெற்றது பற்றி அகமகிழ்ச்சியும் ருன். தான் தேவர்களை யெல்லாம் சிறை வைத்தது தவறு என்று அனைவரும் இடித்துரைத்தனரே! அவர்கள் பேச்சைத் தான் கேளாததும் நன்மைக்குத்தான். இல்லாவிடில் தன்னுடன் போரிடப் பரமன் வருவானு, அகிலாண்ட ரூப அமுத தரிசனம் தருவானு என்று எண்ணினுன் சூரபன்மன்.

ஏதமில் அமரர் தம்மை
யான்சிறை செய்த தெல்லாம்
தீதென உரைத்தார் பல்லோர்
அன்னதன் செயற்கை யாலே
வேதமும் அயனும் ஏனை
விண்ணவர் பலரும் காணு
நாதன்இங் கணுகப் பெற்றேன்
நன்றதே ஆன தன்றே

அசுரர் தலைவனுன சூரபன்மன் அமரர்களுக்குச் செய்த தீங்கு இப்பொழுது நன்மையாகி விட்டது.

''தனிமுதல் தலைவராகிய முருகப் பெருமானுடன் இதுகாறும் போர் செய்தேன். இனி நெஞ்சம் தளரமாட்டேன். முருகப் பெருமானுடன் போர் செய்தேன் என்ற பொன்றுப் புகழ் எனக்கு என்றும் இருக்கும்'' என்று எண்ணினுன் சூரபன்மன். ஆதலால் அவன் எம்பெருமானை வணங்கவில்லை.

ஒன்றெரு முதல்வ னுகி
உறைதரு மூர்த்தி முன்னம்
நின்றமர் செய்தேன் இந்நாள்
நெஞ்சினித் தளரேன் அம்மா
நன்றிதோர் பெருமை பெற்றேன்
வீரனும் நானே யானேன்
என்றும் இப்புகழே நிற்கும்
இவ்வுடல் நிற்பதுண்டோ?

சூரன் சுவாமியை வணங்காததற்கு மற்ருெரு காரணமும் உண்டு. தான் முருகனின் கொடியான சேவலும் வாகனமான மயிலுமாக வேண்டும் என்று முன்பிறப்பில் தவம் செய்தவன் சூரபன்மன். ஆகவே, அவன் எம்பெருமானை வணங்கி விட்டால் அவனை எம்பிரான் இரு கூருக்கி — அவன் சேவலும் மயிலும் ஆக்கி — அவன் செய்த தவத்தின் நோக்கத்தை ஈடேற்ற இயலாது.

முன்பு சூரபன்மன் செய்த தவத்தின் நோக்கத்தை நிறைவேற்றக் கருதிய முருகப் பெருமான், அவனை நடுங்க வைத்த பரசுமேசுவர வடிவத்தை நீக்கி, மயில் வாகனத்திலிருந்து பழைய திருவுருவங் கொண்டார். சூரபன்ம

கந்தன் கருணை
திருமுருக கிருபானந்தவாரியார்

னுக்குக் கொடுத்திருந்த ஞானக் கண்ணையும் நீக்கினுர். அவன் பழைய படியே அகம்பாவம் கொண்டான்.

காரண ஞகித் தானே
    கருணையால் எவையுநல்கி
ஆருயிர் முழுது மேவி
    அனைத்தையும் இயற்றி நிற்கும்
பூரண முதல்வன் மைந்தன்
    போதம தளித்து மாற்றிச்
சூரனை மயக்கஞ் செய்யும்
    சூழ்ச்சியோ அரியதன்றே

சூரபன்மனின் ஞானம் நீங்கியதும் பழைய பகையும் சினமும் பொங்கின. மயில் வாகனத்திலிருந்த முருகவேளைக் கண்டான். தணிக்க முடியாத கோபம் கொண்டான்; போர் செய்வதிலே ஊக்கம் கொண்டான். ''என் வலிமை அழகிது'' என்று கையொடு கைதட்டிச் சிரித்தான். ''இப்பாலகனுகிய கள்வன் என்னுடன் போர் செய்வதற்கு அஞ்சித் தான் கற்ற மாயத்தைக் காட்டி என்னை ஏமாற்றி விட்டான். ஆயினும் அந்த மாயத்தை உணர்ந்து நான் அழித்து விட்டேன். அவனை வணங்க வில்லை. மற்ற அமரரை யெல்லாம் நான் வென்றது ஒருபுறமிருக்க இவனுடைய மாயத்தையும் அழித்ததால் எனக்கு நிகரானவர்கள் எவரும் இல்லை. நான் என்றும் அழியாத உடல் மட்டும் பெற்றவன் அல்ல போலும். என் அறிவும் கருத்தும்கூட அழியாமலே இருக்கும் எனக் கண்டு கொண்டேன். இனி இந்தப் பாலகனுடன் போர் செய்து வெல்வேன். அதற்கு முன்னதாக இச்சிறுவனை அழைத்து வந்து இந்தப் பெரும் போரை மூட்டிவிட்ட தேவர்களின் உயிரை யெல்லாம் உண்டு என் சினத்தைத் தணித்துக் கொள்வேன்'' என்று எண்ணினுன் சூரபன்மன். அரிஅயனுதி தேவர்களுடன் போர் செய்ய முடிவு செய்தான்.

சூரபன்மன் ஒரு மாயமந்திரம் ஜபித்து விண்ணும் மண்ணுமாகப் பெரியதோர் இருள் வடிவத்தை எடுத்தான். அவ்வடிவத்தைக் கண்டு கதிரவனும் மயங்கினுன். தேவர்கள், ''இது சூரபன்மன் செய்துள்ள மாயம்'' என்று கலங்கினுர்கள். மாய வடிவத்துள் மறைந்து நின்று ஆரவாரம் செய்த சூரபன்மன் பல தலைகளும், அளவற்ற கரங்களும் கூடிய உருவத்துடன் தேவர்களைக் கொல்லப் பாய்ந்து சென்றுன். தேவர்கள், அந்தக் கனுந்தகாரத்தில் திக்குத்திசை தெரியாமல் சிதறி ஓடினுர்கள்; அரற்றினுர்கள்; அலறினுர்கள். இருளில் தேவர்களின் குரல் கேட்டது; முகம் தெரியவில்லை.

''நண்ணினர்க் கினியாய் ஓலம்!
    ஞானநா யகனே ஓலம்!
பண்ணவர்க் கிறையே ஓலம்!
    பரஞ்சுடர் முதலே ஓலம்!
எண்ணுதற்கரியாய் ஓலம்!
    யாவையும் படைத்தாய் ஓலம்!
கண்ணுதற் பெருமான் நல்கும்
    கடவுளே ஓலம்! ஓலம்!
தேவர்கள் தேவே ஓலம்!
    சிறந்த சிற்பரனே ஓலம்!
மேவலர்க் கிடியே ஓலம்!
    வேற்படை விமலா ஓலம்!
பாவலர்க் கெளியாய் ஓலம்!
    பன்னிரு புயத்தாய் ஓலம்!
மூவரும் ஆகி நின்ற
    மூர்த்தியே ஓலம்! ஓலம்!

''சுவாமி! சூரபன்மன் இருள் உருவில் மறைந்து வந்து எங்களைக் கொல்ல முயலுகின்றுன். அவனிடமிருந்து தப்பியோடவும் நாங்கள் வலிமையற்றவர்களாக இருக்கிறோம். சுவாமி! இனி நாங்கள் எங்கே உய்வோம்? கணப் பொழுதும் தாமதம் செய்யாது அவனைக் கொன்று எங்களைக் காத்தருளும்'' என்று தேவர்கள் வேண்டிக் கொண்டனர். ''என் ஐயனே, இனியும் தாமதிக்கலாகாது. சூரனை இப்போதே கொன்று எங்களை ஆண்டருள வேண்டும்'' என்று மயிலுருக் கொண்டு முருகவேளைத் தாங்கி நின்ற மகபதியும் முறையிட்டுக் கொண்டான்.

முருகக் கடவுள் தேவர்களின் முறையீட்டையும், சூரபன்மன் மாயையின் ஆற்றலையும் திருவுள்ளத்தில் எண்ணினுர். தருணம் வாய்த்துவிட்டது என்று மனம் கொண்டு விட்டார் முருகப் பெருமானுர். தம்முடைய திருக்கரத்தில் இருக்கும் வேற்படையை நோக்கி, ''விரைவில் சூரபன்மனின் மார்பைப் பிளந்து வருவாய்'' என்று மங்கல ஆக்ஞையிட்டு ஏவினுர்.

ஆறுமுகப் பெருமான் ஏவிய வேற்படை ஆயிரங்கோடி சூரியர்களைப் போல் ஒளி விட்டுத் தீ ஜ்வாலைகளை உமிழ்ந்து சென்று சூரபன்மனின் இருள் வடிவத்தை அழித்தது. தன் மாயை அழிந்ததையும் வேற்படை எதிரே வருவதையும் நோக்கிய சூரபன்மன், ''அழியாத மேன்மையுடைய என்னை இந்தப் பாலகன் ஏவிய வேற்படை என்ன செய்யும்?'' என்று ஏளனமாகச் சிரித்தான். மிகுந்த கோபம் கொண்டு, ''நிலவுலகையும், திக்குக்களையும், மேல் கீழ் உலகங்களையும்

…ப்பேன்'' என்று ஆரவாரித்தான். …லே அவன் கடலின் நடுவில் …று அக்கினி போன்ற தளிர்களை … புகை போன்ற இலைகளையும், …தம் போன்ற காய்களையும், …ளிக்க மணி போன்ற பழங்களை … முகில்கள் போன்ற கிளைகளையும் …ய அண்டகூடம் வரையிலும் …ய பெரியதொரு தருவாக உயர்ந்து …ரன். திகந்தம் வரை சிறு கிளைகளை …டியும், பூமியைத் தாங்கும் ஆதி …ம் வரை தேவர்களை ஓட்டியும், …ணிலும் விண்ணிலும் நிழலைப் …ப்பினன். சூரிய சந்திரர்களும், …ட திக்குப் பாலகர்களும், தேவர் …ம் அஞ்சும்படியாக இலக்கம் …சனை அகன்று நின்ற சூரன் …ற மாபெரும் மாமரம் மேருமலை …சந்தாற்போல் கிளைகளை அசைத் …. அந்த அசைவினுல் நிலவுலகங்கள் …ந்தன; தேவர்கள் அஞ்சி ஓடிக் கயிலை …யிலும் மேருகிரியிலும் புகுந்தனர்.

ஆயினும் இதொன்றையும் பொருட் படுத்தாமல் ஐயனின் வேற்படை ஆயிரங்கோடித் தேயு அண்டங்களி லுள்ள அக்கினிகளும் ஒருங்கு சேர்ந் தாற்போல் வெம்மையுடன் சென்றது; சர்வ சங்காரகால உத்திர மூர்த்தி போலவும், ஆதியந்தமில்லா அருணுசல அக்கினி போன்றும் சென்றது. விண் ணும் மண்ணும் கடலும் பிறவுமுள்ள இடங்களில் தீப்பிழம்பை வீசியது. இவ்வாறு சென்ற வேற்படை சூர பன்மனுகிய அந்தக் கொடிய மாமரத் தைச் சங்கரித்தது. மரமும் பற்றி எரிந்தது. சூரவிருட்சத்தை வேல் அழித்தாலும் சூரபன்மன் அழிய வில்லை. மரவடிவம் மரித்த பின்னரும் அமரரின் எதிரியான பழைய வடிவ மும், வச்சிர சரீரமும் பெற்றுன் சூர பன்மன். ''இவ் வேலையும் வேலை எய்தவனையும் வெல்வேன்' என்று வெஞ்சினம் கூறி வாளை உருவி எதிர்த் துச் சீறினன். (தொடரும்)

## …நோத ஆபரேஷன் !

…வியட்நாம் யுத்தத்தில் எத் …யோ விநோதங்கள் என்ருலும் …வற்றையும் தூக்கி அடிப்பதாக …கிறது அந்தச் செய்தி:

…தென்வியட்நாமியக் குடியானவன் …பின் இரவில் தன் குடிசையை … வெளியே வந்தான். அவன் …து திரும்பியதும் மறைந்திருந்த …கொங் கொரில்லா ஒருவன் கைக் …டை அவன் மீது பயங்கரமாக …பிட்டுக் கொண்டே வீசிவிட்டு ஓடி …ந்தான். கைக் குண்டு வெடிக் … குறைந்த பட்சம் பன்னிரண்டு கஜ …ம் வீசப்பட வேண்டும். ஆனுல் …ற்கும் குறைந்த தொலைவிலிருந்து …ப்பட்ட அந்தக் குண்டு வான்சின் …டைய முதுகில் பதிந்து கொண்டது, …வடிக்கவில்லை !

அவனைத் தலைநகர் ஸய்கானுக்கு …வசரம் அவசரமாக அழைத்துப் …றுர்கள். பரிசோதித்துப் பார்த்த …மெரிக்க ராணுவ டாக்டர்கள் குண்டு …வடித்தால் அது, ஓரங்குல நீள …ள்ள இரும்பு ஊசிகளை செகண்டுக்கு …,800 அடி வேகத்தில் பாயுமாறு …ரி இறைக்கும் என்று உணர்ந் …தார்கள். அந்நிலையில் எப்படி ஆப …ரேஷன் செய்து அதனை வெளியே …டுப்பது?

மணல் மூட்டைகளைக் கொண்டு …த்தடி உயரமுள்ள சுவர் எழுப்பி …ர்கள், டாக்டர்களுடைய தற்காப்புக் …க. அதில் கட்டிலின் உயரத்தில் …த்து அங்குலத்துக்கு ஓர் இடைவெளி …ருந்தது. ஜெனரல் ஹம்ப்ரி என்ற அமெரிக்க டாக்டர் ஆப்பரேஷன் செய்ய முன்வந்தார். ஆறு அடி நீள …முள்ள கழியின் நுனியில் ஆப்ப …ரேஷன் கத்தியைப் பொருத்தி அதனை

இயக்குவது எப்படி என்று இரவு முழுதும் கண் விழித்
துப் பழக்கிக் கொண்டார். மறு நாள் காலையில் மணல் மூட்
டைச் சுவரின் இந்தப் பக்கம் இருந்து கொண்டு மறுபுறம் குண்டு
புதையுண்டு கிடந்த நோயாளியின் முதுகில் கழி நுனிக் கத்தி
யால் ஆப்பரேஷன் செய்தார் டாக்டர். கைக் குண்டைச் சுற்றி
லும் மெல்ல நிதானமாகக் கீறினுர். பிறகு மிக நீளமான ஒரு
சாமணத்தைக் கொண்டு மிக ஜாக்கிரதையாகக் குண்டைப்
பற்றி மெல்ல அதனை விடுவித்து எடுத்தார். நல்ல வேளையாகக்
குண்டுக்கு உயிர் இருந்தும் அது வெடிக்கவில்லை. லவலேசம்
பிசகு நேர்ந்து கழி நுனிக்கத்தி படக்கூடாத இடத்தில் பட்
டிருந்தால் வெடிகுண்டு வெடித்து விட்டிருக்கும். ஆனுல் டாக்டரின்
திறமையும் குடியானவன் வான்சின்னின் அதிர்ஷ்டமும் சேர்ந்து
அவனைக் காப்பாற்றி விட்டன. குண்டை மணல் நிறைந்த ஒரு
பெட்டியில் வைத்துப் பத்திரமாய் எடுத்துப் போய் நகர்ப்புறத்
துக்கு வெளியே அதனை அழித்தார்கள், அத்துறையில் நிபு
ணர்கள்! குண்டு நீக்கப்பட்ட பின்னர் சௌக்கியமாக நிம்மதி
யாகத் தூங்கத் தொடங்கினுன் வான்சின்.

களம் கண்டேன்



# அதோ லாகூர்



பாகிஸ்தானுக்குத் தாயகமென்று சொல்ல ஏதாவது ஓர் ஊர் உண்டென்று சொன்னால் அதை லாகூர் என்று கூறுவார்கள் விஷயமறிந்தவர்கள். 'பாகிஸ்தானம்' என்ற சொல் பிறந்ததே இந்த ஊரில்தான்.

1940-ல் காலஞ்சென்ற முகமதலி ஜின்னா, லாகூர் லீக் மகாநாட்டில் பேசினார். 'அடைந்தால் பாகிஸ்தான் — இல்லையேல் கபர்ஸ்தான்' என்று பேசினார். இந்த லட்சியத்தை அடைய 'வெள்ளித் தோட்டாக்கள்' தேவை என்றும் கேட்டார். உடனே பணம் ஏராளமாகக் குவிந்தது.

1942-ல் ஜின்னாவின் வலக் கரமெனக் கருதப்பட்ட லியாகத் அலிகான், "பாகிஸ்தானத்தின் தலைநகரம் லாகூர்தான்" என்று பேசினார். அதோடு தாம் லாகூரிலேயே இனி வசிக்கப் போவதாகவும் அறிவித்தார். பிறகு அப்படியே செய்தாரா என்பது ஆண்டவனுக்குத்தான் வெளிச்சம் !

இத்தகைய சரித்திரப் பிரசித்தி பெற்ற ஊர் லாகூர். இந்த ஊரின் தெற்கே ரவி நதியின் கால்வாய் ஒன்று ஓடுகிறது. இக் கால்வாய்க்கு இச்சோகில் கால்வாய் என்று பெயர். இந்தக் கால்வாயின் தென் பகுதிக் கரையின் மேல் டோக்ராய் என்ற நகரம் இருக்கிறது.

டோக்ராய் என்ற இடத்தை நகரம் என்று மற்றவர்கள் கூறினாலும் என்னால் அதை ஏற்க முடியவில்லை. தமிழகத்திலுள்ள ஒரு மேஜர் பஞ்சாயத்துக் கிராமம் போலவே எனக்கு டோக்ராய் பட்டது. பெயர் எப்படியோ போகட்டும். கிராமத்தின் அமைப்பு கவர்ச்சியாக இருந்தது. ஊருக்கு முக்கியத் தேவையான தண்ணீரைக் கொடுக்கக் கூப்பி[டு] தூரத்தில் கால்வாய். நவீன வசதிக்[கு] மின்சாரம். சுகாதாரமும் இங்கு உண்டெ[ன்]பதை எடுத்தோதும் அகண்ட வீதிகள்—சும[ா]ரான வீடுகள். நாகரிகச் சின்னங்களாக[த்] தபாலாபீஸ், டெலிபோன், முடியலங்கார[க்] கடைகள், காதைச் செவிடாக்கும் ரேடியோ[க்] கடைகள், தெம்பு ஊட்ட எண்ணற்[ற] சாயாக் கடைகள்—இப்படியாகத் திரும்பி[ய] பக்கமெல்லாம் கடை கண்ணிகள்.

இந்த ஊருக்கும் லாகூருக்கும் உள்ள தூர[ம்] சுமார் ஏழு மைல்கள். ஏழு மைல் என்[று] கூறுவது கூட மிகை என்று கருதுகிறேன். ஏனெனில், மேலான இடமொன்றிலிருந்[து] பார்த்தால் லாகூர்ப் பட்டண ரேடியோ நிலையத்தின் ஏரியல் கோபுரம் தெரிகிறது. பார்வையைச் சிறிது மேற்குப் புறமாகத் திருப்பினால் பிரசித்தி பெற்ற பாட்டா கம்பெனியின் தொழிற்சாலையும் அதன் புகைக் கூண்டும் பளிச்சிடுகின்றன. புகைக் கூண்டு கம்பீரமாக நிற்கிறது. ஆனால் புகை மட்டும் வரவில்லை.

இந்த இடத்தைப் பிடிக்க நடந்திருக்கும் போர் எல்லாப் போர்களிலும் முதலிடம் பெறத் தக்கது. அங்குலத்துக்கு அங்குலம் பாகிஸ்தானியர் போராடியிருக்கிறார்கள். நமது ஜவான்கள் இதற்குச் சளைக்கவில்லை.

புது தில்லியில் போப்பாண்டவர் ...திதியோடு கவர்னர் ஜெனரல்.

...வநகர் மகாராஜாவுடன் ராஜாஜி ...றிருக்கிறார்.

கவர்னர் ஜெனரல் ராஜாஜி விமா...த்திலிருந்து இறங்குகிறார்.

லண்டனுக்குப் புறப்பட்ட நேருஜி ...ப் பாலம் விமான நிலையத்தில் ...யனுப்பிய ராஜாஜியும், படேலும் ...ற்றும் பெருந் தலைவர்களும்.

ராணுவத்தினர் அளிக்கும் ராணுவ ...யாதையை ஏற்கிறார் ராஜாஜி.

பாட்டுக்கொரு புலவனைக் கௌர...க்கும் விழாவில் பேராசிரியர் கல்கி...ம், தலைவர் ராஜாஜியும்.







# கந்தன் கருணை



திருமுருக கிருபானந்தவாரியார்

## 58. மயூரமும் குக்குடமும்

பல்லிக்குப் பயந்த ஈ பல இடங்களில் மாறி மாறி உட்காரும்; கடைசியாகப் பல்லியின் வாயிலேயே போய் உட்கார்ந்து விடும். அது போன்று ஆகிவிட்டான் சூரபன்மன்; ஆறுமுகப் பெருமானை நேருக்குநேராக நெருங்கி எதிர்த்துத் தன் அழிவைத் தேடிக் கொண்டான்.

சரவணபவன் விடுத்த சக்தி ஆயுதம் சூரனுடைய மார்பைப் பிளந்தது; உடம்பை இரு துண்டாக்கிக் கடலில் வீழ்த்தியது. வேதங்கள் வாழ்த்தின; தேவர்கள் பூமழை சொரிந்தனர்; வேற்படை அப்பூமழை நடுவில் பாய்ந்து சென்று தேவகங்கையில் மூழ்கிப் புனிதம் பெற்று, அங்கிருந்து திரும்பிச் செவ்வேளின் செங்கரத்தில் வந்து அமர்ந்தது.

மார்பு பிளந்து உடல் இரு துண்டான பின்னரும்கூட சூரபன்மன் சாக வில்லை.

> கடற்ச லந்தனி லேயொளி சூரனை
> உடற்ப குந்திரு கூறென வேயது
> கதித்தெ ழுந்தொரு சேவலு மாமயில்
> விடும்வேலா

சூரபன்மனின் வச்சிர யாக்கை பிளந்தவுடனே ஒரு பாதி சேவலாகவும் மற்றொரு பாதி மயிலாகவும் ஆயின; அந்த நிலையிலும் சூரபன்மன் விட வில்லை. மாணிக்க மரகத மலையொன்று கால்களையும் சிறகுகளையும் பெற்றுப் பறந்து செல்வது போல ஆறுமுக வள்ளலை எதிர்த்துப் போர் செய்யும் செருக்குடன் வந்தான்.

சூரபன்மன் என்பது ஆணவ மலம்; செம்பிற்குக் களிம்பு போலும், அரிசிக் குத் தவிடு போலும் ஆணவ மலம் உயிருக்கு அநாதியேயுண்டு.

> நெல்லிற் குமியும் நிகழ்செம்பி
> னிற்களிம்பும்
> சொல்லிற் புதிதன்று தொன்மையே
> - வல்லி
> மலகன்ம மன்றுளவாம் வள்ளலாற்
> பொன்வாள்
> அலர்சோகஞ் செய்கமலத் தாம்

ஆணவ மலத்தை ஞானத்தால் வலி கெடச் செய்வது சூரசம்ஹாரம்; ஆணவ மலம் ஒரு போதும் அழியாது; அதன் ஆற்றல் கெடும். நான் என்ற அகப்பற்று அகங்காரம். எனது என்ற புறப்பற்று மமகாரம்.

...ன் எனதென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்
...யர்ந்த உலகம் புகும்''

...ன்பது திருக்குறள்.

உல்லாச நிராகுல யோக விதச்
சல்லாப விநோதனும் நீ அலையோ
எல்லாம் அற என்னை இழந்த நலம்
சொல்லாய் முருகா! சுரபூபதியே!

...ன்பது கந்தரநுபூதி.

நான் எனது என்ற இருவகைப் ...ற்றும் அற்றபின் பொறிபுலன்களை ...டுக்கி அருளநுபவத்தில் ஒடுங்குதல் ...வண்டும்.

ஐந்தில் ஒடுங்கில் அகலிட மாவது
ஐந்தில் ஒடுங்கில் அருந்தவ மாவது
ஐந்தில் ஒடுங்கில் அரன்பத மாவது
ஐந்தில் ஒடுங்கில் அருளுடை யாரே—
- திருமந்திரம்

ஆமையைப் போல் ஐம்புலனை ...டக்கிய இடத்தில் ஒரு பெரிய சுகம் ...ரம்பமாகின்றது. ஒரு மனிதன் வெளி ...யிலே கண்டவாறு அலைந்து திரிகின்ற ...பாது துன்பம் உண்டாகும். வீட் ...டிலே போய் நிழலில் சற்று ஆறுத ...லாக அமர்ந்தவுடன் மகிழ்ச்சியாக இருக்கின்றதல்லவா? அது போல் புலன்கள் வெளிப்பட்டு உழலும்போது ...கவலை உண்டாகிறது. அவைகளை அக ...முகப்படுத்தும் போது ஆறுதல் உண் ...டாகிறது. இதுவே மோட்சமாகிய பேரானந்தம்.

சூரபன்மனின் ஒரு பாதி 'நான்' என்கிற அகங்காரம். மற்றொரு பாதி 'எனது' என்கிற மமகாரம். இவ்விரு பாதிகளின் வடிவான மயிலும் சேவலு மாகிய சூரபன்மன் முருகவேளை எதிர்த்து வருவதைக் கண்ட தேவர்கள் அஞ்சினர். ஆறுமுகக் கடவுள் சூரபன் மன் மீது அருள் நோக்கம் செய்தார். ஞானிகள் பார்வையால் இரும்பு பொன்னாவது போல, அத்திருவருட் பார்வையால் சூரபன்மன் பகைமை நீங்கி ஞானம் பொருந்திய மனத்தின ...ய் நின்றான். அப்பொழுது கந்தவேள் தமது திருவருளால் ஞானம் பெற்ற கோழியை நோக்கி, ''நீ நமது தேரில் கொடியாக இருந்து கூவுவாய்'' என்று பணித்தருளினார். அவ்வாறே கோழி அவர் தேரில் ஏறிக் கொடியாக நின்று கம்பீரமாகக் கூவியது. பின்பு பெருமான் இந்திரனாகிய மயிலினின் ...றும் இறங்கி சூரபன்மனாகிய மயிலின் மீது ஏறி உலகெங்கணும் பவனிவருவா ராயினார். இந்திரனை ரட்சிக்கவே தோன்றியவர் கந்தன்; சூரனைச் சிட்சிக்கவே தோன்றியவர் கந்தன். அவ்வாறிருந்தும் அவர் இந்திரன் சூரன் இருவர்க்கும் ஒரு போல் தம் வாகனமா யிருக்கும் அந் தஸ்து தந்த அருமையைப் பாருங்கள்! கல்லார்க்கும், கற்றவர்க்கும், பொல் லார்க்கும் நல்லவர்க்கும் ஒரே பொது வான பாரபட்சமற்ற பரங்கருணை புரிபவரன்றோ பரமன்? சூரமயில் சுவாமியைத் தாங்கிய பெருமையில் உலகெங்கும் சுற்றி மீண்டும் வீர மகேந்திர புரியின் செருக்களத்தை அடைந்தது. எதிரியாக இருந்த சூரன் இன்று மயூரமாகி முருகனைத் தாங்கிய தும், குக்குடமாகி அவனது ஜயக்கொடி யாகத் திகழ்ந்ததையும் சுவாமியுடைய பேரருளின் எல்லை என்றே அல்லவா கூற வேண்டும்? அவனுக்கு இந்தப் பெரும் பதவி தந்ததால், யாருடைய துயர் தீரும் பொருட்டு ஐயன் அவ தரித்தாரோ அந்த இந்திரனை வாகனப் பதவியிலிருந்து நீக்கினார்!

முன்பு மயில் உருவாயும், சேவல் உருவாயும் நின்ற இந்திரனையும் அக் கினியையும் நோக்கி, பழைய வடிவு கொள்ளும்படி அருளிச் செய்தார் ஆறுமுகசுவாமி. அவர்கள் பழைய உருப்பெற்று, இடைக்காலத்தில் உற்ற தொல்லை எல்லாம் நீங்கி எல்லையிலா தான் இணையடி தொழுது துதித்து நின்றார்கள்.

உயிர்களாகிய நாம் கட்டுண்டு
கிடக்கின்றோம். அதனால் பசு எனப்பட்
டோம். ''பச்'' என்றால் கட்டு. கட்டுப்
பட்டதனால் பசு. நமக்குத் தலைவன்
பசுபதிநாதர்.
பசுவை ஒரு கயிற்றால் கட்டு
வார்கள். யானையை இரு சங்கிலி
களால் கட்டுவார்கள். குதிரையை
மூன்று கயிறுகளால் கட்டுவார்கள்.
ஊஞ்சலை நான்கு சங்கிலிகளால் கட்டு
வார்கள். ஆன்மாக்களாகிய நாம்
ஆணவம், கன்மம், மாயை, மாயேயம்,
திரோதம் என்ற ஐந்து சங்கிலிகளால்
கட்டப்பட்டுச் சிறையில் அடைக்கப்
பட்டிருக்கிறோம்.
உயிர்களாகிய நாம் சுவர்க்கம்,
பூதலம், நரகம் என்ற மூன்று இடங்
களுக்கும் மாறி மாறிச் செல்வதும் வரு
வதுமாகவே பல்லூழி காலமாக ஆடிக்
கொண்டிருக்கிறோம். எண்ணில்லாத
காலமாக ஆன்மாக்கள் இறப்பதும்
பிறப்பதுமாகவே இருக்கின்றன. இவ்
வாறு மாறி மாறிப் பிறந்து இறந்து
வருவது பெரிதும் வெட்கப்படக் கூடி
யது. ஒரு வீட்டுக்கு அடிக்கடி செல்ல
வெட்கப்படுவது போல், இந்தப்

## வாழ்க்கையின் செல்வம்

குழந்தைகாள், உங்கள் நண்பர்களைப் பற்றிக் கவனமாயிருங்கள். நட்பைப் போல் ஒரு செல்வமுமில்லை. மற்றதெல்லாம் பொய்; காற்றைப்போல் பறந்துபோகும். அன்பும் நட்புமே வாழ்க்கையில் பெருத்த செல்வம். — ராஜாஜி

பூமியில் ஓயாது பிறப்பதற்கு வெட்கப்பட வேண்டாமா? ஆகவே, ஆண்டவன் நம் ஆன்மாவைச் சரீரச் சிறையினின்று எப்போது மீட்பான் என்று எண்ண வேண்டும்.

**"ஏழையின் இரட்டைவினை யாய**
**தொருடற் சிறை**
**யிராமல் விடுவித்தருள் நியாயக்**
**காரனும்"**

என்று அருணைமுனிவரும் திருவகுப்பில் கூறுகிறார்.

இந்த உடம்பாக இருக்கிற சிறையிலிருந்து எம்பெருமான் அருணகிரிநாதரை விடுதலை செய்தாராம். விடுதலை கொடுப்பது யார்? நியாயாதிபதி. நீதிபதிதானே விடுதலை கொடுக்க வேண்டும்?

சரீரத்தில் சிறைப்பட்டிருக்கும் ஆன்மாவாகிய கொடிக்கு இறைவனுடைய திருவடித் தாமரையே கொழுகொம்பாகும். இறைவனடி சேர்ந்தார்க்கே துன்ப நீக்கமும் இன்ப ஆக்கமும் உண்டாகும். நாம் இறவாமல் இருக்க வேண்டுமென்றால் பிறவாமல் இருக்க வேண்டும். ஆதலால் தான் பெரியவர்கள் பிறவா வரம் வேண்டும் என்று ஆண்டவனிடம் வேண்டிக் கொண்டார்கள்.

உயிர்களுக்கு உறுதுணையாக விளங்குபவன் கந்தன். ஆன்மா பற்றும் கொழுகொம்பும் அவனே. ஆன்மாவைக் கட்டி வைக்க வேண்டிய 'கந்து' அவன் என்பதாலேயே கந்தன் எனப்படுகிறான். அவனது திருவடி சேர்ந்தாரே பிறவிப் பெருங்கடல் நீந்துவர். இறைவனடி சேர்ந்தார்க்கு யாண்டும் இடர் எய்தாது.

**"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்**
**இறைவனடி சேராதார்"** —திருக்குறள்

**"காவிக் கமலக் கழலுடன்**
**சேர்த்தெனைக் காத்தருள்வாய்"**
—கந்தர் அலங்காரம்

ஒரு மூங்கிற் கொம்பானது இருபு[...]மும் தீப்பிடித்து எரிகிறது. அ[...]னிடையில் ஓர் எறும்பு அகப்பட்டு[...] கொண்டது. எந்தப் புறமும் போ[...] முடியவில்லை. என் செய்யும்? அ[...] போல், மனை மக்கள் சுற்றம் என்னும் மாயா வலையைக் கடக்க அறியாமல் ஆன்மா துன்புறுகின்றது. இதனை மாணிக்கவாசகர் கூறுகின்றார்.

**இருதலைக் கொள்ளியி னுள்ளெறும்**
**பொத்து நினைப்பிரிந்த**
**விரிதலை யேனை விடுதிகண்**
**டாய்வியன் மூவுலகுக்**
**கொருதலை வாமன்னு முத்தர**
**கோசமங் கைக்கரசே**
**பொருதலை மூவிலை வேல்வல**
**னேந்திப் பொலிபவனே.**

திருமண வீட்டின்முன் பந்தரிடுவார்கள். அப்பந்தக்காலைப் பிள்ளைகள் பிடித்துச் சுழன்று விளையாடும். குழந்தைகள் ஆளுக்கொரு தூணைப் பற்றிக் கொள்ளும். ஒரு பிள்ளைக்குத் தூண் கிடைக்கவில்லை. தூணைப் பற்றாமல் அது பந்தக் காலைச் சுழன்று சுற்றியது. அதனால் மயக்கமுற்றுக் கீழே விழுந்து காயமுற்றது. தூணைப் பற்றிக்கொண்டு சுற்றுகின்ற குழந்தைகள் மயக்கம் வந்தாலும் தூணைப் பற்றியிருப்பதனால் அதனுடனேயே ஒடுங்கிச் சார்ந்து கீழே விழாமல் உய்வு பெறுகின்றன. அது போல், இறைவன் திருவடியைப் பற்றிக் கொண்ட ஆன்மாக்களுக்கு, உலக வாழ்வில் மாயையால் மயக்கம் ஏற்படினும் உய்வு கிடைக்கும். இறைவனுடைய திருவடியைப் பற்றாமல் திரியும் ஆன்மாக்கட்கு உய்வு இல்லை. குடிமகன் ஒருவன் அரசனிடம் குற்றத்தை ஒப்புக் கொண்டால், அவனுக்கு விடுதலை கிடைக்கும். எல்லோருக்கும் தலைவனாகிய ஆண்டவனிடம் குற்றத்தை ஒப்புக் கொண்டால், இச்சரீரம் என்ற சிறையிலிருந்து நமக்கு விடுதலை தருவார். இறைவனின் ஞானசக்தி ஆன்மாவுக்கு உடற் சிறையிலிருந்து விடுதலை தருகிறது.

இதனைத்தான் ஞான சக்தியான முருகப் பெருமானது வேற்படை சூரபன்மனுடைய உடலை அழித்த திருவரலாறு குறிப்பிடுகிறது. வேலாயுதம் அவுண மன்னனின் அகந்தையை அழித்தது; அகந்தை நிறைந்த அசுர உடலை அழித்தது. அழுக்கு நீர் கங்கையில் கலந்த பிறகு தானும் கங்கையாகவே மாறிவிடுகிறது. அதே போல் முருகனருட் கடல் மூழ்கி அசுர சரீரம் நீங்கியபின் சேவலும் மயிலுமானான் சூரபன்மன். (தொடரும்)

...டன் பிரத்தியேக அமைப்புடன் தயாரிக்கப்பட்டிருந்த ஒரு பெரிய பெட்டியில் லக்கை ...காரும் பாணியில் வைத்துக் கட்டிக் ...றது வசதிக்காகப் பெட்டியில் இரண்டொரு துவாரங்களைப் போட்டு, 'தூதரகத் ...பால்' என்ற முறையில் பரிசோதனை ...க்கு உட்படுத்தாமல் கெய்ரோவுக்குப் ...றப்படத் தயாராயிருந்த விமானத்தில் ...ற்றி விட்டார்கள்.

லக்கின் அதிருஷ்டம் விமானம் தாமதமாகப் புறப்படுவதில் இணைந்திருந்தது. விமானம் புறப்படச் சில நிமிடங்களுக்கு முன் லக்கின் மயக்கம் ஓரளவு எதிர்பாரா ...ல் குறைந்துவிடவே அவன் பெட்டிக்குள் ...ருந்தவாறே முனகியிருக்கிறான். விமானத்தில் சாமான்கள் ஏற்றிக் கொண்டிருந்த சிப்பந்திகளின் செவிகளில் இந்த முனகல் சத்தம் விழுந்தது. அவர்கள் பயந்து போய் விமான தள அதிகாரிகளுக்குத் தெரிவித்தபோது, விமானம் புறப்படுவதற்காகக் காத்திருந்த எகிப்தியத் தூதராலய உத்தியோகஸ்தர்கள் பதற்றமடைந்து ஏதோ சங்கேதக் கருவிகள் தவறுதலாகப் பெட்டியில் வைக்கப்பட்டு விட்டன என்று சொல்லி அந்தப் பெட்டியை அவசரமாகத் திருப்பி எடுத்துக் கொண்டு காரில் தப்பிப் போக முயன்றார்கள். விமான தள அதிகாரிகளின் சந்தேகம் அதிகரிக்கவே அவர்கள் போலீசுக்குத் தகவல் கொடுத்தார்கள். தப்ப முயன்ற எகிப்து அதிகாரிகள் மாட்டிக் கொண்டபோதுதான் பெட்டியிலிருந்து லக் மீட்கப்பட்டான். அவனுக்கு விடுதலை அளித்துவிட்டு இத்தாலிய சர்க்கார் சம்பந்தப்பட்ட எகிப்திய தூதராலய அதிகாரிகளை அவர்கள் நாட்டுக்குத் திருப்பி அனுப்பி வைத்தது. லக் அதிருஷ்டசாலிதான்!

லக் தங்கள் உதவியைப் பெற்றுக் கொண்டு தங்களுக்கு எதிராகவே வேறு நாட்டுக்கு உளவாளியாக இருக்கிறானோ என்ற சந்தேகம் எகிப்தியர்களுக்கு ஏற்பட்டிருந்தால் அதில் வியப்பொன்றுமில்லை. சரித்திரத்தில் இப்படிப்பட்ட இரட்டை உளவாளிகள் (Double Agent) நிறைய இடம் பெற்றிருக்கிறார்கள். உதாரணமாக, என். டி.—98 என்று குறிப்பிடப்படும் ஜெர்மானிய உளவாளி அதே சமயத்தில் அமெரிக்க நாட்டின் உளவாளியாகவும் பணியாற்றினான். அமெரிக்க அதிகாரிகள் கொடுத்த நம்பும்படியான பொய்த்தகவலை இரண்டாவது உலகப் போரின்போது தன்னை அமெரிக்காவுக்கு அனுப்பிவைத்த நாஜிகளுக்கு அனுப்பினான். குரில் தீவுகளை 1944ம் ஆண்டு பிப்ரவரி மாதம் அமெரிக்கப் படைகள் தாக்கவிருக்கின்றன என்ற செய்தியை அவன் அனுப்பி வைத்தான். அதற்கு ஜெர்மானியர்கள் தயாராக விருந்தார்கள். ஆனால் அதே நேரத்தில் அமெரிக்கர்கள் மார்ஷல் தீவுகளைத் தாக்கி வெற்றி பெற்றார்கள்!

உயிருக்கு ஆபத்தான இந்த உளவுக் கலைக்கு இப்போது மகத்தான உதவியாக விஞ்ஞானம் அளித்திருப்பது ஆகாய காமிராக்கள். உளவாளிகள் ஊடுருவிப் போய் என்னென்ன தொழிற்சாலைகள், கிடங்குகள் எங்கெங்கு இருக்கின்றன, அவைகளை எப்படிக் குண்டு வீச்சுக்கு இலக்காக்கலாம் என்று தெரிந்துகொள்வதற்குப் பதிலாக இந்த ஆகாயக் காமிராக்கள் பல மைல்கள் உயரத்தில் பறக்கும் விமானங்களிலிருந்த வாறு கீழே இருக்கும் இடங்களைத் துல்லியமாகப் படம் பிடித்துக் கொடுத்து விடுகின்றன.



''பாடிறுல் உடம்பிலுள்ள ரத்தம் சூடாகிறது என்று ஆராய்ச்சியாளர்கள் கண்டு பிடித்திருக்கிறார்களாமே!''

''அதென்னமோ! சிலபேர் பாடிறு என் ரத்தம் கொதிக்கிறது!''

இன்று வெகு நேர்த்தியாக முன்னேறியிருக்கும் ஆகாயப் படப்பிடிப்புக் கலைக்கு வித்திட்ட நபர் ஷெர்மன் மில்ஸ் ஃபேர் சைல்ட் என்ற அமெரிக்கர். 1918ம் ஆண்டில் அவர் பழைய காமிராக்களைப் பிரித்துப் போட்டுப் பரிசீலனை செய்துகொண்டிருந்த போது சில புதிய கருத்துக்கள் தோன்றவே, விமானத்திலிருந்து படம் பிடிக்கலாம் என்று சொன்னார். ஆனால் அவர் விளக்கங்களை உடனடியாக யாரும் சிரத்தையுடன் கவனிக்கவில்லை. இரண்டு ஆண்டுகள் கழித்துத்தான் தரைப் படை அதிகாரி ஒருவர் அவர் காமிராவை விமானத்தில் வைத்துப் பரிசோதிக்க முன்வந்தார். அப்படி எடுத்த படங்கள் பிரமிப்பூட்டத் தக்கவையாக இருந்தன. இதற்குப் பிறகு இத்தகைய காமிராக்கள் தயாரிக்க ஃபேர்சைல்ட் ஸ்தாபனம் உருவாயிற்று. இரண்டாவது உலகப் போரின்போது அவருடைய காமிராக்கள் வெகுவாக முன்னேற்றம் கண்டிருந்தன. ஐந்து லட்சம் டாலர் பெறுமானத்துக்கு நூற்றி நாற்பத்தி நான்கு அங்குல நீளமுள்ள லென்ஸ் பொருத்திய காமிராவுடன் நியூயார்க் நகரின் மேலே ஐம்பதினாயிரம் அடி உயரத்தில் பறந்து போய்ப் பரீட்சார்த்தமாக எடுத்த போட்டோவில் அந்த விநாடியில் வாஷிங்டன் சதுக்கத்தில் எத்தனை பேர்கள் நடந்து கொண்டிருந்தார்கள் என்று எண்ண முடிந்ததாம்!

இன்று இதைவிடச் சிறந்த சக்தி வாய்ந்த காமிராக்கள் உலகைச் சுற்றி வரும் விண்வெளிக் கப்பல்களிலேயே பொருத்தப்பட்டு, உலகின் பல பாகங்களையும் விண்வெளியிலிருந்து படம் பிடித்துக் கொடுக்கின்றன. மனித உளவாளிகள் சில சந்தர்ப்பங்களில் தோல்வியடையலாம். ஆனால் இந்தக் காமிராக் கண் உளவாளியிடமிருந்து எந்த ரகசியமுமே தப்ப முடியாது என்ற நிலை இன்று உலகில் ஏற்பட்டு விட்டது!



# கந்தன் கருணை

திருமுருக கிருபானந்தவாரியார்

## 59. ஞானோபதேசம்

கடவுளுக்கு மூன்று இலக்கணங்கள். உண்மை, அறிவு, இன்பம், சத்—சித்—ஆனந்தம் என்று இறைவனது இயல்பைக் குறிப்பர். இறைவனுக்கு இலக்கணங்கள் மூன்று இருப்பது போன்றே தமிழ் மொழிக்கு இயல், இசை, நாடகம் என மூன்று துறைகள் உண்டு. இயல் — சத்து; இசை — சித்து; நாடகம் ஆனந்தம். இயலாகிய இலக்கிய இலக்கணங்களைப் படித்தவர் பலர் இருக்கலாம். இசை வித்வான்கள் சிலர்தான் இருப்பார்கள். ஏனெனில், இசை இரத்தத்தில் ஊறி வரவேண்டும். ஆகவே, இயலைவிட இசைக்குப் பெருமை அதிகம்.

இசையில் இயல் சேர்ந்திருக்கும். நாடகத்திலோ இயலும் இசையும் சேர்ந்திருக்கும். ராடகம் என்பது ஆனந்தம். நடிகர்களுக்கெல்லாம் ராஜா நடராஜர். அவருடைய ஆட்டத்துக்குப் பின்னணி கிடையாது. ஆட ஆரம்பித்த தேதியும் இல்லை. முடிவுத் தேதியும் இல்லை. அதுபோல,

இயல்பாக ஆடுவது மயில். தோகையை விரித்து, 'ஓம்' என்ற பிரணவ வடிவத் தைக் காட்டி ஆடுகிறது மயில்.

வாதினை யடர்ந்த வேல்விழியர் தங்கள்
மாயம தொழிந்து
தெளியேனே
மாமலர்கள் கொண்டு மாலைகள் புனைந்து
மாபத மணிந்து
பணியேனே
ஆதியொடும் அந்த மாகிய நலங்கள்
ஆறுமுகமென்று
தெரியேனே
ஆனதனி மந்த்ர ரூபநிலை கொண்ட
தாடுமயி லென்ப
தறியேனே
நாதமொடு விந்து வானவுடல் கொண்டு
திரிவேனே
நானில மலைந்து
நாகமணி கின்ற நாதநிலை கண்டு
நாடியதில் நின்று
தொழுகேனே
சோதியுணர் கின்ற வாழ்வுசிவ மென்ற
சோகமது தந்து
எனையாள்வாய்
சூர்குலம் வென்று வாகையொடு சென்று
சோலைமலை நின்ற
பெருமாளே

'ஆன' என்றால் வேதங்களுக்கெல் லாம் உற்பத்தி ஸ்தானமான என்று பொருள். பறவை இனமெல்லாம் 'கூ', 'மே', 'பே' என்றுதான் கத்தும். ஒரே ஒரு பட்சி மட்டும் 'ஓ'வென்று கத்தும். சேவல், ''கொக்கறுகோ'' என்று கூவும். கொக்கு என்றால் மாமரம். கொக்கு— அறுகோ என்றால் மாமரத்தையறுத்த கோ என்று பொருள். மாமரமாக வந்த சூர வடிவத்தை வென்ற வீர முருக னுக்குச் சேவல் போற்றி கூறும். சேவல், பிரணவத்தை நாத வடிவமாக ஒலிக் கிறது. மயில் விந்து வடிவத்திலும், சேவல் நாத வடிவத்திலும் இருக்கின் றன. வேல் — கலை. இவற்றுக்கெல்லாம் தலைவன் முருகன்.

அருணகிரிநாதர் பாடுகிறார்:

நாத விந்துக லாதீ நமோநம
வேத மந்த்ரசொ ரூபா நமோநம
ஞான பண்டித ஸாமீ நமோநம
வெகுகோடி
நாம சம்புகு மாரா நமோநம
போக அந்தரி பாலா நமோநம
நாக பந்தம யூரா நமோநம
பரசூரர்
சேத தண்டவி நோதா நமோநம
கீத கிண்கிணி பாதா நமோநம
தீர சம்ப்ரம வீரா நமோநம
கிரிராஜ
தீப மங்கள ஜோதி நமோநம
தூய அம்பல லீலா நமோநம
தேவ குஞ்சரி பாகா நமோநம
அருள்தாராய்

மயில் தோகை விரித்து ஆடுவது 'ஓம்' என்ற எழுத்துருவம். சேவல் கூவுவது அருவம். இந்த இரண்டுக்கும் இடை யில் இருக்கின்றார் கந்தவேள். உரு வன்று; அருவன்று என்று உணர்த்து கிறார் அவர். மயில் இருண்ட மேகத் தைக் கண்டு மகிழும். அதனால் அது இருள். சேவல் செஞ்ஞாயிற்றைக் கண்டு மகிழும். அதனால் ஒளி. இருள், ஒளி என்ற இரண்டுக்கும் இடையில் இருக் கின்றார் கந்தவேள். இருளன்று; ஒளி யன்று என்று உணர்த்துகின்றார். அநு பூதிபெற்ற செல்வராகிய அருணகிரிநாத ரின் அநுபவத்தைக் காண்போம்.

முருகன் தனிவேல் முனி
நங்குரு என்று
அருள்கொண்டு அறியார்
அறியும் தரமோ?
உருஅன்று அருஅன்று
உளதன்று இலதன்று
இருள்அன்று ஒளிஅன்று
என நின்றதுவே
(கந்தரநுபூதி)

மயில் பச்சை நிறம்; அதன் சரீரம் பச்சை; கழுத்து நீலம். பரமேசுவர னுக்கு நீலகண்டன் என்று பெயர். சிவபெருமானின் நீலகண்டம் விஷத்தை அடக்கியது. மயிலும் விஷத்தை அடக் கும். மயிலை நினைப்பவர்க்கு விஷ பயம் இல்லை.

சுப்பிரமணியர் அவதாரம் செய்தது சூர சம்ஹாரத்துக்காக அல்ல. இந்தி ராணியின் மாங்கல்யத்தை ரட்சிக்க வந்தார். ஆகவே, ''கந்தன் சருணை'' படித்த பெண்கள் தீர்க்க சுமங்கலி களாக இருப்பார்கள். திருமாங்கல் யத்தை ரட்சிக்கவந்த தெய்வம் முருகன். சூரபன்மனுக்கு வேறு வடிவம் தந்து, இந்திரனுக்கு உயிரும் தந்த தெய்வம் முருகன்.

அகந்தை நீங்கியபின், சேவலும் மயிலுமான சூரபன்மன் மீது கருணை காட்டிய கந்தவேள், மயிலை ஊர்தியாகக் கொண்டு ஆரோகணித்தருளினர்.

முந்துதமிழ் மாலை கோடிக் கோடி
சந்தமொடு நீடு பாடிப் பாடி
முஞ்சர்மனை வாசல் தேடித் தேடி
யுழலாதே
முந்தைவினை யேவ ரமற் போக
மங்கையர்கள் காதல் தூரத் தேக
முந்தடிமை யேனை யாளத் தானு
முனைமீதே

திந்திதிமி தோதி திதித் திதி
தந்ததன தான தானத் தான
செஞ்செணகு சேகு தாளத் தோடு
நடமாடுஞ்
செஞ்சிறிய கால்வி சாலத் தோகை
துங்கஅநு கூல பார்வைத் தீர
செம்பொன்மயில் மீதி லேயெப்
போது வருவாயே''

அடியார்கள் முறையிடும் இடம் தோறும் சென்று அருள்புரிவதற்காகப் பல மைல்களைக் கடக்க ஒரு மயில் மீது தோன்றியருளிய கந்த வேளின் திருக்கோலத்தைத் திருமால், பிரம்மன், இந்திரன் முதலிய தேவர்கள் தம் கண்களுக்கு ஓர் அரிய அமிருதத்தைப் பெற்றுற்போலத் தரிசித்து ஆரவாரம் செய்தனர்; மகிழ்ச்சிப் பெருக்கால் துள்ளினர்; ஆடிப்பாடிப் புளகாங்கிதம் அடைந்தனர்; பூமழை பொழிந்து திருவேலிறைவன் திருவடிகளைத் தொழுது வலம் வந்து மகிழ்ந்து துதி செய்யலாயினர்.

தேவர்கள் எம்பெருமானை நோக்கி, ''சுவாமி! தாங்கள் வேற்படையினல் சூரபன்மனைச் சங்கரிக்கவில்லை; தங்களை வணங்குகின்ற அடியேங்களது வினையின் வேரை அறுத்தீர்கள். இனி எங்கட்கு வேறோர் குறையுண்டோ? அவுணர்கள் நூற்றெட்டு யுகங்களாக எங்களை வருத்தினர்கள். உய்யும் வகையின்றி நாங்கள் உலைந்தோம். அவ்வாறு உலைந்த எங்களை உய்விக்கும்பொருட்டே தேவரீர் ஆறு திருமுகங் கொண்டு திரு அவதாரம் செய்து காத்தருளினீர்கள். உலகில் இனி வேதாசாரங்கள் நிலைபெறும்; நாங்கள் ஆறுதியும் பழைய செல்வங்களும் பெறுவோம். இவை யாவற்றுக்கும் மேலாக, கண்ணுக்கு நேராகத் தங்கள் லீலை கண்டு காண்பானும், காட்சியும், காட்டுவானும், காட்சிப் பொருளும் ஆகிய இவையெல்லாம் தேவரீரே என்பதை உணர்ந்தோம். இனி தேவரீரின் திருவடிகளுக்கே தொண்டு பூண்டோம்'' என்று கூறித் துதித்தார்கள்.

தம்மைத் துதித்த இமையவர்கட்கெல்லாம் ஆறுமுகப் பெருமான் அருள் பாலித்தார்.

போர்க்களத்தில் இறவாது தப்பிய அவுணர்கள் சிலர் வீரமகேந்திரபுரி அரண்மனைக்கு ஓடோடிச் சென்று முருகப் பெருமானின் வேற்படையால் சூரபன்மன் இறந்தான் என்ற செய்தியைச் சூரபன்மனின் பட்டத்தரசி பதுமகோமளைக்கும் மற்றைய மனைவியர்க்கும் சொன்னர்கள். இச்செய்தி செவியில் முழுவதும் புகு முன்னரே பதுமகோமளை இடியால் தாக்குண்ட நாகம் போல் தரையில் சாய்ந்தாள். அவ்வளவில் அவள் ஆவி பிரிந்தது.

காவல் மன்னவன் இறந்தனன் எனும்
உரை கன்னத்துள்
மேவும் எல்லையில் அசனி
ஏறுண்ட வெம்பனியே போல்
தேவி யாகிய பதுமகோமளை
எனும் திருமங்கை
ஆவி நீங்கினள் தலையளி
யாகியது அதுவன்றே ?

பத்தினி பதியின் மாட்டுக் கொள்ளும் தலையாய அன்புக்கு எடுத்துக்காட்டு இதுவன்றே? சூரபன்மனின் மற்றைய மனைவியர்கள் செய்தியறிந்து இதயம் துடித்துக்கொண்டு அலறினர்கள். தீக்குண்டம் ஒன்றை உண்டாக்கி இறந்த பதுமகோமளையின் உடலை அதிலிட்டுத் தாமும் அதில் வீழ்ந்து இறந்தார்கள். அப்பொழுது கதிரவன் மறைந்தான். மாலைக் காலம் ஆயிற்று. அந்நகரத்தில் அதுகாறும் அவுணர் புறமிருந்த இலட்சுமி நீங்கினள்.

வேலாயுதக் கடவுள் வீரவாகு தேவரை அன்புடன் நோக்கி, ''வீரனே, இந்திர குமாரனகிய சயந்தனையும், தேவர்களையும் சிறையினின்றும் மீட்டுக் கொண்டு வருவாய்'' என்று அருளினர். வீரவாகு தேவர் சிறைச்சாலையை அடைந்தார். சிறையிருந்த தேவர்கள் அரம்பையர் ஆகியோரின் கால்களிற் பட்ட விலங்குகள் தாமே தெறித்து ஓடிந்தன. எம்பெருமான் அசுரரை வென்ற சுபச் செய்தியை அமரர்கள் கேட்டு ஆனந்தித்தனர். அனைவரும் போர்க்களத்தை அடைந்து குமாரக் கடவுளை வலம் வந்து வணங்கினர்.

சயந்தன் தனது பிதாவாகிய இந்திரனை வணங்கினன். இந்திரன் சயந்தனை எடுத்துத் தழுவி இன்புற்றான்.

சூரபன்மன் இறந்த செய்தி, மீனகக் கடலில் ஓடி ஒளிந்த இரணியனுக்கு எட்டியது. தன் பிதா இறந்ததையும், அவன் சேவலும், மயிலுமாய்ச் செவ்வேளுக்கு அடிமைப்பட்டதையும் கண்டு கலங்கி, வான வீதியில் நின்று அழுதான்.

ஆழியான் வேத
னமரர்க் கிறைமுதலோர்
வாழியா யென்று
வழுத்திடிட வைகியநீ
பூழியார் மேனிப்
புராரிசிறு வன்றேரிற்
கோழியாய் நின்று
விலாவொடியக் கூவுதியோ !
ஓகையா லண்டத்
துயிர்களெலாம் வந்திறைஞ்சச்

## அஞ்சலி



எங்கள் அருமைத் தந்தையார் திரு வி, சுப்பய்யா முதலியார் இறைவனடி சேர்ந்து 17-12-1965புடன் ஓராண்டுஆகிறது. எனினும் எங்கள் உள்ளங்களில் அவர் என்றும் நிலையாக வீற்றிருக்கிறார். ஜில்லா போலீஸ் சூப்பரின்டெண்டாக நேர்மையுடன் பணியாற்றி பொதுமக்களின் நன்மதிப்பைப் பெற்றவர். மக்கள் நினைவிலும் நீங்காமல் இன்றும் நிற்கிறார். அவருக்கு எங்கள் அஞ்சலி.

எஸ். வையாபுரி, B. E. சென்னை
எஸ். ராஜசேகரன், பெங்களூர்

சேகையாய் மல்குந்
திருத்தாள்கொண் டுற்றிடு நீ
வானகயார் கின்ற
வடிவேற் கரத்தோனைத்
தோலகயாய் நின்று
சுமக்குதியோ தோன்றுலோ!

"முன்பு உன் பக்கமாய் நின்று போரில் உயிரை விடாமல் ஒளிந்து உய்ந்த நான், இன்று உன்மீது அன்பு கொண்டவன் போல் அழுகின்றேன்; அதனால் பெரும் பழிக்கு ஆளானேன். புத்திரர்கள் தந்தைக்குச் செய்யும் கடமையினின்றும் நீங்கினேன்.

"அப்பா! நீ இறவாது மயிலும் சேவலும் ஆகியிருப்பதால் நீர்க்கடன் செய்வதற்கும் நான் பாக்கியம் செய்யவில்லை. என்னைப் பற்றி நீ என்ன நினைக்கின்றாயோ?" என்று பலவாறாகக் கூறி அழுதான். பின்னர் ராஜகுருவான சுக்கிராச்சாரியாரை அணுகி, இறந்த மற்றவர்க்கெல்லாம் நீர்க்கடன் செய்தான். பின்னர், 'துன்பத்துக்கு வித்து செல்வம்' என்பதை உணர்ந்து சிவபெருமானைத் தியானித்து முக்தி பெறும் - பொருட்டு ஒருபுறம் போய்த் தவம் மேற்கொண்டான்.

இடும்பன், சூரபன்மனின் குரு. அவனுடைய மனைவி இடும்பி. அவர்கள் இருவரும் கைலாயத்தில் தவம் செய்து கொண்டிருந்தார்கள். அகஸ்திய முனிவர் வந்து சிவபெருமானைத் தொழுதார். "தெற்கே சென்று தவமிருப்பாய்" என்றார் சிவபெருமான். தெற்கே கைலாயத்துக்குச் சமமான புண்ணிய மலை இல்லையே என்று எண்ணிய அகஸ்தியர் சிவபெருமானிடம் இக்குறையைக் கூறினார். உடனே சிவபெருமான் சிவ சக்தி வடிவான இரு குன்றுகளைத் தென் னகத்துக்குத் தந்தருளக் கருதினார். இடும்பனை அழைத்து, "சக்தி மலையையும், சிவமலையையும் கொண்டு வா" என்று யோக தண்டத்தைக் கொடுத்தார்.

அஷ்ட நாகங்களாலும் பின்னிச் சக்தி மலையையும் சிவமலையையும் யோக தண்டத்தின் இருபுறமும் கட்டிக் காவடியாக்கி இடும்பனும் இடும்பியும் தூக்கிக் கொண்டு போனார்கள்.

வராககிரி என்று ஒரு மலை. அதை இப்பொழுது கோடைக்கானல் என்று சொல்லுகிறார்கள். அங்கே மலைக் காவடியை வைத்துவிட்டு இடும்பன் சாப்பிடப் போனான். சாப்பிட்டு முடிந்ததும், வந்து மலையைத் தூக்கினான். அந்த மலையைத் தூக்க முடியவில்லை. மலையின் மீது ஒரு சிறுவன் இருந்தான். அந்தச் சிறுவனிடம் கோபம் கொண்ட




ஹெட்கிளார்க்: என்ன மானேஜர் சார்! உங்களுக்குத்தான் இன்று வேலையே இல்லாமல் ஓய்வாக இருக்கிறீர்களே? பக்கத்துத் தியேட்டர்லே ஒரு நல்ல படம் ஓடுகிறதாம். போகப்படாதோ!

மானேஜர்: சொன்னதற்கு நன்றி, வேண்டாம்.

ஹெட்கிளார்க்: அப்ப நான் போயிட்டு வரட்டுமா!

---

இடும்பன், அவனுடன் சண்டை யிட்டான். சிறுவனாக வந்திருந்த முருகப் பெருமான் சிரித்தார். இடும்பன் எரிந்து விட்டான். "எம்பெருமானே! மாங்கல்ய பிட்சை கொடுக்க வேண்டும்" என்று இடும்பி வேண்டிக் கொண்டாள். "நீ மலையின் மத்தியில் இரு. மலைக்கு வருகிறவர்கள் முதலில் இடும்பனுக்குப் பூஜை செய்த பின்தான் கடம்பனுக்குப் பூஜை செய்ய வேண்டும்" என்றார். அதிலிருந்து தான் காவடி எடுக்கின்ற வழக்கம் ஏற்பட்டது.

சூரபன்மனுடன் செய்த சமரில் அமரர்புறமிருந்து இறந்த பூதர்கள் அனைவரும் எழுந்து வருமாறு திருவுளங் கொண்டார். இறந்த பூதகணங்கள் யாவும் உயிர்பெற்று எழுந்து வந்து கூடி, குமாரக் கடவுள் சந்நிதியை அடைந்து அவரை வணங்கின. வடி வேலண்ணல் வருணபகவானை அழைத்து "நாம் தண்டு இறங்கி இருந்த இலங்கை தவிர வீரமகேந்திரபுரியையும் அவுண ரின் ஏழு தீவுகளையும் அழித்துவிடு" என்று கூறியருளினார். வருணன் உடனே வீரமகேந்திரபுரியையும் துவீபங்களையும் கடலினுட் கொண்டான்.

அரிஅயனாதி அமரர்களும் இலக்கத் தொன்பது வீரர்களும் துதி செய்து மருங்கில் வர, முருகப் பெருமான் போர்க்களம் நீங்கி, இலங்கையையும் கடலையும் கடந்து ஜயந்திமலை என் கின்ற சிறப்புமிக்க செந்திற்பதியை யடைந்தார். மயில் வாகனத்தினின்றும் இறங்கிக் கோயிலினுள் புகுந்தார். — தேவர்கள் துதிக்க, எல்லா உயிர் கட்கும் அருள்புரியும் பெருங்கருணை யுடன் திவ்விய சிங்காதனத்தின் மீது இனிது வீற்றிருந்தருளினார். அப்போது சூரியன் மேற்குக் கடலில் மூழ்கினான்.

தேவர்கள் முருகப்பெருமானுடைய உத்தரவுப்படி, திருமஞ்சனத்துக்காக, நறுமலர், சந்தனம், தூபம், தீபம் முதலியவைகளைக் கொண்டு வந்தார்கள். முருகப் பெருமானுக்குத் தாங்கள் பூஜை செய்யப் போகிறோம் என்ற ஆனந்தம் அவர்களுக்கு. ஆனால் எளிமையிற் சிறந்த ஏந்தலோ தாம் பூஜை பெறும் தெய்வமாயிராமல் பூஜை புரியும் தெய்வமாயிருக்க விரும்பினர். எனவே, முருகப் பெருமான் செந்திற் பதியில் சிவலிங்கம் வைத்து அன்புடன் வழிபட்டார். ஒவ்வொரு மலராகப் போட்டுக் கொண்டே வந்தார். அந்த அர்ச்சனையில் அகம் கரைந்த மால், அயன், பிரம்மா முதலிய தேவர்கள் கடைசி அர்ச்சனையின் போது பரவசப்பட்டு, 'முருகா' என்று கூவினர். அப்போது கையிலெடுத்த பூவுடன் திரும்பிக் காட்சி கொடுத்தார் கந்தப் பெருமான். திருச்செந்தூரில் இன்னமும் இப்படித்தான் ஒரு கரத்தில் அர்ச்சனை மலர் கொண்டவராக சுவாமியின் கோலம் இருக்கிறது. பெரியவர்களைப் பூஜையில் காண்பது மற்ற சந்தர்ப்பங்களில் காண்பதைக் காட்டிலும் பெருமை. ஆகவே, மற்ற கோவில்களில் உள்ள சுவாமியைவிடத் திருச்செந்தூரில் உள்ள முருகப் பெருமானுக்குப் பெருமை அதிகம்.

பூஜை புரிந்த பெருமான் பிறகு தேவர்களின் பூஜையைத் தாமும் பெற்றார். ''உங்களுக்கு இன்னமும் ஏதேனும் குறைகள் இருந்தால் கூறி, வேண்டிய வரங்களைக் கேட்டு உய்வு பெறுங்கள்'' என்று திருவாய் மலர்ந்தருளினர். ''எம்பெருமானே! அடியேங்கட்கு இனி ஒரு குறைவும் இல்லை. தங்கள் திருவடியில் நீங்காத அன்பைத் தந்தருள வேண்டும்'' என்று தேவர்கள் வேண்டிக் கொண்டார்கள். ஆறுமுகவள்ளல் அவ்வரத்தை நல்கினர். அன்றைய இரவு கழியக் கதிரவன் கீழ் வானில் உதயமானன்.

செவ்வேள் செந்திற்பதியை நீங்கிப் பரிவாரங்களுடன் மயில் வாகனத்தில் புறப்பட்டார். அப்போது நான்முகன், திருமால், இந்திரன் படை வீரர்கள் முதலிய யாவரையும் கௌரவிக்கக் கருதினர். பிறர்க்கு மதிப்புத் தரும் மாண்புடன் அவர்களைப் பார்த்து, ''நீங்களும் உங்கள் வாகனங்களில் ஏறி நமக்குப் பக்கத்தில் புறப்பட்டு வாருங்கள்'' என்று திருவாய் மலர்ந்தருளினர். அதன்படி அவரவர்கள் தத்தம் வாகனத்தில் புறப்பட்டனர்.

பிரம்மாவின் வாகனம் அன்னம். அன்னத்துக்கு (உணவுக்கு) நாம் வாகனம். அன்னத்தின் மீது செல்லுவார் பிரம்மா. அன்னம் நம்மீது ஏறுகிறது. வண்டிக்குள் நாம் ஏறிக் கொண்டால் குறித்த இடத்துக்குப் போகலாம். வண்டி நம் மீது ஏறிவிட்டால்.....? அன்னம் நமக்கு வாகனமாயின் நாமும் பிரம்மனைப் போல் ஆக்க சக்தியாக விளங்க முடியும்.

தேவர்கள் தத்தம் வாகனங்களில் ஏறி ஆறுமுகப் பெருமானிடம் செல்ல, இரண்டாயிர வெள்ளம் பூதங்களும் வந்து நெருங்கினர்கள். பூத்தூளியினுல் தேவலோகம் பூழியாகியது. குடை, கொடி, ஆலவட்டம் முதலியன நெருங்கின. வேத ஒலியும், தேவர்களுடைய வாழ்த்தொலியும், முருகக் கடவுளின் ஊர்தியாகிய மயிலும், கொடியாகிய கோழியும் கூவும் ஒலிகளும் எங்கும் மங்களமாகப் பரவின. திக்விஜய பிரதாபரான ஆறுமுகக் கடவுள் மதுரைத் திருநகரின் மேற்றிசையில் விளங்கும் திருப்பரங்குன்றமடைந்தார்.

திருப்பரங்குன்றத்தில் தவம் செய்து கொண்டிருந்த பராசர புதல்வர் அறுவரும், பிரம்மா முதலிய தேவர்களும் ஆறுமுகக் கடவுளை வணங்கி, ''சுவாமீ! தேவரீர் இக்குன்றத்தில் வீற்றிருந்தருள வேண்டும்'' என்று வேண்டிக் கொண்டார்கள். அவர்கள் விருப்பத்தின்படி திருப்பரங்குன்றத்தின் சாரலில் பூதசேனைகளுடன் ஏறிச் சென்றார் தேவநாயகன். தேவதச்சன் எம்பெருமானுக்காக அக்குன்றின் மீது அளவற்ற வீதிகளையும், கோயில்களையும், சோலைகளையும், வாவிகளையும் அமைத்தான். ஆறுமுகக் கடவுள் அமரர் அனைவரையும் மத்திய கலாமண்டபத்தில் அவரவர்கட்குரிய இடங்களில் அமரச் செய்து, மயில்வாகனத்தினின்றும் இறங்கிச் சிற்சபையில் அமைக்கப்பட்டிருந்த திவ்விய சிங்காதனத்தின் மீது அமர்ந்தார். காட்சி என்றால் அது வல்லவோ காட்சி ?

மனம் நிரம்பி வழியப் பெற்ற தேவர்கள் அவரவர் இருப்பிடம் சென்றனர். தாங்கள் முன்பு இழந்திருந்து, இன்று இறையருளால் திரும்பப் பெற்ற பொன்னுலகுக்குச் சென்றனர். வீரவாகு தேவரும், இலக்கத்தெண்மரும், பூதசேனைத் தலைவர்களும் எம்பெருமானின் திருவடிகளை வணங்கி ஏவல் செய்து கொண்டிருந்தார்கள்.

பராசரப் புதல்வர்கள் அறுவரும் முருகப் பெருமானை வணங்கித் துதித்தனர். முன்னர்ச் சிவபெருமான் அவர்களுக்குக் கூறியிருந்தவாறு அறுமுகக் கடவுள் அவ்வறுவருக்கும் ஞானோபதேசம் புரிந்தருளினர், (தொடரும்

# கந்தன் கருணை



### திருமுருக கிருபானந்தவாரியார்

## 60. தேவநாயகனுக்கொரு தெய்வயானை

இந்திரனின் இதயம் இறைவன்பால் நன்றியால் நிறைந்தது. சூரபன்மனைச் சங்கரித்து, தனக்குப் பொன்னுலக ஆட்சியைக் கொடுத்தருளிய குமாரக் கடவுளுக்குத் தனது நன்றியை எப்படித் தெரிவிப்பது? 'தன்னையே தந்து விடலாம்; அதனிடத்தில் தன் அங்கங்களில் சிறந்த கண்ணைத் தரலாம்; இன்றேல் கண்ணுக்குச் சமமான பெண்ணைத் தரலாமே' என்று எண்ணினன் தேவராஜன். 'பெண்ணைக் கொடுத்தாயோ, கண்ணைக் கொடுத்தாயோ' என்று பொதுவழக்கும் உண்டன்றோ? இந்திரன் மகளான தேவயானையோ உண்மையிலேயே பூர்வத்தில் திருமாலின் கண்ணினின்று தோன்றியவளாயிற்றே! எனவே, அவளைக் காட்டிலும் முருகையனுக்குச் சிறந்த பரிசு என்ன இருக்க முடியும்?

தன் மகள் தெய்வயானையை முருகப் பெருமானுக்குத் திருமணம் செய்து கொடுக்கக் கருதிய அமரேசன், மாலயனுதி வானவர்களிடம் தன் எண்ணத்தைத் தெரிவித்தான். அவர்கள் அதனை மனமார ஆமோதித்தனர். ''தெய்வயானையும் முருகக் கடவுளைத் திருமணம் செய்து கொள்ளும் பொருட்டே சரவணப் பொய்கையில் முன்னாளில் தவம் செய்தாள். அதன் பயன் இப்பொழுது கைகூடியது போலும்! இத்திருப்பரங்குன்றத்திலேயே திருமணம் செய்து கொடுக்க ஏற்பாடுகளை விரைந்து செய்வாயாக'' என்றனர்.

இந்தச் சமயத்தில் இந்திராணி கணவ ...க்காகப் பிரார்த்தனை புரிந்தவாறு ...ருமலையில் இருந்தாள். இந்திரன் ...ற்றன் ஒருவனை அழைத்து, ''நீ ...ரு மலைக்கு விரைந்து சென்று அங்கு ...ள்ள இந்திராணியையும் மகள் ...தெய்வயானையையும் அழைத்து வா'' ...ன்று ஆணையிட்டான்.

ஒற்றன் அவ்வாறே இந்திராணியை ...டைந்து, ஐயன் சூரசம்ஹாரம் ...செய்ததையும், இந்திரன் மீண்டும் ...ஆட்சி பெற்றதையும் சயந்தன் தேவ ...ரோடு சிறையினின்றும் மீண்டதையும் ...தெரிவித்தான். ஆறுமுகக் கடவுள் ...சேனைகளுடன் திருப்பரங்குன்றத்தில் ...எழுந்தருளியிருப்பதைக் கூறி, தேவியை ...யும் தெய்வயானையுடன் திருப்பரங்குன் ...றத்துக்கு வருமாறு இந்திரன் கட்டளை ...யிட்டிருப்பதை உரைத்தான்.

இந்திராணி தன் தவம் பலித்ததே என்று மிகுந்த மகிழ்ச்சியடைந்தாள். தெய்வயானையுடன் ஐராவதத்தின்மீது புறப்பட்டு அரம்பையர் சூழ விண் வழியே திருப்பரங்குன்றம் வந்து சேர்ந் தாள். இந்திரனைப் பழைய தேவராஜ னுகவே கண்டு களிகொண்டாள்.

சிறை மீண்ட அரம்பையர்கள் அயி ராணியை வந்து வணங்கினர்கள். அயி ராணி சயந்தனைத் தாயன்பு மிகத் தழுவிக் கொண்டாள்.

பின்னர் இந்திரன் வானவர்களுடன் வடிவேலிறையைக் கண்டு வணங்கித் துதித்தான்; அடிபணிந்தான். ''எம் பெருமானே! தாங்கள் புரிந்த ஒப்புயர் வற்ற உதவிக்கு அடியேன் செய்யத்தக்க கைம்மாறு ஏதும் இல்லை. ஆயினும், தமியேனுடைய புதல்வி தெய்வயானை யைத் தேவரீர் திருமணம் செய்தருளி அடியேங்கள் உய்ய அருள் புரிய வேண் டும்'' என்று வேண்டிக் கொண்டான். ஜீவர்களுக்கெல்லாம் நாயகனுகிய நித்ய மணுளக் கந்தக் கடவுள் இந்திரனை நோக்கி, ''நின் மகளும் நம்மை மணந்து கொள்ளும் பொருட்டு முன்னே தவ



மிருந்தாள். ஆதலின் நீ கருதியபடி நாளையே நாம் திருமணம் செய்வோம்'' என்று திருவாய் மலர்ந்தருளினர். இந்திரன் உள்ளம் உவந்து உடல் பூரித்து இருக்கை சேர்ந்தான்.

தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் மங்கல ஓலை அனுப்பினன் இந்திரன். மண்ணுலகில் ஆட்சி புரிந்து கொண்டிருந்த முசுகுந்தச் சக்கரவர்த்திக்கும் திருமண ஓலை அனுப்பப்பட்டது. தூதர்கள் யாவரும் அழைப்போலையுடன் விரைந்து சென்ருர்கள்.

இந்திரன் ஏவியபடி தேவதச்சன் சிற்பநூல் விதிப்படி நவரத்தின மயமான திருமண மண்டபமும், மண்டபத்தின் மத்தியில் ஓர் அரியணையையும் அமைத்தான். அதன்பின், அரி அயன் முதலான வானவர்கள் இருப்பதற்கு ஏற்ற இடங்களையும், கோபுரங்கள் பலவற்றையும், எண்ணில்லாத மண்டபங்களையும் அமைத்தான். கடல் போல் திரண்டு வந்த மக்கள் அனைவரும் தங்குவதற்குரிய இடங்களையும் அமைத்தான். திருமணத்துக்கு வேண்டிய உபகரணங்கள் யாவற்றையும் இந்திரன் சேகரித்தான்.

ஃ ஃ ஃ

முசு என்றால் குரங்கு. முசுகுந்தச் சக்கரவர்த்தி குரங்கின் முகச் சாயலுடன் இருந்தவர். முன்னொரு காலத்தில் திருக்கைலாய மலையில் சிவபெருமானும் உமாதேவியாரும் ஒரு சோலையில் வில்வ மரத்தடியில் வீற்றிருந்தார்கள். அப்போது வில்வ மரங்களிலே பல முசுக்கள் (குரங்குகள்) தங்கியிருந்தன. அவற்றுள் ஓர் ஆண் முசு அம்மையப்பர் மீது அளவற்ற வில்வத் தழைகளைப் பறித்துச் சொரிந்து கொண்டிருந்தது. அது கண்டு உமாதேவியார் சினம் கொண்டார். உமாதேவியாரின் சினத்தைக் கண்ட அந்திவண்ணத் தண்ணல், ''தேவி! வில்வ இலைகளைக் கொண்டு நம்மைப் பூசிக்கும் குரங்கிடம் கோபம் கொள்ளலாமா? உன் சினத்தைத் தணித்துக் கொள்...... வேடிக்கையாக இட்டாலும் இட்டது வில்வம் அல்லவா? விளையாட்டாக மிதித்தாலும் நெருப்பு சுடும். அது போல் தெரிந்தோ தெரியாமலோ செய்தாலும் வில்வத்தை எமக்கிடுவது சிவபுண்ணியப் பயன் தரும்'' என்றருளினர். உமாதேவியார் சினம் தணிந்து அக்குரங்குக்கு அருள் புரிந்தார். உடனே முசுவுக்கு மெய்ஞ்ஞானம் உண்டாகிப் பரமபிதா மாதாக்களாகிய அவ்விருவரையும் தொழுது, ''அடிமையின் குற்றத்தைப் பொறுத்தருள வேண்டும்'' என்று வேண்டி நின்றது. சிவபெருமான் அம்முசுவை நோக்கி, ''நீ எம்மை அருச்சனை செய்த புண்ணியத்தால் மறுபிறப்பிற் புவியில் பிறந்து உலகம் முழுவதையும் அரசாளும் பேற்றைப் பெறுவாய்'' என்று அருளிச் செய்தார். அத்திருவாக்கைக் கேட்ட முசு, பேரானந்தம் அடையாமல் மிகுந்த துன்பமே அடைந்தது. ''எந்தையே! அடியேன் நாள்தோறும் உங்களைச் சேவித்து அழியாத பேரானந்தப் பெருஞ் செல்வத்தோடு இருப்பதை விட்டு, மண்ணுலகில் போய் அழியும் செல்வ மயக்கில் ஈடுபட்டு அவமாயை கொண்டால் மீண்டும் உய்வது எங்ஙனம்? ஆகவே, பூவுலக ஆட்சி வேண்டாம்'' என்று சொல்லி விட்டது. மாதொரு பாகன் அதனைக் கேட்டு, ''முசுவே! உன் உள்ளக் கிடக்கை நன்று! நீ இப்போது பூவுலகிற் பிறந்து அரசு புரிந்தாலும் எம் நினைவை இழக்க மாட்டாய். பிறகு நம்பால் வருவாய்! இதற்காக வருந்த வேண்டாம்'' என்று திருவாய் மலர்ந்தருளினர்.

''பெருமானே! அடியேன் மானுடனாகியபின் செய்வன தவிர்வன இன்னவென்று அறியாது மயங்காவண்ணம் இப்போது நான் எடுத்துள்ள இந்தப் புண்ணியப் பிறவியின் நினைவு மறக்காதபடி முசு முகத்துடன் ஜனிக்க அருள் புரிய வேண்டும்'' என்று வேண்டிக் கொண்டது. சிவபெருமான் அவ்வாறே முசுவுக்கு வரம் அளித்தார்.

சிவபெருமானிடம் வரம் பெற்ற அம்முசு சத்திய சம்பன்னனாகிய அரிச்சந்திரன் மரபில் குரங்கு முகத்துடன் பிறந்தது. இவ்வாருகப் புவியில்தோன்றிய முசுகுந்தன் சோழ நாட்டில் உள்ள கருவூரிலிருந்து ஆட்சி புரிந்து வாழ்ந்து சூரபன்மனுக்கு அடங்கியிருந்தான்.

முசுகுந்தச் சக்கரவர்த்தியிடம் இந்திரனின் தூதர்கள் போய், ''அரசே! நாங்கள் உமது நண்பராகிய இந்திரனின் தூதர்கள். முருகப் பெருமான் சூரபன்மனைக் கொன்று உங்களையெல்லாம் அசுர ஆட்சியிலிருந்து விடுவித்துவிட்டார். தம் துணைவர்களுடனும் மற்றவர்களுடனும் திருப்பரங்குன்றம் வந்து வீற்றிருக்கிருர். அப்பெருமானுக்கு இந்திரன் தன் மகளாகிய தெய்வயானையை நாளைக்குத் திருமணம் செய்து கொடுக்கிருர். அச்செய்தியை உங்களிடம் சொல்லி அழைப்புக் கூறுமாறு எங்களைத் தேவராஜன் அனுப்பியிருக்கிருர்'' என்று கூறினர்கள்.

முசுகுந்தன் அளவற்ற மகிழ்ச்சியுற்ருன்; செய்தி தெரிவித்த தூதர்

..ப் பலவாருகப் புகழ்ந்து தழுவிக் ..கொண்டான். ''இந்த நல்ல செய்தி ..க் கூறிய தங்களுக்கு நான் செய்யத் ..ந்த உபகாரம் ஒன்றுமில்லை. என் ..டத்துள்ள நிதிகள் எல்லாவற்றை ..ம் தரவா? என் விருதுகளைக் கொடுக்..ட்டுமா? அல்லது என் அரசாட்சி ..யையே கொடுக்கட்டுமா? உங்களுக்கு வேண்டியது யாது?'' என்றான்.

''நீங்கள் விரைந்து திருப்பரங் குன்றமடைந்து திருமணத்தில் கலந்து கொள்வதே எங்களுக்குப் பரிசுகளில் சிறந்த பரிசில் போலாகும்'' என்று தூதர்கள் கூறி விடைபெற்றனர்.

முசுகுந்தச் சக்கரவர்த்தி முதலிய அரசர்கள் திருப்பரங்குன்றம் சேர்ந்து திருமணச் சாலையை அடைந்தனர். எம்பெருமானின் திருமணத்தைக் காண தேவர், சித்தர், இயக்கர், வித்யாதரர் முதலிய யாவரும் வந்து குழுமினர்கள். தேவமாதர்களும், முனி பத்தினிகளும், நாக கன்னிகளும் வந்து குழுமினர். அவர்கள் அனைவரும் உலகநாயகனின் கைப்பிடித்து உலக நாயகியாக விருக்கும் தெய்வயானை அம்மையாரை அடைந்து தொழுதனர். 'எவ்வுலகுக்கும் நீயே இறைவி' என்று தெய்வயானையைப் புகழ்ந்தனர்.

தெய்வப் பெண்கள் தெய்வயானை அம்மையின் தலைக்கு நறுநெய் தடவி நீராட்டினார்கள்; பச்சைக் கற்பூரம் தடவிப் பன்னீர் தெளித்தார்கள்; கூந்தலுக்கு அகிற்புகை ஊட்டினார்கள்; தலைக் கோலங்களைச் சாத்தினார்கள்; மலர் வகைகளைச் செருகினார்கள்; மாலைகளைச் சூட்டினார்கள்; கருஞ் சாந்துப் பொட்டு இட்டார்கள்; காதிலே புலிமுகப் பணியும், கழுத்திலே முத்துமாலையும், கைகளில் வளையல்களையும் அணிவித்தார்கள்; தோள்களிலே தொடிகளைப் புனைந்தார்கள்; கால்களிலே பாடகம், சிலம்பு பாதசரம் முதலியவற்றை அணிவித்தார்கள். அழகுக்கு அழகு செய்தார்கள்.

இந்திரன் பிரம்மதேவரை நோக்கி, ''திருமண மண்டபம் அமைக்கப்பட்டு விட்டது. திருமணத்துக்கு வரவேண்



## கல்கி வெள்ளி விழா பரிசுத்திட்டம்

'கல்கிப் பத்திரிகை தனது இலக்கிய சேவையில் இருபத்தைந்து ஆண்டுகளை இவ் வருஷத்துடன் பூர்த்தி செய்கிறது. எழுத்தாளர்களின் எழுத்துப் பணி சிறக்கச் செய்வதே இந்த வெள்ளி விழா ஆண்டை விமரிசையாகக் கொண்டாடுவதற்கான சிறந்த வழி என்ற அளவில் இருபத்தையாயிரம் ரூபாய் பரிசுத் திட்டம் வைத்துள்ளோம். சிறந்த நாவலுக்கு முதல் பரிசு ரூபாய் 10,000; இரண்டாவது பரிசு ரூபாய் 7,500; மூன்றாவது பரிசு ரூபாய் 5,000. சிறந்த சிறுகதைக்கு ரூபாய் 1,000; இரண்டாவது பரிசு ரூபாய் 500; மூன்றாவது பரிசு பத்துச் சிறுகதைகளுக்கு ஒவ்வொன்றுக்கும் ரூபாய் 100 வீதம் ரூபாய் 1000.

**விதிகள் :**

- சிறுகதைகள் கல்கியில் ஆறு முதல் பத்துப் பக்கங்கள் வரை வருமாறு இருக்கலாம்.
- நாவல்கள் தொடர்ந்து ஆறு பக்கங்கள்வீதம் ஒரு வருஷம்வரை வருமாறு அமைந்திருக்கலாம்.
- நல்ல வெள்ளைக் காகிதத்தின் ஒரு பக்கத்தில் மட்டுமே கதைகள், நாவல்கள் எழுதி அனுப்பப்பட வேண்டும்.
- கதைகள், நாவல்களைத் தபால் மூலம் அனுப்பலாம். ரிஜிஸ்தர் செய்வது நலம். முடிந்தால் காரியாலயத்தில் நேரிடையாகவும் கொண்டு வந்து தரலாம்.
- ஆசிரியர், கல்கி காரியாலயம், கீழ்ப்பாக்கம், சென்னை-10 என்ற விலாசத்துக்கு அனுப்பப்பட வேண்டும்.
- ஒருவரே இந்தப் போட்டிக்கு ஒன்றுக்கு மேற்பட்ட சிறுகதைகளை, நாவல்களை அனுப்பலாம்.
- இலக்கியத்துறை அறிஞர்கள் சிலர் பஞ்சாயத்தார்களாயிருந்து பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுப்பார்கள்.
- பரிசு பெறாத கதைகளானாலும் பிரசுரத்துக்கு ஏற்றவை கல்கியில் இடம் பெறும். அவற்றுக்குரிய வழக்கமான சன்மானத் தொகை அளிக்கப்படும்.
- தேர்ந்தெடுக்கப்படாத கதைகள், நாவல்களைத் திரும்பப்பெறப் போதுமான தபால் தலைகள் வைத்து அனுப்ப வேண்டும்.
- கதைகள், நாவல்கள் சம்பந்தமாய் எந்தவிதக் கடிதப் போக்குவரத்தும் வைத்துக் கொள்வதற்கில்லை.
- இந்தப் போட்டியில் கல்கி ஆசிரியரின் தீர்ப்பே முடிவானது.
- நாவல், சிறுகதைப் போட்டிகளின் முடிவுத் தேதி 28-2-1966.

டிய தேவர்கள் அனைவரும் வந்து விட்டார்கள். திருமணத்துக்கு நல்ல நேரம் பார்த்துச் சொல்லுங்கள்'' என்று வேண்டிக் கொண்டான். 'காலாதீதராகிய கந்தக் கடவுளுக்கு எந்த நேரமும் நல்ல நேரம்தான். எனினும், இந்த நேரம் சிறந்த நேரம்'' என்று பிரம்மதேவர் கூறினர்.

உடனே இந்திரனும், நான்முகனும் திருமாலும் ஏனைய தேவர்களும் குமாரக் கடவுளுடைய திருக்கோயிலிற்சென்று அன்புடன் அப்பரமபதியின் பாதகமலங்களைப் பணிந்தனர். ''எம்பெருமானே! தேவரீர் தெய்வயானையைத் திருமணம் செய்து கொள்ளத் திருமண மண்டபத்துக்கு எழுந்தருள வேண்டும்'' என்று வேண்டிக் கொண்டார்கள். அவ்விண்ணப்பத்தைக் கேட்ட முருகக் கடவுள், ''அவ்வாறேயாகுக'' என்று அருள் புரிந்து வீரவாகுதேவருடனும் மற்றைய பூதப் படைத் தலைவர்களுடனும் புறப்பட்டார். எம்பெருமான், சூரபன்மனுகிய மயில்வாகனத்தின் மீது அமர்ந்தார். பிரம்மாதி தேவர்கள் வணங்கித் துதித்துப் பூஜை பொழிந்து மருங்கிலே சென்றார்கள். சந்திரனும் சூரியனும் வெண்கொற்றக் குடை பிடித்தனர். வாயு சாமரம் வீசினன். வருணன் ஆலவட்டம் அசைத்தான். இயமன் வாட்படை ஏந்தினன். அண்டங்கள் குலுங்கக் கோழிக் கொடி கிளர்ந்து ஆர்த்தது. வேதங்கள் ஆர்த்தன. அரம்பையர் ஆடினர்; வித்தியாதரர் பாடினர்; முனிவர்கள் துதி செய்தனர். பூதர்கள், பஞ்சபூதங்கள் பூவுலக அரசர் முதலியோர் ஆர்த்தார்கள். திண்டி, பேரிகை, தண்ணுமை, சல்லரி, திமிலை, குடமுழா, காளம், சங்கம் முதலிய இசைக் கருவிகளைப் பூதர்கள் அண்டங்கள் வெடிக்கும்படி முழக்கினர். இவ்வாருக, முருகன் பொன்மயமாகிய வீதியின் வழியாய்த் திருமணச் சாலைமுன் வந்தருளினர்.

முனிவர்களும் அவர்களின் பத்தினிப் பெண்களும் மங்கலப் பொருள்களுடன் முருகப் பெருமானை எதிர்கொண்டு அழைத்தார்கள். தேவப் பெண்கள் ஆரத்தி எடுத்தனர். எம்பெருமான் மயில் வாகனத்திலிருந்து இறங்கினர். அரம்பையர் சூழ எதிரே வந்து வணங்கிய இந்திராணி நாணத்துடன் கந்தவேள் கழலிணையைக் காமதேனுவின் பாலினல் பூசித்து நறுமலரிட்டு வணங்கி ஆரத்தி எடுத்தாள்; மாலைகளையும் மலர்களையும் சூட்டினள். பின் மற்ற தேவப் பெண்களுடன் தன் கோயிலை அடைந்தாள்.

தேவர்கள் புடைசூழ முருகப்பெருமான் திருமணச்சாலையை அடைந்து நடுவே அமைக்கப்பட்டிருந்த நவரத்தின சிங்காதனத்தில் வீற்றிருந்தருளினர். திருமால், பிரம்மா, முனிவர்கள், தேவர்கள், வீரவாகு முதலிய வீரர்கள் முதலியோர் அவரவர் இடங்களில் அமருமாறு குமாரவேள் அன்புக் கட்டளை இட்டார். அவ்வண்ணமே அவர்கள் தத்தம் இடங்களில் அமர்ந்து கொண்டார்கள்.

தெய்வங்களிற் பெரிய மகாதேவர், இப்போது 'சம்பந்தி' என்ற முறையில் விருந்தினரிடையும் தனி மதிப்புப் பெற்றவரன்றோ? ஆலமுண்ட அண்ணல் தமது மாற்றுருவான மகனின் மங்கல வெற்றியையும், மணவினையையும் எண்ணி மகிழ்ந்து உமாதேவியாரோடு ஆகாயத்தில் தோன்றியருளினர். அவரது பூதப் படைகளும் உடன் தோன்றின. முருகக் கடவுள் தாய் தந்தையரைக் கண்டு, உள்ளம் உவந்து ஓடி அவர்கள் மலரடியைத் தொழுதார். மாலயனுதி வானவரும் தொழுதார்கள். சிவபெருமானும் உமாதேவியாரும் குமாரக் கடவுளை அன்போடு எடுத்துத் தழுவி மகிழ்ந்தார்கள். குமாரக் கடவுள் சிவபெருமானையும் உமா தேவியாரையும் திருக் கல்யாண மண்டபத்துக்குள் அழைத்துச் சென்றார். அப்பொழுது திருவருளினல் ஆகாயத்திலிருந்து ஓர் அழகிய அரியணை வந்தது. அதன்மீது சிவபெருமான் உமாதேவியாரோடு எழுந்தருளியிருந்தார். முருகப் பெருமானைச் சிவபெருமான் தம் மடியில் இருத்தி அருள் புரிந்தார். பிரம்மா சிவபெருமானைப் பணிந்து நாத் தழுதழுக்கக் கூறுவார்: ''எம்பெருமானே! அவுணர்களை அழிக்க அன்று ஆறுமுகப் பெருமானைக் கொடுத்தருளினீர்கள். சுப்பிரமணியக் கடவுள் சூராதியவுணர்களை அழித்துத் தேவர்களைச் சிறையிலிருந்து மீட்டருளியதற்கு நன்றி தெரிவிக்குமுகமாகத் தேவராஜ குமாரியை அவருக்குத் திருமணம் செய்து கொடுக்க முன்வந்திருக்கிறோம். ஆனல் முருகனைத் தந்துதவிய தங்களுக்கு எம் நன்றியை எப்படித் தெரிவிப்பது?''

சிவபெருமான் முறுவலுடன் தேவர் யாவருக்கும் அருள் செய்து, ''இனி வேத விதிப்படி திருமணச் சடங்கு நிகழட்டும்'' எனத் திருவாய் மலர்ந்தருளினர்.

கருணையே வடிவாகிய தெய்வயானையம்மையார் திருப்பரங்குன்றமாகிய கல் மலையின் மீது நடந்து வந்தார். அப்போது திருவடியில் விளங்கும் கிண்கிணி கலீர் கலீர் என ஒலித்தன. (தொடரும்)



உலகத் திரைப் படத் தொழிலின் தலைமைப் பீடமான ஹாலிவுட் நகரம். அதனைச் சுவர்க்க பூமியாக உலக மக்கள் கற்பனை செய்து கொண்டிருந்த காலம் அது. 1930ம் ஆண்டு. ஒரு யுவதி. வெள்ளிக் கேசமும் வெள்ளை உள்ளமும் கொண்ட அந்தப் பெண், திரை வானிலே ஒளிவீசும் நட்சத்திரமாக மின்னப் போகும் தன் வருங்காலக் கற்பனைகளில் மிதந்தபடி, படப் பிடிப்பு நிலையங்களில் சிறு சிறு பாத்திரங்களில் நடிக்க அழைக்க மாட்டார்களா என்று ஏக்க முடன் நிற்கும் நீளமான 'க்யூ' வரிசையில் காத்துக் கிடக்கிறாள். பிற்காலத்தில் உலக முழுவ திலுமுள்ள திரைப்பட ரசிகர்களைப் பைத்தியமாக அடிக்கப் போகும் அழகும் திறமையும் கொண்ட ஒரு நடிகை அந்த வரிசையில் நிற்கிறாள் என்பதை அறியாத படாதிபதிகள் அவளைக் கண்ணெடுத்தும் பார்க்கவில்லை. திறமைசாலிகளைத் திரைப்பட நிறுவனங்களுக்கு அறிமுகப் படுத்தும் ஏஜண்ட் ஒருவரின் கண்களில் இந்த மங்கை தென்படுகிறாள். அவரது ஊகம் வீண் போகவில்லை. அவரது உழைப்பால், ஒப்பற்ற திறமையால் ஹாலிவுட் பிரமிக்கும் அற்புத நடிகையாகிறாள் அவள். அது திடீரென்று ஒரு நாளில் ஏற்பட்டு விடவில்லை. அவருக்கும் அவளுக்கும் அதில் எத்தனையோ ஏமாற்றங்கள், தோல்விகள், துயரங்கள், வேதனைகள். ஆனால் அத்தனையும் அவளைப் புகழின் உச்சிக்குக் கொண்டு சேர்க்கிறது. அவள் நடை, உடை, சிரிப்பு, பேச்சு, அலங்காரம் எல்லாமே அமெரிக்கப் பெண்களின் நாகரிகமாகிவிடுகின்றன. அந்த அளவுக்கு அவள் ஹாலிவுட்டின் விந்தைப் பெண்ணாகிறாள். அவளும் காதலிக்கிறாள்; கல்யாணமும் செய்துகொள்ளுகிறாள். அதுவே அவள் வாழ்க்கையின் திருப்பமாக அமைகிறது. திருமணமான இரண்டாவது வாரத்தில் கணவன் தற்கொலை செய்து கொள்ளுகிறான். பட உலகுக்கும் பத்திரிகைகளுக்கும் இதைவிடச் சுவையான செய்தி வேறு வேண்டுமா? அவன் ஏன் தற்கொலை செய்துகொண்டான்? யாராலும் விடுவிக்க முடியாத அப்புதிரே அவளுக்கு அதிர்ச்சியாகிறது. அந்த அதிர்ச்சி அவள் வாழ்வைப் பலிகொள்ளுகிறது. வாழ்விலே வெறுப்பும் புகழிலும் பொருளிலும் நிராசையும் கொண்ட அந்த நடிகை தன்னுள் தன்னையே தேடிக்கொண்டதொரு நிலையில் ஒரு நாள் நள்ளிரவில் கடற் கரையிலே போய் நினைவிழந்து விழுந்துவிடுகிறாள். காலையில் போலீஸ் வான் அவளை ஆஸ்பத் திரிக்குக் கொண்டு வருகிறது. 'பிளாட்டினம் பிளாண்டி' என்று புகழ் பெற்ற அந்த அற்புத நடிகையின் வாழ்வு அவலமாக முடிவடைகிறது.

உண்மையாகவே வாழ்ந்து மறைந்த ஜீன் ஹார்லோ என்ற நடிகையின் கதையைத் தான் பாரமவுண்ட் பிக்சர்ஸார் வண்ணப் படமாக வெளியிட்டிருக்கிறார்கள். ஒரு நடிகை பட உலகில் பெயரும் புகழும் பெற வேண்டுமானால் எத்தனை இன்னல்களை அனுப விக்க வேண்டியிருக்கிறது என்பதற்கு ஹார்லோவின் வாழ்க்கை ஒரு மாதிரி. ஹார்லோவாக கரோல் பேக்கர் சிறப்பாகவே நடித்திருக்கிறார். அவளைப் புகழேணியின் உச்சிக்குக் கொண்டு போகும் ஏஜண்ட் ஆர்தர் லாண்டுவாக வரும் ரெட் பட்டன்ஸின் நடிப்புத்தான் இப்படத்தில் பிரமாதம். இந்தப் படத்தை டைரக்ட் செய்துள்ள கார்டன் டக்ளஸ், உண்மை ஹார்லோ புகழேணியின் படிகளில் கால்வைத்திருந்த சமயத்தில் ஸ்டுடியோவின் செய்திகளை இங்கு மங்கும் கொண்டுபோகும் எடுபிடி வேலை செய்துகொண்டிருந்தார். அவர் இன்று ஹாலிவுட்டின் புகழ் பெற்ற டைரக்டர். அவளது வாழ்க்கைக் கதையைத் தாமே டைரக்ட் செய்ய வேண்டியிருக்கும் என்பதை முன்பு நினைத்துப் பார்த்திருப்பாரா? உண்மைக் கதையான தால் நமக்குப் படத்தில் குறை காணும் மனப்பான்மை குறைந்து விடுகிறது.



என்பது கச்சியப்பரின் அதியற்புதமான வாக்கு.




## 61. கண்கொள்ளாக் காட்சி

தெய்வயானை அந்தக் கல்லின்மீது நடந்தபோது, கிண்கிணி, 'அந்தோ! என் அன்னை இக் கல்லின்மீது மெல்லிய திருவடி வைத்து நடக்கின்றாளே! இத் திருவடி கல்லின் மீது நடந்தால் வருந்துமே!' என்று கூறி அரற்றுவது போல் இருந்தது.

இடையில் உள்ள மேகலாபரணம் ஒலிப்பது மெல்லிய இடை வருந்துமே என்று கூறுவது போலிருந்தது.

கல்லுயர் பொருப்பினிடை
காமரடி செல்ல
அல்லன கொல் என்றுமணி
நூபுரம் அரற்ற
மெல்லிடை வருந்துமென
மேகலை இரங்க
எல்லவரும் உள்மகிழ
எம்மனை நடந்தாள்.

''இவ்வாறு அம்மை தேவகுஞ்சரி கல்லின் மீது பாத தாமரையை வைத்து நடந்தருளுவதில் என்ன ஆச்சரியம் உளது? எம்பிரான் கந்தவேள் தமது திருவடி மலரை அடியேனுடைய நெஞ்சமாகிய கருங்கல்லில் வைத்து உலவுகின்றாரே!'' என்பர் கச்சியப்பர்.

பஞ்சிதனின் மெல்லடி
பனிப்ப உரையின்பால்
குஞ்சரி நடந்த செயல்
கூறு புதுமைத்தோ?
செஞ்சுடர்வை வேலுடைய
செம்மலடி நீயேன்
நெஞ்சக அடுக்கலினும்
நின்றுலவும் என்றால்.

இந்திரன் அந்தப்புரம் சென்று தெய்வயானை அம்மையாரைச் சிறப்புடன் திருமணத்துக்கு அழைத்து வந்தான்.

முரசங்கள் முழங்கின. தெய்வ அம்மையாரைத் திருமணப் பந்தரில் கண்ட முனிவர்கள் அனைவரும் 'தாயே வாழ்க' என்று துதித்தார்கள். தெய்வயானையம்மையார் பார்வதி, பரமேசுவரரைத் தொழுது நடுவேயுள்ள ஞான பண்டிதரைக் கண்டு நாணி நின்றார். உலக அன்னையாகிய உமா தேவியார் முருகவேளையும் தெய்வயானை யம்மையாரையும் ஓர் உயர்ந்த ஆசனத்தில் இருத்தினார். திருவேலிறைவன் தெய்வயானையோடு திருமணக் கோலத்தில் வீற்றிருந்ததைக் கண்டு இந்திரனும் வானோரும் ஏனோரும் கைகூப்பி ஆனந்தக் கண்ணீர் பெய்து வந்தித்து வாழ்த்தினார்கள். இந்திராணி நாணம் மேலிட்டவளாய்த் திருமஞ்சன நீரை வார்க்க, இந்திரன் எந்தை கந்தவேள் திருவடிகளைப் பூசித்தான். மலர்களைச் சூட்டித் தூப தீபங்களைப் பணிந்தான். எம்பெருமானுக்குப் பூசனைகள் முடிந்ததும் இந்திரன் தெய்வயானை அம்மையாரது திருக்கரத்தை எம்பிரான் திருக்கரத்தில் வைத்து, ''எளியேனுடைய மகளை ஏற்றருள்வீர்'' என்று வேத மந்திரம் கூறித் தாரை வார்த்தான்.

மருத்துவன் மாமறை
மந்திர நீரால்
ஒருத்தி பொருட்டினில்
ஒண்புனல் உய்ப்பக்
கரத்திடை ஏற்றன
னல்கழல் சேர்ந்தார்க்
கருத்திகொள் முத்தியும்
ஆக்கமும் ஈவோன்

தம் கரத்தில் இந்திரன் வார்த்த மந்திர நீரை முருகப் பெருமான் ஏற்றுக்கொண்டார். பிரம்ம தேவர் மாங்கல்ய நாணை மனத்தினால் படைத்துக் கொடுத்தார். அதனை முருகப் பெருமான் தம் திருக் கரத்தினால் வாங்கிச் சுரகுஞ்சரியம்மையின் கழுத்தில் தரித்தார்; அம்மையாரின் கழுத்தில் ஒரு மலர் மாலையும் சூட்டினார். கரும்பு, தேன், முக்கனிகள் முதலியவற்றையும் காமதேனுவின் பாலையும் இந்திரன் முருகக் கடவுளுக்கு நிவேதித்தான்.

திருப்பரங்குன்றத்தில் நடைபெற்ற முருகப் பெருமானின் திருமணக்காட்சி

கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது. தீவலம் வருதல், அம்மி மிதித்தல், அருந்ததி காட்டுதல் முதலிய சடங்குகள் சிறப்புற நடந்தன. தேவாதி தேவன், தேவராஜகுமாரி மணந்த திவ்விய வைபவங்களை யாரே விரித்துரைக்க முடியும்?

அம்மியின் மீது மனைவியின் காலைக் கணவன் பற்றி வைக்க வேண்டும். கற்பு வரம் வாங்குவதே இச் சடங்கின் கருத்தாகும். கற்பு என்ற சொல் 'கல்' என்ற சொல்லின் பகுதியையும், 'பு' என்னும் தொழிற் பெயரின் விகுதியையும் கொண்டது. கல் போன்ற மனத் திண்மை கொள்வதே கற்பு. மனத் திண்மைக்கு உவமையாகக் கல்லை ஏன் கொள்ளவேண்டும்? இரும்பை மனத்திண்மைக்கு உவமையாகச் சொல்லலாமே? ஏன் அப்படிச் சொல்லவில்லை என்றால் பாரம் அதிகமானால் இரும்பு வளைந்து கொடுத்துவிடும். கல்லோ வளைந்து கொடுக்காது. பிளந்துவிடும். எதிர்ப்பு எல்லை மீறினாலும் கற்பு தன்னைத்தான் அழித்துக்கொண்டு மாயுமே தவிர, வளைந்து கொடுக்காது.

திருமணச் சடங்குகள் யாவும் இனிதே முடிந்தன. முருகக் கடவுளும் தெய்வயானையும் பார்வதி — பரமேசுவரர்களை வலம் வந்து வணங்கினர். முருகனைச் சிவபெருமானும் மருமகள் தெய்வயானையைப் பார்வதி தேவியும் எடுத்து அணைத்து அருகில் அமரச் செய்து அருள் புரிந்தனர். ஆதி தம்பதியான சிவ—சக்தி இப் புது தம்பதிக்கு முதன்மை ஸ்தானமும் அளித்து மகிழ்ந்தனர்.

அடித்த லத்தில்வீழ் மக்களை
இருவரும் ஆர்வத்(து)
எடுத்த ணைத்(து) அருள்செய்துதம்
பாங்கரில் இருத்தி
முடித்த லத்தினில் உயிர்த்(து)'உமக்கு
எம்முறு முதன்மை
கொடுத்தும்' என்றனர் உவகையால்
மிக்கதொள் கையினர்

முருகப் பெருமானையும் தெய்வயானையையும் வணங்கியவர்களுக்கெல்லாம் சிவபெருமானும் பார்வதி தேவியும் திருவருள் புரிந்து மறைந்தனர்.

பின்னர் முருகப் பெருமான் சிங்காதனத்தினில் வீற்றுத் தரிசனம் தந்தார். அதன் பின் குழுமியிருந்தவர்கள் அனைவரும் அஞ்சலி செய்யவும் மங்கல வாத்தியங்கள் ஒலிக்கவும் தேவர் குழாங்கட்கு அருள் செய்து தெய்வயானை அம்மையாருடன் திருக்கோயிலுட் புகுந்தருளினர்.

இந்திரன் யாவருக்கும் காமதேனு, கற்பகம், சிந்தாமணி இவைகளால் இன்னமுதூட்டி விடைகொடுத்தனுப்பினன். இந்திரன் நீண்ட காலம் விட்டுப் பிரிந்திருந்த இந்திராணியுடன் திருப்பரங்குன்றத்தில் இல்வாழ்க்கைச் சுகம் எய்தினன்.

திருப்பரங்குன்றத்தில் தெய்வயானையம்மையாரைத் திருமணம் செய்து கொண்ட செவ்வேட் பரமன் அங்கே சில நாட்கள் அம்மையாருடன் வீற்றிருந்தார். தேவர்களை விண்ணுலகத்தில் குடியேற்றவும், பொன்னுலகத்தில் இந்திரனுக்கு முடி சூட்டவும் திருவுளங் கொண்டார். தெய்வயானையம்மையாருடன் தம் திருக்கோயிலினின்றும் வெளியே புறப்பட்டார். வீரவாகு தேவரும் பூதர்களும் மகிழ்ச்சியாரவாரம் செய்தனர். திருமால், பிரம்மா இந்திரன் முதலிய தேவர்களும், முனிவர்களும் அவ்வாரவார ஒலியைக் கேட்டு முருகவேளைப் பணிந்து சூழ்ந்தார்கள். வாயுதேவன் மனோவேகத் தேரைக் கொண்டுவந்து நிறுத்தினன். ஆறுமுகக் கடவுள் தெய்வயானையம்மையாருடன் அத்தேரில் ஏறி அமர்ந்தார். அப்போது அவர்கள் சிவபெருமானும் மலைவளர் காதலியும் போல் விளங்கினார்கள். தேவர்கள் பூமழை பொழிந்தார்கள். மயில் வாகனம் அமரர்கள் தொழ அருகில் வந்தது. ஆறுமுகப் பெருமான் அமரர்களைப் பார்த்து, ''நீங்கள் யாவரும் உங்கள் வாகனங்களில் ஏறி எம்மோடு விண்ணுலகத்துக்கு வாருங்கள்'' என்று ஆணையிட்டார். பெருமான் ஆணையின் வண்ணம் அமரர்கள் தங்கள் தங்கள் வாகனங்களில் ஊர்ந்து எம்பெருமானின் இரு மருங்கும் துதி செய்துகொண்டு சென்றார்கள். பராசர முனிவரின் புத்திரர்களும் உடன் சென்றார்கள். இரண்டாயிரம் பூத வெள்ளங்களும் விரைந்து புறப்பட்டன. பூதங்களில் பலர் முரசுகளை முழங்கினர்; சங்குகளை ஒலித்தனர்; மிருதங்கம் முழக்கினர். இவ்வாறாக, கந்தவேள் விண் வழியே இந்திரனுடைய அமராவதியை அடைந்தார். பானுகோபனால் எரிக்கப்பட்டுப் பாழ்பட்டிருந்த விண்ணுலகை வேலாயுதக் கடவுள் புதுப்பிக்கத் திருவுளம் கொண்டார். தேவதச்சனை நோக்கி, ''விண்ணுலகை எல்லா வளங்களுடனும் மீண்டும் அமைப்பாயாக!'' என்று கட்டளையிட்டார்.

(தொடரும்)



✻ சோவியத் நாடு நேருஜி பரிசுப் போட்டியில் மாக்ஸிம் கார்க்கியின் 'அன்னை' என்னும் நூலை மொழிபெயர்த்த திரு சிதம்பர ரகுநாதன் முதன் மந்திரியிடம் பரிசு பெறுகிறார்.

✻ தமிழ்நாட்டுக்கு விஜயம் செய்த நேபாள மன்னர் மகேந்திரரும், ராணி ரத்னுவும் மகாபலிபுரம் சென்று கலைச் செல்வங்களைக் கண்டு களித்தனர். சென்னையில் பெரம்பூர் இண்டக்ரல் கோச் பாக்டரிக்குப் போய்ப் பார்வை யிட்டனர். நேப்பாள ராணி ரத்னு 'டூரிஸ்ட்' ரயிலுக்குள் ஏறிப் பார்வையிடுகிறார்.





✻ இந்த வருஷம் தமிழ் இசை விழாவுக்குத் தலைமை வகித்த ஸ்ரீ பாபநாசம் சிவன் அவர்களுக்கு 'இசைப் பேரறிஞர்' என்ற பட்டத்தைத் தமிழக செய்தித்துறை மந்திரி திரு பூவராகன் வழங்கிக் கௌரவிக்கிறார்.




திருமுருக
கிருபானந்தவாரியார்

## 62. வள்ளலுக்கு ஒரு வள்ளி!

தெய்வத் தச்சன் கந்தப் பெருமானின் ஆணையைச் சிரமேற் கொண்டு, விண்ணுலகத்தைச் சூழப் பொன் மதில்களையும், நான்கு வாயில்களையும், ஏழு நிலைமாடங்களையும், கோபுரங்களையும், எண்ணில்லாத வீதிகளையும், நடுவே ஒரு பெருங் கோயிலையும், செய்குன்றுகளையும், அளவில்லாத நீர் நிலைகளையும் அமைத்தான். மாளிகைகளையும் மணிமயமான மண்டபங்களையும் உண்டாக்கினான். தவப் பள்ளிகளை அழகுற அமைத்தான். இந்திரனுக்கும், பிரமாவுக்கும், திருமாலுக்கும் தனித் தனியாகக் கோயில்களை அமைத்தான். கந்தக் கடவுள் எழுந்தருளுவதற்கு ஏற்றதோர் திருக்கோயிலையும் தனியாக அமைத்தான். அழிந்த விண்ணுலகம் இப்பொழுது பிரம்மாவின் சத்திய உலகத்தினும் வனப்புடையதாகவும், வளமுடையதாகவும் விளங்கியது. தெய்வத் தச்சன் மனத்தால் இவ்வாறு வளங்களை யெல்லாம் சேர்த்து அமைத்த திறமையைக் கண்டு யாவரும் விம்மிதமுற்றனர். பிரம்மாவும் திருமாலும், தெய்வத் தச்சனிடம், ''உனது தொழில் திறமைக்கு நிகரில்லை'' என்று கூறிப் புகழ்ந்தார்கள்.

விண்ணுலகம் பெற்ற அழகைக் கண்ட இந்திரன் மகிழ்ச்சிப் பெருக்கினால் தெய்வத் தச்சனைக் கட்டித் தழுவினான். அமராவதியை அழகுற அமைத்த தெய்வத் தச்சன், ஆறுமுகப் பெருமானின் திருவடிகளை வணங்கி நின்றான். ஆறுமுக வள்ளல் தெய்வத் தச்சனுக்கு அருள் புரிந்து தம் கணங்களுடன் நகரத்தினுள் சென்றார்.

அப்போது அயிராணி அரம்பையர்கள் சூழ ஒரு விமானத்தில் வந்து இந்திரன் கோயிலை அடைந்தாள். ஆறுமுகக் கடவுள் அந்நகருட் புகுந்து தெய்வயானை யம்மையாருடன் சபா மண்டபத்தில் எழுந்தருளி யிருந்தார். பின்னர் மயில்வாகனக் கடவுள் திருமாலையும், திசைமுகனையும் நோக்கி, ''அமராவதியில் இந்திரனுக்கு விரைவில் முடிசூட்டுங்கள்'' என்று கட்டளையிட்டார்.

கந்தப் பெருமானின் கட்டளையை ஏற்ற தேவர்கள், சாமரம், குடை, வாள், கிரீடம் முதலிய அரச அங்கங்களையும், மற்றவற்றையும் உடனே கொண்டுவரச் செய்தனர். இந்திரனைக் கங்கை நீரினால் அபிஷேகம் செய்வித்தனர். ஆடை ஆபரணங்களால் அலங்கரித்துச் சிங்காதனத்தில் அமரச் செய்தனர். விண்ணவர் போற்றவும், கற்பகமலர் தூவவும், அரம்பையர் பாடவும், முழவுகள் முழங்கவும், மிகவும் சிறப்பாக இந்திரனுக்கு முடி சூட்டினார்கள். தேவர்கள் யாவரும் இந்திரனை வணங்கினார்கள். இந்திரன் எம் பரம பிதாவாகிய கந்தக் கடவுளைத் தொழுது, ''எந்தையே! சூரனையழித்து, அடியேன் இழந்த அரசுரிமையையும், பொன்னுலக ஆட்சியையும் மீட்டுத் தந்து என்றும் அழியா 'இன்பத்தையும் நலத்தையும் வழங்கியருளினீர்கள். அடியேன் உய்ந்தேன். இதனினும் ஒருவன் பெறும் பேறு உண்டா? தங்கள் திருவடித் தொழும்பனாகிய என்னுடைய தவமே தவம்'' என்று துதிசெய்து நின்றான்.



"இந்திர! இனி நீ அஞ்சுந்தன்மை ...ன்றி என்றென்றைக்கும் அமரா ...தியை அரசுபுரிந்து இன்புற்று ...ருப்பாயாக" என்று அருள் புரிந்து ...கூறியருளினுர் ஆறுமுகவள்ளல். ...ன் எல்லாத் தேவர்களையும் தத்தம் இடங்களுக்குச் செல்லும்படி பணித்தார்.

**க**ந்தவேள் விண்ணுலகில் சில நாட்கள் தங்கியிருந்த பின் தெய்வயானை அம்மையாரோடு கந்தவெற்பில் வீற்றிருக்கத் திருவுளங் கொண்டு புறப்பட்டார். அதனை அறிந்த ஆகண்டலன், ...ஆரவணைச் செல்வன், அம்புயன் முதலியோர் வந்து கந்தவேளைத் தொழுதார்கள். பெருமான், அவர்கள் புடைசூழத் தெய்வயானை அம்மையாருடன் தேரில் அமர்ந்தார். வீரவாகு தேவர் அத் தேரைச் செலுத்தினுர். இலக்கத்தெண்மரும் பூதர்களும் சூழ, ஆறுமுகக் கடவுள் திருக்கயிலாய மலையை அடைந்தார். அன்னை, தந்தையை வணங்கி அவர்களது திருவருளும் விடையும் பெற்ருர். எல்லாத் தேவர்களுக்கும் தத்தம் இருக்கை செல்லுமாறு விடை கொடுத்துவிட்டுக் கந்தகிரியை அடைந்தார். வீரவாகு தேவர் முதலிய வீரரும், படைத் தலைவர்களும், பூதர்களும் துதித்துக் கொண்டு நிற்க, தெய்வயானை அம்மையாரோடு இரத்தின சிங்காசனத்தில் வீற்றிருந்தருளினுர்.

துய்யதோர் மறைகளாலும்
 துதித்திடற் கரிய செவ்வேள்
செய்யபே ரடிகள் வாழ்க
 சேவலும் மயிலும் வாழ்க
வெய்ய சூர் மார்பு கீண்ட
 வேற்படை வாழ்க அன்ஞன்
பொய்யில்சீர் அடியார் வாழ்க
 வாழ்கஇப் புவனம் எல்லாம்

புக்கதோர் குமர மூர்த்தி
 பொருதிறல் வயவர் யாருந்
தொக்கனர் பணியில் நிற்பத்
 தொல்படைக் கணங்கள் போற்ற
மைக்கருங் குவளை ஒண்கண்
 மடவர லோடு மேவி
மிக்குயர் பணிப்பீ டத்தில்
 வீற்றிருந் தருளி ஞனே

ஃ ஃ ஃ

**வ**ளம் பல நிறைந்து அண்டர் பரவுந் தொண்டை நன்னுட்டில், மேற்பாடி என்னும் ஊரின் அருகில் வள்ளிமலை என்று ஒரு மலை உள்ளது. அது காண்பார் கண்ணையும் கருத்தையும் ஒருங்கே கவரும் கவினுடையது. அம்மலைச் சாரலில் அருந்தவ மிக்க சிறூர் என்ற ஓர் ஊர் பெருமை பெற்றிருந்தது. சிறிய ஊராகப் பணிந்திருக்கும் வினய அழகே அழகு. எளிமையின் உருவான வள்ளியம்மை பிறக்க இச் சிற்றூரைக் காட்டிலும் உற்ற இடம் எதுவுண்டு? இன்றைச் சித்தூரே அன்றைச் சிறூர். அச் சிற்றூரில் வேடர் அரசனும், பண்டைத் தவமுடையோனுமாகிய நம்பி என்பான் வாழ்ந்தான். அவன், தாய் வழி பத்தும், தந்தை வழி பத்தும், தான் ஒன்றுமாக இருபத்தொரு தலைமுறைகளாக முருகப் பெருமானை ஆராதனை செய்து வந்தவன். அவனுக்குச் சில



ஆண் மக்கள் இருந்தனர். பெண் மகவு இன்மையால் அவன் உளம் வருந்தினான். அடியவர் வேண்டும் வரங்களை வழங்கும் ஆறுமுகக் கடவுளை வழிபட்டும், குறி கேட்டும், வெறியாட்டயர்ந்தும் மகட்பேற்றை எதிர்பார்த்திருந்தான்.

கண்வ முனிவருடைய சாபத்தினால் திருமால் சிவ முனிவராகவும், திருமகள் மானாகவும், உபேந்திரன் நம்பியாகவும் பிறந்திருந்தனர். அந்தச் சிவ முனிவர் சிவபெருமானிடம் சித்தத்தைப் பதிய வைத்து, அம்மலையிடத்தே மாதவம் புரிந்து கொண்டிருந்தார். அப்போது முருகப் பெருமானின் திருவருளினால் இலக்குமியவதாரமாகிய அழகிய, பொன் மயமான பெண் மான், முனிவர் முன்னே வந்து உலாவியது. மானைக் கண்ட சிவ முனிவர் காம உணர்ச்சி பெற்றுக் கலங்கினார். தெய்வப் புணர்ச்சி போலக் கண் மலரால் அம்மானிடத்து இன்பம் அநுபவித்துப் பின் மெய்யுணர்வால் தெளிவுற்று உறுதியான தவத்தில் நிலை பெற்று நின்றார்.

கந்தவேளைத் திருமணம் செய்து கொள்ளும் பொருட்டு ஆங்கொருசார் தவம் புரிந்து கொண்டிருந்த சுந்தரவல்லி, முன்பு தனக்கு முருகவேள் கட்டளையிட்டவாறு, அம் மான் வயிற்றில் கருவாகப் புகுந்தாள். முருகனின் அம்மான் திருமால். அம்மான் மகள் இம் மானின் மகளாக வந்தாள். மான் சூல் கொண்டது. அங்கும் இங்கும் உலாவித் திரிந்து உடல் நொந்தது. வேட்டுவப் பெண்கள் வள்ளிக் கிழங்கு அகழ்ந்தெடுத்த குழி ஒன்றில் பல்கோடிச் சந்திரப் பிரகாசமும் மரகத வண்ணமும் உடைய சர்வலோக மாதாவைக் குழந்தையாக ஈன்றது. மனித உருவில் தான் ஈன்ற அந்தக் குழந்தையைக் கண்ட மான் மருண்டு ஓடி விட்டது. வைகுண்டம் போய் இலக்குமியாயிற்று.

மான் வயிற்றில் பிறந்த குழந்தை அழுது கொண்டிருந்தது. அந்த அழுகையொலி, ‘கின்னரர்கள் யாழ் ஒலியோ? கலைவாணியின் இன்னிசையோ?’ என்று ஐயுறும் வண்ணம் மதுரமாக இருந்தது. அதனைக் கேட்டு அவ்விடத்தில் வேட்டைக்கு வந்த வேட்டுவர் மனமகிழ்ந்தனர். பிறந்த குழந்தை அழாவிடில் மற்றவர் அழ வேண்டிவரும் தானே?

ஆறுமுகக் கடவுளுடைய திருவருள் தூண்டுதலால், வேட்டுவ மன்னனாகிய நம்பி, தன் மனைவியோடு பரிசனங்கள் சூழத் தினைப்புனத்துக்கு வந்திருந்தான். குழந்தையின் அழுகையொலி கேட்டு உள்ளமும் ஊனும் உருகினான். அழுகுரல் கேட்ட வழியே போனான். அங்கே, பாற்கடலில் பிறந்த திருமடந்தை நாணுமாறு விளங்கும் திருக்குழந்தையைக் கண்டான். “என் மாதவம் பலித்தது” என்று உள்ளம் உவந்தான்; ஆனந்தக் கூத்தாடினான். தோள்களைத் தட்டினான்; துள்ளிக் குதித்தான். குழந்தையை எடுத்துத் தன் மனைவியாகிய கொடிச்சியின் கரத்தே கொடுத்தான். பெண் குழந்தையின்றிப் பல்லாண்டுகளாக வருந்திக் கொண்டிருந்த கொடிச்சி மிக்க மகிழ்ச்சியுடன் குழந்தையைக் கையிலேந்தி உச்சி மோந்து முத்தம் தந்தாள். மார்போடு அணைத்துக்கொண்டாள். அன்பின் மிகுதியினால் அவளுக்குப் பால் பெருகிற்று; பாலூட்டினாள். பின்னர் அனைவரும் சிறூர் போய்ச் சிறு குடிலில் புகுந்து குழந்தையைத் தொட்டிலில் இட்டனர். குறிஞ்சிப் பறையை ஒலித்துக் குரவைக் கூத்தாடினர், வெறியாட்டயர்ந்து முருகவேளுக்கு நல்விழா எடுத்தனர். வள்ளிக் கிழங்கை அகழ்ந்த குழியிற் கண்டெடுத்ததால் அக் குழந்தைக்கு வள்ளி என்று பெயரிட்டார்கள். படித்தறியாத வேட ராஜன் அன்பு மிகுதியால் வைத்த அப்பெயர் மற்றொரு விதத்திலும் குழந்தைக்குப் பொருந்துவதாயிற்று. வள்ளல் முருகன் எனில், இச்சுந்தரவல்லி வள்ளி என்றுதானே பெயரிடப் பெறவேண்டும்? கேட்டதெல்லாம் கொடுக்கும் வள்ளன்மை பொருந்திய இச்சா சக்தியே வள்ளியன்றோ? கிரியா சக்தியாகிய தெய்வயானையையும், இச்சா சக்தியாகிய வள்ளியம்மையாரையும் உயிர்கள் இன்பமுறும் பொருட்டுத் தழுவுகிறார் முருகப் பெருமான். கண்ணாடியில் தெரியும் நிழலை அசைக்கும் பொருட்டுத் தான் அசைவது போல் உலக உயிர்கள் இன்புறும் பொருட்டு ஞானபண்டிதன் சக்தியுடன் இன்புறுகிறார் என்பதேயன்றோ தத்துவம்?

**மூவா முகுந்தன் முதல் நாள்**
**பெறும் அமுதை**
**தேவாதி தேவன் திருமைந்தன்**
**தேவிதனை**
**மாவாழ் சுரத்தில் தம்**
**மாமகளாப் போற்றுகையால்**
**ஆவா குறவர் தவம்**
**ஆர் அளக்க வல்லாரே**

உலகங்களுக் கெல்லாம் தாயாகிய வள்ளி நாயகியை வேட்டுவ மன்னனாகிய நம்பியும் அவன் மனைவி கொடிச்சியும் தங்கள் குழந்தையாக அன்பு செய்து இனிது வளர்த்தார்கள். (தொடரும்)



✽ திருவல்லிக்கேணியில் வேத தர்மசாஸ்திர சம்மேளனத்தைப் புதுப் பெரியவர்கள் தொடங்கி வைத்தார்கள். கூடலி ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகளும் இந்த வைபவத்தில் கலந்து கொண்டு வேத தர்மத்தைப் பற்றி உரையாற்றிச் சிறப்பித்தார்கள்.



✽ ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி
தோத்திரம் தமிழ்
உரை நூலைச் சென்னை
கவர்னர் ஜயசாம
ராஜ ஒடெயரு தலை
மையில் டாக்டர்
சி. பி. ராமசாமி
அய்யர் அவர்கள்
சீனிவாச சாஸ்திரி
மண்டபத்தில் சமீபத்
தில் வெளியிட்டார்.

✽ மலாயா பல்கலைக் கழகத் தமிழ் மாணவர்கள் 'தீபாவளி இரவு' என்னும் கலை நிகழ்ச்சியை இரு நாட்கள் நடத்தி, அதன் வாயிலாக வசூலான நிதியை உலகத் தமிழ் ஆராய்ச்சி மகாநாட்டுக்கு வழங்கியுள்ளனர்.

✽ தமிழ் இசை விழாவில் கோபால கிருஷ்ண பாரதியார் பாடல் போட்டியில் முதல் பரிசு பெற்று, ராஜாஜி தம்புராப் பரிசை மந்திரி பூவராகவிடம் பெறுகிறார் ருக்மிணி ரமணி.





கந்தன் கருணை

திருமுருக கிருபானந்தவாரியார்

# 63. தவத்தின் தூது

வேட்டுவர்கள் செய்த அளவற்ற அருந் தவத்தால் அகில ஜக அண்ட நாயகியார் அவ் வேட்டுவர் குடிலில் தவழ்ந்தும், தளர்நடை பயின்றும், முற்றத்தில் உள்ள வேங்கைமர நிழலில் உலாவியும், சிற்றிலிழைத்துச் சிறு சோறு அட்டும், வண்டலாட்ட மயர்ந் தும், முச்சிலில் மணற் கொழித்தும், அம்மானையாடியும், தாய் தந்தையரை மகிழ்வித்தார். எளிய மக்களுக்குத் தான் இறைவியின் அருள் கூடுமென்பதற்கே இஃதோர் உதாரணம்.

வள்ளியம்மைக்கு வயது பன்னிரண்டு ஆகியது. தாயும் தந்தையும் அப் பருவத்தைக் கண்டு தம் குல வழக்கப் படி அவளைத் தினைப்புனத்தில் உயர்ந்த பரண் மீது காவல் வைத்தார்கள். வள்ளி — ஆன்மா. முருகன் பரமான்மா; தினைப்புனம் — நெஞ்சம்.. ஆணவ மலமே காடாக வளர்ந்திருக்கிறது.

காராரும் ஆணவக்
காட்டைக் களைந்தறக்
கண்டகங்கார மென்னும்
கல்லைப் பிளந்து
நெஞ்சகமான பூமிவெளி
காணத்திருத்தி மேன்மேல்
பாராதி அறியாத
மோனமாம் வித்தைப்
பதித்தன்பு நீராகவே
பாய்ச்சி அது பயிராகு
மட்டும் மா மாயைவன்
பறவை அணுகாத எண்ணம்
நேராக நின்றுவிளை
போகம் புசித்துய்ந்த
நின் அன்பர் கூட்டமெய்த
நினைவின் படிக்கு
நீ முன்னின்று காப்பதே
நின்னருட் பாரம்

என்பர் தாயுமான சுவாமிகள். வைராக்கியம் என்னும் பரண்மேல் ஏறி நின்று இறைவன் திருநாமங்களாகிய கவண் கற்களை எறிந்து மும்மலங்களாகிய பறவைகள் கொத்தாதபடி சிவகதி ஆகிய கதிருடன் கூடிய ஞானப் பயிரைக் காத்து வந்தாள் வள்ளி. 'முத்தொழிலையும், மூவரையும் காக்கும் முருகப் பெருமானுடைய தேவியாகிய வள்ளிப் பிராட்டியாரை வேட்டுவர்கள் தினைப் புனத்தைக் காக்க வைத்தது, எளிதாகக் கிடைத்த உயர்ந்த ரத்தின மணியைத் தூக்கணங் குருவி இருளோட்டத் தன் கூட்டில் வைத்தது போலிருந்தது' என் பார் கச்சியப்பர்.

காட்டில் எளிதுற்ற
கடவுள்மணி யைக்கொணர்ந்து
கூட்டில் இருளோட்டக்
குருகுய்த்த வாறன்றே
திட்டுசுடர் வேற்குமரன்
தேவியாம் தெள்ளமுதைப்
பூட்டுசிலைக் கையார்
புனம்காப்ப வைத்ததுவே

தினைப்புனத்தில் எத்திசையும் பார்க்கத்தக்க பரண்மீது நின்ற வள்ளியம்மையார், தட்டை, குளிர், தழல் ஆகிய கருவிகளை ஏந்தி, கிளி, காடை, கவுதாரி முதலிய பறவை இனங்களை ஓட்டியும், மான், முட்பன்றி, யானை முதலிய மிருகங்களைக் கவண் வீசியும் ஓட்டினர். ''பூவைகாள்! புறவங்காள்! மயில்காள்! மணிக் கிளிகாள்! குயில்காள்! ஆலோலம்; ஆலோலம்'' என்று இனிமை நிரம்பத் தனித் தனி கூவியும் தினைப்புனத்தைக் காவல் செய்து வந்தார்.

பூவைகாள், செங்கட்
புறவங்காள் ஆலோலம்
தூவிமா மஞ்ஞைகாள்,
சொற்கிளிகாள் ஆலோலம்
கூவல் சேர்வுற்ற
குயிலினங்காள் ஆலோலம்
சேவல்காள் ஆலோலம்
என்றுள் திருந்திழையாள்

மைனக்கள், புருக்கள், மயில்கள், கிளிகள், குயில்கள், சேவல்கள் முதலாயின கவண் கல் வீச்சினல் சிதறி ஓடின. ஓடியவை அவள் அழகாலும் குரல் இனிமையாலும் மீட்டும் மீட்டும் திரும்பி வந்தன. மும்மலங்கள் ஜீவனை விட்டு எளிதில் விலகாவன்றே!

வள்ளி நாயகியாருக்கு அருள் புரியும் பொருட்டு, முருகக் கடவுள் கந்த மலையை விட்டு இறங்கிப் புவிக்குயிராகிய திருத்தணிகை மலையில் தனியே வந்து எழுந்தருளினர். குல மரபின்படியும், முன்வினைப் பயன்படியும் வள்ளிக்கு இளமை முதலே முருகப் பெருமான் மீது மனம் நிறைந்த அன்பு உண்டாயிற்று. வயதும் பருவமும் முதிர முதிர அந்த அன்பு வளர்ந்து உலகப் பற்றுக்கள் தேயத் தொடங்கி விட்டன. முருகப் பெருமானை யன்றி வேறொன்றையும் மனம் நாடவில்லை.

நாரத முனிவர் இதனை அறிந்தார்.

திருப்பரங்குன்றத்தில் வள்ளியம்மையின் ஸ்தானத்தில் இன்றும் நாரத

க் காணலாம். அங்கு தேவ நாய
ஒருபுறம் தெய்வயானையுடனும்
புறம் நாரதருடனும் காட்சி
வார். நாரதர் திருமாலின் மைந்
ன் மைந்தர்; வள்ளியோ மாலின்
ள். அதோடு இருவருக்கும் இசை
லும் தொடர்புண்டு போலும்!
தினைப்புனத்தில் காவல் காத்துநின்ற
ள்ளியம்மையாரிடம் நாரதர் சென்று
கைதொழுதார். ''ஆகா; என்னே இவ்
ம்மையார் பேரழகு! இப்பெரு
ட்டியார் முற்பிறப்பில் திருமா
டைய திருமகளாவார்; சரவணப்
போய்கையில் பெருந் தவம் புரிந்து
மாரக் கடவுள் கட்டளையிட்டபடி .



இங்கு தோன்றித் தினைப்புனத்தைக் காவல் செய்து கொண்டிருக்கின்றார். இவர் ஆறுமுகக் கடவுளுக்குத் தேவி யாராகும் நற்றவமுடையவர். இவருடைய அருந்தவத்தின் பெருமையையும், பேரழகின் பெருமையையும் அளவிட வல்லார் யாவர்? முருகனுக்கும் வள்ளிக்கும் மணவினை உலகுய்ய விரைவில் நிகழ்வது சிறந்த பயனும்'' என்று தமக்குள் எண்ணினர். வள்ளியம்மையை வணங்கி விடைபெற்றுக் கொண்டு, திருத்தணிகை அடைந்தார்.

திருவேலிறைவன் திருவடியில் வீழ்ந்து பன்முறை பணிந்து, ''ஞான சக்திதர ஸ்வாமியே! ஞான பண்டிதரே! ஞானகரரே! ஞானசொரூபியே! ஞானோபதேச குருபரரே! ஞான விநோதரே!'' என்று யாழ் மீட்டிப் பாடிப் பரவி நின்றார் நாரதர். அவ்வாறு துதித்த நாரதருக்குத் தணிகேசர் தண்ணருள் புரிந்தார். இளம் பூரணரது இன்னருளைப் பெற்ற இசை முனிவர், ''எம் பெருமானே! முன்னைப் பிறவியில் திருமாலுடைய திருமகளாகிய சுந்தர வல்லியம்மையார், சரவண தடாகத்தில் இருந்து தேவரீரை மணந்து கொள்ளும் பொருட்டுப் பெருந்தவம் புரிந்தார். அப்போது தேவரீர் தோன்றி அருள் புரிந்து பணித்தவாறு வள்ளிமலையில் மானிடம் சிவமுனிவருக்குப் பிறந்து நம்பி என்ற வேட்டுவ மன்னனிடம் வள்ளி என்ற திருநாமத்துடன் வளர்ந்து தினைப்புனத்தைக் காவல் புரிந்து கொண்டிருக்கிறார். எங்கும் நீக்கமற நிறைந்து முழுதொருங்குணர்ந்த முழு முதல்வராகிய தேவரீருடைய திருவுள்ளம் அறியாததுண்டோ? அம்மாதரசியின் அழகில் ஆயிரத்தில் ஒரு கூறும் இலக்குமி தேவிக்கு இல்லை. தவக்கொழுந்தாகிய அத் தையல்நாயகியாரை உலகம் உய்யுமாறு தேவரீர் திருமணம் செய்து கொண்டு அடியேங்களுக்கு அருள் புரிவீர்!'' என்று விண்ணப்பம் செய்து கொண்டார்.

தூது வந்த நாரதர் கூறியதைக் கேட்ட ஆறுமுகப் பெருமான் மகிழ்ந்தார். ''நாரத! நன்று நன்று. நமக்கும் அது திருவுளந்தான்'' என்று திருவாய் மலர்ந்தருளி நாரதரை அனுப்பி வைத்தார். நாரதர் வள்ளியின் தவம். அத் தவமே முன்னர் தானாகவே பாதி வழி தேடி வந்த பரம்பொருளின் அருளைப் பூரணமாக்கி இட்டு வந்தது. நாடக நாரதர் போல் வெறும் காமமே பொருந்திய ஒரு தலைவன்—தலைவியைச் சேர்த்து வைத்தவர் இசை முனி என்று எண்ண வேண்டா!

வள்ளிப் பிராட்டியாருக்குத் திருவருள் புரிய வேண்டும் என்று திருவுளங் கொண்ட முருகக் கடவுள், மானிட வடிவம் பூண்டார். காலில் வீரக் கழல் அணிந்து, வில்லும் அம்பும் ஏந்தி வேட்டுவக் கோலத்துடன் தணிகை மலையினின்று நீங்கி வள்ளி மலையை அடுத்த தினைப்புனத்தை அடைந்தார். பரண் மீது இருந்த வள்ளி நாயகியாரை அணுகி இன்ப மயக்கம் கொண்டவர் போல் நடிக்கலானார்.

முருகப் பெருமான் வள்ளி நாயகியாரை நோக்கிப் பேசினர். பரமான்மா ஜீவான்மாவை நோக்கிப் பேதுறப் பேசலாயிற்று: ''வாள் போன்ற கண்களையுடைய பெண்ணே! உலகிலுள்ள மாதர்கட்கெல்லாம் இறைவியாகிய உன்னை உன்னதமான இடத்தில் வைக்காமல் வேட்டுவர்கள் தனியே இந்தக் கானகத்தில் தினைப்புனத்தைக் காக்க வைத்தனரே! அவர்களுக்குப் பிரம்மன் அறிவைப் படைக்க மறந்து போய் விட்டான் போலும்!''

**நாந்தகம்அனைய உண்கண்**
**நங்கைகேள் ஞாலந் தன்னில்**
**ஏந்திழை யார்கட்கெல்லாம்**
**இறைவியாய் இருக்கும் நின்னைப்**
**பூந்தினை காக்க வைத்துப்**
**போயினர் புளினரா னோர்க்கு**
**ஆய்ந்திடும் உணர்ச்சி ஒன்றும்**
**அயன்படைத்திலன் கொல்?**

**என்றான்.**

வள்ளி பதில் பேசவில்லை. வேட்டுவக் குமரனுடைய நடவடிக்கைகளைக் கவனித்து வந்தாள். முருகப் பெருமான் மேலும் பேச்சைத் தொடர்ந்தார்.

''பெண்ணமுதே! உன் பெயர் என்ன? உன் ஊர் யாது? நின் ஊருக்குப் போகும் வழி எது?''

வள்ளி மீண்டும் பதில் ஏதும் பேசவில்லை; முருகப் பெருமானிடம் இன்முகம் காட்டவில்லை. முருகப் பெருமான் பேசப் பேச வள்ளியின் முகம் வேறு திசையில் திரும்ப ஆரம்பித்தது. அவள் மனம் கல்லாகி விட்டதோ? முருகப் பெருமான் மனம் உருகிவிட்டது. தன்னிடம் பேசாவிட்டால் பின்னர் வள்ளிக்குப் பெரிய பழி ஒன்று ஏற்படும் என்று கூறிப் பயமுறுத்தினர். அதாவது தற்கொலை செய்துகொள்வாராம்!

**மொழியொன்று புகலா யாயின்**
**முறுவலும் புரியா யாயின்**
**விழியொன்று நோக்கா யாயின்**
**விரகமிக் குழல்வேன் உய்யும்**

ழியொன்று கராட்டா யாயின்
மனமுஞ்சற் றுருகா யாயின்
ழியொன்று நின்பாற் சூழும்
பராமுகம் தவிர்தி என்றான்.
உலைப்படு மெழுகதென்ன
உருகியே ஒருத்தி காதல்
வலைப்படு கின்றான் போல
வருந்தியே யிரங்கா நின்றான்
கலைப்படு மதியப் புத்தேள்
கலங்கலம் புனலிற் றேன்றி
அலைப்படு தன்மைத் தன்றே
அறுமுகன் ஆட லெல்லாம்.

நாரதர் சொல்லி முருகப் பெருமான் வள்ளியிடம் வரவில்லை. இதனை நாம் அறிந்து கொள்ள வேண்டும். நாரதரே தவம். தவம் தூதாகச் செல்லு முன்பே இறைவன் ஆன்மாவை நோக்கி வந்து விடுகிறான். பக்குவப்பட்ட ஆன்மாவின் பொருட்டு இறைவன் இரங்கி வந்த அருள் நிலையை இது அறிவிக்கின்றது. நாம் இறைவனை நோக்கி ஓரடி எடுத்து வைத்தால் இறைவன் நம்மை நோக்கி ஆயிரம் அடி எடுத்து வைக்கின்றார். காரைக்காலம்மையார் பேயுருக் கொண்டு கயிலை மலை ஏறக் கண்ட சிவபெருமான் மனமுவந்து, அவரை ''அம்மையே'' எனப் பணிவுடன் அழைத்தார் அன்றே?

சுவாமி எதிர்ப்படும்போது நாம் செய்த தவம் விலகிப் போகிறது. சிவம் தோன்றும் வரையில்தான் நாம் செய்த தவம் இருந்து துணை புரியும். சிவம் தோன்றிய பிறகு தவத்திற்கு வேலை யில்லை. எழுதுகோலினால்தான் எழுதுகின்றோம். என்றாலும் எழுதும் போது எழுத்தைத்தானே கவனிக்கின்றோம்? கோலைக் கவனிப்பதில்லையே? ''எழுதுங்கால் கோல் காணாக் கண்'' என்பார் திருவள்ளுவர். முருகப் பெருமான் தன் சுய உணர்வுடன் செல்லாமல் வள்ளியின் முன் வேடனாகச் செல்லக் காரணம் என்ன? வள்ளியின் உள்ளப் பக்குவத்தை அறிவதற்காகவே அவ்வாறு சென்றார் சுவாமி. பக்குவப்படாத ஆன்மாக்களுக்கு இறைவன் தன் சுய உருவுடன் காட்சி தரமாட்டான். மானுட சட்டை தாங்கி வந்து அருளுவான்.

''உணக்கிலாததொர் வித்துமேல்
விளையாமல் என்வினை ஒத்தபின்
கணக்கிலாத் திருக்கோலம் நீ வந்து
காட்டினாய் கழுக்குன்றிலே''
— திருவாசகம்

இருவினையொப்பு, மல பரிபாகம் சத்தினிபாதம் எய்திய பக்குவர்க்கே தன் அருள் திருமேனியுடன் காட்சி தருவான் இறைவன்.

(தொடரும்)













# பொன்தேர் நாயகன்

வி. கோபாலன்

அகங்காரப் பனியை மாய்த்து, அறியாமை இருளை விரட்டி சுபிட்சக் கதிர்களை விரித்தவாறு ஞானப் பேரொளி மழை பொழிந்து மன்னுயிர்களை வாழ்விக்கும் சூரிய தேவன் மிகப் பழைமையான வேதகாலத்திலேயே தனிப் பெரும் தெய்வமாகப் போற்றி வழிபடப் பெற்றிருக்கிறான்.

ஒளித் தேவனின் வரலாறு பற்றி பலவிதத் தகவல்கள். சூரியதேவன் விச்வகர்மாவின் மகள் ஸம்க்ஞாவை மணந்து கொண்டதாகவும், கணவனின் வெப்பத்தைத் தாங்க முடியாத ஸம்க்ஞா தேவி, தனது நிழலை — சாயாவைப் புகுந்தகத்தில் நிறுத்திவிட்டுத் தான் பிறந்தகம் போய்விட்டதாகவும் மத்ஸ்ய புராணம் கூறுகிறது. ஸம்க்ஞா தேவி, சாயா இருவரும் அருணனின் தேவிகள். சூரியனின் வரலாற்றை விரிவாகக் கூறும் சௌர புராணம் என்னும் ஒரு நூல் இருக்கிறது. உபநிஷத நூல்கள் பல சூரியனும், நாராயணனும் ஒரே பரம்பொருள்தான் என்பதை வலியுறுத்துகின்றன. கீதையில் கண்ணன், ''நானே விஷ்ணு! பன்னிரண்டு ஆதித்யர்களுள் நானே சிறந்தவன். ஒளிரும் கிரகங்களுள் நானே சிறந்தவன்; நானே சூரியன்'' என்று மொழிகிறான்.

சூரியதேவனைப் பிரதான தெய்வமாக வழிபடும் நெறிக்கு 'சௌரம்' என்று பெயர். கிறிஸ்துவ சகாப்தத்துக்கு முற்பட்ட காலத்திலேயே இந்திய பூமியின் வடபகுதியிலும், தென்பகுதியிலும் சூரியன் இயற்கை தெய்வமாகப் போற்றி வழிபடப்பெற்றிருக்கிறான். தொல்காப்பியத்தில் பாலை நிலத்துக்கு எனத் தனித் தெய்வம் ஒன்றையும் குறிப்பிடவில்லை எனினும், 'பிறர் பகவதியையும், ஆதித்தனையும் தெய்வமென்று வேண்டுவர்' என இறையனார் அகப்பொருள் உரைகாரர் கூறுகிறார்.

''ஞாயிறு போற்றுதும்!
ஞாயிறு போற்றுதும்!''

என இளங்கோவடிகளும்,

# கந்தன் கருணை



திருமுருக கிருபானந்தவாரியார்

## 64. வேடனாய், வேங்கையாய், விருத்தனாய்

தன்னையன்றி வள்ளியின் மனம் மற்ற ஆடவரிடம் இம்மியும் செல்லாது என்று உலகுக்குக் காட்டவும் ஐயன் இவ்வாறு வேடமிட்டுச் சென்றார். மேலும் தந்தை வழி ஒழுகுவது தனயன் முறையன்றோ! பார்வதி அம்மையிடம் சிவபிரான் முதலில் விருத்த உருவில் மாறுவேடத்தில்தானே சென்றார்.

முருகப் பெருமான் அனலிற் பட்ட மெழுகு போல் உருகிப் பலவாறு வள்ளி நாயகியாரிடம் அன்பு மொழி பகர்ந்து கொண்டிருந்தபோது வேட்டுவர் தலைவனாகிய நம்பி ராஜன் தன் பரிசனங்கள் சூழ அங்கு வந்தான். உடனே, முருகப் பெருமான் அடி வேதங்களாகவும், நடு சிவாகமங்களாகவும், கிளைகள் யாவும் பல கலைகளாகவும் தாம் ஒரு வேங்கை மரமாகி நின்றார்.

ஆங்கது காலை தன்னில்
அடிமுதன் மறைகளாக
ஓங்கிய நடுவணெல்லா
முயர்சிவ நூலதாகப்
பாங்கமர் கவடு முற்றும்
பல்கலை யாகத் தானோர்
வேங்கையி னுருவ மாகி
வேற்படை வீரன் நின்றான்.

நம்பிராசன் தன் மகளுக்குத் தேனும் தினைமாவும் கிழங்குகளும் தந்து ஆங்

வேங்கை மரத்தைக் கண்டான். ...றுடு வந்த வேட்டுவர்கள், ''இது ...இருந்த மரமன்று; புதிதாக ... ஒரு மரம் இங்கு ஏற்பட்டிருக் ... திடீரென்று தோன்றிய இந்த ...தினால் நிச்சயம் தீங்கு வரும். ஆத ...இதனை வெட்டி எறிய வேண்டும்'' ...றனர். மரத்தை வெட்டவும் ...கள் முயன்றனர்.

...ரத்தை வெட்ட முயன்ற அவர் ... விலக்கிய நம்பிராசன், தன் மகளை ...க்கி, ''குழந்தாய் வள்ளி! இம் ... இங்கு எவ்வாறு உண்டாயிற்று?'' ...று வினவினன்.

''அப்பா! இதன் வரலாறு நான் அறி ...ன். இது இப்போதுதான் இங்கு ...ன்றியது'' என்று வள்ளி கூறினள். ...றுற வள்ளி வேடனாக வந்தவன் ... இதயமுகந்த கந்த நாயகனே ... அறிந்திருப்பாளோ? அன்பு எதைத் ...ன் காட்டிக் கொடுக்காது?

''அம்மா; அஞ்சாதே! இம்மரம் ...னக்கு நிழல் தந்து உதவும்'' எனச் ...சொல்லிவிட்டுத் தன் குழாத்துடன் ...ற்றூர் சென்றான் நம்பிராசன். தரு ...ழலில் வீணையின் நாதமும் மாலை ...லவும் இளவேனில் தென்றலும்போல் ...ன்பம் தரும் இறைவன் திருவடி ...ழலை அனுபவித்தானே?

ஓங்கி நின்ற மரத்தைக் கண்டான் ...ம்பி. கோடையில் இளைப்பாற்றிக் ...காள்ள உதவும் குளிர்தரு என்று ...றைவனைப் பாடுவார் வள்ளலார். ...யற்கையோடு இயைந்து வாழ்ந்த ...ம்பிராஜனும் அம்மரத்தில் என்ன ...ண்டானே? வெட்ட மனம் கொள்ள ...வில்லை.

**மாசில் வீணையும் மாலை மதியமும்**
**வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்**
**மூசு வண்டறை பொய்கையும் போன்றதே**
**ஈசன் எந்தை இணையடி நிழலே**

என்று இறைவன் திருவடி நிழல் இன் பத்தைத் திருநாவுக்கரசர் அனுபவித்துப் பாடியிருக்கிறார் அல்லவா?

நம்பிராசன் தன் பரிசனங்களுடன் திரும்பிச் சென்றதும் குமாரக் கடவுள் வேங்கை மர வடிவம் நீங்கி முன் போல் மானிட வடிவம் கொண்டார். பருவ மடந்தையை மயக்குவது கட் டிளங் காளையாகிய பரம புருஷனுடைய எழிலன்றோ? கண்ணைக் கவரும் கட் டிளங்காளையாக வந்து முருகன் வள்ளி யிடம் பேச்சுக் கொடுத்தார். ''மாத ரசே! உன்னையே புகலாக வந்தடைந் தேன்! இனி உன்னைப் பிரிந்து வாழேன். உன் கண்ணாகிய வலையில் அகப்பட்ட எனக்கு அருள் புரிவாயாக! என்னை மணந்து இன்பத்தைத் தருவாயாக! உன்மீது மையல் கொண்ட என்னை மறுக்காமல் ஏற்றுக்கொள்! உலகமெல் லாம் உன்னை வணங்கும் உயர் பதவியை உனக்குத் தந்தருள்வேன்!'' என்று கூறியருளினர்.

வள்ளி நாயகியாரை முருகவேள் பணிந்தார் என்று அருணகிரிநாதரும் பல இடங்களில் கூறுகிறார். தாய் தன் குழந்தைக்கு மிக மிகக் கருணை யுடன் பால் ஊட்டுகிறாள்; அக்குழவி பாலுண்ண மறுக்கும்போது ''அன் புள்ள கண்ணு! உன்னைக் கும்பிடு கிறேன்; பால் குடித்துவிட்டு விளையாடு'' என்று வேண்டுவாள். அது போல் எவ் வுயிர்க்கும் தாயாகிய தயாபரன் வள்ளிக்கு அருள் புரியும் பொருட்டு அவளை வணங்கியும் அருள் புரிந்த தையே அருணகிரிநாதர் இவ்வாறு கூறுகிறார்.

முருகப்பெருமானின் மனக் கருத்தை அறிந்த வள்ளி நாயகி நாணங் கொண் டாள். ''ஐயா! நீங்கள் உலகம் புரக் கும் உயர்குலச் செம்மல். நான் தினைப் புனம் காக்கும் இழி குலமாகிய வேட்டு வச் சாதிப் பெண். தாங்கள் கேவலம் குறத்தியை விரும்புவது தகாது. புலி பசித்தால் புல்லைத் தின்னுமோ?'' என்று கூறினள். சுவாமியை அறிந்த போதே அவரை அறியாதவள் போல வும் பேசினளோ? அவள் பேசிக் கொண் டிருக்கும்போதே வேடர் பரிவாரம் குழ உடுக்கை முதலிய ஒலியுடன் அங்கு மீண்டும் வந்தான் நம்பிராசன். படை ஒன்று பேரொலியுடன் வருவது போன் றிருந்தது அக்காட்சி. அருணகிரிநாதர் வருணனை செய்யும் அழகே அழகு!

**தனத்த னத்தன தனதன தனதன**
**திமித்தி மித்திமி திமிதிமி திமிதிமி**
**தகுத்த குத்தகு தகுதகு தகுதக தகுதிதோ**

**தரித்த ரித்தரி தரிரிரி ரிரிரிரி**
**தடுட்டு டுட்டுடு டுடுடு டுடுடு**
**தமித்த மத்தள தமருக விருதொலி கடல்போல**

(திருப்புகழ் — ''சினத்தி லத்தினை'')

நம்பிராசன் தன் பரிவாரங்களுடன் வருவதைக் கண்ட வள்ளிநாயகியார் அஞ்சி நடுங்கிக் குமாரக் கடவுளை நோக்கி ''ஐயா! என் பிதா வருகிறார். வேடர்கள் மிகவும் வலிமை உடைய வர்கள்; தீயவர்கள். நீங்கள் பிழைக்க நினைத்தால் இங்கிருந்து ஓடிப்போய் விடுங்கள்'' என்றாள். வள்ளி நாயகியார் தம்மீது கொண்ட அன்பை எண்ணி வேற் பரமன் வேடர் எதிரில் விருத்த தவ வேடங் கொண்டார்.

தன் பரிசனங்களுடன் ஆங்கு வந்த நம்பி ராசன் அந்தவக் கிழவரைக் கண்டு வியந்து நின்றான்.

பெருமான் அவனை நோக்கி, ''உனக்கு வெற்றி உண்டாகுக; நின் குலம் தழைத்து ஓங்குக; சிறந்த வளம் பெற்று வாழ்க'' என்று வாழ்த்தித் திருநீறு தந்தருளினர்.

நம்பிராசன் அவர் திருவடிகளை வணங்கி, ''சுவாமி! இந்த மலைக்குத் தாங்கள் வந்த காரணம் யாது? தங்களுக்கு வேண்டியது யாது? கூறும்'' என்று கேட்டான். ''நம்பி! இந்தக் கிழப் பருவம் நீங்கி இளமை வரவும் உள்ளத்தில் உள்ள மயக்கம் நீங்கவும் இங்குள்ள குமரியில் ஆட வந்தேன்'' என்று அருளிச் செய்தார் எம்பிரான். குமரி என்பது தீர்த்தத்தைக் குறிப்பிடுமாறு இப்படிப் பேசினர்.

''சுவாமீ! தாங்கள் கூறிய தீர்த்தத்தில் முழுகிச் சுகமே இருப்பீராக! எனது புதல்வியும் இங்கு தனித்திருக்கிறாள். தாங்களும் அவளுக்குத் துணையாயிருப்பீராக'' என்றான் நம்பிராசன்.

அறுமுகங் கரந்த அண்ணலும், ''அழகிதாம்'' என்றனர் குறும்பாக.

வள்ளி நாயகியிடம் அப்பெரியவரை அழைத்துச் சென்ற நம்பி, ''அம்மா! இக்கிழ முனிவர் உனக்குத் துணையாக இருப்பார்'' என்றான். காயும் கனியும் தேனும் தினைமாவும் தந்து விட்டு வேடுவர்களுடன் ஊர் திரும்பிச் சென்றான்.

நம்பிராசன் ஊர் திரும்பிச் சென்றதும் பெரியவர் வள்ளியின் முருக பக்தியைச் சோதித்தார். வள்ளியும் தன் பக்தியைப் பாடலாகப் பாடினாள். முருக நாமத்தின் பெருமைகளைப் பாடினாள்.

முடியாப் பிறவிக் கடலிற்
புகார் முழுதும் கெடுக்கும்
மிடியாற் படியில் விதனப்
படார் வெற்றி வேற்பெருமான்
அடியார்க்கு நல்ல பெருமான்
அவுணர் குலமடங்கப்
பொடியாக்கிய பெருமான்
திருநாமம் புகல்பவரே

முருகப்பெருமானுடைய நாமத்தைச் சொல்லுகிறவர்கள் பிறவி என்னும் கடலில் அழுந்த மாட்டார்கள். வறுமையால் வாட மாட்டார்கள். ஏனெனில் முருகன் அடியார்க்கு நல்லவன். தீமை செய்யும் அசுரர் குலத்தை அழித்தவன்.

முருகப் பெருமான் வேங்கை மரமானது, ஒருவன் ஒருத்தி மீது மோகங் கொண்டால் மரம் போலாவான் என்பதையே உணர்த்துகிறது. பெண்ணுசை கொண்டோன் விரைவில் கிழவனாவான் என்பதைக் குறிக்கவே கிழவனாக மாறினர்.

வள்ளி நாயகியாரிடம் சோதனை முடிந்தது. கிழவருக்குப் பசி உண்டாயிற்று. அவ்வருந் தபசி, வள்ளி நாயகியாரிடம், 'அருந்த பசி' என்றார்.

வள்ளியம்மையார் தேனும் தினைமாவும் நற்கனிகளும் கொடுத்தாள். அதனை வாங்கி உண்ட பெரியவருக்கு நீர் வேட்கை மிகுந்தது. ''தண்ணீர் தண்ணீர்'' என்று கேட்டார்.

வள்ளியம்மையார் அதனைக் கேட்டு, ''சுவாமி! இங்குள்ள ஆறு மலை தாண்டிச் சென்றால் ஏழாவது மலையில் சுனை இருக்கிறது. அங்கே போய்த் தண்ணீர் பருகி வாருங்கள்'' என்றாள்.

பூட்டுவார் சிலைக்கை வேடர்
பூவையே! புலர்ந்த தெண்ணீர்
வேட்டனன் விருத்தன் வேற்பில்
வியனெறி சிறிதுந் தேரேன்
தாட்டுணை வருந்துமென்று
தாழ்த்திடா தொல்லைபோகிக்
காட்டுதி சுனை நீரென்றான்
அறுமுகங் கரந்த கள்வன்

''பெண்ணே! நான் புதியவன். மலை வழி அறியேன். நீ வந்து வழி காட்டு'' என்றார் முதியவர். பெருமாட்டியார் விருத்தரை வித்தியாசமின்றிக் கைப்பிடித்து அழைத்துச் சென்று சுனையில் நீர் பருகச் செய்தாள். ஆறு மலை தாண்டியுள்ள அச் சுனை ஆறு பத்மங்களுக்கு அப்பாலுள்ள சகஸ்ராரம். மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அனுகதம், விசுத்தி, ஆக்ஞை என்ற சக்கரங்கள் தாண்டியுள்ள அமிருதப் பொழிலும் யோகி அடையும் இறுதி ஸ்தானமுமாகிய சகஸ்ராரத்தில்தானே ஜீவனும் பரமனும் கூட வேண்டும்? ஆறு பத்மங்களை உடலில் உயிர்நிலை தொடங்கி முறையே உடலின் மேல் பகுதிகளில் உள்ளவை. அந்த ஏழாவது இடத்தில் இறைவனுக்கு ஆன்மா தன்னை அர்ப்பணம் செய்து வழிபட வேண்டும் என்பது தத்துவம்.

பசித் துன்பம் நீங்கிய முனிவருக்கு அருட் பசி எடுத்தது; அதனைக் காதலாக வெளிப்படுத்தினர். ''பெண்ணமுதே! எனக்குப் பசியும் நீங்கிற்று; தாகமும் நீங்கிற்று. உன் மீது வைத்த மோகம் நீங்கியதில்லை. பசியையும், தாகத்தையும் தணியச் செய்தது போலவே மோகத்தையும் தணியச் செய்வாய்'' என்று கூறினர்.

சினமறியாத மதுரக் குற வள்ளியாரும் அப்போது சினம் கொண்டு சீறினாள். கற்புச் செல்வம் அல்லவா? (தொடரும்).

# கந்தன் கருணை

திருமுருக கிருபானந்தவாரியார்

## 65. சிவனை மணந்தது சிவம்

மோகமுற்ற முதியவரிடம் வள்ளியம்மை சீற்றத்துடன் கூறினுள்:

''பெரியவரே! தவவேடம் கொண்ட உமக்கு இவ்வெண்ணம் தகுதியோ? புனங் காக்கும் சிறுமியாகிய என்னை இரந்து நிற்றல் உமது பெருமைக்கு அழகோ? உம் செய்கையை எனது குலத்தார் அறிந்தால் உமக்குப் பெருங் கேடு விளையும். உமக்கு நரை வந்தும் நல்லுணர்வு வரவில்லையே! பித்தரைப் போல் பிதற்றி உமது குலத்துக்கும் இவ்வேட்டுவர் குலத்துக்கும் பெரும் பழியைச் செய்து விட்டீர்'' என்று வெறுத்துப் பேசினுள் பிராட்டி. இதன் பின்னும் கிழவருக்குத் துணை யிருத்தலாகாதெனக் கருதி, புனங் காக்கப் புறப்பட்டுச் சென்றுள்.

வள்ளிப்பிராட்டியார் செல்லுவதைக் கண்ட தமக்குவமை இல்லாத் தலைவர் விக்கினங்களை யெல்லாம் நீக்கும் தந்தி முகத்து எந்தையை, ''முன்னே வருவாய் முதல்வா!'' என்று துதித்தார். விநாயகரை மறந்ததால் முதலில் பரமேசுவரர் திரிபுர தகனத்துக்கு முயன்ற போதும், தேவியார் பண்டாசுர வதத்துக்கு முயன்ற போதும் பலனில்லை. விவாகமாயினும் அந்தப் பிரம்மசாரியை நினைந்தாலே முடியும் போலும்! முருகன் தமக்கு மூத்த வேழமுகப் பெருமானை வேண்டினுர். அருள் மயமான விநாயகப் பெருமான் தம்பிக்கு உதவி புரிவதற்காக அக்கணமே மத யானை வடிவு கொண்டு மலையும் மண்ணும் நடுங்க அங்கு குலுங்க ஓடி வந்தருளினுர்.

வள்ளியம்மையார் மத யானை நெருங்குவது கண்டு அஞ்சினுள். திசை புரியாமல் ஓடித் தான் வெறுத்தொதுக்கிய விருத்த முனிவரையே தழுவிக் கொண்டாள். ''யானையிடமிருந்து என்னைக் காப்பாற்றும்'' என்று அலறினுள்.

ஓங்காரமாகிய விநாயக யானை தோன்றியவுடன் ஆங்காரம் தானே நசித்துப் பூரண சரணுகதி யடைய வேண்டியதுதானே? ஜீவான்மா பரமான்மாவை அடைக்கலம் புகுந்து விட்டது. இனி அநுக்கிரகம் நடக்க வேண்டியதுதானே!

முருகப் பெருமான் யானையாக வந்த விநாயகப் பெருமானை வழிபட்டுத் துதித்து, ''எம்பெருமானே! தோன்றியதால் நான் கருதியது நிறைவு பெற்றது. ஆதலால், தாங்கள் மீண்டெழுந்தருள்க'' என்று விண்ணப்பம் செய்தார்.

விநாயகரும் மறைந்தருளினுர்.

**அத்துய ரதுகொடு சுப்பிர மணிபடும்**
**அப்புன மதனிடை யிபமாகி**

**அக்குற மகளுட னச்சிறு முருகனை**
**அக்கண மணமருள் பெருமாளே**

என்று இதனுலேயே விநாயகரைத் து[...] கிருர் அருணகிரியார்.

விநாயக உருவாக வந்த பிரண[...] இப்போது ஆறுமுகப் பெருமான் நாவில் ஒலியாகப் பொதிந்தது. அண்[...] வள்ளியின் சிரத்தைத் தம் திருக்க[...] தால் தீண்டி திவ்விய தீட்சை தந்து [...] கணமே அவளது செவியில் பிரண[...] உபதேசம் செய்தார் பிராண நாயக[...] இதுவே உண்மையான வள்ளித் [...] மணம். அன்று தாதைக்குச் செ[...] மகத்தான உபதேசத்தை இ[...] பிரிய பத்தினிக்குப் புரிந்து விட்ட[...] ஞான பண்டித சுவாமி. தெய்[...] விவாகங்களில் இது போன்ற ஒப்ப[...] புனிதமுள்ள இன்னென்று உண்ட[...]

**ஓது குறமான் வனத்தில் மேவியவள்**
**கால் பிடித்[...]**

**ஓமெனுபதேச வித்தொடணைவோனே**

என்று இந்தப் பெருநிகழ்ச்சி[...] 'க[...] அருணகிரியார் பாடுகிருர்.



ருல் பிராண வாயு; வள்ளியின்
ல் பிடித்து' என்பது அவளுக்கு
ாணுயாமம் அருளியதைக் குறிக்கும்.

**தருவா யரற்கு முபதேசம் வைத்த**
**குகனே குறத்தி மணவாளா**

ற்று திருப்புகழில் முதலில் உபதேசத்
தயும் அடுத்து வள்ளித் திருமணத்தை
ம் சேர்த்துக் கூறுவதாலும் இரண்டும்
ானமயமானது என்று தெளியலாம்.
பதேசத்தால் சிவம் சீவனை மணந்ததே
ள்ளியம்மை விவாகம்.

பிரணவத்தின் உபதேசத்துடனேயே
ப்பிரணவத்தின் திவ்விய வடிவான
சாருபத் தோற்றமும் உண்டாயிற்று.

மாறு வேடத்திலிருந்த ஆறுமுகப் பெருமான் தமது இயல்பான ஆறுமுகத் திருவுருவை அக்கணமே வள்ளியம்மைக்குக் காட்டியருளினுர். பன்னிரண்டு திருப் புயங்களும், வேற்படையும், குலிசமும், மற்றைய ஆயுதங்களும் தாங்கி மயில் வாகனத்தில் காட்சியளித்த ஐயனைக் கண்ட வள்ளிப் பிராட்டியார் எத்தகைய உணர்ச்சிகள் எய்தியிருப்பாள் என்பதை நாம் எப்படி வருணிக்க முடியும்? முதலில் உணர்ச்சியே ஒழிந்த அநுபவ ஆனந்தப் பெருநிலை. அப்புறம் பரமன்—பக்தன் என்ற இரட்டை உறவில் கொண்ட பக்தி ஆனந்தம். இவரையா வெறுத்து ஒதுக்கிஞேம் என்ற அச்சமும்





"நூறு நாட்களுக்கும் மேலாக வெள்ளி விழா வாரத்தை நோக்கித் தொடர்ந்து நடைபெறுகிறதுசார்!"

"எந்த சினிமா?"

"இல்லே! என் மனைவிக்கும் பக்கத்து விட்டுக் காரிக்கும் நடக்கும் சண்டைதான்!"

---

தோன்றிற்று. வள்ளியம்மை பெருமானடி பணிந்தும் துதித்தும் ஆராத ஆன்மக் காதலில் கசிந்தாள். முருகவேளின் அருட் கண் பார்வை வள்ளிப் பிராட்டியாருக்கு ஞான தீட்சையாகியது.

மெல்ல மெல்ல வள்ளியும் தெளிந்து பேசலானாள்: "எம்பெருமானே! இத் திருவுருவத்தை முன்னரே காட்டாமையினால் அடியேன் செய்த பிழைகளைப் பொறுத்தருள வேண்டும்" என்று அன்புடன் வேண்டிக் கொண்டாள். கந்தவேள் பிராட்டியாரை நோக்கி அருள்மழை பொழிந்தார். "பெண்ணே! நீ முற்பிறப்பில் திருமாலின் புதல்வி. நம்மை நோக்கி மணக்குமாறு நற்றவம் செய்தாய்; ஆதலால் இப்பிறப்பில் நாம் உம்மிடம் வலிதில் வந்து அருள் புரிந்தோம்; எம்மையன்றி உன் மனத்தில் வேறெவர்க்கும் இடமில்லை என்று உலகுக்கு உணர்த்தவே வேறு வடிவங்களில் வந்தோம்" என்று திருவாய் மலர்ந்தருளினார். பின்னர் கந்தப் பெருமான், "வள்ளி! நீ தினைப்புனம் செல்; யாமும் அங்கே வருவோம்" என்று கூறி அனுப்பினார்.

ஆன்மாவின் பக்குவத்துக்கு மீண்டும் மீண்டும் பரீட்சை பார்ப்பான் இறைவன். புலன்களிலிருந்து ஆன்ம விடுதலை பெறுவது எவ்வளவு கடினம் என்பதையே இனி வரும் கதைப் பகுதி உணர்த்துகிறது. தினைப்புனம் திரும்பிய வள்ளியம்மையார் மீண்டும் பரண்மீ நின்று, "ஆலோலம்" என்று ஆ லோட்டினாள். அப்போது புன காக்கும் பாங்கி வந்து அம்மையாரை வணங்கினாள். வள்ளியம்மையார் சூடிய பூக்களின் மணம், அவயவங்களின் தோற்றம் முதலியவற்றின் மாற்றத்தைக் கண்டு ஐயங் கொண்டாள். "அம்மா! தினைப்புனத்தைப் பறவைகள் பாழ்படுத்த இவ்வளவு காலம் எங்கு சென்றாய்?" என்று வினவினாள். அதனைக் கேட்டு வெட்கிய நாயகியார், "நான் மலை மீதுள்ள சுனையில் நீராடச் சென்றேன்" என்று நாணத்துடன் கூறினாள்.

மைவிழி சிவப்பவும் வாய் வெளுப்பவும்
மெய்வியர் வடையவும் நகிலம் விம்மவும்
கைவளை நெகிழவும் காட்டுந் தண்சுனை
எவ்விடை யிருந்துள தியம்புவா யென்றாள்

வள்ளியம்மையார் மீண்டும் பாங்கியைப் பார்த்து, "நான் உன்னையே உற்ற தோழியாக எண்ணியிருந்தேன். நீ என் மீது குறையாக எண்ணாதே!" என்றாள். அச்சமயத்தில் ஆறுமுகக் கடவுள் முன்போல் வேட வடிவு தாங்கி வேட்டையாடி இளைத்தவர் போல் அங்கு வந்தார். வள்ளிநாயகியாரையும் பாங்கியையும் நோக்கி, "பெண்மணிகளே! என் கணையால் தாக்குண்டு பிளந்த வாயும், புண்பட்ட மேனியும் கொண்ட பெண் யானை ஒன்று இங்கு வந்ததோ? அதனை நீங்கள் கண்டதுண்டோ?" என்று வினவியருளினார். வந்தவர் கண்களும் இருந்தவள் கண்களும் உரையாடுவதிலிருந்தே இருவரின் கருத்துக்களைக் கண்டு கொண்ட பாங்கி, "அம்மையாடியசுனை இதுதான் போலும்" என்று எண்ணித் தனது புனத்துக்குச் சென்று பரணில் இருந்தாள்.

வேழம் வினவி வந்த வேலவர் பாங்கியிடம் சென்றார். இன்னும் அவர் லீலைகள் மீதம் வைத்திருந்தார். எல்லாம் முடிந்த பின்பே சீவனும் சிவமும் ஐக்கியமாக வேண்டும்! "பெண்ணே! எனக்கு உற்ற உறவினள் நீயே; விரும்பிய பொருள் எல்லாவற்றையும் நான் தருவேன்; நின் தலைவியை எனக்குத் தருவாய்" என்று பாங்கியிடம் வேலவர் அருளினார். பாங்கி, "ஐயா! மறவரின் பேதைப் பெண்ணைப் பெரியோர் விரும்புவரோ?" என்றாள்.

"பெண்ணே! திருமால் தந்த அமுதமும், வேட்டுவர் செய்த மாதவப் பயனும், பெண்களுக்கு அரசியும், எனக்கு ஆசையைத் தந்து பேரருள்

ந்த பேரழகியுமாகிய தலைவியைப்
ர்த்துப் பேதை என்று கூறியதே
தைமை'' என்று கூறினர் ஐயன்.

''ஐயா! இங்கே வேடவர் வருவர்.
கொடியவர்களான அவர்கள்
னைக் கண்டால் பேராபத்தாக
டியும். விரைவில் இங்கிருந்துபோம்''
ன்றுள் பாங்கி. பெருமானே,

தோட்டின் மீதுசெல் விழியினுய்
தோகையோ டென்னைக்
கூட்டிடா யெனில் கிழிதனி
லாங்கவள் கோலந்
தீட்டி மாமட லேறிநும்
மூர்த்தெரு வதனி
லோட்டு வேனிது நானையான்
செய்வ தென்றுரைத்தான்

தலைவியை அடையவொண்ணுத தலை
ன் பனைமடலாலான குதிரையை
றி ஊர்தல் பண்டைய பழக்கம். இத
ச் செய்வதாக முருகன் கூறியதும்,
ஐயா! நீங்கள் மடலேற வேண்டாம்.
தோ தெரிகின்ற மாதவிப் பொதும்ப
ல் மறைந்திரும். நான் என் தலைவியை
ங்கே அழைத்து வருவேன்'' என்
ள் பாங்கி. அதன்படி, மயிலேறும்
யன் மாதவிப் பொதும்பரில் மறைந்
ருந்தார்.

பாங்கி, வள்ளிநாயகியைப் பொதும்ப
டம் அழைத்தேகினுள். பிராட்டி
ாரை அங்கேயே விட்டு விட்டு,
நான் உனக்கு மலர் பறித்துக்
காண்டு வருவேன்'' என்று கூறி
மல்ல அங்கிருந்து நீங்கினுள். பாங்கி
ங்கியதும் பரமன் வெளிப்பட்டுப்
ாவை வேந்துக்குப் பேரின்பம் நல்
னர். பிறகு, ''நானே வருவேன்; நின்
இருக்கை செல்'' என நீங்கினர்.

பாங்கி மலர் பறித்து வந்து சூட்டி
மனம் நொய்ந்த தலைவியுடன் புனம்
பாந்தாள்.

முருகவேளைப் பிரிந்து வந்த வள்ளி
யகியார் தினைப்புனத்தைக் காவல்
க்கும் போது மனம் மிக வாடி
ருந்தாள். இவ்வாறுகச் சில பகல்
ந்தன. தினைப்புனத்தில் கதிர்கள்
ற்றி விளைந்தன. குன்றவாணர்கள்
னைக் கண்டு மகிழ்ந்தனர். அவர்கள்
ள்ளிப் பிராட்டியாரை நோக்கி,
அம்மா! தினைகள் விளைந்துவிட்டன.
கவும் வருந்தி இதனைக் காத்தனை!
னி உன் சிறு குடிலுக்குச் செல்வா
ாக!'' என்றுர்கள். அம்மை அதனைக்
கட்டு மிகவும் மனம் வருந்தினுள்.
ஆகா! பிராணேசர் சிற்றூருக்கு வழி
அறிவாரோ! அவர் இங்கு வந்து
தடுவாரே!'' என்றெல்லாம் கலங்
னுள். இறைவன் எளியவனுக வந்து



''அநாவசியமாக நான் எச்சில் இலை நாய் மாதிரி அடிக்கடி கத்தி அலட்டிக்கிறதில்லே! இரவில் மாத்திரம் பன்னிரண்டு மணிக்கும் ரெண்டு மணிக்கும் ரெண்டே ரெண்டு தடவை குரைப்பேன்!''

''அப்படியா? நான் அது கூடச் செய்யற தில்லே. எனக்காக நாய் குரைக்கிற மாதிரி டேப் ரிக்கார்ட் எடுத்து வெச்சிருக்காங்க!''

அருள் புரிந்தால் அவனை எளிய மானுடனுகவேதான் எண்ணி அன்பு செலுத்தத் தோன்றும் போலும்!

'மான் இனங்காள்! குயில் இனங் காள்! என் பெருமானுக்கு நான் புனம் விட்டுச் சென்ற செய்தியைச் சொல்லுங்கள்' என்று தூது விடுத்துக் கொண்டே பாங்கியோடு புனத்தை விட்டுச் சென்றுள் வள்ளி.

மானி னங்களை மயில்களைக்
கிளியைமாண் புறவை
ஏனை புள்ளவை தங்களை
நோக்கியே யாங்கள்
போன செய்கையைப் புகலுதிர்
புங்கவர்க் கென்னுத்
தானி ரங்கியே போயினள்
ஒருதனித் தலைவி

வீடு திரும்பிய வள்ளிப் பிராட்டியா ருக்குப் பிரிவுத் துன்பம் மிகுந்தது. அத் துன்பத்தைப் பொறுக்காது அவசமுற்று வீழ்ந்தனள். பாவையர்கள் வந்து எடுத்து அணைத்து, மேனி மெலிந்தும் வளை கழன்றும் உள்ள தன்மைகளை நோக்கி, ''ஏதோ தெய்வம் பிடித்துள் ளது'' என்று கூறினர்கள். முருகப் பெருமானை வழிபட்டுத் தெய்வக் குறி




**டைரக்டர்:** நாங்க 'பேய் வீடு' என்ற சினிமாப் படம் எடுக்கப்போறோம். அதுக்காக உங்க 'மாடர்ன் ஆர்ட்'படங்கள் எல்லாம் விலைக்கு வாங்க வந்திருக்கேன்!

கேட்டு வெறியாட்டயர்ந்தனர். வெறியாட்டாளன் மேல் முருகவேள் ஆவேசமாகி, ''எமது மனம் மகிழும்படி சிறப்புச் செய்தால் இக்குறை நீங்கும்'' என்று குறிப்பில் கூறியருளினர். ஆயினும் தமது மகளைத் தேவநாயகனுக்கு மணமுடிக்க இயலும் எனக் குறவர் எண்ணிப் பார்க்கவும் முடியுமோ ?

ஊர் எல்லாம் உறங்கியும், பிரிவுத் துன்பத்தால் வாடிய வள்ளிக்கு உறக்கம் பிடிக்கவில்லை. பொறி புலன்கள் எல்லாம் உறங்கினாலும் ஆன்மா விழித்திருக்கும் என்பது இதன் கருத்து. பக்திக்கும் காதலுக்கும் உணர்வு நிலை ஒன்றுதான்.

**''விண்ணுறங்கும் மண்ணுறங்கும்**
**மற்றுளஎல் லாம்உறங்கும்**
**கண்ணுறங்கேன் என்தலைவர்**
**காதலாற் பைங்கிளியே''**

என்றார் தாயுமானவர்.

வள்ளிப் பிராட்டியார் தினைப் புனத்தை விட்டுத் தம் சிற்றூர்க்குச் சென்றபின் வேடர்கள் தினையை அறுத்துக் கொண்டு திரும்பினர்கள். முருகவேள் தினைப்புனம் சென்று திருவிளையாடல் செய்வார்போல் வள்ளியம்மையாரைத் தேடினர். அங்கு அவளைக் காணது நள்ளிரவில் சிற்றூர் வந்து குடிலுக்குப் புறம்பே நின்றார். அதனை உணர்ந்த பாங்கி முருகவேளிடம் வந்து, ''ஐயா! நீர் இப்படி இரவில் இங்கு வருவது தகாது. இது நீவிர் அவளை அடைந்திருக்க ஏற்ற இடமில்லை. ஆதலால் அவளை அழைத்துக் கொண்டு தங்கள் தலைநகருக்குச் செல்லுங்கள்'' என்று கூறினள். அவரை அவ்விடத்திலேயே நிற்கச் செய்து விட்டு, யாரும் அறியாவண்ணம் வள்ளிப் பிராட்டியாரை அழைத்து வந்து கந்தவேளிடம் ஒப்புவித்தாள். வள்ளிநாயகியார் முருகவேளின் பாதங்களைப் பணிந்து, ''வேதங்கள் காணாத உமது மலர்த்தாள் நோவ என் பொருட்டு இவ் வேடச் சேரிக்கு நள்ளிரவில் எழுந்தருளினீரே'' என்று தொழுது நின்றாள். பாங்கி, முருகப் பெருமானின் திருக்கரத்தில் வள்ளிப் பிராட்டியாரை அளித்து, ''ஐயா! இங்கு நீண்டநேரம் நின்றால் வேடர்கள் கண்டு விடுவார்கள். அவர்கள் கண்டுவிட்டால் பெரும் தீமையாய் முடியும். இம் மாதரசியை அழைத்துக் கொண்டு உங்கள் பதிக்குச் சென்று காத்தருள வேண்டும்'' என்று கூறி வணங்கி நின்றாள். எம்பிரான் பாங்கிக்குத் தண்ணருள் புரிந்தனர். பாங்கி வள்ளி நாயகியாரைத் தொழுது அணைத்தாள். குமாரக்கடவுள் வள்ளிநாயகியாருடன் சிற்றூரைத் தாண்டிச் சென்று ஓர் இளம் பூங்காவில் தங்கினர்.

புலன்களாகிய வேட்டுவர்கள் அவ்வளவு எளிதில் ஆன்மா விடுதலையடைய விடுவரோ? விடியற்காலம் நம்பிராசனின் மனைவி கொடிச்சி துயில் நீங்கி எழுந்தாள். வள்ளிநாயகியாரைக் காணாது திடுக்கிட்டு வருந்தினள். நம்பிராசனும் இதனைக் கேள்வியுற்றான். வெகுண்டு, ''எமது காவலைக் கடந்து எம் குல விளக்கைக் கொண்டு போனவன் யார்?'' என்று போர்க் கோலம் கொண்டு புறப்பட்டான். அவனுடன் வேடர்கள் கொம்பு முதலியவற்றை ஊதிக் கொண்டு சென்றார்கள்.

புலிகள் மான் குட்டிகளைத் தேடுவது போல வேடர் பலர் தம்மைத் தொடருவதை யறிந்த வள்ளிப்பிராட்டி குமாரக் கடவுளைப் பணிந்து, ''எம் பெருமானே! ஈட்டி, பிண்டி, பாலம், வில், வாள் முதலிய ஆயுதங்களுடன் வேடர் பலர் சோலைக்கு அருகில் வருகிறார்கள். இனி என் செய்வது? என் உள்ளம் சுழல்கிறது'' என்று கூறினள். ''பெண்ணரசியே! வருந்தாதே. சூராதியவுணரை மாய்த்த வேற்படை நம்மிடம் இருக்கிறது; வேடர் வெகுண்டு போர் புரிந்தால் அவர்களைக் கணப்பொழுதில் மாய்ப்போம். நீ பின்புறத்தில் இருப்பாயாக'' என்று கந்தவேள் அருளிச் செய்தார். **(தொடரும்)**

# ...ந்தையின் கவலை தீர்த்து வைக்கப்பட்டது!

















## 66. மங்களம், சுப மங்களம்!

வேடர்கள் வந்து பெருமானைச் சூழ்ந்தனர். ''நம் குலக் கொடியைக் கவர்ந்தவன் நம்மைக் கண்டு ஓடவுமில்லை ; அஞ்சவுமில்லை. அடியுங்கள்; பிடியுங்கள்'' என்று கூறி வேடருடன் பாண மழை பொழிந்தான் நம்பிராசன். அந்தக் கணைகள் யாவும் கருணையங் கடலாகிய கந்தவேள் மீது மலர்களைப் போல் வந்து வீழ்ந்தன. முருகப் பெருமான் திருவுளஞ் செய்ய, சேவல் எழுந்து நின்று கொக்கரித்துக் கூவியது. அந்த ஒலியிலேயே நம்பிராசனும் அவன் குமாரர்களும் சுற்றத்தாரும் மாய்ந்தனர்.

பிரணவ நாதம் பிறந்ததும் புலன்கள் ஓயத்தானே வேண்டும்?

தந்தையும் உடன் பிறந்தாரும் தமரும் மாண்டதைக் கண்ட வள்ளிப் பிராட்டியார் மனம் பதைத்து வருந்தினார். அம்மையாரின் அன்பைக்காணும் பொருட்டு ஐயன் சோலையை விட்டு நீங்கிச் சென்றார். அம்மையாரும் அவரைத் தொடர்ந்து சென்றார். அப்போது வழியில் நம்பிராசன் செய்த தவப் பயனைப் போல் நாரதர் எதிர்ப்பட்டார். ''சுவாமி! பெற்ற பிதாவையும் பிற சுற்றத்தாரையும் வதைத்து எம் பிராட்டியைக் கொண்டேகுதல் தகுதியாமோ ? அது அம்மைக்கு வருத்தத்தைத் தருமே'' என்றார் நாரதர். எம் பெருமான் மீண்டும் சோலைக்குச் சென்று, ''நம்மோடு போரிட்டு இறந்த உன் சுற்றத்தாரை எழுப்புவாயாக'' என்று பணித்தருளினார். பற்று அற்ற ஆன்மா புலன்களோடு கூடியிருப்பினும் ஒழுக்கம் தவறாது. இதைக் காட்டவே சுவாமி வள்ளியினது சுற்றத்தை அவளே எழுப்ப அருள் புரிந்தார். வள்ளி அருள் பாலித்தார். துயில்நீங்கி எழுவது போன்று நம்பிராசன் தன் சுற்றத்தோடு எழுந்தான். வள்ளிக்கு யாவரையும் வாழ வைக்கும் வல்லமை உண்டு; எனினும், கணவரின் கட்டளைக்காகவே காத்திருந்தார் என்பது இதனால் தெரிகிறதல்லவா?

லீலைகளெல்லாம் நிறைவு செய்துவிட்ட எம்பெருமான் உயிர்த்தெழுந்த நம்பிராசனுக்கு ஆறுதிருமுகமும் பன்னிரு திருக்கரமும் கொண்டு காட்சியளித்தார். நம்பிராசன் வேட்டுவர்களுடன் ஆறுமுகப் பெருமானின் திருவடிகளில் வீழ்ந்து பணிந்து எழுந்தான். உச்சி கூப்பிய கையனாய் ஆனந்தக் கண்ணீர் சொரிந்தான். ''தேவ தேவா! எங்கள் சேரியைக் காக்கும் !நீரே இவ்வாறு எமது குலக் கொடியைக் களவு செய்து எங்கள் குலத்துக்குத் தீராத பெரும் பழியை நல்கின் யாம் என் செய்வோம்? அன்னையே மகவுக்கு விடமூட்டின் கதியாது? தேவரீர் இனியேனும் எம் சிற்றூர்க்கு வந்து அக்கினி சாட்சியாக முறைப்படி எம் புதல்வியை மணந்து கொண்டு தங்களுடைய பதிக்கு அழைத்துச் செல்வீராக'' என்று வேண்டி நின்றான்.

அவனது வேண்டுகோளுக்கு இரங்கிய கந்தக் கடவுள் வள்ளிநாயகியுடனும்

ருடனும் சிற்றூருக்கு வந்தருளி நம்பி தனது சிறு குடிலில் புலித் தோல் மீது எம்பிராட்டியைப் பிராட்டியா ரை எழுந்தருளச் செய்தான். அவர் தெய்வமான முருகன் குற வருக்கு இன்னருள் புரிந்தான். வேடர், குறவர், மறவர் முதலியோர் "எமது தெய்வமே எம் இளவரசியை மணக்க வந்து விட்டதே" என்று உள்ளம் உவந்து பேரானந்த பரவச மாய்ப் போற்றி நின்றார்கள்.

கந்தவேள் தமது மருங்கில் வீற் றிருந்த வள்ளிநாயகியாரைத் திரு வருள் நோக்கம் புரிந்தருள, அம்மை யார் மானுட வடிவம் நீங்கிப் தமக்குடைய தேவ வடிவு பெற்று விளங்கினார். அதனைக் கண்ட நம்பி முதலியோர், "இப்பிராட்டியார் எம் மிடம் தோன்றி வளர்ந்தது எமது மாதவமே" என்று இறும்பூதெய்தினர். சுப முகூர்த்தத்தில் வேட்டுவ மன்னன் நம்பி, வள்ளிப் பிராட்டியாரின் திருக் கரத்தை மயிலேறும் வள்ளல் திருக் கரத்தில் வைத்து "எமது தவப் புதல்வியை உங்களுக்குத் திருமணம் செய்து தந்தேன். ஏற்றுக் கொண்டு அருள் புரிவீர்" என்று தண்ணீர்த் தாரை வார்த்தான். நம் பெருமானின் திருவருட் குறிப்பால் நாரதர் வேள்வித் தீ வளர்த்து ஏனைய விதிமுறைகளைச் செய்தனர்.

ஆலமுண்ட நீலகண்டப் பெருமான், பிரம்மன், திருமால், தேவர்கோமான் முதலிய கணங்கள் சூழ உமாதேவியா ருடன் வந்தருளி விண்ணில் நின்று வள்ளிப் பிராட்டியாரைக் கந்தவேள் மணந்து கொண்ட வைபவத்தைக் கண்டருளினர். திருமாலாதிதேவர்கள் பூமழை பொழிந்து முருகவேளைப் போற்றித் துதி செய்தனர். ஆறுமுகக் கடவுள் அம்மையப்பரை வணங்கி ஏனைய தேவர்களுக்குத் திருவருள் புரிந் தார். சிவபெருமான் தேவர்குழாத் துடன் மறைந்தருளினர்.

தனிப் பெருந் தலைவராகிய கந்தப் பெருமான் தனக்கு மருகராகும் பேறு பெற்ற நம்பிராசன் பெரிதும் மகிழ்ந் தான். தேனும் தினைமாவும் பழங் களும் படைத்து, "தாங்களும் தேவி யும் உண்டருள வேண்டும்" என்று கந்தப் பெருமானை வேண்டிக் கொண் டான். பெருமான் அவற்றை உட் கொண்டு அருள்புரிந்தார். பின்னர், நம்பிராசனை நோக்கி, "நாம் வள்ளி யுடன் திருத்தணியில் சென்று இருப் போம்" என்று கூறினர். மகளை என்றே னும் ஒரு நாள் பிரிந்துதானாக வேண் டும் என்பதால் நம்பி உடன்பட்டான். தாயும் பாங்கியும் செவிலியும் வள்ளிப் பிராட்டியாரைத் தழுவி நல்லாசிகள் கூறிப் பிரியாவிடை தந்தனர். முருகவேள் நம்பிராசனை நோக்கி, "நீ தேவருந் தொழச் சிற்றூரை அரசு புரிந்து பின் நம் பக்கல் வரக்கட வாய்" என்று அருள் புரிந்தார்.

ஐயன் அம்மையுடன் தணிகை மாமலைக்கு விண் வழியாக வந்து சேர்ந்தார். தேவதச்சனால் முன்னரே அங்கு அமைக்கப்பட்ட திருக் கோயி லில் உலகமெல்லாம் உய்யுமாறு வள்ளி யம்மையாருடன் எழுந்தருளியிருந்தார்.

எளிய வள்ளி அன்பு ஒன்றைக் கொண்டே இறைவனை நேசித்தார். பெருமான் தாமே வள்ளலாக இருந் தும் அன்புக்குக் கட்டுப்பட்டுக் குறத் தியை வேடரிடம் யாசித்துப் பெற்றுக் கொண்டார்.

**வனசரர் கொடிச்சிதனை யாசிக்கும்**
**யாசகனும்**

என்ற நயம் மிகுந்த தொடர் இதையே குறிக்கும். அன்பெனும் பிடியுள் அகப் படும் மலையாகிய இறைவன் எளிய ஆன் மாக்கள்பால் வைத்துள்ள பெருங்கரு ணைத் திறத்தை விளக்குவது வள்ளித் திருமணம். ஜீவனும் சிவனும் ஐக்கியப் படுதலே வள்ளித் திருமணம்.

வடிவேலண்ணல் வள்ளியம்மையா ருடன் திருத்தணிகை மலைமீது உல கெலாம் உய்ய வீற்றிருக்கும்போது, வள்ளிப் பிராட்டியார் முருகக் கடவுள் திருவடிகளை வணங்கி, "அருட்பெருங் குன்றே! இம்மலையின் சிறப்புக்களை எனக் குக் கூறியருள வேண்டும்" என்று வேண்டிக் கொண்டார். ஆறுமுக வள் ளல் அம்மையாரைப் பார்த்துத் திரு வருள் சுரந்து திருவாய் மலர்ந்தருளினர்.

"வள்ளி நாயகியே! சூராதியசுரர்க ளுடனும் வேட்டுவரோடும் செய்த போரின் கோபம் தணிந்து நாம் இங்கு வந்தமையால் இம்மலைக்கு 'செருத்தணி' என்னும் பெயர் உண் டாயிற்று. (செரு — கோபம், தணி — தணிதல்). இது காஞ்சி நகருக்கு அரு கில் இருப்பதால் மிகவும் சிறப்புடை யது. உமையம்மையார் மாமரத்தின் கீழ் முக்கட் பெருமானை வழிபட்ட தலம் அன்றோ காஞ்சி?

**செங்கண் வெய்யசூர்ச் செருத்தொழி**
**லினுஞ்சிலை வேடர்**

**தங்க ளிற்செயுஞ் செருத்தொழி**
**லினுந்தணிந் திட்டே**

**இங்கு வந்தியாம் இருத்தலால்**
**செருத்தணி என்றோர்**
**மங்க லந்தரு பெயரிணைப் பெற்றதிவ்**
**வரையே**

"மலர்களில் சிறந்தது தாமரை; ஆறுகளில் சிறந்தது கங்கை; பதிகளில் சிறந்தது காஞ்சி. அது போன்று மலைகளில் சிறந்தது செருத்தணி.

**விரையி டங்கொளும் போதினுள்**
**மிக்கபங் கயம்போல்**
**திரையி டங்கொளும் நதிகளிற்**
**சிறங்தகங் கையைப்போல்**
**தரையி டங்கொளும் பதிகளிற்**
**காஞ்சியந் தலம்போல்**
**வரையி டங்களிற் சிறந்ததித்**
**தணிகைமால் வரையே**

"புல்லாங்குழல் ஊதி, யாழ் மீட்டி, ஏழிசை பாடி இம்மலையின்கண் நாம் திருவிளையாடல் புரிவோம். எம் தந்தையராகிய அந்திவண்ணர் திருக்கயிலாய மலையை விரும்பி யிருப்பது போல, உலகில் பலமலைகள் இருந்தும் எமக்கு இம் மலையிடமே தனித்த அன்பு உண்டு. இந்திரன் எம்மைப் பூசிக்கும் பொருட்டு இம்மலையிலுள்ள சுனையில் மூன்று நீலோற்பலச் செடிகளை வைத்து வளர்த்தார். அம் மூன்று செடிகளிலிருந்து முறையே காலையில் ஒன்றும், உச்சி வேளையில் ஒன்றும், மாலையில் ஒன்றுமாக மூன்று வேளைகளிலும் மூன்று மலர்கள் மலரும். அதனால் இம்மலைக்கு நீலகிரி என்று மற்றொரு பேரும் உண்டு. அந்த நீலோற்பலச் சுனையில் அன்புடன் நீராடி எம்மை வழிபட்டோர்க்கு இம்மை, மறுமை நலன்கள் எளிதிற் கிடைக்கும். இம்மலையில் ஐந்து நாட்கள் தங்கியிருந்து எம்மைத் தரிசித்து நோன்பிருந்தவர்கள் எல்லா போகங்களையும் அநுபவித்து முடிவில் முத்தி வீடு பெறுவர். பாவங்கள் பல செய்தோரும் நம்பால் அன்பு கொண்டு இம்மலையை அடைந்து வழிபட்டால் நற் கதி அடைவார்கள்.

**பாத கம்பல செய்தவராயினும்**
**பவங்கள்**
**ஏதும் எவகலும் புரிபவ ராயினும்**
**எம்பால்**
**ஆத ரங்கொடு தணிகைவெற்**
**படைவரேல் அவரே**
**வேதன் மாலினும் விழுமியர்**
**எவற்றினும் மிக்கார்**

"கல்யாணி! இத்திருமலையில் வந்து ஒரு சிறு தர்மம் செய்தால் ஒன்றுக்கு ஆயிரம் மடங்கு அதிகமான புண்ணியம் உண்டாகும். இம்மலையை வலம் செய்தோர் கோடி அசுவமேதம் செய்த பலனை யடைவார்கள். இம்மலையில் ஏற எண்ணி ஒரு படியின் மீது கால் வைத்தவுடனே அவர்கள் வினைகள் தணிவதாலும் திருத்தணிமலை என இது பெயர் பெறும். இம்மலையின் பெருமை அளவிடற்கரியது" என்று எம்பிரான் கூறியருளினர். வள்ளியம்மையார் அதனைக் கேட்டு உள்ளம் உவந்தார்.

வள்ளிநாயகியாரும் மயிலேறும் வள்ளலும் செருத்தணி மலையின் ஒரு புறத்தில் சிவாகம விதிப்படி சிவபெருமானின் திவ்வியத் திருவுருவமாகிய சிவலிங்கப் பெருமானை ஸ்தாபித்து வழிபட்டுச் சில நாட்கள் அங்கே வீற்றிருந்தார்கள்.

பின்னர் எம்பிரான் எம்பிராட்டியாருடன் அங்கிருந்து புறப்பட்டுக் கயிலையங்கிரியின் பாங்கருள்ள கந்தகிரி அடைந்து, ஆங்குள்ள பொற்கோயிலிற் புகுந்தார். தெய்வயானையம்மையார் எதிர்கொண்டு வந்து அவரது திருவடிகளிலே வீழ்ந்து வணங்கினர். ஆறுமுகக் கடவுள் அவரை எடுத்துத் தழுவித் தமது பிரிவினால் வந்த துன்பத்தை மாற்றியருளினர். வள்ளிப் பிராட்டியார் தெய்வயானையம்மையாரின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினர். "எனக்குத் துணைவி வந்தாள்" என்று தெய்வயானையம்மை வள்ளிப்பிராட்டியை உள்ளம் உவந்து எடுத்து அணைத்தார். பாற்கடலில் சேஷ சயனத்தில் பரந்தாமன், சீதேவியும், பூதேவியும் உடனிருக்க வீற்றிருத்தல் போல எந்தை கந்தவேள் இருமருங்கும் இருதேவியருடன் அரியணை மேல் இனிது வீற்றிருந்தருளினர்.*

**சூர்க்கடல் பருகும் வேலோன்**
**துணைவியர் இருவ ரொடும்**
**போர்க்கடல் கொண்ட சீயப்**
**பொலன்மணி அணைமேற்**
**சேர்ந்தான்**
**பாற்கடல் அமளி தன்னில்**
**பாவையர் புறத்து வைகக்**
**கார்க்கடல் பவள வண்ணன்**
**கருணையோடு அமரு மாபோல்**

அப்போது, தெய்வகுஞ்சரி யம்மையார் முருகக் கடவுளை நோக்கி, "என் இளையாளாகிய வள்ளியம்மையின் வரலாற்றினைக் கூறியருள வேண்டும்" என்று கேட்டுக் கொண்டார். "நீவிர் இருவரும் முற்பிறப்பில் திருமாலின் புதல்வியர். நம்மை மணம் செய்து கொள்ள விரும்பிப் பன்னிரண்டு ஆண்டுகள் தவம் புரிந்தீர்கள். அ

* கந்தவேள் வள்ளி, தெய்வயானையுடன் வீற்றிருக்கும் திவ்வியக் காட்சியை இவ்விதழ் அட்டைப்படமாக வழங்குகிறார் ஓவியர் வினு.

..து யாம் வந்து ஒருத்தி விண்ணி ... மற்றவள் மண்ணிலும் பிறக்கு ..து அருள் புரிந்தோம். அதன்படி ..தவளாகிய நீ இந்திரன் மகளாகி ..மை மணந்து கொண்டாய். நின் ..யாளாகிய இவள் சிவமுனிவ ..து மான்வயிற்றில் தோன்றி வள்ளி ..யில் நம்பிராசனுல் எடுத்து வளர்க் ..ப்பட்டு, வள்ளி என்ற பெயருடன் ..ங் காத்திருந்தாள். வேடர் குலத் ..தே வளர்ந்த இவளிடம் நாம் சென்று .. மாயங்கள் புரிந்து மணந்தனம்'' ..ன்று அருளிச் செய்தார்.

தெய்வயானையம்மையார் மனம் மிக ..கிழ்ந்து, ''வெகு நாட்களாகப் பிரிந் ..திருந்த என் இளையாளை என்னுடன் ..ஒன்று சேர்த்து வைத்த தேவரீர்க்கு ..என்ன கைம்மாறு செய்வேன்?'' என்று ..பணிந்தார். வள்ளியம்மை தெய்வ ..யானையை நோக்கி, ''தேவி! முற்பிறப்பி ..லும் தங்கட்கு யான் தங்கையானேன்; ..இப் பிறப்பிலும் தங்கையானேன். இனி ..யான் உய்வு பெற்றேன்; என்னைக் காத் ..தருளும்'' என்று பாத பங்கயத்தில் ..பணிந்தனர். தெய்வயானை அவரை ..அன்புடன் எடுத்துத் தழுவி இன்னுரை ..கூறினர்.

தேவியர் இருவருடன் தேவதேவன் ..வீற்றிருந்தருளினுர். சேவலும் மயிலும் ..ஆடும் வேலும் வேறுள படைக்கலங் ..களும் பெருமானுக்குரிய பணிகளைச் ..செய்து கொண்டு திருக்கோயில் முன் ..னும் அருகும் இலங்கின. வீரவாகு ..தேவர் முதலியோர் எம்பிரானுக்கு ..ஏவல் செய்து பெருமான் புகழைப் ..பரப்பினர். உலகமெல்லாம் எம்பிரா ..னின் அருள் பொலிந்தது.

## முடிவுரை

கருணைத் திறத்தையே சிறப்பாகக் கொண்டது கந்தபுராணம். தேவர்கள் துயர் தீர்க்க வேண்டும் என்ற கருணை யின் மீதே தோன்றியவர் கந்தபெரு மான். தேவர்கள் துயர் தீர்த்ததோடு, தேவசத்துருவான சூரனிடமும் கருணை பொழிந்து அவனைத் தமது வாகன மும் துவசமுமாக்கி அருள் புரிந்தார். அதன் பின்னர் தமக்காகவே தவ மிருந்த இரு நங்கையரைக் கருணை கூர்ந்து திருமணம் புரிந்து கொண் டருளினர். உலகெங்கும் அன்பும், பக்தி யும் பெருகப் பல பதிகளிற் குடி கொண்டு இன்றும் தனிப்பெரும் கருணை நாயகனுக விளங்குகிறார். இறைவனின் கருணையை உன்னி மகிழ் வதே 'கந்தன் கருணை'யின் மையத் தத்துவம்.

கந்தபுராணம் மேலும் பல உயர்ந்த உண்மைப் பொருள்களுக்கும் கருவூல மாகும்.

இதன் உட்கிடைகளை இங்கு சுருக்கி உரைக்கின்றேம்.

ஃ ஃ ஃ

சிவனே முருகன் என்பது இந்தப் புராணத்தால் காணக் கிடக்கிறது.

ஃ ஃ ஃ

நன்றி மறந்ததனுல் சூரபன்மன் வாழ்வு குன்றியது என்ற பாடத்தை இப்புராணம் புகட்டுகிறது. நன்றி பிழைக்கலாகாது என்பதை வன்மையாய் உணர்த்துகின்றது.

ஃ ஃ ஃ

ஆணவமலம்—சூரபன்மன்
கன்மமலம்—சிங்கமுகன்
மாயாமலம்—தாரகன்

இம்மலங்களின் வலிமையை முருக வேள் அடக்கியருளினர்.

ஃ ஃ ஃ

ஞானசக்தி — வேல்
கிரியாசக்தி — தெய்வயானை
இச்சாசக்தி—வள்ளிநாயகி

மூன்றுடனும் கூடியவர் பரம் பொருள்.

ஃ ஃ ஃ

கற்புமணம் — தெய்வயானை
களவு மணம் — வள்ளிநாயகி

இரு மணத்தின் ஒழுக்கங்களை இதன் மூலம் எம்பெருமான் விளக்கியருளினர்.

ஃ ஃ

ஐம்புல வேடரிடை வளர்ந்த ஜீவான்மாவாகிய வள்ளிக்குப் பரமான்



''கண்ணெல்லாம் ஒரே எரிச்சலாக எரிகிறது டாக்டர்!''

''ஈர விறகை உபயோகிக்காதீர்கள். அடுப்புப் புகை கண்ணைக் கெடுத்துவிடும். நல்லதா 'ஸ்டௌ' வாங்கி உபயோகியுங்கள். தானே சரியாகிவிடும்!''

மாவாகிய எம்பிரான் குருமூர்த்தமாகச் சென்று அருள்புரிந்தருளியதே வள்ளித் திருமணத்தின் தத்துவம்.

ஃ ஃ ஃ

விந்து — மயில்
நாதம் — சேவல்
கலை — வேல்
இந்த மூன்றுக்குந் தலைவர் முருகர்.

**நாதவிந்து கலாதீ நமோ நம!**

ஃ ஃ ஃ

ஐயனின் வலப்புறம் வள்ளி. வள்ளியம்மையின் திருக்கரத்தில் தாமரை மலர்.

அவரது இடப்புறத்தில் தெய்வயானை. அம்மையின் திருக்கரத்தில் நீலோற்பலம்.

கதிரவனைக் கண்டு தாமரை மலரும்: சந்திரனைக் கண்டு நீலோற்பலம் மலரும். முருகவேளின் வலக் கண் சூரியன்; இடக் கண் சந்திரன். முருகவேளின் திருக் கண்கள் எப்போதும் இமையாதவை. எப்போதும் திறந்த விழிகள்.

வலக் கண்ணாகிய சூரியவொளியில் வள்ளியின் கரத்துள்ள தாமரை எப் போதும் மலர்ந்தவண்ணம் திகழும்.

அப்படியே இடக் கண்ணாகிய சந்திர வொளிபட்டுத் தெய்வயானையின் திருக் கரத்தில் உள்ள நீலோற்பலம் எப் போதும் மலர்ந்தவண்ணம் திகழும்.

முருகனை அணுகி அன்புடன் வழி படுவோரின் வாழ்வு என்றுங்குவியாது மலர்ந்து விளங்கும் என்பது உட்கிடை.

ஃ ஃ ஃ

இரு அணங்கு சூழ நின்றாலும் முருகன் பிரம்மசரிய தெய்வம். சிவனுருக்கும், திருமாலுக்கும், ராமருக்கும், கிருஷ்ணருக்கும் மக்கட்பேறுண்டு. முருகனுக்கு மகவு இல்லை என்பதே அவனது ஞானப் பிரம்மசரியத்தைக் காட்டும்.

ஃ ஃ

உயிர்கள் பெறும் பேறு மூன்று. இகம் பரம் வீடு என்பன.

முருகப் பெருமான் இந்த மூன்று பேறுகளில் வள்ளிநாயகியின் மூலம் இகத்தையும், தெய்வயானையின் மூலம் பரத்தையும், தம் திருக்கரத்தில் விளங்கும் வேலாயுதத்தின் மூலம் வீடு பேற்றையும் அருள்புரிகின்றார்.

செம்மை புரியடியார்க்கு மும்மை நலன்களும் வழங்கும் முழு முதற் பொருள் முருகவேள்.

எல்லோரும் கலியுக வரதராம் கந்தவேளை எந்த வேளையும் மறவாது வந்தித்துச் சிந்தித்து வாழ்ந்து எல்லா நலன்களையும் பெறுவார்களாக.

**வற்றா அருள்சேர் குமரேசன்வண்**
**காதை தன்னைச்**
**சொற்றாரு மாராய்ந் திடுவாருந்**
**துகளாருமே**
**கற்றாருங் கற்பான் முயல்வாருங்**
**கசிந்து கேட்கல்**
**உற்றாரும் வீடு நெறிப்பாலின்**
**உறுவர் அன்றே**

ஃ ஃ ஃ

மெய்ஞ்ஞான பண்டிதனும் கந்தனுடைய கருணையை உலக மக்கள் உணர்ந்து உய்யும் பொருட்டு கல்கி மூலம் சுமார் ஒன்றேகாலாண்டு வழங்கி வந்தேன். கந்தவேள் கருணை எல்லோருக்கும் கிடைக்குமாறு இத்தொடர் தொடங்கியபோது ஆசி வழங்கிய நடமாடும் கோயிலாகிய காஞ்சி காமகோடி பெரியவர்களின் திருவடிகட்கு வணக்கம்.

அருள் தெய்வத் திருப்பணிகள் புரியும் கல்கி குன்றா நலத்துடன் ஓங்குக. வையமெல்லாம் வாழ்க.

**ஆறிரு தடந்தோள் வாழ்க ;**
**அறுமுகம் வாழ்க ; வெற்பைக்**
**கூறுசெய் தனிவேல் வாழ்க ;**
**குக்குடம் வாழ்க ; செவ்வேள்**
**ஏறிய மஞ்ஞை வாழ்க ;**
**யானைதன் அணங்கு வாழ்க ;**
**மாறிலா வள்ளி வாழ்க ;**
**வாழ்கசீர் அடியார் எல்லாம் !**








ஒவ்வொரு சாக்கலேட்டும் ... பாலின் குணங்கள் அடங்கியது!

இஷ்டம்போல் தேர்ந்தெடுக்க எண்ணற்ற இன்பநயங்கள். காட்பரீஸ் சாக்கலேட் சத்துச் செறிந்தது, சுவைமிக்கது — ஊட்டமளிப்பதும்கூட.


































காட்பரீஸ் சாக்கலேட்
மிட்டாய் மட்டுமல்ல.... ஒரு உணவும்கூட

LPE-Aiyars. CJ TM

# வசீகரத்தையும், பெருமிதத்தைய
# கொடுக்கும் நறுமணம் உங்களுக்
# பாமாலிவ் லவண்டர் டால்
## உபயோகிப்பதால்.

**உங்களுக்கு மிகவும் பிடித்தமான ஸெண்டுகள்—உங்களுக்காகவே மீண்டும் உருவாக்கப்பட்டிருக்கின்றன!**

ஒரு காலத்தில் உலக அழகுக் கேந்திரங்களிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டவையும், உங்களுக்கு மிகவும் பிடித்தமானவையுமான ஸென்டுகளின்றி இனி நீங்கள் தவிக்கவேண்டாம்... இன்று பாமாலிவ் லவண்டர் டால்க் மட்டுமே அளிக்கும் வசீகர நறுமணத்திலும், பெருமிதத்திலும் உங்கள் உடலைச் சொகுசாகப் பராமரிக்க முடியும். பாமாலிவ் லவண்டரை உங்கள் உடம்பு முழுவதும் தூவிக்கொண்டு, சூழ்ந்து நிற்கும் அதன் இனிய வசீகர நறுமணத்தினுல் களிப்படையுங்கள்.

**எப்பொழுதும் புத்துணர்ச்சியுடனும் நறுமணம் சூழ்ந்த அழகுடனுமிருக்க பாமாலிவ் லவண்டர் டால்க்.**

புதிய, நவீன காஸ்மெடிக் டின்!







மற்றும் பாமாலிவ் டால்க் டிலக்ஸ் —

மயக்கும் 17 ஸெண்டுகளின் அற்பு

PT.G.8 TAM.

